ஓம்

ப்ரப்பிரம்மணேநம:

திருவருட்பிரகாசவள்ளலார்

மரபு

ஸவியோநந்த சொரூபராகிய

ப. அருணசல ஸ்வாமிகள்

பாதசேகரர்

காஞ்சீபுரம்

நிச்சல-இராமாநந்த ஸ்வாமிகள்

இயற்றியருளிய

# மோக்ஷசாதன விளக்கம்.

இது

சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்

ம-ள-ள-ஸ்ரீ கோ. வடிவேலுசெட்டியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

சென்னை, பிரஸிடென்சி மாஜிஸ்டிரேட்

ஸ்ரீமத்

பூ. இராஜரத்தினமுதலியார், பி-ஏ., அவர்களாலும்

பெரும்பாக்கம்

ஸ்ரீமத் அரங்கசாமிபிள்ளை அவர்களாலும்.

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இப்புத்தகம் 1867-ம் ஷ்த்து 25-வது ஆக்டின்படி ரிஜிஸ்டர்

செய்யப்பட்டது. புதுச்சேரிக் கவர்ன்மெண்டிலும்

ரிஜிஸ்தர் செய்யப்பட்டது.

*All Rights Reserved.*

1906.

ஓம்

தத்ஸத்

பரப்பிரஹ்மணே நம:

# முகவுரை.

போத வடிவ புராதன சங்கர
பராபர கிரிபன் பாதாம் புயங்கள்
சிரமிசைக் கொள்ளுதும் திகழ்தரற் பொருட்டே.

ஒவ்வொரு பிராணியும் விரும்புவது துக்கநிவிர்த்தியும் ஆநந்தப்பிராப்தியுமாம். இவற்றை விரும்பாத பிராணிகள் எக்காலத்து மெங்கேசத்துமில்லை. பிராணிவர்க்கங்களுள் மனிதனொருவனே துக்கம் அதன் சாதனம் ஆநந்தம் அதன் சாதனம் என்பவற்றை யறிதற்குரிய கரணங்களைப் பெற்றிருத்தலின், அவனே துக்கத்தையும் அதன் சாதனத்தையும் விலக்கி ஆநந்தத்தையும் அதன் சாதனத்தையும் மடைதற்குரியவனாகின்றான். அவனிமித்தம் காலதேசநிமித்தங்களுக் கேற்றவாறு பலவேறுவகைத்தாய சாஸ்திரங்க ளேற்பட்டுள்ளன வென்பது சர்வப்பிரசித்தம். அங்ஙன மேற்பட்டுள்ள நூல்கள் எண்ணிலடங்கா. அவற்றுள் இறந்தொழிந்தன பல, இருந்தும் வழங்கா தொழிந்தன பல; வழங்கிவருவன பல. இங்ஙனமுள்ள நூல்களுள் ஆரியமக்களால் பொன்னேபோற் போற்றப்பட்டுவரும் வேதமுமொன்று. துக்கசொரூபமும் அதன் சாதனமும் ஆநந்த சொரூபமும் அதன் சாதனமும் இத்தன்மையனவென் றுள்ளவாறு விளக்குவது வேதமேயாம். அது கூறும் வழியைவிட்டு வேறெவ்வழியாலும் சர்வ துக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியு மடைதல் கூடாது; ஏனெனின், நாமரூபமியாவும் துக்கசாதனமாமென்றும் சர்வசங்கப் பரித்தியாகம் ஆநந்தம் வெளிப்படற் கேதுவாமென்றும் வேறெந்நூலுங் கூறாமையின். ஆகவே, சர்வ துக்க நிவிர்த்தியையும் பரமாநந்தப்பிராப்தியையு மடையவிரும்பு மொவ்வொருவரும் வேதங் கூறியவழியே செல்லவேண்டுமென்பது சொல்லாமலே இனிது விளங்கும். ஒவ்வொரு மனிதனும் சர்வதுக்க நிவிர்த்தியையும் பரமாநந்தப் பிராப்தியையும் விரும்புவதியற்கையேயாயினும், அவன் அவற்றை யடைதற்குரிய சாதனங்களை முறையாகப் பெறாத காரணத்தினால் சுகதுக்கங்களால் மோதுண்டு வருந்துகின்றான்; பெற்றானேல் ஆநந்தக்கடலாய் விளங்குகின்றான்.

வேதநெறிச் செல்பவனே சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப்பிராப்தியுமான வீடு கூடுகின்றானென்பது திருமந்திரம் "வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின், ஓதத் தகுமற மெல்லா முளதர்க்க, வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற, வேதத்தை யோதியே வீடுபெற்றார்களே" என்று கூறுவதாலும் அறியற்பாற்று. வீடுகூடுதற்குரிய நெறியையு மொழுங்குபடக் கூறும் வேதப்பொருளை

யறிதற்குரிய அறிவாற்றல் பெறாத மக்களின்பொருட்டு ஸ்மிருதிகளும் புராணங்களும் இதிகாசங்களும் வேதத்தின் கருத்தைப் பல்லாற்றானும் விளக்குமாறு மகரிஷிகளால் கூறப்பட்டன. அவ்வளவோடமையாது தேசபாஷையிலும் அக்கருத்தை விளக்கப் பல நூல்களேற்பட்டன. இந்நூல்களியாவும் மேன்மக்கள் வழக்கில் நிகழுகின்றமையின் பிரமாணங்களேயாம்.

மோக்ஷமென்பது சர்வதுக்க நிவிர்த்தியும்பரமாநந்தப்பிராப்தியுமாயிருத்தலின், அதனை யடைதற்குரிய சாதனங்களைச் சுருதி (வேதம்) ஸ்மிருதி (கருமசாஸ்திரம்) புராணேதிகாசங்களும் அவற்றிற்கு மாறுபாடின்றி வெளிப்போந்த நூல்களும் மக்களின் அதிகாரமறிந்து பக்குவநோக்கித் தொகையாகவும் வகையாகவும் விரிவாகவும் கூறுகின்றன வென்பது அவற்றை முறையாக நல்லாசிரியன் மாட்டுக் கற்றுணர்ந்த வெவ்வொருவராலும் ஒப்பப்பட்டுளதென்பதொருதலையாம்.

அச்சாதனங்கள் காமியகருமமுதல் தத்துவஞான மீறாயுள்ளனவாம். அவற்றுள் ஒன்று மோக்ஷத்திற்குச் சாட்சாத்(நேர்)சாதனமாம். ஏனையவை பரம்பராசாதனங்களாம். ஒன்றென்றது தத்துவஞானத்தை. இவ்விருசாதனங்களையும் காரணகாரியமுறையாக இந்நூல் * மந்தஜிஞ்ஞாசுவும் செவ்வனே யறிந்துகொண்டுய்யுமாறு முன்னோர் நூலின் முடிபொருங்கொத்திருக்க விளக்கிக் கூறுதலின், மோக்ஷசாதனவிளக்கமென்னும் பெயர்பெற்றது. எனவே, நீதிநெறியை விளக்கிக்கூறும் நூல் நீதிநெறிவிளக்க மென்னும் பெயரைப் பெற்றாற்போன்று † மோக்ஷசாதனத்தை விளக்கிக்கூறும் இந்நூல் மோக்ஷசாதன விளக்கமென்னும் பெயரைப்பெற்றதென்றறிதல் வேண்டும்.

மோக்ஷசாதனங்களுள் முக்கியமாயுள்ளவற்றைக் கத்திய (வசன) நடையில் சம்வாத (வினாவிடை) வடிவமாகப் பிரமாணசகிதமா யெங்களுக்கு எளிதிற் றத்துவபோதம் ஐயந்திரிபின்றி யுண்டாகுமாறு ஒருநூல் எழுதித் தரல்வேண்டுமென்று சப்த

* புருஷர்கள்: பாமரன், விஷயி, ஜிஞ்ஞாசு, முத்தனென நான்குவகையினராவர். (1) விலக்காயும் விதியாயுமுள்ள போகங்களிலாசையுள்ளவனாய்ச் சாஸ்திரவாசனையின்றிய புருஷன் பாமரன். (2) விதியாயுள்ள போகங்களை யனுபவித்துக்கொண்டு இகபரலோகங்களை யடையக் கர்மஞ் செய்பவன் விஷயி. (3) போகங்களைத் துக்கவடிவ மென்றுணர்ந்து ஆத்மாவை யறியவேண்டுமென்னும் விருப்பமுள்ளவன் ஜிஞ்ஞாசு. (4) சரீரத் திரயத்திற்குப் பின்னமாயுள்ள தன் சொரூபத்தைப் பிரஹ்ம வடிவமாகப் பிரத்தியக்ஷமா யறிந்தவன் முத்தன்.

† மோக்ஷசாதன விளக்கமென்பது மோக்ஷத்தின் சாதனத்தை விளக்கும் நூல் என விரிதலின், வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணக்குறிப் பெயராம்.

# முகவுரை.

புரிகளுள் ஒன்றாகிய காஞ்சிபுரத்தில் வசிக்கும் கல்விகேள்வி அறிவொழுக்க முள்ளவர்களிற் சிலர் பன்முறையும் வேண்டிக்கொண்டதன் பொருட்டு இந்நூல் அவர்கள் கேட்டுக்கொண்ட வண்ணமாகவே இயற்றப்பட்டது. இந்நூலின்கண் அறுபத்திரண்டு சம்வாதங்களுள. வாதம் * செற்பம். † விதண்டை யென்னு மூன்றனுள் சம்வாதமென்பது வாதமாம். வாதமாவது உண்மை யுணரும வேட்கையுடையான் கதை. அஃதாவது குரு சிஷ்ய சம்வாதமாம். இந்நூலின்கண் ஞானசாஸ்திரங்களில் இலைமறை காய்போலிருக்கும் மோக்ஷசாதனமாயுள்ள முக்கிய விஷயமெல்லாம் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு விஷயத்திற்கும் வேண்டிய வளவு சுருதி, ஸ்மிருதி, புராணேதிகாசங்களினின்றும், அவற்றிற்கு விரோதமாகாதுள்ள தேவாரம, திருவாசகம், திருமந்திரம், நாலாயிரப்பிரபந்தம, திருக்குறள், கைவல்லிய நவநீதம் முதலிய நூல்களினின்றும் பிரமாணங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. யுக்திவாதமாகப் பேசுமிடத்து அனுமானம, உவமானம், அருத்தாபத்தி, அனுபலத்திப்பிரமாணங்களுங் காட்டப்பட்டிருக்கின்றன.

இந்நூல் யாவரும் வாசித்துணருமாறு மிகவும் எளிய நடையிலெழுதப்பட்டது. இநநூலொன்றைப் படித்தவர்கள் மோக்ஷசாதன விஷயமாயுள்ள பல நூல்களையும கற்றுணர்ந்தவர்களுக்குச் சமானமானவ ராவார்களென்பது இந்நூலின அனுக்கிரமணிகை (விஷய அட்டவணை)யைப் படிப்பதனாலேயே நன்கு விளங்கும். இதன்கண் சற்குருவாயிலாகப் பல வருஷங்களாகக் காத்திருந்தறியக்கூடிய பல (உபதேச) விஷயங்களும் வரையப்பட்டிருக்கின்றன; அவை அடங்கிய விருத்தியுடையோர்க்கு விளங்காமற் போகா.

இந்நூலை அச்சிடுவதற் காரம்பத்தில் முக்கிய காரணமாயிருந்தவர் காஞ்சிபுரத்திற் கடுத்துள்ள பெரும்பாக்கம் ஸ்ரீமத். கணக்கு. அரங்கசாமி பிள்ளையவாகள். அவர்தாம் ஆரம்பத்தில் இப்புஸதகத்தை முடிப்பதற்குப் பொருளுதவி செய்தவர்; அவரது பிரார்த்தனையினாற்றான் யான் காஞ்சியினின்றுஞ் சென்னைக்கு வந்தனன். வந்தவிடத்து இச்சென்னைமாநகரத்தின்கண் வேதாந்த பாஸ்கரரா யெழுந்தருளியிருநத மஹானா. சை. இரத்தினசெட்டியாரவர்களிடத்து வேதாந்தாப்பியாசஞ் செய்தவர்களுளொருவரும் சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமான ம-௱-௱-ஸ்ரீ வடிவேலுசெட்டியாரவர்களின் உதவி

* யுக்திப்பிரமாணங்களில் வல்ல பண்டிதர்களின் வாதம் செற்பம்.

† மூர்க்கர்களது பிரமாண யுக்தியில்லாத வாதம் விதண்டை.

கிடைத்தது. அவர் இந்நூலை யச்சிடுவதற்கு வேண்டிய சாஸ்திரங்களை யுதவிசெய்ததுடன் இலக்கண தருக்க முதலியவைகளுக்கிணக்கமாகவும் பரிசோதித்தனர்.

அவர் இப்புத்தகவிஷயத்திற் காட்டிய வூக்கமும் உதவியும் என்ஞான்றும் மறக்கத்தக்கனவாகா.

இந்நூல் யாதொரு குறைவுமின்றி யச்சிட்டு முடியுமாறு சென்னை, பிரசிடென்ஸி மாஜிஸ்டிரேட் ஸ்ரீமத் பூ. இராஜரத்தின முதலியாரவர்களும், காஞ்சிபுரத்திற்கடுத்த பெரும்பாக்கம் கிராமக் கணக்கு, ஸ்ரீமத்-அரங்கசாமிபிள்ளை அவர்களும், காஞ்சிபுரம் ஜவுளி, ஸ்ரீமத். கொ. தானப்பமுதலியாரவர்களும், செங்கற்பட்டு டிப்டி கலெக்டராபீசு ஆக்டிங் முனிஷி, ஸ்ரீமத். கா-பா-ஆறுமுக முதலியாரவர்களும், சென்னை, சிந்தாதிரிப்பேட்டையி லிருக்கும் பெங்களூர் ஸ்ரீமத். சி. ச. உ. கிருஷ்ணசாமி செட்டியாரவர்களும், இன்னுமசில அன்புடையாரும் வேண்டிய பொருளுதவி செய்தார்கள். ஷை பூ. இராஜரத்தின் முதலியாரவர்கள் பொருளுதவி செய்ததுடன் இது விஷயமாக வெடுத்துக்கொண்ட முயற்சியுஞ் சொல்லுந் தரமன்று.

மோக்ஷசாதன விளக்கமென்னு மிந்நூல் அச்சுவாகனமேறி யுலாவுமாறு பொருளுதவிபுரிந்த இக்கனவான்களது நன்றி ஒருபோது மறக்கத்தக்க தன்றும்.

இந்நூலின்கண் * பிராந்திப் †பிரமாதங்களால் பிழைகளிருப்பின், அவற்றை யறிவுடையோர் தெரிவித்தால் மறுபதிப்பில் அப்பிழைகளைத் திருத்தி யச்சிடுவதுடன் அவர்களுக்கு வந்தனமுமளிக்கப்படும். இந்நூலை யான் விரும்பியவாறு சுத்தமாக அச்சிட்டுத் தந்த சென்னை ரிப்பன் பிரஸாரது நன்றியும் மறக்கத்தக்க தன்றும். இந்நூல் யாதொரு இடையூறுமின்றிப் பூரணமாக மூற்றுப்பெறுமாறு திருவருள் புரிந்த எல்லாம் வல்ல இறைவன் இஃதென்ஞான்று நிலைபெறுமாறும் அருள்புரிவாரெனப் பிரார்த்திக்கின்றனன். இதிற் பிழையுளதாயின் உலகம் பொறுக்க.

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை,
கோவூர். வைத்தியநாதமுதலி
தெரு நெ-3.
13-7-06.

இங்ஙனம்
காஞ்சீபுரம்
☞ நிச்சல-இராமாநந்தன்.



* பிராந்தி-மயக்கம். † பிரமாதம்-அவசியஞ் செய்யத்தக்கதை மறந்துவிடுதல்.

**AUM.**

*TAT SAT.*

# OPINIONS.

I have read with great interest the Tamil work published by Nischala Ramananda Swamy under the title **'Moksha Sathana Vilakkam.'** It is, in my opinion, a valuable addition to the Tamil philosophic and religious literature. It deals with the Vedantic system of philosophic thought, and brings out in a very clear manner the essential doctrines of that system, indicating at the same time the various methods or practices by which the knowledge of the Atman or self may be attained. The diction is pure, simple and elegant, and with the help of commentaries given by the author himself, the Tamil reading public will be enabled to understand without difficulty what is taught in the book. The value of the book is enhanced by the fact that, in support of what he says, the author quotes the writings, not only of renowned Tamil poets and philosophers, but of those ancient Sages who have contributed in the Sanskrit language to the Upanishadic and Puranic literature of the country.

**P. KRISHNA ROW,**
*District Judge,*
*Civil and Military Station,*
**Bangalore.**

Bangalore
22nd Febry,
1906.

ஓம்

தத்ஸத்

பரப்பிரஹ்மணே நம꞉.

வேதாந்தவித்வ சிரோமணிகளின்

# அபிப்பிராயம்.

உத்தரஞான சிதம்பரம் ஸத்திய ஞாநாநந்தேந்திர
சரஸ்வதியதி, பரமஹம்ச,
அவதூத். ஆதிநாராயணசாஸ்திரியாரவர்க ளருளிய
எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

நான்மறையா றங்கமுயர் மீமாஞ்சை மிருதி
நன்னியாயம் புராணமென நவிலுமகா வித்தை
தான்மறையா தொருமுறையாய்ச் சகலர்க்கு மோக்ஷ
சாதனமா விளக்கமொன் றுதந்துலகைப் புரக்கு
நூன்முறைதேர் நிச்சலரா மாநந்தேந் திரர்த
நோக்கமுற்றார் மோக்கமுற்று ரெனுமந்நா னுட்பந்
தேன்மிலையு மநுபவமெய் யுபநிடதப் பொருளைத்
தெளிந்தவர்க்கே யுள்ளபடி செப்பவசப் படுமே.

பிரமசூத்திர சங்கரபாஷியத் தமிழ்மொழிபெயர்ப்பாசிரியர்
பிரம்மஸ்ரீ. வி. சா. இராமசந்திர ஸாஸ்திரியாரவர்க ளியற்றிய
சுலோகம்.

ஶ்ரீராமஸிம்ஹேந்த்ர ஜநதாவ ஸாஸி மஹேஶ்வர ஜ்ஞாந
விஶ்வஸஸ்த꞉ | த்ராக்ஷாஸம ஸ்வாத³மேநாம
ராணி பகார பாஷா மய பஸு நாதி ||
கர்ணாத்ரி ஸிதத்³வ்ய தத்ஸஸ்ய ஶிஷ்ய ரமணா꞉ |
க்ருத்ஸ்நேஷு தத்³தா⁴விஷ்யம் மேத⁴ தத்³வ்யாந்த நிவாரணாய ||
ஶோணாத்ரி தே³ஶிக க்ருபாவஶ ஶுத்³த⁴விஶ்வ ஶ்ரீராமாநந்த³
யதிராஜ்வ பகார தீ³ப꞉ | மேதா⁴ந்தகார
நிவஹஸ்ய நிவாரணாய ஶ்ருதாய மேத³ஸிவ
ரோத்³த⁴வாய ஹேமநா꞉ ||
ராமாநந்தே³ந்த்³ர யதிநாரவிந்தே³ மோக்ஷஸாயமே |
ராமசந்த்³ரேண விது³ஷா'த்³து⁴தாஸங்கீர்த்திகா ||

வாலாஜா தாலூக்கா. மஹேந்திரவாடி
மஹான். சேஷாத்திரிஸ்வாமிக ளவர்க ளியற்றியருளிய
எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பார்தரு ஞானச் சித்திமா புரம்வாழ் பரனருட் சோதியின் மரபிற், சார்தரு மருணு சலன்றிரு வடியாஞ் சரோருக மலருளத் தடைத்திங், கீர்தரு கச்சி மாநகர் வாச னெழிலிரா மானந்த விமலன், சீர்தரு மோட்ச சாதன விளக்கஞ் செய்தன னுலகெலாந் துதிக்க.

பெங்களூர்த்தண்டு அரசநகரென வழங்குங் கலியாணபுரத்தில்
மடாதிபதியாக வெழுந்தருளி யிருக்கும்
ஸ்ரீமத். மௌனாநந்த குருசுவாமிகளவர்க ளருளிச்செய்த
நேரிசை வெண்பா.

கண்டார் மகிழ்தருவர் கற்றுணர்வா ரஞ்சலிப்பர்
அண்டா தவரு மதிசயிப்பர்—கொண்டாடு
மாதனவி ளக்கவிரா மானந்த னேர்மோக்க
சாதனவி ளக்கந் தனை

திருமூலர் மரபு. சதாசிவப் பிரமேந்திர யோகீசுவரர்
மாணாக்கருள் ஒருவராகிய
ஸ்ரீமத். தே - சுப்பராய முதலியார் அவர்க ளியற்றிய
பதினன்குசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திகழருட் சோதி வள்ளலார் மரபிற் சேரரு ணசலக் குரவன், றிருவடிக் கன்பு பூண்டுசா தனங்க டேர்ந்துமெய் யறிஞ ரொஞ் ஞான்று,—மகிழநு பூதி யுற்றுமா மௌன வாழ்வினை யடைந்தது வான,மா தவப் பெரியோன் மால்புல வோர்க்கு மகிழ்ந்தமுதளித்த மைபோல,—இகழ்பவக் கடலிற் விழுந்துழல் வுயிர்க ளியல்முத்தி க்கரையது வேற,வெழிலுறு மோட்ச சாதன விளக்க மெனுமரக் கலமதைத் தந்தான்,—புகழுடைத் தொண்டை மண்டல மதனிற் பொலிவுறுங் கச்சிமா நகர்வாழ்,புனிதனிச் சலரா மானந்த முனி வன் புகலறு மவித்தையோ டிடவே.

திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திரசுவாமிகள் அதீனம்,
ஈசூர்ச் சச்சிதாநந்த சுவாமிகள் மாணாக்கருள்
ஒருவராகிய தண்டரை.
ஸ்ரீமத். சுப்பராய ஆசாரியாரவர்கள் இயற்றிய
நேரிசைவெண்பா.

தோன்றவருட் பாவுரைத்த தூயோ னிராமலிங்க
ஞான்ற மரபுதித்த வாரியனை—யூன்ற

## வேதாந்தவித்வ சிரோமணிகளின் அபிப்பிராயம்.

---

வருணாச லக்குருவை யாதரித்துப் பொல்லா
மருணாச மெய்திலங்கு மான்.
நிரசலா மானந்த னேய னென்போ னெவ்வெவரு
முச்சிதமாக் கொண்டுகனி யோர்ந்துய்ய—வெசசமிலா
சான்றோ ரறிமோட்ச சாதனவி ளக்கமதை
யூன்றி யளித்தா னுவந்து.

---

### அத்வைதாவதானம் மணிமங்கலம்
### ஸ்ரீமத்-திருவேங்கட முதலியா ரவர்களியற்றிய
### நிலைமண்டிலவாசிரியப்பா.

மறைமுடிச் செம்பொரு ளுடங்கிடத் துணிபோர்ந்
திறைமைசான் முனிவ னியற்றிய சூத்திரம
பாடிய மதன்வழிப் பயின்றிடு மிலட்சங்
கூடிய விரண்டரைக் கிரந்தநூல் விரிவா
னூடிய மன்பதை நலம்பெறு வீட்டின
காரிய மதற்குக் கைவரு சாதனம
இனையன துணிபெறு விதமறி வறியா
வன்னவர் பொருட்டா யலகிலா மோட்ச
சாதன விளக்கஞ் சம்பிர தாயத்
தொதமெலாந் தழீஇயின் றுலக முவப்ப
நாத்தழும பேற நவின்றன னிறீஇ
யாத்தனு பெவர்க்கு மநுபவத் தூற்றேன்
நிச்சல ராமா னந்தனென னிபுணன்
உசித மோன முலப்பிலாத் தவனே.

---

### வைதியாநந்த யோகிகளென்னும் பொதிகைமலைச் சித்தர்
### பொன்னடிக்காளாகிய ஞாநாநந்தநாதமுனி சுவாமிகள்
### மாணாக்கருள் ஒருவராகிய வேதாந்த வித்வசிரோமணி
### ஸ்ரீமத-ல-நாராயணசாமி நாயகரவர்கள் இயற்றிய
### நிலைமண்டிலவாசிரியப்பா.

அம்பர நடனசி தம்பர தேஜசு
யம்புசொ ரூபசு காமபுதி தேக்கியே
சரந தருபுன லியற்கை யுவரொழி
சீரந் தடிதலொடு தேகமும் பசுந்துயர்க்
கிடபவி பூவுல கெங்கணு முட்புறந
டமறு வரைவறு தனிமைசேர் விண்ணி
னிடைபரந் தெழில்வள மெவ்வகை யறனுந்
தடைகெட வோங்கித் தழைக்கத சராதல

துயிர்ப்பயிர் வகைகட் கோர்பயன் கருதா
தயர்வறப் பொழிமுகி லாமென வருளினன்
மோட்ச சாதன விளக்கமென் முதநூல்
காட்சியா மகிலங் கண்ணெனக் காட்டல்போற்
றன்னுரை யாலே தாற்சிறப் பன்றெனா
முன்னவன் விதித்த முதுமறை மொழியினும்
பின்னவர் வியாதனார் பெரியவர் விதந்து
சொன்ன புராணா திகடமைத் தெளிந்தோர்
சுருங்கிய வநுபவந் தொகுநூல்க ளானுமின்
றருந்துணை யாயுயிர்க் கவனியிற் போந்திருந்
துயிர்களுக் கின்பவீ டுதவுசீர் ஞானிகள்
செயிர்தீ ருரையினுந் திரண்ட கருத்தினை
வினாவிடை யாக விளக்கி யுதாரணந்
தனாலவர் மொழிபுகழ் சகத்திடை நிறாஉவினன்
சீத மினிமை சினேகம் விளக்கமா
மோதமல் லாற்பிற வுருவிலா முகில்போன்
றானந்தம் விளக்க மநந்தமல் லார்பிற
தீனந் தருதே சாதியாந் திகைப்பிலன்
ஏகாம் பரனா யிருந்து காஞ்சி யென்
னாகா லயத்தி லமர்ந்து வசிப்பவன்
அருட்பாத் திருமுறை யாறையும் வகுத்து
மருட்பா டகற்றிய மாவருட் கடலாய்ச்
சராசர வகிலந் தாங்கிய விராட்டெனு
பிரமனும் விண்டுபூ சித்திடு மான்ம
சொரூபசிற் சுகோதய சுபாவ முயிர்க்கரு
ளிராமலிங் கேசனென் றியற்பெயர் வாய்ந்துளோ
னோகா துணர்ந்தமை யுலகெலா முடன்பட
வேதா கமப்பொருள் விரித்து விளக்கினோன்
இறப்பொடு பிறப்பை யிகந்தவை யுலகவர்
மறைப்பறக் காணும் வகைமுடி பமைத்தவன்
அறமிரண் டுடன்பா டன்றுஞா னிகட்கென்
றிறமுடை நடையாற் றெளிய விளக்கினோன்
அருட்பிர காச வள்ளலா ரெனும்பெயர்
தரப்புல வர்கடந் தனிநெஞ் சமர்ந்தவன்
அன்பினில் வழாதுயர்ந் தசல பரம்பொரு
ளின்பமா யிகபரத் திச்சையி லுழலுவார்
தம்மா லளக்கொணாத் தகைமைசா லின்சீர்ப்
பெம்மா னருணா சலப்பெயர்க் குருபரன்
செய்ய பதாம்புயஞ் சிரத்தினிற் சூடிய
பொய்தவி ரன்பினும் புண்ணிய வடிவினன்

அருட்பெருஞ் சோதி யண்ணறம் மாயினோர்
வருக்கம் பிறங்கிட வந்தவ தரித்தவன்
இகாதியாந் திரிசிய வின்பம் வெறுத்த
மகானென வெவரு மதிக்கு மகிமையான்
பக்குவத் தேற்கப் பலதுறை யுணர்ந்ததிற்
றக்க துரைத்தெவர் தமையும் புரப்பவன்
நன்றெனத் தீதென காட்டினு மபேதமாய்
ஒன்றெனு முடிவினை யுணர வுணர்த்துவோன்
எச்சம யத்தவ ரிறைஞ்சவெங் கோங்குஞ்
சச்சிதா னந்தமேற் சலநிவாழ் நிச்சல
இராமா னந்தனென் னியற்பெயர் வாய்ந்துள
கிராலம்பந் தொகுத்தனிப் பெய்தவிம் மெய்ந்நூல்
மனவாக் கிறந்த மவுனமாம் பரத்தரு
டனைநிகர்த் தெவர்க்குஞ் சற்கதி யுதவுமால்
அறம்பொரு ளின்பம்வீ டாம்புரு டார்த்தமென்
றறம்பெறு நூற்பல வுரைக்கினும் வீடே
அழிவிலாச் சுகந்தரு மாறது மற்றைய
ஒழிவிலாப் பிறப்பி னுடற்றுவ வாகலின்
எலார் விவேகிக ளெழின்மோக்க சாதன
நூலா லல்லது நுடங்கிடா பந்தமெய்
யாதலி னிந்நூ லருமையை யயனுக்
கோதுத லெம்மனோர்க் கொருசிறு தமையுமோ
துன்பப் பிறப்பின் றுயர்கடிந் தொழிவிலா
வின்பம் பயப்பதி னேற்றமொன் றுளதோ
பெறலரு மானிடப் பிறவியின் பயன்கொள
அறமுருக் கொண்டென வருளிய பெரியோர்க்
கென்னைகைம் மாறிங் கியற்றுது மியாமே
சொன்னவை யாய்ந்து சுகவடி வமர்வமே.

பிருகு வசிஷ்ட தத்தாத்ரேய வம்ச சேகரரும்
காசிநிவாசருமாகிய, பிரஹ்மஸ்ரீ, சங்கரானந்த சுவாமிகளின்
சிஷ்யராகிய காசிவாசி, ஸ்ரீமத் சிவாநந்தசுவாமிக ளவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

யானைமேல் வருமன்னர் கொண்டாடும் புகழ்மலிந்த யாணர்
சீர்சால், தேனைமேன் மேல்பிலிற்று மஞ்சரிசேர் சோலைவழித் தே
வ ரெல்லாம், வானைமே விடமலவென் றவணின்றிங் காதரவாய்
வலஞ்செய் தேத்து, மானைநேர் விழிமடவார் கற்புடனே வாழ்
கச்சி மன்னி நின்றோன். (௧)

பல்லோருங் கொண்டாடும் பொறைவாய்மை நிலைபிரியாப் பான்மை யாளன், செல்லாரும் பொழில்வடலூ ரிராமலிங்கன் சேவடியைச் சிந்தை செய்யு, மெல்லாரு மனவருணா சலக்குரவன் கமல பதந் தேர்வண் டன்னோன், சொல்லாத சுகநிலைய னவனருளான் மறவாமற் சொலிக்கப் பெற்றோன். (உ)

இத்தகையோ னபிதான மிருங்கடல்சூழ் மன்பதைக ளினிமை யாகத், துத்திசெயு நிச்சலரா மானந்தன் றுரியநிலை நின்ற தூயோன், உத்தமமார் சரியைமுத லன்கினையு முணரகில்லாருணர்ந்தே யுய்ய, மெத்தவெளி தாமெனவே மோட்சசா தனவிளக்க மெனுநூ லீந்தான். (ங)

பரந்தகட லுலகினுளோர் படித்தாலுங் கேட்டாலும், பாச நீங்கிப், பரந்தாமே யெனச்சுகிப்ப ரையமிலை யிதுண்மை பரிவினோடு, நிரந்தரமிந் நூற்செய்த பெரியோனை யணுகுமவர் நிமலராகிப், புரந்தரா தியதேவர் பெறற்கரிய புநிதபதம் பொருந்துவாரே. (௪)

---

மதுரைச் செந்தமிழ்ச் சங்கத்து வித்துவான்களுள் ஒருவரும்
இரங்கூன் கோர்ட்டுகளின்
தமிழ் தெலுங்கு இண்டர் பிரட்டருமாகிய
அத்வைத சண்டமாருதம்
ஸ்ரீமத் - வி. முத்துக்குமாரசாமிமுதலியார் பி. ஏ.
அவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மெய்யறிவா னந்தநிலை மேவிமக்க ளுய்வதற்கு வேதத் தூச்சி, மய்யலற வுணர்ந்துணர்ந்து மோக்கசா தனவிளக்க மருவச் சொற்றோன், செய்யலுடன் செய்வித்த லில்லாத தன்னிலையிற் றிறம்பலின்றிச், சய்யமென நிற்குமிரா மானந்த நற்குரவன் றயவின்மாதோ.

---

ஈசூர்ச் சச்சிதாநந்த சுவாமிகள் மாணாக்கருள் ஒருவராகிய
வேதாந்த ரத்தினாகரம், வித்தியாநந்தர்,
ஸ்ரீமத். தெ. வேணுநாயகரவர்க ளியற்றிய
எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மூவகை நெறியு முறையுடன் றேர்ந்த மூதறி வாளர்போற் றெடுப்ப, நாவகை மோக்க சாதன விளக்க மையமு மட்கையு மகலத், தாவகை யுறியா மக்களுக் கிதமாய்த் தந்தருட் செய்தனன் சீத, மாவகை யருளா னிச்சல ராமா நந்தனென் னருந்தவத் தோனே.

శ్రీమదఖణ్డపరిపూర్ణ సచ్చిదానన్దాద్వయ

సద్గురు సమాజ సంతత ధ్యానపరాయణధురీణ

రా మ బ్ర హ్మ వి ర చి త

చా టు ధా ర.

కం॥ నిచ్చల రామా నందుడు
మెచ్చిక నరుణా చలార్య * మది నెన్నియుదా।
మెచ్చదగు, మోక్షసాధన
యచ్చపు విశకమును నొడివె * నరవము సందుఁ॥

తే. గీ॥ ఇదియె వేదాన్త శాస్త్రిమా నిందు భక్తి।
యోగ వైరాగ్య బోధలు బాగజెప్పి।
పరగ దృష్టాన్తముల నిచ్చె బ్రబల శ్రుతులు।
మఱి బురాణేతి హాసముల్ల అచుగాను॥

కం॥ ఇదియొక్కటె చాలినదా
జదువఁగ గ్రంధాన్తరముల * శ్రమయది గాదా।
బుధజన కృపనిధి గలుచిన
బడిలంబో మదియు దాను * బరవస్తు వగుఁ॥

---

சென்னை, இந்துதியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமத்-கோ-வடிவேலுசெட்டியா ரவர்கள்

மாணாக்கர்களுள் ஒருவராகிய சென்னை, சிந்தாதிரிப்பேட்டை

ம-ா-ா-ஸ்ரீ. தெ-கிருஷ்ணசாமிபிள்ளையவர்க ளியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அரந்தையற வின்பமுற வாருயிர்க்குச் சாதனமா யமை
வேதாந், துரந்தெரிந்த நிச்சலரா மாநந்த நற்குரவ னுசித மா
நிரந்தரமார் நிலைநிற்க மோக்கசா தனவிளக்க நிலவச் சொற்று
பரந்தபுக ழுற்றவர்தான் மகிமையென்ற னொருநாவாற் பக
பாற்றே.

---

பண்டித சிரோமணிகளின்

# அபிப்பிராயம்.

தஞ்சாவூர், பிரஹ்மஸ்ரீ சதாவதானம்
சுப்பிரமணிய ஐயரவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தரணிபுகழ் நிச்சலரா மானந்த
வரன்வசனத் தந்து விற்கா
ரிரவினக விருளகல மோக்கசா
தனவிளக்க மேற்ற வலைத
வரமுறுபுத் தகவகளி லச்சுமைநெய்
யிட்டுமற்றை மையே ருமற்
றிரமுறத்தூண் டாவிளக்கா நாட்டினனி
ராஜரத்தி னச்சீ மானே.

சென்னை, மயிலைச் செந்தோம் கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்,
பிரஹ்மஸ்ரீ. தில்லையம்பூர் ஸோமயாஜி
வேங்கடராம ஐயங்காரவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

இச்சகத் துள்ள மாந்தர் இன்பமார் வீடு சேர
நிச்சலும் போக மோங்க நித்தியப் பொருளைக் கூட
விச்சையும் வெறுப்பு நீங்க விழிபிறப் போயக் காஞ்சி
நிச்சல ராமா னந்தர் நேருறச் செய்தார் நூலே. (க)

மோக்கசா தனவி ளக்க முன்னுள நூலு ளெல்லாந்
தேக்கிய சார மோங்கித் திரண்டுருக் கொண்ட நூலா
நோக்கியச் சிடவே செய்த முதலியார் நுட்ப நீதிப்
பாக்கியங் கொண்ட ராஜ ரத்தினர் பண்பு ளாரே. (உ)

படிமீதி லிந்த நூலைப் படிக்கவே பிழைகள் போக்கி
வடிவாகு மெழுத்தி லச்சின் வாய்ப்பித்த வண்மை யானை
னடியாருந் துறட்கு மண்மே லழகுற விருத்தி செய்த
வடிவேலு சிரேட்டி யென்னும் வண்டமிழ்க் கொருவன் றானே.()

குத்தனூர், சின்னசாமி சாஸ்திரியார் சிஷ்யருளொருவராகிய
கஞ்சித்தாலுக்கா, பிச்சுவாடிக்கிராமம்
பிரஹ்மஶ்ரீ. இராமசாமிசாஸ்திரியா ரவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கடல்சூழ்ந்த காசினியிற் கனகசபை யெனவியந்து கண்டோர் போற்றும்,வடலூர்ச்சிற் றம்பலத்தி னடனமிடு வருட்சோதி வள்ளற் பாத,மடைவாக முடியிலணி யனகனரு ளுசலன்ற னருளான் ஞாலந், திடஞானம் பெற்றுய்ய நான்மறையா தியவெல்லாந் திரட்டிக் காஞ்சி: (க)

நிச்சலரா மாளுந்த முனிவனருள் வீடடையு நெறிக ளாய்ந்திங், குச்சிதமார் மோட்சசா தனவிளக்க மெனவளித்தா னுவந்தந் நூலே, யச்சுவா கனமேற்றி யம்முனிவ னகங்களிக்க வளித்தார் சீடர், மெச்சுபெருந் தகைவாய்ந்த வன்னவரின் பக்தியுமே விளங்கிற் றம்மா. (உ)

---

இராமாநந்த யோகியென்னுஞ் சிறப்புப்பெயர்வாய்ந்த
மகாவித்வான்
காஞ்சிபுரம். ஶ்ரீமத். இராமசாமி நாயுடவர்க ளியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இச்சகத்து மன்பதைக ளிரும்பிறவிப் பரவையில்வீழ்ந் திணைத னீங்கி,பச்சமற்றுப் பேரின்ப வாழ்வெய்து மாறறிஞ ரகத்தே வாழும், நிச்சலரா மாநந்தன் மோக்கசா தனவிளக்க நிகழ்த்தி யிட்டான், முச்சகத்து மென்றுமவி யாவிளக்க மென்றிதனை மொழிய லாமே.

---

மகாவித்வான். புதுவை. ஶ்ரீமத். பூ-ஆ-பெரியசாமி பிள்ளை
யவர்களியற்றிய
எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காராருங் காஞ்சிநகர் தன்னின் மேவுங்
கௌரிகுலச் சலதியிற்றண் கதிர்போல் வந்தோ
ஞாரரு நல்லருணு சலக்கோ மான்பான்
ஞானோப தேசமெலா நவிலப் பெற்றோ
னீராரு நிச்சலரா மானந் தப்பேர்
நின்மலன்வான் மோட்சசா தனவி ளக்கப்
பேராரு மொருநூல்செய் திட்டான் மேலோர்
பிறங்குசிரத் தணிந்துதுதிப் பேசத் தானே.

காஞ்சீபுரம், பச்சையப்பன் ஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்,
ஸ்ரீமத். வெண்பாப்புலி, வேலுசாமிப்பிள்ளை யவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மெச்சலரா மானந்தன் விரிஞ்சனிவர் காணரிய விமலர் கண்ட
நச்சலரா மானந்தர் நற்பதமாந் தனையுணர்வார் நாமென் னந்தை
விச்சலரா மானந்த வியன்மோக்ஷ சாதனவி ளக்க நன்னூ
னிச்சலா மானந்த நிபுணன்செய் தச்சிட்டு நிகழ்த்தி னானால்.

---

பெங்களூர், செண்டு ஜோசேப் காலேஜ் தமிழ்த்
தலைமைப்புலவர், மகாவித்வான், சித்தாந்த
ரத்நாகரம். அரண்வாயல்.
ஸ்ரீமத். வேங்கடசுப்புப்பிள்ளை யவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்கொளருட் பெருஞ்சோதி யதுவேமெய்த் தெய்வமெனத் தெளிந்தோ னாகிப், பார்கொளுயிர்த் தொகையுணர்ந்து பரவநயந் தளித்தவருட் பாவினீங்கா, நார்கொளுயர் சிந்தையிடத் திராம லிங்க வருட்சித்தர் நளினப் பூந்தா, ளோர்கொளவைத் தன்புசெயு மின்புடையன் வன்சொலிலா வின்சொ லுவான். (க)

ஞானனு பூதிமிகு தூயனரு ணாசலப்பேர் ஞான வாசான்
றானளப் பெற்றுமிளிர் வேதாந்தப் பொருளுணர்வாற் றன்சொரூப
மானமை யறிந்தபடி யிறைவனையு மவனருளா லறிந்தா னந்த
வானாகி யத்துவிதக் கோனாகி மானாகி வாழுஞ் சீமான். (உ)

வந்ததிருக் காஞ்சிநகர் வாஞ்சையுற நீந்தரிய மாய வாழ்வின், பந்தமகல் சிந்தைதெளி யந்தண னடியவர்கள் பல்லோர் சூழ்ந் து, சிந்தைசெய வொளிர்ஞான பானுவென வாழ்பெரியோன் செந்தே னூற்றுஞ், சந்தமுகில் போறபலசெந் தமிழ்த்துதிநூ லுலகுய்யத் தருநா வல்லோன். (ங)

இன்னகுண மேருவெனு நிச்சலரா மானந்த வியற்பேர் வாய்ந் தோன், றன்னதுய ரனுபவமு மன்னதற்குச் சான்றெனவே தாந்த மாதி, முன்னுளபன் னூன்முடிபு மொருங்குநிறைந் திருந் தொளிர முத்திக் கான, பொன்னிகர்சா தனவிளக்க மென்னவரு தன்னிகர்நூல் புனைந்திட் டானே. (ச)

விளக்காகு மிந்நூலின் பெருமையுட னருமையையும் விளக்க லென்னோ, வளக்கார்க ளளப்பரிய பொருளதனை யளவையினு லறிவான் மிக்கோ, ருளக்காத லொடுதேர்வார் விளக்காத னுண் மையெனு வுரைத்த லன்றி,யிளக்கார மூரைத்ததொப்பாம் புகழ்ச் சியுரை யூதலினு லியம்பி லோமே. (ரு)

சென்னைப் பச்சையப்பன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமத். பூ. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் மாணக்கருள் ஒருவராகிய
ஸ்ரீமான். ஆ. மே. சென்னகேசவலு நாயுடு
அவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மாமேவு புவிராஜர் மதிமேவு கவிராஜர் மனத்தெந் நாளுந்
தூமேவு தவராஜர் துன்னிசித மன்னிவளர் துணர்ப்பூக் கொண்ட
காமேவு வனப்புடனே கடிக்கமல மிசைசசங்கு கவினுற் றோங்கப்
பூமேவு செங்கானல் லன்னமெனப் பொலிபொய்கை பொலியுங்
[கச்சி. (க)

சூஙகரியைப் பங்கிலுறை சங்கரன்முன் மகவேண்டித் தவத்தைச் செய்யத், துங்ககரி முகத்தவனுஞ் சுப்பிரமண் ணியன்றானுஞ் சுதனாய்த் தோன்றி, யங்கவர்க்குத துணையின்றித் தெருத்தோறு மொருவன்போ யமர்ந்து விட்டான், பொங்குபுகழ் மற்றொருவன் வானகத்துங் கானகத்தும் பொலிந்தா னென்றே. (உ)

புகழ்மேவு நன்மக்கள் பெறவேண்டி யுமையுடனே புனிதமாய, திகழ்மேவு பலியெனும்பேர் யாகமதைத் தான்செய்யத் திணிவின் வந்த, மகிழ்மேவு பலிசவா ரென்றுங்கௌ ரவரென்று மண்ணில் யாரு, நிகழ்வோடு கொண்டாடுஞ் சத்திரிய குலாம்புதியி னிலவின் வந்தோன். (ஙு)

தண்கடற்சூழ் புவிமீதி லடக்கமுடன் பொறைவாய்மை தண்மை நீங்கா, ஒனைபுகழ்சேர் தெலுங்குடனே சம்ஸ்க்ருதந் தமிழிவற்றி னெவ்வொன் றுக்கே, அண்மியநல் லிலக்கியமு மிலக்கணமுந் தருக்கமிவை யமையக் கற்றோன், உண்மைதிகழ் வேதாந்தஞ் சிலம்பமிவை யுரிமையுட னுற்றுக் கற்றோன். (ச)

மன்னுபுகழ் செறிராம லிங்கனிரு மலரடியை மறவா தென்றுந், துன்னுமருணாசலனுஞ் சுவானுபவன றன்னிடத்தி றுரிசில் லாது, மன்னுமனுக் கிரகங்கொ ணிச்சலரா மானந்தன் மாண்பிற் செய்த, உன்னருஞ்சீர் மோட்சசா தனம்படிப்போர் பெறும் பேற்றை யுரைக்கற் பாற்றே. (ரு)

---

காஞ்சீபுரம், ஆன்றஸன் ஐஸ்கூல், தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமத், கனகசபை நாயகவர்கள் இயற்றிய
நேரிசை வெண்பா.

தன்னை யுணர்மோட்ச சாதனவி ளக்கமா
மென்னு மொருநூ லெழிற்கச்சி - நன்னகர்வாழ்
நிச்சலரா மானந்த நீதி னனியருள்கூர்ந்
திச்சையுடன் செய்தளித்தா னீண்டு.

சன்மார்க்கமத ப்ரவசனராகிய
ஸ்ரீமாந்-நா-சி. கண்ணபிரான் முதலியாரவர்களியற்றிய
எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கடலுடைப் புவிவாழ் மன்பதை நல்ல கதிபெறக்
கனிந்தசெந் தமிழி
லடலுடன் மோட்ச சாதன மென்னு மரியநூ
லளித்தனன் சீர்சான்
மிடலுடைக் காஞ்சி நகர்தனில் வாழு மேன்மைசேர்
மிளிரறி வுடையோன்
விடலரும் புகழார் நிச்சல ராமா னந்தனும்
மேலவன் மாதோ.

சென்னைக் கிறிஸ்தவக் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமத். வா-மகாதேவமுதலியாரவர்க ளியற்றிய
நேரிசை வெண்பா,

பற்றகன்ற வுள்ளத்தாற் பாடுற்று னஃகியே
மற்றகன்ற காட்சியான் மாசில்லா—னற்றவர்சொல்
பார்வதியா ரெண்ணுங்கு பாங்கா ரறம்வளர்த்த
வூர்வதிவா னூக்கமிகுந் தோன். (க)

நிச்சலரா மானந்த னேய முயிர்தம்பால்
வைச்சலரா நிற்குமன மாட்சியா—னிச்சயமா
யேட்டி லுணர வெழின்மோக்க சாதனமே
காட்டி விளக்கினன் காண். (உ)

முத்தமிழிரத்நாகரம்,
ஸ்ரீமத்· ம-தி-பா நுகவிசுவாமிகளவர்க ளியற்றிய
பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏழுலகத்தின் மேலா விருந்தரு ணடனஞ் செய்யு மிறைவனை யெய்த நின்று ரிருள்வழி யாகி நின்ற,பாழுலகத்தின் பாலாப் படருறு தனர்த்த நீங்கிப் பகர்முதற் பகுதிக் கேற்பப் படரறத் தேகு மாறு, ஊழுலகத்தின் மோக்க சாதன விளக்க மொன்றை யுதவிநற் சிஞ்ஞ ருக்கோ ருபகாரி யாகி நின்றான், வீழுலகத்தின் மேலோர் நிச்சல ராமா னந்த வியன்முனி யென்று போற்ற விளங்கெழி லுருவன் றனே.

வித்வான் ஸ்ரீமத். ம, இராஜகோபாலபிள்ளை யவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வல்லவளம் பொலிந்தாமை முதுகுகுகி கொண்டுமது மலரைச் சாடி, யல்லல்வினைத் திளவாளை யாடல்புரி வேகவதி யணிகொ ளாறும், நல்லதமிழ் தினுமினிய கேள்வியினும் வேள்வியினு நவில்ப ருந்தோ, டொல்லுநிழல் புல்லலனை வியலிசையி னும் பயன்றுய்த் துவப்போர் தாமும். (க)

விருந்துவிழா விழைந்துபுரி வதுமுதலாஞ் செந்நெறியின் மேனிற் பாரும், பொருந்தமுழு முதற்கருணை நிதியாகு முருகனையும் புனலரு சென்னி, யிருந்தவிறை வனையுமுல குய்யும்வகை கொண்டுமுத்தி யீய வல்ல, திருந்துநக ரேழினொன்றாய்த் திகழ் காஞ்சி நகரதனிற் சிறக்க வந்தோன். (உ)

தானுர்தன் றலைவனு ரதுதெளியா வகைதடுக்குந் தடையா தென்று, வானுரு மறைவல்லார் வாயுணர்ந்து சுகநிலையை மருவி வாழா, தூனுர வுண்பதற்கே வோயாத கவலை யுற்றிங் குழனுமாக்க, டேனுர வுண்டுய்யத் திருவருட்பா வெனுமமுதைத் தெரிந்த ளித்த. (ங)

எற்றமுறு திருவருட் பிரகாச வள்ளலா ரெனுமி யற்பே, ரேற்றொளிரி ராமலிங்க தேசிகனுர் தம்மிணைத்தாட் கியைந்தாளாகி, யாற்றலுறுங் குரவனரு ளுசலன்ற னடியடைந்திங் காய்ந்து மெய்ந்நூற், றேறுறியழி யிவவுலகத் தொடர்பறுத்து விளங்குமுயர் சுகுணசீலன். (ச)

மறைபாதி நூல்களெலாம் வழங்குமுடி பனுபவித்த வணுஞ்சுருக்கிக், குறையாது மின்றியுல கெளிதறிந்து சுகப்பேற்றைக் குறுகு மாறு, முறையார்ந்த மோட்சசா தனவிளக்க மென்றொருநூன் முடித்த ளித்தா, னிறையாரு நிச்சலரா மானந்த யோகியெனு நிபுண னம்மா. (ரு)

---

சென்னை, இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமத்-கோ-வடிவேலுசெட்டியாரவர்கள்

மாணுக்கர்களுள் ஒருவராகிய

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை,

ஸ்ரீமத். சி. அங்கமுத்துப்பிள்ளையவாக ளியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம.

ஆக்க மறியா தலைவோர்க்கிங் கருஞ்சா தனங்க ளுறவறிவி
னீக்க மறியா நிச்சலவி ராமா நந்த நிறைமதியன்
பூக்கண் மோக்க சாதனவி ளக்கம புகன்றான் புரைதபவே
யூக்க முடனே யுய்ந்துணர்வா ருமா நின்று பொலிகுவதால்.

## பண்டித சிரோமணிகளின் அபிப்பிராயம்.

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயம்
ஸ்ரீமத். சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின்
மாணுக்கர் ஸ்ரீமத். தி. அ. குப்புசாமிபத்தரவர்க ளியற்றிய
நாலடித்தரவுக் கொச்சகம்.

தேனிருக்குந் திருப்பாவாற் றென்மொழிவாய் வாய்மலர்ந்தே
மானிருக்குங் கரனடியை வந்திக்கும் வடலூர்நற்
கோனிருக்கும் வழிமரபிற் குலவுகுரு வெனநின்று
தானிருக்கு நிலையறிந்தோன் றகையருணு சலப்பெரியன். (க)

அன்னவற்சார்ந் தடிமுடிகொண் டகனெடுக்கி யாய்ந்தவெலாம்
சொன்னபடி யுணர்ந்துநறுஞ் சுகமுண்ட பெரும்பயனை
யுன்னுமுறை தெரிக்கமறை யுபநிடதத் துறைகூட்டி
முன்னவர்பன் னூல்காட்டு முதுக்குறைநூன் மொழிந்தானே. ()

சாதகத்திற் சாதனமுஞ் சாதனத்தான் முத்தியொளி
போதகத்தின் வருமென்னப் புந்திமுகி ழுறநோக்கி
யோதகத்தி யனையனையோ னுரைத்திட்ட நூற்பெயர்தான்
மூதகத்தி னிருளகற்று மோட்சசா தனவிளக்கம். (ங)

ஆக்கியோ னரியணு யவனிசுகப் பொய்ம்மைதனை
நீக்கியவன் கோதகன்ற நிச்சலரா மானந்த
போக்கியப்பேர்த் தகுதியினன் புகழ்ஞான போதத்து
வாக்கியற்கிங் கொப்புரைக்க வல்லாரு முண்டேயோ. (ச)

பன்னூல்கற் றுறும்பேற்றைப் பன்னாள்கொண் டடைவதினு
மின்னூல்கற் றஃதெய்த லெளிமையென வுளங்கொண்டே
பன்னூலி னுளமிருக்கும் பயன்களெலாம் பரிந்தாய்ந்து
சொன்னூலா மிந்நூற்குச் சுகியார்யார் மகியாரே. (ரு)

---

புதுவை விலக்ஷணகவி இராமாநுஜ நாவலரவர்கள் மாணுக்கருள்
ஒருவரும், ஸ்ரீமத் பாகவத பாரத இராமாயண
காலக்ஷேபகருமாய மதுரகவி ஸ்ரீமத். இராமநுஜபாவலர் இயற்றிய
பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்கொண்ட நம்மடிகள் பொய்கையா ரவதாரஞ் செய்தநற் கச்சி வந்தோன், செப்பரிய கௌரவர் குலதீப மாயொளிர் செம்மல் வீரா சாமிசெய்,—பார்கொண்ட தவமெலா மோருருக் கொண் டெனப் பகரும்வர தம்மையார்தம், பண்டியி லவதரித் தவனியின் பால்வந்து பகருஞ் சம்ஸ்கிருதமுட,—னூர்கொண்ட தண்டமி ழிலக்கிய விலக்கண நயமுடன் கற்றுயர்ந்தே, நற்றவர்கள் புகழ் ராம லிங்கதே சிகனதிரு நளினபா தங்க ளூற்ற,—வார்கொண்ட வருணசல க்குரவ னிணையடிக் கெந்நாளு மன்பினைச்செய், தேத மறு குருவிரா மானந்தன் றருதீப மழின்மோக்க சாதன மரோ.

வெண்பா.

இன்புடைய விந்நூலர் வீறிலாப் பேறடைதன்
மன்பதைக் கெல்லாநன் மார்க்கமா—யன்படையக்
காதலா விந்நூலைக் கற்போர்க்கு நன்மோட்ச
சாதனமுற் றுண்டாகுந் தான். (௨)

காஞ்சிபுரம் பாலையர்மடம், ஸ்ரீமத். சிவஞானஐயரவர்கள் இயற்றிய அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நீர்கொண்ட கச்சிநகர் நிச்சலரா மானந்த நிபுணன் பாரிற், பேர்கொண்ட பலநூலின் பெற்றியெலா மொருங்குணர்ந்தே பிறங்க வற்றின், சார்கொண்ட மோக்கசா தனவிளக்க மெனவொருநூ றயங்கச் செய்தான், சீர்கொண்ட வந்நூலின் சிறப்பனந்தன் றன்னாலுஞ் செப்பற் பாற்றோ.

காஞ்சிபுரம் பிள்ளையார் பாளையம்

ஸ்ரீமத். அ. சிற்றம்பலமுதலியாரவர்கள் இயற்றிய

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புண்ணிய நிறைந்த பக்குவ ருலகப் பொய்யொழிந் துண்மையை யுணர்வான், எண்ணிய மோட்ச சாதனவிளக்க மெனுங்கலை புனைந்தன னருட்பா, பண்ணிய விராம லிங்கமெய்த் தவத்துப் பண்ணவன் மரபினை விளக்க, நண்ணிய கச்சி நிச்சல ராமா நந்த மா முனிவரன் றானே.

சித்தூர்ஜில்லா, கனியம்பாடி, வித்வான், லிங்காசாரிமாணுக்கர்

வல்லம், பனையப்பிள்ளை குமாரர், வித்வான்,

ஸ்ரீமத். வைத்தியலிங்கம்பிள்ளையவர்க ளியற்றிய

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏறுத பவக்கடலைக் கடத்தி முத்தி யெனுங்கரையிற் சேர்விக்கும புணையா யுள்ளந், தேறுத மன்பதைக ளுய்வான் வேண்டித் திகழ்மோட்ச சாதனவி ளக்க மென்ன, வாறுத காதலுடனோர்நூ லிங்கு வாழ்வினில் விரித்தளித்தா னவனு ரென்னின், மாறுத வநுபூதி மிக்கோன் கச்சி வருமிரா மானந்த வாய்மையானே.

தமிழ்ப்பண்டிதர். ஸ்ரீமத். வல்லி-ப. தெய்வநாயகமுதலியார்
அவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காமணக்கும் காஞ்சிநகர்க் கௌரிகுலத் துற்பவித்துக் கலைவலோர்க, ளூமணக்கக் கவிபாடு நாவன்மை யுடையபிரா னுல்லைவதத்துட், டேமணக்கு நிச்சலரா மாநந்த பரமகுரு தூரிசு பாறப், பூமணக்க மோக்கசா தனவிளக்கம் புகன்றதெனுற் புகலற் பாற்றோ.



# இந்நூலாசிரியரின் சிஷ்யர்களது

# அபிப்பிராயம்.

காஞ்சீபுரம் பிள்ளையார் பாளையம்

பரமார்த்தரத்திநாகரம்

கேதுகவி. ம. திருவேங்கட முதலியாரவர்களியற்றிய.

பதினான்குசீர்க்கழிநெடிலடி யிரட்டையாசிரியவிருத்தம்.

உரைதரும் வடலூர்ச் சிற்சபை நடுவி லொருதனிப் பரம்பொரு ணடங்கண், டுவந்தருட் பனுவன் மழைமொழிந் தகில வுயிர்க் கெலா முறுதிதந் தருவா, யுலகெலா நிறைந்த விராமலிங் கப்பே ருத்தம வள்ளலார் மரபி,னுயர்வுற வருணாசலக்குரு மணிபா லுற் றருள் பெற்றமெய்ஞ் ஞானி,—

இரைதருங் கடலின் முழவதிற் காஞ்சி யெனுநகர் புரிந்தமா தவங்க, ளெழிலுருவாகி யெழுந்தருள் புனித னிருங்கலை முழுதுணர் நிபுணன், இலகிய துரிய மலைமிசைச் சாந்தத் தின்புறு புண்ணியன் மாயை, யிருண்மலங் கடந்து பொருண்முடி புணர்ந்த விறையவ னிருவினையென னுந்,—

திரைதருஞ் சனன சாகரத்தழுந்தித் தியங்குறு பெளியனை யெடுத்துத், திருத்தக வன்பர் பக்கலி லிருத்தித் திரிகரணங்களு மடங்கிச், செயலறத் தீட்சை செய்தொரு மொழியாந் தெய்வநல் லருட்கல முதவித், திருவடி சூட்டி யெனையறி வுருவாய்த் திகழ்தரக் காட்டியா னந்தக்,—

• கரைதருங் கருணை கரக்குருநாதன் கரிசறு நீச்சலம் வாய்ந் த,கருதரு மிராமா நந்தமா முனிவன் கழலிணைக் கலப்புதற் கன்பு, கனிந்துரு கடியார் மனமருட் கங்குல் கழிந்திடக் கரதலா மலகக், கனியென மோட்ச சாதன விளக்கக் கதிரவற் றந்தனன் மாதோ.

---

காஞ்சீபுரம் அடிசன்பேட்டைப் பட்டுமெளிகை வியாபாரம்

க. கன்னியப்பிள்ளை யவர்களியற்றிய

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீருறு புவியிற் சிறந்திடுந் தில்லைச் சிதம்பர நகர்க்கணித் தாகிப், பேருறு வடலூ ரென்னுமெய்ஞ் ஞானப் பேரின்ப நகரில் வாழ்ந் தருளாற்,. காருரு வகற்றுந் திருவருட் பாவைக் கனிந்தலங் கரித்தர ளடிக்கே, தாருரு கன்போ டணிந்தவன் றுளுய்த் தழைத்திடு மிராமலிங் கக்கோன. (க)

அன்னவ னருளைப் பெற்றெலா வுயிரு மன்னையே யெனத் துதித் தேத்த, மன்னிய வருணு சலக்குரு நாதன் மலரடிக் கன்பு பூண் டருட்கு, மன்னவ னெனவே வாழ்குவோன் மாயை வலியினைக் கெடுத்தரு ளடையச், சொன்னவன கருணை தன்னையே புகழ்ந்து தொண்டனேன் றுதித்திடற் கெளிதோ. (உ)

சொல்லொணு வவன்றன் புகலெனு மமிர்தச் சுவையருந் துார்தமைவிடய, வல்விடந்தீர வளர்சிவ ஞான மகோததிப் படுத்துவோன் மோனத், துல்லிய மாகிச் சுத்தமாய்ச் சிவமாய்ச் சொல்லுடன் பொருளுமே யற்ற, வெல்லையி லொளியா யேகமாய் ஞான விரவியே யாகுவ னவனே. (ங)

சச்சிதானந்த சொரூபமாயிலகுந் தனியருட் பரசிவந் தனது, மெய்ச்சரோ ருகத்தாட் கன்புமிக் குள்ளோன் மேலவர் துதியணி புலவோன், கச்சியின் மேவி வாழ்ந்திதெம்ம ஞேர்கள் கருப்பிணி யகற்றிடு ஞான, நிச்சல ராமா நந்தமெய்க் குரவ னீடுல குயிர்முத்தி யடைவான். (ச)

அருமனச் செருக்கு மைம்பொறித் திருக்கு மறுத்துமெய்ஞ் ஞானமா மதிதப், பெருநிலை யேறித் தன்னையே தானுய்ப் போத மொன் றின்றியே கண்ட, வுருவமே சிவமவ் வுயர்சிவ நிலையே யுண்மையா முத்தியென் றுரைக்குந், திருவுறு மோட்ச சாதன விளக்கத் தீங்கலை புனைந்தரு ளினனே. (ரு)

---

காஞ்சீபுரம். ஜவுளி. கொ. தானப்பமுதலியாரவர்களியற்றிய

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கேத்திரங் களிற்சீர் கிளர்தருங் காஞ்சிக் கெடியிரா மானந்த நிபுணன், பாத்திர மில்லாப் பான்மையேன் றனக்கும் பரிந்தருள் புரிந்தநற் குரவன், சாத்திர மனைத்துந் தயங்கிட மோட்ச சாதன விளக்கமென் றொருநூ, னேத்திர மெனவே நிலைபெற வியற்றி நிலமகிழ் தரவளித் தனனே.

---

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை,

காளாஞ்சி. குப்புசாமிபிள்ளையவர்க ளியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருந்தவருண் முத்திநிலை யாதரிப்பார் நாணுளு மாய்ந்து கற்க, விருந்தபல நூற்றிரளு ளெவற்றின்று வேண்டுவன வெடுத்துக் கூட்டித், திருந்தமன நிலைகாட்டி யொருநூலாந் திரட்டியதைச் சிறந்தோர் மெச்சப், பொருந்துபெயர் மோக்ஷசா தனவிளக்க மெனவமைத்துப் புகழுற் றானல். (க)

அத்தகைய பெருந்தகையோ னெவனென்னி லறிஞர்சிகா மணியா மண்ணி, லுத்தமசன் மார்க்கநெறி சமரசமா விளக்கியரு ளுறுவன் சீர்த்தி,யெத்திசையும் பரவவருட் பாவுரைத்த சிவஞானி யெல்லாம் வல்ல, வத்தனடி யிணைமறவா வருட்பிரகா சப்பெயரி னமர்ந்த வள்ளல். (உ)

பதம்பரவு மடியர்தமை நனிபாளு முமையாடன் பாகத் தெந் தை, சிதம்பரமு வடலூருந் திருநகரா வுடையபிரான் செழுநீர் வைப்போர், நிதம்பரவு மபிதான மிராமலிங்க னெனவுடைய நிம லன் றொண்ட, னிதம்பரவு கூடலரு ணசலன்ற னடித்தொண்டி லிலங்கு மன்பன். (௩)

எச்சலமு மொழிபாக்குக் கொண்டதவ வேடக்கேய் வுற்ற தென்று, விச்சலதி சூழுலகி லன்பர்சொல மெய்ஞ்ஞான வின்ப நீட்டை, தச்சலசு மனமொழித்துச் சிவமாகித் தத்கபட மென்ன நின்ற, நிச்சலரா மாந்த யோகியெனு மென்குரவ னிலவ மாதோ.

---

கச்சிநகர்க்கடுத்துள்ள பெருங்பாக்கங் கிராமம்

அரங்கநாதப்பிள்ளையவர்க ளியற்றிய

நேரிசைவெண்பா.

வானவரும் மண்ணவரும் வாழ்த்துமருட் சோதிவள்ள
றேனமருந் தாமரைத்தாட் சேர்ந்துய்யுங்—கோனவனை
வந்தவரு ணசலன்சீர் வாழ்த்துநனி கச்சியிற்வா
ழெந்தைநூ லீந்தா னிசைந்து. (௧)

வேதாந்த மென்கோ விரிஞான நூலென்கோ,
நாதாந்த மென்கோ நனிவிளங்கும்—போதாந்த
நாதனிரா மானந்த நற்குருந வின்மோட்ச
சாதனவி ளக்கந் தனை. (உ)

கண்டாருக் கின்பங் கதிக்குங் கருத்தூன்றிக்
கொண்டார்க்கு முத்திகை கூடுமே—விண்டார்க்கு
மாதனமா யுள்ளிருளை மாற்ற வருமோக்க
சாதனவி ளக்கமது தான். (௩)

திருநெல்வேலி, ராஜபாளையம்,

சிதாநந்தசாகரம். ஆறுமுகசுவாமிகளியற்றிய

பதினான்குசீர்க்கழிநெடிலடி யிரட்டையாசிரியவிருத்தம்.

திருவருண் மாரி பொழியவான் முகிலாச் செழிதரு முயிர்ப் பயிர் தழைக்கத், திகழுறுங் கனக வம்பல வாணன் றெளிவமு தூட்டவுட் கொண்ட, திருவருட்சோதி வள்ளலார் மரபிற் சேரரு ளுசலக் குரவன், றேடிவந் தமிர்தச் சுவையினை யளிக்கத் திருவடி பரவியேற் றுண்டக்,—

குருவருண் மொழியைப் பழுதற வுணர்ந்துங் குலவுமெய்ஞ் ஞானநூற் புகலுங், குணகுணி வாச்ய லட்சியங் கடந்துங் கோதற யாவுமா யலவாய்ச், குடிகொளும் பொருளாய்ப் பூரணச் சுகமாய்க் குவலயஞ் செய்தவப் பயனாய்க், குஞ்சித நடஞ்செய் கோனென வந்தென் குறைதவிர்த் தடியரிற் சேர்க்க,—

மருவருட் தத்வ மசிமறு வதனுன் மாண்புறு தொம்பத மகற்றி, மாநெடுந் தூரிய வணைமிசை யேற்றி மகிழ்தரு வதீதமெய் வாழ்வை, மருவிடச் சிவோக சிந்தனை யளித்து மாவிருளகற்று மென்றருகி, மயர்வற விளங்குஞ் சுத்தசன் மார்க்க மாநெறி யுற் றொளிர் சீலன்,—

நிருவிகற் பாங்க சுகதையையுண் டன்பர் நீள்பவ வாரியைக் கடக்க, நிகரறு மோக்க சாதனவிளக்க நீண்டொளிர் கலமெனத் தந்தா, னெருங்கிய் தொண்டை மண்டல மதனு ணீர்மைசேர் கச்சியம் பதிவாழ்,நிச்சல ராமா நந்தனென் குரவ னிலவுறு மகித்தை யோடிடவே.

---

வேதஸ்ரேணி கந்தசாமியாசாரியாரவர்க ளியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மறையுறைவோன் மனிதவுரு மன்னுலகில் வந்தெடுத்து மற்றவ் வேதங், கரைதமிழி லுரைத்தாற்போ னுரைக்கினிய செந்தமிழிற் கவின்கள் பஞ்சு, நிரைபடவே மோக்கசா தன விளக்கம் யாக்கணிலை யாமை கண்டு, புரையறநிச் சலராமா னந் தகுரு புவிவிளங்கப் புகன்றுன் மாதோ.

காஞ்சீபுரம் புத்தக ஷாப்பு. வாடா.
கேசவலுநாயுடவர்க ளியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருட்சோதி மரபுவள ரருணாச லக்குரவ னடித்தொண் டாகி, மருட்சார்பி னுயிர்க்கிரங்கி மொழிபமுத வானுகி மறைக்கப் பாலாம், பொருட்சார்பாந் தனையளிக்கு மோக்கசா தனவிளக்கம் புகன்றெஞ் ஞான்றுந், தெருட்சார்பார் நிச்சலரா மானந்த குரவ னருட் செப்பற் பாற்றே.

சின்னகாவணம். பணையப்பிள்ளைபவர்களியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்பூத்த மறைமுடிவா ருபநிடதத் துணிபோர்ந்து செறிநற் சூத்ர, மேர்பூத்த வியாதனுமி ரண்டரைலக் கங்கிரந்த மியற்றப்பாரிற், பேர்பூத்த சங்கரா சாரியரு மற்றையரும் பெருகச் சொற்ற, நேர்பூத்த பாடியத்தின் கருத்தைபருட் பாவெனவே நிகழ்த்தும் வள்ளல். (க)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அற்புத நடஞ்செ யருட்பெருஞ் சோதி யண்ணலார் மரபினிற் ஞானப், பொற்புரு மருணு சலக்குரு நாதன் பொன்னடி சிரத்திடை யணிந்து, நிற்பெரு முணர்வார் நிச்சல ராமா னந்தனென் குரவனு நிமல, னுற்பவ மகற்று மோக்ஷசா தனநூன் மொழிந்துல களித்தனன் மாதோ. (உ)

காஞ்சீபுரம் தும்பைவனம்.
வ. முனிசாமிமுதலியா ரியற்றிய
நேரிசைவெண்பா.

பூதனமார் வீட்டுநெறி புக்கிடவே நன்மோக்க
சாதனவி ளக்கமது சாற்றினு—னேதமறு
நிச்சலரா மாநந்த நீதன் புரமிகுரு
வுச்சிதமாய்க் கொள்ள வுவந்து.



ஓம்

தத்ஸத்

பரப்பிரஹ்மணே நமஃ.

## மோக்ஷசாதனவிளக்கத்தின்

# அனுக்கிரமணிகை.


| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| 1 | பாயிரம் | 1 |
| 2 | நூல் | 2 |
| 3 | குருசிஷ்யசம்வாதம் | 3 |
| | ௧-வது சம்வாதம். | |
| 4 | கடவுள் சத்தியே கற்பிதவுலகெனல் | 12 |
| 5 | ௨-ச—ம். சிவமுஞ்சத்தியுந் தெளிவி லொன்றெனல் | 21 |
| 6 | ௩-ச—ம். கற்பனையுலகெனக் காரணங்கூறல் | 25 |
| 7 | ௪-ச—ம். அநாதிமலத்தாலழுங்குமுயிரெனல் | 30 |
| 8 | ௫-ச—ம். உலகோற்பத்தியி னுண்மைகூறல் | 37 |
| 9 | கிரம சிருஷ்டி | ,, |
| 10 | பஞ்சீகரணம் | 38 |
| 11 | யுகபத் சிருஷ்டி | 39 |
| 12 | அஜாதவாதம் | 40 |
| 13 | ஸ்தூலதேகபஞ்சீகரணசக்கரம் | 46 |
| 14 | சூக்குமதேகபஞ்சீகரணசக்கர | 48 |
| 15 | அத்தியாத்மகமாதி விவரம் | 50 |
| 16 | ௬-ச—ம். கர்மத்திரயத்தின்காரணமுரைத்தல் | 51 |
| 17 | ௭-ச—ம். மக்கட்பிறவியாய்வருதலரிதெனல் | 56 |
| 18 | ௮-ச—ம். பிறந்தவர்பெரும்பயன்பேரின்ப வீடெனல் | 61 |
| 19 | ௯-ச—ம். மெய்ஞ்ஞானத்தாலன்றி வீடு கூடாதெனல் | 64 |
| 20 | க0-ச—ம். இருவகைப்பற்றற்றி லெய்துதல்லுணர்வெனல் | 70 |
| 21 | ௧௧-ச—ம். புறப்பற்றற்றபின் பொருந்தாதகமெனல் | 72 |
| 22 | ௧௨-ச—ம். அருட்செல்வத்தையடைவது நன்றெனல் | 75 |
| 23 | ௧௩-ச—ம். மாதர்போகம் மாளாத்துயரெனல் | 80 |
| 24 | ௧௪-ச—ம். புத்திரவிருப்பம் பொல்லாதென்பது | 86 |
| 25 | ௧௫-ச—ம். அசுத்தந்துக்கமனித்தியமுடலெனல் | 89 |
| | (1) உடல் அசுத்தம் | 90 |
| | (2) உடல் துக்கம் | ,, |
| | (3) உடல் அநித்தியம் | 91 |
| 26 | ௧௬-ச—ம். கரணவொழிவைக் காண்டல் நன்றெனல் | 101 |
| 27 | ௧௭-ச—ம். புவனவொழிவைப் பொருந்துதல் நன்றெனல் | 103 |
| 28 | * ௧௯-ச—ம். போகவொழிவைப் பொருந்துதல் நன்றெனல் | 106 |
| 29 | உ0-ச—ம். விகங்கமார்க்க மேவுதல் நன்றெனல் | 110 |
| 30 | ௨௧-ச—ம். பிபீலிகாமார்க்கத்தின்பேதம் புகலல் | 114 |
| | (1) அருளுடைமை | ,, |
| | (2) புலால்மறுத்தல் | 115 |
| | (3) தவம் | ,, |
| | (4) கூடாவொழுக்கமின்மை | ,, |
| | (5) கள்ளாமை | ,, |
| | (6) வாய்மை | ,, |
| | (7) வெகுளாமை | ,, |


* ௧௮-வது சம்வாதமென்றிருக்கவேண்டியது ௧௯-வது சம்வாதமெனத் தவறாய் விழுந்துவிட்டது.

| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| | (8) இன்னாசெய்யாமை | 115 |
| | (9) கொல்லாமை | ,, |
| 31 | (1) சரியை | ,, |
| 32 | (2) கிரியை | 116 |
| 33 | (3) யோகம் | ,, |
| 34 | (1) கர்மம | 117 |
| 35 | (2) பத்தி | 118 |
| 36 | நவவிதபக்தி | 119 |
| | (1) சிரவணம் | 120 |
| | (2) கீர்த்தனம் | ,, |
| | (3) ஸ்மரணம் | ,, |
| | (4) பாதசேவனம் | ,, |
| | (5) அர்ச்சனம் | ,, |
| | (6) வந்தனம் | ,, |
| | (7) தாசபாவம் | ,, |
| | (8) சகாபாவம் | ,, |
| | (9) ஆத்மநிவேதனம் | ,, |
| 37 | அநந்யபக்தி | ,, |
| 38 | ஏகாந்தபக்தி | ,, |
| 39 | அஷ்டவிதபக்தி | 121 |
| 40 | அஷ்டவிதபுஷ்பங்கள் | ,, |
| 41 | நவவிதசம்பந்தம் | ,, |
| 42 | நால்வகைமார்க்கம் | ,, |
| 43 | சரியை (சரியையிற் சரியையாதி) | 122 |
| 44 | கிரியை (கிரியையிற் சரியையாதி) | ,, |
| 45 | யோகம் (யோகத்திற் சரியையாதி) | 123 |
| 46 | ஞானம் (ஞானத்திற் சரியையாதி) | ,, |
| 47 | ௨௨-ச—ம் கர்மிகள்நன்னிலை காணாரென்பது | 126 |
| 48 | ௨௩-ச—ம். சாதிசங்கற்பந்தனை விடனன்றெனல் | 132 |
| 49 | ௨௪-ச—ம். கலையுணர்வுடையார் கதியடையாரெனல் | 138 |
| 50 | ௨௫-ச—ம். விக்கிரகாராதனை வீணாகாதெனல் | 147 |
| 51 | ௨௬-ச—ம். பாகியபூசை பரமார்த்தமன்றெனல் | 156 |
| 52 | ௨௭-ச—ம். பாவனைப்புரிந்திடில்பவநீங்காதெனல் | 165 |
| 53 | ௨௮-ச—ம். பாவனாதீதம்பழகிவீடடையெனல் | 169 |
| 54 | ௨௯-ச—ம். பாவனை நீங்கும் பான்மை யுரைத்தல் | 172 |
| 55 | ௩0-ச—ம். சங்கற்பநாசந்தனாதியற்றெனல் | 178 |
| 56 | ௩௧-ச—ம். கன்மநெறியினைக் கடைபிடித்தொழுகெனல் | 186 |
| 57 | நிஷ்காமகர்மம் | 187 |
| 58 | அஷ்டாக்ஷரப்பிரபாவம் | 190 |
| 59 | பஞ்சாக்ஷரப் பிரபாவம் | 192 |
| 60 | ஸ்தூலபஞ்சாட்சரம் | ,, |
| 61 | சூக்குமபஞ்சாட்சரம் | 193 |
| 62 | காரணபஞ்சாட்சரம் | ,, |
| 63 | மகாகாரணபஞ்சாட்சரம் | ,, |
| 64 | முத்திபஞ்சாட்சரம் | ,, |
| 65 | ஈசுவரநாமஜெபம் | 199 |
| 66 | ஈசுவரமூர்த்தித்தியானம் | 201 |
| 67 | அஜபாகாயத்திரிமந்திரம் | 204 |
| 68 | பிரணவோபாசனை | 206 |
| 69 | நிர்க்குணப்பிரஹ்மசிந்தனை | 212 |
| 70 | ௩௨-ச—ம். அரிஹரர்தம்முள் அபேதரென்பது | 215 |
| 71 | ௩௩-ச—ம். அயனரிருத்திரரபேதரேயெனல் | 228 |
| 72 | ௩௪-ச—ம். வாசியையடக்கினு மனமழியாதெனல் | 231 |
| 73 | எண்வகைப் பிராணாயாமம் இயமநியமாதிகளின் ஞானார்த்தம் | 232<br>236 |
| 74 | ௩௫-ச—ம். முத்திரைப்பேறு முடிவானதன்றெனல் | 240 |
| | (1) கேசரி | 241 |
| | (2) பூசரி | ,, |
| | (3) மத்திமை | ,, |
| | (4) சண்முகி | ,, |
| | (5) சாம்பவி | ,, |
| | (6) சின்முத்திரை | 242 |
| 75 | நாதம் | 242 |
| 76 | பிந்து | ,, |
| 77 | கலை | ,, |
| 78 | ௩௬-ச—ம். துறவிபோனடிப் புவந்துரியவீடுறாரெனல் | 214 |
| | (1) ஊமை | 245 |
| | (2) நபுஞ்சகம் | ,, |
| | (3) மூடம் | ,, |
| | (4) குருடு | |

| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| | (5) செவிடு | 245 |
| | (6) ஜடம் | ,, |
| 79 | தத்துவபோதம் | 250 |
| 80 | கஎ-ச—ம். அண்டத் தியல்பெலாம்பிண்டத் துளவெனல் | 251 |
| 81 | கஅ-ச—ம். அகமுகப்பூசையறிஞர்கொள்வாரெனல் | 255 |
| 82 | ஞானக்ஷேத்திரம் | 259 |
| 83 | (1) ஞானதீர்த்தம் | 261 |
| | (2) மானததீ ...நம் | 264 |
| 84 | ககூ-ச—ம் நிர்க்குணபூசையே நிஜபூசையாமெனல் | 266 |
| | (1) ஆவாகனம் | ,, |
| | (2) ஆசனம்... | 267 |
| | (3) அர்க்கியம் | ,, |
| | (4) பாத்தியம் | ,, |
| | (5) ஆசமனம் | ,, |
| | (6) அபிஷேகம் | ,, |
| | (7) ஆடைசாற்றல் | 268 |
| | (8) உபவீதம் | ,, |
| | (9) ஆபரணமணிதல் | ,, |
| | (10) கந்தம் பூசல | ,, |
| | (11) அர்ச்சனை | ,, |
| | (12) அட்சதை | ,, |
| | (13) தூபம் | ,, |
| | (14) தீபம் | ,, |
| | (15) நைவேத்தியம் | 269 |
| | (16) தாம்பூலமளித்தல் | ,, |
| | (17) மலர்மாலை சாற்றல் | ,, |
| | (18) கர்ப்பூரவாராத்தி | ,, |
| | (19) நீராஞ்சனம் | ,, |
| | (20) வலம்வரல் | ,, |
| | (21) வணங்குதல் | ,, |
| | (22) வழுத்துதல் | 270 |
| | (23) தியானம் | ,, |
| | (24) விசர்ச்சனம் | ,, |
| | (25) வியஞ்சனம் | ,, |
| | (26) அத்தந்துலக்கல் | ,, |
| | (27) புஷ்பாஞ்சலி | ,, |
| 85 | உ0-ச—ம். அத்தியாசவகை யிணையமையக் கூறல் | 273 |
| 86 | அத்தியாசலக்ஷணம் | ,, |
| | (1) கேவலசம்பந்தாத்தியாசம் | 274 |
| | (2) சம்பந்தசகித சம்பந்தி யத்தியாசம் | ,, |
| | (3) கேவலதர்மாத்தியாசம் | 274 |
| | (4) தர்மசகிததர்மியத்தியாசம் | ,, |
| | (5) அன்னியோன்னியாத்தியாசம் | 275 |
| | (6) அன்னியதராத்தியாசம் | 276 |
| | (1) சொரூபாத்தியாசம் | ,, |
| | (2) சம்சர்க்காத்தியாசம் | ,, |
| | (1) மித்தியாத்தியாசம் | 277 |
| | (2) இதராத்தியாசம் | ,, |
| | (3) இதரேதராத்தியாசம் | ,, |
| | (4) சத்தியாத்தியாசம் | ,, |
| | (5) நிருபாதிகாத்தியாசம் | 278 |
| | (6) சொபாதிகாத்தியாசம் | ,, |
| | (7) தத்தநுமாத்தியாசம் | 279 |
| | (8) சம்பந்தமாத்ராத்தியாசம் | ,, |
| 87 | உக-ச—ம். திருஷ்டித்திரயந் தெளிவாயறியெனல் | 286 |
| | (1) வாததிருஷ்டி | 287 |
| | (2) மித்தியாதிருஷ்டி | ,, |
| | (3) பிரவிலாபதிருஷ்டி | ,, |
| 88 | திருஷ்டித்திரயத்தின்பயன் | ,, |
| | (1) விசாரதிருஷ்டி | 288 |
| | (2) ஏகதேசதிருஷ்டி | ,, |
| | (3) பூரணதிருஷ்டி | ,, |
| 89 | உஉ-ச—ம். சாதனமெட்டின் றன்மையுரைத்தல் | 289 |
| | சிஷ்யலட்சணம் | ,, |
| | சாதனசதுஷ்டயம் | 291 |
| | (1) நித்தியாநித்யவஸ்து விவேகம் | ,, |
| | (2) இகமுத்திரார்த்தப் பல போகவிராகம் | 296 |
| | (3) சமாதிசட்கசம்பத்தி | 300 |
| | (1) சமம் | ,, |
| | (2) தமம் | 301 |
| | (3) திதிக்ஷை | ,, |
| | (4) உபரதி | ,, |
| | (5) சிரத்தை | 302 |
| | (6) சமாதி | 303 |
| (க) | (1) தமம் சமத்தை யபேட்சித்தல் | 304 |
| | (2) திதிக்ஷைசமத்தை யபேட்சித்தல் | 305 |
| | (3) உபரதி சமத்தை யபேட்சித்தல் | ,, |

| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| | (4) சிரத்தைசமத்தை யபேட்சித்தல் | 305 |
| | (5) சமாதி சமத்தை யபேட்சித்தல் | ,, |
| (உ) | (1) சமம் தமத்தை யபேட்சித்தல் | ,, |
| | (2) திதிக்ஷை தமத்தை யபேட்சித்தல் | 306 |
| | (3) உபரதி தமத்தை யபேக்ஷித்தல் | ,, |
| | (4) சிரத்தை தமத்தை யபேக்ஷித்தல் | ,, |
| | (5) சமாதானம் தமத்தை யபேக்ஷித்தல் | ,, |
| | (௩) சமதமாதிகள் திதிக்ஷையை யபேட்சித்தல் | ,, |
| | (௪) சமதமாதிகள் உபரதியை யபேட்சித்தல் | ,, |
| | (௫) சமதமாதிகள் சிரத்தையை யபேட்சித்தல் | ,, |
| | (௬) சமதமாதிகள் சமாதியை யபேட்சித்தல் | 307 |
| 90 | (4) முமுக்ஷுத்வம் | ,, |
| 91 | சாதனசதுஷ்டயத்திற்குள்ள எதுமுதலானவைகள் | ,, |
| 92 | அதிகாரி தாரதம்மியம் | 309 |
| | (1) உத்தமோத்தம வதிகாரி | ,, |
| | (2) உத்தமாதிகாரி | ,, |
| | (3) மந்தாதிகாரி | 310 |
| | (4) மத்திமாதிகாரி | ,, |
| 93 | சாதனசதுஷ்டயங்களினடைவு | ,, |
| 94 | குருவினிலக்கணம் | 315 |
| 95 | (1) ஜீவேசுவரபேதகண்டனம் | 316 |
| 96 | (2) ஜீவர்களின் பரஸ்பரபேதகண்டனம் | ,, |
| 97 | (3) ஜீவஜடபேதகண்டனம் | 317 |
| 98 | (4) ஈசுவரஜடபேதகண்டனம் | ,, |
| 99 | (5) ஜடஜடபேதகண்டனம் | ,, |
| 100 | ஐவகைப் பிராந்தி | ,, |
| 101 | ஐவகைப்பிராந்தியினிவிர்த்தி | 318 |
| 102 | குருசேவையினிலக்கணம் | 322 |
| | (1) ஆப்தம் | 332 |
| | (2) அங்கம் | ,, |
| | (3) ஸ்தானம் | ,, |
| | (4) சற்பாவம் | ,, |
| 103 | குருபதேசம் | 329 |
| 104 | தீக்ஷாத்திரயம் | 335 |
| | (1) கருதுதல் | ,, |
| | (2) நோக்குதல் | ,, |
| | (3) பரிசித்தல் | ,, |
| 105 | (1) தூலசரீரமே யாத்மா | 339 |
| 106 | (2) இந்திரியமே யாத்மா | 340 |
| 107 | (3) பிராணனே யாத்மா | ,, |
| 108 | (4) மனமே யாத்மா | 341 |
| 109 | (5) புத்தியே யாத்மா | 342 |
| 110 | (6) ஆநந்தமயகோசமே யாத்மா | 343 |
| 111 | (7) சூனியமே யாத்மா | 344 |
| 112 | (8) ஜடமே யாத்மா | 345 |
| 113 | (9) பஞ்சகோசவிலக்ஷணம் ஆத்மா | 347 |
| 114 | பஞ்சகோசம் | ,, |
| 115 | (1) அன்னமயகோசம் | ,, |
| 116 | (2) பிராணமயகோசம் | 348 |
| 117 | (3) மனோமயகோசம் | ,, |
| 118 | (4) விஞ்ஞானமயகோசம் | ,, |
| 119 | (5) ஆனந்தமயகோசம் | 349 |
| 120 | கோசம் | 350 |
| 121 | ஆத்மா சரீரத் திரயத்தின் வேறு | ,, |
| 122 | (1) தூலசரீரத்தினும் ஆத்மாவேறு | 351 |
| 123 | (2) சூக்ஷ்ம சரீரத்தினும் ஆத்மாவேறு | 352 |
| 124 | (3) காரண சரீரத்தினும் ஆத்மாவேறு | ,, |
| 125 | ஆத்மா அவத்தாத்திரய சாக்ஷி | 357 |
| 126 | (1) சாக்கிரம் | ,, |
| 127 | (2) சொப்பனம் | 358 |
| 128 | (3) சுழுத்தி | 359 |
| 129 | (1) ஆத்மா சாக்கிராவஸ்தையின் பாவாபாவங்களை யறிகிறது | ,, |

| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| 130 | (2) ஆத்மா சொப்னவஸ்தையின் பாவாபாவங்களை யறிகிறது | 359 |
| 131 | (3) ஆத்மா சுழுத்தியவஸ்தையின் பாவாபாவங்களை யறிகிறது | 360 |
| 132 | ஆத்மா சச்சிதாநந்தசொரூபம் | 364 |
| 133 | சத்து | 364 |
| 134 | சித்து | ,, |
| 135 | ஆநந்தம் | ,, |
| 136 | ஆன்மாவின் விசேஷணம் | 366 |
| 137 | விதிமுக விசேஷணம் | ,, |
| 138 | (1) நித்தியம் | ,, |
| 139 | (2) பூரணம் | ,, |
| 140 | (3) ஏகம் | ,, |
| 141 | (4) பரமார்த்தம் | ,, |
| 142 | (5) பரப்பிரமம் | 367 |
| 143 | (6) நிதானம் | ,, |
| 144 | (7) சாந்தம் | ,, |
| 145 | (8) சத்தியம் | ,, |
| 146 | (9) கேவலம் | ,, |
| 147 | (10) துரியம் | ,, |
| 148 | (11) சமம் | ,, |
| 149 | (12) திருக்கு | ,, |
| 150 | (13) கூடஸ்தன் | ,, |
| 151 | (14) சாட்சி | 368 |
| 152 | (15) போதம் | ,, |
| 153 | (16) சுத்தம் | ,, |
| 154 | (17) இலக்கியம் | ,, |
| 155 | (18) சநாதனம் | ,, |
| 156 | (19) சிவன் | ,, |
| 157 | (20) தத்துவம் | ,, |
| 158 | (21) விண் | ,, |
| 159 | (22) சோதி | ,, |
| 160 | (23) ஆன்மா | 369 |
| 161 | (24) முத்தம் | ,, |
| 162 | (25) விபு | ,, |
| 163 | (26) சூக்குமம் | ,, |
| 164 | மறைமுக விசேஷணம் | ,, |
| 165 | (1) அசலம் | ,, |
| 166 | (2) நிரஞ்சனம் | ,, |
| 167 | (3) அமிர்தம் | ,, |
| 168 | (4) அப்பிரமேயம் | ,, |
| 169 | (5) விமலம் | 370 |
| 170 | (6) வசனாதீதம் | 370 |
| 171 | (7) அஜடம் | ,, |
| 172 | (8) அநாமயம் | ,, |
| 173 | (9) அசங்கம் | ,, |
| 174 | (10) அதுலம் | 371 |
| 175 | (11) நிரந்தரம் | ,, |
| 176 | (12) அகோசரம் | ,, |
| 177 | (13) அகண்டம் | ,, |
| 178 | (14) அஜம் | ,, |
| 179 | (15) அநந்தம் | ,, |
| 180 | (16) அவிநாசி | ,, |
| 181 | (17) நிர்க்குணம் | ,, |
| 182 | (18) நிஷ்களம் | 372 |
| 183 | (19) நிரவயம் | ,, |
| 184 | (20) அநாதி | ,, |
| 185 | (21) அசரீரம் | ,, |
| 186 | (22) அவிகாரம் | ,, |
| 187 | (23) அத்துவிதம் | ,, |
| 188 | (5) சிரவணம் | 373 |
| 189 | சட்வித லிங்கலட்சணம் | ,, |
| 190 | (1) உபக்கிரம உபசம்மாரம் | 374 |
| 191 | (2) அப்பியாசம் | ,, |
| 192 | (3) அபூர்வதை | ,, |
| 193 | அஷ்டப்பிரமாணம் | ,, |
| 194 | (1) பிரத்தியக்ஷம் | 375 |
| 195 | (2) அனுமானம் | ,, |
| 196 | (3) உவமானம் | ,, |
| | (4) ஆகமம் | ,, |
| | (5) அருத்தாபத்தி | ,, |
| | (6) அனுபலத்தி | ,, |
| | (7) ஐதிகம் | ,, |
| | (8) சம்பவம் | ,, |
| | மகாவாக்கிய வாயிலாகப் பிரஹ்மநிச்சயத்திற கேதுவாகும் பிரமாணங்கள் | 378 |
| | (1) பிரத்தியட்சம் | ,, |
| | (2) அனுமானம் | ,, |
| | (3) உவமானம் | 377 |
| | (4) அருத்தாபத்தி | ,, |
| | (5) அநுபலத்தி | ,, |
| 197 | (4) பலம் | ,, |
| 198 | (5) அருத்தவாதம் | ,, |
| 199 | (1) சிருஷ்டி | 378 |
| | (2) ஸ்திதி | ,, |

| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| | (3) பிரளயம் | 378 |
| | (4) பிரவேசம் | 379 |
| | (5) ஸம்யமனம் | 380 |
| | (6) தத்துவம் பதார்த்த பரிசோதனம் | ,, |
| | (7) பலம் | ,, |
| 200 | (6) உபபத்தி | ,, |
| 201 | (6) மனனம் | 381 |
| 202 | (1) யுக்தி | 382 |
| 203 | (2) தருக்கம் | ,, |
| 204 | (3) அனுமானப்பிரமாணம் | ,, |
| 205 | (7) நிதித்சியாசனம் | 390 |
| | (1) மந்திரயோகம் | ,, |
| | (2) பரிசயோகம் | ,, |
| | (3) பாவயோகம் | 391 |
| | (4) அபாவயோகம் | ,, |
| | (5) மகாயோகம் | ,, |
| 206 | ஞானத்திற்குச் சிரவணாதிகள் பரம்பரையாகக் காரணமாதல் | 393 |
| 207 | (8) தத்துவம் பதார்த்த சோதனம் | 394 |
| 208 | அவாந்தரவாக்கியம் | 395 |
| 209 | மகாவாக்கியம் | 396 |
| 210 | மஹாவாக்கியவகை | ,, |
| 211 | தத்துவமஸி | 397 |
| 212 | லக்ஷணையின்பேதம் | 398 |
| 213 | (1) விட்டலக்ஷணை | 399 |
| 214 | (2) விடாதலக்ஷணை | ,, |
| 215 | (3) விட்டுவிடாதலக்ஷணை | 400 |
| 216 | தத்பதத்தின் வாச்சியம் | 401 |
| 217 | துவம்பதத்தின் வாச்சியம் | ,, |
| 218 | தத்பதத்தின்லக்ஷியம் | ,, |
| 219 | துவம்பதத்தின் லக்ஷியம் | ,, |
| 220 | (1) பதங்களின் சமானாதிகரணியபாவ சம்பந்தம் | 402 |
| 221 | (2) பதார்த்தங்களின் விசேஷண விசேஷியபாவ சம்பந்தம் | ,, |
| 222 | (3) பிரத்தியகாத்ம பரமாத்மாக்களின் லக்ஷிய லக்ஷண பாவசம்பந்தம் | 404 |
| 223 | (1) மகாவாக்கியத்தில் விட்டலக்ஷணையின் சம்பவமின்மை | 404 |
| 224 | (2) மகாவாக்கியத்தில் விடாதலக்ஷணையின் சம்பவமின்மை | 405 |
| | (1) பிரஞ்ஞானம் பிரமம், (2) அகம்பிரமாஸ்மி, (3) அயமாத்மாப்பிரமம் என்பவற்றின் பொருள் | ,, |
| 225 | ஏகஜீவவாதம் | 408 |
| 226 | (1) அர்த்தவாதம் | 412 |
| 227 | (2) உபச்சுபரவாதம் | ,, |
| 228 | (3) ஸ்துதிபரவாதம் | 416 |
| 229 | (4) உபசாரவாதம் | ,, |
| 230 | (5) குணசாங்கிருசியவாதம் | 417 |
| 231 | (6) ஜாதிவியக்திபாவாதம் | 418 |
| 232 | (7) கார்ய காரணவாதம் | 419 |
| 233 | (8) குணகுணிவாதம் | 429 |
| 234 | (9) விகாரவாதம் | 430 |
| 235 | (10) அம்சாம்சிகவாதம் | ,, |
| 236 | (11) பிம்பப்பிரதிபிம்பவாதம் | 431 |
| 237 | சக-ச—ம். சிவ[illegible] னல் ஜீவ[illegible] | ,, |
| 238 | சப்தாவஸ்தை | 432 |
| | (1) அஞ்ஞானம் | ,, |
| | (2) ஆவரணம் | ,, |
| | (3) விட்சேபம் | ,, |
| | (4) பரோக்ஷஞானம் | ,, |
| | (5) அபரோக்ஷஞானம் | 433 |
| | (6) சோகநிவிர்த்தி | ,, |
| | (7) நிரங்குசதிருப்தி | ,, |
| 239 | சச-ச—ம் பந்தத்திரயத்தைப் பகுத்துணர்த்துதல் | 443 |
| | (1) பூதப்பிரதிபந்தம் | ,, |
| | (2) வர்த்தமானப்பிரதிபந்தம் | ,, |
| | (3) ஆகாமியப்பிரதிபந்தம் | 444 |
| 240 | (1) ஞானம் | ,, |
| 241 | (2) வைராக்கியம் | 445 |
| 212 | (3) உபரதி | ,, |
| 213 | சரு-ச—ம். அஞ்ஞானபூமியாகாதென்றிடல் | 446 |
| | 1 பீஜசாக்கிரம் | 447 |
| | 2 சாக்கிரம் | ,, |

| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| | (3) மகாசாக்கிரம் | ,, |
| | (4) சாக்கிரசொப்பனம் | 418 |
| | (5) சொப்பனம் | ,, |
| | (6) சொப்பனசாக்கிரம் | ,, |
| | (7) சுழுத்தி | ,, |
| 244 | ௪௬-ம். ஞானபூமியை யெண்ணலெனல் | 450 |
| | (1) சுபேச்சை | ,, |
| | (2) விசாரணை | ,, |
| | (3) தனுமானசி | 451 |
| | (4) சத்துவாபத்தி | ,, |
| | (5) அசம்சத்தி | ,, |
| | (6) பதார்த்தாபாவனை | 452 |
| | (7) துரியம் | ,, |
| 245 | ௪௭-ம். முத்திக்கந்தி யஜருமருகராவரெனல் | 456 |
| 246 | ௪௮-ம். ஜீவன்முத்தரின் சொருபமுணர்த்தல் | 460 |
| | (1) பிரமவித்து | 462 |
| | (2) பிரமவரன் | ,, |
| | (3) பிரமவரியான் | 463 |
| | (4) பிரமவரிட்டன் | ,, |
| 247 | ௪௯-ம். பிராரத்தகருமத்தின் பேதமுரைத்தல் | 464 |
| 248 | பிராரத்த பஞ்சகம் | 467 |
| 249 | பிராரத்த சதுஷ்டயம் | 468 |
| 250 | பிராரத்தத்திரயம் | ,, |
| 251 | ஜீவன்முத்தனுக்குப் பிராரத்தமில்லை யென்றதன் காரணம் | 466 |
| 252 | பிராரத்தகர்மம் பல ஜன்மத்திற்கேதுவாமென்பதன் விபரம் | 470 |
| 253 | பேதவாதிவசனத்தில் விசுவாசங் கூடாதென்பதன் காரணம் | 471 |
| 254 | அந்தகோலாங்கூல நியாயம் | ,, |
| 255 | சமாதிலக்ஷணம் | ,, |
| 256 | சவிகற்பசமாதிலக்ஷணம் | 472 |
| | நிருவிகற்பசமாதிலட்சணம் | 473 |
| 257 | சட்சமாதி | ,, |
| | (1) பாஹ்ய திருசியாநுவித்தசமாதி | ,, |
| | (2) பாஹ்ய சப்தாநுவித்த சமாதி | 474 |
| | (3) பாஹ்ய நிருவிகற்ப சமாதி | ,, |
| | (4) அந்தர திருசியாநுவித்தசமாதி | ,, |
| | (5) அந்தர சப்தாநுவித்த சமாதி | ,, |
| | (6) அந்தரநிருவிகற்ப சமாதி | 475 |
| 258 | சுழுத்தியும் நிருவிகற்பசமாதியு மொன்றாகாவெனல் | ,, |
| 259 | நிருவிகற்பசமாதியின்பேதம் | ,, |
| 260 | அத்வைதாவஸ்தான வடிவசமாதிக்கும் சுழுத்திக்குமுள்ள வேற்றுமை | 476 |
| 261 | நிர்விகற்பசமாதியின் மூவகைப்பேதம் | ,, |
| | (1) ஞானசாத்திய ராஜயோகம் | 477 |
| | (2) கிரியாசாத்திய ராஜயோகம் | ,, |
| | (3) ஞானக்கிரியா வுபயசாத்தியராஜயோகம் | ,, |
| 262 | சமாதிவிக்கினங்களுமவற்றின் நிவிருத்தியும் | ,, |
| | (1) லயம் | ,, |
| | (1) லயநிவிர்த்தி | 478 |
| | (2) விட்சேபம் | ,, |
| | (2) விட்சேபநிவிர்த்தி | ,, |
| | (3) கஷாயம் | ,, |
| | (3) கஷாயநிவிர்த்தி | 479 |
| | (4) ரஸாஸ்வாதம் | ,, |
| | (4) ரஸாஸ்வாதநிவிர்த்தி | ,, |
| 263 | ௫௦-ம். தனித்தவிடத்திற் சமாதிசெய்யெனல் | 487 |
| 264 | ௫௧-ம். தத்துவஞான பலனைச்சாற்றல் | 490 |
| | (1) துக்காபாவம் | ,, |
| | (2) சர்வகாமாப்தி | 491 |
| | (3) கிருதகிருத்தியத்துவம் | 493 |
| | (4) பிராப்தப்பிராப்பியத்துவம் | ,, |
| 265 | ௫௨-ம். விதேகமுத்தியை விளங்கக் கூறல் | 496 |
| 266 | ௫௩-ம். சரீரம் பிணவியலாகாமையே சாயுச்சிய மன்றெனல் | 498 |

| என். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| 267 | ௨௬௪-ம். தத்துவஞானத்தின்பலன் சாபாநுக்கிரகமாகாதெனல் | 507 |
| 268 | அணிமாதியஷ்ட ஐசுவரியங்கள் | 508 |
| 269 | ௨௬௬-ம். ஞானியையறியும் நற்குறியுரைத்தல் | 512 |
| 270 | ௨௬௭-ம். ஞானியின் குணங்களொன்றெனவுரைத்தல் | 514 |
| 271 | ௨௬௮-ம். ஞானிகளைம்பலனண்ணிடுவாரெனல் | ,, |
| 272 | ௨௬௯-ம். புகழிகழ்புரிபவர் பெறும்பயனுரைத்தல் | 515 |
| 273 | ௨௭௦-ம். ஞானியின் பெருமைபோனிலத்திலையெனல் | 517 |
| 274 | ௨௭௧-ம். ஞானிக்குப்பிறவி நண்ணாதென்பது | 520 |
| 275 | ௨௭௨-ம். சாதனவடைவைச்சங்கிரகமாயுரைத்தல் | 521 |
| 276 | ௨௭௩-ம். பாவனைபுரியும்பான்மையுரைத்தல் | 522 |
| 277 | உபதேசம் | ,, |
| 278 | நடுநிலை | 525 |
| 279 | அநுபவமகிழ்ச்சி | 527 |


அனுக்கிரமணிகை முற்றிற்று.



இந்நூற்கு மேற்கோளாகக் காட்டிய

# நூற்களின் பெயர்.

| ஸம்ஸ்கிருதம். | ஸம்ஸ்கிருதம். |
|---|---|
| 1 நிராலம்போபநிஷத் | 38 பிரசிநோபநிஷத் |
| 2 அத்வயதாரகோபநிஷத் | 39 மகோபநிஷத் |
| 3 அதர்வணவேதம் | 40 மண்டலப்பிராமணோபநிஷத் |
| 4 அந்நபூர்ணோபநிஷத் | 41 மந்திரிகோபநிஷத் |
| 5 அமிர்தபிந்தூபநிஷத் | 42 மஹாநாராயணோபநிஷத் |
| 6 ஆத்மபோதோபநிஷத் | 43 மாண்டூக்கியோபநிஷத் |
| 7 இருக்சம்ஹிதை | 44 முண்டகோபநிஷத் |
| 8 இராமபூர்வதாபநீயபநிஷத் | 45 முக்திகோபநிஷத் |
| 9 உருத்திரஹிருதயோபநிஷத். | 46 மைத்திராயண்ணியுபநிஷத் |
| 10 கடோபநிஷத் | 47 மைத்திரேயோபநிஷத் |
| 11 மாண்டூக்கியத்தின் கவுடபாத காரிகை | 48 யசுர்வேதம் |
| | 49 மைத்திராயண்ணியஸம்ஹிதை |
| 12 பிருகதாரண்ணியோபநிஷத் | 50 யசுர்வேதபோதாயனசாகை |
| 13 ப்ரஹ்மோபநிஷத் | 51 யாஜ்ஞவல்க்யோபநிஷத் |
| 14 சாட்டியாயணி உபநிஷத் | 52 யோகதத்துவோபநிஷத் |
| 15 சாந்தோக்கியோபநிஷத் | 53 யோகசிகோபநிஷத் |
| 16 சர்வசாரோபநிஷத் | 54 யோகசூடாமணியுபநிஷத் |
| 17 சுகரகஸ்யோபநிஷத் | 55 ராமதாபநீயுபநிஷத் |
| 18 நாதபிந்தூபநிஷத் | 56 வராகோபநிஷத் |
| 19 கருப்போபநிஷத் | 57 ஹயக்கிரீவோபநிஷத் |
| 20 கைவல்யோபநிஷத் | 1 ரிபுகீதை |
| 21 ஸ்கந்தோபநிஷத் | 2 பகவத்கீதை |
| 22 சரஸ்வதிரஹஸ்யோபநிஷத் | 3 கர்ப்பகீதை |
| 23 சாரீரகோபநிஷத் | 4 ஸ்ரீயஜ்ஞவராஹபகவத்கீதை |
| 24 சபாலோபநிஷத் | 5 சிவகீதை |
| 25 சுவேதாசுவதரோபநிஷத் | 6 குருகீதை |
| 26 ஸாமவேதம் | 7 உத்தரகீதை |
| 27 தர்சனோபநிஷத் | 8 பிரமகீதை |
| 28 தாரசாரோபநிஷத் | 9 பாண்டவகீதை |
| 29 தியானபிந்தூபநிஷத் | 10 ஞானஸங்கிதை |
| 30 திரிசிகிப்பிராமணோபநிஷத் | 11 சூதஸங்கிதை |
| 31 திரிபுரதாபிநீயுபநிஷத் | 12 மநுஸ்மிருதி |
| 32 தேஜோபிந்தூபநிஷத் | 13 ஸதாதபஸ்மிருதி |
| 33 நாரதபரிவிராஜகோபநிஷத் | 14 விஷ்ணுயாமளம் |
| 34 பஸ்மஜாபாலோபநிஷத் | 15 பத்மபுராணம் |
| 35 பிரஹ்மவித்யோபநிஷத் | 16 விஷ்ணுபுராணம் |
| 36 புருஷசூக்தம் | 17 பிருமவைவர்த்தபுராணம் |
| 37 பைங்களோபநிஷத் | 18 வாயுபுராணம் |

**ஸம்ஸ்கிருதம்.**

19 கருடபுராணம்
20 லிங்கபுராணம்
21 பௌஷியபுராணம்
22 கூர்மபுராணம்
23 வராஹபுராணம்
24 சிவபுராணம்
25 ஸ்காந்தபுராணம்
26 பிருஹ்மபுராணம்
27 வாமனபுராணம்
28 சைவபுராணம்
29 பிருஹந்நாரதீயபுராணம்
30 வாசிஷ்டராமாயணம்
31 பாகவதம்
32 மஹாபாரதம்
33 கபிலோபாக்யானம்
34 பிரமதருமம்
35 வாசுதேவமனனம்
36 விவேகசூடாமணி
37 மநீஷாபஞ்சகம்
38 சனத்குமாரசம்மிதை
39 பாதஞ்சலசூத்ரம்
40 மகரிஷிமாதங்கர்வாக்கியம்
41 வசிஷ்டஸ்மிருதி
42 ஆத்மபோதம்
43 பர்த்திருஹரி
44 அபரோக்ஷாநுபூதி
45 அடயோகப்பிரதிபிகை
46 திரிபுராசாரசமுச்சயம் [திரம்
47 சப்தரிஷிகிருத ஸ்ரீராமஸ்தோத
48 துவாதசமஞ்சரி
49 வேதாந்தவார்த்திகம்
50 சங்கராசாரியார்வாக்கியம்
51 புராதனவசனம்
52 மஹாவாக்கிய ரத்நாவளி
53 நீதிஸாஸ்திரம்
54 நைஷ்கர்ம்யசித்தி

---

**தமிழ்.**

1 பிரமகீதை
2 ரிபுகீதை
3 பகவற்கீதை
4 ஈசுரகீதை
5 சூதசங்கிதை
6 கூர்மபுராணம்
7 இலிங்கபுராணம்
8 தணிகைப்புராணம்
9 கந்தபுராணம்
10 கோயிற்புராணம்
11 திருவாதவூர்ப்புராணம்
12 திருவிளையாடற்புராணம்
13 பாகவதம்
14 காசிகாண்டம்
15 உபதேசகாண்டம்
16 ஞானவாசிஷ்டம்
17 புசுண்டோபநிடதம்
18 கைவல்லியநவநீதம்
19 ஒழிவிலொடுக்கம்
20 திருமந்திரம்
21 சிவஞானபோதம்
22 திருக்குறள்
23 ஔவையார் தனிப்பாடல்
24 ஔவைகுறள்
25 பட்டணத்துப்பிள்ளையார்
26 பத்திரகிரியார்
27 பாடுதுறை
28 மோகவதைப்பரணி
29 அஞ்சவதைப்பரணி
30 தேவிகாலோத்தரம்
31 பிரபுலிங்கலீலை
32 பிரபோதசந்திரோதயம்
33 நாலடியார்
34 தாயுமானவர்
35 சசிவன்னபோதம்
36 மகாராஜாதுறவு
37 அத்துவிதவுண்மை
38 விஞ்ஞானசாரம்
39 சுத்தசாதகம்
40 அத்துவிதவிளக்கம்
41 தத்துவவாதம்
42 விசாரசாகரம்
43 விருத்திப்பிரபாகரம்
44 பாலபோதம்
45 முதற்குறளுண்மை
46 சத்தப்பிரகரணம்
47 சித்தாந்தபிந்து
48 பதார்த்தமஞ்சூஷா
49 வேதாந்தபரிபாஷை
50 தத்துவசரிதை

தமிழ்.

51 திருக்குறளின் பரிமேலழகருரை, மேற்படி உரையின் விசேஷ உரை
52 பகவற்கீதையின் கூடார்த்ததீபிகை
53 தொல்காப்பிய உரைச்சூத்திரம்
54 ஞானிகணிலைமை
55 நீதிநெறிவிளக்கம்
56 ஞானாமிருதம்
57 நிஷ்டானுபூதி
58 அருணகிரியந்தாதி
59 சொரூபசாரம்
60 அமிர்தசாரம்
61 குசேலோபாக்கியானம்
62 பாலையானந்தர்
63 சச்சிதானந்தவிளக்கம்
64 சிவஞானதீபம்
65 சிவஞானசித்தியார்
66 சிவஞானப்பிரகாசவெண்பா
67 சிவதருமோத்தரம்
68 சிவவாக்கியம்
69 சிவானந்தமாலை
70 சிவாகமக்கச்சியமாலை
71 சித்தாந்ததரிசனம்
72 சித்தாந்தசிகாமணி
73 சிந்தாமணி
74 சிற்றம்பலநாடி
75 வைராக்கிய சதகம்
76 அவிரோதவுந்தியார்
77 அதிரகசியம்
78 அத்துவிதக்கலிவெண்பா
79 சிவபோகசாரம்
80 ஞானசாகரவெண்பா
81 சத்தியஞானபோதம்
82 ஞானசுகாதீதவெண்பா
83 ஞானவிளக்கம்
84 திருப்பல்லாண்டு
85 திருப்போரூர்ச் சன்னதிமுறை
86 திருநாவுக்கரையர்
87 திருக்களிற்றுப்படியார்
88 திருக்குத்திரிசியவிவேகம்
89 திருப்பாட்டு
90 திருக்கடைக்காப்பு
91 திருவம்மானை
92 அருட்பிரகாசம்
93 வருங்காலத்திரங்கல்

தமிழ்.

94 ஞானசாரம்
95 வீராகமம்
96 மெய்ஞ்ஞானவிளக்கம்
97 சீடாசாரம்
98 குகைநமசிவாயர்
99 குருநமசிவாயர்
100 மெய்ம்மொழி
101 சுகர்கைவல்லியம்
102 அத்துவிதானுபவம்
103 சுருதிசாரம்
104 சிந்தனைவெண்பா
105 வேதாந்தசூளாமணி
106 விவேகசூடாமணி
107 சிவாகமார்த்ததரிசனம்
108 அறிவானந்தசித்தி
109 இராமானுஜநூற்றந்தாதி
110 தேவாரம்
111 நாரதசரிதை
112 தத்துவராயர்
113 பாரதம்
114 வாயுசங்கிதை
115 திருநேரிசை
116 பூதத்தாழ்வார்
117 சிவஞானவள்ளலார்
118 திருவாசகம்
119 திருவருட்பா
120 திருவாய்மொழி
121 திருமங்கையாழ்வார்
122 திருவரங்கத்தமுதனார்
123 திருமழிசைப்பிரான்
124 பெரியாழ்வார்
125 மணவாளமாமுனிகள்
126 பொய்கையாழ்வார்
127 குலசேகர ஆழ்வார்
128 தொண்டரடிப்பொடியாழ்வார்
129 விளாஞ்சோலைப்பிள்ளை சப்தகாதை
130 பெரியதிருமொழி
131 பஞ்சாக்ஷரபதிபசுபாசவிளக்கம்
132 பதிபசுபாசவிளக்கம்
133 கர்நாமிர்தம்
134 உபதேசமாலை
135 சுருதிசாரவிளக்கம்
136 இளையந்தாதி
137 துகளறுபோதம்
138 நமச்சிவாயமாலை

| தமிழ். | தமிழ். |
| --- | --- |
| 139 சொக்கநாதர்வெண்பா | 145 கந்தரலங்காரம் |
| 140 எதிர்காலத்திரங்கல் | 146 குணங்குடிமஸ்தான் |
| 141 மூவரம்மானை | 147 அநுபவாநந்ததீபிகை |
| 142 போதரத்திஞகரம் | 148 நீதிவெண்பா |
| 143 வேதாந்தவிலக்கணம் | 149 சொரூபசித்தாந்தமாலை |
| 144 கந்தரனுபூதி | |

ஆ மொத்தம் நூற்கள்-260.

இந்நூற்கு மேற்கோளாகக் காட்டிய

நூற்களின் பெயர் முற்றிற்று.



# அறிக்கை.



| | | | |
|---|---|---|---|
| மோக்ஷசாதன விளக்கம் (வினாவிடை, வசனம்)... | 2 | 0 | 0 |
| சொரூபாநந்தக் கும்மி ... ... ... | 0 | 1 | 0 |
| சொரூப சித்தாந்தமாலை ... ... ... | 0 | 1 | 0 |
| ஞாஞ்யிபோதம் ... ... ... | 0 | 1 | 0 |
| சுகோதயபத்திரட்டு அச்சில் | | | |
| பரமார்த்தஜர்ஜிமெண்ட் (தெலுங்கு, வசனம்) அச்சில். | | | |

இப் புத்தகங்கள் கீழ்க்குறிப்பிட்ட விடங்களிற் கிடைக்கும்.

(1) க. கன்னியப்பிள்ளை, மரத்தொட்டி வியாபாரம், ஆடிசன்பேட்டை, காஞ்சீபுரம்.

(2) தி. யதிராஜநாயுடு, கண்ணன் சபை, குப்புநாய்க்கன் வீதி, பெரிய காஞ்சீபுரம்.

☞ மேற்குறித்துள்ள புத்தக விக்கிரயங்களினால் வருந் திரவியம் காஞ்சீபுரத்தில் வருடந்தோறும் நடக்கும் திருவருட் பிரகாச வள்ளலார் மரபு, ஸ்ரீ. அருணாசலசுவாமிகளின் குருபூசைக்கு உபயோகப் படுத்தப்படும்.



ஓம்

தத்ஸத்

பரப்பிரஹ்மணே நமஃ.

# சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியர் சிஷ்யர்களுள் ஒருவரும்
சென்னை, பிரஸிடென்சி மாஜிஸ்ட்ரேட்டுமாகிய
**ஸ்ரீமத். பூ. இராஜரத்தின முதலியாரவர்களியற்றிய**
நிலைமண்டில வாசிரியப்பா.

பனிமலை பயந்த வுமையவள் புணர்ந்த
தனிமுத றந்த வொருபெரு நூலின்
வழிமுறை வந்து மாணவ ரகவிருள்
பரிதியி னொழிக்கும் பான்மையன் சீலன்
விருப்பொடு வெறுப்பை விட்டமெய்ஞ் ஞானி
பன்மத நிலையுந் தன்மய நிலையிற்
சொன்மய மென்னத் துகளறக் கண்டவ
னகமுகர்க் கெங்கு மண்மைய னானவ
னிராத தவிச்சை யிருப்ப தறிவெனக்
கங்குல் பகலறக் ஞானீ யென்பவ
னருட்பெருஞ் சோதி தனிப்பெருங் கருணை
யிங்கித மாயுரை யிராம லிங்கன்
பொங்கிய திருவடி புகரற வகத்துட்
டங்கிய செய்வகை தன்னாற் றன்னிலை
யுணர்ந்துணர்ந் திம்மையி லூன்வடி வொழித்தே
யுணர்வா னந்த வுருவாத் திகழ்பவ
னருணா சலனெனு மபிதா னத்தோன்
கருணா கரனற் கரியாச் செறிபவ
னன்னவன் மகிழ்வுற வடிமைய தாகித்
திருவடி பற்றித் திருந்திய வுளத்தோன்
மூவகை மௌனமு முறைமையிற் பெற்றவ

னால்வகை யவத்தையு நண்ணாப் பூரண
னைவகைக் குற்றமு மகன்ற தூயவன்
றீரத் துறந்த சிதானந்த வடிவ
னடையு மடியருக் கான்ம போதந்
தடையற நொடியிற் சாற்றுந் தீரன்
வாஞ்சித் தேவரும் வந்தினி திருக்குங்
காஞ்சிப் பதிவாழ் கருணைக் கொண்டல்
கருவலி தொலைக்குங் காரண மெற்கிங்
கொருபெரு வாக்கா லுரைத்த வுத்தம
னுள்ளுணர் கருவி யொடுக்கு நிலையெலா
மெள்ளுறு தெற்கு மியம்பிய புனித
னிச்சல நிலையி னின்று லிங்கோ
ரச்சமு வராதென் றறையுந் தூயவ
னுச்சித நிலைதனை யுகந்தெனக் களித்த
நிச்சல ராமா னந்தனென் னிமலன்
சாதன முடையோர் தமக்கருள் புரியப்
பூதலந் தனிற்றமிழ் பொற்பதென் றோத
வேதன் றனக்கு வேலையு மாறப்
போற்றும் பெரியோர் பூரித் துவக்கச்
சதுர்த்தச வித்தையின் சத்தெலாந் தோன்றப்
பொக்க நிலைகள் புரைபட் டொழியத்
தக்க வாறுத் தான்வரைந் தொருநூன்
மோக்கசா தனமென மொழிந்திட் டொருபெய
ரேற்க வளித்தன னெழிலுறு மாறே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



ஓம்

தத்ஸத்

பரப்பிரஹ்மணே நம:.

# தியாநசுலோகம்.

நித்யாநந்தம் பரமசுகதம் கேவலம் ஜ்ஞாநமூர்த்திம்
விஸ்வாதீதம் ககந சத்ருசம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம்
ஏகம் நித்யம் விமல மசலம் ஸர்வதீ ஸாக்ஷிபூதம்
பாவாதீதம் த்ரிகுண ரஹிதம் ஸத்குரும் தந்நமாமி. (க)

அஜ்ஞான திமிராந் தஸ்ய
ஜ்ஞாநாஞ்சந சலாகயா
சக்ஷுருன் மீலிதம் யேந
தஸ்மை ஸ்ரீ குரவே நம:. (உ)

சைதந்யம் சாஸ்வதம் சாந்தம்
வ்யோமாதீதம் நிரஞ்சநம்
நாதபிந்து களாதீதம்
தஸ்மைஸ்ரீ குரவேநம: (ங)

குருர்ப்ரஹ்ம குருர்விஷ்ணு:
குருர் தேவோ மஹேச்வர:
குருர் ஸாக்ஷாத் பரப்ரஹ்ம
தஸ்மைஸ்ரீ குரவேநம:. (ச)

அகண்டமண்டலாகாரம்
வ்யாப்தமயேநசராசரம்
தத்பதந் தர்சிதம் யேந
தஸ்மைஸ்ரீ குரவேநம:. (ரு)

ஸச்சிதாநந்த ரூபாய
வ்யாபிநே பரமாத்மநே
நமஸ்ரீ குருநாதாய
ப்ரகாசாநந்த மூர்த்தயே. (சா)

ஜ்ஞாநசக்தி ஸமாருஹ்ய
தத்வமாலா விபூஷிணே
புக்திமுக்தி ப்ரதாத்ரேச
தஸ்மைஸ்ரீ குரவேநம:. (எ)

அநேகஜந்ம ஸம்ப்ராப்த
கர்மதர்ம விதாஹிநே
ஜ்ஞாநாநல ப்ரபாவேந
தஸ்மைஸ்ரீ குரவேநம: (அ)

மந்நாதஸ்ரீ ஜகந்நாதோ
மத்குருஸ்ரீ ஜகத்குரு:
ஸ்வாத்மைவ ஸர்வபூதாத்மா
தஸ்மைஸ்ரீ குரவேநம:. (௯)

குருர்சிவோ குருர்தேவோ
குருர்பந்து சரீரிணும்
குருராத்மா குருர்ஜீவோ
குரோரந்யம் நவித்யதே. (௧0)

ஸ்தாவரம் ஜங்கமம் வ்யாப்தம்
யத்கிஞ்சித் ஸசராசரம்
த்வம்பதம் தர்சிதம் யேந
தஸ்மைஸ்ரீ குரவேநம:. (௧௧)

சிந்மயம் வ்யாப்தம் ஸர்வம்
த்ரைலோக்யம் ஸ சராசரம்
அஸித்வம் தர்சிதம்யேந
தஸ்மைஸ்ரீ குரவேநம:. (௧௨)

---

## குருவணக்கம்.

தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானு
மந்தமிலா வின்பநமக் காவானு—மெந்தமுயிர்
தானுகு வானுஞ் சரணுகு வானுமருட்
கோனுகு வானுங் குரு.

## சொரூபவணக்கம்.

பொன்னுலக கத்தினிற் புவியி லந்தரத்
தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது
மன்னுசிற் சொதியே வடிவ மியாவுமாய்த்
துன்னுவ தப்பொரு டொழுதி றைஞ்சுவாம்

ஓம்

பரப்பிரம்மணேநம:

# மோக்ஷசாதன விளக்கம்.

## பாயிரம்.

### சொரூபவணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்னுல காதி யாகப் பொருந்துமூன் றுலகிற் கப்பான்
மன்னிய பொருளாய் மேலாய் மறைமுடி வாகி யாவுந்
தன்னுளே யிருக்கத் தானுஞ் சகலத்து மொளிர்வா னாகித்
துன்னுநற் சுயம்ப்ர காசச் சொரூபத்தி னடிகள் காப்பே.

நேரிசைவெண்பா.

நித்தியமா யெங்கு நிகரிலருட் சோதியதாய்ச்
சத்தியமா யோங்குந் தனிமுதலைப் — பத்தர்
கருவை யகற்றியொளிர் கற்பகவான் மாவை
மருவி யகத்திருத்து வாம்.

அறிவிற் கறிவா யகிலாண்ட மெங்கும்
பிறிவற் றொளிருவதாய்ப் பேசா — நெறியுடைத்தா
யச்சொருப முந்தானா யீறற்ற வத்துவிதச்
சொச்சொருபந் தானே துணை.

### மகான்கள் வணக்கம்.

சுகவாம தேவ துருவாச ராதி
சகம்வாழு ஞானிகடந் தாள்க — ளகமேவச்
சாற்றுலகி னோர்மோட்ச சாதனவி ளக்கமது
வீற்றுலவப் போற்றுதல்செய் வாம்.

### சற்குரு வணக்கம்.

வானாதி பூத வகையனைத்து நீக்கியெல்லாந்
தானாகி வாழுந் தரமருளுங் — கோனும்

அருணை சலக்குரவ னம்புயத்தா னென்றும்
அருணை டகத்திருத்து வாம்.

நூற்பெயர்க்காரணம்.

ஆதிநடு வந்த மகன்றபரி பூரணசிற்
சோதியுரு நீயென்னுஞ் சூக்குமத்தை—யோதி
விளக்குதலான் முத்திக் குயர்சா தனமென்
றுளக்குழிப்பா ரேற்பா ருவந்து

இந்நூற்பயன்.

சீராரு மோட்சந் திகழ்சா தனவிளக்கம்
பாரோருண் ணேக்கப் பரமசுக—நேராக்கும்
வல்லானெனன் னெஞ்சகத்தே மன்னியுரைத் தானிதனைக்
கல்லார்க்கு முண்டோ களிப்பு.

பக்குவிகளே இந்நூற்கதிகாரிகளாவரெனல்.

சாதனச துஷ்டயங்கள் சார்ந்தவதி காரிகளுக்
காதரவா யிந்நூ லருளியது—வாதனைசேர்
நெஞ்சதனை லென்று நெடும்பிறவி சார்ந்துழலும்
வஞ்சகர்க்கார் சொல்வார் வலிந்து.

அவையடக்கம்.

பெற்றவர்முன் சித்திரங்கள் பேசுங் குழவியெனக்
கற்றவர்முன் னிந்நூலைக் கற்பித்தேன்—முற்றறிவோன்
சொல்லிவைத்தா லார்தான் சொலாதா ரிலக்கணத்தி
னெல்லைகண்டார்க் கில்லை யிழுக்கு.



ஓம்

பரப்பிரம்மணேநம:.

# மோக்ஷசாதன விளக்கம்.

## நூல்.

அவதாரிகை.

இது: பிரவிர்த்திமார்க்கம் நிவிர்த்திமார்க்கம் என்னுமிரண்டனுள் பிரவிர்த்திமார்க்கம் எவ்வாற்றானும் சர்வதுக்கநிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய மோக்ஷமடைதற்கு நேர்சாதனமன்மையான், நிவிர்த்திமார்க்கமே முத்திவிருப்புள்ளவர்கள் மேற்கொள்ளத்தக்க தென்பதை விளங்க வுணர்த்துகின்றது.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூவுல குயிர்க ளுணர்ந்தரு ளடையப் புகல்வழி யினிற்பிபீலிகஞ்சேர், பாவனை யியம மாதியெண் சித்திற் பயனிலை விகங்கமார்க் கத்தாற், தாவ்னற் குருவாற் றனையுணர்ந் தருளாய்த் தானிலைத் திடுதலே முத்தி, மேவினோன் மகிமை யுரைப்பரி தெனவே விளம்புட்வே தாகம முடிவே.

(இதன் பதப்பொருள்.)

பூவுலகு - (மக்கள் மோக்ஷமடைதற் கேதுவாய சாதனங்களியாவும் ஒன்றுலொன்று குறைவின்றி நிரம்பப்பெற்ற) பொலிவாய பிரபஞ்சத்தின்கண், உயிர்கள் - (தமது நிசவடிவை யுணராமையினால் சம்சாரபரம்பரையிலாழ்ந்து துன்புறும்) சீவர்கள், உணர்ந்து - [யான்யார்? சித்தென்பதியாது? சடமென்பதெத்தகையது? பந்தமியாது? முத்தியெத்தன்மையது? என்று நன்றாக) அறிந்து, அருளடைய - (சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய) மோக்ஷத்தைப் பெறும்பொருட்டு, புகல் - (முமுட்சுகளாற்) புகழ்ந்து சொல்லப்படுகின்ற, வழியினில் - (வாமதேவமார்க்கம் சுகமார்க்கம் என்னும் இரண்டு) மார்க்கத்துள், பிபீலிகம் - வாமதேவமார்க்கத்தை, சேர் - அடுத்துள்ள, பாவனை - யோகபாவனைகளும், இயமாதி - இயமநியமாதிகளும்,

எண்சித்திநில - அணிமா முதலிய அஷ்டசித்திகளுமாகிய விவற்றினால், பயனில்லை - (இவைகள் மோட்சத்திற்குப் பரம்பராசாதனமாயிருக்கினும் நேர்சாதனமாயிராமல் சம்சார பரம்பரைக்கேதுவாயிருத்தலால் அதிதீவிரதரபக்குவிகளுக்குயாதும்)பிரயோசனமில்லையாம, விகங்கமார்க்கத்தால்-சுகமார்க்கத்தினால், தாவில்-[முத்திவிருப்புள்ள அதிதீவிரதரபக்குவி யொருவன்] (கல்வியினமை, அறிவின்மை, வைராக்கியமின்மைமுதலிய யாதொரு) குற்றமுமில்லாத, நற்குருவால் - (ஆத்மானுபவமுள்ள) சிறந்த குருவினுபதேசத்தினால், தன்னை - (தேகேந்திரியாதிகளுக் கப்பாற்பட்டுப் பிரத்தியக் அபின்னமாயுள்ள பிரமமாகிய) தனது நிசவடிவத்தை, உணர்ந்து - [நிர்விகற்ப சமாதிவாயிலாகவுள்ளபடி] அறிந்து, அருளாய் - [நிச்சல, நிர்விகார, நிராகார, அசங்கவடிவாயுள்ள அந்தப்] பிரமப்பொருளையாய், தானிலைத்திடுதலே - தான் சுபாவசித்தமாகப் பொருந்தியிருத்தலே, முத்தி - சீவன முத்தியாம், மேவினோன் - (அச்சீவன் முத்தியை) அடைந்தவனது, மகிமை - பெருமையை, உரைப்ப அரிதெனவே - (அளவிட்டுச்) சொல்லுதற்கு முடியாதென்று, வேதாகமம் - நிகமாகமங்கள், முடிவே - முடிவிலே, விளம்பும் - கூறுநிற்கும், என்றவாறு.

உலகம் - காணப்படுவது. குரு - அஞ்ஞானத்தை யொழிப்பவன். முத்தி - பந்தத்தினின்றும்விடுபடல். வேதம் - உண்மைப் பொருளை யுணர்த்துவது.

அவித்தை யந்தக்கரணங்களைப்பற்றி யுய்வதால் 'உயிர்கள்' எனப்பட்டன. சீவர்கள் என்பதன் பொருளுமிதுவே. உய்வது சீவிப்பது என்பன ஒரு பொருட்கிளவி.

வாமதேவமார்க்கம் - எறும்புமார்க்கம்; மார்க்கம்-வழி. குறித்தவிடத்திற்கு எறும்பு போகவேண்டுமானால் கிரமக்கிரமமாய் ஊர்ந்து போவது போன்று ஒருவன் இந்தத் தேகத்தைவிட்டுப் பிறகு இதைவிட வுத்தமமான ஜன்மமடைந்து, அதிலிருந்து பின்னும் உத்தமமான ஜன்மமடைந்து இப்படியே பல ஜன்மங்களை யடைந்து கடைசியில் பிரமலோகஞ்சென்று பிரமாவுடன் முத்தியடைவது. சுகமார்க்கம் - பட்சிமார்க்கம். குறித்தவிடத்திற்குப் பட்சிகள் பறந்துபோவது போன்று, ஒருவன் இந்தத் தேகம் போனவுடனே முத்தியடைவது.

யோகபாவனையாவது ஓர் திவ்விய மூர்த்தத்தை மனத்தாற் கற்பித்துக்கொண்டு, மூலாதார முதலிய ஆதாரங்களி லொன்றன் கணிறுத்தி, அதனிடத்து மனோவிருத்தியை நிலைபெறச் செய்தலாம்.

இயமாதிகள்: இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியென்பன. இவற்றுள் இயமம்: கொல்லாமை, மெய்ம்மைகூறல், திருடாமை, பிறர்பொருட்கண் ஆசையில்லாமை, இந்திரியங்களை யடக்கலாம். நியமம்: தவம், சௌசம் (உடலை நீரினாலும் மனத்தைச் சத்தியத்தினாலும் தூய்மையாக்கல்), தத்துவநூலாராய்ச்சி, பெற்றதுகொண்டு மகிழ்தல், தெய்வ வழிபாடு ஆம். ஆதனம் (இருப்பு): பத்திரம் (பீஜத்தின் கீழ்ப்பாகமாகிய நரம்பி னிருபக்கங்களிலும் இருகாற் பரட்டையுஞ் சேர்த்து, அவ்விருகாலையும் இரு கைகளாலு மிறுகப்பிடித்து அசையாது இருத்தல்), கோமுகம் (சகன பக்கத்தி லிருகாற்பரட்டையும் மாறிவைத்து அவ்விருகாற் பெருவிரல்களைக் கரங்களால் பிடித்திருத்தல்), பங்கயம் (இருதொடைமேலும் இரண்டுள்ளங்காலையு மாறித் தோன்றவைத்தல்), கேசரி (பீஜத்தின் கீழ்ப்பாகமாகிய நரம்பி னிருபக்கங்களிலும் இரண்டு பரடுகளையுஞ்சேர்த்து, முழந்தாளின்பேரில் இரண்டு கைகளையும் நன்றாய்ப் பொருந்தும்படி வைத்து அக்கைகளின் விரல்களைச் செவ்வையாய் விரித்து, வாய்திறந்து, நாக்கை நீட்டிக்கொண்டு மூக்குநுனியைப் பார்த்திருத்தல்), சுவஸ்திகம் (தொடைக்கும் முழங்காற்கு மிடையே யிரண்டுள்ளங்காலையுஞ் செலுத்தி யிறுமாந்திருத்தல்), சுகாசனம் (எவ்வித மிருந்தால் திடமும் சுகமு முண்டாகுமோ அவ்விதமிருத்தல்) ஆம். பிராணாயாமம் - ரேசகம் (வாயுவை மூக்கின் வலது துவாரத்தால் விடுதல்) பூரகம் (வாயுவை மூக்கின் இடதுதுவார வாயிலாக வுள்ளுக்கிழுத்தல்) கும்பகம் (வாயுவை யுள்ளே யடக்குதல்) செய்தலாம். பிரத்தியாகாரம் - விஷயங்களில் செல்லாவண்ணம் சகல இந்திரியங்களையுந் தடுத்து உண்ணோக்கி யிருத்தலாம். தாரணை - தைலதாரைபோன்று இடைவிடாது அந்தக்கரணம் ஒருவகைப்பட்டிருத்தலாம். தியானம் - கடவுளிடத்து விட்டுவிட்டுச் செல்லும் அந்தக்கரணத்தின் பிரவாகமாம். சமாதி - உண்டாயிருக்கும் சம்ஸ்காரங் (வாசனை) களின் ஒழிவும் அடங்கியிருக்கும் சம்ஸ்காரங்களின் வெளிப்பாடு முன்

டாகி அந்தக்கரண மொருமுகமாய்ப் பரிணமித்திருத்தலாம். இயமம் பத்துவகைப் படுமென்பதும், நியமம் பத்துவகைப் படுமென்பதும், ஆசனம் எண்பத்துநான்குவகைப்படுமென்பதும், பிராணுயாமம் இருவகைப்படு மென்பதும் பிறவுமாகிய இவற்றின் விரிவெல்லாம் அடயோகதீபிகை முதலியவற்றிற் காண்க.

அணிமாதி யெண்சித்திகளாவன:—அணிமா, மகிமா, கரிம, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பனவாம். மிகச்சிறிய வுருவினையுடையதாதல் அணிமா எனவும், மிகப்பெரிய வுருவினை யுடையதாதல் மகிமா எனவும், மிகக் கனத்திருத்தல் கரிமா எனவும், துரும்பைப்போன்று கனமின்றி மிக நொய்தாயிருத்தல் லகிமா எனவும், விரும்பியதை விரும்பியவாறடைதல் பிராப்தி எனவும், பரகாயப் பிரவேசஞ் செய்தல்-ஆகாயகமனஞ் செய்தல்-இச்சித்த சகல போகங்களையும் இருந்தவிடத்திற் பெறுதல்-சூரியவொளியால் பொருள்களைக் காணுமாறு போன்று தனதுடலொளியால் பொருள்களைக் காண்டல்-திரிகாலவுணர்ச்சி பிராகாமியம் எனவும், எத்தகையோர்க்கு மேற்பட்டிருத்தல் ஈசத்துவம் எனவும், சராசரப் பொருள்களியாவற்றையுந் தன்வசமாக்கல் வசித்துவம் எனவுமறிக.

வேதம் நான்கு. அவை: இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென்பனவாம். இவை சுயம்புவென்றும், ஈசுவரனுல் சொல்லப்பட்டவையென்றும் சொல்லப்படும். அவற்றுள் இருக்குவேதம் இருபத்தொருபேதம்; யசுர்வேதம் நூற்றொருபேதம்; சாமவேதம் சகஸ்திரபேதம்; அதர்வணவேதம் நவபேதமாம். அந்நான்கு வேதங்களும் விதிவாதம், அர்த்தவாதம், மந்திரவாதம், நாமதேயமென்று சகல தருமங்களையும் சொல்லாநிற்கும். இராசாக்கினை போன்று மனிதரை நிஷேதகருமஞ் செய்யவொட்டாது திருப்பிச் சுகர்மம் செய்யவேண்டுமென்றுவிதிப்பது விதிவாதம்; படர்களைப் போன்று துதிப்பது அர்த்தவாதம்; ஆசாரியனைப்போன்று செய்யத்தக்கவைகளைக் காட்டுவது மந்திரவாதம்; பிதாவைப்போன்று யாகாதிகளுக்குப் பெயரிடுவது நாமதேயம்.

ஆகமம் இருபத்தெட்டு. அவை. காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம் சூக்குமம், சகத்திரம், அஞ்சு

மர்ன், சுப்பிரபேதம், விஜயம், நிசுவாசம், சுவாயம்புவம், அனலம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தான சருவோத்தமம், பாரமேச்சுரம், கிரணம், பேதம், வாதுள மென்பன.

இவை சரியை கிரியை யோக ஞானங்களைக் கூறிச் சிவபேதம் உருத்திரபேதமென விருவகைப்பட்டிருக்கும்.

பதசாரம்.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணைசொரூபரூப எம்பெருமான் திருவருட்சக்தியினால் அவன் அவள் அதுவெனும்படி நானாவித நாமரூபபேத விசித்திர மாயா விநோத ஜாலமாய்விரிந்து மோக்ஷசாதனங்கள் நிரம்பப்பெற்று அழகுபொருந்திப் பிரகாசிக்கும் பிரபஞ்சமென்பது தோன்றப் 'பூவுலகு' எனவும்,

அனாதி மாயாந்தகாரப் பேரிருளிற் சிக்கித் தம்மை மறந்தவராகிச் சுழற்காற்றி லகப்பட்ட துரும்பெனக் கற்பிதாகார வுலகின் பாசச்சுழலில் அகப்பட்டு வரவு போக்கெனும் ஜனன மரணாதி சம்சார சாகரத்திலாழ்ந்து வருந்துந் துன்பம் நீங்க, பவசாகரக்கடல் கடந்து முத்தியெனுங் கரை யேறுவதற்காய்ச் சிவாநுக்கிரகத்தால் மேன்மைபொருந்தியமானிடதேகமென்னுந்தெப்பத்தைப்பெற்ற சீவர்களென்பது தோன்ற 'உயிர்கள்' எனவும்,

அனந்த ஜன்மங்கடோறுஞ் செய்துவந்த நிஷ்காம சத்கர்ம புண்ணிய பரிபாகமே லீட்டால் சித்த சுத்தி முதலாகிய நற்குணாதிகள் முதிர்ந்து விவேகிகளாகி விசித்திர மாயா விநோத ஜாலமாய் விளங்குந் தனு கரண புவன போகங்க ளனைத்தும் சொப்பனப்பொருள், கானல் நீர், வந்தியாபுத்திரன், இப்பியில் வெள்ளி, கட்டையிற் கள்வன் என்னும் கற்பனைகளைப்போன்று விசாரணை முகத்தில் கற்பனையா யுள்ளபடியால் இவையாவும் அனித்தியமென்றும், நித்தியமாய் விளங்கும் பேரின்ப வீடாகிய புருஷார்த்தத்தை அடைவதே பிறவி யெடுத்ததற்குப் பிரயோசனமா மென்றும் ஐயமின்றித் தெளிவுறுவரென்பது தோன்ற 'உணர்ந்து' எனவும்,

நிர்விகார சுயம்பிரகாச நிஷ்கள தேஜோமய பரப்பிரமமாய் விளங்கும் எம்பெருமான் தனிப்பெருங் கருணையினால் அன்றித் தேகேந்திரிய பிராணாந்தக்கரணக் கூட்டங்களாகிய தத்துவங்

களாலும் தத்துவத் தலைவர்களாகிய ஹரிஹரபிரம்மேந்திராதி தேவர்களாலும் அறியப்படாததாய்ச் சர்வசாட்சியாயச் சிவாநனி யமாய்ப் பெரும்போகச் செல்வமாய்ச் சுகாதீத மனோனந்தப் பழம்பொருளாய் நித்தியமாய் விளங்கும் பரமபுருஷார்த்தமாகிய மோட்சம் பெறவென்பது தோன்ற 'அருளடைய' எனவும்,

தூரியசிகரத்தின்கணிலங்கும் மௌனநாநந்தப் பழச்சுவையை நுகராது நுகர்ந்து இன்புற்று வாழக்கருதிய சீவர்கள் அதற்கு நேர்சாதனம் சாதனசதுஷ்டய மாதியென் றுணராது மதிமருண்டு ஆகாயத்தின் முடிவைக் காண்டற்கு ஏணியிட் டேறுவான் போன்று சோபாநிகமாயும், சாலம்பமாயும், அப்பியாச தந்திர யோகமாயும், பிரவிருத்தி மார்க்கமாயுமுள்ள பிபீலிகா மார்கத்தி லந்தர்க்கதமாய தாதமார்க்கம், புத்திரமார்க்கம், சகமார்க்கம் என்னும் சரியை கிரியை யோகங்களை முறைப்படி பெற்று அணிமாதி அஷ்ட ஐசுவரியங்களை யடைந்தாலும் மருள் நீங்குதலின் மையின் அவற்றால் உண்மைஞான வாயிலாகப் பெறும் மோட்ச மென்னும் பேரின்ப வாழ்வைப் பெறமாட்டார்க ளென்பது தோன்றப் 'பாவனை யியமமாதி யெண்சித்திற் பயனிலை' எனவும்,

எவ்வாற்றானும் வசப்படாது அந்தீவரதரமாயப் பற்பல விஷயங்களிலே யீடுபட்டிருந்த மனமானது தனது தொந்தங்களை விட்டு அகமுகப்பட்டு ஆன்ம சொரூபத்தில் லயப்பட்டு நிவாத தீபம்போல் பதைப்பற்று இருப்பதே பேரின்பவீடாதலால், சர்வ மூந்தாறாய் விளங்கும் சின்முத்திரையெனும் மந்திரோப தேச நகருள் ஞானத்திற் சரிதையாகின்ற சாம்பவியாதி முத்திரை களோடு அலங்கரிக்கப்பட்ட பஞ்சவர்ன சுந்தரம் பொருந்திய தேகாலயமெனும் பஞ்சாக்ஷர நிலையிற் புகுந்து ஊடுருவி, தசவித நாதங்களையுங் கடந்தி, மற்றுமுள்ள ஞானத்திற் கிரியை ஞானத்தில் யோகம் ஞானத்தில் ஞானம் என்கின்ற சோபானங்களைச் சீக்கிரத்திற் கடப்பிப்பதாகியும், நிவாததீபமென மனத்தை அசைவறநிறுத்தி மனோலயமுறச் செய்வதாகியும், இருந்தபடியிருந்து இரவுபக லறியாது தூங்காமற் றூங்கும்படி செய்வதாகியும், நினைப்பு மறப்பெனும் சகல கேவலமாகிய அறிவறியாமையற்று நடுநிலைச் சொரூபாநுபூதி பெற்றிடச் செய்வதாகியும், மோட்சார்த்தமெனுஞ் சுகாதீத நிலையிற் சுட்டுதலற்றுச் சும்மாவிருக்கச்

செய்வதாகியுமுள்ள அகமுகதிருஷ்டியாய நிவிர்த்திமார்க்கத்தினால் சிவப்பிரம்மைக்கிய சிவராஜயோகமாய் விளங்கி, சுத்தசன்மார்க்கமாய விகங்கமார்க்கத்திற் செப்பிய நித்தியாநித்திய வஸ்துவிவேகமும், இகமுத்திரார்த்தப் பலபோகவிராகமும், சமாதிசட்கசம்பத்தியும், முமுட்சத்துவமு மென்னும் மெய்ஞ்ஞான சாதனசதுஷ்டயங்களைத் தனுவாகப் பெற்று விளங்குமவர்களே மோட்சாதிகாரிகளென்பது தோன்ற 'விகங்கமார்க்கத்தால்' எனவும்,

ஒருபோதும் நீங்காது நிலைபெற்றோங்கும் நிரதிசயானந்தமாகிய மோட்சார்த்தத்தை விரும்பியவராய் மெய்ஞ்ஞான சாதனங்கள் நான்கினையும் உடலாகப் பெற்று உடல்வெறுப்பும் உலகவெறுப்பும் மருவி மலபரிபாக மெய்திச் சத்திநிபாத முற்றிலகும் அதிதீவரதரபக்குவர்களாகிய அன்பர்களின் துயரறத் தடுத்தாளும்பொருட்டு முன்னர்ச் சனகாதியரைத் தக்ஷிணாமூர்த்தமாயெழுந்தருளிவந்து இரக்ஷித்தவண்ணம் சர்வலோகபரிபூரண நிஷ்களதேஜோமய சச்சிதானந்தவடிவ பரப்பிரமம் சகளீகரித்து அருளாசாரியராய்த் திருவுருத்தாங்கி ஞானதீக்ஷாநுக்கிரகஞ் செய்ய வந்த விகிதகுருவென்பதுதோன்றத் 'தாவிலாற்குருவால்' எனவும்,

வீடொன்று நாற்புறமும் அக்கினி பற்றிவேக அதனடுவிலகப்பட் டொருவன் தவிப்பதுபோன்று தாபத்திரயத்தினால் வெம்பிச் சகிக்கமாட்டாதவனாய் நின்ற அதிதீவரதர பக்குவி யொருவன் ஆத்மஞான தீர்த்தத்திற் படிந்து நிரதிசயானந்த மடையக்கருதிக் கானவர் வலையிலகப்பட்டுத் தெய்வகதியாய் விடுபட்டோடுகின்ற மானைப்போல் மனைவி மக்கள் அர்த்தமென்னும் ஈடணாதிபந்த பாசங்களகன்று ஏகனாய் விடுபட்டுப்போய் விருதாவாகப்போகாமல், நாடுநகரம் வனம் வனாந்தரங்கள் மூர்த்தி தலம் தீர்த்த முதலாகிய விடங்களிற் றாயைத்தேடுங் குழவியைப்போலே சற்குருவைத் தேடிவாடுங்கால் பாசவைராக்கியம், ஈசுரபக்தி, ஜீவகாருண்யம், பிரமஞானமென்னு மிந்நான்கினையும் திருமேனியாகக்கொண்டு திருவருளே அருளாசாரியராக வரக்கண்டு பத்திர புஷ்ப பலாதிகளோடுசென்று அவருடைய திருவடிகட்கு அனந்தமுறை கரசரண அவயவங்க ணிலத்திற் றோயும்படி அட்டாங்க பஞ்சாங்க தீர்க்க நமஸ்காரங்கள் செய்து, கண்களிற் நீர்சோரப் பயபக்தி விசுவாசத்துடன் எழுந்து சிரத்தின்மிசைக் கரங்களைக் கூப்பிப் பலவாறாய்த் துதித்து நின்றவனாகி, சுவாமி! அடிமையாகிய

யான்யார்? எனக்கிந்த வுடலாதிப் பிரபஞ்சங்கள் எங்கிருந்து உதித்தொடுங்கும் என்று வினவிய மாணாக்கனைக்கண்டு கருணை கூர்ந்து அருகமர்த்திப் பார்த்து உன்னி பரிசித்தென்கிற தீக்ஷாத் திரயங்களால் தீக்ஷித்து மாணாக்கனது உடல் பொருளாவிகளைக் கொண்டு ஐம்பூதங்களின் வடிவாயவுடலும் நீயன்று, செவியாதி இந்திரியங்களும் நீயன்று, மனமாதி கரணங்களும் நீயன்று, இருள் வடிவசுழுத்தியில் விளங்கும் அவித்தையும் நீயன்று, என்று நேதிகளைந்து, பிரணவாகார திருச்சொரூபமாகியும் மவுனானந்தப் பழம்பொருளாகியும் சிவாநனியப் பெரும்போகச் செல்வமாகியும் களைதற்கிடம் பெறாததாயும் நின்ற தனைத் தரச்செய்வதாகியுமுள்ள மஹாவாக்யோபதேசஞ் செய்து திரிசியமாயுள்ள யாவும் நீயே யாகுவை நின்னையன்றி யாதொரு பொருளுமிலாமையால் நீயே நான் நானே நீயென்று சொல்லாமற் சொல்லிக் காட்டாமற் காட்டிய மாத்திரத்தில், அவருடைய தீக்ஷாநுகிரகத்தால் கேளாமற் கேட்டுத் தேகேந்திரியாதி கரணபஞ்ச கோசங்களுக்கு விலக்ஷணமாகியும் அத்வைதானந்த அபரோக்ஷ சாட்சாத்கார மெய்ஞ்ஞான சொரூபமாகியுமுள்ள தன்னைத்தானாகக் காணாமற் கண்டு நிலைபெற்றொளிர்வரெனபது தோன்றத் 'தனையுணர்ந்து' எனவும்,

தனது நிசவடிவைக் கற்பிதமாய் மறைத்துள்ள அனாதிய வித்தையால் விரிந்த கற்பிதாகாரஜாதி சமயாசாரக் கலைஞான தருக்க பேதபாவனை பூசையாதிகளையும்விட்டுப் பிருதிவி தத்துவ முதல் நாததத்துவ மீறாகச் சொல்லப்பட்ட தத்துவங்களியாவற்றையும் நேதிநேதி வாக்கியத்தினால் நியதிகளைந்து, அஞ்ஞான சந்தேக விபரீதங்களற அபரோக்ஷ சாக்ஷாத்கார மெய்ஞ்ஞான சொரூபனாகிய தன்னைத்தானாகக் கண்டு யாவுக்கும் மேலாய் அதீதமாய்ச் சர்வசாட்சியாய் நின்றதுவும் யானேயென்னும் போதமகிழ்ச்சியா லெழும் அகம்பிரமாஸ்மி யெனும் நிலையையுங்கடந்து, அதற்குமேல் சுட்டுதலற்றொளிராநின்ற திருவருட்டெரிசனஞ்செய்து, அதுவேதானாய்த் தானேயதுவாய் இரண்டென்பதின்றி நிற்றலே மோட்சார்த்தமென்பது தோன்ற 'அருளாய்த் தான் நிலைத்திடுதலே முத்தி' எனவும்,

அகாராதி அக்ஷரத்திரயங்களாய் விரிந்திலகுந் தூலாதி தேக திரிசியப் பிரபஞ்சங்களையும் அவற்றின் காரியங்களையும் அக்

காரிய கர்த்தர்களாகிய தத்துவத் தலைவர்களையும் மற்றுமுள்ளவை களையும் அருளாசாரியர்முன்னாக நியதிகளைந்து யாவுக்கும்மேலாய் அற்புத சுயஞ்சோதியாய் விளங்கும் திருவருளில்கலந்து, அதுவே தானும் தானே யதுவாய், கடாகாசமும் மஹாகாசமும் மழைத் துளியும் சமுத்திர ஜலமும் இராஜனும் வேலைக்காரனும் சொரூ பத்தில் ஐக்கியவிரோதமின்றி உபாதிகளற்று விளங்குவதுபோல் விளங்கித் தத்துவமசி லட்சியார்த்த பிரமான்ம வைக்கியமெனும் பேரின்பா காரவடிவ மாயினோமெனும் கிஞ்சித்து நினைப்பாகிய சலனமுமற்று நிலைத்து நின்றவர்களே சுட்டுதலற்ற அதீதானந் தர்களெனவும், பிறப்பிறப்பற்ற நித்திய முத்தர்களெனவும், இரவு பகலற்றெழி லுருவமுற்றுப் பேரின்பசாகரத்தி லழுந்திய பேரும் போகச் செல்வர்களெனவும், சீவன் முத்தர்களெனவும், விதே கைவல்லிய முத்தர்களெனவும், நிர்விகற்ப சிவராஜயோகிக ளென வும், இன்னும் பலவித திவ்விய திருநாமங்களைப் பெற்றுவிளங் கும் மகான்களாவர். அவர்களுடைய அற்புத கலியாணகுண மகி மைகளை ஹரிஹரபிரமேந்திராதியர்முதல் எவர்களாயினும் இவ் வாறெனத் தெரிந்துரைக்க முடிவுறாதென்பது தோன்ற 'முத்தி மேவினோன் மகிமை யுரைப்பரிது' எனவும் கூறப்பட்டன.

தாற்பரியம்.

சகலமுந்தானாய் விளங்கும் சற்குரு கருணையினால் அஞ்ஞா னாதி ஆவரணங்களை அசத்தெனக்கண்டு நீக்கித் தன்னைத்தானா கக்கண்டு பராக்கின்றி நிற்றலே அத்துவிதானந்த முத்தியெ னவும், அங்ஙனமாகிய பேரின்பப்பெற்றியை அடைந்த மஹான் களுடைய மகிமையை அளவிட்டுரைத்தல் கூடாதெனவும் கூறிய வாறும்.

விசேடவுரை.

'பூவுலகுயிர்க ளுணர்ந்தருளடைய' என்னுஞ் செய்யுளால் அதிதீவிரதரபக்குவிகள் வாமதேவமார்க்கத்திற் செல்லுதலொழி ந்து, விகங்கமார்க்கத்தில் செல்லுதலை மேற்கொண்டு, அஞ்ஞான மும் அதன் காரியவடிவவுலகும அதன் கணிகமும் * போகமும் † அபரோசட்சமாக ‡ அநித்தியமென்று முறையே தோன்று

* போகம் - இன்பத்துன்பங்கள் புலப்படத் தோன்றல்.

† அபரோட்சம் - பிரத்தியட்சம்.

‡ அழிவுபாட்டபாவத்திற் கெதிர்மறையாயுள்ளது அநித்தியம்.

வான் வேண்டி, காட்சியையெல்லாங் கண்ணதாக்வைக்கும் பரமாசிரியனை யடுத்து ஆத்மானாத்மாக்களின்றன்மையை விசாரணை வாயிலாக வறிந்து, ஆத்மா ஒன்றே § நித்தியமெனவும் அநாத்மாவான அஞ்ஞானாதிகள் அநித்தியமெனவும் ஆத்மா அதிஷ்டானமெனவும் அநாத்மா ஆரோபிதமெனவும் ஆத்மாவினிடத்து அநாத்மா கானனீர், கிளிஞ்சல் வெள்ளி, கந்தர்ப்பநகர், கனவூர், வானமை, வானவளைவு, கயிற்றிற்பாம்பு போன்று ¶ பிராதிபாசிக சத்தா யிருக்கிறதெனவும் ஐயந்திரிபற்றுத் திடப்பட அபரோட்சமாக நிர்விகற்பசமாதி வாயிலாக வுணர்ந்து * துவந்துவமற்றுச் சீவன்முத்தர்களாவர்களென்பது குறிப்பாகப் பெறப்படுதலின், அதனைக் குருசிஷ்ய சம்வாதமாகச் சுருதி ஸ்மிருதிபுராணேதிகாசப் பிரமாணங்களுடன் விளக்கமுறக் காட்டுவாம்.

குருசிஷ்யஸம்வாதம்.

முத்தியிருப்புள்ள சீடனொருவன்: வேதாந்த சாஸ்திராப்பியாசஞ் செய்து, அதன் பொருளை யுள்ளவாறறிந்து, சீவப்பிரம ஐக்கிய நிச்சயத்தால் ஆத்ம (பிரம) ஞானியாயிருக்கும் சற்குருவை யடுத்துப் பயபக்தி விசுவாசத்துடன் வணங்கி நின்று துதித்துச் சுவாமி! பரவஸ்துவே உலகாய் விளங்குவதென்ப தெங்ஙனமாமென்று வினவினன்.

## க - வது சம்வாதம்.



கடவுள் சத்தியே கற்பித வுலகெனல்.

குரு: பரவஸ்து பரிபூரணமா யிருத்தலினால் அதன்கண் உலகு வேறு பொருளா யிருத்தற்கு ஞாயமின்று; இன்மையின், பரவஸ்துவே உலகாய்விளங்குகின்றதென்பது ஞாயமே.

சிஷியன்: அதனை நன்கு விளக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

§ அழிவுபாட்டபாவத்திற் கெதிர்மறையாகாதது நித்தியம்.

¶ ஆத்மஞானமில்லாமலே பொய்யென்று நிச்சயிக்கத்தக்கதுபிராதிபாசிகசத்து.

* சுகம் துக்கம், பாவம் புண்ணியம், விருப்பு வெறுப்பு, இலாபம் நஷ்டம், ஜயம் அபஜயம், நன்மை தீமை இவ்வாறு ஒன்றற்கொன்று மாறானவிஷயங்கள் துவந்துவமாம்.

கு : உலகு அவயவமு (உறுப்பு) டையதாயும் சடமாயு மிரு த்தலினுல் காரியவடிவமன்றிக் காரணவடிவமன்று. எது காரிய போ அஃதுண்மையில் அவயவமுடையதாயும் சடமாயுமிருக்கும். எது காரணமோ அஃதுண்மையில் அவயவ ரகிதமாயும் சித்தாயு மிருக்கும். அவன் அவள் அது என்று விளங்கும் உலகம் அவயவ முடையதாயும் சடமாயு மிருத்தலினுலும், பரவஸ்து அவயவ ரகிதமாயும் சித்தாயு மிருத்தலினுலும் பரவஸ்து (முதற்) காரண மென்றும் உலகம் காரியமென்றும் பெறப்பட்டன. மண்ணைவிட்டு அதன் காரியமாயகடம் விளங்காமையின் மண்ணே கடமாய் விள ங்குகின்றதென்பது தேற்றமாயிருத்தல்போன்று, பரவஸ்துவை விட்டு உலகம் தனித்துத் தானெருமுதலாய் விளங்குத லின்மை யின் பரவஸ்துவே உலகாய் விளங்குகின்றதென்பதில் யாதுஞ் சங்கையின்று; மேலும் மண்ணனது தனது சத்திவாயிலாகக் கட மாக விளங்குதல்போன்று பரவஸ்துவும் தனது சத்திவாயிலாக வுலகாய் விளங்குகின்றதென் றறிதல்வேண்டும்.

சி : தேவரீரருளிய விதற்கு நூற்பிரமாணங்களுண்டோ?

கு : உண்டு.

சி : அவையாவை?

கு : கீழ் வருவனவே.

நிராலம்போபநிஷத்.

𑌮𑌹𑌦𑌹𑌂𑌕𑌾𑌰 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌪𑍍𑌤𑍇𑌜𑍋𑌵𑌾𑌯𑍍𑌵𑌾𑌕𑌾𑌶𑌾𑌤𑍍𑌮𑌕
𑍇𑌨. 𑌬𑍃𑌹𑌦𑍍𑌰𑍂𑌪𑍇𑌣𑌾 𑌅𑌣𑍍𑌡𑌕𑍋𑌶𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌰𑍂
𑌪𑌤𑌯𑌾 𑌭𑌾𑌸𑌮𑌾𑌨𑌮𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑌖𑌿𑌲𑍋𑌪𑌾𑌧𑌿𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌂. 𑌤𑌤𑍍𑌸
𑌕𑌲𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌬𑍃𑌂𑌹𑌿𑌤𑌮𑌨𑌾𑌦𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌂 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌶𑌿𑌵𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌂
𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌵𑌾𑌚𑍍𑌯𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌚𑍍𑌯𑌂𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ||

(இ - ள்.) மகதகங்கார பூமி ஜல வக்னி வாயு ஆகாசங்களா கிய பூதங்களடங்கிய பெரிதான ரூபமாகிய அண்டகோசத்தினுல் கருமஞானார்த்த ரூபங்களாய் விளங்குகிறதாயும், இரண்டாவ தற்றதாயும், சகலவித வுபாதி யற்றதாயும், சகல சத்தியுடன் கூடினதாயும் ஆதியந்த மற்றதாயும், சுத்தம், சிவம், சாந்தம், நிர்க் குணம் (என்னும்) இச்சத்தங்களால் சொல்லத்தக்கதாயும், வாக் குக்கெட்டாததாயு மிருக்கிற சைதன்னியமே பிரமம்.

இதுவுமது.

[illegible]

(இ-ள்.) தேகாதிகளைக்காட்டிலும் அதிசிரேஷ்டமா யிருக்கிறதினாலே பிர்ம்மமே பரமாத்மா. அந்தப்பிர்ம்மமே பிர்ம்மா, விஷ்ணு, ருத்திரன். அவனே இந்திரன். அவனே யமன். அவனே சூரியன். அவனே சந்திரன். அவனே தேவர்கள். அவனே அசுரர்கள். அவனேபிசாசுகள். அவனேமனிதர்கள். அவனே ஸ்திரீகள். அவனே பசுமுதலியன. அவனே ஸ்தாவரம். அவனே பிராம்மணன் முதலானவர்கள். சகலமும் பிர்ம்மமே. இவ்விடத்தில் அற்பங்கூட பலவென்பதில்லை (பிர்ம்மத்தைத் தவிர வேறே யாதொருவஸ்துவுமில்லை என்பது தாற்பரியம்).

யோகதத்துவ உபநிஷத்.

[illegible]

(இ-ள்.) நிஷ்களமும் நிர்மலமும் சாந்தமும், சர்வாதீதமும் நிராமயமுமான பிர்ம்மமெதுவோ அதுவே ஜீவரூபமாகப் புண்ணியபாப பலங்களாற் சூழப்பட்டது.

சுவேதாசுவதர உபநிஷத்

[illegible]

(இ-ள்.) சகல பூதங்களிலும் மறைந்தும் சர்வவியாபியாகவும் சர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும் தொழில்களுக் கிறைவ

னுகவும் சர்வபூதங்களிலும் உறைந்துகொண்டும் கேவலம் சாக்ஷி யாகவும் சேதனஸ்வரூபியாகவும் குணங்களற்றும் தொழிலற்றும் பலவற்றிலும் தனிமையாய் வசிப்பவனுகவும் ஒருவிதையைப் பல வகை யாக்குவோனுகவும் உள்ள ஒருவனே தெய்வம். அவனைத் தங்களுக்குள்ளிருப்பதாய்க் காணும் தீரர்கள்மாத்திரம் நிலைத்த சுகமடைவார்களேயன்றி மற்றவர்க ளடையார்கள்.

முண்டகோபநிஷத் உ. க. க.

தடெதத்ஸத்யம் யதா ஸுதீப்தாத் பாவகாத்விஸ்புலிங்காஃ ஸஹஸ்ரஶஃ ப்ரபவந்தே ஸரூபாஃ | ததாக்ஷராத்விவிதாஃ ஸோம்ய பாவாஃ ப்ரஜாயந்தே தத்ர சைவாபியந்தி ||

(இ-ள்.) ஓ சௌமியா! அது சத்தியம். ஜுவலிக்கிற அக்கினியினின்றும் அதே வடிவமாய் அநேக பொறிகள் எப்படி உண்டாகின்றனவோ அப்படியே அழிவற்ற பிரமத்தில் நின்றும் பலவித தேகத்தை யுபாதியாகவுடைய ஜீவாத்மாக்கள் உண்டாகின்றார்கள். அதனிடத்திலேயே லயமடைகிறார்கள்.

மாண்டூக்கிய உபநிஷத்.

ஆத்மா ஹ்யாகாஶவஜ்ஜீவைர்கடாகாஶைரிவோதிதஃ ||

(இ-ள்.) ஆகாசமானது கடாகாசங்களாகச் சொல்லப்படுகிறதுபோல ஆத்மாவானவன் சீவர்களாகச் சொல்லப்படுகிறான்.

தைத்திரீயோபநிஷத் பிருகுவல்லி முதலாவது அனுவாகம்.

யதோ வா இமானி பூதானி ஜாயந்தே | யேன ஜாதானி ஜீவந்தி | யத்ப்ரயந்த்யபிஸம்விஶந்தி | தத்விஜிஜ்ஞாஸஸ்வ | தத் ப்ரஹ்மேதி ||

(இ-ள்.) எதினின்றும் இந்தப் பூதங்களுண்டாகின்றனவோ எதினுல் பிறந்தவை உயிர்வாழ்கின்றனவோ எதை வாழ்வன முயன்று அடைகின்றனவோ அதை யறிந்துக்கொள்ளக்கடவாய். அது பிரமம்.

புருஷ சூக்தம் கசு-வது ருக்கு.

வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் |
ஆதித்யவர்ணம் தமஸஸ்து பாரே |
ஸர்வாணி ரூபாணி விசித்ய தீரஃ |
நாமானி க்ருத்வாபிவதன் யதாஸ்தே ||

(இ-ள்.) எந்தப் புருஷன் சகல ரூபங்களையும் விசேஷமாயுண்டாக்கிப் பெயர்களையும் ஈந்து, அப்பெயர்களால் வியவஹரித்துக் கொண்டிருக்கிறானோ, அப்படிப்பட்டவன் மஹானாகியும் சூரியனைப்போல் ஜ்வலிக்கிறவனாயும் அஞ்ஞானத்துக்குப் புறம்பாயுமுள்ளவன். அந்தபுருஷனை நான் அறிவேன்.

அந்நபூர்ணோபநிஷத் ரு-வது அத்தியாயம்.

[illegible] |
[illegible] ||

(இ-ள்.) ஆகாசமானது எப்படிக் கடாகாசமென்றும் மகாகாசமென்றும் சொல்லப்படுகிறதோ அப்படியே ஆன்மாவானது ஜீவேசர்களாகப் பிராந்தர்களால் சொல்லப்படுகிறது.

மகோபநிஷத் சு-ம் அத்தியாயம்.

[illegible] |
[illegible] ||

(இ-ள்.) இந்தச் சகலப்பிரபஞ்சமும் பிரமமே. விஸ்தாரமாயிருக்கிற இந்தப் பிரபஞ்சமெல்லாம் ஆன்மாவே. ஓ பாபமற்றவனே! நான் வேறு இந்தப் பிரபஞ்சம் வேறு யென்கிற பிராந்தியைத்தள்ளிவிடு.

யோகசிகோப நிஷத் ச-வது அத்தியாயம்.

[illegible] |
[illegible] ||

(இ-ள்.) பிரபஞ்சத்திற் குபாதானகாரணம் பிரமத்தைத் தவிர வேறில்லை; ஆகலின், இச்சகலமான பிரபஞ்சமும் பிரமமாகவே யிருக்கிறது; வேறேயில்லை.

ஆத்மபோதம்.

[illegible] |
[illegible] ||

(இ-ள்.) நீரினிடத்திலே நீர்க்குமிழி முதலானவை எந்தப் பிரகாரம் பிறப்பையும் இருப்பையும் இறப்பையும் உடைத்தாயிருக்குமோ அந்தப்பிரகாரமே ஈச்வரனிடத்திலே யுலகங்களு முற்பத்தி திதி லயங்களைப் பொருந்துகின்றன.

இதுவுமது.

ஸச்சிதானந்த நித்யே விஷ்ணௌ ப்ரகல்பிதா:|
வ்யக்தயோ விவிதா ஸர்வா ஹாடகே கடகாதிவத் ||

(இ-ள்.) பொன்னினிடத்திலே ஆபரண முதலானவை நாநா விதங்களாய்க் கற்பிக்கப்பட்டபோது அவை எப்படி பொன்னைக் காட்டிலும் வேறாகாதிருக்குமோ, அப்படியே சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவினிடத்திலே கற்பிக்கப்பட்ட ஸ்தாவர சங்கமாதிகளும் அதைக்காட்டிலும் வேறாகாதிருக்கும்.

திரிசிகோபநிஷத்.

அஹங்காராபிமாநேந ஜீவஸ்யாத்தி ஸதாசிவ: ||

(இ-ள்.) அகங்காராபிமானத்தால் சதாசிவனே ஜீவனாகின்றான்.

கடோபநிஷத்.

யதோவடீ ஸூக்ஷ்மஸந்தாநரூபா |
ஏகம் பீஜம் பஹுதா ய: கரோதி ||

(இ-ள்.) அதிசூட்சுமமாகிய ஆலம்விதையிலிருந்து அனேக கொம்புகள் கிளைகள் பூவுகள் பிஞ்சுகள் காய்கள் கனிகள் இலைகள் முதலியவைகளோடுங்கூடிப் பெரியவிருட்சமுண்டாகியபோதிலும் அந்த வித்திலிருந்த சத்தானது விருக்ஷமுழுமையும் வியாபித்திருந்தாற் போன்று சர்வ சராசரப் பிரபஞ்ச முழுமையும் ஆத்ம சொரூபமாகிய பரப்பிரம மொன்றே யாவுமாய் வியாபித்துக் கொண்டிருக்கிறது.

இதுவுமது.

அக்நிர்யதைகோ புவநம் ப்ரவிஷ்டோ |
ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பபூவ |
ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா |
ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பஹிஶ்ச ||

(இ-ள்.) ஒரு வத்தியின்கண் பிரகாசித்துக்கொண்டிருக்கும் விளக்கில் அனேக திரிகளைக் கொளுத்தியபோது ஒருதீபமே அந்தத்திரிகளிடம் வியாபித்து அனேக தீபங்களாய்த் தோன்றுவது போல் ஒரு ஆத்துமாவே யனேக தேகங்களில் வியாபித்திருந்து அனேக ஆத்துமாக்களாய்த் தோன்றுகின்றது.

இதுவுமது

வாயுர்யதைகோ புவநம் ப்ரவிஷ்டோ |
ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பபூவ |
ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா |
ரூபம்ரூபம் ப்ரதிரூபோ பஹிஸ்ச ||

(இ-ள்.) ஒருவாய்வானது பிரபஞ்ச முழுமையும் வியாபித்து மலையமாருதமென்றும், பிராணவாயுவென்றும், சுழல்காற்றென்றும் நாநாவிதமாய்த் தோன்றுதல்போல் ஒரு ஆத்துமவொன்றே பிபீலிகாதி பிரம்மபரியந்தம் சகல சரீரங்களிலும் வியாபித்து அனேக சீவர்களாகத் தோன்றுகின்றது.

கூர்மபுராணோபநிஷத்.

யதா ஸமுத்ரே ஸர்வநத்யோ லயம் யாந்தி ஸமுத்ரம் ஏவ |
ததைகைவ ஸம்யாந்தி ஸர்வாணி விஸ்வாத்மஜா: |
யதி நாமா: ப்ருதக் ஸந்தி ஸமுத்ரேப்ய: |
ஸம்யாந்தி ஸமுத்ரம் ஏவ ஜாயந்தே யதா ||

(இ-ள்.) சகலநதிகளும் சாகரத்தில் விழுந்து அபேதமானாற்போலும் சமுத்திரத்திலுண்டாகிய அலை நுரை திவலைகளும அதைவிட்டு வேறுபடாமல் ஏகமானாற்போலும் பிரமாதி ஸ்தாவரபரியந்தஞ் சர்வ சராசரப் பிரபஞ்சங்களும் பிரமத்தைவிட வேறாகா வொன்றும்.

சிவவாக்கியம்.

ஆதியான தொன்றுமே யனேகரூப மாயமாய்ச்
சாதிபேத மாயெழுந்து சர்வஜீவ னானபின்
ஆதியோடு கூடிமண் டெழுந்தஜன்ம மானபின்
சோதியான ஞானியாருஞ் சுத்தமா யிருப்பரே.

சொரூபசாரம்.

சிற்சொருபந் தானே செகசொரூப மானவெலாந்
தற்சொரூபா காரமாச் சாற்றவே - பொற்சொரூப
மச்சுருவாம் போல வதுவதுவாய்த் தோற்றுமொரு
சொச்சொரூபந் தானே துணை.

### சிவஞானபோதம்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

### பிரமகீதை முண்டகோபநிஷத்.

அர்க்கன் மதியங்கி மழையாதி மறைநானு
மிக்கமிகு யாக விவிதங்க ளியமானர்
தக்கணை சுராசுரர் மனிதர்ப் பசுசாதி
யெக்கிருமி கீடமு மெழுஞ்சிவ னிடத்தே.

### இதுவுமது.

அங்கிதலை வாயவிந்த மான மறைபானு
திங்கள்விழி யெண்டிசைக ளுஞ்செவிகள் வாயு
தங்குமுயிர் தன்னிதய மேசகல முங்கா
லிங்கவனி சங்கர னிருக்கும் வடிவீதால்.

### கூர்மபுராணம் ஈசுரகீதை.

நன்றாய் ஞான கனமாகி நாளு மெல்லாம் பிறப்பிடமா [ய்ப்
யொன்றாய் வேறோர் பொருளின்றி யொளியா யொன்றே யெவமி
தன்று யகில சராசரங்கட் காதா ரந்தா னுமென்றும் [தாய்.
போன்று தனுவா யவிகாரப் பொருளாய்ப் புலனைப் புணர்ப்பரி

### இதுவுமது.

இரண்டா வதிலா தளவைகளா லெட்டா ததுவா யெங்கெங்குஞ், சிரங்கால் கைகண் முகமுடைத்தாய்த் தெளியப் படாதாய்த் திரமாகி, யிரும்பார் நீர்தீ கால்வான மெல்லா மிருத்தற் கிடமாகும், பரந்தா னுணர்ந்தோர் நிர்க்குணமாம் பரம வியோம மென்பர்களால்.

### சூதசங்கிதை.

பரதத் துவமாய்த் தத்துவங்க ளனைத்தும் பகர்தத் துவமாகி
வரமுற் றிடுசிற் சத்தியுமாய் மருவு சடசத் தியுமாகி
யுரவுற் றிடுமச் சத்திகடம் பேதங் களுமா யொளிர்கின்ற [றேன்.
வரவச் சடையோ னெவனவனை யடியேன் போற்றித் துதிக்கின்

ஞானவாசிஷ்டம்.

அத்தமி யாத சோதி யருக்கனா யளவி லாதாய்
மெத்திய பிணியி லாதாய் மேவரும் பிறப்பி லாதா
யெத்தலங் களிலு மென்று மியாவுமா யாவுஞ் செய்து
முத்தியு மாகி யோங்கு முதற்பரம் பொருளொன் றுண்டு.

ரிபுகீதை.

அருளுருவாம் பரமசிவ னனந்தசக்திக் காதார மாகவமர்ந் திருப்பதாலே, சருவசகக் காரணமா மவ்வீசற்குச் சமமேனு மல்லதவற் கதிகமேனும், ஒருபொருளு மில்லையதனா னன்றேன் றேனை யோதுமுபா தானநிமித் தங்களாவன், கருதியவ் வீசற்கு மேலாய் வேறோர் காரணமு மொருகாலு மெங்குமில்லை.

திருவாய்மொழி ௧-௧.

திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்
உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே.

இதுவுமது.

மூவுல கங்களுமா யல்லனா யுகப்பாய் முனிவாய்ப்
பூவில்வாழ் மகளாய்த் தவ்வையாய்ப் புகழாய்ப் பழியாய்த்
தேவர் மேவித் தொழுந்திரு விண்ணகர்ச் சேர்ந்தபிரான்
பாவி யேன்மனத் தேயுறை கின்ற பரஞ்சுடரே.

திருவாசகம்.

பூதங்க ளைந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்க டொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே.

பாகவதம்.

கரமிலாப் பசுமுதல் கரங்கள் காலிலா
மரமுத லானதா பரங்களாய் வரும்
புரமெலா மின்றுயிர் போற்றி யூட்டிடும்
பரமெலாம் பூண்டவ னொருவன் பார்க்கினே.

திருமந்திரம்.

தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானே யுடலுயிர் தத்துவமாய் நிற்கும்
தானே கடன்மலை யாதியுமாய் நிற்கும்
தானே யுலகிற் றலைவனு மாமே.

கர்ணாமிர்தம்.

திரை நுரை குமிழி யெல்லாந் திரைகடற் றோன்று மாபோ
லுரையுயிர் மாயை யாக்கை யுனதிடை யுதிக்கக் கண்டேன்
பரைதிரு வுருவ மாகிப் பசுத்தொறுங் குடியி ருந்து
திருமறு மார்பன் போற்றுந் திருப்புலி வனத்துள் ளானே.

## உ - வது சம்வாதம்.

சிவமுஞ் சத்தியுந் தெளிவி லொன்றெனல்.

சி: சுவாமி? பரவஸ்துவும் சத்தியும் ஒன்றோ வேறோ?

கு: பரவஸ்துவில் சத்தி வாஸ்தவத்தி லபேதமாயும், கற்பிதத்தில் பேதமாயு மிருக்கும்,

சி: அஃதெப்படி?

கு: கயிற்றின்கண் அரவாதற்குரிய சத்தி வாஸ்தவத்தில் அபேதமாயிருப்பினும் கற்பிதத்தில் பேதமா யிருப்பதுபோலாம்.

சீ: இதனை யின்னும் நன்குவிளக்கல் வேண்டும்?

கு: சத்தியினைக் குணமெனவறியாதார் பொருளெனக் கூறுவர். சத்தி சத்தனைத்தவிர வுண்டென்பதற்கு யாதொரு வுதாரணமு மின்மையினாலும், "ஏகமே வாத்விதீயம் பிரமம்" என்று சுருதி கூறுவதாலும் அது கூடாது. பரவஸ்து தனது சத்தி விசிரிம்பித்தவிடத்துச் சிவேசவுலகாய் விளங்குகின்றது; விளங்கினும், அவை பரவஸ்துவிற்கு வேறுபட்டனவல்ல; அதன்கண் பொற்பணிபோன்றிருக்கின்றன. அச்சத்தியோ, சூரியகிரணம் அச்சூரியனை விட்டிராததுபோல் அப்பரவஸ்துவிலிருக்கிறது.

சி: தாங்களிங்ஙன முரைத்தனவற்றிற் கெல்லாம் பிரமாணங்களுண்டோ?

கு: உண்டு.

சி: அவைகளெவை ?

கு: கீழ்வருவனவே.

கடவல்லியுபநிஷத்.

ஹ்ருதாகாஶே ஸஹ தயா ஶக்த்யா ஸாக்ஷாத்பஶ்யந்தி யே ஶிவம் |
தேஷாம் ஶாஶ்வதீ ஶாந்தி நேதரேஷாம் இதி ஶ்ருதிஃ ||

(இ-ள்) இதயாகாசத்தில் (அறிவின்கண்ணே) அருட்சத்தியோடுகூடச் சிவத்தை எவர் அறிகின்றாரோ அவர்க்கே நித்தியமாகிய பேரின்பமாம்.

பத்மபுராணம் சிவகீதை.

மமைஷா ஸஹஜா மாயா ஶக்திஃஸா த்ரிகுணாத்மிகா |
மய்யதிஷ்டானகே ஸைவ ஸஜதே விஶ்வரூபதாம் |
ஶுக்தௌ ரஜதவத் ரஜ்ஜௌ ஸர்பஸம்மோஹ யத்வதே ||

(இ-ள்.) முக்குணங்களையுடைய அந்தச் சத்தியானது என்னுடைய சேர்க்கையினால் இப்பியினிடத்தில் வெள்ளிபோலவும், கயிற்றினிடத்தில் அரவுபோலவும், அதிஷ்டானமாகிய என்னிடத்திலேயே விசுவரூபமா யிருக்குந்தன்மையை யடைகிறது.

விஷ்ணுபுராணம் அம்சம்-௧. அத்-௭. ௬-௬௦.

ஸ தஸ்ஸ்தாவரமிதம் விஶ்வம் ஜகதேதச்சராசரம் |
பரப்ரஹ்மஸ்வரூபஸ்ய விஷ்ணோஃ ஶக்திஸமந்விதம் ||

(இ-ள்) சராசரங்க ளடங்கிய பிரபஞ்சமானது பரப்பிர்ம்மசுவரூபமாகிற விஷ்ணுவினுடைய சக்தியோடு கூடியிருக்கிறது.

பிரும்ம வைவர்த்தபுராணம். பிரும்மகண்டம் அத்-உஅ.

யதாக்னௌ தாஹிகா ஶக்திஃ ப்ரபா ஸூர்யே யதாம்பரே |
யதா க்ஷீரே ச தாவல்யம் ஜலே ஶைத்யம் ததைவ ச ||
யதா ஶப்தஶ்ச ககனே யதா கந்தஃ க்ஷிதௌ ஸதா |
யதா ஹி நிர்குணம் ப்ரஹ்ம நிர்குணா ப்ரக்ருதிஸ்ததா ||

(இ-ள்.) அக்கினியிலுஷ்ணம்போலும், சூரியனிற் பிரகாசம்போலும், பாலில் வெண்மைபோலும், நீரிற் சீதளம்போலும், ஆகாயத்திற் சப்தம்போலும், பூமியிற் கந்தம்போலும் அந்தப் பிரகிருதி

யானவள் பிர்ம்மத்திலிருக்கிறாள். ஓ முனியே! பிர்ம்மமானது எப்படி எப்போதும் நிர்க்குணமோ அப்படியே பிரகிருதியும் நிர்க்குணமே.

தஸ்ய ஸாமர்த்ய: ப்ரக்ருதிஸ்வரூபிணீ ஸர்வஜீவ ஸாக்ஷிணீ।
யதஸ்ஸர்வத்ர ப்ரஹ்ம வேதம் ப்ரக்ருதி லக்ஷணம்॥

(இ-ள்.) எதனாலே பிர்ம்மமானது சக்தியுடையதோ அதனாலே அந்தப் பிர்ம்மசக்தியானது ஸகலத்திற்கும் பீஜ (காரண) ஸ்வரூபியானப் பிரகிருதியா யிருக்கிறது. இதுதான் பிரகிருதி லக்ஷணம்.

பிரமகீதை, சுவேதாசுவதர உபநிஷதமாரம்பம்.

வித்தக வேதப் பொருளதாய் ஞான விழியினல் விளங்கிடும் பொருட்கோர், புத்தியி னூழு முள்ளவா றறியப் போயிடா தா யிருந் துள்ள, சத்தியுண் டந்தச் சத்தியோ டென்றுந் தான்பிரி வினறியத் துவித, சத்திய ஞான வனந்தவா னந்த தத்துவ மாகியே யிருக்கும்.

சடகோபர் திருவாய்மொழி-சு. க0.

அகல கில்லே னிறையுமென் றலர்மேல் மங்கை யுறைமார்பா
நிகரில் புகழா யுலகமூன் றுடையா யென்னை யாள்வானே
நிகரி லமரர் முனிகணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே
புகலொன் றில்லா வடியேனுன் னடிக்கீழமர்ந்து புகுந்தேனே.

சூதசங்கிதை.

தவிராதவ் வம்மூர்த்தங் களுக்குத்தக்க சத்திகளாய்
விளங்கு மந்தச் சத்தி யின்றி
யுவமானங் கடந்தொளிரும் பரசி வத்துக்
கொருதொழிலு மின்றாகு மாத லாலே
யவிர்தருமச் சிவமன்றிச் சத்தியில்லை யீத்தகு
சத்தியை யுன்றிச் சிவமு மில்லை
யிவர்தருமன் போடிவ்வா றுணர்பவன் மெய்ஞ்ஞானி
யிரண்டாகக் கருதிடுவோ னிருணிரயம் புகுமே.

கைவல்லியநவநீதம்.

சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயாவி
வித்தை காட்டிய விந்திர ஜாலம்போய் வித்துவான் மெய்போலப்
புத்தி மைந்தனே சத்திமா னாகிய பூரண வான்மாவின் [யெ.
வத்து நிர்ணயஞ் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவா

இல்லை யாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக்கேட்டில், புல்லை யாதியா மசேதனப் பொருளெலாம் பூத்துக்காய்ப் பனபாராய், நல்லை யாமக னேயதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தாக்கால், தொல்லை யாய்வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறாமெ.

கருப்பை முட்டையுட் பறவைகள் பலசிறங் கலந்தசித் திரம்பாரா
அருப்ப மாஞ்சத்தி நியமமி லாவிடி லாசிலா நகர்போலாம் [ய்
நெருப்பு நீரதாங் கசப்புமே மதுரமா நீசனு மறையோதும்
பொருப்பு மேகமாங் கடலெலா மண்களாம் புவனமிப் படிபோமே.

ஈசுராகீதை தத்துவநிஜம்.

பின்னிய பகுதியாம் பிரதான மாயையு
மன்னிய புருடனு மானு யாதியாய்த்
துன்னிய விகாரமுந் தொல்லை யீசனி
லன்னிய மின்மையா லவனே யாகுமால்.

ஞானவாசிட்டம்.

முழுதுமாய் முழுதுடைத்தாய்ச் சத்திமுழு தும்முள்ள மூர்த்தி தானே, பழுதிலா தெவ்விடத்தெப் படிதோன்று மவ்விடத்தப் படியே தோன்றும், வழுவிலா மெய்ஞ்ஞான நிலைலீலை யொருட்டானும் வழங்கப் பெற்றாய், கழுவிலா வுண்மையொடுந் தெளிந்தனையாம் போதுமென நவில லோடும்.

விவிதாரம்பம் புரிவுனவா யுலகாம் பொறியின் விளைக்கயிறுந்
தவிராவிச்சை முதற்பலவாஞ் சத்தி யவன்மே னியிற்றங்கு
மவிராநின்ற விவன்பரம தேவென் றறிந்தோ ரருச்சிப்போர்
செவிதாஞ் சின்மாத் திரமானோ னனுபவித்த திகழான்மா.

திருமந்திரம்.

சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமுமாஞ் சிவஞ்சத் தியுமாகுஞ்
சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்தி தானென்றுஞ் சமைந்துரு வாகுமே.

திருக்களிற்றுப்படியார்.

பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றாற்போ
லந்நிற மண்ணனு மம்பிகையுஞ்-செந்நிறத்த
ளெந்நிறத்த ளாயிருப்ப ளெங்கள் சிவபதியு
மந்நிறத்த னாயிருப்ப னாங்கு.

நமச்சிவாயமாலை.

சத்தியுஞ் சிவமுமாகித் தானுவாய் சகத்துக்கெல்லாம்
முத்தியு மளிக்கவல்ல முதல்வனே நமசிவாயா.

திருமழிசைப் பிரானருளிய திருச்சந்த விருத்தம்.

ஆணி னோடு பெண்ணு மாகி யல்லவோடு நல்லவாய்
ஊணொ டோசை யூறு மாகி யொன்றலாத மாயையாய்ப்
பூணி பேணி மாய னாகிப் பொய்யினோடு மெய்யுமாய்க்
காணி பேணு மாணியாய்க் கரந்து சென்ற கள்வனே.

---

## ௩ - வது சம்வாதம்.

கற்பனை யுலகெனக் காரணங் கூறல்.

சி : சத்திகற்பனையானால் அதன் காரிய வுலகும் கற்பனையா மன்றோ?

கு : தாயின் சாதியன்றி மக்களுக்கொரு சாதியின்றானாற் போன்று கற்பனையாய சத்தியின் காரியமான வுலகும் கற்பனையே.

சி . உலகு எங்ஙனம் கற்பனையாம்?

கு : விசாரித்துப் பார்க்குமிடத்துத் தனக்கென ஓர்வடிவின்றி யொழிதலின் கற்பனையென்பதற்குத் தடையென்ன?

சி : அஃதெப்படி கற்பனையாயிருக்கிறது?

கு : கட்டையிற்கள்வனும், கானலினீரும், கயிற்றிலரவும் போலக் கற்பனையாயிருக்கிறது.

சி : இங்ஙன முரைத்ததற்குப் பிரமாணங்களுண்டோ?

கு : உண்டு.

சி : அவை யெவை?

கு : கீழ் வருவனவே.

மகாநாராயண உபநிஷத் ௧ - வது அத்தியாயம்.

[illegible]

த்வதந்யத் கிஞ்சிந்நாஸ்தி யத்யத் ப்ரதீயதே தத்தத் பாத்யதே இதி நிஶ்சிதம் ||

(இ-ள்.) நீயேசகலமும், நீயேசகலமும், சகலமும் நீயே. நீயே மோக்ஷத்தைக் கொடுக்கிறவன். சகல மோக்ஷஸ்தானமும் நீயே. உனக்கன்னியமாக ஒன்றுமில்லை. எது எது தோற்றப்படுகின்றதோ அது அது பாதிக்கப்படுகின்றது (பொய்யாய்ப் போகின்றதென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது).

ஷ ௬-வது அத்தியாயம்.

ஸங்கோச விகாஸாத்மக மஹாமாயாவிலாஸ மாத்ர |
ஸர்வமித்யா வித்யா ப்ரபஞ்ச: |
பரமார்த்ததோ நாஸ்த்யேவ |
லக்ஷண ஶூந்யாநாதி மூலாவித்யா விலாஸமாத்ர: ||

(இ-ள்) சகலமான அவித்தியாப் பிரபஞ்சமெல்லாம் சுருங்குகிறதும் விரிகிறதுமாயிருக்கிற மகாமாயையின் விளையாட்டேயொழிய வாஸ்தவத்தில் யாதொன்றுமில்லை. லக்ஷண சூனியமான அநாதி மூலாவித்தையினுடைய விளையாட்டு பொய்.

சாஸ்வதி ரகஸ்யோபநிஷத்.

மயி ஜீவத்வமீஶத்வம் கல்பிதம் வஸ்துதோ ந ஹி ||

(இ-ள்.) பிரமமாகிய என்னிடத்தில் ஜீவத்தன்மையும் ஈசுவரத்தன்மையும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. வாஸ்தவத்திலொன்றுமில்லை.

ரிபுகீதை.

இதம் ப்ரபஞ்சம் யத்கிஞ்சித் யத்யஜ்ஜகதி த்ருஶ்யதே |
த்ருஶ்யரூபம் ச த்ருக்ரூபம் ஸர்வம் ஶஶவிஷாணவத் ||

(இ-ள்.) திருஸ்ய திருக்ரூபமாகிய இப்பிரபஞ்சமானது முயற்கோடுக்குச் சமானமாம்.

ஆத்மபோதம்.

தாவத்ஸத்யம் ஜகத்பாதி ஶுக்திகாரஜதம் யதா |
யாவந்ந ஜ்ஞாயதே ப்ரஹ்ம ஸர்வாதிஷ்டானமத்வயம் ||

(இ-ள்.) இப்பியிலே தோன்றிய வெள்ளியானது தெளிந்துணருகிறவரையில் மெய்போலத் தோன்றி விசாரமுகத்திற் பொய்யாய்ப் போகிறவண்ணம், சர்வாதிஷ்டானமாயும் அத்வ

யமாயும் விளங்கும் ஆத்மசொரூபத்தை யறிந்தே நாநாவாத் தோன்றுஞ் சகத்தானது பொய்யாய்விடும்.

மநீஷாபஞ்சகம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(இ-ள்.) நாநாவித நாம ரூப குண ஜாதி பேத விசித்திர கல்பிதாகாரமாய்விளங்கும் சர்வஜகத்தும் பிர்ம்ம சொரூபமேயன்றி வேறில்லையென்று குருமுகமாகத் தெரிந்துகொண்டவர்களே ஞானிகளாவர். பிரமசொரூபமாகிய ஆத்மாவைவிட அன்னியமாகச் சொல்வதியாவுங் கற்பனையாம்.

வாயுபுராணம் உத்தரபாகம் அத்-ங௨-சு. ௩௯.

[illegible]
[illegible]

(இ-ள்.) கயிற்றிற் பாம்பு, பாலைநிலத்தில் ஜலத்தோற்றம், ஆகாசத்தில் நீலத்தோற்ற மிவைக ளெப்படிக் கற்பனையோ அப்படியே எதனை யறியாததினாலே (பிர்ம்மத்தை யறியாத அஞ்ஞானத்தினாலே) அஸத்தாகிற இந்தப்பிரபஞ்சம் கற்பிக்கப்பட்டு விளங்குகிறது.

பிரமகீதை ஐதரேய வுபநிடதம்.

சொல்லுறு கின்ற கற்பிதப் பொருளிற் சொல்லள வுள்ளதாய் வுண்மைக், கில்லையா யிருக்குஞ் சிலபொருள் சொலவு மில்லையாஞ் சிலபொரு ளவைதா, னெல்லைதீர் வானு திகளுஞ்சுத் திகையி லிரசதா திகளு மாமுன்னைத், தொல்லையாம் பொருளுங் கற்பிதத் துண்மைப் பொருளையுஞ் சொல்லுநற் சுருதி.

சடகோபர் அ - ப - எ - தீ.

அருள்தா னினியா னறியே னவனென்னுள்
இருள்தா னறவீற் றிருந்தா னிதுவல்லால்
பொருள்தா னெனினிமூ வுலகும் பொருளல்ல
மருள்தா னீதோ மாயம யக்குமயக்கே.

ஷை அ - ப - அ - திருவாய்மொழி.

உணர்வி லும்ப ரொருவனை யவன தருளா லுறல்பொருட்டென்
உணர்வி னுள்ளே யிருத்தினே னதுவு மவன தின்னருளே

உணர்வு முயிரு முடம்புமற் றுலப்பி லனவும் பழுதேயாம்
உணர்வைப் பெறலூர்க் திறவேறி யானுக்தாறு யொழிக்தானே.

அத்துவித வுண்மை.

பழுதை யதனிற் றோன்றியிடும் பாம்பை யுள்ளபடி நோக்கிற்
பழுதை யாயே தோன்றியிடும் பாம்பு மதுவாய்விடு மஃதின்
பழுதில் சிவத்திற் றோன்றியிடும் பன்மை யுலகை நோக்கியிடின்
பழுதிற்சிவமே யாய்த்தோன்றும் பன்மையுலகு மதுவாய்ப்போம்.

கைவல்ய நவநீதம்.

கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க ளுவூர்
வானமை சூயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனமாந் தறிபு மானிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே யுன்னை நம்மானை மறந்தி டாயே.

பட்டணத்துப் பிள்ளையார்.

மையாடு கண்ணியும் மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
யையாகின் மாயை யுருவெளித் தோற்ற முகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனதுவே.

சிவானந்தமாலை.

எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னுணை
அங்கந் திரள்கருவி யாணவமாம்—பொங்குமிரு
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய்.

திருவம்மானை.

மெய்யான தொன்றுமே மெய்யான தம்மானை
மெய்யன்றி மற்றெல்லா மித்தைகா ணம்மானை

ஞானவாசிஷ்டம்.

தனைமுதலாயக் காண்கின்ற சகமெல்லா நீள்கனவாஞ் சகத்திற் றோன்று, மினையபொருள் களுங்கனவிற் காண்கின்ற பொருள்களா மென்று தேர்வா, யனையபொருள் களுங்காணு வறிவுமாத் திரம்வடிவா யனைத்து மேவி, வினையில்செறி வாய்க்கனமாய்ச் சுத்தமா கிப்பிரம வின்னுணை யுண்டாம்.

சூதசங்கிதை.

சத்தியமே யாயிருந்து மசத்துப் போன்றுந் தருமேக மாயிருந்து மனேகம் போன்றும், மொத்தசமு சாரமிலா திருந்து மற்ற

துள்ளதுபோலன் றுந்தோன்று நின்ற தம்மா, வந்தமுறு மப்பரம வான்மா வின்ற னகண்டசொரூ பத்தினதன் சத்தி யாலே, சுத்த சேதனவசேதனவி பாகத்தொகுமாறு கற்பிக்கப் பட்டதாலோ.

இதுவுமது.

துக்கமுறு மிராகத்திற் றுக்கமறும் விராகத்திற்
றக்கதிது வெனவுணர்ந்து தவிராத விராகமுற
மிக்கசரா சரமனைத்தும் விளம்புமனித் தியமேமென்
றொக்கவுணர்ந் தெம்பெருமா னுண்மையுணர்ந் திடவேண்டும்.

இலிங்கபுராணம்.

விரிந்த பூதங்களி னோடு விளம்பிந் தியங்கள் தத்துவங்கள்
திருந்தா அகங்கா ரத்தினோடு செறிமுக் குணங்கள் மாத்திரைகள்
பொருந்து மாயை சிவனிவை பொய்யாம் யாமே பொய்யின்றி
யிருந்தெவ் விடத்து நிலைபெறுவோ மதனாற் றுணு வெனவிசை
[ப்பர்.

தாயுமானவர் பாடல்.

பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்திஎன்
புந்திக்குளிந்தரஜாலஞ் சாதிக்குதே.
ஜகம்பொய்யெனத் தம்பட்டமடியே.
ஜகமனைத்தும் பொய்யெனவே.
பொய்யாருலகம்.

சித்தாந்தசிகாமணி சிவன் சகன்மயத்தலம்.

கயிற்றர விப்பி வெள்ளி குற்றியிற் கள்வன் மிக்க
வெயிற்படு கானற் றெண்ணீர் விண்ணிற்கந் தருவ வூர்போல்
பயிர்ப்பறு நித்த சச்சி தானந்த சிவத்தின் கண்ணே
செயப்படு பொருளாய்த் தோன்றுஞ் செப்பிய வுலக மன்றே.

திருப்போரூர்ச் சன்னதிமுறை.

கானலைநீ ரன்றென்று காட்டக்கண் டாளொருவன்
மானலநீ ரென்று மயங்கல்போல்—நீநலமாய்ப்
பொய்யுலகம் பொய்யாகக் காட்டியும்போ ரூரானே
மெய்யெனவுண் ணைந்தேன் மிக.

கூர்மபுராணம்.

ஆதலாற் பிரம மொன்றே நித்தியம் அலகைத் தேரிற்
பேதுறத் தோன்று நீரிற் பிரபஞ்ச மருண்டு தோன்றும்.

ரிபுகீதை.

சோத்திரமு மஃதுண்ருஞ் சத்தம் பொய்யே
  சுழல்தொக்கு மஃதுணரும் பரிசம் பொய்யே
நேத்திரமு மஃதுணரு முருவம் பொய்யே
  நிகழ்நாக்கு மஃதுணரு மிரதம் பொய்யே
காத்திரமார் மூக்குமதன் விடயம் பொய்யே
  கரணமுமவ் வதிட்டான தெய்வம் பொய்யே
கோத்திரமுஞ் சூத்திரமுங் குலமும் பொய்யே
  குறைவற்ற பரப்பிரம மொன்றே மெய்யாம்.

கனவினிடைக் கண்டபொரு ணனவின் கண்ணே
  கலங்காம லிருந்திடுமேற் சகத்துஞ் சத்தாம்
நனிவிரைவி லோடியிடு நதியின் வேக
  நலியாது நின்றிடுமேற் சகத்துஞ் சத்தாம்
செனனமுதற் குருடர்க்கு மணியி னேர்மை
  செவ்வியதாய்த் தெரிந்திடுமேற் சகத்துஞ் சத்தாம்
அனியமற்று விசாரிக்கிற் சகத்தே யில்லை
  யகண்டவடி வானபர மொன்றே யுண்மை.

## ௪ வது சம்வாதம்.

### அநாதிமலத்தா லழுந்த முயிரேனல்.

சி: சுவாமி! உலகுகற்பனையாயின் பந்தமும் கற்பனையல்லவா?

கு: ஆம்.

சி: யாரிடத்துக் கற்பனையா யிருக்கிறது?

கு: பிரமத்தினிடத்து.

சி: அங்ஙனமாயின் பந்தத்தை நீக்க முயலுபவர் சீவர்களா? பிரமமா?

கு: சீவர்களே.

சி: பந்தம் பிரமத்தினிடத் திருக்குமாயின் அதனைச் சீவர்கள் நீக்கமுயலுவ தெங்ஙனம் பொருந்தும்?

கு: பந்தவடிவமாயை பிரமத்தினிடத்துக் *கற்பனையாயிருக்கினும் மாயாசகிதராய்ப் பிறப்பிறப்பாதி துவந்துவங்களை யடை

யும் சீவர்களே அதைக் குருமுகமாகவிசாரித்து நிர்விகற்ப சமாதி வாயிலாக வொழிக்கவேண்டும். பந்தவடிவமாயை பிரமத்தினிடத்து வானவளைவுபோன்று கற்பனையாயிருத்தலால் அப்பந்தத்தால் யாதொருதுவந்துவமு மதற்கில்லை. ஆரோபத்தினால் அதிஷ்டானத்திற்கு யாதொரு கெடுதியு மின்றென்பது கயிற்றிலாரோபமாயுள்ள வரவினால் அதிஷ்டானமாய கயிற்றிற்கு யாதொரு கெடுதியுமில்லாமையினால் நன்குவிளங்கும். கயிற்றிற் கற்பனையாயுள்ள வரவுபோன்று பிரமத்தில் கற்பிதமாயுள்ள உலகின் ஒருபகுதியாய சீவர்களே பிறப்பாதி துவந்துவங்களை யடைந்திருப்பதினால் அவர்களே மாயையின் அபிமான ஆசிரயமுடையவர்கள். ஆசிரயம் முக்கிய ஆசிரியமென்றும் அபிமான ஆசிரியமென்றும் இருவகைப்படும். பணத்திற்கு முக்கிய ஆசிரயம் பெட்டி. நான் தனிகன் என்னுமிடத்தில் பணத்திற்கு நான் என்பது அபிமான ஆசிரயமாம். காரணகாரியவாதமாக விசாரித்துப்பார்க்குமிடத்து மாயையென்பது பாரமார்த்திகப் பொருளாகாது சத்தியாக முடிதலின் அஃதொன்றை யாசிரயித்திருக்கவேண்டும். அதற்காசிரயம் யாதென்று விசாரித்துப்பார்க்குமிடத்து நிராலம்போபநிஷத்து "பிரமசக்தி மாத்திரத்தினாலே பல விசித்திரமான ஜகந்நிர்மாண ஸாமர்த்தியமுடைய புத்திசுவரூபமாகிய பிரமத்தினுடைய சக்தி பிரகிருதி (மாயை)" என்றும், சர்வசாரோபநிஷத்து "அநாத்துமாவுக்கு மூலமானதெதுவோ அதுதான்மாயை; அவள் ஆகாயத்தில் மேகம்முதலியவைபோல் பிரமத்தினிடத்திற் காணப்படுகிறாள்" என்றும் கூறுகின்றபடி பிரமமேயாம். சீவன் நான் அஞ்ஞானி யென்கிறபடியினால் அவன் அபிமான மாசிரயமாவன், நான் அஞ்ஞானியென்னும் அனுபவம் சீவர்களுக்கே உரித்தாயிருத்தலால் அவர்களே பந்தவடிவமாயையை யொழிக்க முயலல்வேண்டுமென்க.

சி: அங்ஙனமாயின் சீவர்களின் பந்த விவகாரம் ஆதியென்றல்லவோ ஏற்படும்?

கு: வேதாந்த சித்தாந்தத்தை யறியாதவர்கள் தாம் இவ்வாறு வினவுவர்? "அதுதானெப் படியென்னுக்கா லனாதியாஞ் சீவரெல்லாம்" என்று கைவல்லியங்கூறுவதால் சீவர்கள் அநாதியென்பது பெறப்படும். அஞ்ஞானம் நாசமானபிறகு சீவர்களுண்டென்பதற்கு யாதொரு பிரமாணமு மின்மையால், அஞ்ஞானமுள்ள

போதுதான் சீவர்களுண்டு. அஞ்ஞானம் வானவனாவுபோன்று பிரமத்தில் அனுதிகற்பிதமாயிருத்தலால் சீவர்களும் அநாதியே. பந்தமும் அனுதியே. இவ்விஷயத்தையின்னும்நன் குவிளக்குவாம். பிரமம, ஈசுவரன், ஜீவன், மாயை, மாயைக்கும்பிரமத்திற்குமுள்ள கற்பித சம்பந்தம், இவைகளின் கற்பிதபேதம் இவ்வாறும் சொரூபத்தில் அனுதியாம். உற்பத்தியில்லாதவஸ்து சொரூபத்தினுல் அனுதியென்று சொல்லப்படுகின்றது. மேற்கூறிய ஆறும் உற்பத்தியின்றி யிருத்தலால் சொரூபத்தினுல் அனுதியாம்.

பிரமம் மாயைக்கு அதிஷ்டானமாயிருத்தலால் அம்மாயையினின்று முண்டாகின்றதில்லை. ஈசுவராதிகள் பிரமத்தை யன்றிச் சித்திக்காதபடியினுல் இவைகளினின்றும் பிரமமுண்டாகின்றதில்லை. ஆதலால் பிரமம் அனுதியாம். பிரமம் நிர்விகாரமாயிருத்தலால் பிரமத்தினின்றும் மாயை யுண்டாகின்றதில்லை. ஆதலால் அதனுதியாம். சீவேசுவரர்கள் கேவலம் பிரமத்தினின்றாவது கேவலமாயையினின்றாவது உண்டாதலில்லை. ஜீவன் ஈசுவரனிடத்திருந்தாவது ஈசுவரன் ஜீவனிடத்திருந்தாவது உண்டாதலில்லை. மாயைக்கும் பிரமத்திற்குமுள்ள கற்பித சமபந்தத்தால் சீவேசுவரபாவங்கள சித்திக்கின்றன. பிரமம் அனுதியாயிருப்பதாலும் மாயையும் அப்படியே யிருப்பதாலும் இவைகளின் சம்பந்தமும் அனுதியேயாம். இச்சம்பந்தத்தால் சித்திக்கும் ஜீவேசுவர பாவங்களும் அனுதியேயாம். இவைகளின் கற்பிதபேதமும் உற்பத்தியின்றி யிருத்தலால் இதுவும் அனுதியேயாம். கயிற்றைத் தவிர அரவின்மைபோன்று பிரமத்தைத்தவிர இவை சித்திக்காதபடியினுல் பிரமமே சீவேசுர சகத்தாக விளங்குகின்றதென்று சித்தித்தது. சித்திக்கவே, சீவர்கள் அனுதிபந்தமுடையவர்களென்பது பெறப்பட்டது. பந்தமுள்ளபோது தன்னை (சிசுவடிவை) யுணர்தலின்மையின், தன்னை மறந்தமையே பந்தமெனப்படுகின்றது. பந்தமனுதியா யிருத்தலின் தன்னைமறந்ததும் அனுதியேயாம. ஆகவே, பந்தம் எவ்வாறு வந்ததென்று அதனாதியை வினவுதல் பொருந்தாதென்பதாம்.

சீ: இதற்குப் பிரமாணமுண்டோ?

கு: கீழ்வருவனவே.

**கவுடபாதகாரிகை ஆகமப்பிரகாணம்.**

அநாதி மாயயா ஸுப்தோ யதா ஜீவ: ப்ரபுத்யதே ।
அஜமநித்ரமஸ்வப்நமத்வைதம் புத்யதே ததா ॥

(இ - ள்.) (ஆதியில்லாத) அஞாதியவித்தையினுல் உறங்கிக்கிடக்கிற அல்லது சம்சாரத்தை யடைந்திருக்கிற சீவன் எந்தக்காலத்தில் விழித்துக்கொள்ளுகிறுனே அப்போது ஜன்மவிகார மில்லாததும் நித்திரை யில்லாததும் ஸ்வப்ன மில்லாததும் துவிதமற்றதுமாய சொரூபத்தை அறிகிறுன்.

பகவத்கீதை.

ப்ரக்ருதிம் புருஷம்சைவ வித்³த்⁴யநாதீ³ உபா⁴வபி ||

(இ-ள்.) சிதாபாச சீவபிரகிருதிகளிரண்டும் இந்தக்காலத்தில் சிருஷ்டிக்கப்பட்டவையெனச் சிருஷ்டிக்காலத்தை நிச்சயித்துச் சொல்வதற்குச் சாத்தியப்படாமல் அளவுகடந்திருப்பதால் அநாதியென்றறிந்துகொள்.

பைங்களோபநிஷத் உஅ.

அவ்யக்தலேஶாஜ்ஞாநாச்சா²தி³த பாரமார்தி²க ஜீவஸ்ய |
தத்த்வமஸ்யாதி³ வாக்யாநி ப்³ரஹ்மணைகதாம் ஜகு³꞉ ||

(இ - ள்.) அவ்வியக்த லேசமாகிற அக்ஞானத்திஞலே மறைக்கப்பட்ட பாரமார்த்திக ஜீவனுக்குத் தத்துவ மஸிமுதலிய வாக்கியங்கள் பிர்ம்மத்துடன் ஐக்கியத்தைச் சொல்லுகின்றன.

நுபுகீதை.

அநாதி³மாயயா ஸுப்தோ யதா³ ஜீவ꞉ ப்ரபு³த்⁴யதே |
அஜமநித்³ரமஸ்வப்நமத்³வைதம் பு³த்⁴யதே ததா³ ||

(இ - ள்.) அநாதியாகிய மாயையிஞல் நித்திரைசெய்யும் (தன்னைமறந்த) ஜீவனுனவன் எப்பொழுது சாக்கிரதையை (தன்னை) யடைவானே அப்பொழுது பிறவியற்றதாயும் துவிதமற்றதாயும் சொப்பன மற்றதாயும் நித்திரை யற்றதாயும் விளங்கும் துரியசொரூபத்தை அறிகிறுன்.

நிராலம்போபநிஷத்.

அநாதி³வித்³யா வாஸநயா ஜாதோஹமிதி யாவத் ஸ ஸங்கல்போ ப³ந்த⁴꞉ | பித்ருமாத்ரு ஸஹோத³ர தா³ராபத்ய க்³ருஹாராம க்ஷேத்ராதி³ ஸம்ஸாராவரண ஸங்கல்போ ப³ந்த⁴꞉ | கர்த்ருத்வாத்³யஹங்கார ஸங்கல்போ ப³ந்த⁴꞉ | அணிமாத்³யஷ்டைஶ்வர்யாஶா ஸித்³த⁴ ஸங்கல்போ ப³ந்த⁴꞉ | தே³வமநுஷ்யாத்³யுபாஸநா காம ஸங்கல்போ ப³ந்த⁴꞉ | யமாத்³யஷ்டாங்க³ யோகா³ ஸங்கல்பாதி³

𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍋 𑌬𑌂𑌧𑌃| 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌧𑌰𑍍𑌮𑌕𑌰𑍍𑌮 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍋 𑌬𑌂𑌧𑌃| 𑌆𑌜𑍍𑌞𑌾𑌭𑌯 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍋 𑌬𑌂𑌧𑌃| 𑌯𑌜𑍍𑌞𑌵𑍍𑌰𑌤𑌤𑌪𑍋𑌦𑌾𑌨 𑌵𑌿𑌧𑌿𑌵𑌿𑌧𑌾𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍋 𑌬𑌂𑌧𑌃| 𑌕𑍇𑌵𑌲𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍋 𑌬𑌂𑌧𑌃| 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰 𑌸𑌂𑌭𑌵𑍋 𑌬𑌂𑌧𑌃||

(இ - ள்.) அநாதி அஞ்ஞான வாசனையினுலே நான் பிறந்தேன் என்பது முதலிய எண்ணம் பந்தம். தகப்பன் தாய் சகோதரன் பெண்சாதி பிள்ளை வீடு தோட்டம் பூமி முதலியவைகளிலே 'என்னுடையது' என்கிற சம்சாரமாகிய அஞ்ஞான விஷயமான மனோவியாபாரம் பந்தம். கர்த்த்ருத்வாதி அகங்கார சங்கற்பம் பந்தம். அணிமாதி அஷ்டைசுவரியம் சித்திக்கவேண்டுமென்கிற ஆசை பந்தம். தேவமநுஷியாதிகளை உபாசிக்கவேண்டுமென்கிற இச்சையாகிற சங்கற்பம் பந்தம். யமம் முதலான அஷ்டாங்க யோகாப்பியாசமாதி செய்யவேண்டுமென்கிற சங்கற்பம் பந்தம். வருணாசிரம தருமகருமசங்கற்பம் பந்தம். ஆக்ஞை, பயம், சம்சயம் இவைகள் ஆத்மகுண மென்கிற சங்கற்பம் பந்தம். யக்ஞம், விரதம், தபசு, தானம் இவைகளுடைய விதியை அறிதல் (அவைகளை) நடத்தல் இந்தவிஷயமான மனோவியாபாரம் பந்தம். மோக்ஷ மாத்திரம் வேண்டுமென்கிற சங்கற்பமே பந்தம். ஸங்கற்ப மாத்திரத்தாலேயே பந்த முண்டாகிறது.

சூதசங்கிதை ஜாதிவரலாறுரைத்த அத்தியாயம்.

உயிரெலாந்தம துண்மையை யறியாம லூறுமறைப் பனுதியே யுள்ள, செயிரினு லுடனெனுமபி மானஞ் சேர்ந்ததிப் பிந்தவஞ் ஞானம், பயிலும்வே தாந்தத் தெளிவுறா லோர்ந்து பத்தியாம் பெருவழியொழுகின், மயிலியல் பாக னருளுறு மதனல் வாய்த்திடு மனுபவஞானம்.

இதுவுமது.

பாச ஞானம் பசுஞானம் பாறி யொழியப் பதிஞான
நேச முடையோ னல்லாக்கா னிகழும் பவமா யிரங்கோடி
பேச வெடுத்தா னேயெனினும் பெயர்ந்து மாயு மோசெம்பின்
வாச மான காளிதம்போ லனுதி தொடுத்து வரும்பாசம்.

ஷை சிவமான்மியகாண்டம் காலவளவையுரைத்த வத்தியாயம்.

நீளவான்மாவி னுண்மையை மறைத்து நிற்றலி னுற்றமமென்றும், வாளவிர் வித்தை யென்னுஞா னத்தை மறைத்தலி

னவித்தையே யென்றும், கோளுறஞ் ஞான காரண மாகிக் குலவ வின் மோகமே யென்று, மாளுறு சத்து விலக்ஷண மாகி யமைத ஒி ளுலசத் தென்றும்.

இதுவுமது.

மன்னியவான் மாக்களெங்குஞ் சிவசொரூப மென்றே மதித் திடார் மாயையான் மறைப்புண்டு நானீ, யென்ன மிகுபேதமே குறித்துழல்வர்.

சடகோ (ரு) ப. (ச) திரு.

ஊரெல்லாந் துஞ்சி யுலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாந் தேறியோர் நீளிரவாய் நீண்டதால்
பாரெல்லா முண்டநம் பாம்பணையான் வாரானல்
ஆரெல்லே வல்வினையே னாவிகாப் பாரினியே.

பெரியாழ்வார் (மூ-ப-கூ-தி.)

துன்னிய பேரிருள் சூழ்ந்துல கைமூட
மன்னிய நான்மறை முற்று மறைந்திட
பின்னிவ் வுலகினில் பேரிரு ணீங்கவன்
றன்னமதானமே அச்சோவச்சோ அருமறைதந்தானே அச் [சோவச்சோ.

கர்நாமிருதம்.

அனாதியின் மலம்வந் தென்னை யடுத்தது மதற்கு முன்னே
மனாதிக ளிலாத வாறு மலடிபான் மைந்தன் போலத
தனாதின் சத்தி யாலே தனுகர ணங்கள் வந்து
பினாதிற் பெற்றுப் பின்னைப் பிரிந்ததும் பேசல் வேண்டுஞ்
செனாதிபன் வழிபட் டேற்றுந் திருப்புலி வனத்து ளானே.

சத்தியஞானபோதம்.

செயற்கை யியற்கை தெரிக்குங் காலை
செயற்கை புயிர்க்குத் திரிமல மென்னில்
வெண்மடிக் கழுக்கு விரவுந் தன்மை
போல நீங்கிப் புகுவன வதுவே.
இயற்கை யுயிருக் கிருண்மல மெண்ணி
லிருந்தை கறுப்பு மெழிற்பால் வெண்மையு
மிடையில் விடாதென் றிசைத்தனர் புலவ
ராயி னனாதி செயற்கை யாமே.

வேறு.

பொருளது வாய்நின்ற புண்ணிய னெந்தை
யருளது போற்று மடியவ ரன்றிச்
சுருளது வாய்நின்ற துன்பச் சுழியின்
மருளது வாச்சிந்தை மயங்கு கின்றாரே.

ஞானவாசிஷ்டம் பாசவிபாசன் கதை.

ஆசைவன் பாசத் திரளினாற் கட்டுண் டரும்பிணி யீக்கடிக் கனுங்கி, யேசுறு போகக் கதைகளான் மொத்துண் டிச்சைமுட் கோலினா லுலைந்து, காசுறு கருமச் சேற்றிலே யழுந்திக் கடுஞ்சகக் காட்டிலே சுழன்று, வீசுமா மோகத் தளிர்நிழற் றுயிலும் வீரனே சிவனா மெருது.

சிவாகமகச்சிமாலை.

மாயா படலத்தி னுள்மறைப் புண்டிவ் வழிதிறம்பி
காியா புரியடைந் தந்தோ கவலைபெண் கையகப்பட்
டோயாப் பிணிபகப் பெற்றே துயர்த்தடி யூன்றுமெனக்
கேயாப் படல மிரிப்பதென் றோகச்சி யேகம்பனே.

திருமந்திரம் கேவலசகலசுத்தம்.

அணுதிபசு வியாத்தி யாகு மிவனை
யணுதியில் வந்தமல மைந்தா லாட்டி
யணுதியிற் கேவல மச்சக லத்திட்
டணுதி பிறப்பறச் சுத்தத்து ளாகுமே.

இதுவுமது.

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தனுகர ணங்களாம்
தன்னின் மறைந்தது தனுகர ணங்களே.

இதுவுமது.

பதிபசு பாச மெனப்பகர் மூன்றும்
பதியினைப் போற்பசு பாச மனாதி.
அறிவறி வென்ற வறிவு மனாதி
யறிவினைக் கட்டிய பாச மனாதி
அறிவிற் கறிவாம் பதியு மனாதி
யறிவு பதியிற் பிறப்பறுந் தானே.

மணவாள மாமுனிகளருளிய ஆர்த்திப்ரபந்தம்.

நாராய ணன்றிருமா லானாமென் னும்முறவு
ஆராயி னெஞ்சே யநாதியன்றோ—சீராரும்
ஆசா ரியனாலே யன்றோநா மூய்ந்ததென்று
கூசாம லெப்பொழுதும் கூறு.

சுத்தசாதகம்.

ஏகமா யசையாத் தற்பர லிங்க மிலிலையிற் சாமனே கமதாய், மோகமா மிருளா யவ்விரு ளதனின் மூடமாய்ச் சிழிதுநா ளிருந் திருஞ், சோகமா மிக்க மருளதா யதனிற் றுவக்குண்டு சிழிதுநா ணடித்தும், பாகமா மோவா யதிற்சின்ன ணடித்தும் பண்டுபோ னின்றிடு மன்றே.

---

## ரு-வது சம்வாதம்.

### உலகோற்பத்தியி னுண்மையைக் கூறல்.

சி: காரியமென்பது தொடக்க முடையதன்று?

கு: ஆம்.

சி: உலகம் காரியமென்று தேவரீர் முன்னரருளிச் செய்ததை விரித்துக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: ஒரே வேதாந்த சித்தாந்தத்தில் அதிகாரிகளின்நிமித்தம் மூன்று பட்சங்கள் சொல்லப்படுகின்றன. அவை முறையே கிரமசிருஷ்டி, யுகபத்சிருஷ்டி, அஜாதவாதமென்பனவாம். கனிஷ்டாதிகாரிக்குக் கிரமசிருஷ்டியும், மத்திமாதிகாரிக்கு யுகபத்சிருஷ்டியும், உத்தமாதிகாரிக்கு அஜாதவாதமும் சொல்லப்படும்.

சி: கிரமசிருஷ்டியை விவரிக்குமாறு வேண்டுகிறேன்.

கு: பின்னம், அபின்னம், பின்னாபின்னம்; சத்து, அசத்து, சதசத்து; சாவயம், நிரவயம், சாவய நிரவயம் என்பனவாகாது அநிர்வசநீயமாய்ப் பிரமத்தின்கண் கயிற்றின்கண் அரவாதற்குரிய சத்திபோன்றிருப்பது மாயையாம். ஆவரண விட்சேபசத்திகளை யுடைய அநாதி (வியாவகாரிக) பாவபதார்த்தம் மாயையென்பது அதன் லட்சணம்.

எச்சமயத்து ஈசுவரன் சீவர்களுக்குக் கன்மபலங்கொடுக்கச் சன்முக(எதிர்முக)மாகின்றாரோ அச்சமயத்துச் சிருஷ்டியுண்டாகின்றது. ஈசுவரன் சீவர்களுடைய கன்மத்தை யனுசரித்து உயர்ந்த அல்லது தாழ்ந்த போகங்களை யவர்கள் அனுபவிக்குமாறு சிருஷ்டி பண்ணுமிடத்தது மாயையின் விட்சேபசத்தியினின்று சத்தகுணத்தோடு கூடிய சூக்கும ஆகாசமும், அவ்வாகாசத்தினின்று பரிசகுணத்தோடு கூடிய சூக்குமவாயுவும், அவ்வாயுவினின்று

ரூபகுணத்தோடு கூடிய சூக்ஷ்மதேயும், அத்தேயுவினின்று ரசகுணத்தோடு கூடிய சூக்ஷ்ம அப்புவும், அவ்வப்புவினின்று கந்தகுணத்தோடு கூடிய சூக்ஷ்மப் பிருதிவியுமுண்டாயின. இச் சூக்ஷ்ம பூதங்களின் சத்துவகுணத்தின் சமஷ்டியிலிருந்து அந்தக்கரணங்களும், வியஷ்டியிலிருந்து ஞானேந்திரியங்களும் இராசதகுணத்தின் சமஷ்டியிலிருந்து பிராணாதிவாயுக்களும், வியஷ்டியிலிருந்து கன்மேந்திரியங்களு முண்டாயின. அந்தக் கரணசதுஷ்டயம், ஞானேந்திரியபஞ்சகம், பிராணாதிபஞ்சகம், கன்மேந்திரியபஞ்சகம் ஆகிய இவைகளின் சமுதாயம் சூக்ஷ்ம சரீரமாம். மிகுசின தாமதகுணத்தினின்றும் ஸ்தூலபூதமுண்டாயிற்று. குணமென்ற விடத்தெல்லாம் குணசகித சூக்ஷ்மபூதமென்றுகொள்க. தாமதகுண சகிதமான சூக்ஷ்மபூதமைந்தையும் ஒவ்வொன்றிரண்டாகப்பகுத்து முதற் பாதியைந்தையும் ஒன்றை நாலாக்கி இரண்டாம் பாதியைந்தனுள் தன்னம்சத்துடன் கூட்டாமல், மற்ற நான்கு பூதத்துடனும் பூதத்திற்கரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கிறது பஞ்சீகரணமெனப்படும். இவ்வாறு பஞ்சீகரணமாயபூதமே ஸ்தூலபூதமாம்.

சி: பஞ்சீகரணத்தை விரிவாய்க் காட்டுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: ஆகாசத்தை யிரண்டு பாகமாக்கி, ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப்பாகத்தை நான்குபாகஞ் செய்தும், வாயுவை யிரண்டுபாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப்பாகத்தை நான்கு பாகஞ்செய்தும், தேயுவை இரண்டுபாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப்பாகத்தை நான்கு பாகமாகச் செய்தும், அப்புவை யிரண்டுபாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப்பாகத்தை நான்குபாகஞ் செய்தும், பிருதிவியை யிரண்டுபாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப்பாகத்தை நான்குபாகஞ்செய்தும் விட்டால் ஒவ்வொரு பூதமும் ஐந்தைந்து பகுப்பினதாம். இப்பூதங்களுள் ஆகாயத்தின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையும் சேர்க்காமல், ஒன்றைவாயுவின் அரைப்பாகத்தோடும், மற்றொன்றைத் தேயுவின் அரைப்பாகத்தோடும், இன்னொன்றை யப்புவின் அரைப்பாகத்தோடும், பிறிதொன்றைப் பிருதிவியின் அரைப்பாகத்தோடுஞ் சேர்த்தல்வேண்டும்.

இவ்வாறே வாயுவின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையும் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப்பாகத்தோடும், தேயுவின் அரைப்பாகத்தோடு அதனது மற்றையரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப்பாகத்தோடும், அப்புவின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப்பாகத்தோடும், பிருதிவியின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாயமுதலியவற்றின் அரைப்பாகத்தோடுஞ் சேர்த்தல்வேண்டும். இவ்வாறு சேர்த்தல்தான் பஞ்சீகரணம். இங்ஙனம் பஞ்சீகரணப்படுதலால் ஸ்தூல பூதங்களும், அவற்றால் பூலோகம், புவலோகம், சுவர்லோகம ஜனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோக மென்றேழு மேலுலகங்களும், அதல, விதல, சுதல, தராதல, ரஜாதல, மகாதல, பாதாள மெனறேழு கீழுலகங்களும், அவ்வுலகங்களுள் ஜீவர்களுடைய போகத்திற்குத் தகுதியான அன்னாதிகளும், போகத்திற்கு ஸ்தானமான தேவ மனுஷ்ய பசு பட்சி முதலிய ஸ்தூலசரீரங்களு முண்டாயின வென்னும பட்சம கிரம சிருஷ்டியாம. பிரம விசாரத்தினால் யதார்த்த ஞானமுண்டாகாதவனுக்குக் காரியத்தைக் காரணத்துளடக்குதல்வடிவ லயசிந்தனையி னிமித்தம் உற்பத்திக் கிரமம் சொல்லப்படுகின்றது.

சி: யுகபத் சிருஷ்டியைக் கூறவேண்டும்.

கு: சொப்பனவுலகும், அலைநுரையாதிகளும் முறையே கிரமமின்றி மனத்தினின்றும் சமுத்திரத்தினின்று முண்டாவது போன்று, தேகாதிப் பிரபஞ்சம் கிரமமின்றிப் பிரமத்தினின்று முண்டாயிற்றென்னும் பட்சம் யுகபத் சிருஷ்டியாம்.

"நிருமல சிவன்றன் மாயையாற் கனைப்போ னிருமிக்கப் பட்டன வெல்லாம், மருவுகா ரியங்கா ரணத்திற்கு வேறு காமையின் மாயைரு பந்தான், பெருகுமா யையுமற் றதிட்டான மாகும் பிரமத்தின வேறன்ன தன்று" என்று சூதசங்கிதையும்,

"நுரையுந் திரையு நொட்புறு கொட்பும், வரையில் சீகரவாரியுங் குரைகடற், பெருத்துச்சிறுத்தும் பிறங்குவ தோன்றி, யெண்ணில வாகி யிருங்கட லடங்குந், தன்மை போலச் சராசர மனைத்தும், நின்னிடைத் தோன்றி நின்னிடை யடங்குநீ, யொன்றினுந் தோ

7345

ன்றே பொன்றினு டைங்காய்" என்று பட்டணத்தாருங் கூறுவ திங்கறிதற்பாற்றும். விரைவில் உலகம் மித்தையெனத் தோன் றற்கு யுகபத் சிருஷ்டி சொல்லப்படுகின்றது.

சி: அஜாதவாத மென்பதென்ன?

கு: உண்மையாகவுள்ளது பிரமமே; தேகாதிப்பிரபஞ்சம் எக்காலத்து மின்றெனும் பட்சம் அஜாதவாதமாம்.

"சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே, பவமே யொழிக்கும் பரமார்த்தம்" என்று பிரமகீதை கூறுவதறிக.

சமாதிநிலை ஸ்திரப்படுமாறு அஜாதவாதம் சொல்லப்படுகின்றது.

கிரமசிருஷ்டியில் மூன்றுசத்தும், யுகபத் சிருஷ்டியில் இரண்டு சத்தும், அஜாதவாதத்தில் ஒரேசத்தும் சொல்லப்படுகின்றன.

அவை: பாரமார்த்திகசத்து, வியாவகாரிகசத்து, பிராதிபாசிகசத்து என்பன. எது முக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப் படுகிறதின்றோ அது பாரமார்த்திகசத்தாம். அத்தகையது பிரமமாம். எது ஆத்மஞானத்தினாலன்றி வேறெதனாலும் பொய்யென்று நிச்சயிக்கப்படுகிறதில்லையோ அது வியாவகாரிகசத்தாம். அத்தகையது தேகாதிப் பிரபஞ்சமாம். எது ஆத்மஞான மில்லாமலே பொய்யென்று நிச்சயிக்கப்படுகின்றதோ அது பிராதிபாசிகசத்தாம். அத்தகையது கானனீர் முதலியனவாம்.

எதில் ஒரேபாரமார்த்திக சத்து அங்கீகரிக்கப்படுகின்றதோ அது அஜாதவாதமாம். எதில் பாரமார்த்திக சத்து பிராதிபாசிக சத்தென்னு மிரண்டு மங்கீகரிக்கப் படுகின்றனவோ அது யுகபத் சிருஷ்டியாம்; எதில் பரமார்த்திகசத்து, வியாவகாரிகசத்து, பிராதிபாசிகசத்தென்னு மூன்று மங்கீகரிக்கப்படுகின்றனவோ அது கிரமசிருஷ்டியாம்; இங்குக் கூறிவந்த மூன்று பட்சங்களுள் அஜாதவாதமே ஸ்திரவாதமாதலால் அஃதேயுண்மையாம்; ஏனையவை கற்பிதமாம்.

"பிறந்ததுண் டானலன்றோ பிறகுசா வதுதா னுண்டாம்" என்னும் இக்கைவல்லியச் செய்யுளில் இம்மூன்றுபட்சமு மிருத்தலை யூகித்துணர்க. அஜாதவாதத்தைப்பற்றி விரிவா யறியவிரும்புவோர் மகான்-சை-இரத்தினசெட்டியார் எழுதியுள்ள தத்துவவா தத்திற் காண்க.

சி: கிரமஸிருஷ்டியை இன்னும் நன்றாய் விளக்கக்கூடிய பிரமாணங்களுண்டா?

கு: உண்டு.

சி: அவையாவை.

கு: கீழ்வருவனவே.

### த்ரிசிகி பிராமணோபநிஷத்.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌨𑍍𑌮𑌹𑌤𑌃 𑌮𑌹𑌤𑍋𑌽𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌃 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌾𑌤𑍍 𑌪𑌞𑍍𑌚𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌪𑌞𑍍𑌚𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌞𑍍𑌚𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑍇𑌭𑍍𑌯𑍋𑌽𑌖𑌿𑌲𑌂 𑌜𑌗𑌤𑍍॥

(இ - ள்.) பிரம்மத்திலிருந்து அவ்யக்தமும், அதனால் அகங்காரமும், அதனால் பஞ்சதன் மாத்திரைகளும், அந்தச் சூட்சுமங்களாகிய பஞ்சதன்மாத்திரையினால், ஆலவாகாசாதி பஞ்சபூதங்களும், அவற்றினால் பிரபஞ்சமுமுதித்தது.

### பைங்களோபநிஷத்.

𑌸𑌦𑍇𑌵 𑌸𑍋𑌮𑍍𑌯𑍇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍। 𑌤𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌮𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌸𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍇𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮। 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌮𑌰𑍁𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌕𑌾𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌾𑌦𑍌 𑌜𑌲𑌰𑍌𑌪𑍍𑌯𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍇𑌖𑌾𑌦𑌿𑌵𑌲𑍍𑌲𑍋𑌹𑌿𑌤𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑌗𑍁𑌣𑌮𑌯𑍀 𑌗𑍁𑌣𑌸𑌾𑌮𑍍𑌯𑌾 𑌅𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌚𑍍𑌯𑌾 𑌮𑍂𑌲𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑌾𑌸𑍀𑌤𑍍। 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌮𑍍𑌬𑌿𑌤𑌂 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌿 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌮𑌾𑌸𑍀𑌤𑍍। 𑌸𑌾 𑌪𑍁𑌨𑌰𑍍𑌵𑌿𑌕𑍃𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍋𑌦𑍍𑌰𑌿𑌕𑍍𑌤𑌾𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌵𑌰𑌣𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑌾𑌸𑍀𑌤𑍍। 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌮𑍍𑌬𑌂 𑌯𑌤𑍍𑌤𑌦𑍀𑌶𑍍𑌵𑌰𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌮𑌾𑌸𑍀𑌤𑍍। 𑌸𑌸𑍍𑌵𑌾𑌧𑍀𑌨𑌮𑌾𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌲𑌯𑌾𑌨𑌾𑌮𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑌾 𑌜𑌗𑌦𑌙𑍍𑌕𑍁𑌰𑌰𑍂𑌪𑍋 𑌭𑌵𑌤𑌿॥

(இ - ள்.) இந்தப் பிரபஞ்சமானது சத்தாகவே முதலிலிருந்தது. அது நித்தியமுக்தமாகவும், (எப்போதும் பிரகிருதி சம்பந்தமில்லாததாகவும்), விகாரமடையாததாகவும், சத்திய ஞாநாநந்தமாகவும், பரிபூர்ணமாகவும, சாசுவதமாகவும், இரண்டாவதற்ற ஒன்றானதாகவு மிருக்கிற பிர்ம்மமென்று சொல்லப்படுகிறது. அதனிடத்தில் மருபூமியில் (பாலைநிலத்தில்) ஜலம், கிளிஞ்சலில் வெள்ளி, கட்டையில் புருஷன், ஸ்படிகத்தில் வர்ணம் முதலிய

வைப்போலச் சிவப்பு வெளுப்பு கருப்பு (என்னும்) இந்தக்குணமயமானதும், ஏற்றக்குறைவின்றி ஒவ்வொன்றும் சமமாயிருக்கிறகுண சுவரூபமானதும் வாக்குக் கெட்டாததுமாகிய மூலப்பிரகிருதி யிருந்தது. அதனிடத்தில் பிரதிபிம்பித்தது எதுவோ அது சாக்ஷி சைதன்னியமாயிருக்கிறது. இது (மூலப்பிரகிருதி) விகாரமடைந்து சத்துவாதிக்கமுள்ள அவ்வியக்தமென்கிற பெயரையுடைய ஆவரணசக்தியாயிற்று. அதில் பிரதிபலித்ததெதுவோ அது ஈசுவர சைதன்னியமாயிருக்கிறது. அவன் (ஈசுவரன்) மாயையைச் சுவாதீனமா யுடையவனும் சர்வஞ்ஞனும் சிருஷ்டி ஸ்திதி லயங்களுக்காதி கருத்தாவாயும் ஜகத்திற்கு மூலையாயு மிருக்கிறான்.

இதுவுமது.

ஸ்வஸ்மிந் விலீநம் ஸகலம் ஜகதாவிர்பாவயதி | ப்ராணிகர்மவஶாதேஷ படோயத்வத் ப்ரஸாரித: | ப்ராணிகர்மக்ஷயாத்புந ஸ்திரோபாவயதி | தஸ்மிந்நேவாகிலம் விஶ்வம் ஸங்கோசித படவத்வர்த்ததே | ஈஶாதிஷ்டிதா வரணஶக்திதோ ரஜோத்ரிக்தா மஹதாக்யா விக்ஷேபஶக்திராஸீத் | தத்ப்ரதிபிம்பிதம் யத்தத்திரண்யகர்ப்பசைதந்யமாஸீத் | ஸமஹத்தத்வாபிமாநீ ஸ்பஷ்டாஸ்பஷ்ட வபுர்பவதி | ஹிரண்யகர்ப்பாதிஷ்டித விக்ஷேபஶக்தித ஸகாஶாத்தமோத்ரிக்தாஹங்காராபிதா ஸ்தூலஶக்திராஸீத் | தத்ப்ரதிபிம்பிதம் யத்தத்விராட்சைதந்யமாஸீத் | ஸ ததபிமாநீ ஸ்பஷ்ட வபு: ஸர்வஸ்தூலபாலகோ விஷ்ணு: ப்ரதாந புருஷோ பவதி | தஸ்மாதாத்மந ஆகாஶ ஸம்பூத: | ஆகாஶாத்வாயு: | வாயோரக்நி: | அக்நேராப: | அத்ப்ய: ப்ருதிவீ | தாநி பஞ்ச தந்மாத்ராணி த்ரிகுணாநி பவந்தி | ஸ்ரஷ்டுகாமோ ஜகத்யோநி ஸ்தமோகுணமதிஷ்டாய ஸூக்ஷ்ம தந்மாத்ராணி பூதாநி ஸ்தூலீகர்த்தும் ஸோகாமயத | ஸ்ருஷ்டே: பரிமிதாநி பூதாந்யேகமேகம் த்விதாவிதாய புநஶ்சதுர்த்தா க்ருத்வா ஸ்வஸ்வேதர த்விதீயாம்ஶை: பஞ்சதா ஸம்யோஜ்ய பஞ்சீக்ருத பூதைரநந்தகோடி ப்ரஹ்மாண்டாநி தத்தது சிதசதுர்த்தஶ புவநாநி தத்தத்புவநோசித கோலகஸ்தூல ஶரீராண்யஸ்ருஜத் | ஸபஞ்சபூதாநாம் ரஜோம்ஶாம்ஶ்சதுர்த்தா க்ருத்வா பாகத்ரயாத்பஞ்சவ்ருத்த்யாத்மகம் ப்ராணம

யான சரீரமுடையவனுஞ் சகலஸ்தூலத்தையு மிரக்ஷிக்கிற பிரதானபுருஷனாகிய விஷ்ணுவாகிறான். அந்த ஆத்மாவினிடத்திலிருந்து ஆகாயமுண்டாயிற்று. ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கியும், அக்கியிலிருந்து அப்பும், அப்புவிலிருந்து பிருதிவியுமுண்டாயின. அந்தப் பஞ்ச தன்மாத்திரைகள்தாம் குணங்கள் (பூதசூட்சுமங்கள்). சிருஷ்டிக்க விரும்பிய அந்த ஜகத்காரணன் (ஈசுவரன்) தமோகுணத்தை யங்கீகரித்துச்சூக்ஷ்ம தன் மாத்திரைகளான பூதங்களை ஸ்தூலமாக்க வெண்ணினான். ஸ்தூல சிருஷ்டியின்பொருட்டு, அந்தப் பரிமித (அளவிடக்கூடிய) பூதங்களை வொவ்வொன்றையு மிரண்டாகச்செய்து, மறுபடி அதில் (இரண்டில்) ஒன்றை நான்காகச் செய்து அததனுடைய மற்றொரு இரண்டாவதம்சமுள்பட ஐந்தைந்தாகச் சேர்த்து, (இப்படி சேர்த்ததாகிய) பஞ்சீகிருத பூதங்களினாலே அனந்தகோடி பிரமாண்டங்களையும் அந்தந்த வண்டங்களுக்கு யோக்கியமான பதினானுலகங்களையும் அந்த வுலகங்களுக்கு யோக்கியமானவையும் இந்திரியங்களுக்கு இருப்பிடமானவையுமாய ஸ்தூலசரீரங்களைச் சிருஷ்டித்தார். அவர் (ஈசுவரன்) பஞ்சபூதங்களுடைய ரஜோம்சத்தை நான்காகச்செய்து, அதில் மூன்றுபாகத்தினால் ஐந்துவிருத்தி (தொழில்) யாயிருக்கிற பிராணனைச் சிருஷ்டித்தார். பினனும் அந் நான்காவது பாகத்தினாலே கருமேந்திரியங்களைச் சிருஷ்டித்தார். அவை (பஞ்சபூதங்)களுடைய சத்துவாம்சத்தை நான்காய்ப் பிரித்து அதில் மூன்றுபாகத்தினாலே ஐந்து விருத்திகளையுடைய அந்தக்கரணத்தைச் சிருஷ்டித்தார். அந்தச் சத்துவாம்சத்தின் நான்காவது பாகத்தினாலே ஞானேந்திரியங்களைச் சிருஷ்டித்தார். சத்துவாம்ச சமஷ்டியினாலே இந்திரியாதி அபிமானி தேவதைகளைச் சிருஷ்டித்தார். சிருஷ்டிக்கப்பட்ட அவைகளை அண்டத்தி லமைத்தார். அவைகள் அவருடைய (ஈசுவரனுடைய) ஆக்ஞையினாலே ஸமஷ்டியண்டத்தை வியாபித்திருந்தன. அவருடைய ஆக்ஞையினாலே அகங்காரத்தோடு கூடியிருக்கிற விராட்டானவன் சகல ஸ்தூலத்தையும் சிருஷ்டித்தான். அவருடைய ஆக்ஞையினாலே ஹிரண்ணிய கருப்பன் சூக்ஷ்மங்களை ரக்ஷித்தான். அண்டத்திலமைத்த அவைகள் அவரையன்றி அசையவாவது ஒன்றைச் செய்யவாவது சக்தியற்றவைகளாயிருந்தன. அவைகளுக்குச் சேதனத்தை (உணர்வை) யுண்டுசெய்ய விரும்பினார். பிரும்மாண்டத்தை

யும் சகலமான வியஷ்டி மஸ்தகங்களின் (தலைகளின்) பிர்ம்மரந்திரங்களையும் பிளந்து உள்ளே பிரவேசித்தார். அவைகள் ஜடமாயிருந்தாலும் சேனத்தைப்போல் தத்தங்கருமங்களைச் செய்தன. சர்வஞ்ஞனாகிய ஈசவரன் மாயாலேசத்துடன் வியஷ்டிதேகத்திற் பிரவேசித்து அந்த மாயையினாலே மோஹிக்கப்பட்டவனாய் ஜீவத்துவத்தை யடைந்தான். மூன்று (ஸ்தூலசூக்ருமகாரண) சரீரங்களையும் தானென்கிற பாவனையினாலே கருத்திருத்வ போக்திருத்துவத்தையடைந்தான். சாக்கிர ஸவப்ன சுஷுப்தி மூர்ச்சை மரணம் (என்னும்) இந்தச் சுவபாவங்களோடு கூடினவனாய்த், துக்கத்திலழுந்தினவனாய், நீரிறைக்கிற ஏற்றம்போலவும் குயவன் திரிகைபோலவும் பிறப்பிறப்புகளை யடைந்தவன்போல் மயக்கமடைகிறான்.

சரீரகோபநிஷத்.

[illegible]

(இ-ள்.) எலும்பு, தோல், நாடி, மயிர், மாம்சம் இவைகள் பூமியம்சம். மூத்திரம், கபம், ரக்தம், சுக்கிலம், வேர்வை இவை ஜலாம்சம். பசி, தாகம், சோம்பல், மோகம், மைதுனம் இவைகள் அக்கினி அம்சம். நடத்தல், ஓடுதல் கண்களை மூடுதல், திறத்தல் முதலியன வாயுவம்சம். காமம், குரோதம், லோபம், மோகம், பயம் இவைகள் ஆகாசாம்சம்.

இதுவுமது.

[illegible]

(இ - ள்.) ஜாக்கிரத் ஸ்வப்ன சுஷுப்தி துரீயம் என அவஸ்தைகள் நான்கு. ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் (பத்து) அந்தக்கரணங்கள் நான்கு. இப்பதினான்கு கரணங்களுடன் கூடியிருக்கிறது சாக்கிரம். அந்தக்கரணங்கள் நான்குடன் கூடியது சுவப்னம். சித்தமொன்றையே யுடையது சுஷுப்தி. ஜீவனோடு மாத்திரம் கூடியிருக்கிறது துரியம். கண்களைத் திறந்துகொண்டிருக்கிறவன், கண்களை மூடிக்கொண் டிருக்கிறவன், கண்களை மூடாமலும் திறக்காமலும் இருக்கிறவன் (ஆகிய இந்த ஜாக்கிரத் சுவப்ன, சுஷுப்தி அவஸ்தைகளிலெல்லா மிருக்கிற) ஜீவாத்ம பரமாத்மாக்களுக்குள்ளே ஜீவன் க்ஷேத்திரக்ஞன்.

ஸ்தூலதேகப் பஞ்சீகரண சக்கரம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆகாய கதம்பம். | வாயு கதம்பம். | அக்நி கதம்பம். | ஜல கதம்பம். | பிருதிவி கதம்பம். | இவையே பூதபஞ்சகம். |
| சீவன் ஞாதுரு | மநஸு | புத்தி | சித்தம் | அகங்காரம் | அந்தக்கரண பஞ்சகம். |
| சமானன் | வியானன் | உதானன் | பிராணன் | அபானன் | பிராண பஞ்சகம். |
| சுரோத்திரம் | தொக்கு | நேத்திரம் | சிங்நுவை | கிராணம் | ஞானேந்திரிய பஞ்சகம். |
| சத்தம் | பரிசம் | ரூபம் | ரசம் | கந்தம் | விஷய பஞ்சகம். |
| வாக்கு | பாணி | பாதம் | பாயுரு | உபஸ்தம் | கன்மேந்திரிய பஞ்சகம். |

ஆத்மபோதம்.

பஞ்சீக்ருத மஹாபூத ஸம்பவம் கர்மஸஞ்சிதம் |
சரீரம் ஸுகதுக்கானாம் போகாயதனமுச்யதே ||

(இ-ள்.) பஞ்சபூதங்களுடைய (அந்யோந்ய) புணர்ச்சியினலேற்படுத்தப்பட்டதாய்ச் சுகதுக்கங்களுக் கிடமா யநுபவிக்க யிருப்பது சரீரம்.

விஷ்ணுயாமிளம்.

ஏகாகாஶஸ்ய ஹ்ருதஸ்ய பாகம் ஜ்ஞாதேதிகல்பிதே |
ஶேஷபாகைஶ்சதுர்பாகை: க்ருத்வா ஸம்மிஶ்ரயேத் புத:॥

(இ-ள்) (பஞ்சபூதங்களுக் காதியாகிய) ஆகாச பூதத்தை இரண்டாகப் பகுத்து அதிலொருபாகத்தை ஞாதாவாகவும் மற்றொரு பாகத்தை நான்கு கூறாக்கி மற்றைய பூதங்களிற் சேர்க்கவும்.

இதுவுமது.

மஹாபூதாம்ஶ ஸாமாநி வக்ஷ்யாமி ஶ்ருணு நாரத |
ஜ்ஞாதா வ்யாநஶ்ச சக்ஷுஶ்ச ரஸம் பாயுரிதீரித:॥

(இ-ள்.) மஹாபூதார்த்த (சமஷ்டி) பாகங்கள் ஞாதா, வியானவாயு, நேத்திரம், ரசம், உபத்தம் என்கிற ஐந்து தத்துவங்களாயின. மற்றைய பூதார்த்த (வியஷ்டி) பாகங்கள் மற்ற இருபது தத்துவங்களாயின.

யோகசூடாமணி உபநிஷத்.

தேஷாம் உபேக்ஷீராதீநாம் பஞ்சபூத ஸர்வாய ஶரீரஃ | ஜ்ஞாநகர்மேந்த்ரியை: ஜ்ஞாநவிஷயை: ப்ராணாதி ஸம் வாயு மநோபுத்திசித்தாஹங்காரை: | ஸ்தூலகல்பிதை: ஸோ(அ)பி ஸ்தூலப்ரக்ருதிரஸ்யதே॥

(இ-ள்.) மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும் நான்கும் பஞ்சப்பிராணாதிகளும் ஞானேந்திரியங்களைந்தும், கர்மேந்திரியங்களைந்தும், தன்மாத்திரைகள் ஐந்தும் ஆகத்தத்துவங்கள் உச-ம் ஒன்றுகூடி ஸ்தூல சரீரமெனப்படும்.

சூதசங்கிதை.

ஆதியந்த மில்லாமற் சத்தாகி யிருக்கு மப்பரம் பூருவகற்பப் பவஞ்ச வாசனையா,லேதமில்சத் துவவிருத்தி யோடுநனி கூடியிருக்கின்ற தாகியே யனேகவித சகத்து, நீதிகொள்சொரூபமாய் நாகுகின்றே ஞனிரம்ப வெனுமிச்சை யானெடுவெளி முன்னுக, வோதனுறு பஞ்சபூ தங்களையுஞ் சிருட்டி செய்யுமா லுய்த்துணர்வீ ருத்தமவா ளுரே.

இதுவுமது.

மருவுமப்பூ தங்களிலொவ் வொன்றை யிருகூறு வகுத்த வற்றி லேம்பாகங் களையெடுத்துக் கொண்டு, பெருகுறுமொவ் வொன்றினைநந் நான்குகூ றாக்கிப் பேணலுற்றுண் மண்ணுற்பா

கங்களைமுன் னெடுத்தே, யொருவின்முறை பூதங்க ளைற்பாகங்
களினு மொவ்வொருப்பா கத்தோடொவ் வொருபா கத்தைத்,
திருகறச்சேர்க் குந்தெரிவீர் சுரும்பருமு துழக்கித தேனருந்தி
யிசைபாடுஞ் செந்தொடையற் புயத்திர்.

### தத்துவராயரருளிய பிரமகீதை.

தன்மாத் திரைக ளைந்தினையு மோரொன் றிரண்டாய்ப் பகுத்தொ
நன்று லாக்கித் தன்பாதி யொழிந்த நாலி னுடன்கூட்டி [ன்றை
யின்னே யல்லா தவைநான்கி லியல்பிற் கூட்ட வாறுதி
பின்னே தூல பூதமெனப் பிறக்கு மெனவே பெயர்த்துரைத்தான்.

### கைவல்லிய நவநீதம்.

ஐந்துபூ தமும்பத் தாக்கி யவைபாதி நந்நான் காக்கி
நந்துதம் பாதி விட்டு நாலொடு நாலுங் கூட்ட
வந்தன தூல பூத மகாபூத மிவற்றி னின்றுந்
தந்தன நான்காந் தூல தனுவண்ட புவன போகம்.

### இதுவுமது.

தூலமே மருவுஞ் சீவன் சொல்லிய விசுவ னாகுந்
தூலமே மருவு மீசன் சூழ்விராட் புருட னாகுந்
தூலஞ்சாக் கிரவ வத்தை சொன்னதோ ரன்ன கோசந்
தூலகற் பனையீ தென்று தொகுத்தது மனத்திற் கொள்வாய்.

### சூக்குமதேக பஞ்சீகரணம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆகாசம். | வாயு. | அக்கினி. | ஜலம். | பிருதிவி. |
| மனம். | | | புத்தி. | |
| சுரோத்திரம். | தொக்கு. | சட்சு. | சிங்குவை. | கிராணம். |
| சமானன். | வியானன். | உதானன். | பிராணன். | அபானன். |
| வாக்கு. | பாணி. | பாதம். | பாயுரு. | உபத்தம். |

### சாரீரகோபநிஷத்

𑌬𑍁𑌦𑍍𑌧𑌿 𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣 𑌪𑌞𑍍𑌚𑌕𑍈𑌰𑍍𑌮𑌨𑌸𑌾𑌧𑌿𑌯𑌾 ।
𑌶𑌰𑍀𑌰𑌂 𑌸𑌪𑍍𑌤𑌦𑌶𑌭𑌿 𑌸𑍂𑌕𑍍𑌷𑌮𑌂 𑌤𑌲𑍍𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

(இ-ள்.) ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் (பத்து) பிராணன் ஐந்து, மனம் புத்தி (இரண்டு) இந்தப் பதினேழுகளுடன் கூடியது சூக்ஷ்மதேகம் அல்லது லிங்கதேகம் என்று சொல்லப் படுகிறது.

புகலஃடோபநிடதம்.

கொள்ளடா ஞானவிந் திரிய மைந்துங் கூடிநின்ற கன்மவிந் திரிய மைந்துந், தள்ளடா பிராணாதி வாயு வைந்துஞ் சார்வான மனம் புத்தித் தானிரண்டும், விள்ளடா பதினேழு தத்து வங்கள் விர்த்தியெனுஞ் சூட்சுமமா மிரண்ய கர்ப்பந், துள்ளடா *வபிமானிதைச தன்றான் சொப்பன வவத்தையெனச்சொல்லுநூலே.

ஆத்மபோதம்.

[illegible]
[illegible]

(இ-ள்.) சத்தென்றாவது, அசத்தென்றாவது, குறிப்பிட்டுச் சொல்லக்கூடாமலிருக்கின்ற (ஒன்று பிறக்கிறதற்கு முன்பு அதில்லை யென்கின்ற பிராகபாவம்போல) உற்பத்தியில்லாத மாயையானது (ஸ்தூலசூக்கும தேகங்களுக்குக்) காரண உபாதி என்று சொல்லப்படுகிறது. மூவகையாகிய உபாதிகளிலே நின்றும் வேறாக ஜீவனை நிச்சயிக்கவேண்டும்.

கைவல்லிய நவநீதம்.

ஈசனுக் கிதுசு ழுத்தி யிதுவேகா ரணச ரீரங்
கோசமா னந்த மாகுங் குணமிரா சதம வித்தை
தேசறு மவித்தை தோறுஞ் சிற்சாயை சீவ கோடி
நாசமா முயிர்க்கப் போது நாமமும் பிராக்ஞ னாமே.

இதுவுமது.

அழுக்கொடு பற்றுஞ் சீவர்க் கதுவேயா னந்த கோசம்
சுழுத்திகா ரணச ரீரஞ் சொன்னவிம் மட்டு மோக
முழுக்குணத் திரண்டால் வந்த முலவா ரோபஞ் சொன்னோம்.

வேதாந்த சூளாமணி.

அகிலகா ரணமா மாயையை மருவி யந்தரி யாமியாய் மாயை, சகலகா ரியமாஞ் சூக்கும வுடம்பு சார்ந்துபொன் கருப்பனென்றாகி, விகலமி றால வுடம்பினை மேவி விராட்டென நிற்குமென் றறிவாய், திகழுறு பிரமஞ் சித்திரப் படமேற் சித்திர மியாதென வினவில்,

இதுவுமது.

விரிஞ்சனே முதலாஞ் சேதன மோடு வெற்பெழு வாயசேதனமாய்ப் பரந்துள வுலகஞ் சித்திர மென்பர் பரம்பொருளா

மொரு பிரமத், திருஞ்சடா சடமா முலகது தோற்ற மெவ்வண மெனிற்படங் தன்னில், வரைந்தபன் னிறமாக் குளிர்முதன் மா ற்ற வல்லன வலதுகிற் போலி.

அத்தியாத்மகமாதி விவரம்.

| ந. | அத்தியாத்மகம். | ஆதிபௌதிகம். | ஆதிதைவதம். |
|---|---|---|---|
| 1 | ஞாதா ... | சகலமு மறியு மறிவு ... | கூடஸ்தன் ... |
| 2 | மனம் ... | நினைப்புமறப்பு ... | சந்திரன் ... |
| 3 | புத்தி ... | நிச்சயித்தல் ... | பிருகஸ்பதி ... |
| 4 | சித்தம் ... | சலித்தல் ... | க்ஷேத்திரக்ஞன் |
| 5 | அகங்காரம் ... | துரபிமானம் ... | ருத்திரன் ... |
| 6 | சமானவாயு ... | அன்னசாரத்தைப்பகு ப்பது } ... | அயன் ... |
| 7 | வியானவாயு ... | உடல் முற்று மிருந்து தேகத்தைநிறுத்தல } ... | விசுவயோனி ... |
| 8 | உதானவாயு ... | கண்டத்தி லிருந்து வாந்திசெய்விப்பது } ... | ஐஜன் ... |
| 9 | பிராணவாயு ... | சுவாசம் வெளிச்செய்தல்... | விசுவயோனி ... |
| 10 | அபானவாயு ... | மலசலம் கழியச்செய்தல்... | விசுவகர்த்தா ... |
| 11 | சுரோத்திரம் ... | திரிவிதசப்தங்களைக் கேட்டல் } ... | திக்குகள் ... |
| 12 | தொக்கு ... | நான்குவித பரிசங்களறிதல் | வாயு ... |
| 13 | நேத்திரம் ... | ஐந்துவித ரூபங்களறிதல்... | சூரியன் ... |
| 14 | சிங்குவை ... | சட்ரசங்க ளறிதல் ... | வருணன் ... |
| 15 | கிராணம் ... | திரிவித கந்தங்களறிதல் ... | அசுவனி ... |
| 16 | சப்தம் ... | ஏகதேச சப்த க்ரகணம் ... | சதாசிவன் ... |
| 17 | ஸ்பரிசம் ... | ஏகதேச பரிச க்ரக்ணம் ... | ஈசுவரன் ... |
| 18 | ரூபம் ... | ஏகதேச ரூப க்ரகணம் ... | ருத்திரன் ... |
| 19 | ரசம் ... | ஏகதேச ரச க்ரகணம் ... | விஷ்ணு ... |
| 20 | கந்தம் ... | ஏகதேச கந்த க்ரகணம் ... | பிர்ம்மா ... |
| 21 | வாக்கு ... | வசனிக்கும ... | அக்கினி ... |
| 22 | பாணி ... | கொடுக்கலவாங்கல்செய்யும் | இந்திரன் ... |
| 23 | பாதம் ... | வருதல்போதல் செய்யும் ... | உபேந்திரன் ... |
| 24 | பாயுரு ... | சையோகானந்த மூட்டும்... | பிரும்மா ... |
| 25 | உபத்தம் ... | மலசலவிசர்ஜனஞ்செய்யும் . | மிருத்தியு ... |

## ௬ — வது சம்வாதம்.



### கர்மத்திரயத்தின் காரணமுரைத்தல்.

சி: ஜீவர்கள் துவந்துவங்களால் வருந்துவதெதனுல்?

கு: கர்மத்திரயத்தினுல்.

சி: அவையாவை?

கு: அவை: சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்தமென்பன. சென்ற ஜன்மங்களிற் செய்யப்பட்டுப் பயனை யாரம்பஞ் செய்யாமலிருக்கிற கர்மம் சஞ்சிதமாம். இந்த வர்த்தமான (தற்காலத்துள்ள) ஜன்மத்திற்செய்யும் (எதிர்காலத்தும பயனைக் கொடுப்பதாகிய) கர்மம் ஆகாமியமாம். சென்ற ஜனனங்களிற் செய்து (இந்த) வர்த்தமான ஜன்மத்திற்குக் காரணமாயுள்ள கர்மம் பிராரத்தமாம். இம்மூவகைக் கர்மங்களில் ஆகாமியம் பயனை யாரம்பஞ் செய்யாது அந்தக்கரணத்தை யுபாதியாக வுடைய சாட்சியி (கூடத்த) னிடத்துக் கற்பிதமாயுள்ள அஞ்ஞானத்தின் ஆவரண சத்திவடிவ களஞ்சியத்தி லிருக்கும்போது சஞ்சிதமெனப் படுகின்றது. ஆகாமியம (அகங்காரத்திற்குச் சாட்சியினோடுள்ள தாதாத்மியமென்னும்) பிரமஜதாதாத்மியபத்தி லிருக்கும். பிராரத்தம் அஞ்ஞானத்தின் விட்சேபசத்திவடிவ ஆசிரயத்திலிருக்கும். கர்மத்திரயத்தினுல் ஜீவர்களுக்குச் சரீரமுண்டாகிறபடியினுலே சரீரவாயிலாக வருகின்ற துவந்துவங்களுக்கேது கர்மத்திரயமாகும்.

சி: அவையேன் வந்தன?

கு: இராகத்துவேஷங்களால்.

சி: அவையேன்வந்தன?

கு: யானெனதென்னு மபிமானத்தினுல்.

சி: அஃதேதன்வந்தது?

கு: அவிவேகத்தினுல்.

சி: அஃதேதன்வந்தது?

கு: அஞ்ஞானத்தினுல். அஞ்ஞானம் வானவனைவுபோன்று ஆத்மாவினிடத்து அநாதிகற்பிதமா யிருத்தலின் அஃதேன் வந்ததென்று கேட்டல் கூடாது.

சி: இவைகளொழிதற் கேதுவென்ன?

கு: சரீரமொழிந்தால் துவந்துவங்களொழியும்? கர்மத்திரய மொழிந்தால் சரீரமொழியும். இராகத்துவேஷமொழிந்தால் கர்மத்திரயமொழியும். யானெனதென்னு மபிமானமொழிந்தால் இராகத்துவேஷ மொழியும். அவிவேகமொழிந்தால் அபிமான மொழியும். அஞ்ஞான மொழிந்தால் அபிமான மொழியும். அஃது அத்துவிதப் பிரமாயிக்கப் பிரத்தியட்ச ஞானம் வந்தால் போமன்றி வேறெவ் வுபாயத்தாலும் போகாது.

கர்மத்தினுல் வரும் சரீரம் தேவ, மனுஷ்ய, பசு, பட்சியாதி யெனப் பலவகையா யிருக்கும். கர்மமும் புண்ணியம், பாவம், மிச்சிரமென மூன்றுவகைப் பட்டு, உட்பிரிவால் பலவகைப்பட்டிருக்கும். இவற்றின் தன்மைகளை வாசுதேவமனன முதலிய நூல்களில் விரிவாய்க்காண்க. பிறப்பிற்குக் காரணம் ஆணவம், மாயை, கன்மமெனக் கூறலுமுண்டு. ஆணவமாதியவை அரிசியைப்பற்றிக் கிடக்கும் மூக்கும், தவிடும், உமியும் போன்று உயிரைப்பற்றிக் கிடக்கும். ஆணவம் உயிரை மறைக்கும்; மாயை விளக்கும்; கன்மம் மயக்கும்.

சி: இவற்றைப் பிரமாண வாயிலாக விரிவாய் விளக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ்வரும் பிரமாணங்களைக் கண்டுணர்க.

மநுஸ்மிருதி - கஉ - கஉச.

ஏஷஸர்வாணி பூதாநி பஞ்சபிர்வ்யாப்ய மூர்த்திபி: |
ஜந்மவ்ருத்திக்ஷயைர்நித்யம் ஸம்ஸாரயதி சக்ரவத்||

(இ-ள்.) இந்தப் பரமாத்துமானவர் எல்லாப் பிராணிகளையும் பஞ்சபூதங்களால் வியாபிக்கச்செய்து பூர்வஜன்மத்திற் செய்ததாகிய அதத னுடைய கருமாநுசாரமாய்ப் பிறப்பு வளருதல் இருப்பு இவைகளால் மோக்ஷம்வருகிறவரையில் வண்டிச்சக்கரம் போல் சுழலும்படி செய்கிறார்.

பைங்களோபநிஷத்.

கர்மேந்த்ரியாணி ஜ்ஞாநேந்த்ரியாணி தத்தத்விஷயாந்ப்ராணாந் ஸம்ஸ்ருத்ய காலகர்மாநுகதா விக்ரஹம் ஸம்ப்ராப்ய ஜீவோ தேஹாந்தரம் ப்ராப்ய லோகாந்தரம் கச்சதி | ப்ராக்தந ஸஞ்சிதகர்மவாசநயா தத்ஜந்மாந்தர கீடவத்ப்ராம்யதி நைவ ஶாந்திம் பவதி | ஸத்கர்ம பரிபாகதோ பஹூநாம் ஜந்மநாமந்தே ந்ருணாம் மோக்ஷேச்சா ஜாயதே||

(இ-ள்.) ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் அவைகளுடைய விஷயங்கள் பிராணன்கள் இவைகளைச் சேர்த்துக்கொண்டு காம கருமங்களுடன் அவித்தை, பூதசூக்ஷ்மங்கள் இவைகளால் சூழப்பட்ட ஜீவனானவன் வேறுதேகத்தை யடைந்து மற்றொரு லோகத்திற்குப்போகிறான். பூர்வகர்ம பலபாகத்தினாலே (பலனைக் கொடுக்கத்தலையெடுத்திருக்கிற கருமத்தினாலே) சுழலிலகப்பட்ட பூச்சிபோல் ஒழிவடைகிறதே யில்லை. சத்கரும பரிபாகத்தினால் வெகு ஜன்மங்களுக்குப் பிறகு மனிதர்களுக்கு மோக்ஷ இச்சை யுண்டாகிறது.

வேறு.

[illegible] | [illegible] | [illegible] யௌவநஜரா [illegible] | [illegible] ஜீவதி [illegible] ||

(இ-ள்.) மாயா விசித்திரத்தை என்னென்று சொல்லலாம். புருஷனுடைய கர்ப்பத்திலிருந்து சடமான சுக்கிலம் ஸ்திரீயினுடைய கர்ப்பத்தில் சுரோணிதத்துடன் கலந்து பிண்டமானதற்குமேல் கால் கை சிரசு கண் முதலிய அவயவங்களோடு தூல சரீரமாகி ஜீவத்துவத்தைப் பொருந்தியதாய் வயிற்றிலிருந்து குழந்தையாகச் சனித்து நாளுக்குநாள் வளர்ந்து பால்ய யவ்வன கௌமார வார்த்திகாதி விகாரங்களுடைத்தாய் ஒன்றை யொன்று பார்த்துக்கொள்ளுகிறதுங் கேட்கிறதும் தின்கிறதும் அழுகிறதும் சிரிக்கிறதும் விளையாடுகிறதுமாய் விந்தை விந்தையாக அனேக காரியங்களைச் செய்துகொண்டு வருகிறபோதே அகஸ்மாத்தாய் இருந்தபடி யிருந்து வந்தபடியே சொல்லாம லோடிப்போகிறது. சடபதார்த்தமாயிருந்த சுக்கிலமே இப்படிக்காகில் இந்திரஜாலம் இதற்குமேல் எங்கே பார்க்கிறது.

வாசிஷ்டராமாயணம்.

விஷய [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] விஷயம் [illegible] விஷயாம் [illegible] | [illegible]

ந்தே | உத்பத்திநிவ்ருத்தீ ஜந்மம்ருத்யூ ப்ரகீர்த்திதௌ | ஸுஷு
ப்தாத ஸர்வதா ஸர்வ விஷய விஸ்ம்ருதி: | ஏகஸ்மிந்
க்ஷணே நாநா வ்ருத்தயோ வாஸநாரோத்பவாஸ்து | ஸ ஸர்வ
ஸங்கல்பரஹிதா ஸுஷுப்திர்நித்யப்ரளய: | காரணஞ்ச தஜ்
ஜ்ஞாநம் ஸ்வாத்மஜ்ஞாநேந நாஶய | ஸ தஜ்ஜ்ஞாநஹநஸ்யைவ ப்ராக்
ருதம் ப்ரதிஸஞ்சரம் ||

(இ-ள்.) மனோவிருத்தியிலேதாகிலும் ஒரு விஷயத்தைக் கிரகித்தலே ஜன்மப்பிராப்தியென்றும், அந்த விஷயத்தைப் பரிகரிப்பதே மரணமென்றும், மனோசங்கற்பமே ஜன்மஹேதுவாகையால் இந்த ஆரோபஸ்தூல தேகவியோககாலத்தில் மனோகதவிஷயமே அனந்தரம் ஜன்ம முண்டாக்குமென்றும், ஒரேசமயத்தில் அநேக விஷயங்கள் ஸ்மிருதிக்குவந்து தப்பிபோகுமாகையால் அனேக ஜனன மரணங்கள் வந்தெய்துமென்றும், சர்வசங்கற்பரகிதமாகிய சுஷுப்தியானது தினப்பிரளயமென்றும், அந்தத் தினப்பிரளயத்தில் அஞ்ஞானப் பிரபஞ்ச முழுமையும் வாசனைமயமாய் அடங்கியிருக்கு மாகையால அதுவே மறுபடி ஜாக்கிரதைக்கு வருவதற்கும் ஜன்மாந்தரங்களுக்கும் காரணமாகிறதென்றும், இப்படிக்கொத்த அஞ்ஞானவாசனைபேதத்தைப் பிரமாத்தும ஐக்கியத்தினால் நாசப்படுத்தினால் அஃது ஆத்யந்திக பிரளயமென்றும், முத்தியென்றும் சொல்லப்படும்.

சூதசங்கிதை.

அஞ்ஞா னத்தா லிராகாதி யடர்ந்து தருமா தருமம்வளர்த், தெஞ்ஞான் றுந்துன் புறுபிறப்பு மிறப்பு மென்மே லுறுநிற்குஞ், செஞ்ஞா யிறுதண் மதியழற்கட் டெய்வப் பெருமான் றிருவருள்சேர், மெய்ஞ்ஞா னம்பெற் றிடினன்றி விடுமோ கொடிய வஞ்ஞானம்.

பல்லுயிர்க் கருமத்தின் பகுதிக் கேற்புறச்
சொல்பல யோனிக டோறுந் தோற்றமுற்
றல்லலுஞ் சுகமுமிக் கடையும் பல்லுயிர்
புல்லுமா னிடபவம் போருந்த வற்றுளும்.

பதிபசு பாசவிளக்கம்.

எண்ணரிய வான்மாக்க ளிலக்கணங் கூறுங்கா
லிருண்மலத்தான் முடரா யிருந்துபிறந் துழல்வார்
புண்ணியத்தாற் பாவத்தாற் புண்ணியபாவத்தாற்
பொன்னுடி நரகுதனை போக்குவர வுடையார் .

நண்ணியவிஞ்ஞானகலர் பிரளயா கலர்க
ணவில்சகல ரொன்றிரண்டு மூன்றுமல முடையார்
தண்ணிலவு மதிமுடியா ரருளுதய காலஞ்
சாங்குசித்த ராய்மலத்தைத் தணந்துசிவ மாவார்.

திருமழிசைப்பிரான்.

பிறப்பினோடு பேரிடர்ச் சுழிக்கணின்று நீங்குமஃ
திறப்பவைதத ஞானநீ சரைக்கரைக்கோ டேற்றுமா
பெறற்கரிய நின்ன பாத பததியான பாசனம்
பெறறகரிய மாயனே யெனக்குநல்க வேண்டுமே.

சிவாகமார்த்ததரிசனம்.

பிறப்பதும் பாசத் தாலே பிணிப்பதும பாசத் தாலே
இறப்பதும் பாசத் தாலே யிளைப்பதும் பாசத் தாலே
மறப்பதும் பாசத் தாலே மயக்கமும் பாசத தாலே
துறப்பதும் பாசத் தாலே தொழில்களும பாசத தாலே.

அமிர்தசாரம்.

உருவுணர வொண்ணு வகையுணர்வை யொன்றி
மருவிய வாணவ மாயை - கருமங்கள்
மூக்குந் தவிடு முமியு மிவையாக்கை
யாக்கும் பவவித்துக் காம்.

சிவாகமக்கச்சிமாலை.

புல்லாதி தாபர நீங்கிநற் சங்கமம் புக்கினவர்
கொல்லா விரதங் குறிக்கொண்டுன் பாதக்குற் றேவல்செய்து
பொல்லாப் பிறப்பை யொழிக்கறி யாரவா புந்தியந்தோ
கல்லோ மறமோ விரும்போ கலிக்கச்சி யேகமபனே.

சத்தியஞானபோதம்.

கன்ம மயக்கக் கடுமல மறைப்ப
மாயை விளக்க வருவன போவன
மூவகை யுயிரு முமமைய வுலகிற்
கறங்கெனச் சுழன்று கதிதொறு மடுத்தவே.

சிவவாக்கியம்.

மருளிலே பிறந்து தித்து மாயை ரூப மாகிய
விருளிலே தயங்கு கின்ற வேழை மாந்தர் காண்மினோ
பொருளிலே தவம்பு னைந்து பொருந்தி நோக்க வல்லீரேல்
மருள தேது வன்னியின் மறைந்த தேசி வாயமே.

சித்தாந்ததரிசனம்.

ஆறாறுக் குள்ளா யகப்பட் டுயிர்சுழலும்
மாறாப் பிரானை மறந்து.

இதுவுமது.

கறங்குவரி கொள்ளிவட்டங் கடிதிற் சுழல்வன்
றொங்குலா லன்றிகிரி பொப்பு.

தாயுமானசுவாமிகள்.

எத்தனை பிறப்போ வெத்தனை யிறப்போ வெளியனேற் கிது வரையமைத்த, தத்தனை யெல்லா மறிந்தநீ யறிவை யறிவிலி யறிகிலே னந்தோ, சித்தமும் வாக்குந் தேகமு நினவே சென்மமு மினியெனு லாற்று,வைத்திடுங் கென்னை நின்னடிக் குடியா மறை முடி விருந்தவான் பொருளே.

இதுவுமது.

எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டதுய
ரத்தனையு நீயறிந்த தன்றோ பராபரமே.

ஞானவிளக்கம்.

ஊழா லுடம்புண் டுடம்பால் வினையுண்டு
தாழும் வினையாற் சகமுண்டு-காழ்கொண்ட
வித்துமுளை யும்போல வியா தொருகாலும்
முத்தியிலே வீயு முளை.

திருவாய்மொழி.

மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்தடியை யடைந்துள்ளந் தேறி
ஈறி லின்பத் திருவெள்ளம் யான்மூழ்கினன்.

திருவரங்கத்தமுதனாருளிய நூற்றந்தாதி.

ஆண்டுக ளூழிக ளாய்கிகழ் காலமெல் லாமனமே
ஈண்டுபல் யோனிக டோறுழல் வோமின்றோ ரெண்ணின்றியே
காண்டகு தோளண்ண றென்னத்தி யூரர் கழலிணைகீழ்
பூண்ட வன்பாள னிராமா நுசனைப் பொருந்தினமே.

---

## எ - வது சம்வாதம்.

மக்கட்பிறப்பாய் வருதலரிதெனல்.

சி: சுவாமி! மோக்ஷம் பெறுதற்குரிய பிறவியாது?
கு: மக்கட் பிறப்பு.

சி: மக்களாய்ப் பிறந்தோரி யாவரும் மோக்ஷமடைவாரோ?

கு: கீழ்ப்போன ஜன்மங்களில் செய்த புண்ணிய பரிபாகத்தால் நான்மறை வழங்கும் பரதகண்டத்தின் ஒழுக்கத்தை யுயிரினுஞ் சிறந்ததாகக்கொண்டு கடைப்பிடித்து நன்னெறியிற் செல்லும் நன்மக்கள் குலத்திற் சீராய்ப் பிறந்து விலக்கியனவற்றை யொழித்து விதித்தனவற்றையே செய்து, அது வாயிலாகத் தத்துவஞான மடைந்தவர்களே மோக்ஷ மடைதற்குரியவராவரன்றி யேனையோ ராகார்.

சி: சுவாமி? மக்கட் பிறவி பெறுதலருமை யன்றோ?

கு: அருமையினு மருமையே?

சி: இதனை நன்குவிளக்கும் பிரமாணங்களை யெடுத்துக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ்வரும் பிரமாணங்களை நன்கு கவனித்துப் பார்த்தால் யாவும் விகசிதமாய் விளங்கும்.

கருடபுராணம் உத்தரகண்டம் உ.

𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌜𑍀𑌵𑌿𑌨𑌃 । 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌥𑌾 𑌨𑌰𑌾𑌃 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌾 𑌨𑌰𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃 । 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇𑌷𑍁 𑌚 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍋 𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑍁 𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 । 𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌷𑍁 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌃 𑌕𑌰𑍍𑌤𑍃𑌷𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌨𑌃 । [illegible] । [illegible] ॥

(இ-ள்.) (ஸ்தாவரம் முதலிய ஜடவஸ்துக்களாகிய) பூதங்களுக்குள்ளே (உயிருள்ள) பிராணிகள் சிரேஷ்டமானவை. பிராணிகளுக்குள்ளே புத்தியினால் ஜீவிக்கப்பட்ட (மனித மிருக பக்ஷி புழு பூச்சி முதலியன) வைகள் சிரேஷ்டமானவை. புத்தியினால் ஜீவிக்கப்படும் பிராணிகளுக்குள்ளே மனிதர்கள் சிரேஷ்டமானவர்கள். மனிதருக்குள்ளே பிராம்மணர்கள் சிரேஷ்டர்களென்று (வேதத்திற்) சொல்லப்பட்டிருக்கிறார்கள். பிராமணர்களுக்குள்ளே (கற்றறிந்த) வித்துவான்கள் சிரேஷ்டர்கள். வித்துவான்களுக்குள்ளே சத்கருமங்களுடைய அறிவுள்ளவர்கள் சிரேஷ்டர்கள். அவர்களுக்குள்ளே சத்கருமங்களைச் செய்கிறவர்கள் சிரேஷ்டர்கள், ஸத்கருமங்களைச் செய்கிறவர்களுக்குள்ளே பிரம்மஞானிகள்

சிரேஷ்டர்கள். சுவர்க்க மோக்ஷங்களைச் சம்பாதித்துக் கொள்ளத் தக்க மானிடஜன்மத்தை யடைந்திருக்கிறவ னெவனோ அவனுற் சுவர்க்க மோக்ஷம் இவைகளி லொன்றை யடைய முயற்சி செய்ய ப்படாமற் போகுமானால் அவன் தன்னாத்துமாவை வஞ்சிக்கிறா னென்பது நிச்சயம்.

விவேக சூடாமணி.

𑌜𑌨𑍍𑌤𑍂𑌨𑌾𑌂 𑌨𑌰𑌜𑌨𑍍𑌮 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌮𑌤𑌃 𑌪𑍁𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑌤𑍋 𑌵𑌿𑌪𑍍𑌰𑌤𑌾 | 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌈𑌦𑌿𑌕𑌧𑌰𑍍𑌮𑌮𑌾𑌰𑍍𑌗𑌪𑌰𑌤𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌮𑍍 | 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌵𑍇𑌚𑌨𑌂 𑌸𑍍𑌵𑌨𑍁𑌭𑌵𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 | 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌨𑍋 𑌶𑌤𑌕𑍋𑌟𑌿𑌜𑌨𑍍𑌮 𑌸𑍁𑌕𑍃𑌤𑌈𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌈𑌰𑍍𑌵𑌿𑌨𑌾 𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 ||

(இ-ள்.) ஜந்துகளுக்குள் மானிடப்பிறவி மிகவு மரிது, அதிலும் புருஷத்தன்மை யரிது. அதிலும் பிராமண சன்மமரிது. அதிலும் வேதாப்பியாசம் செய்து அதன்படி யநுஷ்டிக்கிறதரிது. அதிலும் சாஸ்திர வியுத்பத்தியிற் தேர்ந்திருக்கிற தரிது. அதிலும் ஆத்மாவின்னது அநாத்மாவின்னதென்று பகுத்தறிவதரிது. அதிலும் தன்னுடைய சுவாநுபவத்தினாலே தன்னாத்துமாவையறிதலரிது. அதிலும் தானே பிர்ம்மமா யிருக்கிறேனென்னும் நிலைமையரிது. இதுதான் முக்தி.

சப்தரிஷிகிருத ஸ்ரீராமஸ்தோத்திரம்.

𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑌿𑌵𑌿𑌧𑌪𑌾𑌪𑌵𑌶𑌾𑌦𑌿𑌹 𑌨𑌾𑌨𑌾𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌜𑌨𑍍𑌤𑍁𑌰𑍍𑌭𑍍𑌰𑌮𑌤𑌿 𑌯𑌾𑌤𑍋 𑌦𑍇𑌹𑌿 𑌦𑍈𑌵𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑌈𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌈𑌃 𑌪𑍌𑌰𑍁𑌷𑌈𑌃 𑌵𑌿𑌪𑍍𑌰𑌦𑍇𑌹𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍀𑌵𑌾𑌰𑌿𑌧𑍌 𑌵𑌿𑌷𑌾𑌦𑌃 𑌶𑍍𑌰𑍀 𑌦𑌾𑌶𑌰𑌥𑍇𑌰𑍍𑌯𑌦𑌿 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌤𑌦𑍍𑌗𑌤𑌾𑌨𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑍇 𑌕𑌾𑌲𑍇 𑌵𑌶𑌾𑌦𑌿𑌵 𑌘𑍋𑌰𑌂 𑌭𑌯𑌂𑌕𑌾𑌵𑌤𑍁 ||

(இ-ள்). பலவிதமான பாபகன்மங்களின் அதீனமாகின்றமையால் பசு பக்ஷி கிரிமி கீடாதிகளாதிய நாநாவித யோனிகளிடத்தில் உற்பத்தி நாசங்களடைந்து வருந்தும் பிராணியானவன் புண்ணிய கர்ம விசேஷத்தினால் சிரேஷ்டமான மானிட ஜன்மத்தில் அங்கஈனமற்ற புருஷ ஜன்மமெடுத்து அதிலும் முக்கியமான பிராமண ஜன்மமாகி இதாகிதங்களைத் தெரிந்துகொள்வதற்காய்ச் சாதகமாயிருக்கும் கலைஞானமுங் கலந்துகொண்டிருக்கிறவனாயிருந்தபோதிலும் பரத்துவ சொரூப விஷயமாய்ச் சிரவண மன

த்த கேளி விடுபடாதபடியால் பராமுகனாய் நிரந்தரம் சம்சார துக்க த்தலையவனாய்த் துர்விஷய ரூபமாகிய இரத கந்தாதிகளை யிச்சித் தான்செவனாய்ப் புல்லை அருந்துங்காலத்தும் அசைபோடும் பசு காடு வழியாலே தத்துவவிசாரமில்லாமல் அதோகதி யடைவானெ துவ விசாரத்துக்கு யோக்கியமான மானிடதேக மெடுப் ஏன் அரிதெனலாயிற்று.

தரிதுகா. வராகோப நிஷத்.

மோவஜுஷஜஸம் ஹாவ உாநு வெஷஸ் தடுாவி நாவிஜ ஹஹம் ।

ஹணஸ்வ உஹாவிஷொ வெஜுாஸ்த ஸூவணவிநா ।

தீரா திவணஜாஹஜஸ ஈவஸ ஸுவீஷா நஃஷுக்ஷணா । வொநஜா

யா ராதிவொவிஜாந் கஷா உவெக்ஷா ஹவிஷுதி ॥

க

பு (இ-ள்.) மானிட தேகமெடுப்பது அதிதுர்லபம். அதிலும் புருஷதேக மெடுப்பது அதி துர்லபம். அதிலும் பரமாத்மாவைப் பற்றி வேதாந்தசிரவண மனன நிதித்தியாசனங்களோடு விசிஷ்ட மான பிராமணதேகத்தை யடைவது அதிதுர்லபம். இப்படி அருமையாகிய பிராமணதேகத்தை யெடுத்தும் வர்ணாச்சிரமாதி விகார தர்மங்களற்றுச் சத்திய ஞானனந்த லக்ஷணமுடைய பர மாத்ம சொரூபத்தை யெவனறியாதிருப்பானோ அந்த அவிவேகி யான புருஷன எப்போதும் முத்தி யடையான்.

மநுஸ்மிருதி.

ஶரீரஜெஃ கஜுடொஷெயஜாதி ஸாவஜாம் ।

வாவிகெஃ வக்ஷிமூடதாம் உாநஸெஸஞ்ஜா ஜாதிதாமு ॥

(இ-ள்.) அகங்கரித்து தேகத்தினால் செய்கின்ற பாபகர்மங் களைக்குரித்து பூமியின் கண்ணேபாவதம் விருட்சம் கொடி செடி புல்லுகளாதி ஸ்தாவர ஜன்மங்கள் கிடைக்கும். அகங்கரித்து வாக்கினால் செய்கின்ற பாவங்களைக்குரித்து மிருகபட்சிகளாதி ஜன்மங்கள் கிடைக்கும். அகங்கரித்து மனத்தினாற் செய்கின்ற பாபகர்மங்களைக்குரித்து மனிதலோகத்திற் அதமஜாதிகளான சண்டாளாதி ஜன்மங்கள் லபிக்கும். (ஆதலால் எக்காலமும் வேத விரோதங்களான பாபகர்மங்களைச் செய்யலாகாதென்றால் நிஷ் காம சத்கர்ம புண்ணிய பரிபாகத்தால் கிடைத்த மானிட சரீரம் மிக அரிதெனலாயிற்று.

வழுவா

சூதசங்கிதை.

பல்லுயிர் கருமத்தின் பகுதிக் கேற்புறச்
சொல்பல யோனிக டோறுந் தோற்றமுற்
றல்லலுஞ் சுகமுமிக் கடையும் பல்லுயிர்
புல்லுமா னிடபவம் பொருந்த வற்றுளும்.

இதுவுமது.

பூருவ சன்ம புண்ணியவி சேடத்தாற்
சாருபு நற்குல சன்ம மாப்புவி
யோருநம் மநுக்கிர கத்தி னுண்மையி
னேருநற் கருமங்க ணிகழ்த்தி நாடோறும்.

இதுவுமது.

தொடர்தரு சித்தநற் சுத்தி வாய்ந்துபி
னடர்சமு சாரமிக் கருரென் றெண்ணியே
யிடரறு விரத்திமிக் கிணையி லாக்கதி
படரிய விருப்பமென் மேற்ப ரந்தெழல்.

இதுவுமது.

மருவு பல்பவத் தாரண மிருதிகள் மங்க
ளறுகு றம்பிர மாதமில் லாது நன்காற்றி
யொருவிலா வவ்வச் சித்திய ராய்முறை யுயர்ந்து
பொருவி லானடி யடைவரென் றுயர்மறை புகலும்.

ஞானவாசிஷ்டம்.

எறியுங் கடலி னுகத்துளையி லியாமைக் கழுத்துப் புகுவது போற்,பொறிவெம் பிறவி யனேகத்தாற் புருடன் விவேகி யெனப் பிறந்து, முறியும் பிறவி பயனிலவிம் மோக மமையுஞ் செய்தொ ழிலாற், செறிவ தென்னே யிவற்றாலே தினங்க ளெல்லாஞ் சென் றிடுமால்.

அறிவானந்தசித்தியார்.

தேரிற் சதுர யுகமிரண் டாயிர நாட்டிங்களாண்
டோரிலேஞ் ஞாற்றி னயன்மாண்டு காந்தமுற்று மென்பார்
சரு நுகத்துளை யில்வட பாற்கழி செலவெளிது
நும் பிறப்பொழிந் திம்மா னிடத்திற் சனிக்கரிதே.

ஔவையார்.

அரிதரிது மானிடராத லரிது கேட்கின் வடிவேலோய்,அரிதரிது மானிடராத ராயினுங் கூன்குருடு செவிடு, பேடு நீக்கிப் பிற

ளாத் வனுற் செய்ய நசிக்கிற
ராவிவ தாரம் ௰ஙஷி
யால் உற்பத்தி ணிய கா அங்கநன பிராமண ஜ. சாதகமாயிருந்த யிருந்தபோதிட

த்த லரிது, பேடு நீக்கிப் பிறந்த காலையும், ஞானமுங் கல்வியு நய த்த லரிது, ஞானமுங்கல்வியு நயந்தகாலையும், தானமுந் தவமுந் தான்செய லரிது, தானமுந் தவமுந் தான்செய் வராயின் வானவர் நாடு வழிதிறந் திடுமே.

தாயுமானவர்.

எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா னியாதினு மரி தரிதுகா, ணிப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ வேதுவரு மோவறிகிலேன்.

இதுவுமது.

தீராத வென்ஜனன வழக்கெல்லாந் தீருமிந்த ஜனனத் தேயடே
யாரேனு மறிவரிய ஜீவன் முத்தி யுண்டாகு மையமையோ
காரேனுங் கற்பகப்பூங் காவேனு முனக்குவமை காட்டப் போ
பாராதி யாகவெழு மண்டலத்தி னின்மகிமை பகர லாமே. [மோ

பதிபசுபாசவிளக்கம்.

மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிது மற்றதினுந்
துக்க கூன்குரு டூமையைத் துறத்தலு மரிது
நற்கு லத்திடை வருதலு மரிதுஞா னத்தான்
முக்க ணீசனுக் காட்படன் முற்றிலு மரிதே.

இதுவுமது.

அரிது மானிட யாக்கையிற் பிறத்தன்மற் றதினு
மரிது வேதநூல் சைவநூ லாலகந் தெளித
லரிதவ் வீசனே நாமென வறிவுமே விடுத
லரிது வாய்ப்பறை யடைந்திடா ததினடங் கிடலே.

## அ - வது சம்வாதம்.



பிறந்தவர் பெரும்பயன் பேரின்ப வீடெனல்.

சி: சுவாமி! அறம், பொருள், இன்பம், வீடென்னும் புரு ஷார்த்தம் நான்கனுள் மக்களாய்ப் பிறந்தோர் அவசியமா யடை தற்பாலதியாது ?

கு: அறம்: இம்மைப்பயன், மறுமைப்பயன், வீடு என்னும் மூன்றற்கும் ஏதுவாயும்; பொருள்: இம்மைப்பயன், மறுமைப்ப யன் என்னு மிரண்டற்கும் ஏதுவாயும்; இன்பம்: பொருளால் வரும் இம்மைப்பயனுயு மிருத்தலின், இல்லறத்தின் வழுவாதொ

ழுகி யறிவுடையவராய்ப் பிறப்பினை பஞ்சிப் புறமாகிய செல்வத் தின்கண்ணும் அகமாகிய வுடம்பின்கண்ணும் உளதாகிய பற் றினையற்று அது நிலையாமை நோக்கி விடுதலாகிய துறவறத்திற் சென்று அது வாயிலாக மோக்ஷத்தைப் பெறமுயலல் வேண்டும். தருமவழியாற் கிட்டிய பொருளால் வரும் இம்மைப்பயனும் மறு மைப்பயனும் நிலையற்றனவா யிருத்தலான் அவற்றை விரும்புதல் கூடாது. வீடு நித்தியானந்த வடிவாயிருத்தலின், அதனை யடை தலே மக்களாய்ப் பிறந்தவர் பெறும்பயனாம்; இதுதான் சிறந்த புருஷார்த்தமாம். இதனைப் பெறமுயலாது வீணே யுழல்பவர் விழலராவரன்றி மக்களாகார்.

சி: இதற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ்வருவனவே.

வராஹோபநிஷத் உ - ம் அத்தியாயம்.

𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌨𑌰𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 ।
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌂 𑌚 𑌮𑌹𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌶𑍍𑌰𑌵𑌣𑌾𑌦𑌿𑌨𑌾 ।
𑌅𑌤𑌿𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 ।
𑌨 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌸𑍋𑌽𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑌦𑌾𑌽𑌸𑍌 𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ॥

(இ - ள்.) மனிதஜன்மமரிது. அதிலும் புருஷப்பிறவியரிது. அதிலும் பிராமணகுலத்திற் பிறப்பதரிது. இப்படிப்பட்ட பிற வியையடைந்தும் வேதாந்த சிரவணாதிகளினாலே வருணாசிரமங் களை அதிக்கிரமித்ததாகிய ஸர்வவியாபகமான பிர்ம்மத்தினு டைய சச்சிதாநந்த சுவரூபத்தை யெவனறியவில்லையோ அந்த அக்ஞானியானவனெப்போது மோக்ஷமடையப் போகிறான்.

விவேகசூடாமணி.

𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌕𑌥𑌂𑌚𑌿𑌨𑍍𑌨𑌰𑌜𑌨𑍍𑌮 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌂 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌪𑍁𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌪𑌾𑌰𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 । 𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌮𑍁𑌕𑍍𑌤𑍌 𑌨 𑌯𑌤𑍇𑌤 𑌮𑍂𑌢𑌧𑍀𑌃 𑌸 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌹𑌾 𑌸𑍍𑌵𑌂 𑌵𑌿𑌨𑌿𑌹𑌨𑍍𑌤𑍍𑌯𑌸𑌦𑍍𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑍍 ॥

(இ - ள்.) மிகவுமரிதான இந்தமானிடதேகத்தை யடைந் தும், புருஷனாய்ப்பிறந்தும், வேதார்த்தங்களை யறிந்தும், எவன் தன்னைக் கரையேற்றிக்கொள்ளும் விஷயத்திற் பிரயத்தினஞ் செய்யவில்லையோ அந்த மூடனானவன் தன்னைத்தானே கெடுத் துக்கொண்டவனாகிறான். துஷ்டப் பிசாசனாற் பிடிக்கப்பட்டவன் போல் நாசமடைகிறான்.

இதுவுமது.

ஐ.தஃகொநவஷி உஷவாதா யவஸ-ஷலாெயெஃ வுஉசஷ்ருஷி,
ஷ-ஞூஹம் உாநாஷம் ஜெஹஃவுாவு்) கதூாவஷி வளாஷஃஷுஃ॥

(இ - ள்.) எவன் அரிதான மானிடதேகத்தையும் அதிலும் புருஷத்தன்மையையும் அடைந்தும் தான புருஷார்த்தங்களை அடைய முயலாமல் மோசம்போகிறானோ அவனைவிட மூடன் வேறு யார்.

பிருமதநுமம். உ - ரூகூ.

வுாவு்)வாவு்)-தஃஉம் ஜநுஷ்யா ஒவஃஷி்ய ஸளஷவம்
நெவது்)ாதஷிதஃயஸ- ஷஹெவஷாத வாதகஃ॥

(இ - ள்.) சிறந்ததாகிய மானிடப்பிறவியை யடைந்தும் சரியான நிலைமையிலுள்ள பொறிகளைப் பெற்றிருந்தும் ஆத்மாவிற்கு நன்மையான காரியததை யெவனறியவில்லையோ அவன்றன்னைக் கொன்றவனாகிறான்.

சூதசங்கிதை.

ஒருப வத்தினைப் பூமியி னுத்தம குலத்து
மருவி மானத கருமங்கள் புரிநதுசன் மார்க்கத்
திருவ மார்நிலே நின்றுமே சாருகம் மருளாற்
யொருவி லாதமுத்தி யிற்புகு வாருஞ்சிற் சிலரே.

ஷிதேகோத் பக்தியுரைத்த அத்தியாயம்.

அளவில் யோனி களிறபிறந்தா மளவில் கரும பலனுகர்ந்தா
மளவில் பேரு ருற்றிருநதா மளவி றுன்ப மனுபவித்தா
மளவில் பவநீங் குறுமுயற்சி யாதும் புரிநதா மலமபிறந்த
வளவி லளவின் மறைமுடிக்கு மப்பா லானே யளவிலியை.
மேய பரிபூ ரணனாகி விளங்கா நிற்குங் கண்ணுதலே
யாயன் போடு மெவனுணரா னவனே யான்ம துரோகி யந்தத்
தீய மடனெப் பாதகநதான் செய்ய மாட்டா னுலகத்திற்
வாய மறையோ தியும்பாசம் பாற்றுன பிரமது ரோகியே.

தேவிகாலோத்தரம்.

பிறந்து பெற்ற வறிவாற் பெறும்பயன்
னிறைந்த வான்முகி னீங்கிய வானென
வறிந்து தம்மை யமலவி யாபகஞ்
செறிந்து நல்ல தியானத் திருத்தலே.

இராமானுஜ நூற்றந்தாதி.

சீர்கொண்டு பேரறஞ் செய்துநல் வீடு செறிது மென்னும்
பார்கொண்ட மேன்மையர் கூட்டநல் லேனுன் பதயுகமாம்
ஏர்கொண்ட வீட்டை யெளிதினி லெய்துவ னுன்னுடைய
கார்கொண்ட வண்மை இராமா னுஜாயிது கண்டுகொள்ளே.
வினையார் பிறவியை நீக்கும் பிரானையிந் நீணிலத்தே
எனையாள வந்த விராமா நுசனை இருங்கவிகள்
புனையார் புனையும் பெரியவர் தாள்களிற் பூந்தொடையல்
வனையார் பிறப்பில் வருந்துவர் மாந்தர் மருள்சுரந்தே.

மணவாள மாமுனிகளருளிய ஆர்த்திப்ரபந்தம்.

அல்லும் பகலும்யா னாக்கை வழியுழன்று
செல்லுமதுன் றேசுக்குத் தீங்கன்றோ-நல்லார்கள்
தந்தனயர் சீர்க்காட் செய்யச் சகிப்பரோ
எந்தை எதிராஜ விசை.

ஔவை குறள்.

தருமம் பொருள்காமம் வீடெனு நான்கும்
உருவத்தா லாய பயன்.
உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினி லுத்தமனைக் காண்.

திருமந்திரம்.

முன்னைப் பிறவியிற் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியிற் பேற்றா லறியலாந்
தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாமே.

தாயுமானவர்.

எடுத்த தேக மிறக்குமு னேயெனைக்
கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ
வடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த வின்பக் கிளர்மணிக் குன்றமே.

---

## கூ - வது சம்வாதம்.



மெய்ஞ்ஞானத்தாலன்றி வீடு கூடாதெனல்.

சி: தத்துவஞானத்தாலன்றி வேறுசாதனங்களால் மோக்ஷ மடைதல் கூடாதோ?

கு: கூடாது.

சி: மோக்ஷமென்ப தெத்தகையது?

கு: சர்வதுக்க நிவிர்த்தியும் பரமானந்தப் பிராப்தியுமாம்.

சி: சுவாமி! கைலாயம் வைகுந்தமுதலியவை மோக்ஷமாகாவோ?

கு: நாமரூப வடிவாய்த் கிரியமாயிருத்தலினாலும், ஆலாலசுந்திரர், நந்தி, ஜயவிஜயர் முதலியோர்க்குச் சாபமுண்டானதாகவும் பிணக்குஞ் சண்டையு முண்டானதாகவும் புராணங்கள் வாயிலாகக் கேட்கப்படுதலினாலும் அவை சர்வதுக்க நிவிர்த்தியும் பரமானந்தப் பிராப்தியுமாய மோக்ஷமென்று சொல்லுதல் கூடாது; ஆனால் பதமுத்தி யென்றியம்பலாம்.

சி: தத்துவஞான மென்றாலென்ன?

கு: பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத வையங்களாலன்றி யுள்ளவாறறிதலாம்.

சி: சுவாமி! நித்தியம, பூரணம, நிரதிசயாநந்த மென்றற்றொடக்கத்தனவாகச் சொல்லப்படும மோக்ஷம அடைதற்குத்தத்துவஞானம் நேர்சாதனமாயுள்ளதென்பதை நன்குவிளக்கிக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: மாயையும் மாயாகாரியமான தேகாதிப் பிரபஞ்சமுமாகிய பந்தம் (கட்டு) சத்தியம் (யதார்த்தமாயுள்ள பொருள்) என்பவர்களுக்குத் தத்துவஞான வாயிலாக மோக்ஷமடைதல்கூடாது. எது சத்தியமோ அது தத்துவ (உண்மை)ஞானததினால் நிவிர்த்தியாகாது, கிரியையினாற்றான் நிவிர்த்தியாகும. எது அசத்தியமோ அது கிரியையினால்நிவிர்த்தியாகாது,தத்துவஞானத்தினாற்றான் நிவிர்த்தியாகும். எப்படியெனில் சத்தியமான வரவொன்று நிவிர்த்தியாகுமாயின் அது தடிகொண்டடித்தலாகிய கிரியையினாலாகவேண்டுமேயன்றித் தத்துவஞானத்தினால் நிவிர்த்தியாகாது. அசத்தியமாவவர(கயிற்றிற் றோன்றியவர)வொன்று நிவிர்த்தியாக வேண்டுமாயின் அது கிரியையினால் நிவிர்ததியாதலின்று; பின்னை அது கயிற்றைத் தவிர வரவென்ப தொன்றில்லை யென்று தெளிந்த ஞானத்தினாலேதான் நிவிர்த்தியாகின்றது. இங்ஙனமே பந்தம் சத்தியமாயின் அதனை நிவிர்த்திக்கக் கிரியைவேண்டுமேயன்றித் தத்துவஞானம் வேண்டப்படுவதின்றாம். இதனால் பந்தம் சத்தியமெனக்

கொண்டு அதனை நிவர்த்திக்க முயலுவோர்க்குக் கிரியை வேண்டுமேயன்றித் தத்துவஞானம் வேண்டப்படுவதின்றாம். இன்றாகவே, அவர்கள் கருமிகளாவரன்றித் தத்துவஞானிகளாகார். மாயையும் அதன்காரியமான தேகாதிப் பிரபஞ்சமுமாகிய பந்தம்: பிரமம் பரிபூரணமாயிருத்தலால், காலுள்ளவிடத்துக் கரமிருத்தற் கியையாவாறு போன்று, அதன்கண் யதார்த்தப் பொருளாக விருத்தற்குஞாயமின்று. யதார்த்தப்பொருளாக விருக்கும்பட்சத்தில் கடபடம் போன்று பிரமமும் பந்தமும் கண்டப்பொருளாம். எதுகண்டமோ அது காரியமும், சடமும், அசத்துமாயிருத்தலின் பிரமமும் பந்தமும் காரியமும், சடமும், அசத்துமாம். சேதனவடிவ பிரமம் எஞ்ஞான்றும் மாறாதிருத்தலும், பந்தம் மாறிப் போதலும், சாக்கிர சொப்பன சுழுப்தி சமாதி யவத்தைகளில் விளங்குதலால் பிரமம் பூரணமென்றும் பந்தம் கண்டமென்றும் பெறப்படுகின்றன. கண்டமாயிருக்கும் பந்தமும் சேதனத்தைவிட்டுத் தானொரு முதலாயிருத்தலின்மையினாலும் அது தனக்கென வடிவமில்லாதிருத்தல்* காரணகாரியவாதம், சந்துவாதம் முதலிய வாதங்களினால் பெறப்படுதலினாலும் அப்பந்தம் பிரமத்தில் கயிற்றிற் பாம்புபோல் கற்பிதமாமென்பது தேற்றமாம். ஆகவே, இக்கற்பித வடிவபந்தத்தைநிவர்த்திக்கத் தத்துவஞானம் வேண்டுமேயன்றிக் கிரியை வேண்டப்படுவதின்றாம். பந்தம் அசத்திய மென்பது பற்றிப் பிரமாண சகிதமாக முன்னரும் பேசப்பட்டுளது. இதனால் கற்பிதவடிவ பந்தத்தை நிவர்த்திக்கத் தத்துவஞானமே இன்றியமையாது வேண்டப்படுவதென்பது பெறப்பட்டமையின், மோக்ஷத்திற்கு நேர்சாதனம் தத்துவஞானமென்பது திண்ணமாயதென்க.

சி: இதற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ் வருவனவே.

யோகதத்துவோபநிஷத்.

அஜ்ஞாநாதேவ ஸம்ஸாரோ ஜ்ஞாநாதேவ விமுச்யதே ।
ஜ்ஞாநஸ்வரூபமேவாதௌ ஜ்ஞாநம் ஜ்ஞேயைக ஸாதநம் ॥

(இ - ள்.) அஞ்ஞானத்தினால் ஸம்ஸாரமுண்டாகிறது. ஸம்ஸாரநிவிருத்தியானது ஞானத்தினாலேயே யடையப்படுகிறது. அறியத்தகுந்த வஸ்துவை யறிகிறவிஷயத்தில் ஞானமே ஸாதனமாகையால், முன்னர் ஞானசொரூபமே யறியத்தக்கது.

* காரண காரியவாதம், சந்துவாதமுதலியவைகளைப்பற்றித் தத்துவவாதத்திற் காண்க.

### ருத்திரஹிருதயோபநிஷத்.

ஜ்ஞாநாதேவஹி ஸம்ஸார விநாசோ நைவகர்மணா॥

(இ - ள்) ஸம்ஸாரத்தினுடைய நாசமானது ஞானத்தினாலேயே யுண்டாகிறது, கருமத்தினாலல்ல.

### கர்பகீதை.

நாநாசாஸ்த்ர பரிசயே நாநாதேவப்ரபூஜநே |
ஜ்ஞாநம் விநாபாய ஸபாகம் நிரயபாகம்॥
ஆவர்ணாச்ரம தேவதானாம்ச தீர்த்தானாம்ச |
ஜ்ஞாநம் விநா நாஸ்தி முக்திர் நாஸ்தி மஹாராஜ நா॥
கோடியஜ்ஞம் க்ருதம் ஸ்ந கோடி கோதாநகம் |
மஜ்ஜநம் ஸஹஸ்ரம்ச முக்திர் ஜ்ஞாநம் விநாநச॥

(இ - ள்.) சகல சாஸ்திர பரிசசிய முண்டானபோதிலும், பிர்மா விஷ்ணு மகேசுராதிகளைப் பூசித்தபோதிலும,வர்ணாசிரம தர்மங்களை விதி முகமாக நடத்தியபோதிலும, சொானதானஞ் செய்தபோதிலும, கோடியக்யங்களைச் செய்தபோதிலும்,கச துர காதிகளை தானமீந்தபோதிலும, பாாத்தனே! ஆத்மஞான மன்றி முக்திகிடையாது. குருகடாக்ஷ மன்றியில ஆத்மஞானம் சித்திக்காதெனறிருப்பதால் முக்திக்கு ஏதுவாகிய ஞானமானது முக்கிய சாதனமாகிறது.

### வாசுதேவமனனம்.

ஆத்மாநாத்ம விவேகேந விநாஸம்ஸார நிஹ்ருதி |
தஸ்மிநா ஜந்மகோடீஷ்வபி பந்தமோக்ஷா நவிஷ்யதே॥

(இ - ள்.) ஆத்மாநாத்ம விவேகஞானத்தாலன்றிக் கோடி ஜன்மங்களெடுத்து இதர சாதனங்களைச செயதாலும பந்தநீங்கி முத்தி யடையார்கள்.

### ஆத்மபோதம்.

போதோந்ய ஸாதநேப்யோஹி ஸாக்ஷாந்மோக்ஷைக ஸாதநம்| பாகஸ்யவஹ்நிவஜ் ஜ்ஞாநம் விநாமோக்ஷோ நவிஷ்யதி॥ அவிரோதிதயா கர்மநாவித்யாம் விநிவர்த்தயேத்| வித்யாவித்யாம் நிஹந்த்யேவ தேஜஸ்திமிர ஸங்கவத்॥

(இ - ள்.) இதரசாதனங்களைக் காட்டிலும் ஞானமானது சுதந்தரமாக மோக்ஷத்துக்கு முக்கியகாரணமா யிருத்தல் எப்படி

யென்றால் போஜன பாகத்துக்கு அக்கினியைப்போல ஞானந் தவிர முத்தியானது உண்டாகாது. கருமமானது விரோதமுள்ள தாகாததினாலே அக்ஞானத்தைப் போக்கமாட்டாது. (சொரூப) ஞானந்தானே பிரகாசமானது இருட்கூட்டத்தை நாசஞ்செய்வது போல அஞ்ஞானத்தை நாசஞ்செய்யும்.

ரிபுகீதை.

𑌯𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌲𑍋𑌕𑍇 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑍇𑌵 𑌨 𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑌿 ।
𑌤𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌲𑍋𑌕𑍇 [illegible] 𑌨 𑌸𑌿𑌧𑍍𑌯𑌤𑌿 ॥

(இ-ள்.) எப்படிஉலகில் விவகாரஞானங் கிஞ்சித்தாகினு மில்லாதவனுக்குப் பலன சித்தியாகாதோ, அப்படியே ஆத்மஞானமில்லாதவர்களுககு மோக்ஷம் சிததிக்காது.

இலிங்கபுராணம். பூர்வபாகம் அத்தியாயம் அகூ.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(இ-ள்.) அஞ்ஞானமாகிற மலத்தை யுடைத்தாயிருக்கிற புருஷன் அழுக்குள்ளவனாகச் சொலலப்படுகிறான். அவ்வழுக்கு நாசமானால் மோக்ஷமடைகிறான். அநேக கோடிஜன்மமெடுத்தாலும் ஞானமொன்றினாலன்றி மோக்ஷமடைகிறதுமில்லை. பாவ புண்ணியங்கள் நசித்தலுமிலலை. ஆகையால், பிரமவித்து மோக்ஷத்தின்பொருட்டு ஞானத்தையே யப்பியாசம் செய்யவேண்டியது. ஞாநாப்பியாசத்தினாலேயே மனிதர்களுக்குச் சித்தமானது தெளிவையடைகிறது. காய்ந்தவிறகை அக்கினி யெரித்துவிடுவதுபோல் ஞானமாகிறவக்கினியுண்டானவுடனே அது சகல பாபத்தையும் எரித்து விடுகிறது. ஸகல பாபத்தையும் நாசஞ்செய்கிறதற்கு ஞானத்தைவிட மிகவுஞ் சிரேஷ்டமானது யாதொன்றுமில்லை.

சூதசங்கிதை.

அவ்வாறே நான்மறையு மெடுத்தியம்பு மையமறச்
செவ்வாய்வெண் ணகைக்கமலத் திருமார்பன் முதலான
வெவ்வானர் களுமுரைப்பா ரிலங்குமுனி வரும்புகல்வர்
சொவ்வாத பவநோய்முற் றொழிக்குமருந் துயர்ஞானம்.

இதுவுமது.

புற்பலக் றுவதெவ்னெ பளகின்மறை வழியுதித்த
பொற்புறுகன் ஞானமே புகன்முத்தி சாதனமாங்
கற்பனையாம் வேறுவழிக் கதித்தஞா னம்பரமற்
கற்புடையீர் முத்திசா தனமாகா தறிந்திடுமின்.

இதுவுமது.

திருமண வாள முத்தி சேர்தரத் தருமு பாயம்
வெருவின்மெய்ஞ் ஞான மன்றி வேறிலை யந்த ஞான
மருவுறு மறையி னந்த வாக்கியப் பொருட்டி டத்தாற்
பொருவரு மனுவி ருத்தி பூத்தபின் பொலிந்து தோன்றும்.

இதுவுமது.

மாயையினுற் பத்தியா கியவுலகம் யாவும்வளர் விவேகத் தாலே
தூயசுய சொரூபமாத் தெரிபவன்கே வலனுவான் துக்க மிக்க
பாயசமு சாரசா கரமுழ்கி விவேக மற்ற பான்மை யோர்க்கு
கேயமுறு வேதாந்த ஞானமன்றிக் கதிவேறு நிகழ்த்த லாமோ.

இதுவுமது.

கரைதருதன் சிற்சக்திக் குறுபகையா மிராகதி களைவ தற்குத், தரைபுகழும வேதாந்த ஞானமே தயங்குறுவச் சிரமா மம்ம, வரையில்சமு சாரமெனுங் கடுங்கோடை யுறத்தபிக்க மயங்கி னோருக், குரைசிறந்த சிவஞான வமிர்த மன்றிச் சாந்திசெய்வ தொன்று வேறென்.

திருவாய்மொழி.

எஞ்ஞான்று நாமிருந் திருந்திரங்கி நெஞ்சே
மெய்ஞ்ஞான மின்றி வினையியல் பிறப்பழுந்தி
எஞ்ஞான்று மெங்கு மொழிவற நிறைந்துநின்ற
மெய்ஞ்ஞானச் சோதிக் கண்ணனை மேவுதுமே.

திருமங்கையாழ்வார் திருமொழி.

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால் பெருந்துய ரிடும் பையிற் பிறந்து, கூடினேன் கூடி யிளையவர் தம்மோ டவர்தரும் கலவியே கருதி, ஓடினே னோடி யுய்வதோர் பொருளா லுணர்வெ னும் பெரும்பதந் தெரிந்து, நாடினேன் நாடி நான்கண்டு கொண் டேன் நாராய ணாவென்னு நாமம்.

திருமந்திரம்.

ஞானத்தின் மிக்க தவநெறி காட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே

பிரபுலிங்கலீலை.

உரைசெயிற் பரமஞான மொன்றுமே முத்திக் கேது
சரியைநற் கிரியா யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது வென்றே மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கபவ ரன்றே.

பதிபசுபாசவிளக்கம்.

என்ஞான்று குடும்ப பார மேகுமென் றிரங்கல் வேண்டா
மஞ்ஞான மெமமட் டுண்டேர வமமட்டுங் குடுமப பார
மெய்ஞ்ஞான முண்டேன் முததி மேவுதற் கைய மிலலை
சுஞ்ஞானத் தாலஞ் ஞானஞ் சுருங்குமங் கிலேயே முக்தி.



## ௧0 - வது சம்வாதம்.

இருவகைப்பற்றி லேய்துநல் லுணர்வேனல்.

சி: சுவாமி! மோக்ஷசாதனமாய தத்துவஞானம் எதனாலுண்டாகும்?

கு: இது யானெனதென்னு மிருவகைப்பற்று மொழிதலாலுண்டாகும்.

சி: இதனை நன்குவிளக்கல்வேண்டும்?

கு: தானல்லாத வுடம்பை யானென்று கொள்ளும் திடவறிவு அகப்பற்றும். இஃதகந்தையெனப்படும். தன்னோடு சம்பந்தமில்லாத பொருளை எனதென்றபிமானித்து அதன் வசப்பட்டிருத்தல் புறப்பற்றும். இதுமமதையெனப்படும. தானல்லாத வுடம்பை யானெனக்கருதுதல காரணமாகத் தன்னோடு சம்பந்தமில்லாதபொருள் எனதென்று அபிமானிக்கப்படுகின்றது. ஈண்டுக் கூறிய யான் என்னும் அகந்தையிலும எனது என்னும் மமதையிலும் யோகாப்பியாச வாயிலாகப் பற்றொழிந்தபோதுதான் சற்குருவாயிலாகத் தத்துவஞான முதயமாம்.

சி: இதற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ்வருவனவே.

பகவத்கீதை.

அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ர: கருண ஏவ ச |
நிர்மமோ நிரஹங்கார: ஸமது:க்கஸுக: க்ஷமீ ||

(இ-ள்.) சர்வப்பிராணிகளிடத்துந் துவேஷமற்றவனாய் மித்திரஞ்ய்த தயவுடையவனாய் யானென தென்கிற அகங்கார மமகாரஙகளற்றவனாய்ச சுகதுக்க விஷயங்களில் சமபுத்தியுடைவனாய்ப் பொருமை யுடையவனா யிருப்பானாகில் (அவன எனக்குப் பிரிதியுடையவன்.)

திருவள்ளுவ நாயனார்.

யானென தென்னுஞ் செறுக்கறுப்பான் வானோர்க்
குயர்நத வுலகம் புகும்.

சடகோபர் திருவாய்மொழி.

நீர்நும தென்றிவை வேர்முதன மாய்த்திறை
சோமி னுயிர்க்கது நேரிறை யிலலே.

சிற்றம்பல நாடி.

யானெனது நீக்கி யிறைநிறைவி லொன்றாக்கி
யானெனது நீககா திருத்தினான் - யானெனது
தங்கா தவாபோற்றுஞ சண்பைச்சிற் றமபலவன்
மங்காமற் காததாண்ட வாறு.

ஞானவாசிஷ்டம்.

மோக வச்சநா பிக்கொடி முளைகதெழு மூலஞ்
சோக மாசுண மிருந்தர சாள்வதோா சூழ
லர்க மேமுதல் யானென தென்னுமஞ ஞான
மேக மாகிய பராபாந தோனறினு லிறககும.

பிரபுலிங்கலீலை.

யானென தென்ப திருந்திடு காறு
ஞான முறுனது நண்ணில னுயிற
றுனிலை யாத சகநதிகழ் கிற்குந
தீன மிலாத சிவநதிக ழாதே.

இளசையந்தாதி.

என்னது யானெனு மிந்தம யக்கைத்
தன்னரு ளாலொழிக் குமயிள சைக்கோன்
கலனி குாத்தொடு கைவளை கட்கே
கொன னுரு மேனி குழைந்தமை யென்னே.

அவிரோத வுந்தியார்.

யானென தென்செருக் கிர்த்த மகனைமெய்ஞ்
ஞானியென ஞேதிய வுந்தீபற
நானமறை யாதிய வுந்தீபற.

தாயுமானவர்.

யான்ற னெனலறவே யினபநிட்டை யென்றருணைக்
கோனரு ளுரைத்தமொழி கொள்ளாயோ - கோனழி
யிழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலைகள்சோர
வழுக்கடிக்கும வணாணாபோ லாய்.

---

## ௧௧ - வது சம்வாதம்.

புறப்பற்றறின் பொருந்தா தகமெனல்.

சி: சுவாமி! இருவகைப்பற்றி லெதனைமுன்ன ரொழிக்க வேண்டும?

கு: தன்னோடு சம்பந்தமில்லாத மனைவி மக்கள் பொருள் என்பவைகளை யெனதென றபிமானித்தலாகிய மமதையை முன்ன ரொழிக்கவேண்டும.

சி. தானல்லாத வுடம்பை யான் என்றபிமானித்தலாகிய அகந்தை காரணமாக மமதையுண்டாகின்றதென று முனன ரருளி யிருத்தலால அகந்தை யொழித்தபின்னரன்றோ மமதையை யொழிக்கவேண்டும?

கு: மரம் விருத்தி யடைவதற்கு அதன் மூலவேர் காரணமா யிருக்கிறது. அம்மூலவேரை யழிக்கவேண்டினொருவன் முன்னா அதன் கிளைமுதலானவைகளை ஒவ்வொன்று யழிக்கவேண்டும். அங்ஙன மழித்தபின்னாததான அவ்வேரை யழித்தல் சுலபமாய் முடியும. அதுபோலப்புறப்பற்று விருத்தி யடைவதற்கு அகப்பற்றுக் காரணமாயிருப்பினும, அவ்வகப்பற்றை யொழிக்க வேண்டினொருமுமுட்சு புறப்பற்றாகிய மனைவி மக்கள் பொருள் களின் அபிமானத்தைச் சிறிது சிறிதாய்விடல் வேண்டும். அங் ஙனம் விட்டபிறகுதான் அகப்பற்றொழிதல் சுலபமாய் முடியும். இங்ஙனஞ் செய்யாது புறப்பற்றிருக்க அகப்பற்றைவிட முயலு தல் மரத்தின்கிளையாதிகளை யழிக்காது அதன் மூலவேரை யழிக்க

முபல்வதுபோலாம். இக்காரணம்பற்றித்தான் முன்னர்ப்புறப் பற்றை யொழிக்க வேண்டுமென்று கூறினும். புறப்பற் றொழிந்த வன் அகப்பற்றொழிதற்குரிய சாதனமாய ஞானயோகத்தைக்ஷண ப்பொழுதும் விடுக்காது விரைந்தனுஷ்டிப்பானாதலின் அகப் பற்று நீட்டிக்காது விரைந்தொழியும். இதனால் புறப்பற்றறறபின் அகப்பற்றுத் தாமதித்திருக்காதென்பது பெறப்பட்டதென்க.

சி: புறப்பற்றை முன்னரொழிக்க வேண்டுமென்பதற்குப் பிரமாணமுண்டோ?

கு: கீழ்வருவனவே.

பைங்களோபநிஷத்.

𑌦𑍍𑌵𑍇 𑌪𑌦𑍇 𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍇𑌤𑌿 𑌮𑌮𑍇𑌤𑌿 𑌚 |
𑌮𑌮𑍇𑌤𑌿 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌜𑌨𑍍𑌤𑍁𑌃 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍇𑌤𑌿 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ||

(இ - ள்.) பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கு மிரண்டு காரணங்களிருக்கின்றன. (அவையாவன) என்னுடைய தென்பதும் என்னுடையதல்ல வென்பதுந்தான். என்னுடைய தென்பதினாலே பிராணிகள் (பந்தத்தினால்) கட்டப்படுகிறார்கள். என்னுடையதல்ல வென்பதினாலே விடுபடுகிறார்கள்.

ஸ்ரீயஜ்ஞவராஹபகவத்கீதா.

𑌏𑌵𑌂 𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌮𑌮𑌤𑌾𑌮𑌤𑌿𑌮𑍍 |
𑌵𑌿𑌹𑌾𑌯 𑌸𑌾𑌕𑍍𑌷𑌿 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌹𑌂𑌮𑌤𑌿𑌮𑍍 ||

(இ - ள்.) இந்தப்பிரகாரம் ஜிதேந்திரியனாகிச் சர்வ விஷயங்களிலும் எனதென்கிற புத்தியைவிட்டுச் சர்வசாட்சி சைதந்யமாய ப்ரத்யகாத்ம சொரூபனான என்னிடத்தில் நானென்கிற புத்தியை வைக்கவேண்டும்.

நிராலம்போபநிஷத்.

𑌪𑌿𑌤𑍃 𑌮𑌾𑌤𑍃 𑌸𑌹𑍋𑌦𑌰𑌦𑌾𑌰𑌾𑌪𑌤𑍍𑌯 𑌗𑍃𑌹𑌾𑌰𑌾𑌮 |
𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌦𑌿 𑌮𑌮𑌤𑌾 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌵𑌰𑌣 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑍋 𑌬𑌨𑍍𑌧𑌃 ||

(இ - ள்.) தகப்பன் தாய் சகோதரன் பெண்சாதி பிள்ளை வீடு தோட்டம் பூமி முதலியவைகளிலே 'என்னுடையது' என்கிற ஸம்சாரமாகிய அஞ்ஞான விஷயமான மனோவியாபாரம் பந்தம்.

வைராக்கியசதகம்.

விடத்தகு மகப்பற் றினைமுனஞ் புறப்பற் றொழிப்பதெற் றினுக்கென விளம்பல், படிற்றொழுக் கினர்சம் மதமும் வான

வரும் பயிலில் வாழ்க்கையும விடுக்குதலென், றெடுத்துமைக் கழி வா சாரமோ தியசொற் கிழுக்குமா - குதலின்மா சியல்பாத், துடைத்தசிந் தையர்க்கு நிந்தையி லொழுக்காச் சொல்வர்முன் புறல்புறத் துறவே.

சூதசங்கிதை.

வனைக டாதிகண் மாட மாளிகைக ளகித்தியமே
புனைமடவா ராதியர்கள் போகமின்னு போனசிக்குங்
கனைகடல்சூ ழுலகமெலாங் காவல்செய்தோர் குடைநிழற்றுந்
தனைநிகர்வேந் தனுந்துன்பந் தலைக்கொண்டு சாம்புவனால்.

ஞானவாசிஷ்டம்.

"தாரதன மிருமென்னிற் றனையாகு மப்பாசந் தனைத்துக் கொண்டா, லாரதனை யறுத்தகலும விரகுடையா ரறிவிலா ராசை விஞ்சிக், கூரிதய மப்போகத் துழன்றுயக்குங் கொடுந்துயரைக் குறித்த போதே, தீரதையா மறிஞருக்கு விருத்தியுள தாய்ச் சித்தந் தெளியு மன்றே.

சிவதருமோத்தரம்.

மண்ணினுந் தனத்தினு மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினு மகவினும பெரிய பேரினுந
துண்ணெனை விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினு மினபுடன் விளங்கி மேவுவார்.

திருவாய்மொழி.

கொண்ட பெண்டிர் மக்க ளுற்றார் சுற்றத் தவர்பிறருங்
கண்ட தோடு பட்ட தல்லாற் காதனமற் றியாதுமில்லை
யெண்டி சையுங் கீழு மேனு முற்றவு முண்டபிரான்
றொண்ட ரோடுமொ யுய்யி னலலா லில்லைகண் டீர்துணையே.

திருக்கடைக்காப்பு.

தந்தைதாய் புத்திரர் தன்னுடன் தோன்றினர் தார மென்னும்
பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கிலலெனப் பற்றி னுயே
வெந்தநீ ராடியா ராதியார் சோதியார் வேத கீத
ரெந்தையா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே.

ஒழிவிலொடுக்கம்.

நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கண்
மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள்—கூடத்
தொடுத்த வலைக்கண்ணித் தொடக்கிதனை யிப்போ
விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல.

தேவாரம்.

அருத்த மும்மனை யாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போகட்டும்
கருத்தன கண்ணுத லண்ணல்காட் டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே.

பட்டணத்துப்பிள்ளையார்.

திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களு மனையு மொக்கலுந் திருவும்
பொருளென நினையாதுன் னருளினை நினைந்து.

ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே.

கஉ - வது சம்வாதம்.



அருட்செல்வத்தை யடைவது நன்றெனல்.

சி: சுவாமி! தனமென் றுரைக்கப்படுவனவற்றுள் பொருள் இம்மைப்பயனுக்கும் மறுமைப்பயனுக்கும் ஏதுவாயிருத்தலின் அதனை யொழிப்பதெப்படி?

கு: அருளால் வருஞ் செல்வமென்றும், பொருளால் வருஞ் செல்வமென்றும், செல்வம் இருவகைத்தாம். அருளால் வரும் செல்வமாவது பிராணிகளைப் பாதுகாத்து அவ்வறத்தினால் மேம்படுதலாம்; இது சத்துவகுண மிகுதற்குக் காரணமாய் இருத்தலின் இதனைக் குறிக்கொண்டு பாதுகாத்தல் வேண்டும். தொடர்பு பற்றாது எல்லா வுயிர்களின்மேலுஞ் செல்வதாகிய கருணையென்னும் அருளைச் சம்பாதித்தவிடத்து அதனால் பிராணிகளைப் பாதுகாத்து அவ்வறத்தால் மேம்படுத லுண்டாகின்றமையின், அதனையே முமுட்சுகள் விரும்பி யடையவேண்டும். அருளை விரும்பி யடைந்தவிடத்து அதனாலுண்டாகும் செல்வமே மனம் ஒருமுகப்படுதற்கு ஏதுவா யிருத்தலின், அருட்செல்வமே சிறியதாம். பொருளால் வருஞ் செல்வமாவது செவியாதி யையிந்திரியங்களும் வருத்தமின்றி யனுபவித்தற்குரிய சப்தாதி விஷயங்களாம். இங்குப் பொருளென்றது மணி, பொன், நெல் முதலாயினவற்றை.

உயிர்க்கொல்லி யென்னும் பெயரைச் சிறப்பாகப் பெற்றுள்ள பொருள்: இன்பஞ் செய்வதுபோலச் சின்னாள் நடித்துக்காட்டிப் பின்னரிருக்குமிடந் தெரியாவாறு மறைந்துவிடுகின்றது. தன்னை யெனதென அபிமானித்தவர்களைப் பல்வகைக் கிலேசத்துக் காளாக்கி வருத்துதலின், இதனைப் பிரயத்தின பூர்வகமாக விடுதலே தக்கது. உண்மையில் பொருளா லின்புற்றோ ரொருவருமில்லை. சக்கரவர்த்திகளும் பொருள்காரணமாகப் பலவகையாய் துன்பத்தை யடைந்தாரென்பது பாரதமுதலிய இதிகாசங்களாலும் இனிது விளங்கும். சப்தாதி விஷயங்களை வருத்தமின்றி யநுபவித்தற்குத் துணைக்காரணமாயுள்ள பொருளைச் சம்பாதித்தலும், காத்தலும், அழித்தலும், இழத்தலும் துன்பமாயிருத்தலின், துன்பத்திற்கே யேதுவான பொருளை அற்பத்திலும் மகாவற்பமாகியும் துக்கத்தைத் தன்னுளடக்கி யிருப்பதாயுமுள்ள விஷய வின்பத்தினை யநுபவிக்குமாறு தேடுதல் முமுட்சுவிற்குச் சீரியதன்றாம். ஆதலால் பொருட்செல்வத்தை யொழித்து அருட்செல்வத்தையே நாடியடைய வேண்டும்.

சி: சுவாமி! பொருள் பல்வகையாலும் துன்பந் தருமென்பதற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ்வருவனவே.

பௌஷியபுராணம்.

அயெஷ்வொஜநெ டுஃவொஜி–த ஸ்ராவிரக்ஷணெ | கூயெடுஃவம் வ்யெடுஃவ மயெஷ்ஷ்ஸஃ தஸ்வஃ|| ஜோரொஸ் ஸலிலாடிஜெ ஸஜநாக வாயிவாடிவி | ஸயெ யேவதாம் நித்ய ரூதெ்ராம் ப்ராணஹ்ரா தாவிவ|| வெயாதம் வக்ஷிவிரூடாமஷம் ஸக்ஷ்ரெத ஶாவடெஷிஃவி | ஜலெவ ஸக்ஷ்ரெத மெதெ் ஸயாஸவதூ் வித்வாநு|| விமோஹயம் திஸம்வக ஸஃதாவபம் திவிவதிஷஃ| வெடியநராஜநாகாமெ கஷா ஹ்யடா ஸஃவாவஹா || யயாய வதிரஃ ஷிமோயஶ ஸவாயு நிஸ்வூஹ| யதஶாயவதி டுஃவீ ஸஃவீ ஸவாயு நிஸ்வூஹா||

(இ - ள்.) அருத்தம் (பொருள்) ஸம்பாதிக்கிறதிலேயும் துக்கந்தான். ஸம்பாதித்ததை இரக்ஷிப்பதிலேயும் துக்கந்தான்.

தீர்வை செலுத்துவதிலேயும் செலவழிப்பதிலேயுந் துக்கந்தான். அர்த்தங்களினாற் சுகமேது? (உயிர்வாழ மிச்சையுள்ளவர்கள் யமனிடத்திற் பயப்படுவதுபோல்) திரவ்விய முள்ளவனுக்குத் திருடர்களிடத்திலிருந்தும் ஜலத்தினிடத்திலிருந்தும் அக்கினியினிடத்திலிருந்தும் சுவஜனங்களிடத்தி லிருந்தும் அரசனிடத்திலிருந்து மெப்போதும் பயமுண்டாகிறது. ஆகாசத்தி லெறியப்பட்ட மாம்சத்தை எப்படி பக்ஷிகளும், பூமியிலெறியப்பட்ட மாம்சத்தையெப்படி நாய் முதலிய ஜந்துக்களும், ஜலத்தி லெறியப்பட்ட மாம்ஸத்தை யெப்படி மீன்களும் புசிக்கின்றனவோ அப்படியே எல்லாவிடங்களிலும் (ஆகாசம் பூமி பாதாளங்களி லிருந்தாலும்) திரவ்யமுடையவன் புஜிக்கிறான். (என்றால் எல்லா பிராணிகளாலும் திரவ்விய முடையவனுக்குப் பயமுண்டாகிறதென்பது கருத்து) செல்வங்களானவை மோகத்தை யுண்டாக்குகின்றன; (செல்வங்களுக்கு) விபத்து (கேடுதி) உண்டானாற் தாபத்தை யுண்டாக்குகின்றன. (செல்வத்தை) ஸம்பாதிக்கும் காலத்திலோ துக்கமுண்டாகிறது; எப்பொழுதுதான் அர்த்தங்கள் ஸுகத்தைக் கொடுக்கிறதாக வாகின்றன? பொருளுக்கு எஜமானன் எப்படி பயமுடையவனுய்க் கலக்கமடைவானோ, அப்படியே யாதொருபொருளையும்விருமபாதவன பயமுடையவனுகக்கலங்கான். திரவ்வியத்திற் கெஜமானனு யிருக்கிறநிலை துக்கியா யிருக்கிறான். எல்லாப் பொருள்களிலேயும் விருப்பமில்லாதவன் சுகியா யிருக்கிறான்.

பாகவதம்.

[Grantha verse: ஸம்பாதனே ... [illegible] ... ||]

(இ - ள்.) பொருளை ஸமபாதிப்பதிலும் ஸம்பாதித்ததை விருத்திசெய்வதிலும் இரக்ஷிப்பதிலும் செலவிடுவதிலும் நாசமடைவதிலும் அநுபவிப்பதிலும் மனிதர்களுக்கு ஆயாசம்

மும், பயமும், மனக்கலக்கமும், மயக்கமு முண்டாகின்றன. திருட்டு, பரஹிம்சை, பொய், டம்பம், ஆசை, கோபம், கருவம், மதித்திருத்தல், வஞ்சனை, பகை, விஸ்வாசமின்மை இவைகளும், பொருமை (பரஸ்திரீயை யிச்சித்தல் சூதாட்டம் கள் சாராயம் குடித்தல் இம்மூன்றுகளா லுண்டாகிற) துக்கங்கள் இப்பதினைந்தும் மனிதர்களுக்கு அனர்த்தங்கள் (கெடுதியுண்டாக்கத்தக்கவைகள்). இவைகளுக்கு அர்த்தமானது இருப்பிடமா யிருக்கிறது. பொருளானது உடன்பிறந்தவர்கள் மனைவிகள் தாய்தந்தையர்கள் தன்னிடத்தி லன்புள்ளவர்கள் இவர்களுக்கு வேற்றுமையுண்டாக்குகிறது. ஆகையால் சிரேயஸை விரும்புகிறவன் அர்த்தத்தை அநர்த்தமாக வெண்ணித் தூரத் தள்ளிவிடவேண்டும்.

துவாதசமஞ்சரி.

𑌅𑌰𑍍𑌥𑌮𑌨𑌰𑍍𑌥𑌂 𑌭𑌾𑌵𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌤𑌤𑌃 𑌸𑍁𑌖𑌲𑍇𑌶𑌃 𑌸𑌤𑍍𑌯𑌂 । 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌦𑌪𑌿 𑌧𑌨𑌭𑌾𑌜𑌾𑌂 𑌭𑍀𑌤𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑍈𑌷𑌾 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾 𑌰𑍀𑌤𑌿𑌃 ॥

(இ - ள்.) பொருள் மகா அனர்த்தங்களுக் கேதுவாயும் அநித்திய வஸ்துவாயும் கிஞ்சித்தாகிலும் சுகமில்லாததாயும் புத்திரன் முதலானவர்களிடத்திலும் பீதியைத்தருவதாயு மிருக்கிறது.

மநுவசனம்.

𑌅𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌮𑌰𑍍𑌜𑌨𑍇 𑌦𑍁𑌃𑌖𑌮𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌰𑌕𑍍𑌷𑌣𑍇 ।
𑌆𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌵𑍍𑌯𑌯𑍇 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌧𑌿𑌗𑌰𑍍𑌥𑌂 𑌦𑍁𑌃𑌖𑌭𑌾𑌜𑌨𑌮𑍍 ॥

(இ-ள்.) பொருளைச் சம்பாதிப்பதிற் றுக்கம். சேகரித்தபொருளை ரக்ஷிப்பதில் துக்கம். அதற்குக் கெடுதிவருமாயினும் துக்கம். ஆதலால் விசனத்திற் கேதுவாய பொருளா லென்ன வுபயோகம்? அதனை நெருப்பாற் றகிக்கவேண்டும்.

புராதனவசனம்.

𑌮𑌾𑌤𑌾𑌪𑍁𑌤𑍍𑌰 𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌯 । 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ॥

(இ - ள்.) பொருளில்லாதவனுக்குப் பெற்றதாயும் புத்திரனும் விஸ்வாசமின்றி மகா விரோதிகளாவர். ஆதலால் சகலவிதத்தாலுந் துக்கத்தைத் தருகின்ற பொருட்கு நமஸ்காரம், நமஸ்காரம். (என்று லதை விரும்பக்கூடாது.)

பட்டணத்தார்.

பொன்னை நினைந்து வெகுவாகத் தேடுவார் பூவையன்ன
ட்ன்னை நினைந்து வெகுவா யுருகுவர் தாரணியில்
உன்னை நினைந்திங் குனைப்பூசி யாத வுலுத்தரெல்லாம்
என்னை யிருந்து கண்டா யிறைவாகச்சி யேகம்பனே.

மகாராஜாதுறவு.

பொருளுண் டாகிற் காப்பதனாற் பொருந்துந் துன்ப மரசாகின்
ஒருதம் மிகுத்த வரசரா லுதவுந் துன்ப மொருகோ டைக்கீழ்
நிருப ளுகி நோய்மரண நேரு மென்னும் பயத்தாலும்
வருவ தெனையோ மறுமையினி லென்றும் வாடித் துன்புறுமே.

நாலடியார்.

துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
வகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்காற் போல வரும்.

நீதிவெண்பா.

இன்னறரும் பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே - யன்ன
தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா
லிழத்தலுந் துன்பமே யாம்.

திருக்கடைக்காப்பு.

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதித்தோயச் செல்வ முயர்கின்ற
செல்வர்வாழ் தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே.

திருக்குறள்.

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

அஞ்ஞவதைபரணி.

என்றும் பொருவரிய வின்பப் பொருளுடையார்
பொன்றும் பொருளைப் பொருளாகப் போற்றுவரோ.

பெரியாழ்வார் ச-ரு.

சோர்வி னாற்பொருள் வைத்ததுண் டாகிற் சொல்லு சொல்
லென்று சுற்று மிருந்தா, ரார்வி னவிலும் வாய்திற வாதே யந்தக்
கால படைவதன் முன்ன, மார்வ தென்பதோர் சோதி லமைத்து
தவ னென்னுமோர் தெய்வத்தை நாட்டி, ஆர்வ மென்ப
தோர் பூவிட வல்லார்க் கறவ தண்டத்தி லுய்யலு மாமே.

பிரபோதசந்திரோதயம்.

நன்றுந்திய நெஞ்சத்திடை நாடித்தெளி வுற்றே
யென்றுங்கனி நிலைபெற்றிடு மின்பப்பொரு ளுடையார்
துன்றும்பெரு வெள்ளத்திடை தோன்றுங்குமி ழியைப்போற்
பொன்றும்பொரு ளையுமேயொரு பொருளாய்நினை வாரோ.

பயிறீக் கொடுங்கள்ளர் பயமுண்டு பொருளோர்க்
கயில்வாய்த்த பகைசயச்ச மரசாள் பவர்க்குண்
டுயிர்வேட் டவர்க்குண் டிறுங்கால பயநம்
வயிராக் கியர்க்கேதில் வருமங்கோர் பயமே.

திருமந்திரம்.

இயக்குறு திங்க ளிருட்பிழம் பொக்குந்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ மாமே.

திருவாசகம்.

காலமுண் டாகவே காதல்செய் துய்ம்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
வாலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்றன் னடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே.

ஞானவாசிஷ்டம்.

மண்ணுடு மன்னவரு மவர்தனமு மாண்டனறன் மணலை யொக்கும், விண்ணுடு மிந்திரரு மவர்வாழ்வும் போயினவின் மினை யொக்கு, மெண்ணுடும் பிரமருமன் டபமும்பூதங் களுமிற ந்த வெல்லை யில்லைக், கண்ணுடு மனைவயெங்கே நின்வாழ்க்கை நிலை யென்னை கவலு நெஞ்சே.

## கரு-வது சம்வாதம்.

மாதர்போகம் மானாத் துயரேனல்.

சி: சுவாமி! சகலவித வின்பத்திற்கும் மாதரே காரணமா யிருத்தலினால் அவர்களை விட்டுவிடுவதெப்படி?

கு: மாதர்வாயிலாக வருமின்பம் நீர விசாரித்துப் பார்க்கு மிடத்துத் துன்பமேயாம். மாதரின்பத்தை யனுபவித்தற்கும்

பொருள் தேடுவதுந் துன்பம். அப்பொருளினால் அவர்களைத் திருப்தி செய்விப்பதும் துன்பம். மாதரது போகத்தினாலே சரீரம் பலவீனமாய் விடுவதுடன் (அதுவாயிலாகப்) பல ரோகங்களு முண்டாகின்றன. மாதரின் போகத்தை விரும்பின ரிஷிகளும் தமது நிலையினின்றுந் தவறி வருத்த மடைந்தார்களென்று நூல்கள் வாயிலாகக் கேட்கப்படுதலால் மோட்ச விருப்புள்ள வொவ்வொருவரும் புத்திபூர்வகமாய் மாதர்போகத்தை விட்டுவிடல் வேண்டும். மாதரைப் போகிக்கின்றதனால் சரீரத்தில் பலம் குறைந்துவிடுகின்றது. அதனால் மனதிற்கும் பலம் குறைந்துவிடுகின்றது. பலங்குறைந்த மனம் பிரயத்தின பூர்வகமாக ஒருவன் நிறுத்தினாலும் நில்லாது காற்றால் மோதப்பட்ட கடல்போன்று சிதறிப்போதலினால், மனம் ஒருமுகப்படாமைக்குக் காரணம் மாதர்போகமே யாகின்றது. மனம் ஒருமுகப்படாதவனுக்கு முக்தி கிட்டுதலின்றாகலின், முக்திச்சுகம் பெறுதற்கு மாதர் போகம பெருந்தடையாம். மாதரே இன்பத்திற்குக் காரணமாயின் அவர்கள் வடிவம இன்பவடிவா யிருக்கவேண்டும்; ஆராய்ந்து நோக்குழி யவ்வா றிருத்தலில்லை. மாதர்போகத்தில் பிரியம் வைத்துள்ள ஒவ்வொருவரும் அவரது அல்குலிற்றான் மிகுந்த பிரியம் வைத்திருக்கிறார்கள். அஃதெப்போதும் மூத்திரத்தினால் ஈரமாயிருக்கிறது; சரீரத்தினின்றும் இரத்தம் பெருகி யதன்வழியாய் வருகினறது; தோலால் மூடப்பட்டுமே மாமிசமயமாயும் அசுத்தமான ரோமங்களை யுடையதாயு மிருக்கின்றது. இத்தன்மையதாயுள்ள அல்குலிலென்ன அழகுண்டு? விகார வடிவமான அதனிடத்தில் சிறிதும் யோசித்துப்பாராது ஆசை வைப்பவன் அந்தகனேயாவன். மேலும் அஃதசுத்த நீர் ஓடும் சாக்கடைக்குச் சமானமாயுமிருக்கிறது; அதில் துர்க்கந்தம் தவிரப் பிறிதொன்று மில்லை; இவ்வா றிருந்தும் காம விருப்புள்ள புலவர் அதனைப் பலவாறாகப் புகழ்ந்து தமது வாழ்நாளை வீணாளாக்கி யொழிகின்றார்கள். இன்னும் அவரது ஸ்தனமோ மாமிச இரத்தமாதிகளா லாக்கப்பட்டுக் கட்டிபோன் றிருக்கின்றது. அதனை மாமிசாதி வடிவமாய்ப் பார்ப்பவர்க் கதிலென்ன வின்பமுண்டாகும்? எவ்வகையாய் விசாரித்துப் பார்க்கினும் அவரது வடிவம் மலவடிவமா யிருத்தலால அவரை விட்டு நீங்குதலே தகுதியாம்; விட்டு நீங்குதல் வாயிலாகப் பேரின்பம் சித்திக்கும்; இன்றேல் ஒழியாத் துயரே யுண்டாகுமென்பதற்குச் சிறிதுஞ் சந்தேகமின்றாம்.

சி: சுவாமி! மாதர்போகம் மாளாத்துயரா யிருத்தலினால் மோட்ச விருப்பமுள்ள வொவ்வொருவரும் இல்லறத்தைவிட்டுத் துறவறத்தை மேற்கொள்ள வேண்டுமென்பது பெறப்படுகின்றது; படவே, இல்லறத்திலிருப்பவர்க்கு மோக்ஷமின்றென்பது சித்தமாகின்றது. அங்ஙனமாயின் சனகர் முதலிய மகான்கள் இல்லறத்திலிருந்தே முத்திபெற்றார்களென்பது எங்ஙனமாம்?

கு: துறவு—புறத்துறவு என்றும் அகத்துறவு என்றும் இருவகையாம். சிலர் புறத்துறவுமாத்திரமுடையவரா யிருப்பர். சிலர் அகத்துறவுமாத்திரமுடையவராயிருப்பர். சிலர் அவ்விருவகைத்துறவுமுடையவராயிருப்பர். இவற்றுள் "அந்தக் கரண மடங்கத்து றப்பதுவே, எந்தத்துறவினுநன் றெந்தாய்பராபரமே" என்று பெரியோரருளிச் செய்தபடி அகத்துறவே சிரேட்டமாம். சனகர் முதலியோர் அகததுறவு மாத்திரமுடையவரா யிருந்தாராதலால் அவர்களும் துறவிகளே. ஆயினும் அவர்கள் புறத்துறவுகொள்ளாததுபற்றி இல்லற ஞானிகளென்று சொல்லப்படுகின்றார்கள். அவர்கள் இல்லறபோகத்தை யனுபவித்துக்கொண்டிருந்தகாலத்தும அதிற் றாக்கற்றிருந்தார்களாதலால் அதனலவர்களுக்கு யாதொரு கெடுதியுமில்லை. இல்லையாகவே, அவர்களும் மாதாபோகத்தைவிட்டு நீங்கினவராவரென்க. "தலைப்பட்டார் தீரத் துறந்தார்" என்று தமிழ்வேதம கூறுதலால் எல்லாப் பற்றிற்கு மூலமான மாதர்போகத்தை விழையா தொழியவேண்டுமென்க.

சி: இவ்விஷயத்தை விரித்துக்கூறும் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ்வருவனவே.

பகவத்கீதை.

விஷயெ஼ஂ்ரிய ஸஂயொகா யத்ததக்ஷெ உமூதொவஂம |
வரிணாமெ விஷமிவ தத்஦ஸுவஂ ராஜஸஂஸ்ருதஂ||

(இ-ள்.) பிரசித்தமான எந்தச்சுகமானது விஷயேந்திரியங்களின் ஸம்பந்தத்தினால் தொடக்கத்தில் அமிர்தத்திற்கொப்பாயும் பயன்படுங் காலமான முடிவில் விஷத்தைப்போலு மிருக்கிறதோ அந்த (போக) சுகமானது இராஜசமென்று சொல்லப்படுகிறது.

யாக்ஞவல்க்யோபநிஷத்

கெஶகஜ்ஜல யாரிணொ்ா ஦ுஸ்ஸ்ரா ஧ொ்வநஷியாஃ|
஦ுஷ்க்ரிதி ரிவாதாரயா ஦ஹஂதி தூணவஂநாஂ|| ஜ்வி தா

𑌜𑍍𑌵𑌲𑌤𑌾𑌮𑌤𑌿𑌦𑍂𑌰𑍇𑌽𑌪𑌿 𑌸𑌰𑌸𑌾 𑌅𑌪𑌿 𑌨𑍀𑌰𑌸𑌾𑌃 | 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑍋 𑌹𑌿 𑌨𑌰𑌕𑌾𑌗𑍍𑌨𑍀𑌨𑌾𑌮𑌿𑌨𑍍𑌧𑌨𑌂 𑌚𑌾𑌰𑍁 𑌦𑌾𑌰𑍁𑌣𑌂 || 𑌕𑌾𑌮𑌨𑌾𑌮𑍍𑌨𑌾 𑌕𑌿𑌰𑌾𑌤𑍇𑌨 𑌵𑌿𑌕𑍀𑌰𑍍𑌣𑌾 𑌮𑍁𑌗𑍍𑌧𑌚𑍇𑌤𑌸𑌃 | 𑌨𑌾𑌰𑍍𑌯𑍋 𑌨𑌰𑌵𑌿𑌹𑌙𑍍𑌗𑌾𑌨𑌾𑌮𑌙𑍍𑌗𑌬𑌨𑍍𑌧𑌨𑌵𑌾𑌗𑍁𑌰𑌾𑌃 || 𑌜𑌨𑍍𑌮𑌪𑌲𑍍𑌵𑌲𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌚𑌿𑌤𑍍𑌤𑌕𑌰𑍍𑌦𑌮𑌚𑌾𑌰𑌿𑌣𑌾𑌂 | 𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌦𑍁𑌰𑍍𑌵𑌾𑌸𑌨𑌾𑌰𑌜𑍍𑌜𑍁𑌰𑍍𑌨𑌾𑌰𑍀𑌬𑌡𑌿𑌶𑌪𑌿𑌣𑍍𑌡𑌿𑌕𑌾 || 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌦𑍋𑌷𑌰𑌤𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌸𑍁𑌸𑌮𑍁𑌦𑍍𑌗𑌿𑌕𑌯𑌾𑌨𑌯𑌾 | 𑌦𑍁𑌃𑌖𑌶𑍃𑌙𑍍𑌖𑌲𑌯𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌲𑌮𑌸𑍍𑌤𑍁 𑌮𑌮 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌾 | 𑌯𑌸𑍍𑌯 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌤𑌸𑍍𑌯 𑌭𑍋𑌗𑍇𑌚𑍍𑌛𑌾 𑌨𑌿𑌃𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌕𑌸𑍍𑌯 𑌕𑍍𑌵 𑌭𑍋𑌗𑌭𑍂𑌃 || 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌜𑌗𑌤𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌜𑌗𑌤𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍁𑌖𑍀 𑌭𑌵𑍇𑌤𑍍 ||

(இ-ள்.) மைதீட்டிய கண்களையுடைய ஸ்ரீகளைப் பார்க்கச் சுந்தரமாயிருந்தபோதிலும் அவர்களைத் தீண்டலாகாது. அந்தச்சுவாலைக்ககப்படாமல் தூரமாயிருக்கவேண்டும். (அன்றியில்) விறகுகளை அக்நிசுட்டுச் சாம்பலாக்குவதைப்போலப் புருஷர்களைப் பாவமாகிய சுடருக் கொப்பான அவர்கள் தகித்துப் பாழ்செய்வார்கள். மன்மத னென்கிற கிராதகன் புருஷர்களெனகிற பட்சிகளைப் பெண்களெனும் வலைகளைப்போட்டுப் பிடித்துப்பாதிக்கின்றனன். ஜந்மமென்னும் குளத்தில் சித்தமென்னும் சேற்றிற் சஞ்சரிக்கும் புருஷரென்னும் மீன்களைத் தூர்வாசனை யென்னும் கயிற்றிற்பிணைத்து ஸ்ரீகளென்னும் தூண்டிமுள்ளைப் போட்டு மன்மதவலைஞன் பிடித்து மோஹாக்கினியிற் சமைக்கிறான். துக்கசொரூபமாகிய ஸ்ரீகள் புருஷர்களுக்குக் கால்விலங்கு போன்றவர்கள். எவனுக்கு ஸ்ரீயுண்டோ அவனுக்குப் போகத்தி லிச்சை யுண்டாம்; ஸ்ரீயில்லாதவனுக்குப் போகவிச்சை யுண்டாகாது. ஸ்ரீயின் பற்றொழிந்தால் ஜகத்தின் பற்றொழியும்; ஜகத்தின் பற்றொழிந்தால் சுகசுவரூபமாகிறான்

துவாதச மஞ்சரி.

𑌨𑌾𑌰𑍀𑌸𑍍𑌤𑌨𑌭𑌰 𑌨𑌾𑌭𑍀𑌦𑍇𑌶𑌂 | 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌮𑌾 𑌗𑌾 𑌮𑍋𑌹𑌾𑌵𑍇𑌶𑌂 |

𑌏𑌤𑌨𑍍𑌮𑌾𑌂𑌸𑌵𑌸𑌾𑌦𑌿 𑌵𑌿𑌕𑌾𑌰𑌂 | 𑌮𑌨𑌸𑌿 𑌵𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯 𑌵𑌾𑌰𑌂𑌵𑌾𑌰𑌂 ||

(இ - ள்.) ஸ்த்ரீகளுடைய ஸ்தனாதிகளைப் பார்த்து விகாரப்படுவார்கள். அதிலுள்ள மாம்சத்தையும் நாபிஸ்தானத்திலுள்ள மல மூத்திராதிகளையும் சினைநீர்நிரம்பிய குடல்களையுஞ் சிந்திக்கில் வெகு விகாரமுள்ளதாகையால் அவளிடத்திலுண்டாகிய பிராந்தி நீங்கிவிடும்.

[illegible]

(இ-ள்.) மைதீட்டிய கண்களையுடைய ஸ்ரீகளைப் பார்க்கச் சுந்தரமாயிருந்தபோதிலும் அவர்களைத் தீண்டலாகாது. அந்தச்சுவாலைக்ககப்படாமல் தூரமாயிருக்கவேண்டும். (அன்றியில்) விறகுகளை அக்கிசுட்டுச் சாம்பலாக்குவதைப்போலப் புருஷர்களைப் பாவமாகிய சுடருக் கொப்பான அவர்கள் தகித்துப் பாழ்செய்வார்கள். மன்மத னென்கிற கிராதகன் புருஷர்களென்கிற பட்சிகளைப் பெண்களெனும் வலைகளைப்போட்டுப் பிடித்துப்பாதிக்கின்றனன். ஜந்மமென்னும் குளத்தில சித்தமென்னும் சேற்றிற் சஞ்சரிக்கும் புருஷரென்னும் மீன்களைத் துர்வாசனை யென்னும் கயிற்றிற்பிணைத்து ஸ்ரீகளென்னும் தூண்டிமுள்ளைப் போட்டு மன்மதவலைஞ்சன் பிடித்து மோஹாக்கினியிற் சமைக்கிறான். துக்கசொரூபமாகிய ஸ்ரீகள் புருஷர்களுக்குக் கால்விலங்கு போன்றவர்கள். எவனுக்கு ஸ்ரீயுண்டோ அவனுக்குப் போகநதி விச்சை யுண்டாம்; ஸ்ரீயில்லாதவனுக்குப் போகவிசசை யுண்டாகாது. ஸ்ரீயின் பற்றொழிந்தால் ஜகத்தின் பற்றொழியும்; ஜகத்தின பறறொழிந்தால் சுகசுவரூபமாகிறான்.

துவாதச மஞ்சரி.

𑌨𑌾𑌰𑍀𑌸𑍍𑌤𑌨𑌭𑌰𑌨𑌾𑌭𑍀𑌦𑍇𑌶𑌂 | 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌮𑌾 𑌗𑌾 𑌮𑍋𑌹𑌾𑌵𑍇𑌶𑌮𑍍 |
𑌏𑌤𑌨𑍍𑌮𑌾𑌂𑌸𑌵𑌸𑌾𑌦𑌿 𑌵𑌿𑌕𑌾𑌰𑌂 | 𑌮𑌨𑌸𑌿 𑌵𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯 𑌵𑌾𑌰𑌂𑌵𑌾𑌰𑌮𑍍 ||

(இ - ள்.) ஸ்த்ரீகளுடைய ஸ்தனாதிகளைப் பார்த்து விகாரப்படுவார்கள். அதிலுள்ள மாம்சத்தையும் நாபிஸ்தானத்திலுள்ள மலமூத்திராதிகளையும் இனைநீர்நிரம்பிய குடல்களையுஞ் சிந்திக்கில் வெகு விகாரமுள்ளதாகையால் அவனிந்தமேத்தி லுண்டாகிய பிராந்தி நீங்கிவிடும்.

தினலஞ

### மகாவாக்கிய ரத்நாவளி.

[illegible] |
ஸ்த்ரியம் த்யக்த்வா ஜகத் த்யக்தம் ஜகத் த்யக்த்வா ஸுகீ பவேத் ||

(இ-ள்.) சம்சாரத்துக்கு மூலமாய்ப் பெண்ணாகி வந்த மனையாளிடத்தில் காலத்திரயங்களிலும் எப்போதும் துக்கமே சம்பவிக்கும். ஸ்த்ரீயைவிட்டால் ஜகத்து நீங்கிவிடும். ஜகத்தைவிட்டால் சுகமடைவார்கள்.

### சூதசங்கீதை.

யௌவன பருவத் தழகுவாய்ந் தண்ணுந் தடிபாந் தெழுமுலையாளைச், செவ்விதி னுய்தல் கடிமணம் புணர்தல் சிறப்புநா டொறுமவிர்க் கியற்றல், வெவ்விய வூட லொழித்த னல்லாடை விளங்கிழை யாதிக ளோடே, லொவ்வுற வவற்றைப் பாதுகாத் திடுத லாதியி னுறும்பல துன்பம்.

அமையாவிச் சுகமனைத்து மநித்தியமென் றறிந்திருந்து
முமைபாகன் றிருவடிக்கன் புறுற்றுமற் பல்லுயிருஞ்
சுமையார்மோ கத்தாலிச் சுகபோகமே விரும்பு
மிமையாரும் புகழ்முனிவீ ரென்னுரைக்கேன் மாயைவலி.

### பட்டணத்தார்.

பெண்ணாகி வந்தொரு மாயப் பசாசம் பிடித்திட்டென்னை
கண்ணால் வெருட்டி முலையான் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணாங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க
வெண்ணா துனைமறந்தே னிறைவா கச்சி யேகம்பனே.

நாவார வேண விதஞ்சொல்லு வாருனை நான்பிரிந்தாற்
சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்கள்கை தான்வரண்டாற்
போய்வாரு மென்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக்
கீவார் தலைவிதியோ விறைவா கச்சி யேகம்பனே.

### பத்திரகிரியார்.

கால்காட்டி கைகாட்டி கண்கள் முகங்காட்டி
மால்காட்டும் மங்கையரை மறந்திருப்ப தெக்காலம்.
ஆறாத புண்ணி லழுந்திக் கிடவாமல்
தேறாத சிந்தைதனைத் தேற்றுவது மெக்காலம்.

### ஞானவிளக்கம்.

காமப்பெரு நெருப்பைக் கங்கை யவியாதோ
தீமையினைச் சாந்தந் தெகியாதோ—வாமப்பாற்
பெண்மயிலைப் போயெய்யாதோ பிரமனரி காணாத
வொண்மயிலை ப[illegible]ரை.

திருமங்கையாழ்வார் திருக்குறுந் தொகை.

காவியை வென்ற கண்ணார் கலவியே கருதி நாளும்
பாவியே னாக வெண்ணி யதனுள்ளே பழுத்தொ ழிந்தேன்
தூவிசே ரன்ன மன்னும் சூழ்புனல் குடந்தை யானை
பாவியேன் பாவி யாது பாவியே னாயினேனே.

பதிபசுபாசவிளக்கம்.

காமத்தா லிந்திரன் கலக்க மெய்தினான்
காமத்தா லிராவணன் கருத்த ழிந்தனன்
காமத்தாற் கீசகன் கவலை யுற்றனன்
காமத்தா லிறந்தவர் கணக்கி லார்களே.

ஆசையாற் சந்திர னங்கந் தேய்ந்தனன்
ஆசையாற் சவுபரி யறிவை நீங்கினான்
ஆசையா னராசுர னாவி போக்கினான்
ஆசையால் வாலியு மழிந்து போயினான்.

தாயுமானசுவாமிகள்.

உந்திச் சுழியா னுளத்தைச் சுழித்தகன
தந்தித் தனத்தார் தமைமறப்ப தென்னாளோ.

முத்தனைய மூரலும் பவளவா யின்சொலு முகத்திலகு பசுமஞ் சளு, மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற விருகும்ப முலையின்மணி மாலைநால, வைத்தெமை மயக்கியிரு கண்வலையை வீசியே மாயா விலாசமோக, வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை மடந் தையர்கள் சிற்றின்பமோ,புத்தமிருத போகம் புசித்துவிழி யிமை யாத பொன்னாட்டும் வந்ததென்றால், போராட்ட மல்லவோ பே ரின்ப முத்தியிப் பூமியி லிருந்து காண, வெத்தனை விகாதம்வரு மென்றுசுகர் சென்றநெறி யிவ்வுலக மறியாததோ,விகபர மிரண் டினிலு முயிரினுக் குயிராகி யெங்குநிறை கின்றபொருளே.

ஞானவாசிஷ்டம்.

முதுதுயர் பூட்டாற் பூட்டி முடிவில்கா மாதி யென்னும்
புதுமணி வைத்த செப்பாம் பூவைய ரின்பம் வேண்டே
னிதுதகை யிதுசெய்த் தோரென் றிதுநரம் பிதுவென் றெண்ணில்
விதுமுக மாதர் வேட்கை விரோதமாஞ் சிறுது நாளில்.

பாரியை யுடையோன் யாவ னவனுக்கே பற்றும் போக
நாரியை யில்லா தாற்குப் போகத்தி னலமெங் குண்டாங்

காரிகை தன்னை நீங்கிற் கருத்துறு சகத்து நீங்கும்.
பேரியல் சகத்து நீங்கிற் பிறிவில்பே ரின்ப முண்டாம்.
வந்துறு போதி னன்றாய் வரியளிச் சிறகு போலச்
சந்ததஞ் சலித்துத் தள்ளற் கரியதாம் போகந் தன்னை
முந்துநோய் மரண மூப்பு முதலவாந் துயர்கட் கஞ்சிச்
சிந்தையில் விரும்பே னெங்கள் சேர்வரும் பதத்தைச் சேர்வேன்.

திருவாய்மொழி.

சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியா
ததிர்குரல் சங்கத் தழகர்தம் கோயில
மதிதவழ் குடுமி மாலிருஞ் சோலை
பதியது வேத்தி யெழுவது பயனே.

---

## கச - வது சம்வாதம்.

### புத்திர விருப்பம் பொல்லாதென்பது.

சி: புத்திரர்கள் தம்மை யீன்றவர்களைப் புத்தென்னும நரகிற்குச் செல்லாவண்ணம் செய்பவர்களாயும் மூப்பு நேரிட்ட காலத்துடனிருந் துதவுபவர்களாயும் இருத்தலின், பிரியமாய் வளர்த்தெடுத்த அவர்களையும் மோட்ச விருப்பமுள்ளவன விட்டு விடல் வேண்டுமோ?

கு: பொருளும் போகமும் எபபடி துக்கத்திற் கேதுவோ அப்படியே புத்திரரும் துக்கத்திற் கேதுவாவர்? பந்த நோக்குடையவர்க்கு யோக்கியமுள்ள பிள்ளைகளால் இம்மைப் பயனும் மறுமைப்பயனு முண்டாவதா யிருப்பினும், விடுதி நோக்குடையவர்கள் இம்மைப்பயனும் மறுமைப்பயனும் துக்க வடிவமென் றுணர்ந்து அவற்றின்கண் விருப்பின்றி யிருத்தலால் அவர்களுக் கவர்களால் யாதும் பயனுண்டாவ தில்லை.

ஆதலால், மோட்ச விருப்புடையோர்கள் புத்திர விருப்பத்தைப் பிரயத்தன பூர்வகமாக விட்டுவிடல் வேண்டும். புத்திர விருப்புடையோர் பல தீங்கிற்காளாக வேண்டுமென்பது கீழ்வருவனவற்றா லினிதுவிளங்கும்.

புத்திரனில்லையாயின் இல்லையென்னும் துக்கமாத்திரமுண்டு. புத்திரனுண்டானல் கருபத்திலுள்ளபோதும் துக்கமுண்டாகின்

றது; பிழைத்திருக்கும்போதும் துக்கமுண்டாகின்றது; இறக்கும்போதும் அதிக துக்கமுண்டாகின்றது. ஸ்திரீ கர்ப்பிணியாகாவிட்டால் ஸ்த்ரீக்கும அவள் கணவனுக்கும் பெருந்துக்கமுண்டாகின்றது. கர்ப்பமுண்டானால் அது லநாசமடையாம லிருக்கவேண்டுமே யென்று விசாரமுண்டாகின்றது. பின்னர்ப் பிறப்பீது ஆணோ பெண்ணோ யென்று விசாரமுண்டாகின்றது. அப்பால் அரைகுறையான மாதங்களில் குழந்தை பிறக்காமலிருக்க வேணடுமென்று கவலையுண்டாகின்றது. ஒன்பது மாதமானபின் மிகு வருத்தப்பட்டுப் பிரசவித்தகாலத்து நவக்கிரகங்களில் சில விருத்தமா யிருந்தால் தம்பதிகளிருவரும் அல்லும் பகலும் மன வருத்த மடைகிறார்கள். குழந்தை ஸ்தன்னியபானஞ் செய்யா விட்டால் அவ்விருவரும் கண்ணீர்விட் டழுகின்றார்கள்.

இவ்விதமாகச் சிலநாள் கழிந்தபின்னர்ப் பல் முளைக்கும்போது வெகு குழந்தைகள் மரணமடைவதைக் கண்டு விசனமுறுகின்றார்கள். வியாதியினால் குழந்தை யிளைத்துப்போனால் அது சௌக்கியமடைதற்பொருட்டுக் குணத்தாலும் செயலாலும் ஈனமுடைய வைத்தியர்களையும் தேடுகின்றார்கள்; ஒருபொருளாக மதிக்கத் தகாதவர்களையும் மதித்துச் சிநேகிக்கின்றார்கள்; காளி காட்டேரி முதலிய தேவதைகளைப் பிரார்த்தித்துக் கொள்ளுவதுடன் சுடுகாட்டிற் சென்று பூசைபோட்டு ஆடு கோழி முதலியவைகளையும் பலி கொடுக்கிறார்கள்; குழந்தையின் கழுத்தில் ரட்சாபந்தனமும் கட்டுகிறார்கள்; ஊரில் கொள்ளைநோய் வைசூரி முதலியவை யுண்டானால் அவற்றால் தமது குழந்தை யிறந்து போமோ என்றெண்ணி யேங்கி மிகவும் வருந்துகிறார்கள்; இன்னும் பலவிதமான துன்பத்தையு மடைகிறார்கள். இவ்வாறு கஷ்டப்பட்டு வளர்த்தபிள்ளை பெரியவனான பின்னர்ப் பலவுபாயங்கள் தேடியும் ஆயுட்குறைவா லிறந்துபோனால் தாய் தந்தையர்கள் தலையி லடித்துக்கொண்டு தங்களை யாதரவற்றவர்களாகப் பாவித்து இரவும் பகலும் ஓயாத்துன்ப மடைகிறார்கள். இடையில் ஆயுட்குறைவா லிறந்துபோகாது யௌவன பருவமடைந்தால் அப்பிள்ளை ஸ்த்ரீயின் சுகத்தையே பெரிதாகவெண்ணித் தன்னை வெகுபாடுபட்டு வளர்த்த தாய் தந்தையருக்கு வருத்தமுண்டாகுமாறு செய்கிறான்; தனது மனைவியி னுபதேசத்தைக் கேட்டு அவர்களைப் பலவாறாகத் தூஷிப்பதுடன் அடித்தலும்

செய்கிறான்; இவ்வாறு பலவிதமாக வுண்டாகும் துன்பத்தினால் தாய் தந்தையர் பெரிதும் துக்கத்தை யனுபவிக்கிறார்கள். இவ்விதமாக விசாரித்துப் பார்த்தால் புத்திர விருப்பம் பொல்லாதென்பது நன்கு விளங்கும்; ஆதலால் மோட்ச விருப்புடையோர் மனக்கலக்கத்தை ஓயா துண்டுபண்ணும் புத்திர விருப்பத்தை விட்டுவிடல் வேண்டுமென்ப தினிது விளங்கும்.

சி: இதனை நன்குவிளக்கிய பிரமாணங்க ளுண்டோ?

கு: கீழ் வருவனவே.

யாஜ்ஞவல்க்யோபநிஷத்.

க்ருச்ச்ராந்நைநய: பிதரௌ க்லேசயேச்சிரம் | கர்ப்ப ஸ்ராவேண ப்ரஸவேந பாததே | ஜாதஸ்ய க்ரஹரோகாதி குமாரஸ்ய ச தூர்த்ததா | உபநீதேऽப்யவித்யத்வம் அநுத்வாஹச்ச பண்டிதே || யூநச்ச பரதாராதி தாரித்ர்யம் ச குடும்பிந: | புத்ரது:கஸ்ய நாஸ்த்யந்தோ தநீ சேந்ம்ரியதே ததா | ஏவம் விவிச்ய புத்ரௌ ப்ரீதிம் த்யக்த்வா நிஜாத்மநி | நிச்சித்ய பரமப்ரீதிம் வீதராகோ தத்த்வநிஷ்டயா ||

(இ-ள்.) தாய் தந்தைகளுக்குப் புத்திரனில்லாதபோதுந் துக்கம். கருக்குழியி லிருந்தபோதுந் துக்கம். அக்கருவழிந்தாலும் பூமியின்க ணுதித்தபோதுந் துக்கம். வளர்ந்தபோதுந் துக்கம். கிரகரோகங்களினாலும் துக்கம். குமார பருவத்துந் துக்கம். உபநயன வித்யா அப்பியாசங்களினாலும் துக்கம். சர்வதா புத்திரனால் துக்கமே யநுபவிக்கவேண்டி வருவதால் புத்திரன்மீதில் வைத்திருக்கும் ஆசக்தியை சர்வாத்மாக்களும் விட்டவர்களாகி ஆத்மார்த்தத்தில் பரமப் பிரீதியை வைக்கவேண்டும்.

யோகதத்துவோபநிஷத்.

யஸ்மாஜ்ஜாதோ பகாத்பூர்வம் தஸ்மிந்நேவ பகே ரமேத் |
யா மாதா ஸா புநர்பார்யா யா பார்யா மாதரேவ ஹி ||
ய: பிதா ஸ புந: புத்ரோ ய: புத்ர: ஸ புந: பிதா |
ஏவம் ஸம்ஸாரசக்ரேண கூபசக்ரே கடா இவ ||

(இ-ள்.) பூர்வமெங்கிருந்து வந்தானோ அந்தவிடத்திலேயே ரமிக்கிறான். (ஆதலால்) தன்னுடைய தாயே மற்றொரு ஜன்மத்தில் தாரமாகியும் அத்தாரமே, தாயாகியும், வேறொரு ஜன்மத்தில்

தன்து புத்திரனே தனக்கு தந்தையாகியும். தந்தையே தனக்குப் புத்திரனாகியும் மற்றுள்ளவர்களாகியும் யாவுஞ் சம்சார சக்கரத்தில் சுழலுவது குயவன் திகிரியில் கடாதிகள் சுழலுவது போலாம்.

சூசேலோபாக்கியானம்.

மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலைநோ யடையிற் றுன்பம் வியன்பரு வத்துந் துன்பம்
கதமுறு காலதூதர் கைப்பற்றிற் கணக்கிற் றுன்பம்
இதமுற லெந்நாள் சேயா லெற்றைக்குந் துன்ப மானல்.

பிரபோதசந்திரோதயம்.

சடமீது கிருமிப்பை தானென்றன் மலமோ
டடர்மேவு புண்ணோ டெழுக்கண்ட துண்டே
யுடன்மீதின் வுடல்போ லுதிக்கின்ற புழுவைத்
திடமான மகவென்று சீராட லென்னே.

நாரதசரிதை.

புழுமலக் குடருண் மூழ்கிப் புலால்கமிழ் வாயிற் றேய்த்து
விழுமவை குழவி யென்றும் விளங்கிய காளை யென்றும்
பழுதிய பிறவு மாகிப் பலபெயர் தரித்த பொல்லாக்
குழுவினை யின்ப மாகக் கொள்வரோ குருடு நீந்தார்.

## கரு - வது சம்வாதம்.

அசுத்தம் துக்கம் அநித்திய முடலெனல்.

சி: சுவாமி! உடலை யானென்பது ஒருவனுக் கொழிந்தால் அவனுக்கு யாதொரு விவகாரமும் நிகழாமற் போதலின் அதனை யொழித்த லெங்ஙனம்?

கு: சர்வ விவகாரமு மொழிந்தவனுக்குத்தான் தத்துவ ஞான வாயிலாக ஆத்மதரிசன முண்டாகும். அசுத்தம் துக்கம் அநித்தியமாயுள்ள வுடலை விபரீதவுணர்ச்சியினால் யானென் றுணருகின்றவரையில் அது காரணமாகச் சர்வ விவகாரங்களும் விடாதிருக்கும். ஆதலின் பிரயத்தின பூர்வகமாக முமுட்சுவானவன் உடலை யானென்று கருதும் விபரீத வுணர்ச்சியை யகற்றவேண்டும்.

சி: உடலை யானென்று கொள்ளும விபரீத வுணர்ச்சியானது எவ்வெவ்வேதுக்களா லொழியும்?

கு: உடல் அசுத்தம் துக்கம் அநித்தமென்று அதனியல்பை யுள்ளவாறு அறிந்தால் அவ்விபரீத வுணர்ச்சி யொழியும்.

சி: அதனை விளக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

உடல் அசுத்தம்.

கு: தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீர் என்னும் எழுவகைத் தாதுக்களால் ஆக்கப்பட்டது உடலாம். மண்ணாலாக்கப்பட்ட கடம் மண்மயமாக விருத்தல் போன்று தோல்முதலானவைகளா லாக்கப்பட்டவுடலும் அவற்றின் மயமாகவே யிருக்கிறது. தோல் முதலானவை யெங்ஙனம் அசுத்தப்பொருளாக விருக்கின்றனவோ அங்ஙனமே உடலும் அசுத்தப்பொருளாம். மேலும உடல மலபாத்திரமா யிருக்கிறது. கண்ணாதி வாயில்களில் பீளையாதி மலங்கள் ஒழுகிக் கொண்டேயிருக்கின்றன. உடல்முற்றும் கிருமிகீடாதிகள் நிறைந்திருக்கின்றன. ஒருவரும் மலத்தை யானெனக் கருதுவதில்லை. ஆதலால் நிரவிசாரிக்குமிடத்து உடல் மலவடிவமாகவே விளங்குதலினால் அதை யானெனக் கருதுவது கூடாது. யான் என்பதன் பொருள் உடலானால் உடலினின்று வெளியாகும் மலஜலாதிகளையும் யானெனக் கூறல் வேண்டுமே? யானெனபதன் பொருள் எவ்வவத்தையினும் உணருருவமாகவே விளங்குதலால், அசுத்தமான உடலை யானெனக் கூறுதலடாது. உடல் அசுத்தமாயிருப்பதுபற்றியன்றோ அதனை யொவ்வொருவரும் ஜலமுதலானவைகளால் சுத்தஞ் செய்கிறார்கள். எல்லாப்படியாலும உடல் அசுத்தமாயிருப்பதென்பது இதனால் நன்கு விளங்கும்.

உடல் துக்கம்.

சரீரமுள்ளவிடத்தில் துக்கமும் அஃதில்லாவிடத்தி லஃதின்மையு மிருத்தல் அவத்தாத்திரயத்தினால் நன்குவிளங்கும். சுழுத்தியவத்தையில் சரீரமில்லாதபடியினாற்றான அங்கே துக்கமில்லாமலிருக்கிறது. உறங்கிவிழித்தோன் யான் சுகமாய்த் தூங்கினேனென்றுரைப்பதே 'அதற்குப்போதியசான்றும். சாக்கிராவஸ்தையிலும சொப்பனவஸ்தையிலும சரீரமிருக்கிறது. அதனாற்றான் ஆண்டுத் துக்கமுண்டாகின்றது. சரீரமுள்ளவிடத்தே துக்கமில்லாமற் போதலின்று. சீரணித்துப்போவதால் சரீரமெ

ன்றும், உடற்று (வருத்து)வதால் உடல் என்றும், தகிக்கப்படு வதால் தேகமென்றும் பெயர்களுண்டாயினவென்னு மதன்கார ணார்த்தங்களே உடல் துக்கவடிவமென்பதை ஸ்தாபிக்கும். மேலும் இவ்வுடலானது மாதாவினது கருப்பத்தினின்று உற்பவி க்கின்றகாலத்தில் கருப்பாசயப்பையுறுத்தல், அதில் ஜலம் பூரித்தல், உதராக்கினி சுடுதல், பிரசூதவாயு முறித்துத்தள்ளுதல், யோனித்துவாரத்தால் நெருக்குண்டு வருதல் என்னும் ஐம் பெருந்துன்பங்களும், அது லயமாகின்ற காலத்தில் அவ்வுற்பத் தித் துன்பத்திற் கெட்டுப்பங்கு துன்பங்களும், உற்பத்திக்கும் லயத்திற்கு மிடையாய திதிகாலத்தில் நரை திரை மூப்புகளாலு ண்டாகும் துன்பங்களும், வாத பித்த சிலேத்துமங்களினு லுண் டாகும் துன்பங்களும், பசியினாலும் காமத்தினாலும் உண்டாகும் துன்பங்களும், பிறவாற்றால்வருந் துன்பங்களும் அளவின்றி யிரு த்தலால் உடல் துக்கவடிவமென்பதற்கு யாதொரு ஆட்சேபனையு மின்றாம். யானென்பதன்பொருள் துக்கவடிவமாயிருப்ப தொன் றன்றென்பது மனமொருமுகப்பட்ட காலத்தும் சுழுத்திகாலத் தும் இனிது விளங்குதலின், துக்கவடிவாயவுடலை யானெனக் கூறுதலொருபோது மடாது.

### உடல் அநித்தியம்.

அழிவுபாட்டபாவத்திற் கெதிர்மறையாயிருப்பது அநித்திய மாம். அஃதாவது நாசத்தை யுடையதாயிருப்பதுயாதோ அஃதநித் தியமாம். "பெரியதூலமும் காலத்தாற் பிணமாகிவிழும்" என்று பெரியோரருளியவாறு எவ்வகைத்தாய சரீரங்களும் ஒருகாலத் தில் நாசத்தையடைவதாயிருத்தலால் அவை யனித்திய மென்ப தற்குச் சந்தேகமின்றாம். காயகர்ப்பங்களால் ஸ்திரப்படுத்திய சரீ ரங்களும் பிரளயகாலத்தில் பிணமாக வேண்டுமாதலின் நாசமா கும் உடல் யானென்பதன் பொருளாகாது. நானென்பதன்பொ ருள் நாசமின்றியதென்பது அவத்தாத்திரயங்களில் உடல்கள் மாறிமாறி வரினும் உணர்வு மாறாதிலங்குவதால் விகசிதமாகும். மேலும் உடல்மாதாவின் கருப்பத்திற்றானே அழிவதாயும், பிறந்த வுடனே அழிவதாயும், பிறந்து சிறிது காலமிருந் தழிவதாயும், பாலனாயழிவதாயும், தருணனாயழிவதாயும் நரையுண்டாகி விருத் தநிலையி லழிவதாயு மிருத்தலின், இதனை யொருபோதும் நானெ னக் கூறுத லடாது.

சி: சுவாமி! இவற்றிற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ்வருவனவே.

### தேகம் அசுத்தமென்பதற்குப்பிரமாணங்கள்.

### மைத்திரேயோபநிஷத்.

ஜாதம் ம்ருதமிதம் தேஹம் மாதாபித்ருமலாத்மகம் |
ஸுகது:காலயாமேத்யம் ஸ்ப்ருஷ்ட்வா ஸ்நாநம் விதீயதே ||

தாதுபத்தம் மஹாரோகம் பாபமந்திரமத்ருவம் |
விகாராகாரவிஸ்தீர்ணம் ஸ்ப்ருஷ்ட்வா ஸ்நாநம் விதீயதே ||

நவத்வாரமலஸ்ராவம் ஸதாகாலே ஸ்வபாவஜம் |
துர்கந்தம் துர்மலோபேதம் ஸ்ப்ருஷ்ட்வா ஸ்நாநம் விதீயதே ||

மாத்ருஸூதகஸம்பத்தம் ஸூதகே ஸஹஜாயதே |
ம்ருதஸூதகஜம் தேஹம் ஸ்ப்ருஷ்ட்வா ஸ்நாநம் விதீயதே ||

(இ - ள்.) இத்தேகமானது பிறப்பிறப்புடையது; தாய்தந்தைகளுடைய மல (சுக்கில சுரோணித) சுவரூபமானது; சுகதுக்கத்திற் கிருப்பிடமானது; அசுத்தமானது. இதைத் தொட்டால் ஸ்நாநம் விதிக்கப்பட்டிருக்கிறது.

தாதுக்களாற் கட்டப்பட்டது; மகாவியாதியுடையது. பாபத்திற் கிருப்பிடமானது; நிலையற்றது; விகாரமான ஆகாரத்தையும் அளவையுமுடையது; இதைத் தொட்டால ஸ்நாநம் விதிக்கப்பட்டிருக்கிறது.

ஒன்பது துவாரங்களிலும் எக்காலத்திலும் சுபாவமாய் மலக்கசிவுள்ளது; துர்க்கந்தமுடையது; துர்மலங்களுடன் கூடியது; இதைத்தொட்டால் ஸ்நாநம் விதிக்கப்பட்டிருக்கிறது.

மாதா ஸூதகத்துடன் ஸம்பந்தப்பட்டது; ஸூதகத்தோடேயே பிறந்தது; மரணஸூதகத்தோ டுண்டானது. இதைத் தொட்டால் ஸ்நாநம் விதிக்கப்பட்டிருக்கிறது.

### முக்திகோபநிஷத்.

அத்யந்தமலிநோ தேஹோ தேஹீ சாத்யந்தநிர்மல: |
உபயோரந்தரம் ஜ்ஞாத்வா கஸ்ய சௌசம் விதீயதே ||

(இ - ள்.) தேகமானது மிகவும் அசுத்தமுள்ளது. தேகத்தையுடையவனோ (ஆத்மா) மிகவும் பரிசுத்தமுள்ளவன். இவ்விரண்டனுடைய பேதங்களை யறிந்து எதற்குச் சுத்தியை விதிக்கலாம்.

நாரதபரிவிராஜகோபநிஷத்.

அஸ்திஸ்நாயுயுதம் மாம்ஸரக்தலேபநம் சர்மாவநத்தம் |
விண்மூத்ரபித்தகபமஜ்ஜாமேதோவஸாதிபி: ||
ஜராசோகஸமாவிஷ்டம் ரோகாயதநமாதுரம் |
ரஜஸ்வலமநித்யம் ச பூதாவாஸமிமம் த்யஜேத் ||
மாம்ஸாஸ்ருக்பூயவிண்மூத்ரஸ்நாயுமஜ்ஜாஸ்திஸம்ஹதே ||
தேஹே சேத் ப்ரீதிமாந் மூடோ பவிதா நரகேऽபிஸ: ||

(இ - ள்.) எலும்பு தூணாயும், நரம்பினாற் கட்டப்பட்டதாயும, மாம்ஸம் இரக்த மிவைகளாற் பூசப்பட்டதாயும், தோலினாற் மூடப்பட்டதாயும், துர்க்கந்த முள்ளதாயும், மல மூத்திரங்கள் நிறைந்ததாயும், கிழத்தனம் துன்பமிவைகளாற் சூழப்பட்டதாயும், ரோகத்திற் கிடமானதாயும், வியாதியுடையதாயும், அழியத்தக்கதாயும், அழுக்குள்ளதாயும், ஆகாச முதலிய பஞ்சபூதங்களுக் கிருப்பிடமாயும், இருக்கிற இச்சரீரத்தில் (அபிமானத்தை) விட்டுவிடவேண்டும். மாம்ஸம இரத்தம் சீழ் மல மூத்திரம் நரம்பு கொழுப்பு இவைகளுடைய கூட்டமாகிய தேகத்திற் பிரீதிவைத்திருக்கிற மூடன நரகத்திலும பிரீதியுடையவனு யிருப்பான்.

பட்டணத்தார் பாடல்.

ஊத்தைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றத் துருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
யேற்றுத் திரிந்து விட்டே னிறைவாகச்சி யேகம்பனே.

திருமங்கையாழ்வார்.

மானே நோக்கியர்தம் வயிற்றுக் குழியி லுழைக்கும்
ஊனே ராக்கைதன்னை யுதவாமை யுணர்ந்து ணர்ந்து
வானே மாநிலமே வந்து வந்தென் மனத்திருந்த
தேனே நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே.

சூதசங்கிதை.

அத்தரு வெண்மை செம்மைநீர்க் கூட்ட மாமுடல் யானெனத் தென்று, பித்துறு மூட னுகிமோ கிப்பான் பெருந்தரைக் கிடக்கின்ற தோலை, யொத்தமாங் கிரத்தை நரம்பை வெள்ளென்பை யுரோமத்தை யிரத்தத்தைக் கபத்தைச், சுக்கிலபித்த மூத்திர மலத்தைத் தொடன்முதல் செயச்சகி யானே.

மகாராஜாதுறவு.

தோலி ரத்த மெலும்பிறைச்சி சுக்லமேதை மச்சையொன்றாய்த்
தூலீ கரித்த வுடம்பாகுந் தொட்ட வெவையுந் தன்வடிவாய்க்
கோலி யடக்கிக் கொளுமிதனைக் கூறு கூறா நோக்காது
போலி யுணர்வோர் மகிழ்வெய்தும் புனித மென்றும் பரமபதம்.

தேவாரம்.

கால்கொடுத் திருகை யேற்றிக் கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற் சுவரெடுத் திரண்டு வாச
லேல்வுடைத் தாவ மைத்துங் கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார் மாமரைக் காட னாரே

தாயுமானசுவாமிகள்.

சுக்கிலமு நீருஞ் சொரிமலமு நாறு முடற்
புக்குழலும் வாஞ்சையினிப் போதுமென்ப தெந்நாளோ.
காக்கைநரி செந்நாய் கழுகொருநாள் கூடியுண்டு
தேக்குவிருந் தாமுடலைச் சீயென்ப தெந்நாளோ.
நாற்றமிகக் காட்டு நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமையென்ப தெந்நாளோ.

திருப்பாட்டு.

உதிரநீரி றைச்சிக் குப்பை யெடுத்தது மலக்குக் கைமேல்
வருவதோர் மாயக் கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
கரியமா லயனுந் தேடிக் கழலிணைக் காண மாட்டா
வரியனாய் நின்ற வாரூ ரப்பனை யஞ்சி னேனே.

சிவதருமோத்தரம்.

அடுத்தவை யூத்தை யாக்கு முடம்பை நல்லறிவாற் றோலை
விடுத்துளே வேறு வேறா நரம்பினோ டிறைச்சி யென்பாற்
றொடுத்தவிம் மாலை தன்னைத் தூய்தின்மை நோக்கித் துன்ப
மெடுத்தவிக் காம பாச மெரிகிலா ரென்னே யென்னே.

திருக்கடைக்காப்பு.

என்பினாற் கழிநிரைத் திறைச்சி மண்சுவ ரெறிந்திது நம் மில்லம், புன்புலா னாறுதோல் போர்த்துப் பொல்லாமை யான் முகடு கொண்டு, முன்பெலா மொன்பது வாசலார் குரம்பையின் மூழ்கி டாதே, யன்பனா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்ச னெஞ்சே.

திருவாசகம்.

பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகி ய பொய்க்கூரை, யித்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப் படுவேனை, முத்து மாமணி மாணிக்க வயிரத்த பவளத்தின் முழுச்சோதி, யத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே.

### தேகம் துக்கமென்பதற்கு பிரமாணங்கள்.

### கருப்போபநிஷத்.

வதத்யசீதி லக்ஷேஷு யோநிமத்யேஷு வாஸவம் । ஜாதஶ்சாஸ்மி ம்ருதஶ்சாஸ்மி ஸம்ஸாரீ சாஸ்மி புந: புந: ।। ஜநந ம்ருத்யு புநர்ஜந்ம புநர்ம்ருத்யு: புநர்ஜநி: । கர்ப்பவாஸே மஹாது:க்கம் மோஹது:க்கம் ச ஜந்மநி । பால்யே து:க்கம் ததா மோஹம் பாரவஶ்யம் ச மூடதா । ஹிதாகரண மாலஸ்யம் அஹிதாசரணம் ததா । யௌவநே விஷயாஸக்தி: தாபத்ரய நிபீடித: । ஜீர்ணாவஸ்தா வ்யாதிர்மரணே மஹத்பயம் । ஆஶயாபிமாநேநைவ காமக்ரோதாதி ஸங்கடே । அத்யந்த தீவ்ரது:க்கேந ஸ்வதந்த்ரஸ்து து:கித: । து:க்க பீஜமிதம் ஜந்ம து:க்கமேவம் ச து:க்கஸம்பவம் । நிவ்ருத்த்யுபாயோ ஜ்ஞாநஸாதநம் । ஸுகது:க்காதி யௌவநே ந பாபஸ்ய ப்ரக்ரியா ।।

(இ - ள்.) எண்பத்தினன் கிலக்ஷம் யோநி பேதங்களிலும் பிறந்திருந்தேன். அடிக்கடி பிறந்தவனாகவு மிறந்தவனாகவும் ஸம்சாரியாகவுமானேன். பிறக்கிறது இறக்கிறது மறுபடி பிறக்கிறது இறக்கிறது மறுபடி பிறப்பு இப்படி கருப்பவாசத்திற் துக்கம், பிறப்பில் மோகம் துக்க மிரண்டும், பால்யத்திற் துன்பம் அப்படியே வியசனம், பிறருக்கு வசப்பட்டிருக்குகை, மூடத்தனம், தனக்கு வேண்டியதைச் செய்துகொள்ளக்கூடாமை, சோம்பல், அப்படியே அநிஷ்டத்தைச் செய்துகொள்ளுதல், யௌவநத்தில் விஷயவாசை, தாபத்திரயத்தினால் செவ்வையாய்ப் பீடிக்கப்பட்டும் கிழத்தனத்தினாற் கவலைப்பட்டும், வியாதி மரணத்தில் மகத்தான பயம் இவைகளுண்டாகின்றன. ஆசையபிமான மிவைகளினாலும் காமக்குரோதம் முதலிய சங்கடங்களினாலும் அதிதீவிரமான துக்கத்தினாலும் அசுவதந்தரமா யிருந்துகொண்டும் துன்பத்தை

யநுபவித்தேன். இந்தப்பிறவியானது துக்கத்திற்கு விதையா யிருக்கிறது. துக்கசுவரூபமாயும் பொறுக்கமுடியாததாயு மிருக் கிற பிறவித்துன்பத்தை யொழிக்கும்படியான தருமத்தை நான் செய்யவில்லை. ஞானசாதனமாகிய யோகத்தையுஞ் செய்யவில்லை. துக்கமாகிற ஸமுத்திரத்தில் முழுகியிருக்கிறேன். இதற்குப் பரி ஹாரமான காரியங்களை நானறியவில்லை.

துவாதசமஞ்சரீ.

பாலஸ்தாவத் க்ரீடாஸக்த: தருணஸ்தாவத் தருணீஸக்த:|
வ்ருத்தஸ்தாவத் சிந்தாஸக்த: பரமே ப்ரஹ்மணி கோபி நஸக்த:||

(இ-ள்.) பாலியத்தில் விளையாடுவதற்கில்லையென்னும் துன் பமும், யௌவன காலத்தில் ஸ்திரீகளாற்றுன்பமும், வார்திக காலத்தில் நேரிடுகிறதுனபமும் (நீக்கி) சாவவியாபக மூர்த்தியை த்தொழுவதற் குதவியாகாத இததேகமானது மகா துன்பமா கிறது.

புராதனவசனம்.

ஜந்மது:க்கம் ஜராது:க்கம் ஜாயாது:க்கம் புந: புந:|
ஸம்ஸார ஸாகரம் து:க்கம் தஸ்மாஜ்ஜாக்ரத ஜாக்ரத:||

(இ-ள்.) பிறக்கிறதும்துக்கம். ஜரைமுதலிய வியாதிகளாலும் துக்கம். இறக்கிறதுந் துக்கம். நவநவமாகப் பிறக்கிறது மிறக் கிறதுமாய சம்சாரசாகரம் துக்கம். ஆதலால் ஜாக்கிரதை ஜாக் கிரதை (விழித்துகொள்ளுங்கள்).

ஞானவாசிஷ்டம்.

ஈரித்த குடனரம்பாற் செறிந்துபல விகாரியா யிரங்க வாடிப், பூரித்த வுடல்பிறப்பிற் பொலிந்தாலுந் துன்பத்தின் பொருட்டே யாகும், பாரித்த சிற்றின்பஞ் சிறுதுன்ப மனுபவிக்கும் பகர்ந்த மெய்யோ, சேரிட்ட குணமிலதுந் துயருளது நீசமுமா நிலைவே றுண்டோ.

சூதசங்கிதை விராகவிசாரமுரைத்த வத்தியாயம்.

கருவினு ளடங்கு காலையின் முனிவிர் கலலமா யிருக்கின்ற போது, கிருமிக ளுகர்நல் புற்புத மாங்காற் கிருமிவா தைகள் வயிற் றழலி, லுருவெதும் பிடுதல் பிண்டமா யிடுங்கா லுளர்வளி யாலலை படுதல், பெருமல மிழிநீ ரிணைப்படல் பையுட் பிணிப் புற விவைமுத லனந்தம்.

துக்கமே யன்றிச் சுகமிலை யாருஞ் சொல்லரு மிரவுர வாதி
மிக்கவெந் நிரயத் தழுந்திடுந் துன்ப மிகுசுக மாமிதற் கதனாற்
புக்கவக் கருப்ப வாசதுன் பத்தைப் புகலரி தாகுமான் முனிவி
ரொக்கவித் துன்ப முறவனு பவித்திட் டுற்பத்தி யாகிய பின்னும்.

**சிவதருமோத்திரம்.**

காலையிற் மலத்தினுற் கடிது துன்பமே
சாலவும் பசியினுற் றளர்வ ருச்சியின்
மாலையிற் காமநோய் மலிய வாடுவர்
வேலைக டொறுமிடர் விளையும் விஞ்சியே.

**சிவானந்தமாலை.**

கருவா யுதரத்திற் கட்டுண்டன் மன்னி
யுருவாகி யுற்பவித்த வேளங்க-ளனைத்திரை தான்
மைவிரவுஞ் ஞான மரணநர கஞ்சனனந்
தெய்விக மிதென்றே தெளி.

**மணவாளமாமுனிகளருளிய ஆர்த்திப்ரபந்தம்.**

இன்ன மெத்தனைநா ளிந்த வுடம்புட னிருந்துநோவு படக்கடவேனையோ,என்னை யிதினின்றும் விடுவித்துநீ ரென்று தான் திரு நாட்டினு ளேற்றுவீர், அன்னையுமத் தனுமல் லாத சுற்றமுமாகியென்னை யளித்தருள் நாதனே, என்னிதத்தை யிராப்பக லின்றியே யேகமெண்ணு மெதிராஜ வள்ளலே.

**தணிகைப்புராணம்.**

கருவினின் மழவிற் கற்குங் காலையிற் பருவ மாயிற், பெருகிய பொழுதி ளேயிற் பிரிவினிற் பகையி னீட்டும், பொருள்வயின் வேட்டத் தெய்தாப் புன்மையின் முதுமை தன்னின்,மருவிய திழப்பிற் சாவின் வன்றுயர் மனிதற் குண்டே.

**மகாராஜாதுரவு.**

விருத்த பருவ மிகத்துன்பம் விளங்கு மிளமை யிரண்டவையின்
வருத்துப் பிணியின் மிகத்துன்பம் வளமை யிளமை மூன்றுகும்
கருத அறியாக் குழந்தையென்றுங் குமாரமென்றுங் காளையென்
அருத்த மறியா ததிற்றுன்ப மடையும் பால பருவத்தில். [றும்

**ஞானவிளக்கம்.**

காமாதி யாலுங் கடுவெம் பசியாலுஞ்
சாமாறுந் துன்பமதைச் சாற்றகிலேன - கோமானே
யென்சா னுடம்பாலே பட்டதுய ரென்சொல்கேன்
புண்பிளவில் வேனுழைந்தாற் போல்.

### தேக மநித்திய மென்பதற்குப் பிரமாணம்.

### மஹாபாரதம் ஆரண்ணியபருவம்.

𑌅𑌹𑌨𑍍𑌯𑌹𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍀𑌹 𑌯𑌮𑌾𑌲𑌯𑌮𑍍 ।
𑌶𑍇𑌷𑌾𑌃 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌕𑌿𑌮𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑌤𑌃 𑌪𑌰𑌮𑍍 ॥

(இ - ள்.) பிராணிகள் தினந்தோறும் யமலோகத்தை யடைந்துகொண்டிருக்கிறார்கள். ஜீவித்துக்கொண்டிருக்கிற மற்றவர்கள் தாங்கள் கல்லைப்போல் ஸ்திரமாயிருப்போமென்றெண்ணுகிறார்கள். இதைவிட ஆச்சரியம் வேறென்ன விருக்கிறது.

### பர்த்ருஹரி.

𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌗𑌤𑌾𑌗𑌤𑍈𑌰𑌹𑌰𑌹𑌃 𑌸𑌂𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 𑌜𑍀𑌵𑌿𑌤𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑌾𑌰𑍈𑌰𑍍𑌬𑌹𑍁𑌕𑌾𑌰𑍍𑌯𑌭𑌾𑌰𑌗𑍁𑌰𑍁𑌭𑌿𑌃 𑌕𑌾𑌲𑍋𑌽𑌪𑌿 𑌨 𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇 । 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌜𑌨𑍍𑌮𑌜𑌰𑌾𑌵𑌿𑌪𑌤𑍍𑌤𑌿𑌮𑌰𑌣𑌂 𑌤𑍍𑌰𑌾𑌸𑌶𑍍𑌚 𑌨𑍋𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌪𑍀𑌤𑍍𑌵𑌾 𑌮𑍋𑌹𑌮𑌯𑍀𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌮𑌦𑌿𑌰𑌾𑌮𑍁𑌨𑍍𑌮𑌤𑍍𑌤𑌭𑍂𑌤𑌂 𑌜𑌗𑌤𑍍 ॥ 𑌵𑌯𑌂 𑌯𑍇𑌭𑍍𑌯𑍋 𑌜𑌾𑌤𑌾𑌶𑍍𑌚𑌿𑌰𑌪𑌰𑌿𑌣𑌤𑌾 𑌏𑌵 𑌖𑌲𑍁 𑌤𑍇 𑌸𑌮𑌂 𑌯𑍈𑌃 𑌸𑌂𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌵𑌿𑌷𑌯𑌤𑌾𑌂 𑌤𑍇𑌽𑌪𑌿 𑌗𑌮𑌿𑌤𑌾𑌃 । 𑌇𑌦𑌾𑌨𑍀𑌮𑍇𑌤𑍇 𑌸𑍍𑌮𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌦𑌿𑌵𑌸𑌮𑌾𑌸𑌨𑍍𑌨𑌪𑌤𑌨𑌾 𑌗𑌤𑌾𑌸𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌂 𑌸𑌿𑌕𑌤𑌿𑌲𑌨𑌦𑍀𑌤𑍀𑌰𑌤𑌰𑍁𑌭𑌿𑌃 ॥ 𑌆𑌯𑍁𑌰𑍍𑌵𑌰𑍍𑌷𑌶𑌤𑌂 𑌨𑍃𑌣𑌾𑌂 𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌂 𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌤𑌦𑌰𑍍𑌧𑌂 𑌗𑌤𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌧𑌸𑍍𑌯 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌚𑌾𑌰𑍍𑌧𑌮𑌪𑌰𑌂 𑌬𑌾𑌲𑌤𑍍𑌵𑌵𑍃𑌦𑍍𑌧𑌤𑍍𑌵𑌯𑍋𑌃 । 𑌶𑍇𑌷𑌂 𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌵𑌿𑌯𑍋𑌗𑌦𑍁𑌃𑌖𑌸𑌹𑌿𑌤𑌂 𑌸𑍇𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑍍𑌨𑍀𑌯𑌤𑍇 𑌜𑍀𑌵𑍇 𑌵𑌾𑌰𑌿𑌤𑌰𑌙𑍍𑌗𑌚𑌞𑍍𑌚𑌲𑌤𑌰𑍇 𑌸𑍌𑌖𑍍𑌯𑌂 𑌕𑍁𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

(இ - ள்.) சூரியனுடைய உதயாஸ்தமனங்களினால் ஆயுள் நாசமடைகிறது. செய்தகாரியங்களையே பின்னும் பின்னுஞ் செய்து வருகிறதனாற் காலம் போவது தெரிகிறதில்லை. பிறப்பு, கிழத்தனம், துன்பம் மரண மிவைகளைப் பார்த்தும் பயமுண்டாகிறதில்லை. மோகத்தைக் கொடுக்கிற அஞ்ஞானமாகிற சாராயத்தைக் குடித்து ஜனங்கள் பைத்தியம் பிடித்தலைகிறார்கள். நம்முடைய தாய்தந்தையரும் நம்முடன்கூட விருத்தியடைந்தவர்களும் இறந்துபோனார்கள். நாமும் மரணத்திற்குத் தினந்தோறும் நெருங்கிவருகிறோம். மணற்தரையான ஆற்றோரத்திலுள்ள மரங்களுக்கொப்பான அவஸ்தையையடைந்திருக்கிறோம். மனிதர்களுடைய ஆயுளில் நூறுவருஷமென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இதிற்

பாதி நித்திரையிற் செல்லுகின்றது. மற்றப்பாதியிற்பாதிவாலிபத்திலும் கிழத்தனத்திலுஞ் செல்லுகின்றது மிச்சமுள்ளதோ வியாதி, காமவிகாரம், துக்கம் ஊழிய முதலியவைகளினுற் செலவழிக்கப்படுகிறது. ஆகையால், ஜீவித்திருப்பது ஜலத்திலலைபோற் சஞ்சலமாயிருக்கையாற் பிராணிகளுக்கு ஸௌக்கியம் (சுகம்) எப்படியுண்டாகும்.

துவாதசமஞ்சரி.

தி நயாமிநெ) ஸாயம் ப்ராதஃஶிஶிர வஸந்தௌ வுநராயாதஃ| காலஃ க்ரீடதி ஹுந்த்யா யுஸ்தத பி நமுஞ்சத்யாஶா வாயுஃ ||

(இ - ள்.) பகற்போகிறது, இரவுவருகிறது, சூரியன் அஸ்தமநமாகிறது, பிறகு உதயமாகிறது, சிசிரருது போகிறது, வஸந்தருது வருகிறது, (இப்படி ஒன்றுபோய் மற்றொன்று வருகிறதாய்) காலமானது விளையாடுகிறதினுலே ஆயுள் போகிறது. அப்படியிருந்துங்கூட ஆசையாகிற பிசாசு விடுகிறதில்லை.

திருக்கடைக்காப்பு.

தந்தையார் போயினர் தாயரும் போயினர் தாமும் போவார், கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார் கொண்டு போவா, ரெந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியாலேழை நெஞ்சே, யந்தணு ரூர்தொழு துய்யலா மையல்கொண்டஞ்ச னெஞ்சே.

தொண்டரடிப் பொடியாழ்வா ரருளிய திருமாலை.

வேதநூற் பிராயம் நூறு மனிதர்தாம புகுவரேனும்
பாதியு முறங்கிப் போகும் நின்றதில் பதினையாண்டு
பேதை பாலகனதாகும பிணிபசி மூப்புத்துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன ரங்கமா னகரு ளானே.

பட்டணத்தார்.

வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானெழிந்தாற்
றினைப்போ தளவுநில் லாதுகண் டாய்சிவன் பாதநினை
நினைப்போரை மேவு நினையாரை நீங்கிந் நெறியினின்று
லுனைப்போ லொருவருண் டோமன மேயெனக் குற்றவரே.

ஞானவாசிஷ்டம்.

நிதியுமரசுஞ்செயலு மிவ்வுடம்பும் வேண்டுவன நிற்கினன்றே, விதியில்வரு காலனுற் சிலநாளி லிவையெல்லாம் விந்து

போகு, முதிரமொடு தசையுடைத்தா யுடையவதி னியல்பாய்த் தாழ்ந்தோ ருயர்ந்தோ ரொத்தே, வதிகசரா மரணமுறுந் தர மறியாதிவ்வுடலி லழுகென் கொல்லோ.

சித்தர் பொன்றுவர் துருவனுஞ் சிதைகுவன் சிவனயன் மிரு மார்பன்,றத்து வத்தனி லொனறுலர் காலமுந் தருமமு முடிவாகு, மத்த வானும்போ மயக்கமே தருவதாய் வாக்கொடு ரெவிக்கெட் டாச், சுத்த மாய்பொரு ளொன்றினு லிகழ்வுறத் தொல்றுல கிழி வாகும்.

திருமழிசைப் பிரான்.

இன்றுசாதல் நின்றுசாதலன்றி யாரும் வையகத்
தொன்றினின்று வாழ்த லின்மை கண்டுநீச ரென்கொலோ
அன்றுபா ரளந்த பாத போதையுன்னி வானின்மேல்
சென்று சென்று தேவரா யிருக்கிலாத வண்ணமே.

தாயுமானசுவாமிகள்.

பொய்யெல்லா மொன்றாய்ப் பொருத்தி வைத்தபொய்யுடலை
மெய்யென்றான் மெய்யாய் விடுமோ பராபரமே.

தேவாரம்.

நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டா
லுடலினர் கிடந் தார்முனி பண்டமே.

திருவாய்மொழி.

நினைப்பான் புகில்கட லெக்கலில் நுண்மணலி லெப்பலர்
எனைத்தோ ருகங்களு மிவ்வுல காண்டு கழிந்தவர்
மனைப்பான் மருங்கற மாய்தலல் லான்மற்றுக் கண்டிலம்
பனைத்தாள் மதகளி றட்டவன் பாதம் பணிமினோ.

சூதசங்கிதை அநித்தியவத்து விசாரமுரைத்த அத்தியாயம்.

ஆன்மாவல் லாதசட வத்துக்க ளானகடா திகளா ராயின், மான்மாற வுயர்தவத்தி ரமித்தியமே யாயிருக்கும் வகைபா லாதி, யூன்மாறு விருத்தபரி யந்தமனு பவந்தானே யுலகிற் சில்லோர், நான்மாறுச் செயப்படுதன் மட்டுமேநித் தியமென்று நவலு வார்கள்.

வெளியுமவ்வியத்தத் தொடுங்கும் பூதங்கள் வீதலிற் பௌதிக மனைத்துங், களியற நசிக்கும் பிரமன் மாலாதிக் கடவுளர் யாவரு நசிப்பா, ரொளிமய மான பரசிவ பெருமா னொருவனே யெற்றைக்கு முள்ளோன், றெளிவற விவ்வா றுணர்ந்தவன் முத்தி சிவனுறுதற் கையமொன் றின்றே.

## கசு - வது சம்வாதம்.

கரணவொழிவைக் காண்டல் நன்றெனல்.

சி: சுவாமி! தனுவெனுமுடல் அசுத்தம் துக்கம் அநித்திய மாயின் கரணங்க ளெத்தன்மையன?

கு: தனு: பஞ்சீகரண பூதங்களா லாக்கப்பட் டிருத்தல் போன்று கரணங்களும் அபஞ்சீகிருத பூதங்களா லாக்கப்பட் டிருத்தலின் அவைகளும் அசுத்தம் துக்கம் அநித்தமே.

சி: இவற்றை நன்கு விளக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கரணமென்பது ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயமெனச் சொல்லப்பட்டு ஞானேந்திரியபஞ்சகமும் கருமேந்திரியபஞ்சகமும் புறக்கரணமாயும், அந்தக்கரணசதுஷ்டயம் அகக்கரணமாயு மிருக்கும். சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்ஙுவை, ஆக்கிராண மென்பவை ஞானேந்திரியபஞ்சகம்; வாக்கு, பாணி, பாதம், பாயுரு உபத்தமென்பன கருமேந்திரியபஞ்சகம்; மனம், புத்தி, சித்தம் அகங்காரமென்பன அந்தக்கரணசதுஷ்டயம். விஷய ஞானமும் கிரியையு முண்டாவதற்கு இவைக ளேதுவா யிருத்தல்பற்றிக் கரணங்களென்று சொல்லப்படுகின்றன. • சரீரத்திலுள்ள காதுமுதலிய பொறிகளுடன் உற்பூதமாகாமற் கூடி வெளிவிஷயங்களை யறிதற்குச் சாதனமா யிருப்பது ஞானேந்திரியமெனப்படும். உற்பூதம்-வெளிப்பட்டுத் தோன்றல். சரீரத்திலுள்ளவாய் முதலியவைகளுடன் உற்பூதமாகாமற்கூடிவசனித்தலாதித்தொழிலியற்றுவதற்குச் சாதனமாயிருப்பது கன்மேந்திரியமெனப்படும். சரீரத்திலுள்ள கண்ட முதலியவைகளுடன் உற்பூதமாகாமற்கூடிச்சங்கற்ப விகற்பமாதி விருத்திகளுக்குச் சாதனமாயிருப்பது அந்தக்கரண மெனப்படும். இக்கரணங்கள் பூதக்களப்பா யிருத்

தலால் அசுக்தமும், தன்னையுடையவனை ஓயாது விஷயாதிகளைக் காண்டலாதி வாயிலாகத் துக்கத்தை யுண்பெண்ணுவதால் துக்கமும், சிருஷ்டியினாரம்பத்தில உற்பத்தியையும் சம்மாரகாலத்தில் நாசத்தையு மடைவதா யிருப்பதால் அநித்தியமுமாம். இவைகளைப் பிரயத்தன பூர்வகமாக வடக்கித் தமவசப் படுத்தினவனுக்கே சமாதி வாயிலாகத் தத்தரிசனமுண்டாகும். ஆதலால் இவைகளின் ஒழிவைக் காண்டலே முமுட்சுவிற்கு நன்றாம்.

சி: கரணங்களை யொழிக்கவேண்டு மெனபதற்குப் பிரமாணங்களுண்டோ ?

ஆ: கீழ்வருவனவே.

சுபாலோபநிஷத்.

ஶாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு: ஸமாஹிதோ
ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யதி ஸர்வஸ்யாத்மா பவதி॥

(இ - ள்.) வெளி யிந்திரியங்களையும் உள்ளிந்திரியங்களையு மடக்கினவனும் பொறுமையுள்ளவனும ஸமபுத்தி யுள்ளவனும இருந்துகொண்டு மனதி லாத்துமாவையே பார்க்கிறவன் ஸகலத்திற்கு மாத்துமாவாகிறான்.

பகவத்கீதை.

இந்த்ரியாணி மநோ புத்திரஸ்யாதிஷ்டாநமுச்யதே।
ஏதைர்விமோஹயத்யேஷ ஜ்ஞாநமாவ்ருத்ய தேஹிநம்॥

(இ-ள்) இந்திரியங்களும் மனமும புத்தியும இந்தக் காமத்துக்கு ஆசிரயமென்று சொல்லப்படுகின்றன. இந்தக் காமமானது இந்திரியங்களாலே ஞானத்தை மறைத்துத் தேகமுடையவரை நாநாவிதங்களாக மோஹிக்கச் செய்கிறது.

திருவாய்மொழி.

புலனைந்து மேயும பொறியைந்து நீங்கி
நலமந்த மில்லதோர் நாடு புகுவீர்
அலமந்து வீய வசுரரைச செற்றான
பலமுந்து சீரிற படிமினோ வாதே.

துகளறுபோதம்.

மண்முதலாய் நாதாந்த மாய்வந்த தத்துவத்தி
னுண்மையறிந் தெல்லா மொழிந்தாயே—வெண்ணிலது
தத்துவா தீதமெனச் சாற்றுங்கா ணசைவமறை
யதத்துவா வெல்லா மற.

ஞானவாசிஷ்டம்.

மனமணி பேதச் சேற்றின் மறைந்தொரு வருக்குந் தோன்றா
கனமுற விவேக நீராற் கழுவினற் சித்தி காட்டும்
வினவுறு விவேக வன்பான் மெய்ம்மையை மதியாற் கண்டு
சினமுறு பொறியை வென்று தீர்வரு பிறவி தீர்வாய்.

பகவற்கீதை. (மொழிபெயர்ப்பு)

வாங்கி யைம்பொறி நின்ற மனந்தனை
நீங்கி டாவகை நெஞ்சு விருத்தியே
தீங்கி யாவையுஞ் சிந்தை செயாவணம்
பாங்கி யாதது வேபயில் வாயரோ.

பிரபுலிங்கலீலை.

இந்திய மோரொன் றுய்விட் டிடின்மற்றை யொன்று சாரு
முந்திய மனமழிப்ப முற்றும்போ மணிய பாம்பி
னைந்தலை களினு ளொன்றை யறிந்திடின் மற்றென் றுலஞ்
சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ.

சொக்கநாதர் வெண்பா.

எக்கால மெய்க்கே யிரையிடுத லிற்றிடுமோ
வெக்கால மிக்கரண மிற்றிடுமோ—வெக்காலம்
பேசானு பூதி பிறந்திடுமோ வென்னுளத்தி
ஞசானே சொக்கநா தா.

எதிர்காலத்திரங்கல்.

அச்சப் புலனாற் சுழன்று திரியாம
லுச்சிக் கதிர்ப்படிக மொவ்வுநா ளெந்நாளோ.

## கஎ-வது சம்வாதம்.



புவனவொழிவைப் பொருந்தல் நன்றெனல்.

சி: சுவாமி! புவன மென்னுமுலகம் தாங்கள் யாது கூறினும் நித்தியம் (அழியாதது) போல் காணப்படுதலின் அதனை மித்தையென லெப்படி.

கு: உலகம் காரியமாய் அவயவ முடையதாய்ச் சடமாயிருத்தலின் அநித்தியமே யாம். முன்னும் பின்னு மில்லாது ஒருகாலத்திருப்பது காரியமாதலின் அஃது அவயவமுடையதாயும் சடமா

யும் இருக்கும். அவயவமுடையதாயும் சடமாயுமிருக்கும் உலகம் அநித்தியமென்பதற்கு யாதுந் தடையின்று. மேலுமிது காரியமாயிருத்தலின் அசுத்தமும் சீதோஷ்ணாதிகளாலே துக்கத்தைத் தருவதாயிருத்தலின் துக்கமுமாம். அசுத்தமும் துக்கமுமாய அநித்தியவடிவ உலகத்தில் அவாநீங்கினவருக்கே நிரதிசயாநந்தப் பேறுண்டாம். துக்கமாயிருப்பது அநித்தியமாயிருந்தாலென்ன? நித்தியமா யிருந்தாலென்ன? பகைவனை யொழிக்க வொவ்வொருவனும் முயற்சிப்பதுபோல் எவ்வாற்றானும் பகையாயிருக்கும் உலகவொழிவைக் காண்டலே முமுட்சுவிற்குச் சிறப்பாம். உலகவொழிவைக் காண்டலாவது உலகம் தன்காரணமாகிய மாயையைத்தவிர வின்றென்றும், அதுவும் பிரமத்தின் அநிர்வசநீய சத்தியாயிருத்தலின் பிரமத்தைத் தவிர வின்றென்றும், பிரமமேயுள்ளதென்றும், உலகம் விசாரணை வாயிலாகப் பொய்யென்று நிசசயிக்கப்பட்டவிடத்துப் பிரம்ம காரணமென்னும் பெயரைப் பெறுமற்போதலின் அது காரண காரியரகிதமென்றும், அது தனது நிசவடிவமாக விருத்தலின் அது தானேயென்றும் காண்டலாம்.

சி: தேவரீரால் புவனம் அநித்தியமென்பதுபற்றி முன்னர்க் கூறியிருப்பதுடன இப்போதும் கூறப்பட்டது. ஆயினும் புவனம் அநித்தியமென்பதுபற்றி யின்னும் பிரமாணங்களறியுமாறு விரும்புகின்றேன.

கு: கீழ் வருவனவே.

மைத்திராயணி உபநிஷத்.

அத கிமேதைர்வா பரே(அ)ந்யே கந்தர்வாஸுரயக்ஷ
ராக்ஷஸபூதகண பிஶாசோரகக்ரஹாதீநாம் நிரோத
நம் பஶ்யாம:। அத கிமேதைர்வா(அ)ந்யாநாம் ஶோஷணம்
மஹார்ணவாநாம் ஶிகரிணாம் ப்ரபதநம் த்ருவஸ்ய ப்ரசல
நம் ஸ்தாநம் வா தரூணாம் நிமஜ்ஜநம் ப்ருதிவ்யா: ஸ்தாநா
பஸரணம் ஸுராணாமித்யேதத்விதே(அ)ஸ்மிந் ஸம்ஸாரே
கிம் காமோபபோகை:॥ யைரேவாஶ்ரிதஸ்யாஸக்ருதி
ஹாவர்தநம் த்ருஶ்யத இத்யுத்தர்துமர்ஹஸீத்யந்தோதபா
நஸ்தோ பேக இவாஹமஸ்மிந் ஸம்ஸாரே பகவம்ஸ்த்வம் நோ க
திரிதி த்வம் நோ கதிரிதி॥

(இ - ள்.) பின்னு மிவர்களைவிடச் சிரேஷ்டர்களாயிருந்த அன்னியர்களான கந்தர்வர்கள், அஸுரர்கள், யக்ஷராக்ஷஸர்கள், பூதகணங்கள், பிசாசுகள், ஸர்ப்பங்கள், கிரகங்கள் முதலானவர்களும் நசித்துப்போனதைப் பார்த்திருக்கிறோம். பின்னுமிவர்களைவிட வேறான மஹாஸமுத்திரம் வற்றிப்போகிறது. மலைகள் விழுகின்றன. துருவன்ஸ்தானத்தைவிட்டு நழுவிப்போகிறான். வாயுவாகிற கயிறுகள் அறந்துபோகின்றன. பூமி முழுகிப்போகிறது. தேவதைகள் ஸ்தானம்விட்டோடிப்போகிறார்கள். இந்தலோகங்களெவர்களாலே பூர்ணமாயாசிரயிக்கப்பட்டிருக்கின்றனவோ (அநுபவிக்கப்பட்டிருக்கின்றனவோ), அவர்கள் அடிக்கடி இந்தலோகத்திற்குத் திரும்பி வருதலைப் பார்க்கிறோம். இப்படிப்பட்டதாயிருக்கிற காம போகங்களினாலென்ன பிரயோஜனம்? பாழுங்கிணற்றிலிருக்கிற தவளையைப்போல நானிந்த ஸம்ஸாரத்திலிருக்கிறேன். கரையேற்றி வைக்கிறதற்கு நீர் அருகராயிருக்கிறீர். ஓ! பகவானே! எனக்கு நீர்தான கதி, நீர்தான் கதி.

சிவபோகசாரம்.

எத்திசையு மெவ்வுலகு மெத்தொழிலு மெப்பயனு
நித்தியமென் றென்று நினையாதே - புத்தியினாற்
கண்ணாடி யிற்றோன்றி மாய்ந்துவிடுங் காணிவற்றைக்
கண்ணாடி யிற்கனவிற் காண்.

காண்பதும்பொய் கேட்டதும்பொய் காரியம்போ லேயிதமாய்ப்
பூண்பதும்பொய் யெவ்விடத்தும் போகமும்பொய் - மாண்பாகத்
தோற்றியினப வெள்ளமாய்த துலங்கிமெய்ஞா னுட் சயபந்தன்
வீற்றிருப்ப தொன்றுமே மெய்.

ஞானசாகர வெண்பா.

மன்னகர் மன்றுமனை வாவிகூ பங்கழனி,
என்ன தென வந்தவர்க ளெல்லையிலை, யின்னமது
சொல்லவரு வாருந் தொலைவரிய ரென்றறிந்து
நில்லதனை வேறாக நீ.

திருவாய்மொழி.

குணங்கொள் நிறைபுகழ் மன்னர் கொடைக்கடன் பூண்டிருந்
திணங்கி யுலகுட னாக்கிலு மாங்க வனையில்லார்
மணங்கொண்ட போகத்து மன்னியு மீள்வர்கண் மீள்வில்லை
பணங்கொ ளரவணை யான்திரு நாமப் படியினே.

ஞானவாசிஷ்டம்.

வந்தாறு போதி னன்றாய் வரியளி சிறகு போலச்
சந்ததஞ் சலித்து தள்ளற் கரியதாம போகந் தனனை
முந்துநோய் மரணம மூப்பு முதலவாந துயாகட கஞ்சிச்
சிந்தையில விருமபே னொருமன சோவரும பதத்தைச சேர்வன்.

பட்டினத்தடிகள்.

முடிசார்ந்த மனனரு மறறுமுள் ளோரு முடிவிலொரு
பிடிசாமப ராயவெநது மணணாவ துங்கணடு பினனுமிநதப்
படிசாாந்த வாழ்வை நினைபபதல லாறபொனனி னமபலவ
ரடிசாாநது நாமுய்ய வேணடுமென றேயறி வாரிலையே.

மகாராஜா துறவு

பஞ்ச பூத மழிநதுபோம பாநத திஙக ளுடுக்கள்போம்
வஞ்ச வசுரா மடிநதிடுவா மாகா பகமபோம வல்லரக்கா
துஞசு வாாகள போகிபசுந் துஞசும பிரமன பதநதானும்
துஞசுந திருமால் பதநதுஞசுந துஞசா தொனறே பரமபதம.

தாயுமானசுவாமிகள்

சகத்தின வாழ்வைச சதமென வெண்ணியே
மிகுதத தீமை விளைய விளைக்கினறே
னகதது ளாரமு தாமைய நினமுதது
சுகததினை வநது தோய்வதெக காலமே.

சூதசங்கிதை.

வெளியுமவ் வியத்தத் தொடஙகும பூதங்கள் வீதலிற் பௌதிக மனைத்துங், களியற நசிக்கும பிரமன மாலாதிக் கடவுளா யாவரு நசிப்பா, ரொளிமய மான பரசிவப் பெருமா னொருவனே யெற்றைக்கு முள்ளோன, றெளிவற விவவா றுணாநதவன முத்தி சிவனுதற கையமொன் றினறே

---

கக - வது சம்வாதம்.

போகவொழிவைப் பொருந்துநல் நன்றெனல்.

சி: புவனவொழி வுணடாதற கேதுவென்னை?

கு: போகவொழி வுண்டானவனுக்குப் புவனவொழிவு விரைவிலுணடாகும.

சி: அதனை நன்கு விளக்கல் வேண்டும்.

கு: போகமாவது இனபத்துன்பங்கள் புலப்பட (விளங்கத்) தோனறல. ஆயினும இஙகுப் போகம் என்பது இன்பம புலப்படத் தோன்றலாம. இதனை யடைதற்குச சரீரம் திடமா யிருத்த

துறைவின்றிய பொருளும் வேண்டும். இவ்வின்பமும் ஒருபெயார்க்கு மிடத்துத் துன்பமாகவே முடிதலால இத்தனைத் திருவினை யொழிக்க முயலவனுபோனறு முயன்றொழிகக வேண் டிபாருவித்திய வடிவ போகத்தைத் விடடவனுக்கு இது வருதற்கு வாயிலுலா ளள புவனததின்கண் விருபபமிலலாதுபோம. ஆதலால் போகமே இவே புவனவொழிவிறகுக் காரணமாம. போகத்தை யனுபவித்தற் கிடமாய தேகமும, அதறகுத துணைக்காரணமாய பொருளும அதனையனுபவிததறகுப போக்தாவாயுள்ள அந்தக் கரணசகித ஆபாசனும இலையுதலிலவாநதனமையனவா யிருத்த லின், அகாததா அபோகதாவா யிருகக விருபபுழு விவேகி, ஒரு காலும் போகததை விருமபான! விருமபான!! ..

சி: போகம தீஙகு பயபபதெனபது பறறியும, அஃதநிகதிய மெனபது பறறியும பிரமாணஙக ளறிய விருமபுகினறனன.

கு: கீழ்வருவனவே.

துவாதச மஞ்சரி.

நளிநீதளகதஜலமதிதரலம் | தத்வஜ்ஜீவித மதிசயசபலம்| விலிவ்யாயலிமானைநக்ரஸ்தம் லோகம் சோகஹதம்ச ஸமஸ்தம்||

(இ - ள்.) தாமரையிலையின்கண சலமானது சதாசலிப்பது போல், ஜனன மரணஙகளுடைததாய் வாதபிதத சிலேஷ்ம தொநதரோகங்களைப்பெறறு அகங்காராதி தாககுணஙகள நிறை ந்த இத்தேகாதிப் பிரபஞசபோகாதிகள் யாவும அழிநதுவிடுமாத லால நித்தியமாகியகோவிநத நாமஸமரணையைச சதாசெய்வாயாக.

பகவத்கீதை.

அநேகசித்த விப்ராந்தா மோஹஜால ஸமாவ்ருதா:|
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகேऽசுசௌ||

(இ - ள்.) பலவிதமான சஞசலததுடன மயக்கமடைநதவாக ளாயும, மோகவலையினறச் சூழப்படடவாகளாயும, காமபோகங்க ளிலே அதிக ஆசையுடையவாகளாயு மிருப்பவாகள் அசுததமான நரகத்தில விழுகிறாகள்.

மநீஷாபஞ்சகம்.

யத்ஸௌக்யாம்புதிலேசலேசத இமே சக்ராதயோ நிர்வ்ருதா: | யச்சித்தே நிதராம் ப்ரசாந்தகலநே லப்த்வா முநி

[illegible]

(இ - ள்.) தேவராஜனாகிய தேவேந்திரன் முதலியோர்ச் சேர்வன். ளநுபவிக்கும் ஆனந்தமானது இந்தப்பிரமானந்தத் ...டைய லேச லேசமென்று சத்விசாரணையினா லறிந்து சங்க ... நாசத்தைப் பெற்று உபசாந்தி யடைந்த உண்மைஞானிகணித்தியமா யுள்ள பிரமானந்த வாழ்வி லிடைவிடாமல் பேரின்ப முற்று வாழ்வர்.

திருவாய்மொழி.

வாழ்ந்தார்கள் வாழ்ந்தது மாமழை மொக்குளின் மாய்ந்து மாய்ந், தாழ்ந்தாரென் றல்லா லன்றுமுத லின்றறுதியா, வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பரென்ப தில்லை நிற்குறில், ஆழ்ந்தார் கடற்பள்ளி யண்ண லடியவ ராமினே.

சூதசங்கிதை.

அமையாவிச் சுகமனைத்து மநித்தியமென் றறிந்திருந்து, முமைபாகன் திருவடிகள் புகுதருமற் பலனுயிருஞ், சுமையார் மோகத்தாலிச் சுகபோக மேவிரும்பு, மிமையாரும் புகழ்முனிவி ரென்னுரைக்கேன் மாயைவலி.

தருபர லோகத்தின்பமுங் கரும சாத்திய மாதலினதுவு மருவநித் தியமே.

சிந்தாமணி.

தொல்லை நம்பிறவி யெண்ணிற் றொடுக்கடன் மணலு மாற்றா
வெல்லையி லவற்று ளெலா மேதிலம் பிறந்து நீங்கிச்
செல்லுமக் கதிக டம்முட் சோகினா சோநது நின்ற
வில்லிடை யிரண்டு நாளைச் சுற்றமே யிறங்கல வேண்டாம்.

ஞானசாகரவெண்பா.

ஏற்கும் புவியிடத்தி லிந்திரஜா லங்கனவு
நீர்க்குமிழி பேய்த்தோ ணினைப்புமறப்—பார்க்குமது
போலநிலை நில்லாத பொய்வாழ்வை மெய்வாழ்வென்
றேலநிலை நில்லாவா றென்.

சிவானந்தமாலை.

துன்மயக்க மாகிப்பொய்த் துட்டபந்த நோயதனை
இன்பமெனக் கொண்டிங் கிழந்தேனே—யுன்பிலெழுந்
தோவாத மெய்யுணர்வா யுள்ளேநின் றுளளுருக்குந்
தாவாவா னந்தந் தனே.

யீஉ.-ஆ தவிகாலோத்திரம்.

ஒருமபாரு ளனடிடா நல் து முளதாகிச் சிறப்பு டைத்தா
யிருவினை யின் மின்பத்தை யளிப்ப தாகும்
பொருவிலா ய தேவர் லன்பு பொருந்திடா தாரு முண்டோ
திருவுலா வகதினுவைவிச் சிறந்தசான் றோர்க ளாமே.

சிவபோகசாரம்.

மின்போலத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்து
மென்போ லிகடிரபென் றெண்ணுவார்—தன்போத
மில்லார் சிவபோக மென்று மருந்திடுவார்
நல்லார் திரமிதுவென் றார்.

எத்தனைதான் கற்றாலு மெத்தனைதான் கேட்டாலு
மெத்தனைசா தித்தாலு மின்புறார்—சித்தமே
மெய்யாகத் தோன்றி யிடுமுலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றாத போது.

தேவாரம்.

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்தபறிதான்
றாழாதறஞ் செய்ம்மின்றடங் கண்ணான் மலரோனும்
கீழ்மேலுற நின்றான்றிருக் கேதாரமெ னீரே.

குலசேகராழ்வாரருளிய பெருமாள் திருமொழி.

ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளுஞ் செல்வமும் மண்ணரசு மியான்வேண்டேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங்க டச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே.

உபதேசகாண்டம்.

மக்களை நிதியைப் பேதை மகளிரை மருங்கு சூழ்ந்த
ஒக்கலை நோக்கி யேமாந் துறுகதி நோற்க லராய்
மிக்கிழி நரகத் தாழ்வர் மெண்சிறு பறவைக் கந்தோ
கக்கவெஞ் சுழனுக் கண்டை கொண்டுவிண் டுயலா தன்றே.

கந்தபுராணம்.

காடு போந்தன னிந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது சயந்தனுஞ் சிறையிடைப் பட்டான்
நாடில் விண்பதஞ் செய்கையி தெம்பிரா னல்கும்
வீடதே யலாற் றுன்பறு மாக்கம்வே றுண்டோ.

## ௨௦. வது சம்வாதம்.

### விகங்கமார்க்கமே மேவுதனன்றெனல்.

சி: சுவாமி! தனு கரண புவன போகமியாவும் துக்கமாயிருக்குமாயின் அவற்றை விடுவதெப்படி?

கு: தானல்லாததை யானெனக்கருதும் மயக்கமொழிந்த காலத்தில் இவற்றி லபிமானமொழியும். அபிமான மொழிவே அவற்றினை விடுதலாம்.

சி: அபிமான மொழியாவிட்டால் யாதுண்டாகும்?

கு: பிறப்பிறப்பாதிவடிவ சம்சாரமுண்டாம்.

சி: ஈதெதனு லொழியும்?

கு: பிபீலிகா மார்க்கத்திற் செல்லுகலொழிந்து விகங்க மார்க்கத்திற் றிடப்படச் சென்று தனது நிஜவடிவைச் சந்தேக விபரீதமின்றி யுள்ளவா றறிதலா லொழியும்.

சி: அவற்றை நன்கு விளக்கவேண்டும்.

கு: மோக்ஷ மடைவதற்குரிய வழிகளிரண்டு. அவை சுகக்கம், வாமதேவமார்க்கமென்பனவாம். சுகமார்க்கமென்பது இத்தேகம் போனவுடனே சிறந்தையுமொழியும் செல்லா நிலைமைத்தாகிய (சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமான) மோக்ஷத்தைபடைவதாம். சுகமார்க்கமெனினும் விகங்கமார்க்கமெனினும் ஒக்கும். சுகம் அல்லது விகங்கமென்பது பட்சி. (குறித்தவிடத்திற்குப் பட்சி பறந்துபோவதுபோன்று இத்தேகம்போனவுடனே மோக்ஷமடைவதாம்.) வாமமார்க்கமென்பது கீழிட்ட சாதனங்களாய சரியை கிரியை யோகம் அல்லது கர்மம் பத்திகளால் படிப்படியாகச் சென்று மோக்ஷமடைவதாம். வாமமார்க்கமெனினும் எறும்புமார்க்கமெனினும் ஒக்கும். பிபீலிகம்-எறும்பு. (குறித்தவிடத்திற்கு எறும்பு ஊர்ந்தூர்ந்து செல்வதுபோன்று கிரமக்கிரமமாய்ச் சென்று மோக்ஷமடைவதாம.) வாமமார்க்கமும் தேவயானம் பிதிர்யானமென்றிருவகைத்தாம். பிரமோபாசனையில் தற்பரனுள்ள புருஷன் இறக்குங்காலத்தில் சூரியமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு பிரமலோகத்திற்குப் போதல் தேவயானமாம். இஃதர்ச்சராதி மார்க்கமென்றும் சொல்லப்படும். பிரமோபாசனையில்லாத (கர்மாதிகாரியாய) புருஷன் இறக்குங்காலத்தில்

𑌕𑍋𑌵𑌿𑌹𑌂𑌗𑌮𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍋 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑌃 𑌪𑌿𑌪𑍀𑌲𑌿𑌕𑌾 | 𑌅𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌾
𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑍇𑌣 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍍𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌖𑍇𑌨 𑌵𑌾 | 𑌮𑌹𑌾𑌵𑌾𑌕𑍍𑌯𑌵𑌿𑌚𑌾
𑌰𑍇𑌣 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 | 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌰𑍂𑌪𑌂
𑌸𑌂𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌤 𑌸𑌮𑌾𑌧𑌿𑌤𑌃| 𑌶𑍁𑌕𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣 𑌵𑌿𑌰𑌜𑌾𑌃 𑌪𑍍𑌰𑌯𑌾𑌨𑍍𑌤𑌿
𑌪𑌰𑌮𑌂𑌪𑌦𑌮𑍍 | 𑌯𑌮𑌾𑌦𑍍𑌯𑌾𑌸𑌨 𑌜𑌾𑌯𑌾𑌸 𑌹𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍𑌪𑍁𑌨𑌃
𑌪𑍁𑌨𑌃| 𑌵𑌿𑌘𑍍𑌨𑌬𑌾𑌹𑍁𑌲𑍍𑌯𑌸𑌂𑌜𑌾𑌤 𑌅𑌣𑌿𑌮𑌾𑌦𑌿𑌵𑌶𑌾𑌦𑌿𑌹 | 𑌅𑌲
𑌬𑍍𑌧𑍍𑌵𑌾𑌪𑌿 𑌫𑌲𑌂𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌪𑍁𑌨𑌰𑍍𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌮𑌹𑌾𑌕𑍁𑌲𑍇| 𑌪𑍂𑌰𑍍𑌵
𑌵𑌾𑌸𑌨𑌯𑍈𑌵𑌾𑌯𑌂 𑌯𑍋𑌗𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌂 𑌪𑍁𑌨𑌶𑍍𑌚𑌰𑌨𑍍 | 𑌅𑌨𑍇𑌕
𑌜𑌨𑍍𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑍇𑌨 𑌵𑍈 𑌪𑌥𑌾|𑌸𑍋𑌽𑌪𑌿 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌂 𑌸𑌮𑌾
𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃𑌪𑌰𑌮𑌂𑌪𑌦𑌮𑍍 | 𑌦𑍍𑌵𑌾𑌵𑍇𑌤𑌾𑌵𑌪𑌿𑌪𑌨𑍍𑌥𑌾𑌨𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌕𑌰𑍌𑌶𑌿𑌵𑍌 | 𑌸𑌦𑍍𑌯𑍋𑌮𑍁𑌕𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌦𑌶𑍍𑌚𑍈𑌕𑌃 𑌕𑍍𑌰𑌮𑌮𑍁𑌕𑍍𑌤𑌿
𑌪𑍍𑌰𑌦𑌃𑌪𑌰𑌃| 𑌅𑌤𑍍𑌰𑌕𑍋𑌮𑍋𑌹𑌃𑌕𑌃𑌶𑍋𑌕 𑌏𑌕𑌤𑍍𑌵𑌮𑌨𑍁𑌪
𑌶𑍍𑌯𑌤𑌃 ||

(இ-ள்.) சுகர்முக்தர் வாமதேவர் முக்தர். அவர்களைத் தவிர முக்தியடைந்தவர்களில்லை. (இவ்விருவருடைய மார்க்கத்தைத் தவிர முத்திக்கு வேறு மார்க்கமில்லையென்பது தாத்பரியம்) இவ்வுலகத்திற் சுகமார்க்கத்தை எந்தத் தைரியசாலிகளநுசரிக்கிறார்களோ அவர்கள் சத்தியோ முத்தர்களாகிறார்கள். இவ்வுலகத்தில் வாமதேவ மார்க்கத்தை யெப்போதும் அநுசரிக்கிறவர்கள் பின்னும் பின்னும் பிறப்பையடைந்து சத்துவத்தோடு கூடிய யோகமார்க்கங்களினாலேயும் சாங்கிய (ஞான) யோகங்களினாலேயும் கருமயோகங்களினாலேயும் கிரம முக்தர்களாகிறார்கள். சுகமார்க்கம் வாமதேவமார்க்கமென இரண்டுமார்க்கங்கள் தேவனாலேற்படுத்தப்பட்டன. சுகமார்க்கமானது பக்ஷிமார்க்கம் என்றும், வாமதேவமார்க்கமானது எறும்புமார்க்கம் என்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. விதிவாக்கியங்களினாலேயாவது நிஷேதவாக்கியங்களினாலேயாவது மஹாவாக்கியவிசாரத்தினாலேயாவது சாங்கியயோக சமாதியினாலேயாவது அசம்பிரக்ஞாசமாதியினாலேயாவது தமதாத்தும சொரூபத்தையறிந்து பரிசுத்தமாயிருக்கிறவர்கள் சுகமார்க்கத்தினாலே மோக்ஷத்தை யடைகிறார்கள். யமம் முதலியன ஆசன முதலியன இவைகளாலுண்டாகிற ஆயாசத்தோடு கூடிய அடயோகாப்பியாசத்தினாலே அடிக்கடி யனேக தடைகளாலுண்டான அணிமாதி (சித்தி) களுக்குட்பட்டவனாய்

நல்ல பலனை யடையாமல் மறுபடி நற்குலத்திற்பிறந்து முந்திய (ஜந்மங்களின் கர்ம) வாசனையினாலேயே மறுபடி யோகாப்பியாசஞ்செய்து அநேக ஜன்மாப்பியாசத்தினால் வாமதேவமார்க்கத்தினால் அந்தவிஷ்ணுவினுடைய பரமபதமாகிற முக்தியை அடைகிறான். பிரம்மப்பிராப்தியைக் கொடுக்கத்தக்கதும் மங்களகரமானதுமாய இவ்விரண்டுமார்க்கங்க ளிருக்கின்றன. இவைகளிலொன்று சத்தியோ (இத்தேகம்போனவுடனே) முக்தியையும் மற்றொன்று கிரமமுக்தியையுந்தரத்தக்கன. சகலமுமொன்றென்னும அநுபவமுள்ளவனுக்கு இவ்விஷயத்தில் மோகமேது, சோகமேது.

பகவத்கீதை.

𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍁𑌰𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌯𑌾𑌨𑌘 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑍇𑌨 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

(இ - ள்.) ஓ பாபமற்றவனே! முன்னா இந்த உலகத்தில் (ஞானயோகத்தோடு பிரமநிஷ்டை செய்ய முயற்சியுள்ளவர்களான) சாங்கியர்களுக்கு (ஞானஞ்சித்திக்கும்பொருட்டுச் செய்ய வேண்டிய தியானமாகிய) ஞானயோகத்தினாலேயும் (கருமஞ்செய்து அதனால் சித்தசுத்தியாய்ப் பிறகு சாங்கியத்தில் பிரவேசிக்க விச்சிப்பவர்களான) கர்மயோகிகளுக்கு (நிஷ்காம) கர்மயோகத்தினாலேயும் இரண்டுவிதமான நிஷ்டைகள் என்னாலே சொல்லப்பட்டன.

மநுஸ்மிருதி.

𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌂𑌸𑍇𑌵𑍍𑌯 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑍇𑌤𑌿 𑌸𑌾𑌮𑍍𑌯𑌤𑌾𑌮𑍍 ।
𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌸𑍇𑌵𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌵𑍈 ॥

(இ - ள்.) பிரவிருத்தி மார்க்கத்தை அநுசரித்தவர் ஸ்வர்காதி போகங்களைத் தேவர்களுக்குச் சமமா யநுபவித்து (புண்ணியம் நசித்ததே பூலோகத்தில் வந்து ஜனிப்பார்கள்) நிவிர்த்தி மார்க்கத்தை அநுசரித்தவர்கள் அதே சரீரத்தில ஜனனமரணரகிதமான விதேகமுத்தி அடைவார்கள்.

விஞ்ஞானசாரம்.

ஞான மார்க்க மிருவகையாய் நவிலவர் விகங்கம் பிபீலிகையென்
றுன வவையில விகங்கமே யமல வேத முடிவதனில்
ஞான மாகும் பிபீலிகையே நவிறந் திரத்தின் ஞானமாம்
ஆன விகங்கத் துணராமற் றதனின் வழியே யுணர்ந்திடுவாய்.

## உக - வது சம்வாதம்.



### பிபீலிகாமார்க்கத்தின் பேதம் புகலல்.

சி: பிபீலிகைமார்க்கத்திற் பொருந்தினவர்கள் எத்தனமை யரா யிருப்பர் !

கு: கன்மநிஷ்டா பரராயிருப்பர்.

சி: கன்மநிஷ்டையாவதென்ன ?

கு: அது: சரியை, கிரியை, யோகம் அல்லது கர்மம், பத்தியாம்.

சி: இவற்றிற் கதிகாரிகள் யார் ?

கு: மலமும் விட்சேபமும் நீங்காதவர்கள். மலமென்பது பாவம். இஃது சுத்தவாசனையுண்டாவதினு லனுமிதத்தறியப்படும். விட்சேபமென்பது மனக்கலக்கம். நிறுத்தினவிடத்தி னில்லாமல் மனம் சிதறிப்போதலினுல் ஈதறியப்படும். இவ்விரண்டுமுடையார் நிமித்தம் கர்மமும் உபாசனையும் சொல்லப்பட்டன. மலமாவது விட்சேபமாவது உடையார் மந்தாதிகாரிகளெனப்படுவர்.

சி: அங்ஙனமாயின் விகங்கமார்க்கத்திற் பொருந்தியவர் எத் தன்மையரா யிருப்பர்.

கு: சுபகர்மத்தினுல் மலமும் ஈசுவரோபாசனையால் விட்சேபமும் ஒழிந்து சொரூபாவரணமாத்திர முடையவர்களாயிருப்பர். சொரூபாவரணம்—தனதுநிசவடிவை ஐயந்திரிபின்றி யுள்ளவாறறியாமை.

சி: பிபீலிகாமார்க்கத்திற் பொருந்தினவர்கள் என்னென்ன குணமுடையவர்களாயிருப்பர்.

கு: பெரும்பான்மையும் (1) அருளுடைமை, (2) புலால்மறுத்தல், (3) தவம், (4) கூடாவொழுககமின்மை, (5) கள்ளாமை, (6) வாய்மை, (7) வெகுளாமை, (8) இன்னுசெய்யாமை, (9) கொல்லாமை என்னும் குணமுடையவரா யிருப்பர்.

சி: இவற்றை யேடவ்வொன்ருய் விவரிக்குமாறு வேண்டுகின்றனன் ?

கு: (1) அருளுடைமை—தொடர்புபற்றுது இயல்பாக எல்லாவுயிர்களின்மேலும் செல்வதாகிய கருணை.

(2) புலால் மறுத்தல்—மாமிசம் புசித்தலைப் பிரயத்தனபூர்வகமாக வொழித்தல்.

(3) தவம்—மனம் பொறிவழிபோகாது நிற்றற்பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கல் முதலானவை.

(4) கூடாவொழுக்கமின்மை-வியபசார முதலிய தீயவொழுக்கங்களில்லாமை.

(5) கள்ளாமை-பிறருடைமையாயிருப்ப தியாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாமை.

(6) வாய்மை-உயிர்க்குறுதியைத் தரும வார்த்தை பேசுதல்.

(7) வெகுளாமை-சினஞ்செய்வதற்கேது ஒருவனிடத்துண்டாகிய விடத்தும் அதனைச் செய்யாமை.

(8) இன்னாசெய்யாமை-பயனோக்கியாவது கோபம்பற்றியாவது சோர்வுபற்றியாவது ஒருயிர்க்குத் துன்பந்தருவனவற்றைச் செய்யாமை.

(9) கொல்லாமை - பிராணிகளை மறந்தும் கொல்லுதலைச் செய்யாமை.

சி: சரியை, கிரியை, யோகம், ஞானம், பக்தி யென்பவைகளை நன்கு விவரித்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

சரியை.

கு: சிவாலயங்களில், அதிகாலமே திருவலகிடல், திருமெழுக்கால் மெழுகல், திருவிளக்கிடல், சுத்தனாக நந்தவனத்திற் சென்று தெரிந்து புஷ்பமெடுத்தல், கேமாலையாதிகட்டி ஈசனை திருமேனியிலணிவித்தல், தேவாரம் திருவாசகம் பக்தவிலாசம் ஆகமம் புராணம் இதிகாசங்கள் முதலானவைகளைப் பாராயணஞ் செய்தல், வில்வ முதலானவைகளைவைத்துப் பரிபாலனஞ் செய்தல், விபூதி ருத்திராக்ஷம் காஷாயம் இலிங்கம் பஞ்சாட்சரம் என்னும் முத்திரைகளில் ஏதேனுமொரு முத்திரையைத் தரித்த அடியார்களைக் கண்டால் பரம்பொருளை வழிபடுதல்போன்று வந்தன வழிபாடு செய்தல், சிவாலயம் விஷ்ணுவாலயம் பிரம்மாலயம் சாவடி சத்திரம் ஆகிய இவைகளை நூதனமாகச் செய்வித்தல், தினந்தோறுங் கங்கை முதலாகிய புண்ணியநதிகளில் ஸ்நானம் செய்தல், ஆலயங்களில் அங்கப்பிரதக்ஷணஞ் செய்தல், அடியளந்து நடத்தல், நூற்றெட்டு ஆயிரத்தெட்டெனவுந் தொகைப்படி பிரதக்ஷணஞ் செய்தல் முதலானவைகளாம்.

கிரியை.

சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் ஆகிய-ரு-ம் கோசலம், கோமயம், பால், தயிர், நெய், ஆகிய-ரு-ம் வாழைப்பழம், எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், நெல்லிப்பருப்பு, இளநீர், ஆகிய-ரு-ம் மற்றும் உபகரணமான பூஜா திரவியங்களும் சேர்த்து, ஆத்மசுத்தி, பூசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி ஆகிய பஞ்சசுத்தியும் சவுர பூசையுஞ்செய்து, சிவத்தியானம் பண்ணிப், பஞ்சபிர்ம்ம ஷடங்கந்யாச பஞ்சாக்கர, மந்திர உச்சாடனத்தால் ஆவாகன, அஸ்தாபன, சந்நிதாபன, சந்நிரோதன, சகளீகரண, பரிமீகரண, அவகுண்டன்; தேனு, யோனி, அமூர்த்தீகரண, லிங்கமுத்திராம்பரதரிஸ என்று திக்குபந்தனாதி மந்திரகிரியா பாவனைகளைக் குறைவில்லாமற்செய்து, ஆதனமூர்த்தியை மூலத்தினாலும் அஷ்டபுஷ்பத்தினாலும் அர்ச்சித்துப், பீடத்துவார குருபூசைகளும் ஈசானாதி முதலாவரணமும் அநந்தாதி இரண்டாமாவரணமும், நந்தியாதி மூன்றுமாவரணமும், இந்திராதி நான்காமாவரணமும், வஜ்ராதி ஐந்தாமாவரணமும் அந்தந்தத் தேவதா பாவனையுஞ்செய்து, வில்வத்தினால் நூற்றெட்டு ஆயிரத்தெட்டு என்னும் நாமங்களை உச்சரித்து அர்ச்சித்து ஆனந்தத்துடனே தோத்திரமும் இன்பமாக ஓமமுஞ்செய்து, முறைப்படி செய்த பூசையில் தனக்கொரு போகத்தையுங் குறியாமல் நிஷ்காமமாகச் சிவார்ப்பிதஞ்செய்து சண்டேசுவர பூசையுஞ் செய்தலாம்.

[வைணவர்க்குரிய சரியையும் கிரியையும் மேற்கூறியவற்றோடு பெரும்பாலும் ஒத்துவருதல்பற்றி அவற்றை விவரிக்காது விட்டாம்.]

யோகம்.

யோகமாவது கடவுளிடத்து ஒரேமனதா யிருத்தல். அஃதாவது மனம் பாகியவிஷயத்திற் செல்லாதுஒன்றின்கண் நிற்றலாம். இஃது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்றெட்டங்கங்களை யுடைத்தாயிருக்கும். யோகாப்பியாசம் செய்யும்போது உசுவாச நிசுவாசங்களை யடக்கி, சுழுமுனைமார்க்கத்திலே பிராணவாயுவைச் சலனமற நிறுத்தி, விஷயங்களின்வழி மனத்தைச் செல்லவொட்டாது மீட்டு, முக்கோண முதலிய வடிவினவாய மூலாதாரமுதலிய வாறு

தாரங்களின் தன்மையையறிந்து, அவ்வாதாரங்களி லெழுந்தருளச்செய்த மூர்த்திகளைத் தியானித்து, படிப்படியே பிரமரந்திரத்திற் சென்று, ஆண்டுள்ள தாமரை முகையை மலரச்செய்து, அதன் கேசாககிரத்துள்ள சந்திரமண்டலத்தை மூலாக்கினியால் இளகப்பண்ணி, அவ்வழித்தங்க வொழுகும் அமுதத்தை உடல் முற்றும் நிரப்பிக் கடவுளைத் தியானித்தல்வேண்டும்.

கர்மம்.

கர்மம்: விகிதம் நிஷித்தமென விருவகைத்தாம். புருஷனுடைய பிரவிருத்தியின்பொருட் டெக்கருமங்களை வேதம் விதிக்கின்றதோ அவை விகிதகர்மமாம். எக்கருமங்களை வேதம் நிஷேதிக்கின்றதோ அவை நிஷித்தகர்மமாம். வேதத்தால் விதிக்கப்படாமலும் அல்லது நிஷேதிக்கப்படாமலும் விருப்பு வெறுப்பில்லாதுசெய்யப்படும் ஸ்வபாவிகமான நடை சௌசம் முதலிய கர்மங்கள் உதாசின கர்மமாம். அஃதீண்டுக்கொள்ளப்படவில்லை; ஏனெனில் வேதங்கூறியபடி செய்யும் கர்மமே கர்மமாமென்பது நியமமாயிருத்தலின். கள்ளுகுடித்தல் சூதாடல் முதலிய கர்மங்கள் காலசூத்திராதி நரகமடைதற் கேதுவாயிருத்தலால் அவையொருபோதும் செய்யத்தக்கவையல்ல; இவை நிஷித்தகன்மமாம். விகித கருமம்: நித்தியம், நைமித்திகம், காமியம், பிராயச்சித்தமென நான்குவகைத்தாம்.

தினந்தோறும் செய்யவேண்டுமென்று விதித்துள்ள சந்தியாவந்தன முதலிய கர்மங்கள் நித்திய கன்மமெனப்படும்.

ஒருநிமித்தம் பற்றிச் செய்யும் கர்மங்கள் நைமித்திக கன்மமெனப்படும்.

அவை: கிரகணகாலத்தில் செய்யும் சிரார்த்தங்கள்; வயோவிருத்தன், சாதிவிருத்தன், ஆசிரமவிருத்தன், வித்தியாவிருத்தன், தர்மவிருத்தன், ஞானவிருத்தனென்னு மிவர்கள் வருங்காலத்தில் செய்யும் உத்தானவடிவ கன்மங்கள் முதலியவைகளாம்.

பயனை விரும்பிச்செய்யும் கர்மங்கள் காமியகன்மமெனப்படும்.

அவை: மழையைவிரும்புகிறவன் செய்யும் காரீரியாகமும் சுவர்க்கத்தை விரும்புகிறவன் செய்யும் அக்கினிஹோத்திரம் சோமயாக முதலியவைகளுமாம்.

பாவநிவிர்த்தியின்பொருட்டுச் செய்யும் சாந்திராயண விரத முதலிய கன்மங்கள் பிராயச்சித்த கன்மமெனப்படும்.

சாந்திராயணவிரதமாவது பகலில் மூன்றுகாலத்திலும் ஸ்நானஞ்செய்து, பௌர்ணமாவாசியில் உப்பின்றிப் பதினைந்து கவள அன்னம் புசித்து, மறுநாளான கிருஷ்ணபக்ஷப் பிரதமை முதல் அந்தப்பதினைந்து கவளத்தில் ஒவ்வொரு கவளமாகக் குறைத்து வந்து அமாவாசியில் சுத்தோபவாசமிருந்து மறுநாள் தொடங்கி ஒவ்வொரு கவளமாக வளர்த்திக்கொண்டுவந்து மறுபடி பௌர்ணமாவாசியில் பதினைந்து கவளம் புசிப்பதாம். (இவ்வாறுசெய்தல் பிபீலிகா சாந்திராயணவிரதமென்று சொல்லப்படும்.) இது பலவகைப்பட்டிருக்கும்.

பத்தி

கடவுளிடத்துப் பூச்சியப் (பூசிக்கத்தக்க) புத்தியோடுண்டாகும் பிரீதி (அன்பு) பக்தியெனப்படும். இது மனத்தினாற் செய்யும் பக்தி, வாக்கினாற்செய்யும் பக்தி, காயத்தினாற்செய்யும்பக்தி, லௌகிகபக்தி, வைதிகபக்தி, ஆத்தியாத்மிக பக்தியெனப் பலவாம்.

(1) தியானம் தாரணைகளோடு கூடி வேதங்களின் ஸ்மரணங்களினால் கடவுளுக்குப் பிரீதியை உண்டுபண்ணும்பக்தி மனத்தினாற்செய்யும்பக்தியாம் (2) இரவும்பகலு மிளைப்பில்லாது வேதமந்திரங்களை யுச்சரிப்பதனாலும் ஆரணியகமென்னும் வேதபாகத்தினுடைய ஜபத்தினாலு முண்டாகின்றபக்தி வாக்கினாற்செய்யும் பக்தியாம். (3) விரதம் உபவாசம் நியமமென்னு மிவைகளும் இந்திரிய நிக்கிரமும் காயத்தினாற் செய்யும் பக்தியாம் (4) அர்க்கியம் பாத்திய முதலிய வுபசாரங்களாலும், ஆடல் பாடல் வாத்தியகோஷமென்னு மிவைகளாலும், நைவேத்திய வகைகளாலும், கடவுளை வுபசரிப்பதும், இரவிலுங்கூட விழித்துப் பூசை செய்வதும் லௌகிகபத்தியாம் (5) இருக்கு, யசுர், சாமவேதங்களின்மந்திர ஜபங்களாலும், (வேத) ஸம்மிதாத்தியயன முதலியவைகளாலும், ஹவிசைஹோமஞ்செய்கிற கிரியைகளினாலும் செய்யும் பக்தி வைதிகபக்தியாம். (6)பிரமதத்துவம் பிரகிருதித்தத்துவம், ஜீவதத்துவம் முதலியவைகளின் சொரூப விசாரமும், யோகத்தினால் சிவ விஷ்ணுக்களின் சொரூபத்தியானமும் ஆத்தியாத்மிகபத்தியாம். பத்திசெய்யும்போது,

(1) சத்புருஷர்களது நிந்தை, (2) அசத்புருஷர்களிடத்து ஈசுவரநாமத்தின் மகிமையைச் சொல்லுதல், (3) சிவவிஷ்ணுக்க (அதனுலுபலட்சிக்கப்பட்ட கணேசன், சூரியன், தேவியென்பவர்க) ளிடத்துப் பேதபுத்தி (அஃதாவது சிவனுக்கு வேருக விஷ்ணுவை யறிதல்), (4) வேதவாக்கியங்களில் விசுவாசமின்மை, (5) சாஸ்திரவசனங்களில் சிரத்தையின்மை, (6) குருவாக்யங்களில் சிரத்தையின்மை, (7) ஈசுவரநாமமகாத்மியத்தில் அர்த்தவாதப் பிரமம் (அஃதாவது யக்யத்தின் கம்பம் சூரியனும் என்பது போன்று ஸ்துதியை யறிவிப்பதாமென்னும் மயக்கம்), (8) ஈசுவரநாமம் சகல பாவத்தையும் கெடுப்பதாமென்னும் புத்தியால் நிஷித்தகர்மங்களை யாசரித்தல், (9) மகத்தான புண்ணியத்தை யுண்டாக்குவது ஈசுவரநாமமாமென்னும் புத்தியால் விகிதகர்மங்களை விடுதல், (10) அந்நியதர்மங்களுடன் ஈசுவரநாமம் சமானமாமென்றறிதலென்னு மிப்பத்தும் ஈசுவரநாமத்தின் அபராதங்களாகையால் இவற்றைவிட்டுப் பிராதக்காலம், மத்தியானகாலம், சாயங்காலம், மத்தியராத்திரிகாலமென்னும் நான்கு காலங்களிலும் ஈசுவரநாமத்தை இலட்சம் அளவாகவேனும் அதனிலும் அதிகமாகவேனும் உச்சரித்து அதனிடத்துச் சித்தவிருத்தியை நிறுத்தலவேண்டும். இவ்வாறு செய்யுமிடத்துத்தான் பத்தி உறுதிப்படும். இவ்வாறனுஷ்டிக்குமிடத்து மலமும் விட்சேபமும் விரைந்துகெடும்.

இப்பத்தியானது பத்தியென்றும் பிரபத்தியென்றும் இருவகைத்தாம். பத்தியென்பது பெரும்பான்மையாகக் காமியமாகவும் நிஷ்காமியமாகவும் இருக்கும். பிரபத்தியென்பது நிஷ்காமியமாகவே யிருக்கும். பத்தியாவது சாஸ்திரங்களிற் கூறியவாறு ஈசுவரனைப் பஜித்தலாம். பிரபத்தியாவது சகல தருமங்களையும் விட்டு ஈசுவரனையே புகலிடமாகவடைந்து தனக்கெனச் சுதந்தரமென்பதின்றிப் பஜித்தலாம். இன்னுமிப்பத்தி பலவிதமாகவும் இருக்கும.

ஈசுவரபக்தி செய்யுமிடத்து அதுபாகியபக்தி, அநந்யபக்தி ஏகாந்தபக்திஎன்று மூன்று விதமாம். எவ்வகைத்தாய பத்தியும் இம்மூன்றனுள் ஒவ்வொன்றன்கண்ணேயே அந்தர்க்கதமாயிருக்கும்.

நவவிதபக்தி.

ஶ்ரவணம் கீர்த்தநம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதஸேவநம் ।
அர்ச்சநம் வந்தநம் தாஸ்யம் ஸக்யம் ஆத்மநிவேதநம் ॥

(இ-ள்.) (1) சிரவணம்—கடவுளின் அனந்த கல்யாண குணங்களைக்கேட்டுச் சந்தோஷித்தல்.

(2) கீர்த்தனம்—சுரஸாயித்தியாதிகளோடு கடவுள் குணஸ்துதிகளைப் பாடுதல்.

(3) ஸ்மரணம்—பகவானுடைய அநந்த திருநாமங்களைச் சதா ஜபித்தல்.

(4) பாதசேவனம்—பகவானுடைய திருவடிக்கமலங்களைச சேவித்தல்.

(5) அர்ச்சனம்—கடவுளுடைய திருவடிகளிற் பத்திர புஷ்பாதிகளாற் பூசித்தல்.

(6) வந்தனம—பகவானைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல்.

(7) தாசபாவம—சதா தாசபூதனுயிருத்தல்.

(8) சகாபாவம—கடவுளிடத்துச சிநேகம பாராட்டியிருத்தல்.

(9) ஆத்மநிவேதனம்—தேகாதி யாவற்றையும கடவுளுக்குச் சமர்ப்பித்தல. (இவை பாகியபக்தியாம்.)

அநந்யபக்தி.

𑌵𑌿𑌸𑍃𑌜𑍍𑌯 𑌸𑍍𑌮𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑍍 𑌸𑍍𑌵𑌾𑌨𑍍 𑌦𑍃𑌶𑌂 𑌵𑍍𑌰𑍀𑌡𑌾𑌂 𑌚 𑌦𑍈𑌹𑌿𑌕𑍀𑌮𑍍 |
𑌪𑍍𑌰𑌣𑌮𑍇𑌦𑍍 𑌦𑌣𑍍𑌡𑌵𑌦𑍍 𑌭𑍂𑌮𑌾𑌵𑌾𑌶𑍍𑌵𑌚𑌾𑌣𑍍𑌡𑌾𑌲𑌗𑍋𑌖𑌰𑌮𑍍 ||

(இ-ள்.) மாநாவமாநங்களை விட்டவராகி அஸ்வம், சண்டாளன, கோ, கழுதை, நாய் முதலிய சகலமும கடவுள் சொரூபமாக வெண்ணி யவற்றினகண் அதிக பிரீதியுடையவனுகிச சாஷ்டாங்க நமஸகாரஞ் செய்வதுடன பகவந நாமசங்கீர்த்தனங்களைச் சேவித்தல். (இஃது அநநயபக்தியாம.)

ஏகாந்தபக்தி.

பகவத்கீதை.

𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌭𑌜𑌤𑍍𑌯𑍇𑌕𑌤𑍍𑌵𑌮𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 |
𑌸𑌰𑍍𑌵𑌥𑌾 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑍋𑌽𑌪𑌿 𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌮𑌯𑌿 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ||

(இ-ள்.) சகல பூதங்களிடத்திலு மிருக்கிற என்னை அபேதத்தை யாசிரயித்து (அபேதமாக அறிந்து) எவன் பஜிக்கிறானோ, அந்த யோகியானவன் எந்த மார்க்கத்தில் பிரவிருத்தித்திருந்தபோதிலும என்னிடத்திலேயேயிருக்கிறான். (இஃது ஏகாந்தபக்தியாம்.)

## அஷ்டவிதபக்தி.

### கூர்மபுராணம்.

மத்பக்த ஜநவாத்ஸல்யம் பூஜாயாம் சாநுமோதநம் | ஸ்வயமப்யர்ச்சநம் சைவ மதர்த்தே டம்பவர்ஜநம் | மத்கதா ச்ரவணே பக்தி: ஸ்வரநேத்ராங்க விக்ரியா | மமாநுஸ்மரணம் நித்யம் யச்ச மாம் நோபஜீவதி | பக்திரஷ்டவிதாஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே | ஸவிப்ரேந்த்ரோ முநி ஸ்ரீமாந் ஸயதிஸ்ஸச பண்டித: ||

(இ - ள்.) (1) என்னுடைய பக்தரிடத்தில் அன்புறுதலும், (2) என்னைப் பூசிக்கின்ற பக்தர்களைப் பார்த்து சந்தோஷித்தலும், (3) தன்னிச்சையா லென்னைப் பூசித்தலும், (4) இடம்பமற்று என்னைப் பூசித்தலும், (5) என்னுடைய திவ்ய கதாசிரவணத்தால் உற்சாகப்படுதலும், (6) என்னுடைய பக்தி விசேஷத்தினுல் மயிர்ச்சிலிர்த்தல் கண்ணீர் ததும்பல் சுரபேதப்படுதல்களும், (7) என்னுடைய ஸ்மரணை சதாசெய்தலும், (8) என்னைவிட்டு நீங்குதற்குக் கணப்பொழுதுஞ் சகியாதிருத்தலுமாகிய இந்த அஷ்டவித பக்திகளை யுடையவன் மிலேச்சனுயிருந்தாலும் பஞ்சமனுயிருந்தாலும் அவனே பிராமணோத்தமன்; அவனே ரிஷிசிரேஷ்டன்; அவனே ஸ்ரீமந்தன்; அவனே பரமயோகி; அவனே பண்டிதன்.

## அஷ்டவித புஷ்பங்கள்.

### கூர்மபுராணம்.

அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ: |
ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத: |
சாந்தி: புஷ்பம் தப: புஷ்பம் த்யாநபுஷ்பம் ததைவச |
ஸத்ய மஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத் ||

(இ - ள்.) அஹிம்சை, இந்திரியநிக்ரஹம், ஜீவகாருண்ணியம், பொறை, தபசு, தியானம், சாந்தி, பொய்யாமை என்னும் அஷ்டவித புஷ்பங்களைக்கொண்டு பூசிக்கிறதே நிசமான பூசையாம். இதனையே கடவுள் ப்ரீதியாகக்கொள்வர்.

## நவவிதசம்பந்தம்.

### நால்வகை மார்க்கம்.

இன்னுமிப்பக்தி (1) பிதா புத்திர சம்பந்தம், (2) ரட்சியரட்சம்பந்தம், (3) சேஷ சேஷி சம்பந்தம், (4) பர்த்ரு பாரியா சம்தம், (5) ஞாதுரு ஞேய சம்பந்தம், (6) சுவஸ் சுவாமி சமபந

தம், (7) சரீர சரீரி சம்பந்தம், (8) ஆதார ஆதேய சம்பந்தம், (9) போக்திரு போக்கிய சம்பந்தம் என நவவிதமாகவும், (1) சன்மார்க்கம், (2) சகமார்க்கம், (3) சற்புத்திரமார்க்கம், (4) தாதமார்க்கம் எனச் சதுர்விதமாகவு மிருக்கும். இப்பத்தி "காரிட்ட வாணவக் கருவறையி லறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போற் கட்டுண் டிருந்தவெமை வெளியில்விட் டல்லலாங் காப்பிட் டதற்கிசைந்த, பேரிட்டு மெய்யென்று பேசபாழ்ம் பொய்யுடல் பெலக்கவிளை யமுத மூட்டிப் பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற பெரியவிளை யாட்டமைத்திட், டேரிட்ட தன்சுருதி மொழி தப்பி னமனைவிட் டிடருற வுறுக்கி யிடர்தீர்த், திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி லிசைந்துதுயில் கொண்மினென்று, சீரிட்ட வுலகன்னை வடிவான வெந்தையே." என்று பெரியோரருளியதைச் சிந்தித்து ஈசுவரன் தனக்கென வொருபயன்கருதாது ஜீவர்களுக்குத் தனு கரண புவன போகங்களை நியமந்தவறுவாறு தந்து காத்தலை நோக்குந்தோறும் பெருகாநிற்கும்.

எஃதெங்ஙனமாயினும் கர்மத்தில் சரியையும் கிரியையும், பக்தியில் யோகமும் அந்தர்க்கதமாம். சரியை கிரியை யோகமியாவும் கன்மநிஷ்டையேயாம்.

சி:—சரியையிற் சரியை முதலியனவாகக்கூறுவதை விளக்குமாறு பிரார்த்திக்கின்றேன் ?

சரியை.

(1) கு:—திருக்கோயிலின்கண் அலகிடல் (பெருக்கல்)மெழுகல் முதலியவை சரியையிற் சரியை.

(2) விநாயகர் முதலிய மூர்த்திகளில் ஒருமூர்த்தியைப் பூசித்தல் சரியையிற் கிரியை.

(3) சிவனைத் தியானித்தல் சரியையில் யோகம்.

(4) அத் தியானமுதிர்ச்சியினால் ஒரனுபவ வுணர்வுண்டாதல் சரியையில் ஞானம்.

கிரியை.

(1) சிவபூசைக்கு வேண்டும் பொருள்களைச் சேகரித்துக் கொள்ளுதல் கிரியையிற் சரிதை.

(2) சாஸ்திரம் விதித்தபடி ஐவகைச்சுத்திவாயிலாகச் சிவலிங்க வடிவிற் செய்யும்பூசை கிரியையிற் கிரியை.

(3) அகத்தே பூசை, ஓமம், தியானம் என்னும் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யும அந்தரியாகம் கிரியையில் யோகம்.

(4) அவ்வந்தரியாகத்தின் முதிர்ச்சியினு லுண்டாகும் ஓரனு பவவுணர்வு கிரியையில் ஞானம்.

யோகம்.

(1) இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமமென்னு மிந் நான்கும யோகததிற் சரியை.

(2) பிரத்தியாகாரமும் தாரணையும் யோகத்திற் கிரியை.

(3) தியானம் யோகத்தில் யோகம.

(4) சமாதி யோகததில் ஞானம.

ஞானம்.

(1) * சிரவணம் ஞானத்திற் சரியை.

(2) மனனம் ஞானத்திற் கிரியை.

(3) நிதித்தியாசனம் ஞானத்தில் யோகம்.

(4) சாட்சாத்காரம் ஞானத்தில ஞானம். இவ்வாறன்றி இன் னும் வேறுவகையாகக் கூறுவாருமுண்டு. எவ்வாறு கூறினும் சரியை முதலிய மூனறும் கன்மநிஷ்டையேயாம்.

சி: சரியையாதி வடிவாயுள்ள பிரவிருத்தி மார்க்கத்தினுல் சத்தியோஜாதமுத்தி யுண்டாகாதென்பதற்குப் பிரமாணங்களுள வாயின் கூறுமாறு பிரார்த்திக்கின்றனன்.

கு: கீழ்வருவனவே.

மநுஸ்மிருதி.

நிவ்ருத்திம் கர்மஸேவேத ப்ரவ்ருத்திம் தத்பரஸ்த்யஜேத் |
ஜிஜ்ஞாஸயா ஸம்ப்ரவ்ருத்தோ நாத்ரியேத் கர்மசோதநாம் ||

---

* "தோன்றுமய லத்தனையுந் தோற்றமா கக்கரைத்த
லான்ற சரியையிதிங் காகுமே - தோன்றுமெலாந்
தோற்றமென நீங்கியெது சொந்தநா னெனதுவென்
றூற்றலுற னற்கிரியை யாம்."

"தனைததேநேந் தேட்டத்தாற் றூனுமில காதாங்
கனைத்தயலி லுஞ்சற்று மாழா - துன்றகியைந்த
விவ்விரண்டின் மத்யநிலை மெய்தி நிலைத்திருத்த
லெவ்வமிலா யோகமதா மே."

என்று ஓர் வேதாந்தநூல் கூறுகின்றது.

(இ - ள்.) பிரவிர்த்தி மார்க்கமாகிய கர்மத்தை யொழித்து நிவிர்த்திமார்க்கமாகிய ஞானத்தை அவலம்பித்துப் பிரமவிசாரஞ் செய்யவேண்டும்.

பகவத்கீதை.

𑌧𑍂𑌮𑍋 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿 𑌸𑍍𑌤𑌥𑌾 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌷𑌣𑍍𑌮𑌾𑌸𑌾 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌯𑌨𑌮𑍍 ।
𑌤𑌤𑍍𑌰 𑌚𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑍀 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥

(இ-ள்.) புகைக்கும் இரவுக்கும் அப்படியே கிருஷ்ணபக்ஷத்திற்கும் தக்ஷிணாயணத்திற்கும் அபிமானியானதேவதைகளுடைய லோகங்களின் மார்க்கமாய்ச் செல்லும் யோகியானவன் சந்திரப் பிரகாசமுள்ள சுவர்க்கலோகத்தை யடைந்து திரும்புகிறான் (புனர்ஜன்மத்தை யடைகிறான்).

கைவல்லியோபநிஷத்.

𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌨𑌪𑍍𑌰𑌜𑌯𑌾 𑌧𑌨𑍇𑌨 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇
𑌨𑍈𑌕𑍇 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌾𑌨𑌶𑍁𑌃 ॥

(இ - ள்.) கருமத்தினுலேயாவது புத்திரன் முதலான சந்ததிகளினுலேயாவது பொருளினுலேயாவது மோக்ஷமடைகிறதில்லை.

நிராலம்போபநிஷத்.

𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌹𑌂𑌕𑌾𑌰𑌤𑌯𑌾 𑌬𑌨𑍍𑌧𑌰𑍂𑌪𑌂 𑌜𑌨𑍍𑌮𑌾𑌦𑌿𑌕𑌾𑌰𑌣𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌨𑍈𑌮𑌿𑌤𑍍𑌤𑌿𑌕 𑌯𑌾𑌗𑌵𑍍𑌰𑌤𑌤𑌪𑍋𑌦𑌾𑌨𑌾𑌦𑌿𑌷𑍁 𑌫𑌲𑌾𑌭𑌿𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑌂 𑌯𑌤𑍍𑌤𑌦𑌕𑌰𑍍𑌮 ॥

(இ - ள்.) கருத்திருத்துவ (நான் செய்கிறேன் என்று அகங்காரங்கொள்ளுதல்) போக்த்திருத்துவம் (நான இதை அநுபவிக்கிறேன் என்று அகங்காரங் கொள்ளுதல்) முதலிய அகங்காரத்தோடு கூடியதும் பந்தசுவரூபமாயும் ஜனன முதலியவைகளுக்குக் காரணமாயுமிருக்கிற நித்திய, நைமித்திக, யாக, விரத, தபோதானுதிகளிலே பலாபேட்சையை விட்டுச் செய்கிறதெதுவோ அது அகருமம்.

மநுஸ்மிருதி.

𑌯𑌥𑌾 𑌪𑌙𑍍𑌕𑍇𑌨 𑌪𑌙𑍍𑌕𑌾𑌮𑍍𑌭𑌃 𑌸𑍁𑌰𑌯𑌾 𑌵𑌾 𑌸𑍁𑌰𑌾𑌕𑍃𑌤𑌃 ।
𑌭𑍂𑌤 𑌹𑌤𑍍𑌯𑌾𑌂 𑌤𑌥𑍈𑌵𑍈𑌨𑌾𑌂 𑌨𑌯𑌜𑍍𑌞𑍈𑌰𑍍𑌮𑌾𑌰𑍍𑌷𑍍𑌟𑍁𑌮𑌰𑍍𑌹𑌤𑌿 ॥

(இ - ள்.) சேற்றைச் சேற்றால் கழுவுவதாற் சேறகலாதது போலும் கள்ளின்குடத்தைக் கள்ளைவிட் டலம்புதலாற் கள்ளின்

கா்றறம பேங்காததுபோலும காமததினுல் கிடைதத ஜனமம கனமததினுல ரஹிதமாகாது.

பிரமகீதை.

மையலொன் றறிவ் வழியினே யறியின் மாநுடன் முத்தனு மன்றித, துய்யகன் மததான மைநதரான மறறோ பொருளினு லுறபவந துடையான, வையகம பிரம வேதனந தனனின மாத திரத்தாறபிர மநதா,னேயமொன றறவே யாமென முககா லானே யிட டறைநதன னலரோன.

சூதசங்கிதை.

மந்தமாா புததி யுடையராய வலல மாயையான மூடிடப் பட்ட, பநதரா யினருக கனுகுண மாகப பகாநததல லானமறந தேனும, சநதமாாந துயாநத பரமாததத மாகச சாறறின திலலே யா லுணாவீா,கநதநான மலாப்பூந கருநகுழல பாகக் கடவுடாள கருதுமுள் ளகததிா.

வேறுமாாக கஙக் ளாலேழு ஞானம் வினைதவா வவிததை யே யென்று, கூறுவ ரறிநதோா மாதவப பெரியீா குறைநதவிம மாாக்கங்க ளுக்குக, தேறு பிராமா ணியமெனப் படுதல திகழ் முததி விடயததி லிலலே, மாறுரு வதனுன மறைபநத மாாககம மறறிம்மாாக கனுசெலல பழுதே.

கைவல்யநவநீதம்.

வருத்த கா்மங்கள் செய்யவுந தவிரவு மற்றொன்றுக் கவுங் கூடும், மிகுதத ஞானமப படியனறு தியானமு விவேகஞா னமும வேறே, செகததி லொனறையொன றுவிவன பாவிககும தியான ங்கற பிதயோகம், முகதத மாககணட ஞானமே வாளதவ மோக மாய் மயங்காதே.

சசிவன்னபோதம்.

ஐயறி வறிநதவை யடஙகினவ ரேனும, மெய்பறிவி லாத வா்கள் வீடது பெறுரே.

விஞ்ஞானசாரம்.

இந்த நெறியி லுணராதாாக் கியமபும பிலி கையினெறி யை, வந்த வழிக்கும போமவழிக்கும் வாத மினறி யொழுங்கா கப், பந்த மவையை நியதிகொடு பார்த்தே பொன்றொன் றுயக ற்றி, எநதப் பொருணின் றதைக்கண்டே யெல்லா மதுவா யுண ாநதிடுக.

குறள்.

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்மற
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

நிஷ்டானுபூதி.

புத்திகொள் கிரியா யோகசா தனையைப் புரிந்திடு பவர்க ளிவ் வுலகில், எத்தனை கால மிருப்பினு மீண்டு மிறப்பொடு பிறப் பினை யடைவர்.

## உஉ-வது சம்வாதம்.

கர்மிகள் நன்னிலை காணுரேன்பது.

சி: சுவாமி! காமியம் நிஷ்காமிய மென்னு மிருவகைக்கர்மங் களில் கொள்ளத்தக்கதெது ? தள்ளத்தக்கதெது ?

கு: பலனை விரும்பிச் செய்வதாய (காமிய) கர்மம் பந்தத்திற் கேதுவாயும் பலனை விரும்பாது செய்வதாகிய (நிஷ்காமிய) கர் மம் அந்தக்கரணசுத்திக் கேதுவாயு மிருத்தலின், முன்னதைவிட் டுப் பின்னதையே மேற்கொண்டியற்றல் வேண்டும்.

சி: கர்மத்தினுல் ஆத்ம நிலையைக்காண்டல் முடியாதோ ?

கு: முடியாது.

சி: ஏன் ?

கு: பந்தம் சத்தியமாயிருந்தால் முத்திக்கேது கர்மமேயாம். அஃதசத்தியமாயிருத்தலால் அதனை யொழிப்பதற்கு அதனுலிய லாது. இதுபற்றி முன்னரும் பேசப்பட்டுளது. மேலும், கர்மத் தின்பலன் முத்தியானுல் அஃது அநித்தியமாம். கிருஷியாதி கர் மங்களின் பலன் அந்நாதிகள். இவை அநித்தியம். யக்ஞாதி கர்மங்களின்பலன் சுவர்க்காதிகள். அவையும் அநித்தியமாம். ஆக வே,முத்தியைக் கர்மத்தின் பலனுக அங்கீகரித்தால் அஃதநித்திய மாம். பொன்றாப் பொருளா யுள்ளது முத்தியென்பதற்கும் இது விருத்தமாம்.

சி: ஞானத்தின் பலன் முத்தியென்னு மிடத்தும் இக்குற்றம் நேராதோ ?

கு: நேராது.

சி: அஃதெப்படி ?

* கு: கயிற்றினிடத்தில் பிராதிபாஸிக சத்தையாக (தோற்றல் மாத்திர மிருப்பாக)த் தோன்றியுள்ள பாம்பு (வியாவகாரிக நோக்கில் முற்றுமில்லாதிருந்தும்) விசாரணை முகத்து நீங்குவ தாக வியவகரிக்கப்படுதல்போன்று சேதனத்தினிடத்து வியாவ காரிகசத்தையாக (சற்குருவாயிலாக ஆத்மவிசாரஞ் செய்யா தவரை உள்ளதுபோல)த் தோன்றியுள்ள தேகாதிப் பிரபஞ் சம் (பாரமார்த்திக நோக்கில் அஃதாவது உண்மை நோக்கில் முற்றுமில்லாதிருந்தும்) விசாரணை முகத்து நீங்கிப்போவதாக விவகரிக்கப்படுகின்றதென்பதை இங்குக்கவனித்தறியவேண்டும். வேண்டவே, முத்தி விசாரணையா லுண்டாவதாகச் சொல்லப்படி னும் விசாரணையின்முடிவில் அது நித்தியமாக விருப்பதாய்ப் பெறப்படுதலால் காரியமாகாதென்க. இவ்வாறு கொள்ளாது முத்தியைக் காரியமென்றே கொண்டால், யாதுகாரியம் அது நாசமுடையது என்னும் நியமப்படி முத்தியும் நாசமுடையதா யொழியுமென்க.

சி: சுவாமி! சிலர்முத்திக்கேது கர்மமும் ஞானமுமென்றுரை பதற்குச் சமாதானமியாது ?

கு: கர்மம் அஞ்ஞானத்திற்கு விரோதமின்றியதாயும், ஞா னம் அதற்கு விரோதமுள்ளதாயு மிருக்கின்றன. "ஞானமலது கதிகூடுமோ" என்று பெரியார் பணித்தவாறு ஞானமே முத்திக் கேதுவாயிருத்தலின் அஞ்ஞானவிருத்திக் கேதுவாய கர்மம் முத் திக் கேதுவாகாது. கிணற்றில் விழுந்து அதில் முளைத்துத் தொங் குகின்ற கோரைப்புல்லைப் பிடித்துக்கொண்டு தொங்குகின்ற புரு ஷனொருவன் தயாளுவாயுள்ளவோர்புருஷன் மேலேறிவருமாறு விட்ட கயிற்றினை யுறுதியாய்ப் பிடித்துக்கொண்டு கோரைப்புல்லை விட்டுவிட்டால் மேலே வந்துவிடுவான். அவ்வாறு செய்யாது (கோரையையும் விடாது கயிற்றையும் விடாது), இருப்பானாயின் அவன் ஒருபோதும் மேலேவரமாட்டான். இதுபோல அநாதியஞ் ஞானமென்னும் கிணற்றில் விழுந்து அதிலுற்பத்தியாயுள்ள கர்ம மென்னும் கோரைப்புல்லையுறுதியாய்ப்பற்றிக்கொண்டு பிறப்பாதி துவந்துவங்களை யனுபவித்துத் துன்புறுகிறவன் மைத்திரியாதி குணங்களுடைய தத்துவஞானி முத்தியடையுமாறு உபதேசித்த ஞானமாகிய கயிற்றை யுறுதியாய்ப் பற்றிக்கொண்டு கருமத்தை விட்டால் அவன் முத்தியென்னும் நிலைக்கு வந்துவிடுவான். அவ்

வாறு செய்யாது (கருமத்தையும் விடாது ஞானத்தையும்விடாது), இருப்பானாயின் ஒருபோதும் மோக்ஷமடையமாட்டான். அவனுக் குண்மையில் ஞானமும் சித்தியாது. ஆதலால் கர்மமும் ஞான மும் மோக்ஷத்திற்கு நேர்சாதனமாயுளவெனல் பொருந்தாது. மேலும், அமாவாசையிருளுக்கு விரோதமில்லாத மேகாவரணம் அந்த காரத்தைக் கெடுக்காமல் மேலுமேலும் அதனையபிவிருத்தி செய்வதுபோல அஞ்ஞானத்திற்கு விரோதமில்லாதகருமமும் மய க்கத்தைக்கெடுக்காமல மேலுமேலும் அதனை அபிவிருத்திசெய்வ தாயிருத்தலால் கர்மத்தினால் ஒருபோதும் அஞ்ஞானம்போகாது; போகாதாகவே, அதனால் முக்தியுண்டா மென்பது மலடிமகனும்.

சி: இதனை யின்னும் நன்கு விளக்குமாறு பிரார்த்திக்கின்ற னன்.

கு: அமாவாசை நிசியிருட்டில் வந்த மேகாவரணம் அவ்வமா வாசை நிசியிருட்டுக்கு விரோதமில்லாதபடியினால், அவ்விருட் டைப் போக்காமல் பின்னும் விருத்திசெய்விப்பதுபோல, கன்ம மும் அஞ்ஞானத்தைப் போக்காமல் பின்னும் விருத்தியே செய் விக்கும். அல்லாமலும் அமாவாசை நிசியிருளில் மார்க்கமறிந்து செல்லும் புருஷனுக்கு எதிரேயொரு மனுஷன் வந்தால், அவன் பிராமணனென்றுஞ்சூத்திரனென்றுந் தோற்றாமல்,யாரோவொரு புருஷன் வருகிறானென்று சாமானியமாகத் தோற்றப்படுகிறது போலும், ஒருமாடு எதிர்ப்பட்டால் ரிஷபமென்றும் எருமை யென்றும் பசுவென்றும் தோற்றாது சாமானியமாகத் தோற்றப் படுகிறது போலும், அந்தச்சமயத்தில் மேகாவரணமு முண்டா னால், அவ்வந்தகாரத்திற்கு அதிக விருத்தியை யுண்டாக்கிச் சாமா னியமாகத் தோற்றிய மனுஷாதிகளையும் பரிச்சிதந் தோற்ற வொட்டாமற் செய்கிறதுபோலவும், கர்ம்மமும் அஞ்ஞானவிரு த்திசெய்து ஆத்மாவைப் பரிச்சிதந் தோற்றவொட்டாமற் செய் விக்கும்.

சி: பட்சியானது குறித்த விடத்திற்குப் போதற்கு அதனிர ண்டு சிறகும் சாதனமாயிருத்தல் போன்று முமுட்சுவானவன் மோக்ஷமடைதற்குக் கர்மமும் ஞானமும் இருக்கின்றனவென்று பிறர் கூறுதற்குச் சமாதானமியாது?

கு: இஃதொவ்வாது. பட்சியினிரண்டிறக்கைகளும் ஒரே காலத்திருப்பனவாயும் தம்முள் விரோதமின்றியனவாயு மிருக்

கின்றன. இவ்வாறு கர்மமும் ஞானமும் ஒரு காலத்திருப்பனவாயும் தம்முள் விரோதமின்றியனவாயு மிருத்தலில்லை. கன்மாதிகாரி வேறு, ஞானதிகாரிவேறு, கன்மத்தின்பலன் வேறு, ஞானத்தின் பலன் வேறு, கன்மசாமக்கிரியம் வேறு, ஞானசாமக்கிரியம் வேறு என்றறியீர்தவர்கள் கர்மமும் ஞானமும் மோக்ஷத்திற்கு நேர்சாதனமாயுள்ளன வென்று ஒருகாலும் கூறார்கள்.

சி: அவற்றை விளக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: ஆசையுடையவன் கர்மாதிகாரி. விராசையுடையவன் ஞானதிகாரி. ஐசுவரியவானுகவும் சாமர்த்தியவானுகவுமிருத்தல் கர்மாதிகாரியினிலக்கணம். சிரவணுதிகளைப் பொருந்தினவனு யிருத்தல் ஞானதிகாரியினிலக்கணம். கன்மத்திற்கதிகாரி இராகமாதியுடையவன். ஞானத்திற்கதிகாரி இகமுத்திரார்த்த பலபோக விராகமுடையவன். கருமாதிகாரிக்குச் சாதனம் ஸ்திரி யக்ஞியம் முதலானவைகள். ஞானதிகாரிக்குச்சாதனம் சற்குருவினிடத்துச் சிரவணஞ் செய்தலே. கன்மத்தினுல்பிருதியும் அகங்காரம்விருத்தியடையும். ஞானத்தினுல் அடிக்கடி அகங்காரமழியும். கர்மசாஸ்திரம் பிரவிர்த்தியை யுண்டாக்கும். ஞானசாஸ்திரம் நிவிர்த்தியை யுண்டாக்கும். கர்மாதிகாரியின் சாமக்கிரியம் புறம். ஞானதிகாரியின் சாமக்கிரியம் அகம். கர்மம் பந்தசகிதசுவர்க்காதி பதவிகளைக் கொடுக்கும். ஞானம் பந்தரகிதமோக்ஷத்தைக் கொடுக்கும். இவ்வாற்றுல் தம்முள் விரோத முடையனவாய் வெவ்வேறு காலத்திருப்பனவாயிருத்தலால் கர்மமும் ஞானமும் மோக்ஷத்திற்கு நேர்சாதனமாயுளவென்பது கூடாதென்பது நன்கு விளங்கும்.

சி: அங்ஙனமாயின் கருமம் மோக்ஷசாதன மென்றுரைப்பதற்குச் சமாதான மியாது?

கு: கர்மம் ஞானத்தை யுண்டுபண்ணுவதுரூப பரம்பரா சாதனமாயிருப்பதுபற்றி அங்ஙனம் சொல்லப்பட்டது. இதுகாறும் கூறியவாற்றுல் கர்மிகள் நன்னிலை (மோக்ஷம்) காணுரென்பது பெறப்பட்டதென்க.

சி: கர்மிகள் நன்னிலை காணுரென்பதற்குப் பிரமாணங்களுளவாயின் கூறல்வேண்டும்?

கு: கீழ்வருவனவே.

### முண்டகோபநிஷத்.

[illegible]

(இ - ள்.) யக்ஞ சுவரூபமான இந்தக் கருமங்கள் நாசமடையத்தக்க பலன்களையுடையனவாயும் நிலையற்றனவாயு மிருக்கின்றன. பதினெட்டுப் பெயர்களை (யஜமானன் ருத்துவிக்கு முதலியவர்களை) ஆசிரயித்ததாகச் சாஸ்திரத்தினாற் சொல்லப்பட்டதாயும் அற்பபலனுள்ளதாயு மிருக்கிற கருமத்தை யார் செய்கிறார்களோ அம்மூடர்கள் அக்கருமத்தை (கருமபலனை)யே மிகு பிரயோஜனமாகக் கருதிச் சந்தோஷப்படுகிறார்கள். அப்படிப்பட்டவர்கள் ஜரையையும் மரணத்தையுமடைந்து சிலகாலம் சுவர்கத்தை யநுபவித்து மறுபடி இம்மனிதலோகத்திற் றாழ்ந்த பிறவியை யடைகிறார்கள். மூடர்கள் யாகம் முதலிய வேதோக்த கருமங்களினாலும் பூர்த்தம (கிணறு குளம் வெட்டிவைத்தல், சத்திரஞ் சாவடி கட்டிவைத்தல், தண்ணீர்ப்பந்தல் வைத்தல் முதலிய தருமங்கள்) இவைகளினாலும் விசேஷப் பிரயோஜன மிருக்கிறதேயன்றி மற்ற ஆத்துமஞானம் முதலியன சிரேஷ்டமானப் பிரயோஜனமென் றெண்ணுகிறதில்லை. அப்படிப்பட்டவர்கள் புண்ணியத்தினா லடையத்தகுந்த சுவர்க்க லோகத்திற் புண்ணிய பலனை யநுபவித்து மறுபடி இந்த மனிதலோகத்தில் தாழ்ந்த ஜந்மத்தை யடைகிறார்கள்.

### சுபாலோபநிஷத்.

[illegible]

(இ - ள்.) அநேக வேதாந்தத்தைச் சொல்வதினாலேயாவது வேதார்த்தத்தைக் கேட்பதினாலேயாவது தாரணாசக்தியுள்ள புத்தியினாலே பெரியோர்களிடத்திலிருந்து உபதேசம் பெற்றதி

ஞானலயாவது நன்னறிவினாலேயாவது வேதாத்தியயநத்தினாலே யாவது யக்ஞங்களினாலேயாவது உக்கிரமான தபவினாலே யாவது ஸாங்கிய யோகத்தினாலேயாவது கருமயோகத்தினாலே யாவது ஸெளசிபாச முதலிய ஆசிரம தருமத்தினாலேயாவது மற்ற வைகளாலேயாவது இந்த ஆத்மா அடையப்படுகிறதில்லை. ஞானேந்திரியங்களை யடக்கினவனும், மனதை யடக்கினவனும், ஸகலத்திலும் ஒழிவடைந்தவனும், பொறுமையுள்ளவனும், மனதை ஒரே நிலையில் நிறுத்தினவனுமிருந்துகொண்டு தன்னிடத்திலேயே தன்னைப் பார்க்கிறான். இப்படிப்பட்டவன் ஸகலத்திற்கும ஆத்துமாவாகிறான்.

சிவகீதை.

நகர்மணா நப்ரஜயா நசவனான நாபிவா |
கைவல்யம் லபதே மர்த்ய: கிந்து ஜ்ஞானேந கேவலம் ||

(இ - ள்.) கைவல்லிய மோக்ஷமானது கேவல ஞானத்தினாற் சித்திப்பதுமேயன்றி ஸ்நானம் சந்தி சப தப தானாதிகளினால் சித்தியாகமாட்டாது.

சூதசங்கிதை.

தேகாதி யிந்தியங்களாமென்று புத்தி பண்ணுஞ் சிதடருக்கே, மோகாதி யாங்கரும பந்த முண்டேழு ஞானிக் கில்லை, போகாதிப் பவந்தத்தை வளைக்குமிருள் கதிரோன்முன் புகுதலுண்டோ, யோகாதி யாலுயாம் தீரதலின்மெய்ஞ் ஞானத்திற் கொப்பி யாதே.

கருமமே யனுட்டிப்போர் கண்ணிலா வொருவன் மற்றோர் கண்ணிலானை, வெருவிலானை யாக்கொடுவென றெதிருறுகூ பத்தழுந்த விழுந்த லேபோற், றருமமோ கத்தாலே பிரவிர்த்தியா யசமுசா ரத்தில் வீழ்வார், மருவதனை ஞானமன்றிக் கருமத்தி னறபந்த மாய்வுறாதே.

ஞானவாசிஷ்டம்.

தவமகந் தீர்த்தஞ் சேவை யருச்சனை தான மாதி
வவமயக் கத்தா னீறாள் விலங்குபோ லவந்தா வாழ்வர்
பவமுறு மிவற்றை விட்டுப் பரிசுத்த பரம போதங்
கவரறப் பற்றி யெல்லாக் காதலு நீக்கி நிற்பாய்.

தாயுமானவர்.

பத்திநெறி நிலைநின்று நவகண்டபூமிப் பரப்பெல்லாமாகவந்துப் பரவையிடை மூழ்கியு நதிகளிடை மூழ்கியும் பசிதாக மின்றி

யெழுநா, மத்தியிடை நின்றுமுதிர சரகுபுனல வாயுவினை வூனபசி தனக்கடைத்து மௌனத் திருநதுமுயா மலைநுழைவு புக்கியு மனனுதச நாடி முறறுஞ, சுத்திசெய் துமபுல ப்ராணனொ டங்கி யைச சோமவட் டததடைததுஞ சொலலரிய வமுதுணடு மறப வுடல் கறபஙக டோறுநிலை நிறகவீறு,சிததிசெய துஞஞான மல துகதி கூடுமோ.

பொய்கையாழ்வாரியற்பா.

திசையுந் திசையுறு தெய்வமுந தெய்வத்
திரையுங் கருமங்க ளெலலா-மசைவிலசீாக்
கண்ண னெடுமால கடலகடநத காரோத
வண்ணன படைத்த மயக்கு.

கைவல்லிய நவநீதம்.

மனைக்குள் வைத்தபண் டஙகளை மறநதவன வருடநூ றழுகாலும் நினைதது ணாந்தபின கிட்டுமப படியிநத நிஙமல வானமாவுமலை அனாதத மானதன மறதியைக் கெடுத்துததன னறிவிறை காணு கனதத காமஙக ளூறுகரு செய்யினுங் காணுமோ காணுதே.

உபதேசமாலை.

தன்னைச் சடவுடிவிற றஙகினைத் தாவாகித்
தனனியமாய்க் கண்டங கருசசிககும-பினனருக்கு
மினபமிலை வேலை யிடைபொடியு மானமையா
லினபமெலா ஞானிககே யெண.

சிவஞானதீபம்.

சாத்திரம்புத் தகமபூசை சமயமதத தருக்கந தநதிரமந்
திரயோகந தவவிரதஞ சீலமேததரிய பாவனையெண
சிததிகளே முதலா மெப்பயனு முததிவிலக கெனவொரு
சொல லதனுல, தீர்ததவனமெய்த தேசிகனுட.



## உரு-வது சம்வாதம்.

சாதிசங்கற்பந் தனைவிட லென்றேனல்.

சி: கர்மிகள் நன்னிலை காணுமென்று கூறியதினுல் மோக்ஷத்தை விருமபினவன் கர்மத்தைப புததிபூாவகமாய் விடவேண்டு மெனபது பெறப்பட்டது. படவே, பிராமணுதி சாதிசஙகறபத்தையும விடவேண்டுமெனபது திண்ணமாகினறது. அதனை விடுதல் எப்படி ?

கு: அவரவர்கள் தங்கள் தங்கள் சாதிக்கு விதித்துள்ளவாறு கர்மங்களை யியற்றவேண்டு மென்பது நியமமாயினும், மோக்ஷவிருப்புள்ளவன் மோக்ஷவிருப்பம் தீவிரதரமா யில்லாத காலத்துக் காமியகர்மத்தை யியற்றி அதன் பலனான சுவர்க்காதிபோகத்தை யனுபவித்தவனும் அப்போகத்தி னுவர்ப்புத் தோன்றிக் காமிய கருமமியற்றுவ தொழித்து நிஷ்காமிய கர்மமியற்றி அதன் பலனாய சித்த சுத்தியை யடைந்தவனாயு மிருத்தலின், அவன் கர்மத்தின் பயனை விரும்புதற்கேது வின்றாம். கர்மத்தின்பயனை விரும்பாத அவன் கருமம் செய்தலெங்ஙனம்? கருமம் புரியாதபோது அவன் கருமஞ் செய்தற்கு நிமித்தமாயுள்ள சாதிசங்கற்பத்தைப் பிரயத்தின பூர்வகமாக விடவேண்டியவனாகின்றான். ஆகவே, முமுட்சுவானவன் "நான் பிராமணன்" "நான் க்ஷத்திரியன்" "நான் வைசியன்" "நான் சூத்திரன்" என்னும் சாதியபிமானத்தை விட்டுவிடவேண்டும். விடாவிட்டால் இராகத்துவேஷாதிகள் ஒழியமாட்டா.

சி: அங்ஙனமாயின் * சாதிசண்டாளன் கருமசண்டாளன் என்னு மிருவரில் முமுட்சு கருமசண்டாளனாவனன்றோ?

கு: படியி(சோம்பலி)னால் தன் சாதிக்குரிய கருமத்தை யியற்றாது சாதியாசாரமிழந்து மனம்போனவாறு விஷயபோகங்களை யனுபவிப்பவனே கர்மசண்டாளனாவனன்றி, கன்மங்களை யியற்றிஅவற்றின் பயனான சுவர்க்காதி போகத்தையும் சித்த சுத்தியையும் முறையே யடைந்து நித்தியாநித்தியவஸ்துவிவேகம்,இகமுத்திரார்த்த பல போகவிராகம்,சமாதிசட்க சம்பத்தி,முமுட்சுத்துமென்னும் சாதனசதுஷ்டயத்தை யடைதற் பொருட்டும்,அவற்றின்பயன் வாயிலாக முத்தியடைதற் பொருட்டும் அவற்றிற்குத் தடையாயுள்ள கருமங்களை விட்டவன் ஒருபோதும் கருமசண்டாளனாக மாட்டான். அடைதற்குரிய சித்தசுத்தியை யடைந்தவன் மேல்நிலையிற் செல்லாது மீண்டும் தன்னிமித்தம் கருமத்தையே புரிவானாயின் அவனும் கருமசண்டாளனெனப்படுகிறான். யோகாப்பியாசஞ் செய்பவன் சரியை கிரியைகளைப் பிரயத்தன பூர்வகமா விடுவதனால் அவனுக் கெப்படி தோஷம் நேரிடாதோ

* "சாதிசண் டாளன் கதிபெருந் தருமம் வழுவலிற் கன்மசண் டாளன், ஓதிய வழிக ளொன்றினுங் கதிதா னுற்றிடா ரென்பதுண் மையதே" என்று சிவஞான நிலயம் கூறுகின்றது.

அப்படியே முமுட்சுவானவன் கருமத்தை விடுவதனால் அவனுக்குந் தோஷம் நேரிடாது.

சி: சாதியென்பதென்ன?

கு: சாதியென்பது தொன்றுதொட்டு ஸ்தூலதேகத்தில் கன்மபேதத்தால் பிராமணன் க்ஷத்திரியன் என்றற்றொடக்கத்தனவாகக் கற்பிக்கப்பட்டு வந்ததோர் தன்மையாம். சூக்குமதேகத்திற்கும் காரணதேகத்திற்கும் எக்காலத்தும் இத்தகைய் சாதியென்பதின்று.

சி: ஸ்தூலதேகத்தில் உண்மை நோக்கில் மேற்கூறிய சாதியில்லையோ?

கு: இல்லை.

சி: எப்படி?

கு: கீழ்காட்டும் வாசுதேவ மனன வாக்கியங்களினால் அது நன்கு விளங்கும்.

“சமஸ்தமான பேர்களுக்கும் நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரனென்று பிராமணத்வாதியபிமானம் அவிவேகமாய் வருகின்றது. இவ்வபிமான மெதைப் பற்றி வருகிறதென்று யாவரும் விவேகிக்கர்தபடியினால் இவ்வபிமானமே மேலீடாய்வருகின்றது. (சங்கை) இதற்காசிரயமில்லையா? (உத்தரம்) இல்லை. (ச) சரீரத்தைப்பற்றி வருகிறதென்று சொல்லுவோமே? (உ) க்ஷத்திரியருக்குஞ் சரீரஞ் சாதாரணமா யிருக்கிறபடியினால்அவர்களுக்கும் நான் பிராமணனென்கிற அபிமானம்வர வேண்டும். அப்படி வராமையினால் பிராமணத்துவம் சரீரத்தைப் பற்றி வருகிறதென்று சொல்லப்படாது. (ச) சிகை பூணுநூலைப் பற்றிவருகிறதா? (உ) சிகை பூணுநூல் குசவனுக்குஞ் சாதாரணமா யிருக்கிறபடியினால் அவனுக்கும் பிராமணத்வம் வரவேண்டும். அப்படி வராமையினால், பிராமணத்வம் சிகை பூணுநூலைப் பற்றி வருகிறதென்று சொல்லப்படாது. (ச) அவயவங்களுக்குப் பிராமணத்வஞ் சொல்லுவோமே? (உ) ஒவ்வொரு அவயவங்களுக்கும் பேர் வெவ்வேறு யிருக்கிறபடியினால் அவயவங்களுக்கும் பிராமணத்வமில்லை. (ச) ஆனால் விசிட்டமான மாதா பிதாக்களுக்குப்பிறந்த அவயவங்களுக்குப்பிராமணத்வங்கற்பிக்கலாமா? (உ) விசிஷ்டமான மாதா பிதாக்களினாற் கழிக்கப்பட்ட கேச நக

தந்த மல மூத்திராதிகளுக்கும் பிராமணத்வம் வரவேண்டும்; அப்படி வராதபடியினால் ஒன்றுக்கும் பிராமணத்துவத்துவமொருவராலுஞ் சொல்லக்கூடாது. (ச) ஆனால் இந்தப் பிராமணத்துவத்திற்குக் கதியானென்னை? (உ) சோபனமென்றும் உற்சவமென்றும் சந்தையென்றும் அநேகவஸ்து சமுகத்திற்கு அந்தந்தப்பெயர் எப்படி வந்ததோ, அதுபோலத் தேகேந்திரியாதிசங்கத்திற்குத்தொழில் விவகாரத்தினிடத்தில் ஐதிகமாகப் பிராமணனென்று பெயர்வந்தது. அதுபோல க்ஷத்திரியனென்றும், வைசியனென்றும், சூத்திரனென்றும், ஸ்திரீயென்றும், புருஷனென்றும், தீக்ஷிதனென்றும் சாஸ்திரியென்றும், புராணிகனென்றும் அவதானியென்றும் ஸ்ரீபமிரனென்றும் பாகவதனென்றும், தமிழனென்றும், கர்னாடகனென்றும், தத்துவவாதியென்றும், மாராஷ்டகனென்றும், குச்சிலியனென்றும் இவைமுதலான சமஸ்தநாமங்களும் தேகேந்திரியாதிக் கூட்டத்திற்கே ஐதிகமாக வருகிறபடியினால் பிராமணத்வம் தேகேந்திரியாதிக் கூட்டத்திற்கே யல்லாமல் ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலு மில்லை. இப்படி பகுத்தறியாமலிருக்கிறதே அவிவேகம. இந்த அவிவேகத்தினாற்றான் அபிமானம வருகின்றது. (ச) இப்படி விசாரித்ததற்குப் பலம்யாது? (உ) ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலும் பிராமணத்வாதிகளில்லையென்றும், தேகேந்திரியாதிகளுக்கே ஐதிகமாகப் பிராமணத்வாதிகளுண்டென்றும் அறிவதே பலம்."

சி: சூட்சுமதேகத்திற்கும் காரணதேகத்திற்கும் சாதியில்லையென்பதெப்படி?

கு: சூட்சுமதேகம் சிருட்டியாரம்பமுதல் சம்ஸாரபரியந்தம் ஒவ்வொரு சீவர்க்கும் தனித்தனியாயிருக்கிறது. பிராமணாதி சாதிதர்மங்கள் இதன்கணில்லை. ஏனெனில் ஒரு ஸ்தூலசரீரத்திலிருந்த சூட்சும சரீரமும சீவனும் மற்றொரு ஸ்தூலசரீரத்தையடைகிறபோது ஜாதி வித்தியாச மடைகின்றது. அப்போது முன் சரீரத்திற் கிருந்த ஜாதியே பின் சரீரத்திற்கும் இருக்கவேண்டுமென்னும் நியமமில்லாமற்போகின்றது. ஜாதி சூட்சும சரீரத்தின் தர்மமாக விருக்கும் பட்சத்தில் வேறு சரீரமடைகிற காலத்தில் வேறுஜாதி தோன்றாதிருக்கவேண்டும். அங்ஙன மின்மையின் ஜாதி சூட்சும சரீரத்தின் தர்மமென்பது கூடாதாயிற்று. காரண சரீரமாகிய அவித்தையோ ஜாதி முதலிய கற்பனைகளுக்

கேதுவா யிருத்தலோடு ஆத்மசாட்சாத்காரம் திடமாயுண்டாகும் பரியந்தமிருக்கின்றது. காரணசரீர முள்ளவரையில் சூட்சும சரீரமும் ஸ்தூலசரீரமும் ஒழியாதிருக்கின்றன. சூட்சும சரீரமும் ஸ்தூலசரீரமும் மாறிமாறி வரினும தான் மாறாது ஞானோதய கால பரியந்த மிருத்தலால் அதற்கொரு சாதியும் ஏற்படாது. படாதாகவே, காரண சரீரத்திற்கும் சாதி யின்றும.

சி: தாங்கள் இதுகாறும் கூறியவாற்றால் முக்கியமாகப் பெறப்பட்ட விஷயம் யாது?

கு: சாதிசங்கற்பம் இராசத விருத்தி வாயிலாக இராகத்துவேஷாதிகளை யுண்டுபண்ணுவதற் கேதுவா யிருத்தலின் சாந்த விருத்தி வாயிலாகத் தன்னை யறியவிரும்புகிறவன் இதனை யொழிக்கவேண்டு மெனபதேயாம்.

சி: சாதி சங்கற்பத்தைப்பற்றி யிழிவாய்க் கூறுவதற்குப் பிரமாணங்களுளவோ?

கு: கீழ்வருவனவே.

ஆத்மபோதோபநிஷத்.

ப்ராஹ்மண்யம் குலம் கோத்ரம் நாமஸௌந்தர்யஜாதய:।
ஸ்தூலதேஹகதா ஏதே ஸ்தூலாத்பின்னஸ்ய மே நஹி ।
ஜடத்வ ப்ரியமோதத்வ தர்மா: காரணதேஹகா: ॥

(இ - ள்.) பிராமண்ணியம், குலம், கோத்திரம், பெயர், அழகு, ஜாதி இவைகள் ஸ்தூலதேகத்தைச் சேர்ந்தவை, தேகமில்லாத எனக்கு (அவைகள்) இல்லை. ஜடத்துவம், பிரியத்வம், சந்தோஷத்வம் இந்தத் தருமங்கள் காரண தேகத்தைச் சேர்ந்தவை.

நாரதபரிவிராஜகோபநிஷத்.

த்வயாத்மந்யஸ்தா வர்ணாஸ்ச்ரமா: ஸர்வே நாரத ।
ஆத்மன்யாரோபிதா ஸர்வே ப்ராந்த்யாதே நாத்மவேதிந:॥

(இ - ள்.) ஓ! நாரதா! அறியாமையினால் அந்நியத்திற்கு (ஆத்மாவுக்கு அந்நியமான தேகத்திற்கு) சம்பந்தப்பட்ட வருணாசிரமங்கள் சகலமும் அஞ்ஞானியினால் பிராந்தியினாலே ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கப்படுகின்றன.

நிராலம்போபநிஷத்.

நவர்ணோ நாஸ்ரமஸ்ச் நாஸந்நஸ்ய நவா ஸ்த்ரிந:।
நஜாதி ர்ஜாதநோஜாதி வர்ணவ்யவஹார வ்யக்ஷிதா ॥

(இ - ள்.) (ஜாதியானது தேகத்தின் மேலுள்ள) தோலுக்குமில்லை, இரத்தத்திற்கு மில்லை, மாம்ஸத்திற்கு மில்லை, எலும்புக்கு மில்லை. ஆத்மாவுக்கு ஜாதி இல்லை. ஜாதியானது வியவகாரத்தின்பொருட்டு கற்பிக்கப்பட்டிருக்கிறது.

ஆத்துமபோதம்.

நாமெ நாவாயி வஸாமெஷவ ஜாதிநாமாஸ்ரு மாஷயஃ|
ஆத்ந்யாரொமலிதா ஷெயாயெ ரஸவணாழாதி ஹெஷவக||

(இ - ள்.) ஆத்மாவினிடத்திலே சாதி நாமம் ஆசிரம முதலாயவை நாநாவிதமாகிய (சரீரத்திரய) உபாதிகளாலேயே நீரிலே (சட்)ரசங்களும் (வெண்மை முதலிய) நிறங்களும் முதலாகிய குணபேதங்களைப்போல (மாயையினாலே) கற்பிக்கப்பட்டன.

சூதசங்கிதை.

சாதியா சார முதலிய யாவுந் தம்பிரான் திருவடிப்பூசை, யாதியா லடையு முண்மைஞா னத்தா லகன்றிடுந் தனையறி யாம, னீதியார் கரும மறிந்தொழிப் பானே னிரையத்தே யுழல்வனெந் நாளு, மோதியா கமவே தங்கண்முற் றுணர்ந்த வுத்தமப் பெருந்தவ முனிவீர்.

சிவவாக்கியம்.

சாதியாவ தேதடா சலந்திரண்ட நீரலோ
பூதவாச லொன்றலோ பூதமைந்து மொன்றலோ
காதில்வாளி காரைகம்பி பாடகம்பொன் னொன்றலோ
சாதிபேத மோதுகின்ற தன்மையென்ன தன்மையே.

அதிரகசியம்.

பறைய னென்பதும பண்டித னென்பது
மறையு மிந்த மலின வுடலையே
பறையர் தம்முளும் பண்டிதர் தம்முளு
மறிவ னேகமென் றுரறிந் தோர்களே.

திருவாசகம்.

சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறு
மாதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு
பேதை குணம் பிறருருவம் யானெனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே.

## உச-வது சம்வாதம்.

கலையுணர் வுடையார் கதி யடைவாரேனல்.

சி: சுவாமி! தாங்களிதுகாறும் தனு கரண புவன போக வொழிவைக் காண்டல் முமுட்சுவிற்குச் சிறந்ததாமென்றும், ஜாதி சங்கற்பத்தைத் தவிர்க்கவேண்டுமென்றும் அருளியவாற்றால் லோகவாசனையும் தேகவாசனையும் கூடாவென்பதனோடு சாஸ்திரவாசனையும் கூடாதென்பதும் பெறப்படுகின்றது. அங்ஙனமாயின், சாஸ்திர வாசனை யில்லாதவனுக்கு உண்மைப் பொருளை யுணர்தல் முடியாதென்பது பிரசித்தமாயிருத்தலின் அஃதெங்ஙனம் பொருந்தும்?

கு: பிரபஞ்சம் அர்த்தப் (பொருட்) பிரபஞ்சம், சத்தப் (ஒலி) பிரபஞ்சமென விருவகையாம். அவற்றுள் சத்தப்பிரபஞ்சம் சாஸ்திரப் பிரபஞ்சம் அசாஸ்திரப் பிரபஞ்சமென விருவகையாம். இவ்விரண்டனுள் ஆத்மப்பிரம விசாரமே சாஸ்திரப் பிரபஞ்சமாம். அது ஞானாதி சாதனங்களால் ஆத்ம சாட்சாத்காரத்தின்பின்னர்ப் பிரயத்தின • பூர்வகமாக விடத்தக்கதாம். அசாஸ்திரப்பிரபஞ்சம் தீவிரம் மந்தமென விருவகையாம். இவ்விரண்டனுள் தீவிரப் பிரபஞ்சம் காமக்குரோதாதிகளாம். மந்தப் பிரபஞ்சம் மனோகற்பித சாதிகர்மாதிகளாம். தீவிரமந்தமென விருபாகுபாடாயுள்ள அசாத்திரப்பிரபஞ்சம் ஆத்ம சாட்சாத்காரத்திற்கு விரோதமா யிருத்தலால் அதனை ஞானப்பியாசத்திற்கு முன்னர்ப் பிரயத்தன பூர்வகமாக விட்டுவிடல்வேண்டும். இவ்வாறன்றி ஏட்டை (சாஸ்திரத்தை)ப் படித் திறுமாந்திருந்திடத்து (சத்துவகுண விருத்திவாயிலாகப் பெறப்படும் ஆத்ம சாட்சாத்காரமின்றி) இரஜோகுண விருத்தியே மேம்பட்டுத் துக்கம் அதிகரிப்பதால் சாஸ்திர வாசனை கூடாதென்பது நன்கு விளங்கும். கல்விக்குப் பயன் அறிவும், அறிவிற்குப் பயன் ஒழுக்கமும் என்றறியாதார் அறம் பொருள் இன்பம் வீடென்னு முறுதிப்பொருளை யுணர்த்தும் நூல்களன்றிப் பிறபொருளுணர்த்தும் நூல்கள் சின்னாள் 'பல் பிணிச் சிற்றறிவினையுடைய மக்களுக்கு ஆகாவென்ப துணராது அவற்றினையே கற்றுத் தமது வாணாளை வீணாளாக்குவர். கல்வியறிவிற்குப்பயன் எல்லாம் வல்ல இறைவனை மனம் வாக்குக் காயமென்னும் திரிகரணங்க,

ளால் முறையே சிந்தித்தலும் புகழ்தலும் வணங்குதலுமாம். இவ்வாறுசெய்தால் அந்தக்கரணங்கள் தூயவாகும். தூயவாத லால் சாதனசதுஷ்டயமுண்டாகும். அதனால் சற்குரு சேவை யுண்டாகும். அதனால் சட்வித லிங்க தாற்பரிய சகித சிரவண முண்டாகும். அதனால் யுக்தி, தருக்க, அனுமானங்களுடன் கூடிய மனனமுண்டாகும். அதனால் மந்திரயோகம், பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோகமென் றைந்தங்கங்களு டன்கூடிய நிதித்தியாசன முண்டாகும். அதனால் ஆத்ம சாட்சாத் காரமுண்டாகும். அதனால் வீடுண்டாகும். அறமாதியவற்றை யுணர்த்தும் நூல்களுக்குக் கருவியாயிருப்பவை இலக்கணமும் தருக் கமுமாம். இக்கருவி நூல்களைக்கல்லாதார்க்கு அவற்றின்பொருள் நன்கு விளங்காதென்பது "ஆதி முதலொழிய வல்லா தனவெண் ணி, னீதி வழுவா நிலைமையவான் - மாதே, அறமார் பொருளின் பம் வீடென் றிவற்றின், திறமாமோ வெண்ணிறந்தாற் செப்பு" என்றும், "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான், மொழித் திறத்தின் முட்டறுத்தானுகு - மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடுபெறும்" என்றும் வரும் பிரயோகங்களா லினிது விளங்கும். இம்முறை யறியாதார் இலக்கணமும் தருக்கமுமே முடிவான நூலென்று கருதி அவற்றினையே படித்துத் தமது வாணாளை யவமாக்கி யொழிப்பர். கல்வி யறிவிற்குப் பயன் இறைவனடியைத் தொழுது அதுவாயிலாகப் பிறவியை யறுக்கவேண்டுமென்பதுணராது வீண் வழக்கிட்டொழிவாரை நோக்கித்தான் பெரியார் "வித்தையென் முத்தி தருமோ" என்று பணித்தனர்.

சி: முமுட்சுவிற்கு லோகவாசனை தேகவாசனையுடன் சாஸ் திர வாசனையும் கூடாதென்பது கருத்தாயின் ஆத்மப் பிரம விசா ரஞ் செய்வதும் சாஸ்திர வாசனையாயிருத்தலின் அதுவுமன்றோ கூடாது?

கு: ஆத்மப்பிரம விசாரஞ் செய்வதும் சாஸ்திர வாசனையா யிருப்பினும், ஆத்ம சாட்சாத்காரத்திற் கேதுவாயிருப்பதால் ஆத்மசாட்சாத்காரமுண்டாம்வரைவேண்டியதே. திடமாக ஆத்ம சாட்சாத்கார முண்டானபிறகு தன்னிமித்த மிருக்குமாயின் துக் கத்தை யுண்டுபண்ணுமென்க. "வீடுறு குவமெனு மிச்சையு ளார்க்கே வித்தை படிப்பதெலாம், பாடன் மிகுந்தொழி லாற்பல

னுண்டோ பரிபூ ரணமானல்" என்று பெரியார் பணித்தமை யாலு மிஃதினிது விளங்கும்.

முமுட்சுவிற்குச் சாஸ்திரவாசனை கூடாதென்றது கன்மசாஸ்திர வாசனையை யென்று முக்கியமா யிங்கறியவேண்டும்.

சி: இஃதெத்தனை வகைப்பட்டிருக்கும்.

கு: மூவகைத்தா யிருக்கும்.

சி: அவற்றை நன்குவிளக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: சாஸ்திரவாசனை: கர்மசாஸ்திர பாடாபிமானம்,அர்த்தாபிமானம், அனுஷ்டானுபிமானமென மூவகைத்தாம். (1) சாஸ்திர பாடாபிமானத்திற் குதாரணம்:—பரத்துவாசர் மூன்று புருஷாயுள்வரையும் வெகு வேதங்களை அத்தியயனஞ்செய்து நான்காம் புருஷாயுளிலே இந்திரனாலே மறுபடியும் வேதபாடத்திற் பிரவிர்த்திக்கப்பட்டபொழுது மிஞ்சியிருந்த வேதாத்தியயனத்தின் பொருட்டு முயற்சிசெய்தா ரென்பதேயாம். இதனால் சாஸ்திரபாடாபிமானம் பிரவிர்த்திக்கேதுவாகிய துக்கத்தை யுண்டுபண்ணுமென்பது திண்ணமாயிற்று. நீண்டவாயுளைத் தபோபலத்தாற் பெற்றுள்ள பரத்துவாசருக்கே வேதபாடமுழுதுங் கிடையாமற் போகுமென்று சொல்லப்படுமானல் சின்னாள் பல்பிணிச் சிற்றறிவினையுடைய மக்களுக் கெவ்வணம் கிடைக்கப்போகிறது?

(2) வெகு சாஸ்திரார்த்தங்களை யறியவேண்டுமென்னு மபிமானமும் பரமபுருஷார்த்தத்திற்குச் சாதனமாகாமையின் அதனையும் ஒழிக்கவேண்டும். இதற்குதாரணம்:—ஒரு மகரிஷி வெகுவித சாஸ்திர புத்தகபாரத்தோடுகூட மகாதேவரைத் தரிசித்தற் பொருட்டுச் சந்நிதானத்தில்வர, அங்கிருந்த மற்றொரு மகரிஷி அவரை நோக்கிப் பாரஞ்சுமக்கும் கழுதையைப்போன்று நீர் புத்தகபாரங்களை நன்றாய்ச் சுமக்கின்றீரென்று கிருபையினாலே பரிகாசஞ்செய்ய, அதுகேட்ட மகாரிஷி புத்தகங்களையெல்லாம் கடலிலெறிந்து விட்டனரென்பதேயாம். இதனால் எல்லாச் சாத்திரங்களின் அருத்தத்தையும் ஒருவரறிந்து கொள்ளுத லெவ்வாற்றானு முடியாதென்பது நன்குவிளங்கும்.

(3) சாஸ்திரார்த்தத்தின் அநுஷ்டானுபிமானமும் கூடாதென்பதற்குதாரணம்:—நிதாகரென்பவர் ரிபுவினாலேஅடிக்கடிஆத்மதத்துவ முபதேசிக்கப்பட்டும் கர்மாநுஷ்டானத்தில் சிரத்தை

விடவில்லை யென்பதும் தாரூரர் கர்மாநுஷ்டானத்தின்பொருட்டுப் பூமியிலோரிடத்தும் பரிசுத்தவிடத்தை யடைந்திலரென்பது மாம். இது மலினவாசனையாயிருத்தலால் இதனைவிட்டுச் சுத்தவாசனையைச் சமபாதிக்கவேண்டும். பிரத்யகபின்ன பிரமத்தைத் திடவபரோக்ஷமாக வறிந்தவனிடத் திருப்பதாயும், வறுத்தவிதைபோலத் தேகஞ் சீவித்தற்பொருட்டு உபயோகிக்கிறதாயும், டம்பம் கர்வமுதலிய குணங்களை யுண்டுபண்ணாததாயும் ஜன்மாந்தரத்திற்கேதுவாகாததாயு முள்ளவாசனை சுத்தவாசனையெனப்படும். கேவலம் சாஸ்திரவாசனை டம்பம், கர்வம், அடங்காத வகங்காரம், காமம், குரோதம், உலோபம் முதலியவற்றை யுண்டுபண்ணுவதாயிருத்தலின் மலினவாசனை அல்லது அசுத்தவாசனை யென்று சொல்லப்படுகின்றது. அனுபவத்தின் காரியமாய் நினைவிற்குக் காரணமாயுள்ளது வாசனை யெனப்படும். குரோதாதி விருத்திக் கேதுவான சித்தத்தின் சூட்சுமாவஸ்தை வாசனையெனினும் ஒக்கும். வாசனையெனினும் சம்ஸ்காரமெனினும் ஒக்கும். சாஸ்திரவாசனை யுள்ளவனுக்குச் சாஸ்திர பாடத்தினாலும், சாஸ்திரார்த்த ஞானத்தினாலும், சாஸ்திரானுஷ்டானத்தினாலும் துக்கமே யுண்டாமென்பது மேற்கூறியவாற்றா லினிது விளங்குவதுடன் சாஸ்திரங்களை யாதியந்த மறிந்து அப்பியசித்தல் முடியாதென்பதும் பெறப்பட்டது. ஆதலால் முமுட்சுவானவன் சாஸ்திரார்த்தங்களை ஆதியந்தமாய் விசாரிக்கவேண்டுமென்னு மபிமானத்தை விட்டுவிடல்வேண்டும். சாஸ்திராப்பியாசஞ் செய்தவனுக்குப் பூர்வங் கற்றது பிறகு மறந்துபோகிறபடியினால் துக்கந் தோன்றுகின்றது. தான் பிறருடன் வாதஞ்செய்து வென்றபோதும் துக்கமேதோன்றுகின்றது. எவ்வாற்றானும் கேவலம் சாஸ்திரவாசனை துக்கத்திற்கே நிமித்தமாயிருத்தலால் அதனை விட்டுவிடவேண்டுமென்க.

சி: இதற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ்வருவனவே.

முக்திகோபநிஷத்.

[illegible] |
[illegible] |
[illegible] |
[illegible] ||

(இ-ள்.) வெகு சாஸ்திர கதையாகிய கந்தை (கந்தல் துணி) யைப் பின்னும் பின்னும் மெல்லுவதினால் (அநேக சாஸ்திரங்களைத் திருப்பித் திருப்பிப் படிப்பதினால்) என்னபிரயோசனம்? ஓ மாருதியே! உள்ளே யிருக்கிற ஜோதி (ஆத்மாவை)யைப் பிரயத்தினத்தினால் தேடவேண்டியது. நாலுவேதங்களையும் அநேக சாஸ்திரங்களையும் அத்யயநம் செய்தும் பிர்மதத்துவத்தை யறியாதவன் கறிச்சுவையை அறியாத அகப்பைக்கொப்பாவான்.

நிராலம்போபநிஷத்.

ஸவ-ர்ஹாணஸ்ய ஸ்ஸம்விஷ்டவ வித்வாநு ||

(இ-ள்.) சகலத்திலும் அந்தர்யாமியா யிருக்கிற தன்னுடைய ஞானசுவரூபத்தை யறிந்தவன் வித்வான்.

அமிர்தபிந்தூபநிஷத்.

ரு ஂயஊஹ்யஸ்ய ஜோயாவி ஜ்ஞாநவிஜ்ஞாநதத்பரஃ |
வலாலமிவயாநூராயீ தூஜெஜீ ரு ஂய ஊஷேஷதஃ ||

(இ-ள்.) புத்திமானானவன் கிரந்தத்தை (வேதசாஸ்திராதிகளை) அப்பியாசஞ்செய்து ஞானவிக்கியானத்தில் (அறிவு, அறிந்தபடி அநுபவத்தில்) விடாமுயற்சியுள்ளவனா யிருக்கவேண்டியது. தானியத்தை விரும்புகிறவன் அதன் வைக்கோலை தள்ளிவிடுவதுபோல் கிரந்தமுழுவதையும் தள்ளிவிடவேண்டியது.

பைங்கலோபநிஷத்.

ஊஷஂஜ்ஞாநஂ ஊஷஂஜ்ஞேயம் தத்வஂ ஜ்ஞாதுமிவ்வதி |
அவிவஷ ஸஊஸ்ராயுஃ ஶாஸ்த்ராணாம் நாயிகூஷதி |
விஜ்ஞெயொக்ஷர தந்மாத்ரா ஜீவிதஞாவி ஸஞவஃ |
விஊாய ஶாஸ்த்ர ஜாலாநி யத்ஸத்யஂ தமுபாஸ்யதாஃ ||

(இ-ள்.) இன்னது ஞானம், இன்னது ஞேயம், (ஞானத்திற்கு விஷயமானவஸ்து) என்பதை யறிய இச்சையுள்ளவன் ஆயிர வருஷம் சாஸ்திராப்பியாசம் செய்தாலும் அதன் முடிவை அறிகிறதில்லை. (ஆத்மாவை) நாசமற்றதாகிய அக்ஷர சுவரூபமாக அறியத்தக்கது. ஜீவித்திருக்கிறதென்பதோ நிலையற்றதா யிருக்கிறது. சாஸ்திரக்கூட்டங்களை விட்டு எது சத்தியமோ அதை உபாசிக்கத்தக்கது.

மைத்திரேயோபநிஷத்.

ய நவ்ரூ ஊா வயொவ்ரூ ஊா விஷ ரூவ்ரூ ஊா ஜ்ஜொெயவ |
தெஸவெ ஜா நவ்ரூ ஊஸு கிஂகரா ஸிஷ்யகிஂகரா ஃ ||

(இ - ள்.) பணத்தினுல் பெரியவன், வயதினுல் பெரியவன், வித்தையினுல் பெரியவன் இவர்கள் ஞானத்தினுல் பெரியவனெவனே அவனுக்கு வேலைக்காரர்களாயும் (அவனுடைய) சிஷ்யனுக்கு வேலைக்காரர்களாயு மிருக்கிறார்கள்.

பகவத்கீதை.

நாஹஂ வெஜெநெ தவஸா ஷாநெந நவெஜூயா |
ஶக்ய ஏவஂ விெயா ஜ்ஷ்ஂ ஜ்ஷவா நஸிவாஂயயா ||

(இ-ள்.) (அர்ச்சுன) என்னை யெவ்விதமாய்ப் பார்த்தவனுயிருக்கிறையோ இவ்விதமாய் நான் பார்க்கிறதற்கு வேதங்களினுலே சாத்தியமானவனல்ல, தபசினுலேயல்ல, தானத்தினுலேயல்ல, யக்யத்தினுலேயல்ல.

குருகீதை.

நவஂவஂ வெஜஶாஸெஷ் நவஂவஂ மஂத்ரயஂத்ரகெ |
மஂரொஃ ஸுஷாஜநெஸ்ஸ் வஂவஂநாஸி ஶஹீதெ ||

(இ-ள்.) வேதாதி சாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்வதாலும் அத்தியயநமந்திர தந்திர யந்திரங்களாலும் உலகிற் மிகக் கஷ்டப்பட்டபோதிலும் சற்குரு கிருபையின்றி சுகமடையார்கள்.

சாஸ்திரம்.

ஶாஸ்த்ரஜாநஂ ஹெஶஂ வெஶெஷஜநகாரணஂ |
உவஜெஶாயஜெ ஹயா ரஜெத வவகஉவஂ ||

(இ-ள்.) வெகுவித கிலேசங்களுக்கு ஆஸ்பதமாகியும் புத்திக்குச சலனத்தைத் தருவதற்குக் காரணமுமாய சாஸ்திர ஞானச் செருக்குகளைவிட்டு ஆத்தும சுவரூபத்தின்கண்ணே பெரியோர்கள் ரமிப்பார்.

பிரமகீதை.

வேதமா கமபு ராண மிருதிகள் வேறு மார்க்க
ரோதுமா க்மங்க டர்க்க மொன்றேடொன் றெவ்வா தாகு
மீதெலா மோக்கப் பண்ண லாவதன் றிதய துக்க
மாதலா லனைத்தும் விட்டிங் கனைத்துமாஞ் சிவத்தைப் பார்ப்பான்.

கருமதற் பரராய் நாங்களே யெல்லாங் கற்றவ ரென்றிருக்கின்ற, பெருமித முடையார் மூடரே பிறவா நெறியையும் பெறுகிலார் பிறவிக், குருடர்கைப் பற்றிப் போகிய குருடர் குழியிலே கூடவீழ் வதுபோன், மருவிய வினையுந் தாங்களுங் கூட மாய்வதே யன்றிமற் றில்லை.

காணவோ ருருவு மின்றியே தனக்கோர் கண்செவி மூக்குவாயின்றிப், பாணிப்பா தங்க ளின்றிநுண் ணியதாய்ப் பற்றிய பொருளெலாங் கடந்து, தானுவா யெலலாந் தோற்றுதற் கிடமாய் தத்துவந் தன்னைத்தன் னாலே, யாணியா யறிவு மறிவது மிச்சை யாவது பிறிதெலா மவிச்சை.

திருவருட்பிரகாசவள்ளலார்.

சதுமறை யாகம சாத்திர மெல்லாஞ் சந்தைப் படிப்புநஞ் சொந்தப் படிப்போ, விதுநெறி சுத்தசன மார்க்கத்திற் சாகா வித்தையைக் கற்றன னுத்தர மெனுமோரா, பொதுவளா திசை நோக்கி வந்தன னென்றும பொன்றாமை வேண்டிடி லெனறோழி நீதான், அதுவிது வெனனும லாமேடி பந்து வருட்பெருஞ் சோதிகண் டாடேடி பந்து.

அநுபவானந்த தீபிகை.

கலையாதி யாகு மொலிவந்த தானங் கணியாது வேத முதலென், றுலைவாயி லிட்ட மெழுகாக நெஞ்ச முலையத் தவிக்க விடுவார், கலைவல்ல ரென்ன வுரைசொற்க ணமபிக் கயமைச் செறிந்து கலுழ்வேன், உலைவே தவிர்த்து நிலைதந்த வெநதை யுபயக் கழற் கபயமே.

சச்சிதானந்தசுவாமிகள்.

ஏட்டைப் படித்திங் கிறுமாப்பர் லென்னபயன்
நாட்டம் படித்தன்றோ நாமறுப்பம்—வாட்டமெலாம்
எசசனனத் தேனு மிரும்பொருளை நாடாத
எச்சத்தா லன்றோ இவை.

தன்னிலக்க ணங்கல்லார் தாமன் னியங்கற்றார்
என்னுவர் ரெனகண்ணுக் கிப்புலவ—ரின்னோர்
தமைத்துரும்பென் றெண்ணுவன்யான் றக்கோ ரடிகள்
எமக்குமுடி வேறொன் றிலை.

அருணகிரியந்தாதி.

கற்றதனாற் றொல்லைவினைக் கட்டறுமோ நல்லகுலம்
பெற்றதினாற் போமோ பிறவிநோய்—உற்றகடல்
நஞ்சுகந்து கொண்டருளை நாதரடி தாமரையை
நெஞ்சுகந்து கொள்ளா நெறி.

சிவயோகசாரம்.

கற்குமடப் பட்டுமிகக் கற்றவெலாங் கற்றவர்பாற்
றற்கமிட்டு நாய்போலச் சள்ளிடவோ—நற்கருணை
வெள்ள மொடுங்கும் விரிசடையார்க் காளாகி
யுள்ள மொடுங்கவல்ல வோ.

தாயுமானசுவாமிகள்.

கற்றதுங் கேட்டதுந் தானே யேதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லா லெம்மா
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
குணங்குறியற் றின்ப நிட்டை கூடவன்றோ.

சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கும்
மன்னுங் கலைஞான மார்க்கம் பராபரமே.

கற்று மென்பலன் கற்றிடு நூன்முறைச்
சொற்ற சொற்கள் சுகாரம்ப மோநெறி
நிற்றல் வேண்டு நிருவிகற் பச்சுகம்
பெற்றபேர் பெற்ற பேசாப் பெருமையே.

அஞ்ஞவதைப்பரணி.

படித்து மறைகள் பொருள்படுத்திப் பயனி லெட்டிப் பாராதே
வடித்த கிளிபோல் வருமாயா வாதப் பேய்க்கும் வாரீரே.

சசிவன்னபோதம்.

ஆகம விதங்களறி வார்கள்பர மறியார்
யோகமோ டிறங்குமவ ரேபர முணர்ந்தோர்.

புராணமிதி காச மெவை யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுள விடத்திவை பிதற்றே.

இயலறிவ திசையறிவ தினமறிவ துளதா
மயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே.

நவிலுகலை யறுபத்து நாலுமறி வாரும்
பவலயம றுசுத்த பரமமறி யாரே.

ஆகவறி வாளரறி வாரிவை யனைத்தும்
ஏகவறி வாளரிவை யாவுமறி யாரே.

ஞானசுகாதீதவெண்பா.

நூறுகோடி நாளிருந்து நூல்கள்பல கற்றாலு
மாறுகோடி புத்தி யடைந்தாலும்—பேறில்லை
நித்தன் மலரடிக்கே நீக்கமற வேநின்று
அத்துவிதங் காணு தவர்.

அறிவாகவே இருப்பதென்பது திண்ணமாம். அவ்வறிவாக நிலைத்தலே மோக்ஷமாயிருத்தலின், அதனை யடைதற்கு முன்னர் மனமொருமுகப்படுதல் அத்தியாவசியகமாய் வேண்டும். ஒருமுகப்படாத மனமுடையவனுக்குத் தத்துவஞானம் மனோநாசம் வாசனாக்ஷயமென்பவை சித்திக்காமற் போதலின், மனம் ஒருமுகப்படுதற்கேது முன்னர் விக்கிரகாராதனையேயாம். இந்திரியவாயிலாக வெளிவிஷயங்களை யறிந்து, அது காரணமாக விருப்பையாவது வெறுப்பையாவது மாறுதலடைந்து கலங்கும் மனத்தை யொருமுகப்படுத்தவேண்டுமானால், பூசிக்கத்தக்க புத்தியுடன் நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாகும் ஓர் வடிவத்தில் அதனை நிறுத்தல் வேண்டும். அவ்வாறதனை நிறுத்திவந்தால் அப்பியாச முதிர்ச்சியினால் அஃதொருமுகப்பட்டுப்போம். அழகுள்ள வடிவங்களை நாடுவதே மனத்தின் றன்மையாயிருத்தலை யறிந்துதான் மனோரம்மியமான விக்கிரகங்களைச் சிந்திக்கவேண்டுமென்று பெரியோர்கள் கூறுகின்றனர். ஸ்தூலவடிவ விக்கிரகத்தில் நிலைக்காத மனது சூட்சுமத்திலும் அதிசூட்சுமமாயுள்ள அறிவில் நிலைத்தல் ஒருபோதுமின்றாதலின், ஸ்தூலமான விக்கிரகத்தைக் கடவுளாகவே பாவித்துத் தியானிக்கவேண்டும். அப்படி தியானித்தலால் அஃதொழிந்த பாவனைகளெல்லாம் ஒழிந்துபோம். ஒழிந்தகாலத்தில் ஒன்றற்கொன்று காரணத்தன்மையாயுள்ள தத்துவஞானம், மனோநாசம், வாசனாக்ஷயமென்பவை விரைவிலுண்டாகி அறிவாகவே நிலைத்தல் சித்திக்கும்.

[மனம் ஒடுங்காதவரையில் வாசனை நசியாதும், வாசனை நசியாதவரையில் சித்தம் நசியாதும், தத்துவஞான முண்டாகாதவரையில் சித்தம் நசியாதும், சித்தம் நசியாதவரையில் தத்துவஞானமுண்டாகாதும், வாசனை நசியாதவரையில் தத்துவஞான முண்டாகாதும், தத்துவஞான முண்டாகாதவரையில் வாசனாக்ஷயமுண்டாகாது மிருத்தலே ஒன்றற்கொன்று காரணத்தன்மையாயிருத்தலாம்.]

மேலும், தத்துவஞானத்தின் பயன் சர்வம்மித்தை, சர்வம் பிரமம், சர்வம் நான் என்று திடமாக அறிதலாயிருத்தலின், சர்வம் பிரமம் என்றறிதற்கு விக்கிரகாராதனையும் தத்துவஞானத்தையடுத்துக் காரணமாயிருக்கிறது. கிரியையனைத்தும் திருக்கு வடிவு பரம்பொருளுக் கயலாகாதிருத்தலை மோகபுத்தியினை வழி

யாதிருப்பவர்க்கு விக்கிரகாராதனை கிரியைவடிவமும் திருக்கு வடிவத்திற் கன்னியமன்றென்பதையும் இவ்வொரு வடிவம்மேயொன்று சகலவடிவமும் திருக்கு வடிவமென்பதையும் படிப்படியாகவுணர்த்துவதா யிருத்தலின், மோட்சவிருப்புடையோர்க்குத் தொடக்கத்தில் விக்கிரகாராதனம் அத்தியாவசியகமாய் வேண்டப்படுவதொன்றாம். ஈதறியாது தமக்கெனவொன்றின்றி மனம்போனவாறு பேசுபவர்களே விக்கிரகாராதனை கூடாதென்று கூறுவர். அவர்கள் "கடவுளே என் பிரார்த்தனைக் கிரங்கவேண்டும்" என்றற்றொடக்கத்தனவாகக் கூறுதலினாலேயே கடவுளுக்குச் செவியாதி யிந்திரியங்களுண்டென்பது பெறப்படுகின்றது. செவியாதி யிந்திரியங்களைக் கடவுளுக்குக் கற்பித்துக்கூறுபவர்கள் விக்கிரகங்களைக் கடவுளாகக் கற்பித்துக் கூறுவோரைப் பழித்துக் கூறுதல் தங் குற்றமறியாமையேயாம். விக்கிரகங்களைப் புத்தி பூர்வகமாகத் தெய்வமாகக்கொண்டு வழிபடுதலும், பிறனொருவனைத் தந்தையாகக்கொண்டு சிரார்த்தம் புசிப்பித்தலும்போல்வன ஆகாரியாரோபமென் றிலக்கணநூல் கூறுவதை நன்குணர்ந்தவர்கள் விக்கிரகாராதனை பழிப்பான காரியமென் றொருபோதுங் கூறார்கள். "ஒருநாம மோருருவ மொன்றுமிலார்க் காயிரமாக், திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ" என்று பெரியார் பணித்தவாறு பரம்பொருளுக்குக் குறிப்பான வோர் பெயரின்றென்பது பெறப்படுவதுடன் குறிப்பான வோர் ரூபமின்றென்பதும் பெறப்படுகின்றது. ,படவே, நாமமும் ரூபமுமில்லாத கடவுளுக்கு நாமமும் ரூபமும் காலதேச நிமித்தங்களுக்கேற்றவாறு கற்பிக்கப்படுகின்றனவென்பது மிகப்பிரசித்தமாம். நாமரூபமில்லாத கடவுளுக்கு நாமரூபங்களைக் கற்பித்து வணங்குதல் பழிப்பில்லாதபோது விக்கிரகங்களைக் கடவுளாகக்கற்பித்து வணங்குவதில்யாது குற்றமாம்; இன்றே. மக்கள் தம்புலனுக்கு விஷயமானவைகளிலொன்றையே கடவுளாகக் கருதி வணங்குதல் யாண்டும் பிரசித்தமாயிருத்தலின், விக்கிரகங்களைக் கடவுளாகக் கருதி வணங்குவதும்தொன்றுதொட்டுநிகழும் வழக்கேயாம். நாமம் செவியிந்திரியத்திற்கும் ரூபம் கண்ணிந்திரியத்திற்கும் விஷயமாமென்பது நியமமாயிருத்தலால் கடவுளுக்குரிய நாமமும் ரூபமும் மேற்படி இந்திரியங்களுக்கு விஷயமாதல் வேண்டும். கடவுளுக்குரிய இலக்கணங்களில் இந்திரியங்களுக்கப்பாற் பட்டிருத்தலுமொன்றா யிருத்தலின் கடவுளுக்கு நாமரூபமுண்டென்பது ஒருபோதுங்கூடாது.

கடவுளுக்கு நாமமும ரூபமும் நியமமா யுண்டென்னும்பட்சததில் ஒவ்வொருமதத்திலும் கடவுளுக்குக் கூறும் நாமரூபங்கள் தம்முள் முரணுவனவாயிருத்தலால் ஒருகாலத்தும் அவை பொருந்தவே பொருந்தா. மதவாதிகள் எவ்வெவ்விதமாக நாமரூபங்களைக் கற்பித்துக் கூறினும் அவ்வவ்விதமாக விளங்கி மக்களுக் கருள் புரிகின்ருரென்னும் நியமப்படி,கடவுள் மக்களின் வேண்டுகோளுக் கிசைந்தவாறு அவர்களுக்கு விக்கிரக வாயிலாக நின்றும கிருபை செய்தலின் விக்கிராராதனை யெனுஞான்றும் பழிப்பான செய்கை யாகாது; ஆகாதாகவே, மனமொருமுகப்படுதறகுத தொடக்கத்தில் நிமித்தமாயுள்ள விக்கிராராதனை தன்னிலையையடையவிரும்புமீ ஒவ்வொருவராலும அவசியமாய்ச செய்யத்தக்கதேயாம.

சி: மனோவாக்கிற செட்டாதாய் பரமபொருளைச சிலையிற் பாவிதது வணங்குதல் கூடாது; மனத்தாலதனைத தியானிக்க வேண்டுமென்று கூறுவதற்கு விடையென்ன?

கு: மனோவாக்கிற கெட்டாததாய பரமபொருளை மனத்திற் பாவிததுத் தியானித்தலும சிலையிறபாவிதது வணங்குவதற்கு வேறுமைப்பட்டதன்ரு யிருகதலின, அதுவும விககிரகாராதனையேயாம; இநதிரியஙகளுககு விஷயமாகாததை மனத்தாற பாவித்தல்கூடா தெனபது நியமமாயிருததலின. எனவே, இநதிரியங்களுக்கு விஷயமான நாமரூபஙகளே மனத்திற கடவுளாகப் பாவித்துததியானிக்கப்படுகின்றன வெனபது கருதது.

சி: பரமபொருள் எங்கும் வியாபகமாயிருக்க அது விக்கிரகத்தில் மாத்திர மிருக்கிறதெனறு கருதி வணஙகுவது தவறன்ரோ?

கு: பரம்பொருள் வியாபகமா யுளதென்று கருதி யாவற்றையும் அப்பரமபொருள் வடிவாக வணங்குதல நிமிததமே விக்ரகாராதனை செய்யவேணடுமென்று வேதாதிகள கூறின.

சி: விக்கிரகாராதனை செய்யவேண்டு மென்றுள்ள வேதாதிப் பிரமாணங்களைக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன.

கு: கீழ்வருவனவே.

யஜுர்வேதம் தைத்திரீய ஸம்ஹிதை.

காண்டம்-ரு, பிரசினம்-எ, அநுவாகம்-௨, பஞ்சாதி-க.

ஸம்வத்ஸரஸ்ய ப்ரதிமாம் யாம் த்வா ராத்ர்யுபாஸதே | ப்ரஜாம் ஸுவீராம் க்ருத்வா விச்வமாயுர் வ்யச்நவத் | ப்ரஜாபத்யே |

(இ-ள்.) ஸம்வத்ஸர (கால) சுவரூபியான பரமாத்துமாவா கிய உம்முடைய ரூபமெதுவோ அப்படிப்பட்ட பிரதிமையை (விக் கிரஹத்தைச்) செய்து இருட்டாகிற அக்ஞானத்தையி லுபாசிக்கி றார்கள். அப்படி யுபாஸிக்கிறவன் வல்லமையுள்ள புத்திரனையும் பூர்ணமான ஆயுளையும அடைகிறான். பிரஜைகளுக் கெசமனைத்து வத்தையு மடைகிறான்.

ஷை தைத்திரீயம் காண்வ ஸம்ஹிதை.

காண்டம் – ச, பிரசிநம் – ரு, கஸ்டம் – ச.

ஸ-ா௱ஔவாං வு ஜிரோ ௱விஷோ ஸு ஸஜவடி௵நக்ஷணா[?]|

தாஜவஹ்யெத்தாං வு ணயெத்தாංயஜெத்தாං விஷிං தயெக||•

(இ-ள்.) பிஸந்நமான முகம், கண்க ளிவைகளோடு கூடிய விஷ்ணுவினுடைய நேர்த்தியான ரூபமுள்ள பிரதிமை யெது வோ அதைப் பூஜிக்கவேண்டியது; வணங்கவேண்டியது; ஆராதி க்கவேண்டியது; தியானிக்கவேண்டியது.

ஷை ஸம்ஹிதை ரு-சு-எ.

சுஜெஹிரண்ய மஹாஹ்வெஷவாவக ஸவஹ்ஸ-ாவ ஸவஹ் நிவாஸ| ஆஸாංஜஔகிஹ்நாஜ ஸவஹ்ரාංஜெஜ 'ஸவஹ்யாதா ஜ ஸகாமாநிமஹ்வ நிமஹ்வ| தாவං ஏாஜං ஶஜயஶஜய| ஶீதயதா ஜංஜாவயவ யாதாஷ்ா கா௱கா௱||

(இ-ள்.) ஓ! அக்கியே! ஓ! அக்நி சுவரூபமான ஹிரண்ணிய கர்ப்பா! ஸகல சுவரூபியே! ஸகலத்திலும் வாஸஞ்செய்கிறவரே! இந்த மூர்த்திக்ளுடைய லோக சுவரூபமான எல்லா அங்கங்களி லிருந்தும் வெளிப்படும் வெளிப்படும். எங்களை மூவகையான தா பததிலிருந்தும் விடுவியும் விடுவியும். எங்களுடைய அங்கம், அவ யவம், நரமபு இவைகளிற் சீதளமுண்டாகச்செய்யும் உண்டாகச் செய்யும்.

ஷை மைத்திராயஸ்ணிய ஸம்ஹிதை

காண்டம்-ரு, பிரசிநம்-க.

வாஷாண லோஹ ஜணி ஜுண்மய விஜ லெஷா வாஜா வாநஜெஹ்ாம கரீஜாஜாஷோஃ||

(இ-ள்.) பாஷாண (கல்), உலோகம, ரத்தினம், மண் இவைகளாற் செய்யப்பட்ட விக்கிரகங்களிற் செய்கிற பூஜையா னது, பந்தத்திலிருந்து விடுபட விச்சையுள்ளவனுக்குச் சுகத் தைக் கொடுக்கிறதாகவாகிறது.

ஸாமவேதம் ஷட்விம்சப்பிராமணம் ரு-க௦.

தேவதாயதநாநி கம்பந்தே தைவதா: ப்ரதிமாஹ ஸந்தி ருதந்தி காயந்தி ந்ருத்யந்தி ஸ்புடந்தி ஸ்வித்யந்த்யுந்மீலந்தி நிமீலந்தி ப்ரதிமா: ப்ரயாந்தி நத்ய: கபந்தா த்ருஶ்யந்தே விஜலேநைவ த்ருஶ்யந்தே॥

(இ - ள்.) தேவாலயங்கள் நடுங்குகின்றன. பிரதிமாரூபமான தைவங்கள் சிரிக்கின்றன; அழுகின்றன; பாடுகின்றன; கூத்தாடுகின்றன; வாய்களைத் திறக்கின்றன; வேர்வையைவிடுகின்றன; கண்களைத்திறக்கின்றன; மூடுகின்றன. பிரதிமைகள் நடக்கின்றன. நதிகளிற் தலையில்லாத முண்டங்கள் காணப்படுகின்றன. (நதியில் ஜலமிருந்தாலும்) இல்லாததாய்க் காணப்படுகிறது.

இருக்ஸம்ஹிதை எ-கரு.

அதோயத்தாரு ப்லவதே ஸிந்தோ: பாரே அபூருஷம் ததாரபஸ்வ॥

(இ - ள்.) கரையற்றதாகிய ஸமுத்திரத்தில் மனிதர்களாற் செய்யப்பட்டதல்லாத எந்தக்கட்டை மிதக்கிறதோ அதைச் சீக்கிரம் கொண்டுவா.

அதர்வணவேதம் காண்டம்-க-கற்பம்-உ-துவனி-ரு.

ஏஹ்யஶ்மாநமாதிஷ்ட| அஶ்மா பவது தே தநூ:॥

(இ - ள்.) ஓ! பகவானே! வாரும்; இந்தக்கற் பிரதிமையிலிரும்; உமக்குச் சரீரமானது கல்விக்கிரஹமா யிருக்கட்டும்.

கடஸம்ஹிதை-காண்டம்-க, அத்தியாயம்-ரு, அநுவாகம்-சு.

யாவந்தோ வா இமே ஸஹஸ்ரம் ப்ருதிவ்யா:| ப்ரதிஷ்டா ஸம்ப்ரதிஷ்டிதா:| யாவந்த: பாம்ஸவோ தேவஸ்ஸம்ஸ்ப்ருஷ்டா: தாவதேவ தேயா:॥

(இ-ள்.) இந்தப்பூமியில் எவ்வளவுகற்கள் செவ்வையாய்ப் பிரதிஷ்டைசெய்யப் பட்டிருக்கின்றனவோ தேவனுடைய யாகயினுற் பூமியினுடைய தூளிகள் எவ்வளவு கணக்கிடப்பட்டிருக்கின்றனவோ (அவ்வளவும் பரமாத்தும சுவரூபமே).

தைத்திரீயஸம்ஹிதை ரு, உ, ரு.

புருஷமாத்ரேண விமிமீதே॥

(இ - ள்) புருஷப்பிரமாண முள்ளதாக (விக்கிரஹத்தை) நிர்மாணஞ் செய்யவேண்டியது.

இருக்குவேதம்-ரு-க-ள.

தவ ஶ்ரியே மருதோ மர்ஜயந்த ருத்ர யத்தே ஜநிம சாரு சித்ரம்||

(இ - ள்.) உருத்திரரே! விசித்திரமாகிய உமது இலிங்கத்தைத் தேவர்கள் ஐசுவரியத்தைப் பெறும்பொருட்டு அபிஷேகாதிகளினால் அர்ச்சித்தனர்.

பகவத்கீதை

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி|
ததஹம் பக்த்யுபஹ்ருதமஶ்நாமி ப்ரயதாத்மந:||

(இ ள்.) எவன் என்பொருட்டுப் பக்தியோடு துளசிமுதலிய பத்திரத்தைப் புஷ்பத்தைப் பழத்தை ஜலத்தைக் கொடுக்கிறானோ (நிவேதனஞ் செய்கிறானோ), சுத்தமரியிருக்கிற மனதுள்ள அவனுடைய பக்தியினால் கொடுக்கப்பட்ட அதை (பத்திரபுஷ்பாதிகளை) நான் சுவீகரிக்கிறேன்.

பிரும்ம வைவர்த்தபுராணம்.

(ஶ்ரீ பகவாநுவாச) க்ருத்வா லிங்கம் ஸக்ருத்பூஜ்ய வஸேத்கல்பஶதம் திவி|| ஸஹஸ்ரலிங்கபூஜநாத் உபபோகதவாம்சிதம் லபேத்| லக்ஷம் ச பூஜயேத்யஸ்து ஶிவத்வம் லபதே த்ருவம்|| ஜீவந்முக்தோ பவேத்விப்ரோ லிங்கம் ஸம்பூஜயேத்து ய:| ஶிவபூஜாவிஹீநஶ்ச ப்ராஹ்மணோ நரகம் வ்ரஜேத்|| பூஜிதம் ப்ரியதமம் ஶிவம் நிந்தந்தி யே நரா:| வர்ஷம் தே நிரயே தாவத்யாவதாயுர் ப்ரஹ்மணஸ்ததா||

(இ - ள்.) (ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது) சிவலிங்கத்தை யுண்டாக்கி ஒருதடவைப் பூஜித்தாலும் நூறு கற்பகாலம் சுவர்கலோகத்தில் வசிக்கிறான். அப்படிப்பட்டவன் ஆயிரமிலிங்கஞ்செய்து பூஜைசெய்வதினாலே இஷ்டமான பலத்தையுமடைகிறான். எவன் இலக்ஷ இலிங்கஞ்செய்து பூஜைசெய்கிறானோ அவன் நிச்சயமாய்ச் சிவத்தன்மையை யடைகிறான். எந்தப் பிராம்மணனவன் சிவலிங்கத்தைப் பூஜைசெய்கிறானோ அவன் ஜீவன் முக்தனாகிறான். சிவபூஜைசெய்யாத பிராமணன் நரகத்தையடைகிறான். எந்த மனிதர்கள் என்னாற் பூஜிக்கப்பட்டவரும் மிகவும் பிரியமுள்ளவருமான சிவனை நிந்திக்கிறார்களோ அவர்கள் நூறு பிரும்மாவினுடைய காலம் எவ்வளவோ அவ்வளவு வரையில் நரகத்தில் வேகவைக்கப்படுகிறார்கள்.

கூர்மபுராணம்.

பத்ரம் புஷ்பம் ஃபலம் தோயம் மதாராதநகாரணாத்|
யோமே ததாதி ஸததம் ஸமே பக்தஃ ப்ரியோமம||

(இ - ள்.) நித்தியவாராதனைக்குக் காரணமாய பத்திரம், புஷ்பம், பழம், ஜலமுதலியவற்றை எவன் எனக்கு ஸமர்ப்பித்து ஸதா பக்திசெய்வானோ அவனே எனக்குப் பிரியமுள்ள பக்தனாகுவன்.

சூதசங்கிதை.

இத்தரு தானங்க ளிடத்து மெண்ணிலா
ரத்தனை யருச்சனை யாற்றி யுய்ந்தவர்
தத்தம தில்லினுந் தம்பி ரானடிக்
குத்தம பூசைசெய் துய்ந்து ளார்பலர்.
வினையிலி பூசனை யியற்றின் விண்ணுளோ
ரனைவரு முவப்பதற் கைய மில்லையா
னனைதர மூலத்தி னரு மூட்டிடிற்
சினையெலாந் தழைதர றெரிந்தி லாதமே.

ஈசுரகீதை.

கந்தநன் மலர்கொடு காய பூசனை
வந்தனை செயல்புகழ் வாக்கின் பூசனை
பந்தனை யறமனம் பத்தி யாற்செயுஞ்
சிந்தனை நியதமுஞ் சிவன்றன் பூசையே.

ரிபுகீதை.

பரமான வன்புடனே பரசிவத்தைப் பாங்காக வாராதித் தருள்பெற் றோர்க்கே, உரமான வகம்பிரம நிச்சயந்தா னுனமற வுள்ளத்தி லுதியா நிற்கும், திரமான வகம்பிரம நிச்சயத்தைத் தியக்கமறச் செறிந்தவரே முத்த ராவார், வரமான பரமசிவப் பதந்தன் றுணை வகுத்ததிலோ ரையமில்லை வாய்மை தானே.

பொருவில் சிவபூசனையே முதலாம் பத்தி புரிந்ததனுல் சிவ கருணை பொருந்தினோர்க்கே, சருவமுமே பிரமமென்று மதுநா னென்றுஞ் சாற்றியவிவ் வகண்டபர ஞானந் தோன்றி, மருவமிக வரிதான முத்தி பேறும் மற்றவருக் கிலையெனவே முன்பு கந்தன், அரிபிசிவ பத்திமிகுஞ் சைகீ ஷவ்யற் கருளியவா றகிலர்க்கு மனறந்தான் சூதன்.

பூதியின் லங்கமெலா நன்றாய்ப் பூசிப் பொருவிறிரி புண்டரமு மணிந்து கொண்டு, மாதவனை நியமமுட னுருத்தி ராக்க மாலைகளுஞ் சிரமுதலிற் றரித்துக் கொண்டிங், கோதிப்டு முருத்திரமுஞ் சாகூ ராதி யுத்தமமா மந்திரமுஞ் செபித்துக் கொண்டு, நீ யுட னிகழுமகா லிங்கத் தின்க ணித்தியமா யர்ச்சனையுஞ் செ ய வேண்டும்.

சி: மண், சிலை, தாறு தாம்பிரமுதலானவைகளா லாக்கப் பட்ட வடிவங்களை யெப்படி கடவுளாக வணங்குவது?

கு: மிகு அசங்கியமான மலமூத்திராதி வடிவாயுள்ள வுடலில் ஆத்ம புத்தி வைத்திருப்பவர்கள் அதிசுத்தமான அவ்வடிவங்களில் ஈசுவரபுத்தி வைத்து வணங்குவது தவறாகாது? காயத்தின் வேறாகத்தன்னை யபரோட்சமாக வறிநதவருக்கு யாதொரு பாவனையுமின்று; அங்ஙன மில்லாதவர்கள் ஏதாகிலுமொரு பாவனையைச் செய்தே தீரவேண்டுமென் றறிந்தவர்கள் இங்ஙனம வினவாரென்க.

சி: உடல் மிகு அசங்கியமானது, விக்கிரகம் அதி சுத்தமானது என்றருளியதை விளக்குமாறு வேண்டுகின்றனன்?

கு: சுக்கிலசோணிதங்களா லுண்டானதாயும் மாமிச மல மூத்திரங்களினால் நிருமிக்கப்பட்டதாயுமுள்ள சரீரம் துர்க்கந்தம வீசிகொண்டே இருக்கிறது; தன்னைச் சுகந்தப்படுத்துமாறு பூசிய சற்சந்தனாதிகளையும் துர்க்கந்த வடிவமாக்கி விடுகின்றது; தான் நஷ்டமானபோது அழுகி நாறிக் கரைந்து போகின்றது. இருக்கிறவர்களுக்குத் திரவிய விரயமும துக்கக் கிலேசமும் தருகினறது. இவ்வகைத்தாய தோஷங்கள் விக்கிரகங்களிடத்தில்லை. அவைகளுக்குச் சமர்ப்பித்த சற்சந்தனாதிகள் யாவரும் உபயோகித்தற்குத் தகுதியாயு மிருக்கின்றன. அவை தமக்குக் கேடுண்டாய விடத்தும பிறிதொன்றற் குபயோகமாகின்றன. இவ்வாறு சிந்திததுப் பார்த்தால் உடலினிழிவும விக்கிரகங்களி னுயர்வும் நனகு விளங்கும்.

சி: விக்கிரகாராதனை சிலகாலத்திற்கு முன்னர்த்தான் கற்பிக்கப்பட்டதென்பதற்கு விடையென்ன?

கு: அனுதியேற்பாடென்று மனுவாதி சாஸ்திரங்களாற் சொலப்படுகின்ற வேதத்தில விக்கிரகாராதனை செய்வதற்குப் பிரமா

ணமிருத்தலாலும் சரித்திரவாயிலாக விசாரயுமிடத்து ஒவ்வொருதேசத்தாரும் விக்கிரகாராதனை செய்துவந்தார்களென்பது பெறப்படுதலாலும் அது கூடாது. மேலும், விக்கிரகாராதனை செய்யுமிடத்துச் செய்பவர்கள் விக்கிரகமென்று கருதாது சாட்சாத் கடவுளாகவே கருதி வணங்குவதனாற்றான் கோடிகணக்காய்ச் செலவுசெய்து தேவாலயங்கள்கட்டி அதற்கு வேண்டிய சாதனங்களும் அமைத்திருக்கிறார்கள். கேவலம் விக்கிரகமாகக் கருதுவாராயின் அவ்வாறு செய்யார்கள். விஷயாநந்தத்தி லீடுபட்டுக் கலக்கமுற்றிருப்பவர்கள் ஈசுவரத்தியானம் செய்வதற்கு இது பெரும்பான்மையும் எளிதான வழியாயுமிருக்கிறது. விக்கிரகாராதனை செய்யாது வீணேவானத்தைநோக்கிச் சிலவற்றைச் சிலபோதோதியிருப்பவர்க்கு மனம் ஒருமுகப்படுத லுண்டாவதற்கு நிமித்தமும் காயவணக்கமும் மனவணக்கமு மின்றும். மகாதத்துவஞானியென்று யாவராலும் புகழ்ந்து சொல்லப்படுகின்ற லோககுரு பகவத்பாத சங்கராசாரிசுவாமிகளே விக்கிரகாராதனையைப் பிற ருய்யுநெறிகண் டெய்யும்வண்ண மியற்றினார்களென்றால் அதன் பெருமையை யளவறிந்து சொல்லுதல் முடியாதென்க. விக்கிரகாராதனையின் பயனை யறியாதவர்களும் மடிகளும் அதனை யுக்தி, தருக்கம், அனுமானம் என்பவற்றிற் கிணங்காவாறு பழித்துப் பேசிப் பாவத்தை யீட்டிப் பாழ் நரகிற்காளாவரென்க.

## உகூ - வது சம்வாதம்.

### பாகியபூசை பரமார்த்த மன்றெனல்.

சி: அங்ஙனமாயின் விக்கிரகாராதனை யியற்றுதல் கூடவே கூடாதென்று அறிவின் மிக்கோரும் கூறுவதற்கு நிமித்தமென்ன?

கு: விஷயங்களிற் சென்றுழலும் மனத்தை மடக்கி ஈசுவரபுத்திசெய்துள்ள ஓர் ¶ விக்கிரகத்தில் நிறுத்திப் பூசித்துக்கொண்டு வரும் புனிதன் மேனிலையிற் செல்லாது அதனையே கடைப்பிடித் தொழுகுமிடத்து, மேனிலையிற் சென்ற ஆன்றோர்கள் அவர்களை நோக்கி விக்கிரகாராதனை கூடவேகூடாதென்று கூறினார்களாதலின் யாதும் பிசகின்றும். விக்கிரகாராதனையின் பயனை யடை

¶ இங்கு விக்கிரகமென்றது சாஸ்திரங்கள் கூறியவா றமைத்துள்ள விக்கிரகத்தை.

ந்தவன் மீண்டு மதனைச் செய்தலெற்றிற்கு? பி. ஏ. வகுப்பிற் சேர்ந்து படித்துப் பரீட்சையிற் றேறிய ஒருவன் மீண்டும் அவ்வகுப்பிற்சேர்ந்து படிப்பானாயின் அவனை அறிவுடையோ ரிகழாமற் போவரோ? விக்கிரகாராதனை மோக்ஷத்திற்குப் பரம்பராசாதனமாயிருப்பினும் "மோக்ஷ விச்சையுள்ளவனுக்குப் பாஷாணம், உலோகம், மணி, மண் இந்த ரூபமான விக்கிரகங்களிலே செய்யும் பூசையானது புனர்சன்மத்தையும் போகத்தையும் கொடுக்கத்தக்கது. ஆதலால், யதியானவன் மறுபடியும் சனனத்தை யடையாதிருக்கும் பொருட்டுத் தனது இதயார்ச்சனையே செய்யவேண்டும்" என்று மைத்திரேயோபநிஷத்துக் கூறியவாறு அது புனர்ஜன்மத்தையும் போகத்தையும் கொடுத்தற்கு நேர்சாதனமா யிருப்பதுபற்றிப் பிறவியையும் போகத்தையும் விரும்பாது மோக்ஷமடையும் நிமித்தம் அதனை யிழித்துக்கூறினார்கள். அத்வைதவிளக்கம்

"சரியையாதிகளைப்பற்றி இகழ்ந்து கூறுபவர் இருவகையினர். அவருள் ஒருவகையினர் கிறிஸ்துவர், மகமதியர் முதலாயினோர். இவர் எவ்வாற்றானும் சரியையாதிகள் செய்யப்படுவனவல்லவென்றும், ஞானத்துக்குச் சாதனமல்லவென்றும், அது செய்யின் நரகமுண்டாமென்றும் கூறுவோர். மற்றொருவகையினர் வேதாதிப் பிரமாணவாதிகள். இவர் சரியையாதிகள் ஞானசாதனமென்றும், ஞானசாதனமாயினும் அவற்றையே முடிந்த நிலையாகக்கருதுவது அஞ்ஞானமென்றும், அச்சரியையாதிகளைச்செய்து பின் அவற்றினின்றும் நீங்கி ஞானநிலையை அடையவேண்டுமென்றும், ஞானமொன்றினாலேயே மோட்சமுண்டாமென்றுங்கூறிச் சரியையாதிகளே பொருளென்று மயங்கி நிற்பார்க்கு அவற்றின் குறைவையும், ஞானத்தின் உயர்வையும், சரியையாதிகள் சித்தசுத்தியைமாத்திரம் உண்டாக்குமேயன்றி ஞானத்தையும் முத்தியையும் கொடாவென்றமையையும் விளக்கி, சரியையாதிகளில் நிற்போர் உய்யும்பொருட்டு மிகக் காருண்ணியத்தோடு சரியையாதிகளை யிழித்துக்கூறுவோர். இவற்றுள் முன்னவரான கிறிஸ்துவராதியோர் கூறுவது தூஷணமாகுமேயன்றிப் பின்னவரான வேதாதிப் பிரமாணவாதிகள் கூறுவது தூஷணமாகாது. தூஷணமாகாமை மாத்திரமன்று, ஞானத்துக்குப் பூஷணமுமாம்" என்று கூறியுள்ளதைநன்கு சிந்திந்தால் விக்கிரகாராதனையை யான்றோர்கள் இழித்துக் கூறியதன் காரணம் வெள்ளிடைமலைபோல் தெள்ளென விளங்கும்.

சி: தியானஞ் செய்தல் வாயிலாக இதனை விளக்கிக்காட்டு மாறும் பிரார்த்திக்கின்றனன்.

கு: தியானமானது பிரதீகம் அகங்கிரகமென விருவகைத்தாம். அந்நியவஸ்துவை அன்னியரூபமாகத் தியானிப்பது பிரதீகத் தியானமாம். இதற்குதாரணம்:—சாளக்கிராமத்தை விஷ்ணுரூபமாகவும் பாணலிங்கத்தைச் சிவரூபமாகவும் தியானித்தல்போல்வதாம். ஒருவடிவத்தை யவ்வடிவமாகவே தியானித்தல் அகங்கிரகத்தியானமாம். இதற்குதாரணம்:—சாஸ்திரங் கூறியவாறு சிவனையும் விஷ்ணுவையும் அவ்வவ்வடிவமாகவே தியானித்தல் போல்வதாம். நான் பிரமம் என்று தியானிப்பதும் அகங்கிரகத்தியானமாம். "மனது நிலைக்கும்பொருட்டு முதலில் ஸ்தூலவடிவத்தை விசேஷமாய்ச் சிந்திக்கவேண்டும். அதி(ஸ்தூலத்தி)ல் நிலைத்தமனது சூட்சுமத்திலும் நிலைபெறும்" என்னும் கருடபுராண வாக்கியப்படி முன்னர் ஸ்தூலமான பிரதீகத்தியானமும் அதன்பின்னர்ச் சூட்சுமமான படர்க்கை அகங்கிரகத்தியானமும், அப்பால் சூட்சுமத்திலுமதிசூட்சுமமான தன்மை அகங்கிரகத்தியானமும் செய்யவேண்டும். தன்மை யகங்கிரகத்தியானஞ் செய்தவர்களுக்கே தத்துவஞான வாயிலாக ஆத்மசாட்சாத்காரம் சித்திக்கும். விக்கிரக ஆராதனை கேவலம் ஒன்றை யொன்றாய்ப் பாவிக்கும் பிரதீகத்தியானமாயிருத்தலின் அப்பிரதீகத்தியானத்திலேயே உறுதியாய்நின்று அகங்கிரகத்தியான முதலானவைகளைக் கருதாதிருப்பவர்களைக் குறித்தே அதனை யிழித்துக்கூறினரென்று மறிதற்பாற்றும்.

சி: சுவாமி! விக்கிரஹாராதனையை யிழித்துக் கூறுவதற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ் வருவனவே.

இராமபூர்வதாபிநீயுபநிஷத்.

𑌚𑌿𑌨𑍍𑌮𑌯𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌸𑍍𑌯 𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌸𑍍𑌯𑌾𑌶𑌰𑍀𑌰𑌿𑌣𑌃 | 𑌉𑌪𑌾𑌸𑌕𑌾𑌨𑌾𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌕𑌲𑍍𑌪𑌨𑌾 | 𑌰𑍂𑌪𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍁𑌂𑌸𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌂𑌶𑌾𑌦𑌿𑌕𑌲𑍍𑌪𑌨𑌾 | 𑌦𑍍𑌵𑌿𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑌿𑌷𑌡𑌷𑍍𑌟𑌾𑌨𑌾𑌂 𑌦𑌶 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 𑌷𑍋𑌡𑌶 | 𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌾𑌮𑍀 𑌕𑌥𑌿𑌤𑌾 𑌹𑌸𑍍𑌤𑌾𑌃 𑌶𑌙𑍍𑌖𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑍁𑌤𑌾𑌃 | 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 𑌤𑌾𑌸𑌾𑌂 𑌵𑌰𑍍𑌣𑌵𑌾𑌹𑌨𑌕𑌲𑍍𑌪𑌨𑌾 | 𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍇𑌨𑌾𑌕𑌲𑍍𑌪𑌨𑌾 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌂 𑌹𑌿 𑌪𑌞𑍍𑌚𑌧𑌾 | 𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯 𑌸𑍇𑌨𑌾𑌦𑌿𑌕𑌲𑍍𑌪𑌨𑌾 ||

(இ-ள்.) இச்சுவரூபமாயும், அத்துவயமாயும், பிரிவற்றதாயும், சரீரமற்றதாயுமிருக்கிற பிர்ம்மத்திற்கு உபாஸகர்களுடைய பிரயோஜனத்தின் பொருட்டு ரூபம் கற்பிக்கப்பட்டிருக்கிறது. உருவத்தோடுகூடியதாயிருக்கிற (சிவவிஷ்ணுமுதலிய) தேவதைகளுக்குப் புருஷகற்பனையும் (இலக்ஷ்மீ, பார்வதிமுதலிய) தேவிகளுக்கு ஸ்திரீகற்பனையும்அவர்களுக்கு முக்கண், நான்குகை என்றஅங்க கற்பனையும், சக்கரம், சூலம்முதலிய அஸ்திரகற்பனைகளும் உ-சு-அ-க0-கஉ-கசு-கஅ - கைகள் கற்பனையும் சொல்லப்பட்டிருக்கின்றன. சங்கமுதலியவைகளைத் தரித்திருக்கிறதாகவும் அநேக வர்ணங்களுள்ளதாகவும் பலவித வாகனங்களை யுடையதாகவும் சக்தி பரிவாரங்களை யுடையதாகவும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. இப்படிப் பிரமமத்தினிடத்தில் ஐந்துவிதமாய்க் கற்பிக்கப்பட்டிருக்கிற சரீரத்திற்கு ஸேனைமுதலானவைகளுங் கற்பிக்கப்படுகின்றன.

தரிசிநோபநிஷத்.

𑌤𑍀𑌰𑍍𑌤𑍍𑌥𑍇 𑌦𑌾𑌨𑍇 𑌜𑌪𑍇 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌕𑌾𑌷𑍍𑌠𑍇 𑌪𑌾𑌷𑌾𑌣𑌕𑍇 𑌸𑌦𑌾|
𑌶𑌿𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌿𑌵𑍇 𑌦𑍇𑌹𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑍇 | 𑌆𑌤𑍍𑌮𑌸𑍍𑌥𑌂 𑌶𑌿𑌵𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌬𑌹𑌿𑌷𑍍𑌠𑌂 𑌯𑌸𑍍𑌸𑌮𑌰𑍍𑌚𑌯𑍇𑌤𑍍 | 𑌹𑌸𑍍𑌤𑌸𑍍𑌥𑌂 𑌪𑌿𑌣𑍍𑌡𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌲𑌿𑌹𑍇𑌤𑍍𑌕𑍂𑌰𑍍𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃| 𑌶𑌿𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌸𑍁 𑌨 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃| 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌭𑌾𑌵𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌃 𑌪𑌰𑌿𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌾𑌃 |

(இ - ள்.) தேகத்திற்குள்ளேயே சிவனானவர் நிலையாயிருக்கையில் (கங்கைமுதலிய) தீர்த்தஸ்நானம், ஸத்பாத்திரத்திற் செய்யுந் தானம், (மந்திர)ஜபம், யக்ஞம், கட்டை கல்முதலிய விக்கிரஹங்கள் இவைகளிலே மூடபுத்தியுள்ளவர்கள் எப்போதும் சிவனைப்பார்க்கிறார்கள் (தேடுகிறார்கள்). தனக்குள்ளேயே யிருக்கிற சிவனாகிய என்னை விட்டுவிட்டு வெளியிலிருக்கிறதாக எவனுபாசிக்கிறானோ அவன் தன்கையிலிருக்கிற சோற்றை யெறிந்துவிட்டுப் புறங்கையை நக்குகிறவனுக்கு ஒப்பாவான். யோகிகள் தேகத்திற்குள்ளேயே சிவனைப் பார்க்கிறார்கள். பிரதிமைகளிலல்லா அக்ஞானிகளுடைய பாவனை (எண்ணம் அல்லது நினைப்பு அல்லது தியானம்) யின்பொருட்டுப் பிரதிமைகள் கற்பிக்கப்பட்டன.

சாதாதபஸ்ம்ருதி.

𑌅𑌪𑍍𑌸𑍁𑌦𑍇𑌵𑍋 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌦𑌿𑌵𑌿𑌦𑍇𑌵𑍋 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌾𑌂 |
𑌕𑌾𑌷𑍍𑌠𑌲𑍋𑌷𑍍𑌠𑍇𑌷𑍁 𑌮𑍂𑌰𑍍𑌖𑌾𑌣𑌾𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌦𑍇𑌵𑌤𑌾||

(இ - ள்.) சாதாரணமான மனிதர்களுக்கு (கங்கை முதலிய) புண்ணிய தீர்த்தங்களில் தைவம் (தைவமாக பாவிக்கிறார்களென்பது கருத்து). சற்றுத்தெரிந்த வித்துவான்களுக்குச் சுவர்க்கத்திலிருக்கிற (இந்திராதி) தேவதைகள் தைவம். மூடர்களுக்குக் கட்டையிலும் கல்லிலும் தைவம். மனதை யடக்கிய யோகிக்குத் தன்னுடைய ஆத்துமாவே தைவம்.

உத்தரகீதை.

𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑍋 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌤𑍀𑌨𑌾𑌂 𑌮𑍁𑌨𑍀𑌨𑌾𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌦𑍈𑌵𑌤𑌮𑍍 |
𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾 𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌬𑍁𑌦𑍍𑌧𑍀𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾𑌮𑍍 ||

(இ - ள்.) துவிஜர்களுக்கு அக்கினியில் தைவம். முனிகளுக்கு ஹிருதயத்தில் தைவம். ஞானமில்லாதவர்களுக்குப் பிரதிமைகளில் தைவம். ஸமதரிஸன முள்ளவர்களுக்கு (ஸகலமும் பிர்ம சுவரூபமாய்ப் பார்க்கிறவர்களுக்கு) எங்கும் தைவம்.

𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌤𑍋𑌯𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌪𑌾𑌷𑌾𑌣𑌮𑍃𑌣𑍍𑌮𑌯𑌾𑌃 |
𑌯𑍋𑌗𑌿𑌨𑍋 𑌨 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌆𑌤𑍍𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 ||

(இ - ள்.) ஆத்துமத்தியாந பாராயணர்களான யோகீசுவரர்கள் ஜலரூபங்களான தீர்த்தங்களையும், சிலை பொன் முதலியவைகளால் செய்யப்பட்ட தெய்வங்களையும் சேவிக்கார்கள்.

லிங்கபுராணம். பூர்வபாகம்-அத்-எரு.

𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌤𑍁 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑌮𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌂 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌃 |
𑌬𑌾𑌹𑍍𑌯𑌂 𑌸𑍍𑌥𑍂𑌲𑌂 𑌮𑍁𑌨𑌿𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌾𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌮𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌂 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌃 ||
𑌕𑌰𑍍𑌮𑌯𑌜𑍍𑌞𑌰𑌤𑌾𑌃 𑌸𑍍𑌥𑍂𑌲𑌾 𑌸𑍍𑌥𑍂𑌲𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌰𑍍𑌚𑌨𑍇 𑌰𑌤𑌾𑌃 | 𑌅𑌸𑌤𑌾𑌂
𑌭𑌾𑌵𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑌾 𑌸𑍍𑌥𑍂𑌲𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 || 𑌯𑌥𑌾 𑌸𑍍𑌥𑍂𑌲𑌮𑌯𑍋𑌗𑌿-
𑌨𑌾𑌂 𑌮𑍃𑌤𑍍𑌕𑌾𑌷𑍍𑌠𑌾𑌦𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌮𑍍 ||

(இ - ள்) ஓ! பிராம்மணர்களே! இலிங்கமானது இரண்டு விதமென்று சொல்லுகிறார்கள். ஓ! பிராமணர்களான முனி சிரேஷ்டர்களே! ஸ்தூலம், சூட்சுமமென்பவைகளே. ஸ்தூலமானது பாஹியம், சூக்ஷ்மமானது ஆந்தரமென்று சொல்லுகிறார்கள். யக்ஞம் முதலிய கருமங்களில் விருப்பமுடையவர்களும் ஸ்தூல லிங்கத்திற் பூஜைசெய்ய விருப்பமுடையவர்களும் ஸ்தூலபுத்தியுள்ளவர்கள். மூடர்களுடைய பாவனையின் பொருட்டு ஸ்தூலவிக்கிரஹமேயன்றி விவேகிகளுக்கல்ல. இந்திரிய வியாபாரங்களை யடக்காதவர்களுக்கு மண், கட்டைமுதலிய ஸ்தூலவிக்கிரஹங்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்காந்தபுராணம் ஞானயோககண்டம்.

[illegible]

(இ - ள்) தீர்த்தங்களிலேயும், தானத்திலேயும், (கிருச்சிர சாந்திராயண விரதமாகிற) தபசிலேயும், யாகத்திலேயும், கட்டையிலேயும், கல்லிலேயும் மூடர்கள் சிவனை தேடுகிறார்கள். தன தேகத்திலேயே சிவன் நிலையாயிருக்கிறார். ஓ! முனியே! ஞானக்கண்ணில்லாமையினாலும் மாயாபலத்தினாலும் எங்கு நிறைந்திருக்கிற சாந்தரான சங்கரரை காணுகிறதில்லை. தனக்குள்ளேயே நிலையாயிருக்கிற சிவனைவிட்டு, சிவன வெளியிலிருக்கிறதாக (எண்ணி)ப் புசிக்கிறவன் கையிலிருக்கிற சோற்றை எறிந்துவிட்டுப் புறங்கையை நக்குகிறவனுக் கொப்பாவான். யோகிகள் சிவனைத் தமக்குள்ளேயே பார்க்கிறார்கள், பிரதிமைகளிலல்ல. அக்ஞானிகளுடைய பாவனைக்காகப் பிரதிமைகள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

பாகவதம்.

[illegible]

(இ - ள்.) நான் சகல பூதங்களிலேயும் அநதந்தப் பூதங்களுடைய ஆத்துமாவாக எப்போது மிருக்கிறேன். அப்படிப்பட்ட

என்னையறியாத மனிதர்கள் விக்கிரஹத்தில் வீணான காரியஞ் செய்கிறார்கள். எவன்: சகல பூதங்களிலேயும் ஆத்மாவாகவும் ஈசுவரனாகவு மெப்போதுமிருக்கிற என்னைவிட்டு மூடத்தனத்தினால் விக்ரகத்திலே பூஜையை விரும்புகிறானோ அப்படிப்பட்டவன் சாம்பலில் ஹோமஞ்செய்தவனுக் கொப்பாவான். ஓ! பாபமற்றவனே! விசேஷ வஸ்துக்களைக்கொண்டு பூஜிக்கப்பட்ட நான் ஸந்தோஷப்படுகிறதில்லை. விக்கிரஹத்திற் பூஜைசெய்கிறவன் என்னை பூதக்கூட்டங்களென் றெண்ணி அவமானஞ் செய்தவனாகிறான். எவன் ஹரியினுடைய பூஜையை சிரத்தையோடு விக்கிரஹத்திற் செய்ய இச்சிக்கிறானோ அவன் அந்தஹரியினுடைய பக்தர்களிற் சேர்ந்தவனுமல்ல; பக்தரல்லாத மற்றவரிற் சேர்ந்தவனுமல்ல; பிராகிருதன் (உண்மையறிவில்லாதவன்) என்று சொல்லப்படுகிறான்.

வாஸிஷ்டராமாயணம்.

[illegible]

(இ - ள்.) உருவங்களினாலே வெவ்வேறாயுங் குறிப்பிடக்கூடியதாயு மிருக்கிற வஸ்துவினிடத்தி லந்தத் தேவத்தன்மை யெப்படிசொல்லக்கூடும்? ஒன்றினாற் செய்யப்பட்டதல்லாததாயும் ஆதிமுடிவில்லாததாயு மிருக்கிற சுவப்பிரகாசமான வஸ்துவைச் சித்தாகவும் சிவமாகவு மறிகிறார்கள். அதுவே தேவசப்தத்தினாற் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட வஸ்துவே ஸத் அஸத்தென்று சொல்லப்படுகிற ரூபமாயும் ஸகலமாயு மிருக்கிறது. அதை நன்றாய்ப் பூஜிக்கவேண்டியது. சிவதத்துவத்தை யறியாதவர்களுக்கு (விஷ்ணு சிவன் முதலியவர்களுடைய) ரூபாதிகளில் அர்ச்சனை செய்யத்தக்கது. ஒருயோஜனை தூரம் நடக்கச் சக்தியில்லாதவனுக்கு ஒரு கூப்பாடுதூரம் நடக்கக் கற்பிப்பதுபோற்றான்.

பகவற்கீதை.

ஞானமா யொன்றாய் நின்ற வென்னையே நானு வாகப்
போனதீ வினையின மாந்தர் வேள்வியாற் பூசித் தத்தால்
வானமா முலக மேறி வாழ்ந்துமண் ணிடையே வீழ்ந்திட்
டீனமா மாசை யாலே யிற்பது பிறப்ப தாவார்.

ஈசுரகீதை.

கருத்திலா மூடர் காட்டமா திகளிற் காண்பர்கற் றவர்களா காயத்,தருக்களிற் புனலிற் காண்பரா குதியி லருச்சனை செய்யுமந் தணரவ், வெரிக்கணை காண்ப ரெங்குமாய் நின்ற வனதுலிங் கத்தினை நேரே, ஒருக்கிய பரம யோகிக ளென்று மொழிவறக் காண்பர்தம் முளத்தே.

ரிபுகீதை.

ஓதியவிப் பூசனையைச் செய்வதற்கிங் குரித்தான வுணர்வில்லோர் மூர்த்தி யாதி, மீதுபர சிவன்றனைநல் லன்பினொடே மேவியிடு வாகியமா முபசா ரத்தால், நீதியதாப் பூசனைசெய் திடினுமீசனிகரில்லாக் கருணையினா லன்னோ ருக்கும், போதமுடன் மோட்சத்தை மெல்ல மெல்லப் பொருந்தியிடச் செய்திடுவன் புதையுற்றோனே.

ஞானவாசிஷ்டம்.

செல்வழியோ சனைநடக்க மாட்டாதார் குரோசவழி செல்லுமாபோற், பல்வடிவி லருச்சிப்ப ரறிவில்லா ரறிவுநிலை படையாரென்று, சொல்வர்பரா பரமற்ற சிற்கனமெவ் விடத்துந் துன்றிநிற்கு, மல்வழியாங் கற்பங்க ளனைத்தினுமா யாததனா லதுவே தெய்வம்.

அதிரகசியம்.

கற்புடை மகளி ரெல்லாங் கணவனே தெய்வ மென்பர்
சிற்பொலி சமய வேடர் சிலையையே தெய்வ மென்பர்
தற்கொலி மாந்த ரெல்லாந் தாருவே தெய்வ மென்பர்
அற்புறு பெரியோ ரெல்லா மறிவையே தெய்வ மென்பர்.

மண்ணா லரனை வகுத்த ளித்து மறிந்து மண்ணாய் மதிப்பரா, லெண்ணார் கழுத்தி னிலிங்கத்தை யிறுக்கிப் பொருள்கா ணிதுவென்பார், புண்ணார் சென்னி பறித்தலே பொருளா மென்று புலம்புவார், கண்ணா ரிரவி பாதவங்கள் கருடன் றனையும் பொருளென்பார்.

பட்டினத்தடிகள்.

ஆரூர ரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றாரூர்க டோறு முழலுவீர்-நேரே
உளக்குறிப்பை நாடாத வூமர்கா ணீவிர்
விளக்கிருக்கத் தீதேடு வீர்.

உளியிட்ட கல்லையு மொப்பிட்ட சாந்தையு மூத்தையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகி லேனுயர் பொன்னெனவே
ஒளியிட்ட தாளிரண் டுள்ளேயிருத்துவ துண்மையென்று [னே
வெளியிட் டுடைத்து வைத்தே னினிமேலொன் றும் வேண்டில

பத்திரகிரியார்பாடல்.

உளியிட்ட கல்லு முருப்பிடித்த செஞ்சாந்தும்
புளியிட்ட செம்பும் பொருளாவ தெக்காலம்.
வேடிக்கை யுஞ்சொகுசும் மெய்ப்பகட்டும் பொய்ப்பகட்டும்
வாடிக்கை யெல்லா மறந்திருப்ப தெக்காலம்.

ஞானவிளக்கம்.

உயிர்க்குயிரா யீச னொழியாம னிற்க
வுயிர்க்குயிராக் கண்டிங் குணரா—துயிர்க்குயிரை
வேறுக்கிப் பூசிக்கும் விரகிலிக்கு முண்டாமகொல்
வேறுகா மெய்ஞ்ஞான வீடு.

உத்தமங்க ளெல்லா முணர்வையே தாம்பேணு
மத்திமங்க ளேபதுமை யைவாழ்த்துஞ்—சுத்த
வதமங்க ளெல்லாந்தன் னகத்தைப் போற்று
நதியோடை கூபமென நாடு.

தத்துவக்துக் கப்பாலே தன்னைத் தரிசித்து
நித்தபரி பூரணத்தி னில்லாமல்—சுத்த
பனிமாயை யார்செய் பதுமையினைத் தேடு
நனிமா னிடமிருக நாடு.

உள்ளத் தொளியா யொருகா லவியாத
வெள்ளவெளிப் பெம்மானை வேறுக்கிக்—கள்ளமுறுங்
கற்பனையால் வேறோர் கடவுடமைக் காமிக்கு
மற்பருக்கு ஞானமரி தாம்.

மூவர் அம்மானை.

நாட்டிலுள்ள கல்லையெல்லாம் நன்றாக வேதிரட்டிக்
கூட்டியுற வாக்குவித்துங் குருவழியா ரம்மானே
கூட்டியுற வாக்குவித்துங் குருவழியா ராமாயின்
ஏட்டிலுள்ள பாட்டையெல்லா மெடுத்துரைத்தா ரம்மானே
எடுத்துரைத்தார் பயனவற்றா லெய்துவரோ வம்மானே.

நம்மாழ்வாரருளிய திருவிருத்தம்.

நிறமுயர் கோலமும் பேரு முருவு மிவையிவையென்
றறமுயல் ஞானச் சமயிகள் பேசிலு மங்கங்கெல்லாம்
உறவுயர் ஞானச் சுடர்விளக்காய் நின்றதன்றி யொன்றும்
பெறமுயன் றாரில்லை யால்யெம் பிரான்றன் பெருமையையே.

வேதாந்தவிலக்கணம்.

ஞானமே பரமென லென்பதென் மூடம்
அதுவே றெனக்கொண் டிலக்கலா விலக்கை
வைத்துழல் பேய்களு முளதா மோர்குழி.

உருவம்.பரமெனக் கொடுமணி துலக்கிக்
கிணுகிணென் றசைத்துப் பூசித் தோமென்
றகங்கொளும் பேய்களு மோர்குழி யென்ப.
அருவம்.பரமென் றூமீவா பரமே
யெனக்கர்த் தபம்போற் கூஉய்க் கதறிப்
பூசித் தோமெனக் கொள்வதோர் பேய்க்குழி.
ஐமபூ தத்தொன் றரனெனக் கொடுபணிந்
தேத்திக் களிகூர்ந் திருப்பதோர் பேய்க்குழி.

சோருபசாரம்.

தேரைத் திருநாளைச் சேவிப்பீர் தன்னைவிட்டிங்
காரைத் தொழப்போரீ ரையகோ—தேரிடையே
பார்க்கின்ற தெய்வம் பரிபூ ரணமலவோ
யார்க்குந் தெரியாத தோ.

---

உஎ - வது சம்வாதம்.

பாவனைபுரிந்திடிற் பவம்நீங்காதெனல்.

சி: பிரதீகத்தியான முதலியவை பாவனைகளன்றோ?

கு: ஆம்.

சி: "யாதொன்று பாவிக்கநான் அதுவாதலால் உன்னை நானென்று பாவிக்கின் அத்துவித மார்க்க முறலாம்" என்று பெரியோர் பணித்திருத்தலால் பாவனையே மோக்ஷத்திற்கு நேர் சாதனமாமென்பதற்குத் தடையாது?

கு: அப்பெரியா (தாயுமானவ)ரே "வேறென் றெண்ணும துள்ளபடி சுகமா விருக்கவே யேழையேற் கருள்செய்" எனவருளியிருத்தலாலே பாவனைபுரிதல் மோக்ஷத்திற்கு நேர்சாதனமன்றாம் "ஆளவிலாப் பாவகத்தா லமுக்குண்டிங் கழிவின்றி, வினையொன்று மறியாதே வெறுவியனுய்க் கிடப்பேனுக்கு" என்று பெரியோர் அருளியவாறு அளவிறந்த (நாமரூப) பாவனைகளைப் பற்றி மயங்குமொருவன் அப்பாவனைகளையெல்லாம் தன்னுளடக்கியதாயும் ஒன்றாயுமுள்ள பிரதீகத்தியானமும், அஃது ஒழியுமாறு படர்க்கை அகங்கிரகத்தியானமும், அஃது மொழியுமாறு தன்மை அகங்கிரகத்தியானமும், அஃது மொழியுமாறு பாவனாதீதமும் பயிலுமாறு சாஸ்திரங்கள் கூறின; கூறவே, முத்திக்குப் பாவனாதீதம் நேர்சாதனமென்பதும் பாவனை பரம்பராசாதனமென்பதும் நன்கு விளக்கமாம்; ஆகவே, பாவனையுள்ளவரையும் பவம் (பிறப்பு) நீங்காதென்பது பெற்றாம்.

சி: இதனை நன்கு விளக்கல்வேண்டும்.

கு: பாவனையென்பது ஓர் விஷயத்தைப்பற்றிய நினைப்பாம். யாண்டுப் பிருதிவி ஆண்டுக்கந்தம், யாண்டுக்கந்தம் ஆண்டுப்பிருதிவி என்பது போன்று மனமுள்ளவிடத்துச் சங்கற்பமும் சங்கற்பமுள்ளவிடத்து மனமுமிருத்தலால் பாவனை மனதற்றநிலையன்றாம். தியானம், ஜபம், பூசை முதலியயாவும் சங்கற்பவடிவினவாயிருத்தலால் இவைகள்யாவும் பாவனாதீதமன்றாம். பாவனையுள்ளபோதெல்லாம் காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என்னும் திரிபுடியிருத்தலால் அஃதுண்மை நோக்கில் துக்கந்தருவதேயாம். திரிபுடியுள்ள போதெல்லாம் துக்கம் நிகழுமென்பது நியமமாயிருத்தலின், துக்கசாதனமாய பாவனையையொழித்து நினைவிறந்துநின்றவிடம் என்னும் பாவனாதீதமே பயிலவேண்டும். இப்பாவனாதீதம் பாவனைவடிவ துவிதநோக் கற்றவர்களுக்கே விரைவிலுண்டாகும். துவித நோக்கென்பது பதி பசு பாசமென்னும் திரிபதார்த்தமும் அநாதிநித்திய மென்று நிச்சயித்து அவற்றின் சங்கற்ப மகலாதிருத்தலாம். யதார்த்த துவித நோக்குள்ளவரையும் அவிச்சையினாசமின்மையின், மாயா மயக்கறாத பாவனையினால் மோக்ஷம் பெறலாமென்பது கல்லைப் புணையாகக் கொண்டேறிக் கடலைக் கடக்கலாமென்பதுபோலாம். ஆயினும் பிரதீகத்தியானம் அகங்கிரகத் தியானமென்பவை பாவனாதீதம் பதியாதவிடத்து அவசியம் செய்யத்தக்கனவேயாம்; செய்தாற்றான் பாவனாதீத வாயிலாக வீடு சித்திக்கும்.

சி: பாவனையுள்ளவரை வீடுண்டாகா தென்பதற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ்வருவனவே.

முக்திகோபநிஷத்.

த்ருடாப்யாஸாத் பதார்த்தைகபாவநாததிசஞ்சலம் | சித்தம்
ஸஞ்ஜாயதே ஜந்மஜராமரணகாரணம்|| வாஸநாவஶத꞉ப்ராண
ஸ்பந்தஸ்தேந ச வாஸநா | க்ரியதே சித்தபீஜஸ்ய தேந பீஜாங்
குரக்ரம꞉ ||

(இ - ள்.) மிகவுஞ் சஞ்சலமான சித்தமானது திடமாய் அப்பியாசம் செய்யப்பட்ட பதார்த்தங்களுடைய பாவனையினாலே பிறப்பு, மூப்பு, மரணம் இவைகளுக்குக் காரணமாகிறது. பீஜாங்

குர நியாயத்தைப்போல (விதை முன்னருண்டாயிற்றா? செடி முன்னருண்டாயிற்றா? என்றுகேட்டால் விதையையன்றிச் செடியும் செடியையன்றி விதையுமில்லை யாகையால் எதுவும் முந்தின தென்று நிச்சயித்துரைக்கக்கூடாததுபோல) வாசனையினுடைய அதீனத்தினால் பிராணஸ்பந்தமும் (அசைவு) ம் அதனால் வாசனையும் சித்தத்திற்கு விதையாயிருக்கின்றன.

சிவபுராணம் ஞானசங்கிதை.

[illegible]
[illegible]

(இ - ள்.) துவித விஷயமான புத்திபேதம் அஞ்ஞானமாம் (அவித்தையினாலாகியதாம்). அந்தபேதத்திற்கு (சகத் விலக்ஷணமாய பிரமத்திற்கு) இரண்டாவதில்லை. தரிசனங்க(வைசேஷிகாதி சாஸ்திரங்க) ளெல்லாவற்றிலும் காணப்படுகிற துவிதமத புத்திபேதம் அவித்தையினா லாகியதாம்.

கௌடபாதகாரிகை.

[illegible]
[illegible]

(இ - ள்.) ஒருகாரணத்தால் கல்பிக்கப்பட்டிருக்கிற பேதமானது நிவிருத்தியாகும். இந்த பேதவாதம் உபதேசத்தால் வந்தது. அறிந்தபின் துவிதம் கிடையாது.

வாஸிஷ்டராமாயணம்.

[illegible]
[illegible]

[illegible]
[illegible]

(இ - ள்) பேச்சுமாத்திரத்தினாற் பேதமாய்ச் செய்ததாகிய இந்தப் பிரபஞ்சமானது உபதேசிக்கிறவர்களுக்காகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. சாஸ்திரார்த்த ஞான முண்டாகும்பொருட்டும் உபதேசம் பெறுகிறவனுக்கு உபதேசிக்கிறதன்பொருட்டும் சப்தத்திற்கு விஷயமான இந்த வாய்ப்பேச்சாயுள்ள பிரபஞ்சமானது உபதேசங்களிலே கற்பிக்கப்படுகிறது. எப்போதும் ஞாநிகளிடத்திலேயும் கற்பனையென் றறிந்தவர்களிடத்திலேயும் பேதபுத்தியில்லை. வாஸ்தவமான ஞானந்தானிருக்கிறது.

சூதசங்கிதை.

மேவரு மறைக ளத்து விதமென விளம்பு மச்சொற்
றூவரும் பொருள்வே றன்மை தானென வுரைப்ப ரற்றூற்
சிவர்கள் பலருந் தாமுய் நிற்பனந் தேவ தேவன்
பாவனை துவிதங் கொள்ளிற் பவமொழி யாது நாளும்.

பாகவதம்.

காதல் விட்டுக் கருதிய பேதமா
மேத நீங்கின ரெய்துவர் முத்தியின்
பேத மாகு முபாசனை பெற்றிடின்
வேத ஞயினு மீளவுந் தோற்றுமால்.

தேவிகாலோத்தரம்.

வானம் போல வடிவிலை தாயெங்கும்
ஆன தாகத் தியானம்பண் ணுதவன்
கானந் தன்னி லுலண்டெனக் கட்டுப்பட்
டன மான பிறப்பிறப் பெய்துமே.

அதிரகசியம்.

ஆவிக் காவியென் றுரா வமுதினைப்
பாவிக் கவினை வார்சில பாவிகள்
பாவிக் குங்கருத் தாங்கவன் பாங்கர்போ
யாவிக் காணிவந் தானந்த மானதே.

ஞானவிளக்கம்.

பாவநா தீதம் பரமசிவ மென்று ரைத்தாற்
பாவித்து நீயதனைப் பாராதே—பாவித்த
போதேநீ யுண்டாவைபுத்திமுதற் றத்துவங்க
ளதொன்ற வுண்டாந் தெளி.

கருந்திசாரவிளக்கம்.

வேத நாரணன் புள்விலங் காகியு
மாதி யந்த மறிந்தன ரில்லையாற்
பேத பாவனை நீத்துப் பெருந்தகாய்ப்
பாத மாமுடி பற்றிய தென்கொலோ.

சித்தாந்ததரிசனம்.

சிவன்வே றுண்ட சிவன்வேறென் றெண்ணுமயற்
பாவனைக்கண் ணுள்ளில் படா.

தாயுமானசுவாமிகள்.

வாவிக் கமலமலா வண்டாய்த் துவண்டுதுவண்
டாவிக்கு ணினறவுனக் கனபுவைத்தாக் கஞ்சலென்பாய்
பூவிறகும வானகடையிற புல்விறபோர் போலவொன்றைப்
பாவிகக மாட்டேன பதியே பராபரமே.

தத்துவராய சுவாமிகள்.

வேதாகமங்கள் சொனனபொருண மெய்யே யறிவார் போன்றிருநது, பேதாபேதஞ சாதிக்கும பெருமபேய் தனக்கும் வாரீரே, ஞானமபோலச சிலசொலலி நாடறகரிய முததியினுந, தானுஞசிவமும பாசமுமாஞ சைவப்பேய்க்கும வாரீரே.

விவேகசூடாமணி.

இகழுமித துவித மியாவு மெனறுமே மிதனை யாகும்
புகழுமத துவித மெனறும போறறிய பரமாாத தநதான்
மகமேனயிப படியே நேராய மறைமுடி வுரைககக கணடோஞ்
சுகசுழுத தியிலு நிததஞ சுநதவத துவிதங கணடோம.
கறபித வஸது வுககுக் கருதிய வதிட்டா னதமோ
டொபபிய வபேதந தனனே யுள்ளவா றறிஞச ரெல்லாங்
கறபித விரசசு சாப்பங கானனீர முதலிற கணடா
ரிபபடி யிருக்கப் பேத மிசைததிடல * பிரமை யன்றோ.

திருவாயமொழி - ௨ - ௫ - ௩

குறிகொள் ஞானஙகளா லெனேயூழி செய்தவமும்
கிறிகொண டிப்பிறபபே சிலநாளி லெய்தினனயான்
உறிகொண்ட வெண்ணெயப்பா லொளிததுண்ணு மம்மான்பின்
னெறிகொணட நெஞசனாய்ப் பிறவிததுயா கடிநதே.

## உ௮ - வது சம்வாதம்.

பாவனாதீதம் பழகி வீடடையெனல்.

சி: பாவனையொழிநததென றறிவதற்கு முக்கிய குறி யாது?

கு: அவனவளதுவெனச சுட்டறிவிழநது சுகபோகம் பெருகுதலேயாம. இதுவே தறபோத விழபபெனபபடும. தறபோத விழப்பில நனறென்றும தீதெனறும நானெனறும் தானெனறும அனறெனறும ஆமெனறும கருதுபவை உளவாகா; இவை உளவாகாவாகவே, நினைவிறநது நினறவிடமெனனும பாவ[...]தம சிததிககும.

* பிரமை - மயககம்.

சி: ஒருமுறை பாவனுதீதம் சித்தித்தால் போதாதோ?

கு: போதாது. திரிபுடித் தோற்றமின்மையே பாவனுதீதமா யிருத்தலினதனைவிடாது அப்பியசித்து வரல்வேண்டும். விடாதப் பியாசிக்காவிட்டால் பாவனையுண்டாய்க் கொண்டே யிருக்கும். பாசி நிறைந்த குளத்தில் எறிந்தகல்லால் அப்போது பாசி விலகிய தாகக் காணப்படினும், மீண்டும் அப்பாசி பரவி விடுவதுபோல் ஒருமுறைபாவனுதீதம் சித்தித்தலாலே பாவனை ஒழிந்ததாகக் காணப்படினும் மீண்டும் அஃதுண்டாகியே விடும். ஓயாது பாவனுதீதம் சித்தித்தாற்ருன் வீடுகூடும். பாவனுதீதம் கைகூடுதலே தன்னைப் பெறுதற்கு நிமித்தமாயிருத்தலின் அதனை விடா தப்பியசிக்க வேண்டும். பாவனுதீதம், உண்மை நிஷ்டை, சகசநிஷ்டை, நினைவிறந்து நின்றவிடம், மெய்ஞ்ஞானநிஷ்டை யென்பன ஒரு பொருட்கிளவி.

சி: வீடுகூடு நிமித்தம் பாவனுதீதமே பழகவேண்டு மென்பதற்குப் பிரமாணங்களுண்டோ?

கு: கீழ்வருவனவே.

வேதாந்தவார்த்திகம், சார்த்தாந்திகோபதேசம்.

ஸாவநா ஈவிஸாஂத்ய்க்ஷா யஸிஷ்டஂ தநயொஸவ |
ஸாவாஸாவெள தத்ய்க்ஷா நிவிக்ஷு ஸிரொஸவ ||

(இ - ள்.) சகலமான பாவனைகளையும் விட்டு நீங்கியவிடத்தெது மிச்சமாக நிற்கின்றதுவோ அதுவே தன்மயமாம். உண்டில்லை என்பவைக (திருசிய அதிருசியங்க) ளற்ருல் (அதீதமாகிய) நிருவிகற்பம் (சமாதி) நிலைக்கிறது.

ரிபுகீதை.

ஸெஉதாஸெஉஸெதா ஸயாதீஸெத வ்யஸாராஜ்ய ஸொ வறெ| தீரஂவெ ஸ்ரூஸணி ஸ்ராஜூஉஸெஉதவாஜஃ கயஂஸ வெங||

(இ - ள்.) துவித மத்துவித மிரண்டிற் கதீதமாயும், விவஹாரங்களுக் கெட்டாததுமாயுள்ள அரூபப்பிரம்மத்தின்கண் எப்படி அத்வைத வாதமுண்டாம்.

சூதசங்கிதை.

ஆதலிற்றர்க் கத்தினுன் மகாவாக்கியங்களா லநுபவத்தான், மாதயைகொள் வத்துவே கத்துவசிச் சயமெவன்செய் வானவற்

குப், போதமிகச் சொப்பனம்பொய் யாய்க்கழிதல் போற்பந்தம் போகு மம்ம, பேதநடை யுற்றுமுத்தி யிச்சித்தோன் பந்தனென்றும் பெயரா னென்றும்.

ரீபுகீதை.

பேதமதி பொருந்தியிடுஞ் சித்தந் தானே பிறவிமுதற் றுயர் செய்யும் பெந்தநல்கு, மேதமுறும் பேதமதி யிகழ்ந்தப் போதே யின்னலெலாந் தீர்ந்துடனே மோட்சநல்கு, மாதலினு லகம்பிரம மகமெல் லாமென் றகம்பிரம பாவனையே செய்தவற்றால், வாதகமாம் பேதமதி யனைத்து நீக்கி வழுவற்ற சித்தத்தான் முத்தி சார்வாய்.

விவேகசூடாமணி.

திரிசிய மியாவு நீக்கித் திடமுற வகண்ட பாவஞ்
சருவதா வடைவ தாலே சாதுவா மெதிக ளுக்குச்
சிரவண மாதி கன்மஞ் செய்தபின் சுருதி தானே
சருவதா நிருவி கற்ப சமாதியை விதிக்கு தன்றே.

திருமந்திரம்.

குறியாக் குறியினிற் கூடாத கூட்டத்
தறியா வறிவி லவிழ்ந்தேக சித்தமாய்
நெறியாம் பரானந்தி நீடரு ளொன்றுஞ்
செறியாச் செறிவே சிவமென லாமே.

திருவாய்மொழி.

யாவையு மெவருந் தானா யவரவர் சமயந் தோறுந்
தோய்விலன் புலனைந் திற்குஞ் சொலப்படா னுணர்வின் மூர்த்தி
யாவிசே ருயிரி னுள்ளான் யாதுமோர் பற்றி லாத
பாவனை யதனைக் கூடி லவனையுங் கூட லாமே.

திருவாசகம்.

அளவிலாப் பாவகத்தா லமுக்குண்டிங் கறிவின்றி
விளைவொன்று மறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்
களவிலா வானந்த மளித்தென்னை யாண்டானைக்
களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே.

திருப்பல்லாண்டு.

சேவிக்க வந்தய னிந்திரன் செங்கண்மா லெங்குந் திசைதிசையுங், கூவிக் கவர்ந்து நெருங்கிக் குழாங்குழா மாய்நின்று கூத்தாடு, மாவிக் கமுதையென் னார்வத் தனத்தினை யப்பனை யொப்பமரர், பாவிகும் பாவகத் தப்புறத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

**தாயுமானசுவாமிகள்.**

ஆசனமூர்த் தங்க ளறவகண்டா காரசிவ
பூசைசெய வாசை பொருந்துநா ளெந்நாளோ.

**சிவஞான சித்தியார்.**

பாவிப்ப தென்னிற் பாவம் பாவகங் கடக்கிற் பாவம்
பாவிக்கு மதுநா னென்னிற் பாவகம் பாவங் கெட்டுப்
பாவிப்ப தென்னிற் பாவம் பாவனை யிறந்து நின்று
பாவிக்கப் படுவ தாகும் பரம்பர னருளி னாலே.

**பதிபசுபாசவிளக்கம்.**

சிந்தனை புறஞ்செலாச் சிவோக பாவனை
சந்தத முஞற்றிடிற் சமாதி வந்துறு
மந்தநற் சமாதியா லறிவு மேலிடு
மிந்தநன் னிலையிலே யிருக்கற் பாலையே.
பாவனை தீதந் தன்னி னொடொறும் பதிந்து நிற்பாய்.

---

## உக - வது சம்வாதம்.

### பாவனை நீங்கும் பான்மையுரைத்தல்.

சி: பாவனைக்குக் காரணம் துவிதநோக்காயின் அதனை யொழிப்பதற்கேது வென்னை?

கு: சகசீவபரங்கள் அல்லது பதிபசுபாசங்கள் நித்தியப் பொருள்களென்று துவிதநோக்குடையோர் கூறுவதை நன்கு விசாரித்தறிந்தால் துவித நோக்கொழியும்.

சி: அதனை விவரித்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றனன்.

கு: நித்தியமென்பதன் இலக்கணம் அழிவுபாட் டபாவத்திற் கெதிர்மறையாகாமை. அழிவுபாட்டபாவம் - கடத்தின் பின்னின்மை; அப்பின்னின்மைக் கெதிர்மறை-அக்கடம், ஆகாமை-அக்கடமாகாமை. எனவே, அழிவையடையுந் தன்மை யிராதது நித்தியப்பொருளென்றாயிற்று. சகமென்பது உற்பத்தி நாசமுடையதாயிருத்தலால் அநித்தியமாம்; அழிவுபாட் டபாவத்திற் கெதிர்மறையாவது அநித்தியமென்பது நியமமாயிருத்தலினென்க. ஜீவன் அநாதியாயிருப்பினும் மோக்ஷகாலத்தில் தனக்கென வடி

வமென்ப தொன்றின்றிப் பரம்பொருளாய் விளங்குதலின் அவ னும் நித்தியப்பொருளன்றும். பரம் அல்லது பதி எக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாமல் விளங்குதலின் அதுவே நித் தியமாம். நித்தியமான வப்பரம்பொருள் பூரணமாகவிருத்தலால் காலுள்ள விடத்துக் கையிருத்தற் கியையாவாறு போன்று அதன்கண் பிறிதொருபொருள் யதார்த்தமா யிருத்தற் கிடனின் றும். ஆகவே, பரம்பொருளுக்கு வேறாகப் பிறபொருள்கள் நித்தி யமாகவிருக்கின்றனவென்னும் வாதம்பொருந்துமா (யுக்தி) றுடன் பொருந்தியதன்றும். பின்னே, கயிற்றின்கண் அரவு கற்பனையாயிரு த்தல் போன்று உலகமும் சீவனும பரம்பொருளின்கண் கற்பனை யாம். அதிஷ்டானமாயுள்ள கயிற்றைப் பார்க்கிலும் அதன்கண் ஆரோபமாயுள்ள பாம்பு வேறாகாதிருத்தல் போன்று பரம்பொரு ளினும் உலகமும் உயிரும் வேறுபட்டனவன்றும். அன்றாகவே, கயிறே பாம்பாக விளங்குதல் போன்று பரம்பொருளே உலகுயி ராக விளங்குகின்றதென்பது திண்ணமாயிற்று. இவ்வாறுவிசாரித் துரைத்தவாற்றால் பரம்பொருளே நித்தியப்பொருளென்பது பெறப்பட்டது. இஃதறியாதார் பதிபசுபாசம் என்பவை அநாதி நித்தியப்பொருள்கள் என்று கூறி வீண்வழக்கிட்டு நிற்பர். அநா தியென்பதன்பொருள் உற்பத்தியில்லாததாம். நித்தியமென்பதன் பொருள் (திரண்டபொருள்) உற்பத்தியும் நாசமும் இல்லாத்தாம். நித்தியமென்றபோதே அநாதியென்பது கூறாமலே பெறப்பட்டிரு க்க, மிகைபடக்கூறலாக (தருக்க வுணர்ச்சியின்றி) அநாதி நித்திய மென்று கூறுவது அசங்கதத்தினும் அசங்கதமாம். பரம்பொரு ளுக்கு உலகுயிர் வேறாக விருக்குமாயின் பரம்பொருளில்லா திரு க்குமிடத்தில் அவை யிருக்கவேண்டும். பரம்பொரு ளில்லாவிடம் யாண்டுமின்மையின் அவை வேறாக விருக்குமென்பது கூடாது. ஆகாயத்தில் பிருதுவிமுதலிய நான்குபூதங்களுமிருத்தல்போன்று பரம்பொருளில் உலகுயிரிருக்கின்றனவெனின், விசாரிப்புழி மண் ணைத்தவிரக்கடமில்லாமைபோன்று ஆகாயத்தைத்தவிர அந்நான்கு பூதங்களுமிலவாயொழிதலால் ஆகாயத்தினும் அப்பூதங்கள் வேறு பட்டனவன்றும். முதற்குறளுண்மை பூரணவாதத்தில்

"தன்னிற் பிறிதொருபொருள் சத்தாயிருத்தலின்றாக நிறை வாயிருப்பது எது அது பூரணமாம். இத்தகைய இலக்கணம் இவ து கேவலம் நிமித்தகாரணக் கடவுளுக்குப் பொருந்துமா றெங்ஙு

னம்? கண்டமெல்லாம் முற்கூறியபடி யாண்டும் ஏகதேசமாகிய ஓரிடத்ததாகலினென்க.

பூரணமென்பதற்கு நிறைவு என்பது பொருளாதலானும், நிறைவு என்பதில் எதில் நிறைவு என்னும் வினா நிகழ்தலினானும் கடவுள் பூரணரென்று கூறிக்கொண்டே வேறுபொருளும் சத்தாயுண்டென்று புகலலாமெனின், சிறியபொருளைப் பெரிய பொருள் உட்டுளை முதலியவற்றால் தன்னிடத்தில் அடக்கியிருக்கும் காரணமாகப் பெரியபொருள் பூரணமெனப்படுமோ? சிறிதேனும் வேறுபொருள் சத்தாய்த் தன்னிடத் தினமிந் தானொன்றாகவேயிருக்கும் பொருளுக்கன்றோ பூரணத்துவஞ் சித்திக்கும்? அங்ஙனமின்றி வேறுபொருளைச் சத்தாகத் தன்னிடத்தடக்கி யிருக்கும் பொருளைப் பூரணமெனல் யாங்ஙனமியையும்? எப்போது ஒரு சத்துப்பொருளில் பிறிதொரு சத்துப்பொருள் அடங்கியிருக்கிறதென்கிறோமோ, அப்போதே அடங்கியிருக்கும் பொருளும அடக்கியிருக்கும் பொருளும கடபடம்போலக் கண்டமாம; கண்டமாகவே, பெரிய சிறிய கண்டப்பொருள்களின் சையோகத்தைப் பூரணமென்பது நகை முதலியவற்றைத் தன்னிடத்தில் அடக்கிவைத்திருக்கும் காரணமாகப் பேழையைப் பூரணமெனபதுபோலாம். வேதாந்த சித்தாந்தத்தில் பிரமம வேறுசத்துப் பொருள் தன்னிடத்தில நிகழ்தலில்லாத நிறைவாயுள்ளதென்றும் தனது விவர்த்த காரியப்பொருள்களில் கயிறு தனது விவர்த்த காரிய அரவில் நிறைந்திருப்பதுபோல நிறைந்திருக்கின்றதென்றுங் கூறுதலானும், மைத்திராயண்ணி யுபநிஷத் 6-வது பிரபாடகத்தில் ('சிருஷ்டிக்கு) முன்பு பிரமமே ஜகத்தாக விருந்தது; (நாமரூப மற்றதாக இந்தப் பிரபஞ்சமானது பிரமத்தைவிட அந்நியமாக விருக்கவில்லை) ஒன்றாகவே(பரமாத்துமா) இருந்தது; சம்பூரணமாகவிருந்தது; கிழக்கே பூரணமாயும், தெற்கே பூரணமாயும், மேற்கே பூரணமாயும், வடக்கே பூரணமாயும், மேலும பூரணமாயும், கீழும் பூரணமாயும், எங்கும பூரணமாயுமிருந்தது. கிழக்கு முதலான திக்குகளென்பதுமில்லை, குறுக்குமில்லை, கீழுமில்லை, மேலுமில்லை.' என்று கூறுதலானும் எதில் நிறைவு என்னும்வினாவிற்கு விடைபெறப்பட்டமை காண்க."

என்று கூறுவதினானும் இது நன்குவிளக்கமாம். நித்தியமென்பதித்தகையது பூரணமென்பதித்தகையது என்று நன்கு விசா

ரித் துணர்ந்தவர்க்குத் துவிதநோக்கு விரைவிலொழியும். துவித நோக்கொழிவே பாவனையொழிவிற்கு நேர்சாதனமா யிருத்த லின் துவிதநோக் கொழிவையே நாடவேண்டும்.

மாயாப்பிரதிபிம்பனை ஈசுவரனையும் மாயைக்கதிஷ்டான மாய பிரமத்தையும் ஒன்றுபடுத்திப் பரம்பொருளென்று கூறினும். சிவேச வுலகு அநித்தியமெனபுழி மாயைக் கதிஷ்டானமா யுள்ள பிரமமே நித்தியப் பொருளென்றும் ஏனையவை அநித்தியப் பொருளென்றும் கொள்க.

சி: தாங்களிதுகாறுங் கூறியவாற்றல் உலகாதி கற்பனை யென்று திடப்பட வறிந்தவாக்கே பாவனை யொழியுமென்று பெறப்பட்டமையான் உலகாதி கற்பனை யெனபதற்குரிய பிரமா ணங்களைக் காட்டுமாறு வேண்டுகின்றனன்.

கு: கீழ்வருவனவே.

பிரம்மகீதை அத்-சு.

ஜகஜ்ஜீவாதி ரூபேண யதாப்ரஹ்ம ஹ்யவபாஸதே | ததா து:காதிஸம்ஸார ஸம்ஸாரோ மநோமாத்ரோ ஹ்யயம் ஸ்ம்ருத: || யதாப்ரஹ்ம தநா ஸர்வம் விபாதி ஸ்வ ஸ்வதே | ததாது:காதி ஸம் ஸாரோ விபாதி நபாஸதே || ஜகஜ்ஜீவாதி ரூபேண பச்யந்நபி பராத்மவித் | நதத் பச்யதி சித்ரூபம் ப்ரஹ்ம வஸ்த்வேவ பச்யதி || ப்ரஹ்மணோந்ந்யதயா நாஸ்தி வஸ்த்வ வஸ்த்வபிவ | தயாஸதி சிவாத் அந்யத் கதம் பச்யதி தத்த்வவித் ||

(இ - ள்.) எப்போது பிர்ம்மமானது ஜகத்ஜீவன் முதலிய ரூபமாய்(எவனுக்கு) விளங்குகிறதோ,அப்போது துக்கம் முதலிய அநுபவம விளங்குகிறது. ஆனால் அது மனத்தோற்றமாத்திரமே. எப்போது ஸகலப் பிரபஞ்சமும் பிரம்ம சுவரூபமாகத்தானே விளங்குகிறதோ அப்போது இநதத் துக்கமுதலிய அநுபவம இருந்தாலும விளங்குகிறதில்லை. பரமாதமாவை யறிந்த ஞானியானவன் ஜகத் ஜீவன் முதலிய ரூபமாய் பார்த்துக்கொண் டிருந்தாலும் அவற்றை ஜகத்து முதலிய ரூபமாய்ப் பார்க்கிறதில்லை; சித்ரூப மான பிரம்ம வஸ்துவாகவே பார்க்கிறான். வஸ்துரூபத்தினலேயாவது அவஸ்து ரூபததினலேயாவது பிர்ம்மத்திற் கந்நியமாய் ஒரு வஸ்துவாவது அவஸ்துவாவது எப்போதுமில்லை. இப்படி யிருக்கையில், தத்துவஞானியானவன் சிவனைக்காட்டிலும் வேறாக எதை எப்படிப்பார்ப்பான்? பார்க்கான்.

வாயுபுராணம், உத்தரபாகம்.

𑌜𑍀𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍇𑌦𑍋 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌸𑍂𑌤𑍍𑌰𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇 | 𑌨𑌿𑌰𑍂𑌪𑌿𑌤𑌂 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌿𑌵𑌿𑌚𑌾𑌰𑌤𑌃 || 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑌰𑌂𑌪𑌦𑌮𑍍 || 𑌰𑌜𑍍𑌜𑍍𑌵𑌾𑌂 𑌸𑌰𑍍𑌪𑌵𑌦𑌤𑍍𑌰 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍇𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇 | 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑍇𑌽𑌪𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌸𑍍𑌵𑌰𑌜𑍍𑌜𑍁𑌵𑌤𑍍 || 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌾𑌵𑌿𑌦𑌿𑌤𑌂 𑌯𑌦𑍍𑌵𑌤𑍍𑌫𑍇𑌨𑌾𑌦𑌿 𑌬𑍁𑌦𑍍𑌬𑍁𑌦𑌾𑌤𑍍 || 𑌤𑌥𑌾𑌵𑌿𑌚𑌾𑌰𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨 𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌚𑍍𑌯𑌤𑍇 || 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌨𑌾𑌨𑌾𑌤𑍍𑌵𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌨𑌿𑌗𑌮𑌾𑌗𑌮𑌾𑌃 ||

"(இ - ள்.) ஜீவன் ஈசுவரன் பிர்ம்மம் இவர்களின் பேதமானது பிர்ம்ம சூத்திர நிச்சயத்தில் (வேதவியாசரால்) விலக்கப் பட்டிருக்கிறது. சுருதி யுக்தி விசாரத்தினாலே பிர்ம்ம சுவரூபம் நிருபிக்கப்பட் டிருக்கிறது. பரப்பிர்ம்மமானது நாசமற்றதாகவும் சிரேஷ்டமான ஆத்துமாவாகவும் உத்தமமான பதமாகவுமிருக்கிறது. கயிற்றினிடத்திற் பாம்பென்கிற மயக்கம்போற் பிர்மத்தினிடத்திற் பிரபஞ்சமானது பிராந்தியினாற் பிரகாசிக்கிறது. பிரபஞ்சத்திற் பிர்ம்மமிருந்தாலும், கயிறு விகாரமடையாததுபோல் பிர்ம்மமும் விகாரமடைகிறதில்லை. விசாரிக்குமிடத்தில் நுரை, அலை, குமிழி இவையெல்லாம் எப்படி ஜலமேதானோ அப்படியே பிர்ம்மமும் விசாரிக்குமிடத்தில் பிரபஞ்சத்தைக்காட்டிலும் வேறல்ல. ஸகலமும் பிர்ம்மமே. பலவென்பதுஇல்லை யென்று வேதங்கள் சொல்லுகின்றன.

திருமந்திரம்.

பதிபசு பாசம் பயில்வியா நித்தம்
பதிபசு பாசம் பகர்வோர்க் காருக்கிப்
பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதிபசு பாசம் பயில நிலாவே.

ரிபுகீதை.

நிகழுமறி வானபரப் பிரம மல்லால் நீயுமில்லை நானுமில்லை யாருமில்லை, திகழுமறி வானபரப் பிரம மல்லாற் றேகமுதற் றிரிசியமாந் திரளை யில்லை, சகசவறி வானபரப் பிரம மல்லாற் சத்துமில்லை யசத்துமில்லை சதசத் தில்லைப், பகருமறி வானபரப் பிரம மல்லாற் பரசீவ சகங்களெனும் பிரூப்பே யில்லை.

காசிகாண்டம்.

கானவிடைத் தெண்ணீருங் கயிற்றினில்வா ளரவுமலை கடலிற் பட்ட, கூன்முதுகிப் பியிற்றோன்றும் வெள்ளியுமம் முதலுண்மைக் குறிக்கிற் றீரும், ஆனவைபோ னிணையறியிற் றோன்றுசக மனைத்துமில்லா தழியு மாற்றாற், றேனவிழ்பூங் கடுக்கையணி செல்வனை தறைகழற்றாள் சென்னி சேர்ப்பாம்.

இலிங்கபுராணம்.

விரிந்தபூதங் களினோடு விளம்பிந் திரியங்கள் தத்து வங்கள், இருந்தா வகங்கா ரத்தினொடு செறிமுக் குணங்கண் மாத்திரைகள், பொருந்து மாயை சீவனிவை பொய்யாம் யாமே பொய்யின்றி, யிருந்தெவ் விடத்து நிலைபெறுவோ மதனு ருணு வெனவிசைப்பார்.

அத்துவிதவுண்மை.

விருத்தி யொன்று மில்லாமல் விளங்கு நிலையெ நாமதனில்
விருத்தி தோன்றின் முன்பி னின்றி விளங்குஞ் சகசீ வபரங்கள்
விருத்தி நீங்கின் முப்பொருளும் விளங்கி டாமற் றதனுமேல
விருத்தி தானே பந்தமதாம் விருத்தி யொழிவே வீடாகும்.

மூல வக்கர மதனின் மூன்றக் கரமு நின்றதுபோல்
சீல வுற்பல மதனி னிறமுன் மூன்று நின்றதுபோல்
சீல மதனி னேக்கியிடிற் சீவன் பரமச் சகமூன்று
மகால மவையுஞ் சொரூப மதாய்க் கூடிநிகழு மொன்றுயே.

சிவஞானப்பிரகாசவெண்பா.

கையிலுறு புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமோ
மெய்யுணர்வி லுண்டோ விபரீத—மையறிவு
மோரறிவாய்ப் போனவிடத் தோகோகோ மும்முதலுஞ்
சோராம னிற்குமோ சொல்.

ஒன்றுயுல கனைத்து யானுரென் றப்பமுனி
பொன்று மொழியாற் புகன்றிருக்கக்—குன்றுத
முத்தியினு மும்முதலு முண்டென் றுரைத்தலெவன்
பித்தமுறுஞ் சைவாநீ பேசு.

ஓசையொலி யெல்லா மானுய்நீ யென்றபினர்ப்
பேசவிரண் டுண்டோ பேய்ச்சைவா—வாசையெல்லா
மற்றவிட முத்தி நிலையோ வலைதெல்லா
முற்றவிட முத்திநிலை யோ.

என்றைக்கோ விசனரு ளென்றைக்கோ முத்திநெறி
யென்றைக்கோ யேமாந் திருக்குநிலை—யென்றைக்கோ
வென்னும்பா சண்டமதத் தெய்தா தளித்தாரை
யென்னென்று வாழ்த்துகே னியான்.

அந்துவிதக்கலிவெண்பா.

ஈசன்வே றியான்வேறென் றெண்ணுகின்ற பாதகரை
நீசரெனக் கண்டு நினையென்று - ஞசையொடும்
வேதமுடி வறிந்த வேதியரைக் கூடென்றான்
பேதமிலை யெல்லாம் பிரியென்றான்.



## ௯௦-வது சம்வாதம்.

சங்கற்பநாசந்தனாராதியற்றெனல்.

சி: சுவாமி! நினைவிறந்து நின்றவிடம் என்னும் பாவனாதீத முறவேண்டுமென்று யான் பலகால் முயன்று பயின்றும் அது சித்திக்கவில்லை. மனம் விஷயாநந்தத்தைக்கருதியிமைப்போதேனு நில்லாது சுவரிலறைந்த பந்துபோன்று சங்கற்பவிகற்பங்களை யுடைததாய் நினைவிறந்து நின்றவிடத்தி னில்லாது பகிர்முகப் பட்டுவிடுகின்றது. மனதற்றநிலையை யடையவேண்டுமென்று பேரவாக்கொண்டுள்ள யான் அது சித்தியாமைபற்றி மிகவும் வருந்துகின்றனன். சங்கற்பமுண்டாதல்பற்றித்தான் விகற்ப முண்டாகின்றது. விகற்பத்தினால் விட்டபொருள்களி லவாத் தோன்றுகின்றது. அதனால் வெகுளியுந்தோன்றுகின்றது.சங்கற் பமே பல்வகைக்கிலேசத்திற்கும் காரணமாயிருத்தலால் அதனை யொழிப்பதற் கேதுவை நன்கு விவரித்துரைக்குமாறு பிரார்த் திக்கின்றனன்.

கு: சொரூபாவரணமாயுள்ள அநாதியவிச்சையினால்யானென தென்று மதிக்கும் அகங்காரமும், அதனால் எனக்கு இப்பொ ருள் வேண்டுமென்னும் அவாவும், அதனால் அப்பொருளின்கட் செல்லும் ஆசையும், அதனால் அதன் மறுதலைக்கண்செல்லும் கோபமு முண்டாகின்றன. அகங்காரமுதலியனவற்றிற்கு அவிச் சையே காரணமாயிருத்தலால் அது கெட்டொழிந்த காலத்துத் தான் அவையெல்லாமொழியும். சொரூபத்தின் ஐயந்திரிபின்றிய தரிசனமே அவ்வவிச்சை பற்றறக் கெடுவதற்கு முக்கிய காரண

மாம். அச்சொரூபதரிசனம் நினைவிறந்து நின்றவிடம் என்னும் பாவனாதீதம் திடப்படச் சித்தித்தாற்றான் சித்திக்கும்.

அப்பாவனாதீதம் மனோலயமுண்டானபோது சித்திக்கும். பலகாலும் விடாது மனோலயஞ் செய்தவர்க்கே அது கிட்டும். அப்பியாசகாலத்தில் சிறிது பொழுதும் தாமதிக்காது மனோலயஞ் செய்தவர்க்கே சங்கற்பநாசமுண்டாகும். சிறிது பராக்காய் விட்டால் மதுவுண்டு மயக்கமிக்குத் தட்டுக்கெட்டுத் தடுமாறும் குருட்டுக்குரங்குபோனறு மனம் விஷயாகாரமாகி விரிந்துவிடும். ஆகையால், விபரீதவுணர்வென்னும் அவிச்சைகெடுவதற்கேதுவாய ஆத்மதரிசனம் சித்திப்பதற்கு நிமித்தமாயுள்ள பாவனாதீதம் பதியும்படி சித்தத்தைச் சற்றும் அசையாவண்ணம் அடக்கவேண்டும். அடங்காது அசைந்து ஒரு பொருளைப் பற்றுமானால் உடனுக்குடனே அதனை விவேகத்தினால் அடக்கவேண்டும். இவ்வாறு சங்கற்பமுண்டாகும்போதெல்லாம் சங்கற்பமுண்டாதலாலுண்டாகும் கெடுதியை நன்குணர்ந்து அதனைக் கெடுத்துக்கொண்டே வரல்வேண்டும். இப்படி கெடுத்துக்கொண்டே வந்தால் சங்கற்பமுண்டாகாமலே யொழிந்துபோம். இங்ஙனம் செய்வதுதான் சங்கற்பத்தைக் கெடுப்பதற்குபாயம். சங்கற்பநாசஞ் செய்யாதவர்க்கு முத்தித்திருவுண்டாதலென்றுமின்றாதலின் சங்கற்பநாசம் சதாசெய்தல்வேண்டும்.

சி: சங்கற்பத்தைக் கெடுப்பதற் கேதுவாயுள்ள விவேகமும் சங்கற்பமா யிருத்தலால் சங்கற்பநாசம விவேகத்தா லுண்டாமென்ப தெப்படி?

கு: நஞ்சினை நஞ்சினாலும், இரும்பினை யிரும்பினாலும், அம்பினை அம்பினாலும் கெடுப்பதுபோன்று அசுத்த சங்கற்பத்தைச் சுத்த சங்கற்பத்தாற் கெடுக்கவேண்டும். விஷய வாசனை காரணமாகக் கடலிலெழு மலைபோன் றோயாது மனத்தினின்றெழும் சங்கற்பத்தை விவேகத்தால் அடிக்கடி கெடுத்துக்கொண்டே வருமிடத்து அச்சங்கற்பம் நாளுக்குநாள் குறைந்துகொண்டே வரும். அவ்வாறு குறைந்துகொண்டு வருமிடத்து மனத்தின் அசுத்த வாசனையெல்லாம் ஒழிந்துபோம். போகவே, சுத்த வாசனைமிகும். சுத்தவாசனை மிகுமிடத்து, சாந்த விருத்தியே தலையெடுத் திருக்கும். சாந்தவிருத்தியே யுள்ளமனம் போட்டவிடத் தோசையின்றிக் கிடக்கும பொன்போன்று நிறுத்தின

விடத்தினின்று பிறழாதிருக்கும். சாந்த விருத்தியுள்ள மனம் விஷயத்தி லுவர்ப்புற்று நிற்றலின் அது நிற்றற்கிடம ஆத்மாவே யாம்.

அச்சுத்தசங்கற்பம் ஆத்மாவை நோக்கி நின்றபோது பிணஞ்சுடுதடி யீற்றில் அனல்மயமாய் விடுதல்போன்று ஆத்மாகாரமாய்விடும். மனம் அசுத்த சங்கற்பங்கெட்டு, ஆத்மாகாரமாய் விடுதற்குச் சுத்தசங்கற்பமே காரணமாம். சுத்த சங்கற்பத்தாற் கெடுக்காதவிடத்து அசுத்தசங்கற்பங் கெடாதாகலின், சங்கற்பத்தைச் சங்கற்பத்தாற்றான் கெடுக்கவேண்டும். அவ்வாறு செய்தாற்றான் மனோலயமுண்டாகும். அம்மனம் ஆத்மாவில் இலயப்படுங் காலத்துக் "களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண்ணாடி காட்டும்போது, விளங்கியதன்மயமாகி யபேதமாகி விகற்பமின்றி நிருவிகற்ப மாணற்போல" ஏகரசமாய் விளங்கும். அவ்வாறு விளங்கினின்றவிடந்தான் பாவனாதீதம். அதனாற்றான் ஆத்ம சாட்சாத்காரம் சித்திக்கும். அது சித்தித்தாற்றான் அவிச்சை பற்றறக் கெடுதல் வாயிலாக மோக்ஷம் கைகூடும். ஆதலால் சுத்தசங்கற்பம் அசுத்தசங்கற்பத்தின் கேட்டிற்குக்காரணமாயிருத்தலேயன்றி ஆத்மாவில் இலயப்படுதல் மூலமாகத் தன்கேட்டிற்கும் தானே காரணமா யிருத்தலால அதனால் யாதொரு கெடுதியுமின்றாம். மனோலயமுண்டாகும்வரை சுத்தசங்கற்பமொழியாது. மேலும், அசுத்த சங்கற்பம் முற்று மொழிந்தவிடத்துச் சுத்தசங்கற்ப முண்டாதற்குக்காரணமின்மையின் அசுத்த சங்கற்ப வொழிவே சுத்த சங்கற்பத்தினொழிவிற்குங் காரணமாயிருத்தலின், சங்கற்பத்தாற்றான் சங்கற்பத்தைக் கெடுக்கவேண்டுமென்க.

சி: தாங்கள் திருவாய் மலர்ந்தருளிய இவ்விஷயத்திற்குரிய பிரமாணங்களைக் கூறும்படி வேண்டுகின்றனன்.

கு: கீழ்வருவனவே.

## முக்த்திகோபநிஷத்.

𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌰 𑌶𑌾𑌖𑌾𑌢𑍍𑌯 𑌪𑌲𑍍𑌲𑌵𑌫𑌲𑌶𑌾𑌲𑌿𑌨𑌃 | 𑌅𑌸𑍍𑌯
𑌸𑌂𑌸𑌾𑌰 𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑍍𑌯 𑌮𑌨𑍋𑌮𑍂𑌲 𑌮𑌿𑌦𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 | 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪 𑌏𑌵
𑌤𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑍇 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍋𑌪𑌶𑌮𑍇𑌨 𑌤𑌤𑍍 | 𑌶𑍋𑌷𑌯𑌾𑌶𑍁 𑌯𑌥𑌾𑌶𑍋
𑌷𑌮𑍇𑌤𑌿 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑍃𑌕𑍍𑌷𑌕𑌃 || 𑌉𑌪𑌾𑌯 𑌏𑌕 𑌏𑌵𑌾𑌸𑍍𑌤𑌿 𑌮𑌨𑌸𑌸𑍍
𑌸𑍍𑌵𑌸𑍍𑌯 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑍇 | 𑌮𑌨𑌸𑍋𑌽𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑍋 𑌨𑌾𑌶𑍋 𑌮𑌨𑍋 𑌨𑌾𑌶𑍋
𑌮𑌹𑍋𑌦𑌯𑌃 ||

(இ-ள்.) ஆயிரம் மூளைகள் கிளைகள் தளிர்கள் காய் கனிகள் இவைகளுடைய இந்தச் சம்சார விருக்ஷத்திற்கு இந்த மனமே மூலமா யிருக்கிறது (ஆணி வேரா யிருக்கிறது). அதைச் சங்கற்பம் (எண்ணம் அல்லது விருப்பம்) என்றே எண்ணுகிறேன். சீக்கிரமாகச் சம்சார விருக்ஷம் வறண்டுபோகும்படியாய்ச் சங்கற்பத்தின் உபசம (அடங்குதல்) த்தினால் மூலத்தை (ஆணிவேரை) வறளச்செய். தன்னுடைய மனத்தை அடக்குகிறதில் உபாய மொன்றே யுள்ளது. மனதுண்டாகிறபோதே (மனது விருப்ப மடையத் தொடங்கும்போதே) மனதை நாசஞ்செய்கிறது(தான்). (அதுதான்) மகா சிரேயஸாகிறது.

பைங்களோபநிஷத்.

ஊநவொஹ்ருநீஹாவொ ஜெதஂதெநவொ வமஹெதெ |
யஉாயா தஹீநீ ஹாவ ஸஉா தஸ்ரஂவஉஂ ||

(இ - ள்.) மனதானது உன்மனீபாவம் (விருத்தியற்ற அல்லது சலனமற்ற நிலைமையை) அடைந்தால் துவைதம ஒருபோதும காணப்படுகிறதில்லை. எப்போது உன்மனீபாவம வருகிறதோ அப்போது அதுவேதான் பரமபதம்.

தியானபிந்தூபநிஷத்.

யநவஸி ஜமகஃ ஸஹஷி ஸிதிவஹாநகஃகஂ |
தநெநா விஷயஂ யாதிதஷி ஷொஃ வாஂவஉஂ ||

(இ ள்.) எந்த மநதானது, மூன்றுலகத்தினுடைய சிருஷ்டி ஸ்திதி லயகாரியங்களைச் செய்கிறதோ அந்த மனதானது லயித்துப்போனால் அதுதான் விஷ்ணுவின் பரமபதம் (வியாபக பிர்மததினுடைய ஸ்தானமாகிய மோக்ஷம்).

மண்டலபிராம்மணோபநிஷத்.

வவிஷயஂ ஊநாவஂயாய நிவிஷயஂ ஊக்யெஹவதி |
கதஸவஂ ஜமஹிதமெவஂ | தஷெவஹிஂ நிராஶயஂ |
நொநந வஸாவஸிவஷய யொமஂஹவதி | யநவஸி ஜம
தஸிஸிதிவஹாந கஃகஂ | தநெநாவிஷயஂ யாதிதஷி
ஷொஃ வாஂவஉஂ | தஷயாவஷாஜெதவஷிஃ ஷெஉாஹா
ாகஃ | வஉதஷெவ வாஊதகஂ ||

(இ-ள்.) விஷயத்தோடு கூடிய மனது பந்தத்தின்பொருட்டும் விஷயமற்ற மனது முக்தியின் பொருட்டுமாகிறது. ஆகை

யால், ஸகல ஜகத்தும் சித்தத்தின் விஷயமே (சித்தத்தின் தோற்றமே). அதே சித்தமானது ஒன்றையும் பற்றாமையே மனோநாசமடைந்த நிலைமையா யிருக்கிறது. அதுவே லயத்திற்கு யோக்கியமாய்ப் பரிபக்குவ மடைந்ததாகவாகிறது. எந்த மனதானது மூன்றுலகத்தினுடைய சிருஷ்டி ஸ்திதி நாசகாரியங்களைச் செய்கிறதோ அந்த மனதானது லயித்துப்போவது விஷ்ணுவினுடைய பரமபதம். அந்த மனோநாசத்தினாலே சுத்தாத்துவைத ஸித்தியுண்டாகிறது. எதனாலெனறால் பேதமில்லாததனாலேதான். இதுதான் பரமதத்துவம்.

, பராம் ஶாந்திம் ஸ்வீக்ருத்ய மந: ப்ரஸாதரூபம் பராத்மநி லீநம் பவதி| பயஸ்ராவாநந்தரம் தேநுஸ்தந க்ஷீரவதிந்த்ரிய வர்க்கே பரிநஷ்டே மநோநாஶம் பவதி| ததேவாமநஸ்கம்||

(இ ள்.) ஶ்ரேஷ்டமான சாந்தியை யடைந்த மனதானது சலநமற்றதாய்ப் பரமாத்துமாவி னிடத்தில் லயமடைந்ததாகவாகிறது. பாலைக்கறந்த பிறகு மாட்டின் முலைப்பாற்போல (பால் நஷ்டமாய்விட்டதுபோல்) இந்திரியக் கூட்டமெல்லாம் நஷ்டமானால் மனோநாச முண்டாகிறது. இதுவே மனமில்லாமை.

## தேஜோபிந்தூபநிஷத்.

மந ஏவ ஜகத்ஸர்வம் மந ஏவ மஹாரிபு:| மந ஏவ ஹி ஸம்ஸாரோ மந ஏவ ஜகத்த்ரயம்| மந ஏவ மஹத்து:கம் மந ஏவ ஜராதிகம்| மந ஏவ ஹி காலஶ்ச மந ஏவ மலம் ததா| மந ஏவ ஹி ஸங்கல்போ மந ஏவ ஹி ஜீவக:|| ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்த்யாதி மநோமய மிதீரிதம்| திக்பாலவஸவோ ருத்ரா ஆதித்யாஶ்ச மநோமயா:| த்ருஶ்யம் ஜடம் த்வந்த்வஜாதம் அஜ்ஞாநம் மாநஸம் ஸ்ம்ருதம்| ஸங்கல்பமேவ யத்கிஞ்சித் தத்தந்நாஸ்தீதி நிஶ்சிநு||

(இ-ள்.) இந்த ஸகல ஜகத்தும் மனதே. மனது எப்போதும் சத்துரு. ஸம்ஸாரம் மனதுதான. மூன்றுலகமும் மனதே. மஹத்தான துக்கமும் மனதே. ஜரைமுதலானவையும மனதே. காலமும் மனதே. அப்படியே பாபமும் மனதே. ஸங்கற்பமும் மனதே. ஜிவனும் மனதே. ஜாக்கிர சுவப்ந சுஷுப்தி முதலியன மன சுவரூபமென்று சொல்லப்பட்டிருக்கிறது. திக்குக் காலங்களும் வஸுக்களும் உருத்திரர்களும் ஆதித்தியர்களும் மன

சுவரூபமே. காணப்படுகிற ஜடமும் உண்டாயிருக்கிற இருமைகளும் அஞ்ஞானமும் மநமென்றே சொல்லப்படுகின்றன. யாது யாதுண்டோ அதுவதுவெல்லாம் மனக்கற்பிதமே, வாஸ்தவத்தி லில்லையென்று நிச்சயித்துக்கொள்.

வாஸிஷ்டராமாயணம்.

𑌯𑌾𑌵𑌦𑍍𑌵𑌿𑌲𑍀𑌨𑌂 𑌨 𑌮𑌨𑍋 𑌨 𑌤𑌾𑌵𑌦𑍍𑌵𑌾𑌸𑌨𑌾𑌕𑍍𑌷𑌯𑌃 । 𑌨 𑌕𑍍𑌷𑍀𑌣𑌾 𑌵𑌾𑌸𑌨𑌾 𑌯𑌾𑌵𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌤𑌾𑌵𑌨𑍍𑌨 𑌶𑌾𑌮𑍍𑌯𑌤𑌿 ॥ 𑌨 𑌯𑌾𑌵𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌨 𑌤𑌾𑌵𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑌂𑌶𑌮𑌃 । 𑌯𑌾𑌵𑌨𑍍𑌨 𑌚𑌿𑌤𑍍𑌤𑍋𑌪𑌶𑌮𑍋 𑌨 𑌤𑌾𑌵𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑍇𑌦𑌨𑌮𑍍 ॥ 𑌯𑌾𑌵𑌨𑍍𑌨 𑌵𑌾𑌸𑌨𑌾𑌨𑌾𑌶𑌸𑍍𑌤𑌾𑌵𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌗𑌮𑌃 𑌕𑍁𑌤𑌃 । 𑌯𑌾𑌵𑌨𑍍𑌨 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑍍𑌨 𑌤𑌾𑌵𑌦𑍍𑌵𑌾𑌸𑌨𑌾𑌕𑍍𑌷𑌯𑌃 ॥ 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌮𑌨𑍋𑌨𑌾𑌶𑍋 𑌵𑌾𑌸𑌨𑌾𑌕𑍍𑌷𑌯 𑌏𑌵 𑌚 । 𑌮𑌿𑌥𑌃 𑌕𑌾𑌰𑌣𑌤𑌾𑌂 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌦𑍁𑌃𑌸𑌾𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌯𑌤𑌃 ॥ 𑌤𑍍𑌰𑌯 𑌏𑌤𑍇 𑌸𑌮𑌂 𑌯𑌾𑌵𑌨𑍍𑌨 𑌸𑍍𑌵𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌾 𑌮𑍁𑌹𑍁𑌰𑍍𑌮𑍁𑌹𑍁𑌃 । 𑌤𑌾𑌵𑌨𑍍𑌨 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑍍𑌯𑌪𑌿 𑌸𑌮𑌾𑌶𑌤𑍈𑌃 ॥

(இ - ள்.) மனம் ஒடுங்காதவரையில் வாசனை நசியாது. வாசனை நசியாதவரையில் சித்தம் நசியாது. தத்துவஞான முண்டாகாதவரையில் சித்தம்நசியாது. சித்தம் நசியாதவரையில் தத்துவஞான முண்டாகாது. வாசனை நசியாதவரையில் தத்துவஞான முண்டாவதேது. தத்துவஞான முண்டாகாதவரையில் வாசனக்ஷய முண்டாகாது. தத்துவஞானம் மனோநாசம் வாசனக்ஷயமென்னு மிவைகளே ஒன்றற்கொன்று காரணத்தன்மையை யடைந்து சாதித்தற்கரியனவா யிருக்கின்றன. எதுவரையில் இம்மூன்றும் ஒரேகாலத்தில் அடிக்கடி அப்பியசிக்கவில்லையோ, அதுவரையிலும் ஆசிரதர்களால் அம்மூன்றும் அடையப்படா.

அடயோகதீபிகை.

𑌜𑍍𑌞𑍇𑌯𑌵𑌸𑍍𑌤𑍁𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌦𑍍𑌵𑌿𑌲𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌮𑌾𑌨𑌸𑌮𑍍 ।
𑌮𑌨𑌸𑍋 𑌵𑌿𑌲𑌯𑍇 𑌜𑌾𑌤𑍇 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌮𑌵𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ॥

(இ - ள்.) ஞேயவஸ்துவை (ஞானத்திற்கு விஷயமாகும் நாமரூபாத்மகமாகிய சகல சராசரத்தையும்) விடுதலால் மனது சச்சிதானந்த வடிவமாகிய ஆத்மாகாரமாகின்றது. மனது லயமாகுங்கால் கைவல்யம் மிஞ்சுகின்றது (அத்துவிதீய ஆத்மசொரூபம் மிஞ்சுகின்றது).

### த்ரிசிகிப்ராஹ்மணோபநிஷத்.

𑌯𑌥𑌾 𑌰𑌸𑌾𑌶𑌯𑍇 𑌫𑍇𑌨𑌂 𑌮𑌥𑌨𑌾𑌦𑍇𑌵 𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌮𑌨𑍋𑌨𑌿𑌰𑍍𑌮𑌥𑌨𑌾𑌦𑍇𑌵 𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌾 𑌬𑌹𑌵𑌸𑍍𑌤𑌥𑌾 ॥

(இ - ள்.) பால் மோர்முதலிய ரசதிரவியங்களை மத்திட்டுக் கடைவதினாலே நுரை முதலானவை உண்டாவதுபோல மனமானது சலித்துககொண்டே விளையாடுவதினால் நாநாவித பேதங்கள் தோற்றிக்கொண்டிருக்கின்றன.

### அமிர்தபிந்தோபநிஷத்.

𑌮𑌨 𑌏𑌵 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑍋𑌃 ।
𑌬𑌨𑍍𑌧𑌾𑌯 𑌵𑌿𑌷𑌯𑌾𑌸𑌕𑍍𑌤𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑍈 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥

(இ ள்) மனிதர்களுக்கு பந்தமோக்ஷங்களுக்கு மனமேகாரணம். மனம விஷயாதிகளி லீடுபடுவதே பந்தப் பிராப்தியாகும்; பநதத்தில் அகப்படாமலிருப்பதே மோட்சப் பிராப்தியாகும.

### தேவிகாலோத்திரம்.

கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும்
விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர்
திருத்தகுநல லறிவாலே சித்தத்தைத திறம்பாம
லருத்தியுட னிலைநிறுதத மதுவறிவின் பயனுமால்.

அறிவுநிலை தவமடக்கம் புண்ணியந்தா னங்குணங்க
ளெறியுடைய முதநிநெறி முத்திவுபா யநினைக்கின
மறுகும்வழி யனையமன மடங்குவதன றியாததுவே
யறிவுடையோ ரிவையனைத்து மாமெனறே யறைகுவரால்.

### ஞானவாசிஷ்டம்.

சனன கருமங் களின்வித்தாய்த் தருவை யசைக்குங் காற்றேபோ
றினமு முடலை யசைப்பதுவுஞ் சித்த மிதனைத் தீரவதுவே [ற்
யனக சகலத் தியாகமதா மதுவே பரம வானந்தம்
வினவு பிறவெல் லாமிகவும் வெருவுகின்ற வெந்துயரே.

பேதிக்கு மனமென்னும் பெரும்பகையை முழுவலியாற் பிளந்து வென்றேன், வாதித்த துயரெல்லா மாற்றினே னுபசாநத வாழ்வு பெற்றேன், சாதித்த விவேகமே யுனைவணங்கி னேனென்று ஜனகா கோமானா, சேதித்த மனவலைவெல் லாமொழித்துத் தானேசித் திரமபோ னின்றான்.

சடகுணியமா யெங்கணுஞ்சேர் தனிநெஞ் சுக்குப் பேரொழிய வுடனுங் ககனந் தனைப்போல வுள்ளும் புறம்பு முருவிலதாம், படர்தீர் மெய்பொய் யெனும்பொருளிற் பயிற்றோற் றரவே மனமாகுந், தொடர்சங் கற்ப மெங்குளதாந் தோன்று மனமு மங்குளதே.

மனத்தின் வடிவு சங்கற்ப மற்றிவ் விரண்டு மொன்றாகு
மனர்த்த மோக மலபந்த மவித்தை மாயை தமமுதலா
மினத்த பெயர்சங் கற்பத்துக் கேற்ற பெயரா மிதுநழுவிற் [வம்.
கனத்த செகக்காட் சியும்போகுங் கதிர்விட் டெறிக்கும் பரவடி

நிஷ்டாநுபூதி.

வெறிகொள் குறங்கு மயக்குஞ்சொல் விளம்பி யருந்தி ஞலதுவு, நெறிதான் மயங்கிச் சுழல்வதுபோ னிமிடந் தானு நிலா மனத்தைக், குறியிற் சமாதி யெனுங்கயிற்றாற் குறுகப் பிணிப் போ ரெவரவர்தாம், அறிவோ டறியாமைக ளிறந்த வரிய முத்தி தனையடைவார்.

அலையு மனத்தை யகத்தடக்கு மவனே சரிதை கடந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே கிரியை முடிந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே யோக தற்பானும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே ஞானி யதிசூரன்.

திருமந்திரம்.

மனமாயை மாயை மாயை மயக்க
மனமாயை தான்மாய மற்றொன்று மில்லை
பினையாய வேண்டாம் பிதற்றவும் வேண்டாம்
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே.

தாயுமானசுவாமிகள்.

இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணு மிவ்வுலக மெவ்வுலகமோ வென்றெண்ணம் வருவிக்கு மாதர்சிற் றின்பமோ வென்னின் மக மேருவாக்கிச், சுமையெடுமி னென்றுதான் சும்மாடுமா யெமைச் சுமையாளு மாக்கிநாளுந் துர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யானவைஞ் சூறையிட் டிந்திரஜாலம், அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை யம்மம்ம வெல்லவெளிதோ வருள்பெற்ற பேர்க்கெலா மொளிபெற்று நிற்குமீ தருளோவ லாதுமருளோ, சமயநெறி காணாத சாக்ஷிநீ சூட்சுமமாத் தமியனேற் குளவுபுகல்வாய் சர்வபரி பூரண வகண்டதத் துவமான சச்சிதா னந்தசிவமே.

தன்னிலே தானாக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக சமாதி யாகப், பொன்னிலே பணிபோலு மாயைதரு மனமேகின் புரைக டேர்ந்தா, லென்னிலே யான்பிழைப்பே னெனக்கினியா ருன்போல்வா ரில்லையில்லை, யுன்னிலோ திருவருளுக் கொப்பாவா யென்னுயிர்க் கோ ருறவு மாவாய்.

சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

நம்மாழ்வார் பெரியதிருவந்தாதி.

மனமாளு மோரைவர் வன்குறும்பர் தம்மைச்
சினமாள்வித் தோரிடத்தே சேர்த்துப்—புனமேய
தண்டுழா யானடியே தான்காணு மஃதன்றே
வண்டுழாஞ் சீரார்க்கு மாண்பு.

கைவல்ய நவநீதம்.

மனது சத்துவ சொரூபமற் றிரண்டும் வந்துகலந் தனவைற்றை மாற்றி னுற்போம்,தனது சன்மார்க்கத்தைவிடா திருந்தபோது தமோகுணமும் ரஜோகுணமுஞ் சமிக்கும் பின்னைக், கனபரிநு மஞ்சலனம் போம்போ னக்காற் களங்கமற்று நின்றவா காயம் போலு, நினதுளமப் படியாமப் பிரமத் தொன்றாய் நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே.

மோகவதைப் பரணி.

வீயு மோகினை வேரறுமல் விடஞ்செய் மோகன் விவேகனுள்
மாயு மோவுயர் மாயையாரு மனத்தி னுரு மிருக்கவே.

---

## ௩க-வது சம்வாதம்.

---

கன்மநெறியினைக் கடைப்பிடித்தோழுகேனல்.

சி: சுவாமி! பதைத்தெழாவண்ணம் எவ்வண்ணம் அடக்கினும் சிறிது மடங்காது மனம் விஷயாகாரப்பட்டே விரிந்துவிடுகின்றது; விரிந்தவிடத் தடங்குவது மிகு கஷ்டமாயிருக்கிறது; வெகு பிரயாசப்பட் டடக்கியவிடத்தும் ஒருக்ஷணமேனும் அளந்தறியப்படா விபுவாய்ச் சத்தாய்ச் சித்தாயாநந்தமாயுள்ள ஆன்மாவில் நில்லாது விரைந்து பகிர்முகப்பட்டுவிடுகின்றது. ஆதலால் அஃதடங்கி யொருமுகப்படுதற்குரிய வழியைப் போதிக்குப்படி வேண்டுகின்றனன்.

கு: அன்பனே! உன்னுளத்தில் விட்சேபம் மிகுதியாயிருக்கிறதென்றறிகின்றேன். இவ்விட்சேபம் அசுத்தவாசனை காரணமாக அடிக்கடி யுண்டாய்க்கொண்டேயிருக்கும். அசுத்த வாசனையையும் விட்சேபத்தையும் கெடுத்தவிடத்துத்தான் மனம் எளிதாக ஒருமுகப்படும்.

சி: சுவாமி! அசுத்தவாசனையும் விட்சேபமும் ஒழிதற்குரிய வழியென்ன ?

கு: நிஷ்காம கர்மத்தினால் அசுத்தவாசனையும், அஷ்டாக்ஷர பஞ்சாட்சரஜபம், ஈசுவரநாம உச்சாரணம், அஜபாமந்திரோச்சாரணம், ஈசுவரமூர்த்தித்தியானம், பிரணவவுபாசனை, நிர்க்குண பிரமத்தைச் சிந்தித்தல் ஆகிய இவைகளால் விக்ஷேபமும் ஒழியும்.

சி: தேவரீரருளிய வொவ்வொன்றையும் நன்கு விவரித்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றனன்.

நிஷ்காமகர்மம்.

கு: "கருமமன்றி மந்திரமில்லை. கருமம் மந்திரத்தை அபேட்சிக்கின்றது. மந்திரமில்லாது செய்வதுகருமமாகாது. ஆகையால், மந்திரத்தை விடக்கூடாது. மந்திரத்தைவிட்டுச் செய்த கருமம் சாம்பலிற்செய்த ஹோமமாகும்" என்று நாரத பரிவிராஜகோபநிஷத் ௩-வது உபதேசத்தில் கூறியபடி யிங்கு மந்திரமில்லாதுசெய்யும் கருமம் கருமமன்றாம். எனவே மந்திரத்துடன் கூடிய கருமமே கருமமென்றாயிற்று. வேதவிகித கன்மமாகிய இது காமியமென்றும் நிஷ்காமியமென்றும் இருவகையாம். பயனை விரும்பிச்செய்யும் கருமம் காமியகருமமாம். பயனை விரும்பாது ஈசுவரார்ப்பணமாகச் செய்யும் கருமம் நிஷ்காமிய கருமமாம் காமிய கருமத்தின் பயன் கேவலம் சுவர்க்காதிபோகமாயும், நிஷ்காமிய கருமத்தின் பயன் சுவர்க்காதிபோகமே யன்றி அந்தக்கரண சுத்தியுமாம். நிஷ்காமகருமத்தின் பயன் முக்கியமாய் அந்தக்கரணசுத்தியாகவே யிருத்தலால் அதனையே செய்தல்வேண்டும். செய்தலாலே அந்தக்கரண சுத்திவாயிலாக அசுத்த வாசனைகளெல்லா மொழிந்துவிடும். ஸ்நானம், சந்தியாவந்தனம், ஜபம், ஓமம், தேவபூசை, அதிதிபூசை, வைசுவதேவம் முதலியவைகளே இங்குக் கருமமென்று கொள்ளல்வேண்டும். கருமஞ் செய்யுமிடத்து ஒவ்வொருவனும் தன்தன் சாதிக்கு விதித்துள்ள கருமங்களையே செய்தல்வேண்டும்.

மாறிச்செய்தால் தேகப்பிரயாசையே யன்றி நரகதுக்கமு முண்டாகும். பலாபேட்சைவிட்டு எப்போதும் செய்யவேண்டிய கருமத்தை நன்றாய்ச் செய்கிறவனுக்குச் சித்தசுத்தி விரைவிலுண்டாகும்.

நிஷ்காமிய கருமத்தினால் சித்தசுத்தி யுண்டாமென்பதற்குப் பிரமாணங்கள்.

பிரஹதாரண்ணிய உபநிஷத்.

𑌤𑌮𑍇𑌤𑌂 𑌵𑍇𑌦𑌾𑌨𑍁𑌵𑌚𑌨𑍇𑌨 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑌂𑌤𑌿 |
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌤𑌪𑌸𑌾 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑌾 𑌨𑌾𑌶𑌕𑍇𑌨 ||

(இ - ள்.) சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறபடி வர்ணாச்சிரம தருமோசித கர்மங்களைப் பகவதர்ப்பணமாகச் செய்வோர்கள் பரம்பராக் கிரமமாய்ச் சித்தசுத்தியையும், அதனால் ஞானத்தையும், ஞானத்தினால் மோட்சத்தையும் அடைவார்கள்.

பகவத்கீதை.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌾𑌧𑌾𑌯 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃 |
𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌸 𑌪𑌾𑌪𑍇𑌨 𑌪𑌦𑍍𑌮𑌪𑌤𑍍𑌰𑌮𑌿𑌵𑌾𑌂𑌭𑌸𑌾 ||

(இ-ள்.) எவன் கருமங்களைப் பரமாத்மாவினிடத்தில் ஒப்புவித்து (அர்ப்பணஞ்செய்து) பலனில் ஆசையைவிட்டுச் செய்கிறானோ அவன் ஜலத்திலே தாமரையிலை ஒட்டாததுபோலப் பாபபுண்ணியங்களினால் ஒட்டப்படுகிறதில்லை.

𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌂𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌂 |
𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌫𑌲𑍇 𑌸𑌕𑍍𑌤𑍋 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ||

(இ - ள்.) கருமயோகியானவன் (நிஷ்காமகருமி) கருமத்தில் பலாபேட்சைவிட்டு ஆத்துமநிஷ்டையினா லுண்டாகிற மோக்ஷத்தை அடைகிறான். ஆசையினாலேவப்பட்டு பலனில் ஆசையையுடைய கருமயோகியானவன் (காமியகருமி) (பந்தத்தில்) கட்டுப்படுகிறான்.

𑌕𑌰𑍍𑌮𑌣𑍈𑌵 𑌹𑌿 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌜𑌨𑌕𑌾𑌦𑌯𑌃 |
𑌲𑍋𑌕𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌮𑍇𑌵𑌾𑌪𑌿 𑌸𑌂𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ||

(இ - ள்.) ஜனகன் முதலானவர்கள் (நிஷ்காம) கருமத்தினாலேதானே ஞானத்தை யடைந்தார்கள். ஜனங்களுடைய பிரயோஜனத்தை யுத்தேசித்தாவது (கருமத்தைச்) செய்வதற்கு யோக்கியனாகவிருக்கிறாய்.

தஸ்மாதஸக்தஸ்ஸததம் கார்யம் கர்ம ஸமாசர |
அஸக்தோ ஹ்யாசரந் கர்மபரமாப்நோதி பூருஷ:||

(இ - ள்.) ஆகையினாலே பலாபேட்சையைவிட்டு எப்போதும் செய்யவேண்டிய கருமத்தை நன்றாகச்செய். ஏனென்றால் பலாபேக்ஷையைவிட்டுக் கருமத்தை அநுஷ்டித்துவருகிற புருஷனானவன் உத்தமமானதை அடைகிறான்.

மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்யாத்ம சேதஸா |
நிராஸீர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர:||

(இ - ள்.) சகல கருமங்களையும என்னிடத்தில் ஒப்பித்து நான் பரமாத்மாவினுடைய ஏவற்காரனாகச் சகல கருமத்தையும செய்து பரமாத்மாவுக் கொப்பிக்கவேண்டியவனெனகிற எண்ணத்துடன் பலாபேட்சையனறியும (தனனுடையதெனகிற) மமதை விட்டும் தாபத்தை (விசனததை) விட்டவனா யிருநதுகொண்டு யுத்ததனதசசெய்.

வராகபுராணம்.

யத்கிஞ்சித்க்ரியதே கர்ம புருஷேண ஸாதுவாஸாது வா |
ஸர்வம் நாராயணே ந்யஸ்ய குர்வந்நபி நலிப்யதே||

(இ - ள்) எப்புருஷன் நன்மை தீமையாகிற கருமமெவ்வளவு அற்பமாவது செய்கிறானோ அவையெல்லாம் நாராயணனுக் கர்ப்பணஞ்செய்வானாகில் அவன் கருமஞ்செய்தவனானாலும் கருமபலன் அவனை ஒட்டுகிறதில்லை.

அபரோக்ஷாநுபூதி.

ஸ்வவர்ணாச்ரம தர்மேண தபஸா ஹரிதோஷணாத் |
ஸாதநம் ப்ரபவேத்பும்ஸாம் வைராக்யாதி சதுஷ்டயம்||

(இ - ள்) அந்தந்த வர்ணாசிரம தர்மங்களுடன் தபசு முதலானவைகளை (நிஷ்காமியத்துடன) சாதிப்பவர்களுக்கு வைராக்கியமும், அதனால் சித்தசுத்தியும், அதனால் ஞானமும், அதனால் மோக்ஷமும் உண்டாகும்.

சூதசங்கிதை.

நித்தியமை மித்தியகன் மங்கணிட்கா மியமாகப்
பத்தியுறச் செய்வதனால் பாவமெலா நாசமுறும்
ஒத்தியன்மற் றதனானே யொழியாம லுறுசித்த
சுத்தியுளா தாமென்று சொல்லுமான் மறையனைத்தும்.

ஓதியசற் கருமத்தாற்பரசிவ தியானத்தா லுயிர்கொல் லாமை [ஞா
யாதியநற் றருமத்தா லுடற்குமதிட் டானதெய்வ மவிர்முக் கண
னீதியதி யானத்தா லிந்திரியம் பிராணனுக்கு நிடேத சிந்தை [தி.
காதியதாற் றியானத்தி லயப்படலான் மனுதி கட்குங் காணுஞ் சுத்

## பிரபோதசந்திரோதயம்.

ஆற்றும் பயன் வேண் டாக்கரும மந்தக் கரண சுத்திதரும்
போற்றுஞ் சுத்தி தருஞ்போதம் போதம் பிரம நானென்னு [னத்
மூற்றுந்தரு நானு தித்தலுமே யுயர்வான் மதிநீர்த் துளக்க மெ
தோற்றந் தருமா யையிற் றன்னைத் துளக்க மின்றிக் காணுவனல்.

## அஷ்டாக்ஷரபிரபாவம்.

"ஓம் நமோநாராயணாய", என்பது அஷ்டாக்ஷர மந்திரமாம். இது தாரகமந்திரமென்றும் சொல்லப்படும். இதில் ஓம் என்னும் அக்ஷரம் ஆத்மசொரூபம், நம என்னும் இரண்டக்ஷரம் பிரகிருதி சொரூபம், நாராயணாய என்னும் ஐந்தக்ஷரம் பரப்பிரம சொரூபம். ஆத்மவடிவ நாராயணனுக்கு நமஸ்காரம் என்பது இதனது திரண்டபொருளாம். அன்றியும், ஓம் என்பது ஜீவ (கூடஸ்த) வாசகம், நம என்பது ஐக்கிய வாசகம், நாராயணாய என்பது பிரமவாசகம் என்று கொண்டு ஓம் நமோநாராயணாய வென்பதற்கு ஜீவப்பிரம வைக்கியமென்று பொருள் கூறலுமாம். ஆகவே இம் மந்திரம் தத்துவமசி மகாவாக்கிய மாயிற்று.

இதனை உச்சரிக்கும்போது முதலில் ஓம் என்றும், பின்னர் நம: என்றும், அப்பால் நாராயணாய என்றும் உச்சரிக்கவேண்டும். நரன் (கேடில்லாதவன்) என்னும் பரமாத்மாவினால் படைக்கப்பட்டது பற்றி ஜலம் நாரம் என்னும் பெயரையடைந்தது. அதில வசித்தல்பற்றி அப்பரமாத்மாவிற்கு நாராயணனென்று பெயருண்டாயிற்று என்று கூறுதலுமுண்டு. இந்த மந்திரத்தை இடைவிடாது ஜபித்துக்கொண்டிருப்பவன் பூரணவாயுளையும் பிரஜைகளுக்குத் தலைவனுதலையும் பெற்றுச் சித்தநிரோத வாயிலாக மோக்ஷத்தையுமடைவன். இதற்குப் பிரமாணங்கள் வருமாறு:—

## அந்வயதார கோபநிஷத்.

[illegible] ஸம்ஸார [illegible] |
ஸம் தாரயதி தஸ்மாத் தாரகம் ||

(இ - ள்.) மஹாபயங்கரமாகிய ஜனனமரணாதி ஸம்சார துக்க (ஸாகர) த்தைக் கடத்தி மோக்ஷத்திற் சேர்ப்பிப்பதெது வோ அதுவே தாரகமந்திர மெனப்படும்.

ராமதாபநீயுபநிஷத்.

ஸஹோவாச யாஜ்ஞவல்க்யம் கிம் தாரகம் கிம் தாரயதீதி ஸஹோவாச யாஜ்ஞவல்க்ய: ஓம் நமோ நாராயணாயேதி தாரகம் சிதாத்மகம் இத்யுபாஸிதவ்யம்॥

(இ - ள்.) எது தாரகம் எது தாரணஞ் செய்விக்குமென்று யாக்ஞவல்கியரை வினவினதற்கு, ஓம் நமோநாராயணாயவென் னும் தாரகம் சிதாத்மகமானது. அதுவே யுபாசிக்கத் தக்கதெ ன்று யாக்ஞவல்கியர் சொன்னர்.

கிம் தாரகம் கிம் தாரயதீதி ஸஹோவாச யாஜ்ஞவல்க்ய: தாரகம் தீர்க்கானலம் பிந்துபூர்வகம் தீர்க்கானலம் புன மாயா நம:॥

(இ - ள்) எது தாரகம் எது தாரணஞ் செய்விக்கும்? மறுபடியுமந்த யாக்ஞவல்கியர் கூறுகின்றார்:—தாரகமாவது ரகர ததுடன் அகரநெடில சேர்ந்து பிந்துவுஞ் சேர்ந்தபின்னர், அகர நெடிலேறிய அந்த ரகரத்துடன மாயநம வென்பதே [ராமாரக (ராமாயநம) மந்திரம. இது உபாசிக்கத்தக்கது.]

பாண்டவகீதை.

நாராயணேதி மந்த்ரோஸ்தி வாகஸ்தி வஶவர்த்தினி।
ததாபி நரகே கோரே பதந்தீத்யேதததத்புதம்॥

(இ - ள்.) நாராயணவெனும மந்திரம் ஸ்மரணை செய்வதற் குச் சுலபமாயிருக்கிறது. அந்த மந்திரத்தைத் தியானிப்பதற்குச் சுலபமா யாவருக்கும் நாக்கிருக்கவும் மூடாகள் பகவனமத்தை தியானிக்காமல் வியாத்தமாய்க் கோரமான நரகத்தை யடைகின் றாகள். ஐயோ யிதென்ன ஆச்சாபம்.

பெரியாழ்வார் திருமொழி.

ஏடு நிலத்தி லிடுவதன் முன்னம்வந் தெங்கள்குழாம் புகுந்து
கூடு மனமுடை யீாகள் வரம்பொழி வந்தொல்லைக் கூடுமினோ
நாடு நகரமு நன்கறிய நமோநாராய ணாய வென்று
பாடு மனமுடைப் பத்தருள் ளீர்வந்து பல்லாண்டு கூறுமினே.

### சிவவாக்கியர்.

அஞ்சுமூன்று மெட்டதா யநாதியான மந்திரம்
நெஞ்சிலே நினைந்து கொண்டு நூறுருச் செபிப்பிரேல்
பஞ்சமான பாதகங்க ளூறுகோடி செய்யினும்
பஞ்சுபோல் பறக்குமென்று நான்மறைகள் பன்னுமே.

### திருமங்கையாழ்வார்.

குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார் படுதுய ராயின வெல்லாம், நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளு மருளொடு பெருநில மளிக்கும், வலந்தரு மற்றுந் தந்திடும் பெற்ற தாயினு மாயின செய்யும், நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன் நாராயணா வென்னும் நாமம்.

மஞ்சுலாஞ் சோலை வண்டறை மாநீர் மங்கையார் வாட்கலி கன்றி, செஞ்சொலா லெடுத்த தெய்வநன் மாலை யிவைகொண்டு சிக்கெனத் தொண்டீர், துஞ்சும்போ தழைமின் துயர்வரி னினைமின் துயரிலிற் சொல்லினு நன்றாம், நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு நாராயணா வென்னு நாமம்.

### பஞ்சாக்ஷர ப்ரபாவம். ௨

"ஓம் நமசிவாய" என்பது பஞ்சாட்சரமாம். இஃது இராஜமந்திரமென்றும் சொல்லப்படும். இதில் ஓம் என்னும் அக்ஷரம் ஆத்மசொரூபம், நமவென்னும் அக்ஷரம் மாயாசொரூபம், சிவாயவென்னும் அக்ஷரம் சிவசொரூபம். ஆத்மவடிவ சிவனுக்கு வணக்கமென்பது இதனது திரண்டபொருளாம். இதனை உச்சரிக்கும்போது "பிரணவமெழுவா யதன்பினர் நகாரம் பேசிடு மதன்பினர் மகாரம், வரமுறு மதன்பின் சிகாரமற் றதன்பின் வயங்கிடு வகரவா கார, முரமுறு மதன்பின் யகாரம்சா பால வுபநிட தஞ்சொலு மிவ்வா, றரவணி சடையாற் கன்பர்காண் முறையினறிகவிச்சடக்கரமனுவை" என்று சூதசங்கிதை கூறியவாறு முதலில் ஓம் என்றும் பின்னர் ந என்றும் அதன்பின் ம என்றும், அதன்பிறகு சி என்றும், அதன் பின்னர் வ என்றும், அப்பால் ய என்றும் உச்சரிக்கவேண்டும். நமசிவாயவென்பதே பஞ்சாட்சரமாயினும் அது பிரணவத்தைச் சேர்த்து உச்சரிக்கும்போது சடாக்கரமெனப்படுகின்றது. இஃதைந்துவகைப்பட்டிருக்கும். வருமாறு:—

### ஸ்தூலபஞ்சாட்சரம்.

(1) திரோபாக்ஷர (ந) முதலினும், ஜீவாக்ஷரம் (ய) கடையினும் பொருந்த உச்சரிப்பது ஸ்தூலபஞ்சாட்சரமாம். அது நமசிவாய என்பது.

### சூக்குமபஞ்சாட்சரம்.

(2) பதியட்சரம் (சி) முதலினும் மலாட்சரம் (ம) ஈற்றினும் பொருந்த வுச்சரிப்பது சூக்குமபஞ்சாட்சரமாம். இது சிவாயநம என்பது. இஃதொருதலை மாணிக்கமென்றும் சொல்லப்படும்.

### காரணபஞ்சாட்சரம்.

(3) ஸ்தூலபஞ்சாக்கரத்தின் முதலிலுள்ள திரோபாட்சரத்தை (ந) யும் சூக்குமபஞ்சாக்கரத்தின் ஈற்றிலுள்ள மலாட்சரத்தை (ம) யும் நீக்கிப் பதியட்சரத்தை (சி) யும் அருள் அட்சரத்தை (வ) யும் முன்னுமபின்னுமாக நிறுத்திச் சிவாட்சரம் (ய) இடையிற் பொருந்த உச்சரிப்பது காரணபஞ்சாட்சரமாம். இது சிவயவசி என்பது. இஃதிருதலை மாணிக்கமென்றும் சொல்லப்படும்.

### மகாகாரணபஞ்சாட்சரம்.

(4) அருளட்சர (வ) மும் பதியட்சர (சி) முங் கூடியது மகா காரணபஞ்சாட்சரமாம். இது வசி என்பது. இது வாசி யென்றும் வழங்கும்.

### முத்திபஞ்சாட்சரம்.

பதியட்சரத்தை (சி) உள்ளத்திற் பொருந்தச் செய்வது முக்திபஞ்சாக்கரமாம். இது சி என்பது. இது மகாமனு என்றும் நாயோட்டு மந்திரமென்றும் சொல்லப்படும்.

இங்குகூறிய பஞ்சாக்கரத்துள் "நமச்சிவாயவென் றுரைத்த மந்திரம், நவ்வொடு மவ்வும்போய் மாயை வலமதாய், யவ்வான ஜீவன் வவ்வி னுறைந்திடச், சிவ்வினி லொன்றாய்ச் சிவமெனலாமே" என்றவாறு அருளட்சரத்தில் திரோதான வட்சர (ந) மும், ஜீவாட்சரத்தில் மலாக்ஷர (ம) மும், அடங்க, மிஞ்சி நின்ற மூனறக்ஷரத்தினுள் (காரண பஞ்சாக்ஷரமாய சிவய வெனபதனுள்) ஜீவாட்சர (ய) ம், அருளக்ஷரத்தி லொடுங்க, மிஞ்சிநின்ற விரண்டக்ஷரத்துள் (மகாகாரண பஞ்சாட்சரமாய வசி யென்பதனுள்) அருளக்ஷர (வ) ம், பதியட்சரத்திலொடுங்க, பதியக்ஷரமே (முக்தி பஞ்சாக்கரமாய சி என்பதே) சேடமாயிருக்குமென் றுணர்க.

ஆவரணமும் விட்சேபமும் நீங்கியவிடத்துச் சீவன் பிரமாகாரவிருத்தியி லந்தர்க்கதமாகப் பிரமாகாரவிருத்தி சிவம் அல்லது ஆத்மாவில் இலயமாகச் சிவமே மிஞ்சி நிற்குமென்பது கருத்து. இக்கருத்தின்படி ந-ஆவரணமென்றும், ம-விட்சேபமென்றும், ய-சிதாபாசவடிவ சீவனென்றும், வ-பிரமாகாரவிருத்தி யென்றும், சி-ஆத்துமா அல்லது சிவமென்றுங்கொள்க.

சச்சிதாநந்த நித்தியம் பூரணமென்பது ஆத்மாவின் சொரூபமாம். இவ்வைந்தனுள் சத்தில் நித்தியமும் சித்தில் பூரணமுமடங்கச் சச்சிதாநந்தமாம்; சித்தில சத்து அடங்கச் சிதாநந்த

மாம்; ஆநந்தத்தில் சித்து அடங்க ஆநந்தமொன்றுமே சேடித்து நிற்குமென்று பஞ்சாக்கரத்திற்குப் பொருள் கூறுதலுமுண்டு. இம்மந்திரத்தின் றன்மையை விரிவாய் நிஷ்டானுபூதி முதலியவற்றிற் கண்டுகொள்க.

ஓம் நமசிவாய என்பதில் ஓம் என்பது எம்மந்திரங்களுக்கும் பொதுவாய் முன்னுரைக்கப்படும் பிரணவமாம்; பிரணவமின்றிய மந்திரம் உயிர்ப்புடையதாகாது இது பிரணவமின்றி உச்சரித்தகாலத்தும் பயன்கருவது பற்றி இராஜமந்திரமெனப் படுகின்றது. மேலும், இது மகாவாக்கியமுமாம் நமசிவாய என்பது தத்துவமசி மகாவாக்கியமும், சிவாயநம என்பது தொந்தத் தசி மகாவாக்கியமுமாம் இவ்வாக்கியத்தில் சிவ என்பது பிரம வாசகமும், ய என்பது கூடஸ்த வாசகமும், நம என்பது ஐக்கிய வாசகமுமாம் எனவே, நமசிவாய என்பது பிரமகூடஸ்த ஐக்கியத்தையும் சிவாயநம என்பது கூடஸ்தபிரம ஐக்கியத்தையும் உணர்த்தி நின்றன வென்றறிதல் வேண்டும். இத்தகைய பெருமையுள்ள இம்மந்திரத்தைத் திரிகரண சுத்தியுடன் ஜபிப்பவன் இச்சித்த போகத்தை யடைதலே யன்றிச் சித்தநிரோத வாயிலாக முத்தியையுமடைவன். இதற்குப்பிரமாணங்கள் வருமாறு:—

பஸ்மஜாபாலோபநிடதம்.

𑌤𑌾𑌰𑌕𑌂 𑌶𑍈𑌵𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌮𑍁𑌪𑌦𑌿𑌶𑌾𑌮𑌿। 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍂𑌮𑍁𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 𑌶𑍈𑌵𑍋𑌽𑌯𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌃॥ 𑌪𑌰𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑍋𑌽𑌯𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌃। 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌗𑍍𑌰𑍇 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑍇𑌚𑍍𑌚 𑌨𑌮 𑌇𑌤𑌿 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍॥ 𑌤𑌤𑍋 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌾𑌯𑍇𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌣𑌿 𑌨𑌾𑌤𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑌃 𑌪𑌰𑍋𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌤𑌾𑌰𑌕𑍋𑌽𑌯𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌃॥ 𑌕𑍋𑌽𑌯𑌂 𑌶𑍈𑌵𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌶𑍈𑌵𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑍋 𑌯𑌮𑍁𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍇 𑌶𑍈𑌵𑍇𑌭𑍍𑌯𑍋 𑌜𑍀𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌶𑍈𑌵𑌾𑌯𑍈𑌵 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌾𑌰𑌯𑌤𑌿॥ 𑌸 𑌏𑌷 𑌏𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌵𑍇𑌦𑍇𑌶𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌸𑌾𑌜𑍋𑌷𑌂॥ 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌂 𑌸𑌂𑌶𑍈𑌵𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌜𑌪𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑌂। 𑌸𑌵𑍍𑌯𑌰𑍍𑌣𑌵𑌂 𑌜𑍋𑌷𑍋𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿॥

(இ - ள்) காரகமாகிய சைவ மகாமந்திரத்தை யுபதேசிப்பேன் அங்கு முமுக்ஷுக்களுக்காக உபதேசிக்கப்படுவது சைவமந்திரமாகிய பஞ்சாக்ஷரமே. இப்பரமமாகிய சைவ பஞ்சாக்ஷரமே தாரகமாம். ஓமென்று முதலிற் சொல்லுக; பிறகு நமவென்க; மேல் மகாதேவாயவென்று ஐந்தெழுத்தைச் சொல்லுக இதிலும் மேலான மகாமந்திரமாய தாரக மந்திரமில்லை. இப்பஞ்சாக்ஷரமே தாரகம் இச்சைவ மந்திரமென்பது யாது? இத்தாரகமாகிய சைவ மந்திரமே உபதேசிக்கப்படுகின்றது, காசியில் இச்சைவமந்தி

ரமே சைவர்களான ஜீவர்களுக்கு உபதேசிக்கப்பட்டு அவர்களை முக்திக்குப்ப்பிக்கின்றது. இதுவே பிரம்மோபதேசமாம். பிரமம மாகிய சோமனும நானே. வேதங்களுக்குப் பேரணியான சைவ பஞ்சாக்ஷரமாகிய தாரக மகாமந்திரத்தை பிரணவத்துடனே ஜபித்துக்கொண்டு சந்தோஷமடைகின்றார்கள்.

ஶைவஸ்தாரகஃ ஶைவாநாம் ஜீவாநாம் ஶைவாய
மேவ மந்த்ரஃ ஸாம்பவாஃ பாஶுபதா மஹாஶைவாஃ ஶை
வம் பஞ்சாக்ஷரம் ஶைவமந்த்ரமுபதிஶாமி ஶைவோயம் மந்த்ரஃ
பஞ்சாக்ஷரஃ த்யக்தகளேவராந் ஶைவாநாநீய ஸ்வாங்கம் கேவலம்
நிவேஶ்ய॥

(இ-ள்) சைவநதாரகம. சைவர்களான சீவர்களுக்குச் சைவமாகிய இமமந்திரமேயாம. சாமபவா, பாசுபதா, மகாசைவாகளுக்குச சைவபஞசாக்ஷரத்தை, சைவமாகிய மநதிரததை உபதேசிப்பேன். சைவமான பஞசாக்ஷர மநதிரமிது. பிரேதமாகச் சரீரத தை விட்ட சைவாகளை ஏற்றுத் தனதொடையில வைத்து (சைவ மநதிரமே உபதேசிக்கப்படும.)

யஜுர்வேதபோதாயனசாகை.

ருத்ரேஷு பாவநீயம் பஞ்சாக்ஷராணாம்|
ஸாங்கேஷு ஶ்ருத்யுத்க்ருஷ்டா ருத்ரைகாதஶிநீ ஶ்ருதா|
தத்ர பஞ்சாக்ஷரீ தஸ்யாம் ஶிவ இத்யக்ஷரத்வயம்॥

(இ - ள்.) ருத்திரததில பாவனமான வெழுத்துகளைந்தும் நூல்களில சிறந்த வேதஙகளில், உதகிருஷ்டமானவையாம. அவைகளுள் உருததிராநுவாகம மிகச சிறநததேயாம. அதனிடததுள் பஞசாக்ஷரியும அவறறுளும, சி என்ற சொலலும மிகச சிறநதனவாம.

திருபுராதாபிந்யுபநிஷத்.

ஓம் நமஶ்ஶிவாயேதி யாஜுஷமந்த்ரோபாஸகோ ருத்ரத்வம் ப்ராப்நோதி| கல்யாணம் ப்ராப்நோதி தத்விஷ்ணோஃ பரமம் பதம்॥

(இ - ள்.) ஓம நமசிவாய என்கிற யஜுர்வேத மந்திரோபாசகன் உருததிரததுவததை யடைகிறான; மஙகள சுவரூபததை யடைகிறான; அதுதான விஷ்ணுவினுடைய பரமபதம.

சிவபுராணம்.

ஸாங்காநி வேத ஶாஸ்த்ராணி ஸம்ஸ்திதாநி ஷடக்ஷரே
ந தேந ஸத்ருஶஸ் ஸூக்ஷ்மோ மந்த்ரோந்யோஸ்தி வரஃ க்வசித்॥ ஸ்த

[illegible]

(இ-ள்.) சாங்கமாகிய வேதசாஸ்திரங்களியாவும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தின்கண்ணே நிலையுறுவனவாம்; அப்பஞ்சாக்ஷரத்திற்குச் சமானமானதும் மேலானதுமாகிய பிறிதோர் மந்திரமு மில்லையாம்; சத்தகோடி மகாமந்திரங்களும் அநேகமான உபமந்திரங்களும் ஸ்ரீபஞ்சாக்ஷர மந்திரசூத்திரத்தினின்றும் விருத்தியாகிப் பலவேறுவகைப்பட விரிந்தனவாம்; சிவஞான வித்தியாஸ்தானங்களாக யாதியாது எதுகாறும உள்ளதுவோ அவையெல்லாமுஞ் சேர்ந்து ஸ்ரீபஞ்சாக்ஷரமாகிய சூத்திரத்தின் பாஷ்யங்களாம். அப்பஞ்சாக்ஷரம் எழுத்தினுல் சிறுமை யுடையதாயும் மஹார்த்தம் பொருந்தியதாயும் வேதசாரமாயும் விசேஷ முத்தியைப் பயப்பதாயும் நிச்சயமான பொருட் கெம்பீரமுடையதாயும் பரமேசுவர வாசகமாயும் மிகுந்த சூக்குமமானதாயும் அநேக வியாக்கியானங்களைக் கொண்டு அறிதற்பாலதாயும் ஆலவித்தின்றன்மையை நிகர்ப்பதாயு முள்ளதாம்.

சாதாதபர்வாக்கியம்.

[illegible]

(இ-ள்.) ஒருவன் சுராபானம், குருதாரகமனம், சுவர்ணஸ்தேயம், பிரமஹத்தி முதலிய பாபங்களைச் செய்தானாயினும், விதிவத்தாய்ப் பாசுபத விரதத்தை யநுட்டித்து ஸ்ரீருத்திரமந்திரத்தைச் செபஞ்செய்தால் அவன் சர்வபாபங்களினின்றும் விடுபடுகிறான்.

சூதசங்கிதை.

சந்தங்குல வெவ்வகைப் போகமுஞ் சாரநல்கும்
பந்தந்தவிர்த்துச் சிவஞானம் பரவவுய்க்கும்
கந்தங்கமழ் பூமகன் மான்முழற் கடவுளாரு
ஞந்தன்பி னேத்தப் படுமைந்தெழுத் தோங்காளும்.

அலங்கும்இவ் வைக்தெ ழுத்தோ டவிர்பிர ணவமுங் கூட்டி
யிலங்குறு மாறெ ழுத்தென் றியம்புவ ரறிவின் மிக்கோர்
நலங்குல விதற்குப் பூமே ஞன்முக னிருடி யாவன்
மலங்ருல வுறுநற் காயத் திரியோசந் தகூத வத்திர்.

சித்தாந்தசிகாமணி.

ஓதுமக்கர மைந்துரு வாமுயர் மனுத்தா
ஞதியிற்பிர ணவந்தனைக் கொண்டிடு மதனால்
வேதமுற்றினு மாகம மனைத்தினும் விளங்க
நீவதமற்றுயர் சடாக்கர மென்றிடப் படுமால்.

திருவாசகம்.

போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சிவாய புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சிவாய சயசய போற்றி போற்றி..

தேவாரம்.

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியு
நமச்சி வாயவே நானறி விச்சையு
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே.

சிவவாக்கியர்.

ஆனவஞ் செழுத்துளே யண்டமு மகண்டமும்
ஆனவஞ் செழுத்துளே யாதியான மூவரும்
ஆனவஞ் செழுத்துளே யகாரமு மகாரமும்
ஆனவஞ் செழுத்துளே யடங்கலாவ லுற்றதே.
நமசிவாய வஞ்செழுத்து நிற்குமே னிலைகளும்
நமசிவாய வஞ்சுமஞ்சும் புராணமான மாயையை
நமசிவாய வஞ்செழுத்து நம்முளே யிருக்கவே
நமசிவாய வுண்மையை நற்குரைசெய் நாதனே.

நிஷ்டானுபூதி.

அஞ்செ ழுத்தின்விதி யெவ்வித மென்னி லரிய தூலமொடு சூக்கும மேவும், பிஞ்செ ழுத்தினைத் தள்ளிமே னின்ற பெரியெ ழுத்தினைப் பினுமுனு கிறவி, யெஞ்ச லில்லுயிர் நடுவினி னிலவ விசைத்தல் காரண மாகுமென் றறிதி.

இந்தவஞ் செழுத்தி லிரண்டெழுத் தொழிப்ப தென்னையென் றுமையவள் வினவ, வந்தமி லின்ப துன்ப வேதனையி லழுத்துவ திரண்டெழுத் தாமால், சிந்தனைக் கரிய சிவமிரு பாலுஞ் சேர்ந் துயிர் நடுவணைந் திலங்கு, மைந்தெழுத் தினையே காரண மென லா மதுமுத்திக் குறுதுணை யாமால்.

திருமந்திரம்.

ஒன்றுகண் டீருல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீருட லுக்குயி ரானதும்
நன்றுகண் டீரிது நமச்சிவா யப்பழம்
தின்றுகண் டார்க்கது தித்தித்த வாறே.

அஞ்சு நடுவே யழியாத் தலங்காட்டி
நெஞ்சு நடுவே நிறுத்திடு மென்னந்தி
பஞ்சாக் கரத்தைப் பகர்ந்து பதிகாட்டி
யஞ்சி லிரண்டை யறுத்தன னந்தியே.

அஞ்சுக வஞ்செழுத் துண்மை யறிந்தபின்
னெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சக மில்லை மனைக்கு மழிவில்லை
தஞ்சமிது வென்று சாற்றுகின் றேனே.

வாசிவா வென்று வாசியை வைத்து
வாசியோ டொன்ற வகையறி வாரில்லை
வாசியோ டொன்ற வகையறி வாளற்கு
வாசியோ டீசன் மகிழ்ந்திருந் தானே.

நாயோட்டு மந்திர நான்மறை வேதம
நாயோட்டு மந்திர நாத னிருப்பிடம
நாயோட்டு மந்திர நாதாந்த சோதி
நாயோட்டு மந்திர நாமறி யோமே.

கண்ணுடைய வள்ளலார்.

ஒருதலை மாணிக்க முன்ன ரெனக்குப தேசஞ் செய்தான்
இருதலை மாணிக்கம பின்னரும் பேசி யிருளறுத்தான்
அரிதலை மற்றை யயன்றலை சூடிய கங்கை யின்மூ
வெரிதலைச் சூலத் தொடெடுப் பான்கச்சி யேகம்பனே.

திருநாவுக்கரையர்.

இல்லக விளக்கது விருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

பஞ்சாக்ஷரப் பதிபசுபாசவிளக்கம்.

அஞ்செ ழுத்தினி லொருபுடை யரும்பதி யமரும்
வஞ்ச முற்றுள வொருபுடை பாசமாய் வதியும்
துஞ்ச லின்றிய வொருபுடை பசுவெனத் துலங்கும்
அஞ்செ ழுத்தினின் மும்முத லறிந்தவர் பிறவார்.

தாயுமானசுவாமிகள்.

அஞ்செழுத்தி னுண்மை யதுவான வப்பொருளை
நெஞ்சழுத்தி யொன்றாகி நிற்குநா ளெந்நாளோ.

திருக்கடைக்காப்பு.

தும்ம லிரும றொடர்ந்த போழ்தினும்
வெம்மை நிரயம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினு
மம்மை யினுந்துணை யஞ்செ ழுத்துமே.

குணங்குடிமஸ்தான்.

எண்சா ணுயரத் திருக்கும் பனையி னிறக்கி யுண்ணும்
பஞ்சாக் கரமெனும் பாரிய வாளினைப் பாய்ந்தெடுத்துத்
தஞ்சா வூராளு மகராஜன் பாதந் தனைப்பணிந்தால்
கெஞ்சாக் குணங்குடி கொள்வா யிதுபுத்தி கேணெஞ்சமே.

ஈசுவரநாம ஜெபம்.

பிராணிகளுக்கு இம்சை செய்யாமை, கருணையுடைமை, அகமமதையின்மை, சுகதுக்கங்களைச் சமமாய்க் காண்கை, பொறையுடைமை, எப்போதும் சந்தோஷமுடைமை, மரணத்திற் கஞ்சாமை முதலிய தன்மைகளுடன் கூடி யெப்போதும் கோவிந்தா, மாதவா, முகுந்தா, ஹரே, முராரே, சம்போ, சிவா, ஈசா, சசிசேகரா, சூலபாணி, தாமோதரா, அச்சுதா, ஜனார்த்தனா, வாசுதேவா, என்றற் றொடக்கத்தனவாகச் சொல்லிக்கொண்டிருத்தல்தான் ஈசுவரநாமத்தை ஜபித்தலாம். அந்த ஜபம் வாசிகம் மானச மென்றிருவகைத்தாம். அவற்றுள் வாசிகம் உபாம்சு உச்சமென விருவகைத்தாம்.

உபாம்சு-பிறர்காதிற்குக் கேட்காதபடி ஜபித்தல், உச்சம்-பிறர்காதிற்குக் கேட்கும்படி ஜபித்தல்.

மானஸம்-மனனம் தியானமென் றிருவகைத்தாம். உச்சத்தைவிட உபாம்சு ஆயிரமடங்கும், உபாம்சைவிட மானசமாகிய மனனத்தியானங்கள் கோடிமடங்கும் அதிக பலனைத் தருவனவாம்.

உச்சத்தினால் பலன் உண்டாவதாயினும் அந்த நீசர்காதிற் படுமாயின் நிஷ்பலமாய்ப் போம்.

இங்ஙனம் ஜபித்து அந்நாமங்களிடத்துச் சித்த விருத்தியை நிறுத்துவதால் அசுத்த வாசனையேயன்றி விட்சேபமும் கெடும். இதற்குப் பிரமாணம், ஸ்ருமாறு:—

இலிங்கபுராணம்.

நாராயண ஹ்ருஷீகேச புண்டரீகாக்ஷ மாதவ |
அச்யுதாநந்த கோவிந்த வாஸுதேவ ஜநார்த்தந ||
ருத்ர ருத்ரேதி ருத்ரேதி சிவாய ச நமோ நம: |
நம: சிவதராயேதி சங்கராயேதி ஸர்வதா ||
மஹாதேவ மஹாதேவ மஹாதேவேதி கீர்த்தயேத் ||

(இ - ள்.) நாராயணா, ஹிருஷிகேசா, புண்டரீகாக்ஷா, மாதவா, அச்சுதா, அநந்தா, கோவிந்தா, வாசுதேவா ஜநார்த்தனா என்றும், உருத்திரா, உருத்திரா, உருத்திரா, சிவா என்றும், சிவதரா என்றும், சங்கரா என்றும், மஹாதேவா, மஹாதேவா, மஹாதேவா என்றும் இவைபோலொத்த நாமங்களை எவன் சொல்லி நமஸ்காரஞ் செய்துகொண்டிருக்கிறானோ (அப்படிப்பட்டவனுடைய வாஸஸ்தலத்தில், ஓ! துஸ்ஸஹா! நீ பிரவேசியாதே).

பிரும்ம வைவர்த்தபுராணம்.

மஹாதேவ மஹாதேவ மஹாதேவேதிவாதிந: | பஸ்சாத் யாமி மஹாத்ரஸ்தோ நாமஸ்ரவண லோபத: | சிவேதி ஸப்தமுச்சார்ய ப்ராணாந் த்யஜதியோ நர: | கோடிஜந்மார்ஜிதாத் பாபாந்முக்தோ முக்திம் ப்ரயாதிஸ: | சிவம் கல்யாண வசநம் கல்யாணம் முக்திவாசகம் | யதஸ்தத் ப்ரபவேத் தஸ்மாத் ஸ சிவ: பரிகீர்த்தித: ||

(இ-ள்.) மஹாதேவா! மஹாதேவா! மஹாதேவா! என்று சொல்லுகிறவனின் பின்றொடர்ந்து நாமத்தைக் கேட்பதிலாசையுடைவனாய் மஹாபயத்துடன் செல்லுகிறேன். எந்த மனிதனானவன் சிவனென்னும் சப்தத்தைச் சொல்லிக்கொண்டே தேகத்தைவிடுகிறானோ அவன் கோடி ஜந்மங்களிற் சம்பாதித்த பாபத்தினின்று விடுபட்டு முக்தியடைகிறான். சிவம் என்பது கல்யாண வசனம். கல்யாணமென்பது முக்தி வாசகம். எதனாலந்தக் கல்யாணமுண்டாகிறதோ அதனாலவர் சிவனென்று சொல்லப்படுகிறார்.

### ஈசுரகீதை.

பவமார் நோவு கெடநோன்பு பலவா லாக்கை மெலிவிக்கை
தவமா குவது வேதாந்தஞ் சதருத் திரியந் தாரகமாஞ்
சிவமா கியமந் திரம்பலவின செபமத் தியானஞ் சிறந்துள்ள
வவமா னதிலா வதன்பேத மறிவா ரறையும் படிகேண்மோ.

வாசிக முபாஞ்சு மானத மென்று மதிலோரோவ் வொன்றினுக் கொன்று,தேசுடைத் தென்று செப்பினர் பிறர்க்குத் தெரியவே செபித்திடுஞ் சபந்தான், வாசிக முபாஞ்சு வாயிதழ்த் தன்மாத்திர மானத மடங்கி, யாசறச் சிந்தை செய்தலொவ்வொன் றுக் கொன்றுயிர மடங்குநல் லனவாம்.

### பாடுதுறை.

கேசவ னாராயணன் கிளர்மாதவன் கேடொன் றில்லாத்
தேசமர் கோவிந்தன் விட்டு மதுத்திரி விக்கிரமன்
வாசமுன் வாமனன் சீதரன் மன்னு மிருடிபத்ம
னாசமி றுமோ தரனுரு வாய்சின்ற நாமங்களே.

ஆராய வேதமுடி வானதை பாதநம வாசாபி சாசமற வேயானு பாதநம, சீராய வானவர்க டேவாதி தேவநம தேனுருபாதமலர் சீராக வோதுகொற, நீராய வானவரை நேர்கானுபாதநம நீதான தாகுமென நேரோது மாசில்பொரு, ளாராய னையபத மாநாட வோதிநம நராய ணையநம நாராய ணையநம.

### ஈசுவரமூர்த்தித்தியானம்.

ஈசுவரனது வடிவங்களொன்றில் சற்குருவருளியபடி சித்தத்தை யிடைவிடாது நிறுத்துதல் ஈசுவரமூர்த்தித் தியானமாம்.

தியானிக்குபோது தனது தேகத்திலுள்ள ஆகாசதன்மாத்திரையை மகாகாசத்திலும், சேஷ்டாஸ்பரிசரூபமாயுள்ள தேகவாயுவை மகாவாயுவிலும், தேஜஸை அக்கினி சூரியர்களிடத்திலும், இரத்தரூபமான ஜலதன்மாத்திரையை மகாஜலத்திலும், பிருதிவிதன்மாத்திரையை மகாப்பிருதிவியிலும், மனதைச் சந்திரனிலும், சுரோத்திரத்தைத் திசையிலும், பாதேந்திரியத்தை விஷ்ணுவினிடத்திலும், பலத்தைச் சிவனிடத்திலும், வாக்கை அக்கினியினிடத்திலும், ஆசனேந்திரியத்தைச் சூரியனிடத்திலும், உபஸ்தேந்திரியத்தைப் பிரமனிடத்திலும் இலயித்ததாகக் கருதி இருதயாகாசம், விசுத்தாகாசம் (கண்டாகாசம்), புருவமத்தியாகாசம் என்னு மூன்றிடங்களுள் ஏதாகினு மோரிடத்தில் ஈசுவரன்

எழுந்தருளி யிருப்பதாகப் பாவித்துத் தியானித்தல்வேண்டும். இது சகுணத்தியானமென்று சொல்லப்படும். கடவுளிடத்து விட்டுவிட்டுச் செல்லும் அந்தக்கரணத்தின்பிரவாகம் தியானமாம்.

இவ்வாறு ஒருசுணை இடைவிடாது பிரயத்தனத்துடன் தியானித்து வந்தால் அவனுக்குத் தியானிக்கிறவன் தியானித்தலென்னு மிரண்டுமின்றித் தியானிக்கப்படும் பொருளொன்றை மாத்திரம் விஷயஞ்செய்யும் விருத்தியின் ஏகாக்கிரகத்தன்மை சித்திக்கும். சித்திக்குமிடத்து அவன் அதுவாயிலாக முத்தியடைவன்.

## கைவல்யோபநிஷத்.

ஹ்ருத்புண்டரீகம் விரஜம் விசுத்தம் விசிந்த்ய மத்யே விசதம் விசோகம்| அசிந்த்ய மவ்யக்த மனந்தரூபம் சிவம் ப்ரசாந்த மம்ருதம் ப்ரஹ்மயோனிம்| ததாதிமத்யாந்த விஹீனமேகம் விபும் சிதானந்த மரூப மத்புதம்| உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம்| த்யாத்வா முனிர் கச்சதி பூதயோனிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ꞉ பரஸ்தாத்||

(இ-ள்.) ஹிருதய புண்டரீகத்தை இரஜோகுண மற்றதாயும் சுத்தமானதாயும் பாவித்து, அதன் மத்தியில் பரிசுத்தராயும் துக்கமற்றவராயும், சிந்திக்கக்கூடாதவராயும், காணக்கூடாதவராயும், முடிவற்றரூபங்களை யுடையவராயும், மங்களசுவரூபராயும், மிகவுஞ் சாந்தராயும், மோக்ஷசுவரூபமாயும், மாயைக்கு உற்பத்திக் காரணராயும், ஆதிமத்யாந்த மில்லாதவராயும், ஒருவராயும், எங்கும் பரவினவராயும், ஞானனந்த சுவரூபியாயும், ரூபமற்றவராயும், ஆச்சரியகரராயும், பிரபுவாயும், முக்கண்ணுடையவராயும், நீலகண்டராயும், சாந்தமுடையவராயும், உமை (பார்வதி) யுடன் கூடியிருக்கிறதாயுமுள்ள பரமேசுவரரைத் தியானஞ்செய்து, முனியானவன் சகலத்திற்கும் சாக்ஷியாயும் அக்ஞானத்திற்குப் புறம்பானதாயும் பூதங்களுக்கெல்லாம் ஆதிகாரணமாயு மிருக்கிற பரமாத்துமாவை யடைகிறான்.

## இலிங்கபுராணம்.

அகாராய ருத்ராய அகாராய ஆத்மரூபிணே| உகாராயாதி தேவாய வித்யா தேஹாய வை நம꞉| த்ருதீயாய மகாராய சிவாய பரமாத்மநே| ஓங்காராய ஓங்காரரூபாய ஓங்காரகர்த்ரே நமோ நம꞉| ஸூர்யகோடி ஸஹஸ்ராபம் ஸா

த்ரே ச விஷ்ணவே நம:| ஸர்வாய ச நமஸ்துப்யம் நமோ நாராயணாய ச | நமோ ஹிரண்யகர்பாய ஆதிதேவாய தே நம:||

(இ-ள்.) ஓரக்ஷரமாகிய ஓங்கார சுவரூபியாயும், உருத்திரனும், அகாரசுவரூபியாயும், ஸகலத்திற்கு மாதரு சுவரூபியாயும், உகாரசுவரூபியாயும், ஆதிதேவனாயும், ஞானசுவரூபியாயு மிருக்கிற உன்பொருட்டு நமஸ்காரம். மூன்றாவதாகிய மகாரசுவரூபியாயும், சிவனாயும், பரமாத்மாவாயு மிருக்கிற உன்பொருட்டு நமஸ்காரம். மோக்ஷமாயும், மோக்ஷசுவரூபியாயும் மோக்ஷத்தைக் கொடுக்கிறவராயு மிருக்கிற உன்பொருட்டு நமஸ்காரம்; நமஸ்காரம். பரமாத்துமாவாயும், வேதசுவரூபியாயும், ஸகலருக்கும் எஜமானனாயும், விஷ்ணுவாயுமிருக்கிற உன்பொருட்டு நமஸ்காரம். சர்வனென்று சொல்லப்படுகிறவராயும் நாராயணனாயு மிருக்கிற உன்பொருட்டு நமஸ்காரம். ஹிரண்ணிய கருப்பனாயு மாதிதேவனாயுமிருக்கிற உன்பொருட்டு நமஸ்காரம்.

### இலிங்கபுராணம்.

த்வமாதிஸ்த்வமநாதிஸ்த்வம் ப்ரக்ருதிஸ்த்வம் ஜநார்த்தந || புருஷஸ்த்வம் ஜகந்நாதோ விஷ்ணுர்விஶ்வேஶ்வரோ பவாந் | யோऽயம் ப்ரஹ்மாபி புருஷோ விஶ்வமூர்த்தி: பிதாமஹ:|| தத்த்வமாத்யம் பவாநேவ பரம்ஜ்யோதிர்ஜநார்த்தந | பரமாத்மா பரம்தாம ஶ்ரீபதே பூபதே ப்ரபோ|| த்வத்க்ரோதாத் ஸம்பவோ ருத்ரஸ் தமஸா ச ஸமாவ்ருத:| த்வத்ப்ரஸாதாஜ் ஜகத்தாதா ரஜஸா ச பிதாமஹ:|| த்வத்ப்ரஸாதாத் ஸ்வயம்விஷ்ணு: ஸத்த்வேந புருஷோத்தம:| காலமூர்த்தே ஹரே விஷ்ணோ நாராயண ஜகந்மய||

(இ-ள்.) ஓ! விஷ்ணுவே! நீர் ஆதியாகவு மநாதியாகவும் பிரகிருதியாகவும் ஜநார்த்தனனாகவும் புருஷனாகவும் ஜகத்திற்கு நாதனாகவும் ஜகத்திற்கெல்லா மீசுவரனாகவு மிருக்கிறீர். ஓ! ஜநார்த்தன! பிரம்மாவாகவும் புருஷனாகவும் பிரபஞ்ச சுவரூபியாகவும் பிதாமகராகவும் அநாதிதத்துவமாகவும் பரஞ்சோதி சுவரூபமாகவு மிருக்கிறவர் நீரே. ஓ! பிரபுவே! பரமாத்துமாவாகவும் அடையத்தகுந்தசிரேஷ்டமானஸ்தானமாகவும் இலக்ஷ்மீபதியாகவும் பூபதியாகவுமிருக்கிறவர்நீரே. தமோகுணத்தினாற்சூழப்பட்ட உருத்திரனானவர் உம்முடைய குரோதத்தி லிருந்துண்டானார். இரஜோகுணத்தினாற் சூழப்பட்ட பிதாமகரான பிரம்மாவானவர் ஜகத்தைச் சிருஷ்டிக்கிறவராகவானார். ஓ! காலஸ்வரூபியே

ஓ! ஹரியே! ஓ! நாராயணா! ஓ! ஜகத்ரூபியே! ஸத்துவகுணத்தினாற் சூழப்பட்ட விஷ்ணுவாகிய நீரே (பக்தர்களுடைய) அநுக்கிரகத்தின்பொருட்டுப் புருஷோத்தமனாகவாகிறீர்.

### அஜபாகாயத்திரி மந்திரம்.

"ஸோஹம்" என்னும் மந்திரம் அஜபாமந்திரமாம். இஃதஜபாகாயத்திரி யென்றும் சொல்லப்படும். இதனது ஜபத்தை அஜபாஜபமென்பர். திரிகரண சுத்தியாய் 'ஸோஹம்' என்றுஜபித்துக் கொண்டிருக்கும்போது எப்போது விர்த்தி அந்தர் (உள்) முகப்படுகின்றதோ அப்போது சுவாஸம் வெளிப்படும்போது ஸகாரத்தை (ஸோ என்பதை)யும் சுவாஸம் உட்பிரவேசிக்குங்கால் ஹகாரத்தை (ஹம் என்பதை)யும் தியானிக்கவேண்டும். இது ஸோபாதிகத்தியான மென்றும் சொல்லப்படும். 'ஸோஹம்' என்பதிலுள்ள ஸகரத்தையும் ஹகரத்தையும் நீக்கிவிட்டால் ஓம் என்னும் பிரணவமே மிஞ்சி நிற்கும். ஓம் என்னும் பிரணவம் ஸகார ஹகாரத்துடன் கூடி ஸோஹம் என்றாயிற்று. ஸ ஹ என்னும் உபாதி நீங்கிய ஓம் என்பதன் தியானம் நிருபாதிகதியானமாம். ஓம் என்பதற்கும் ஸோஹம் என்பதற்கும் பொருள் ஒன்றே, இவ்வஜபாமந்திரத்தை யிடைவிடாது மேற்கூறியவாறு தியானிப்பவன் விரைவில் சித்தசுத்தி யடைந்து அது வாயிலாக முத்தியடைவன்.

### பிரமவித்யோபநிஷத்.

ஸ்வப்ரகாஶ சிதாநந்தம் ஸஹம்ஸ இதி கீயதே||

(இ-ள்.) சுவயம் பிரகாசமாய்ப் பரஞ்சோதியாய் ஞானாநந்த சொரூபமாய்ப் பிரகாசிக்கும் ஆன்மாவே அம்சமெனப்படும்.

### ஷை உபநிஷத்.

ஜ்ஞாநாத்மஸ்வரூபம் பரம் ஹம்ஸமந்த்ரம் ஸர்வேஶ்வரம்| ப்ராணிநாம் தேஹமத்யஸ்தம் ஸ்திதா ஹம்ஸ ஸதாத்யஹம்| ஹம்ஸ ஏவ பரம் ஸத்யம் ஹம்ஸ ஏவ து ஶக்திக:| ஹம்ஸ ஏவ பரம் வாக்யம் ஹம்ஸ ஏவ து வைதிக:|| ஹம்ஸ ஏவ பரோ ருத்ரோ ஹம்ஸ ஏவ பராத்பர:| ஸர்வதேவஸ்ய மத்யஸ்தோ ஹம்ஸ ஏவ மஹேஶ்வர:|| ஸதாஸமாயிம் கூடீக ஹம்ஸமந்த்ரம் மநஸ்ஸ்தம்| நீமூல ஸ்படிகாகாரம் ஷிவ்யாமேவ மநமேவச| மத்யதேஶே பரம்ஹம்ஸ ஜ்ஞாநாநந்தாத்மரூபக:||

(இ - ள்.) ஞானசொரூபமான பரமஹம்ஸ மந்திரத்தையே உச்சரிக்கவேண்டும். அது பிராணிகளுடைய தேகமத்தியத்தில் ஸ்திரமாயிருக்கும். ஹம்ஸசொரூபமே பிரும்மா விஷ்ணு மகேசுரர்களாகும். அழியாததாயும், சத்தியமாயும், சர்வசக்தியுள்ளதாயும் பராத்பரமாயும் விளங்குதலால் அம்ஸமந்திரத்தையே ஸதாஜபித்துக்கொண்டிருக்கவேண்டும். ஸதா ஹம்ஸமந்திர ஸமாதியால் நிர்மல ஸ்படிகாகாரமான திவ்யசொரூப (ஸோஹம்) மந்திரத்தினுல் பரமஹம்ஸனுகிறுன்.

யோக சூடாமணி யுபநிஷத்.

𑌹𑌕𑌾𑌰𑍇𑌣 𑌬𑌹𑌿𑌰𑍍𑌯𑌾𑌤𑌿 𑌸𑌕𑌾𑌰𑍇𑌣 𑌵𑌿𑌶𑍇𑌤𑍍𑌪𑌨𑌃।
𑌹𑌂𑌸𑌹𑌂𑌸𑍇𑌤𑍍𑌯𑌮𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌂 𑌜𑍀𑌵𑍋 𑌜𑌪𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾॥ 𑌸𑌕𑌾𑌰𑌃 𑌖𑍇𑌚𑌰𑍀 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌤𑍍𑌵𑌂𑌪𑌦𑌂 𑌚𑍇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌮𑍍। 𑌹𑌕𑌾𑌰𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑌦𑌂 𑌚𑍇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌮𑍍॥ 𑌸𑌕𑌾𑌰𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍇 𑌜𑌨𑍍𑌤𑍁𑌰𑍍𑌹𑌕𑌾𑌰𑍋 𑌹𑌿 𑌭𑌵𑍇𑌦𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍॥

(இ-ள்.) (அம்சம்) ஹகாரத்தால் வெளியிற்சென்று ஸகாரத்தால் மறுபடியும் உட்செல்லுகின்றது. ஹம்ஸம் ஹம்ஸ மென்னும் இம்மந்திரத்தை ஜீவன் எப்போதும்ஜெபிக்கிறுன். (குருவாக்கியத்தினுல் இம்மந்திர) ஜெபம் சுழுமுனையில் விபரீதமா யுண்டாகின்றது. அது ஸோஹம் ஸோஹ மென்றழைக்கப்பட்டதாய் மந்திர யோகமெனப்படுகின்றது.) ஸகாரம் கேசரியெனப் படுகின்றது. துவம்பதமென்றும் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ஹகாரம் பரமேசுவரனுகின்றுர். தத்பதமென்றும் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ஸகாரத்தைத் தியானிக்கும் புருஷன் நிச்சயமாய் ஹகாரமே யாகின்றுன்.

தியாநபிந்தூபநிஷத்.

𑌹𑌕𑌾𑌰𑍇𑌣 𑌬𑌹𑌿𑌰𑍍𑌯𑌾𑌤𑌿 𑌸𑌕𑌾𑌰𑍇𑌣 𑌵𑌿𑌶𑍇𑌤𑍍𑌪𑌨𑌃।
𑌹𑌃𑌸𑌹𑌂𑌸𑍇𑌤𑍍𑌯𑌮𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌂 𑌜𑍀𑌵𑍋 𑌜𑌪𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾।
𑌅𑌜𑌪𑌾 𑌨𑌾𑌮 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌦𑌾 𑌸𑌦𑌾।
𑌅𑌸𑍍𑌯𑌾𑌃 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌨𑌰𑌃 𑌪𑌾𑌪𑍈𑌃 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥

(இ - ள்.) ஹகாரத்தினுல் வெளியிற் பிரவேசித்து ஸகாரத்தால் உள் செல்லுகின்றது. ஹம்ஸ ஹம்ஸ மென்கிற இம்மந்திரத்தை ஜீவன் எப்போதும் ஜெபிக்கிறுன். அஜபா என்னும் காயத்ரீ

யோகிகளுக்கு எப்போதும் மோக்ஷத்தைத் தரத்தக்கது. அக்கா யத்திரியின் த்யாநமாத்திரத்தால் மனிதன் பாபத்தினின்றும் விடுபடுகிறான்.

சூதசங்கிதை.

ஆய சீவர் களுக்குடம்பி னமையும் சகார மகாரமுறை
மேய பிராண வபானவளி விருத்தி சொரூப மாமிதனைப்
பாய வருட்சற் குருமுகத்திற் பாங்கா யிவ்வா றுணர்ந்துகொளு
நேய முடையாற் கறிந்து செய்த நெடியபாவங் களுமடியும்.
இன்னு மசபா வித்தையெனு மிதனை யிலகாத் திகனேயாய்
மன்னுங் குரவன் றிருவடிக்கு வழிபா டாற்றி யுணர்ந்துகொளு
மின்னும் புகழான் செபஞ்செய்யா விடினுஞ் செபஞ்செய் தவனே
முன்னு மன்னூர்க் கெந்தலமு மூன்று முன்னர்த துன்னிடுமே.[யா
இவ்வசபா மந்திரந்தா னைத்தகைமந் திரங்களுக்குஞ்
செவ்வியவுத் தமமாகுஞ் செல்வமெலா மினிதளிக்கு
மெவ்வமறுத் தின்பமே யெப்போது முண்டாக்குந்
தெவ்வரணம் பொடித்தபிரான் றிருவருளிற் கலப்பிக்கும்.

பிரணவோபாசனை. ௶

பிரணவத்தை ஆன்மவடிவ பிரமமாகச் சிந்தித்தல் பிரணவ வுபாசனையாம். பிரணவாக்ஷரம் பிரமசுவரூபம். அந்தப் பிரணவசுவரூப பிரமம் நான் என்று இடைவிடாது தன் புத்தி விருத்தியை நிறுத்துவதுதான் இங்குச் சிந்தித்தல் லென்பது. பிரணவமானது அகாரம், உகாரம், மகாரம், அமாத்திரையென நான்கு மாத்திரைகளுடையதாம். இம்மாத்திரைகள் பாதங்களென்றுஞ் சொல்லப்படும். இங்ஙனமே பிரமத்திற்கும் ஆத்மாவிற்கும் நான்கு பாதங்களுண்டு. விராட்டு, இரண்யகர்ப்பன், ஈசுவரன், தத்பத லக்ஷியமான ஈசுவரசாக்ஷி இந்நான்கும் பிரமத்தின் பாதங்களாம். விசுவன், தைசதன், பிராக்ஞன், துவம்பத லக்ஷியமான ஜீவசாக்ஷி இந்நான்கும் ஆத்மாவின் பாதங்களாம். பிரணவத்தை உபாசிக்குமிடத்து (1) பிரணவத்தின் முதற்பாதமாகிய அகாரத்தையும், ஆத்மாவின் முதற்பாதமாகிய விசுவனையும், பிரமத்தின் முதற்பாதமாகிய விராட்டையும், (2) பிரணவத்தின் இரண்டாம்பாதமாகிய உகாரத்தையும், ஆத்மாவின் இரண்டாம்பாதமாகிய தைசதனையும், பிரமத்தின் இரண்டாம்பாதமாகிய இரண்யகர்பனையும், (3) பிரணவத்தின் மூன்றாம்பாதமாகிய

மகரத்தையும், ஆத்மாவின் மூன்றும் பாதமாகிய பிராக்ஞனை யும், பிரமத்தின் மூன்றும்பாதமாகிய ஈசுவரனையும், (4) பிரணவத் தின் நான்காம் பாதமாகிய அமாத்திரையையும், ஆத்மாவின் நான் காம்பாதமாகிய துவம்பதலக்ஷியமான ஜீவசாக்ஷியையும், பிரமத் தின் நான்காம்பாதமாகிய தத்பதலக்ஷியமான ஈசுவரசாக்ஷியையும் அபேதமாகச் சிந்தித்தல்வேண்டும். இப்படிச் சிந்தனைசெய்கிற வன் சித்தசாந்தியை யடைவதே யன்றி, மறுமையில் பிரமலோ கத்தை யடைந்து பிரமனுக்குச் சமானமாகப் போகத்தை அனு பவிப்பன். பிரமலோகத்தில் தமோகுணரஜோகுணங்கள், சிறிது மின்றிச் சத்துவகுணமே பிரதானமாயிருத்தலால் அந்தலோகத் திற் சென்ற பிரணவவுபாசகன் குருவுபதேசாதி சாதனங்களின்றி யே தத்துவஞானம் உதிக்கப்பெற்றுப் பிரமதேவனோடு மோக்ஷ முமடைவன். இப்பிரணவ வுபாசனை அகங்கிரகத்தியான மென ப்படும். இவ்வகங்கிரகவுபாசனை யில்லாதவன் பிரமலோகத்தை யடையமாட்டான்.

ஓங்காரத்தினர்த்தத்திற்கும் மகாவாக்கியத்தி னர்த்தத்திற் கும் வேற்றுமையின்று. மகாவாக்கியத்தின் ஞானமின்றி நிஷ்பிர பஞ்சப் பிரமாத்மாவினது ஏகத்துவஞான முண்டாகாதென்பது நியமம். ஆயினும், ஓங்காரத்தின் விவேகமே மகாவாக்கியத்தின் விவேகமாயிருப்பதுபற்றித்தான் ஆங்குள்ள பிரமவுபாசகனுக்கு ஞானவாயிலாக மோக்ஷமுண்டாகின்றது.

ஸ்தூலோபாதி சகிதசேதனம் அகாரத்தின் வாச்சியம்.

ஸ்தூலோபாதியைவிட்டுச் சேதன மாத்திரம் அகாரத்தின் லக்ஷியம்.

சூக்ஷ்மோபாதி சகித சேதனம் உகாரத்தின் வாச்சியம்.

சூக்ஷ்மோபாதியைவிட்டுக் கேவல சேதனம் உகாரத்தின் லட்சியம்.

காரண உபாதி சகிதசேதனம் மகாரத்தின் வாச்சியம். காரண உபாதியைவிட்டுக் கேவல சேதனம் மகாரத்தின் லக்ஷி யம்.

இவ்விதத்தால்,

உபாதிசகித விசுவாதிகள் அகாராதி மாத்திரைகளின் வாச் சியங்களாம்.

உபாதிரஹித சேதனம் எல்லா மாத்திரைகளுக்கும் லக்ஷிய மாம்.

அப்படியே நாமரூபமான சகல உபாதிகளோடு கூடிய சேதனம் ஓங்காரவர்ணத்தின் வாச்சியமாம்.

நாமரூபமான சகல உபாதிகளுமின்றிய சேதனம் ஓங்கார வர்ணத்தின் லக்ஷியமாம்.

இவ்வாறு ஓங்காரத்திற்கும் மகாவாக்கியத்திற்கும் அர்த்தம் ஒன்றாகவே யிருத்தலால் ஓங்காரவிவேகத்தால் அத்வைத ஞான முண்டாகின்றது. உண்டாதல்பற்றித்தான் ஆண்டு அவ்வுபாசகன் புனர்ஜன்மமின்றி மோக்ஷமடைகின்றான்.

சி: இதற்குப் பிரமாணங்களுண்டா ?

கு: கீழ்வருவனவே.

### யோகசூடாமணி உபநிஷத்.

𑌅𑌕𑌾𑌰 𑌉𑌕𑌾𑌰𑍋 𑌮𑌕𑌾𑌰 𑌇𑌤𑌿। 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌵𑌰𑍍𑌣𑌾𑌃 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌵𑍇𑌦𑌾𑌃 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌲𑍋𑌕𑌾𑌃 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌗𑍁𑌣𑌾𑌃। 𑌤𑍍𑌰𑌯𑍋𑌽𑌕𑍍𑌷𑌰𑌾𑌣𑌿 𑌤𑍍𑌰𑌯𑌃 𑌸𑍍𑌵𑌰𑌾 𑌏𑌵𑌂 𑌪𑍍𑌰𑌣𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇॥ 𑌅𑌕𑌾𑌰𑍋 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑍀 𑌨𑍇𑌤𑍍𑌰𑍇 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌜𑌨𑍍𑌤𑍁𑌷𑍁। 𑌉𑌕𑌾𑌰𑌃 𑌕𑌣𑍍𑌠𑌤𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍇 𑌮𑌕𑌾𑌰𑍋 𑌹𑍃𑌦𑌿 𑌸𑍁𑌪𑍍𑌤𑌿𑌤𑌃। 𑌵𑌿𑌰𑌾𑌡𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌃 𑌸𑍍𑌥𑍂𑌲𑌶𑍍𑌚𑌾𑌕𑌾𑌰𑌃। 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌸𑍍𑌤𑍈𑌜𑌸𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌶𑍍𑌚 𑌉𑌕𑌾𑌰𑌃। 𑌕𑌾𑌰𑌣𑌾𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌮𑌕𑌾𑌰𑌃। 𑌅𑌕𑌾𑌰𑍋 𑌰𑌾𑌜𑌸𑍋 𑌰𑌕𑍍𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌚𑍇𑌤𑌨 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇। 𑌉𑌕𑌾𑌰𑌃 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌃 𑌶𑍁𑌕𑍍𑌲𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇। 𑌮𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑌾𑌮𑌸𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌤𑌥𑍋𑌚𑍍𑌯𑌤𑍇। 𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌹𑌰𑌿𑌃। 𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌭𑌵𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑍋 𑌹𑌿 𑌪𑌰𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍। 𑌅𑌕𑌾𑌰𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌹𑍍𑌯𑍁𑌕𑌾𑌰𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇 𑌹𑌰𑌿𑌃। 𑌮𑌕𑌾𑌰𑍇 𑌲𑍀𑌯𑌤𑍇 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑍋 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇॥

(இ-ள்.) அகார உகார மகாரங்களெனும் மூன்று வர்ணங்களாயும், மூன்றுவேதங்களாயும், மூன்று லோகங்களாயும், மூன்று குணங்களாயும், மூன்று அக்கரங்களாயும், மூன்று ஸ்வரங்களாயும், பிரணவம் பிரகாசிக்கின்றது. சர்வஜந்துக்களிடத்தும் அகாரம்: ஜாக்கிராவஸ்தை, புருவமத்திய ஸ்தானம். உகாரம் சொப்ப

நாவஸ்தை கண்டஸ்தானம். மகாரம் சுஷுப்தியவஸ்தை, ஹிருதய ஸ்தானம். அகாரம் விராட் விசுவன் ஸ்தூலமும், உகாரம் ஹிரண்யகர்ப்பன் தைஜசன் சூக்ஷுமமும், மகாரம் அவ்வியாகிருதன் பிராக்ஞன் காரணமுமாம். அகாரம் இராஜஸகுணம், இரத்தவர்ணம், பிரமசொரூபமெனச் சொல்லப்படுகிறது. உகாரம் ஸாத்விககுணம், வெள்ளைவர்ணம், விஷ்ணுசொரூபமெனச் சொல்லப்படுகிறது. மகாரம் தாமசகுணம், கறுப்புவர்ணம், ருத்திரஸ்வரூபமெனச் சொல்லப்படுகிறது. பிரணவத்திலிருந்து பிரமாவும், விஷ்ணுவும், ருத்திரரும் உண்டாகிறார்கள். ஆகையால் பிரணவமே மேலாகவிருக்கின்றது. பிரமா அகாரத்திலும், விஷ்ணு உகாரத்திலும், ருத்திரர் மகாரத்திலுமொடுங்குகிறார்கள். பிரணவமொன்றுமே விளங்குகின்றது.

தியானபிந்தூபநிஷத்.

𑌓𑌂𑌕𑌾𑌰𑌾𑌦𑍍𑌭𑌵𑌾 𑌵𑍇𑌦𑌾। 𑌓𑌂𑌕𑌾𑌰𑌾𑌦𑍍𑌭𑌵𑌾𑌃 𑌸𑍍𑌵𑌰𑌾𑌃। 𑌓𑌂-
𑌕𑌾𑌰𑌾𑌦𑍍𑌭𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂। 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌂 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌂॥ 𑌹𑍍𑌰𑌸𑍍𑌵𑍋
𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌪𑌾𑌨𑌿। 𑌦𑍀𑌰𑍍𑌘𑌃 𑌸𑌂𑌪𑌤𑍍𑌪𑍍𑌰𑌦𑍋 𑌵𑍍𑌯𑌯𑌃। 𑌅𑌰𑍍𑌧-
𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌦𑌾𑌯𑌕𑌃॥

(இ-ள்) ஓங்காரத்தினின்றும் வேதங்கள் உண்டாகின்றன. ஓங்காரத்தினின்றும் ஸ்வரங்கள் உண்டாகின்றன. ஸ்தாவரஜங்கமங்களோடு கூடிய மூன்றுலோக ஸமூகமயாவும் ஓங்காரத்திலிருந்து உற்பவிக்கின்றன. பிரணவத்திலிருக்கும் ஹ்ருஸ்வம் பாபத்தை நசிப்பிக்கிறது; தீர்க்கம் (அழிவற்ற) சம்பத்தைத் தருகிறது. அர்த்தமாத்திரையோடு கூடிய பிரணவம் மோக்ஷத்தையும் தருகின்றது.

மைத்திராயணியோபநிஷத்.

𑌸 𑌵𑌾 𑌏𑌷 𑌏𑌕𑌧𑌾 𑌸 𑌤𑍍𑌰𑍇𑌧𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑍍𑌯𑌕-
𑌰𑍋𑌤𑍍 𑌓𑌮𑌿𑌤𑌿 𑌤𑌿𑌸𑍍𑌰𑍋 𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌏𑌤𑌾𑌭𑌿𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌮𑍋𑌤𑌂 𑌪𑍍𑌰𑍋-
𑌤𑌂। 𑌚𑍈𑌵𑌾𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌹𑍍𑌯𑌾𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤॥

(இ-ள்.) அப்பரமாத்மா பிரணவ ஸ்வரூபனாயுள்ளவன். அவன் தன் ஸ்வரூபத்தை மூன்று வகையாக்கினான். பிரணவத்திற்கு மூன்று மாத்திரைகளுண்டு. அம்மாத்திரைகளால் பிரபஞ்சமெல்லாம் அந்தப் பிரணவத்தினிடத்திலே ஓதப்ரோதமாய் இருக்கின்றன. இப்படி தியானஞ்செய்து அப்படியே ஆத்மாவைச் சேர்க்கவேண்டும்.

தாரசாரோபநிஷத்.

𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌦𑍇𑌵𑍋𑌪𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌦𑍇𑌤𑌦𑌷𑍍𑌟𑌾𑌤𑍍𑌮𑌕𑍋𑌽𑌷𑍍𑌟𑌧𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌅𑌕𑌾𑌰𑍋 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌉𑌕𑌾𑌰𑍋 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌮𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍃𑌤𑍀𑌯𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌨𑌾𑌦𑌃 𑌪𑌞𑍍𑌚𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌕𑌲𑌾 𑌷𑌷𑍍𑌠𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌕𑌲𑌾𑌤𑍀𑌤𑌾 𑌸𑌪𑍍𑌤𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌷𑍍𑌟𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌾𑌰𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑌾𑌰𑌕𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌦𑍇𑌵 𑌤𑌾𑌰𑌕𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 । 𑌤𑌦𑍇𑌵𑍋𑌪𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 ॥

(இ - ள்.) ஓமென்ற அவ்வட்சரமே பரப்பிரம்மமாம். அதுவே வுபாசிக்கற்பாலதாம். அதுவே சூக்குமாஷ்டாட்சரமாம். அதுவே எண்வகையாய் விரிக்கப்பட்ட வஷ்டாட்சரமாகும். அகரம் முதலெழுத்தாம், உகர மிரண்டாமெழுத்தாம், மகரம் மூன்றாமெழுத்தாம், பிந்து நான்காமெழுத்தாம், நாத மைந்தாமெழுத்தாம், கலை யாறுமெழுத்தாம், கலாதீத மேழாமெழுத்தாம், அதனப்புறமுள்ள தெட்டாமெழுத்து தாரணஞ் செய்வதினால் தாரகமெனப்படும். அத்தாரகமே பரப்ரம்மமென்றறி. அதுவே யுபாசிக்கற்பாலது.

ப்ரச்நோபநிஷத் ரு-ரு.

𑌸 𑌯𑌦𑍍𑌯𑍇𑌕𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌭𑌿𑌧𑍍𑌯𑌾𑌯𑍀𑌤 𑌸 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌸𑌂𑌵𑍇𑌦𑌿𑌤𑌸𑍍𑌤𑍂𑌰𑍍𑌣𑌮𑍇𑌵 𑌜𑌗𑌤𑍍𑌯𑌾𑌮𑌭𑌿𑌸𑌮𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌮𑍃𑌚𑍋 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑌮𑍁𑌪𑌨𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌪𑌸𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑍇𑌣 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑍋 𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑌨𑍁𑌭𑌵𑌤𑌿 ॥

(இ - ள்.) பிரணவ உபாஸகன் அந்த ஒரு மாத்திரையுடைய பிரணவத்தைத் தியானஞ் செய்வானேயானால் அப்படிப்பட்டவன் அவ்வுபாசனையினாலேயே சத்தைப் பெற்றவனாய் அப்போதே பூமியில் சிரேஷ்டனாகிறான். அந்தப் புருஷனை இருக்குகள் மநுஷ்ய லோகத்திற் சேர்ப்பிக்கின்றன. அப்படி மநுஷ்ய லோகத்தை யடைந்த புருஷன் தபத்தினாலும் பிர்ம்மசர்ய விரதமாகிய ஸ்ரீ சங்கமற் றிருப்பதினாலும் சிரத்தையாலும் விளங்கினவனாய் மகிமையை அநுபவிக்கிறான்.

வசிஷ்டஸ்மிருதி.

𑌅𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌣𑌮𑍂𑌲𑍇 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 𑌤𑌾𑌰𑌕𑌂 𑌬𑍍𑌰𑍂𑌤𑍇 𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑌾 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 ॥

(இ - ள்.) அவிமுக்தம் என்ற மகாக்ஷேத்திரத்தில் சன்னிதானம் செய்யும் பரமேச்சுரன் (அங்கு மரிப்பவர்களின்) காதடியில் தாரகமாகிய பிரணவத்தை யுபதேசிக்கின்றார். வேறெங்கும் அவ்விதங் கிடையாது.

அஷ்டாங்கம் சதுஷ்பாதம் த்ரிஸ்தானம் பஞ்சதைவதம் |
ஓங்காரம் யோநஜாநாதி ந ஸவை ப்ராஹ்மணோ பவேத் ||

(இ - ள்.) எட்டங்கங்களு (ஜீவேசுர சரீரங்களு) ம், நான்கு பாதங்களு (வித்தை யவித்தை ஆனந்த துரியபாதங்களு) ம், மூன்று (புருவமையம், கண்டம், மார்பென்கிற) ஸ்தானங்களும், ஐந்து தேவதைகளு (பிர்ம்மா விஷ்ணு ருத்திர மகேசுர சதாசிவர்களு)ம் கூடிய ஓங்காரத்தை யாதொருவன அறியவில்லையோ அவன பிராமணனுகான்.

திருமந்திரம்.

ஓமெனு மோங்காரத் துள்ளே யொருமொழி
போமெனு மோங்காரத் துள்ளே யுருவரு
வோமெனு மோங்காரத் துள்ளே பலபேத
மோமெனு மோங்கார மொண்முத்தி சித்தியே.

பிரமகீதை.

தீம ரங்தொறு மடைந்தழி வுறுது தெரிவா
காமை நின்றரணி யாலவடிவு காணு மதுபோ
லாமு டம்பிலழி வினறி மறைகின்ற வமல
ஞெமெ னும்பொரு ளுணர்ந்திட வுடம்பில் வெளியாம்.

ஞானவாசிஷ்டம்.

ஓங்குஞ் சின்மாத் திரப்பொருளா மோங்கா ரததை யுண்ணினைந்து, தூங்குந் தியான பரனுகித தொடர்சங்கற்ப மெல்லாம் போய், வாங்குந் தொழிலே டணையைய மனன ஞான ஞேய மிவை, தாங்கு ஞாதா வனைத்துமறத் தனிசசித் திரம்போ னேடிருந்தான்.

சூதசங்கிதை.

அத்தகு பிரண வந்தா னனைத்தினும் விசேட மான
வுத்தம மென்ப ராலவ் வோமெனு மாக்க லத்தாற்
பித்தமார் பாச பந்தப் பெருங்கடல் கடக்க லாகு
மொத்தமற் றதற்கு ரைக்கு மருத்தமு முரைப்பக் கேண்மின்.

அயிந்துவிட் காமி யஞ்செ யறிவர னெவனெ னுஞ்சிர்
செறிந்தசன் னியாசி யொப்பான் றிகழ்தரு பரம வஞ்ச
னறந்திகழ் வேத சார மாம்பிர ணவமே யன்றி
மறந்துமவே றுள்ள தாமோர் மனுச்செபித் திடல்கூ டாதால்.

பிரணவந் தினம்பன் னிராயிர மெண்ணினும் பிரணவத் தோடு
மைந் தெழுத்தைக், கரணவொற் றுமையி னத்தொகை தினமுங்
கணிக்கினுஞ் சதவுருத் திரிய, மரணுறத் தினமுஞ் செபிக்கினு
மரண வந்தத்தின் ஞானமுற் றுயர்நஞ், சரணபங் கயத்தி னொன்
றலா மீது தகுபரி சுத்தருக் கேயாம்.

விளாஞ்சோலைப்பிள்ளை ஸப்தகாதை.

தீங்கேது மில்லாத் தேசிகன்றன் சிந்தைக்கு
பாங்காக நேரே பரிவுடையோ—ரோங்காரத்
தேரின்மே லேறிச் செழுங்கதிரி னூடேபோய்ச்
சேருவரே யந்தாமந் தான்.

சுத்தசாதகம்.

அகவிருண் மாயை கருமமிம் மூன்று மகற்றியே சுத்தங்க
மாக்கித்,தகவிறுத் திடுதல் கையதா மப்பாற் றன்னுயி ராகியே நிக
ழும், சுகசிவ வுதய மாக்குத் றியாஞ் சொற்றிடு தீக்கையி னருத்
தம், செகமிதி லவையிற் பாவனை கடந்து செய்தங்கு நிறுத்த
வல் லவராய்,

பிரணவ வமுதே புசித்தனு தினமும் பிரணவ மயமதே யாகி,
மரணம துறுமிம் மனிதரைப் போல வடிவமாத் திரமதே தோன்
றிப், புரணநல் லொளிக்கு மாயைக்கு நடுவே புகுந்திருந் திலங்கு
நற் குருவைச், சரணென வடைந்திங் கவனரு ளாலே தரிக்கப்
பெற் றங்கத்தி லிங்கம்.

பதிபசுபாசவிளக்கம்.

காமமா திகளை நீத்துக் கரணவா தனைகடந்து
நாமது வெனுஞ்சம் பந்த ஞானமே ஞான மாகி
யோமொழிப் பொருளைத் தேறி யுணருண ராமை போக்கி
யாமைபோ லைந்த டக்கி நிற்பதே யமல யோகம்.

நிர்க்குணபிரம சிந்தனை.

நாமரூப மின்றியதாகச் சச்சிதானந்த வடிவ தனதெதார்த்த
வடிவத்தை விஷயவாசனை லேசமுமின்றிச் சதா சிந்தித்துக்

கொண்டிருத்தல் நிர்க்குண பிரம சிந்தனையாம். இவ்வாறு இடைவிடாது சிந்தித்திருப்பவன் எட்டறிவு மிறையறிவுமின்றித் தன்னிலே தானா யயர்ந்துவிடு நிலையைப் பெற்று அதன் வழியிலாக மோக்ஷமடைவன்.

### வாராஹோபநிஷத்.

[illegible]

(இ - ள்.) ஒருவஸ்து எக்காலத்தும் பலவத்துவாக மாட்டாது. அகண்டமா (இடைவிடாததா) யிருக்கிறேனாகையால் என்னைத்தவிர வேறே யாதொன்றுமில்லை. எதேது காணப்படுகிறதோ, எதெது கேட்கப்படுகிறதோ அவையெல்லாம் பிர்ம்மத்தைவிட்டு வேறாயிருக்கவில்லை. நித்தியமாயும் சுத்தமாயும் விமுக்தமாயும் ஏகமாயும அகண்டானந்தமாயும் அத்துவயமாயும் சத்தியமாயும் ஞானமாயும் அநந்தமாயுமுள்ள பரப்பிர்ம்மமெதுவோ அதுவே நானாகவிருக்கிறேன், நான் ஆனந்தரூபன், அகண்டஞானமுள்ளவன், சர்வசிரேஷ்டன், பிரகாசவான், சித்தனன். ஆகாசத்தை மேகம் எப்படி தொடுகிறதில்லையோ அப்படியே சம்சாரதுக்கங்கள் என்னைத் தொடமாட்டா. துக்கநாசத்தினால் சகலமும் சுகமென்றும் அசத்து நசிப்பதினால் சகலமுஞ் சத்ரூபமென்றும் அறி. சித்ரூபந்தான் தோற்றப்பட்ட பிரபஞ்சத்தோடு கூடியது. ஆனபடியினால் என் ரூபமானது அகண்டமானது.

### அந்நபூர்ணோபநிஷத்.

[illegible]

𑌰𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑌮𑌂 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑌿 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 । 𑌦𑌿𑌕𑍍𑌕𑌾𑌲𑌾𑌦𑍍𑌯𑌨𑌵𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌂 𑌸𑍍𑌵𑌚𑍍𑌛𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌦𑌿𑌤𑌂 𑌤𑌤𑌮𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌮𑌯𑌮𑍇𑌕𑌾𑌰𑍍𑌥𑌂 𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌯𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥ 𑌨 𑌬𑌦𑍍𑌧𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌰𑌾𑌮𑌯𑌃 । 𑌦𑍍𑌵𑍈𑌤𑌭𑌾𑌵𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 । 𑌏𑌵𑌂 𑌭𑌾𑌵𑌯 𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌜𑍀𑌵𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌸𑌿 ॥

(இ - ள்.) சின்மாத்திரமாயு மழிவற்றதாயும் சாந்தமாயுமிருக்கிற பிர்ம்மமே நான்; வேறல்ல. சகலமும் பிர்ம்மமேயென்று பாவனைசெய்கிற புருஷன் பிரம்மமே. ஒன்றானதாயும் ஆதியந்தியமற்றதாயும் சின்மாத்திரமாயும் சுத்தமாயும்வியாபித்ததாயும் ஆகாசத்தைவிட மிகவுஞ் சூட்சமமாயுமிருக்கிற அந்தப்பிர்மம் நானாயிருக்கிறேன். ஸம்சயமில்லை. திக்குக்கால முதலியவைகளாற் பகுக்கப்படாததாயும் சுத்தமாயும் எப்போதும் பிரகாசசுவரூபமாயும் எங்கும் நிறைந்ததாயும் ஸகலார்த்த சுவரூபமாயும் ஒரே அர்த்தமாயும் சின்மாத்திரமாயும் அழுக்கற்றவனும் ஆகக்கடவாய். நான் பத்தனுமல்ல; முக்தனுமல்ல; துன்பமற்றதாகிய பிரம்மமாயிருக்கிறேன். (நான்) இரண்டாவதென்கிற பாவனையற்றவன்; ஸச்சிதாநந்த லக்ஷணனுயிருக்கிறேனென்று பிரயத்தினத்தினாற் பாவனைசெய். ஜீவன்முக்தனுவாய்.

ரிபுகீதை.

ஆதலினாற் கனவிலுமே பிரமத் துக்கிங் கன்னியமா யணுவேனு முள்ள தென்னும், பேதமுறும் புந்தியினைத் தூரத் தள்ளிப் பிரமமெலா மதுவேநா னென தென்றே, சாதகமா முறுதியினைத் திடப்பவடுத்திச் சந்ததமும் பாவித்துச் சலன மின்றி, யாதிமுடிவொன்று மிலா வகண்டா கார யநுபூதி யடைந்தந்த மயமேயாவாய்.

அகிலமுமாம் பரப்பிரம சொரூபமேநா னறிவுருவாம் பரப்பிரம சொரூப மேநான், சகலமிலாப் பரப்பிரம சொரூப மேநான் சாந்தமதாம் பரப்பிரம சொரூப மேநா, னிகரிலதாம் பரப்பிரம சொரூப மேநா னீக்கமிலாப் பரப்பிரம சொரூப மேநா, னிகழ்விலதாம் பரப்பிரம சொரூப நானென் றெப்போது மிடையறவே சிந்தை செய்வாய்.

சத்தியமாம் பரப்பிரம சொரூப மேநான் சலன மிலாப் பரப்பிரம சொரூப மேநா, னித்திய மாம் பரப்பிர சொரூப மேநா

னிரஞ்சனமாம் பரப்பிரம சொரூப மேநான், சுத்தமதாம் பரப்பிரம சொரூப மேநான் சுககனமாம் பரப்பிரம சொரூப மேநா, னத்துவித பரப்பிரம சொரூப நானேனென் றழுத்தமுட னகவுரதஞ் சிந்தை செய்வாய்.

புராதனமாம் பரப்பிரம சொரூப மேநான் பூரணமாம் பரப்பிரம சொரூப மேநான், சராசரமில் பரப்பிரம சொரூப மேநான் சாசுவத பரப்பிரம சொரூப மேநான், பராற்பரமாய் பரப்பிரம சொரூப மேநான் பாசமிலாப் பரப்பிரம சொரூப மேநா,னிராமய மாம் பரப்பிரம நானேயென்று நிச்சலமாய் நீயென்றுஞ் சிந்தை செய்வாய்.

அகிலமுமே பிரமமென்று மதுநா னென்று மகண்டபர பாவனையே யிங்கு ரைத்த,மகிமைமிகுந் திடமான நிச்சயங்காண் மற்றந்த நிச்சயமே பழகா நின்றோ, ரிகன்மனதின் விகற்பமெலா மிகந்தெப் போது மேகபர வடிவாகி யின்பஞ் சார்வர், பகர்வதிலோ ரணுவேனு மைய மில்லை பகர்ந்தபடி கேட்டுணர்வோன் பரமே யாவன்.

## ௩௨ - வது சம்வாதம்.

அரிஹரர் தம்முள் அபேத ரேன்பது.

சி: சுவாமி! தாங்கள் ஏகாக்கிர சித்தமுண்டாகிறதற்குக் கூறிய ஏதுக்கள்பலவற்றுள்அஷ்டாக்ஷரமும் பஞ்சாட்சரமும்அமைந்திருக்கின்றன. அஷ்டாக்ஷரம் விஷ்ணுவிற் குரிய மந்திரமாயும் பஞ்சாட்சரம் சிவனுக்குரிய மந்திரமாயும் இருத்தலால் இவற்றினால் மனமொருமை யுண்டாமென்பது சந்தேகமாயிருக்கிறது. இவ்விருமந்திரங்களுக்கும் தாங்கள் கூறிய பொருள், கருத்து வகையினால் ஒன்றாயிருக்கின்றதை நோக்குந்தோறும் சிவனென்னும் பெயரும் விஷ்ணு என்னும் பெயரும் ஒரு பொருளுக்கே யுரியனவாயுள்ளனவென்று தோன்றுதலால் சிவன் பெரியவரென்றும் விஷ்ணு பெரியவரென்றும் சைவவைஷ்ணவர்கள் சண்டை பிடித்து மல்லாடி நிற்பதற்குக் காரணமியாது? இதனைத் தேவரீர் விளக்கியருளல் வேண்டும்.

கு: மனம் அந்தர்முகப்பட் டொருமையடைதற்கு ஒன்றே கால்லட்சம் சாதனங்கள் மகரிஷிகளால் சாஸ்திரங்களில் சொல்

லப்பட்டிருக்கின்றன.அவற்றுள்முக்கியமான சில சாதனங்களையே யாம் கூறினும். ஒவ்வொரு சாதனமும் பயனற்றதன்று. யாருக்கு எச்சாதனத்தில் பிரியமிருக்கின்றதோ அவர் அச்சாதனத்தை மேற்கொண்டொழுகலாம். அதுவது அவரவரது சித்தபரிபாகத் திற்கேற்றவாறு உசிதமாகத்தோன்றும். மனவொருமைக் கேதுவாய எச்சாதனத்தையும் பழித்துக்கூறல் கூடாது.மற்றவைபோல் அஷ்டாக்ஷர பஞ்சாக்ஷரங்கள் தம்முள் தாரதம்மிய முடையனவன்று. அஷ்டாக்ஷரமந்திர ஜெபத்தினுலுண்டாகும் பயனெதுவோ அது பஞ்சாட்சர மந்திரஜெபத்தினுலுமுண்டாகும்.பஞ்சாட்சரஜெபத்தினுலுண்டாகும் பயனெதுவோ அஃதஷ்டாக்ஷரஜெபத்தினுலுமுண்டாகும். இவ்விரண்டு மந்திரமும் கருத்து வகையில் ஒன்றேயாம். அவற்றின் பொருளும் ஒன்றேயாம். சிவனென்னுஞ் சொல்லுக்குப் பொருள் மங்களகரமா யிருப்பவனென்றும், விஷ்ணுவென்னும் சொல்லுக்குப்பொருள் வியாபகமா யிருப்பவனென்றுமிருத்தல் பற்றி மயங்குதல் கூடாது. மங்களகரமாயும் வியாபகமாயுமிருத்தலே கடவுளுக்குரிய இலக்கணமாயிருத்தலால், மங்களகரமான கடவுள் வேறு வியாபகமான கடவுள் வேறு என்று கூறுதல் புத்திப்பிரமமன்றி வேறொன்று மன்று. இக்கருத்தினை யறியாது சிலர் அவிவேகத்தினுலே ஓயாது மதக்கலக்கமுண்டாக்கித் திரிவர். சிலர் மதக்கலக்க முண்டாக்கி யேமாந்த வேழைகளிடம் ஒன்றிருக்க வொன்று கூறிப் பொருள்பறித்தலையே உத்தியோகமாகக்கொண்டு வேறுத்தியோகமின்றியு மிருக்கின்றனர். இத்தகைய புன்மதிகள் ஒருகாலும் ஜனங்களுக்குச் சற்புத்தியுண்டாகும் மார்க்கத்தைக் கூறுகின்றாரில்லை; ஆனால், கைலாயத்திருந்தும் வைகுண்டத்திருந்தும் முறையே சிவ விஷ்ணுக்களிடத்து நேரே யுத்திரவுபெற்றுக்கொண்டு வந்தவர்கள் போன்று சைவதூஷணமும் வைஷ்ணவதூஷணமும் செய்து கேட்கும் சாதாரண ஜனங்களுக்குத் துவேஷத்தை யுண்டாக்கி யூரை யிரண்டுபடச்செய்து ஒற்றுமையைக் கெடுத்து அலங்கோலப்படுத்திப் பொருள் பறிப்பதில் வெகு சமர்த்தரா யிருக்கிறார்கள். இப்பேதையரது பேச்சைக் கேட்டு நம்பினுல் கெடுதியே வரும்.

சி: அங்ஙனமாயின், புராணங்களிலும் சிவவிஷ்ணுக்களுக்கு ஏற்றக்குறைவு பரஸ்பரம் கூறியிருத்தற்குக் காரணமென்ன?

கு: "புராணமிதி காசமெவை யும்பொரு ளனைத்தின், பிராணனறி யாதுள விடத்திவை பிதற்றே" என்று பெரியார் கூறியவாறு

புராணாதிகளின் கருத்துவகை யறியாதார்க்குத்தா மிங்ஙனமாய முரண்தோன்றுமே யன்றி நல்லாசிரியரை யடுத்துப் படித்துள்ள வருக்குப் புராணங்களில் சிவவிஷ்ணுகளுக்குப் பரஸ்பரம் உயர்வு தாழ்வு ஒருகாலுந் தோன்றமாட்டா. இதுபற்றி மகான். சாதுநிச் சல தாஸென்னும் புண்ணியர் விசாரசாகரம் ஏழாம் தரங்கத்தில் விரிவாயெழுதியிருக்கிறார். அதனைப் படித்தாலுனக்கு இதுபற்றி யாதொரு சந்தேகமும் நிகழாது.

சி: தேவரீரதனை யீண்டுக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

(மொழிபெயர்ப்பு.)

கு: "சகல புராணங்களின் கர்த்தா வியாசர் ஒருவரே. அவர் ஸ்கந்த புராணத்திற் சிவனுக்கு ஸ்வதந்திராதி ஈசுவர தர்மங்க ளுண்டெனச் சொல்லி யிருக்கிறார். மற்றத் தேவதைகளுக்குச் சிவ கிருபையால் எல்லா விபூதிகளுங் கிடைக்கிறதாகச் சொல்லியிருக் கிறார். ஆகையால், இவர்களுக்கு ஜீவதர்மஞ்சொல்லப்பட்டது. அப் படியே விஷ்ணுபுராண பத்மபுராணங்களில் விஷ்ணுவுக்கு ஈசுவர த்துவஞ் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வாறே சிலரைப் புராணங் களிலும் சிலரை உபபுராணங்களிலுமாக விஷ்ணு சிவன் என்பவர் களுக்கு வேறான கணேசாதி தேவதைகளுக்கு ஈசுவரத்துவஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதத்தால் வியாசர் வாக்கியத்தில் விரோதம் காணப்படுகிறது.

அதற்குச்சமாதானமிதுவாம்:—எல்லோரும் ஈசுவரர்கள்தாம். எந்தப்பிரகரணத்தில் பிறதெய்வம் நிந்திக்கப்பட்டிருக்கிதோ அத ன் நிந்தையால் அதன் உபாஸனையை விடுதலில் வியாசருக்கு அபிப் பிராயமில்லை. ஆனால், வைஷ்ணவ புராணத்திற் சிவாதிதேவதைக ளின் நிந்தை விஷ்ணுவின்ஸ்துதியினால் விஷ்ணு வுபாஸனையிற் பிர விருத்தித்தற்கு ஹேதுவாம். அவ்வாறே சிவபுராணத்திற் செய்த விஷ்ணுவாதிகளின் நிந்தையும் அவற்றின் உபாஸனைகளை விட்டு விட வேண்டுமென்னுங் கருத்தன்று. ஆனால், அந்நிந்தை சிவ உபாஸனையிற் பிரவிருத்தி யுண்டாகும் பொருட்டேயாம். ஒரு பிரகரணத்தில் பிறதேவதையின் நிந்தை அதன் உபாஸனையைத் தள்ளுவதற்கா யிருக்கும்பக்ஷத்தில் எல்லாத் தேவதைகளி னுபா ஸனைகளையுந் தள்ளும்படி நேரிடும். ஆகையால், அன்னியதேவ தையின்நிந்தை ஒன்றனது ஸ்துதியின் பொருட்டாம்; மற்றதி னுபாஸனையை விட்டுவிடுவதற்காக வன்று.

திருஷ்டாந்தம்:—வேதத்தில் அக்கினி ஹோத்திரத்துக்கு இரண்டு காலங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒன்று சூரியோதயத்துக்கு முன்னும் மற்றொன்று சூரியோதயத்திற்குப் பின்னுமாம். அங்கு முற்காலப் பிரசங்கத்தில் பிற்காலம் நிந்திக்கப்பட்டிருக்கிறது. பிற்காலப் பிரசங்கத்தில் முற்காலம் நிந்திக்கப்பட்டிருக்கிறது. அங்கு அக்கினி ஹோத்திரத்தை விட்டுவிட வேண்டுமென்னும் அபிப்பிராயம் நிந்தைக் கிருக்குமாயின், இவ்விரண்டு காலங்களிலும் ஹோமத்தை விட்டுவிடும்படி நேரிடும். நித்திய கருமத்தைவிடுதல் பொருந்தாது. ஆகையால், முற்காலத்தினது ஸ்துதியின்பொருட்டுப்பிற்காலநிந்தையும் பிற்கால ஸ்துதியின்பொருட்டு முற்கால நிந்தையும் செய்யப்பட்டிருக்கின்றன. அதுபோல், ஒரு தெய்வத்தி னுபாஸனைப் பிரசங்கத்தில் பிறதேவதையின் நிந்தைக்குத் தாற்பரியம் அத்தெய்வத்தின் றுதியிலாம்; பிறதெய்வத்தின் நிந்தையிலன்று.

சாகாபேதத்தால் சிலர் உதயத்துக்குமுன் ஹோமஞ்செய்கிறார்கள்; சிலர் உதயத்துக்குப்பின் செய்கிறார்கள். இருவருக்கும் பலன் ஒன்று. அதுபோல் இச்சாபேதத்தால் ஐந்து தேவதைகளுக்குள் எதை யுபாஸித்தாலும் ஐந்து பாஸனைகளாலும் பிரஹ்மலோகமே யடையப்படும். அவ்விடத்தில் போகங்கள் அநுபவிக்கப்பட்டு விதேகமோக்ஷம் சித்திக்கிறது. விஷ்ணு முதலிய தேவதைகளி னுபாஸனையால் வைகுண்டாதி லோகங்கள் அடையப்படுமென்று புராணங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது; பிரஹ்மலோகம் அடையப்படுவதாய்ச் சொல்லப்படவில்லை. என்றாலும், உத்தம உபாஸகர்கள் விதேகமுத்திக்கு அதிகாரிகளா யிருப்பதால் தேவயான மார்க்கமாக எல்லோரும் பிரஹ்மலோகத்திற்கே போகிறார்கள். ஆனால், ஒரே பிரஹ்மலோகம் விஷ்ணுவுபாஸகனுக்கு வைகுண்ட ரூபமாயும் அங்குள்ளவர்கள் சதுர்புஜங்களோடு கூடினவர்களாயும் பிரதீதியாகிறார்கள். தானுஞ் சதுர்புஜனாகவே யாகிறான். அப்படியே சிவோபாஸகனுக்குப் பிரஹ்மலோகமே சிவலோகமாகவும் அங்குள்ளோர் திரிநேத்திர ஸ்வரூபிகளாகவும் பிரதீதியாகிறது. தன்னையும் அப்படியே காண்கிறான். இவ்விதமாக எல்லாவுபாஸகர்களுக்கும் பிரஹ்மலோகமே தமது உபாஸ்யத்தின் லோகமாகக் காணப்படுகிறது. ஏனெனின், இது நியமமாம்:—தேவயானமார்க்கமின்றி வேறு மார்க்கத்தாற் போகிறவன் மறுபடி

யும் சம்ஸாரத்திற்கு வருகிறான். தேவயான மார்க்கமொன்றே பிரஹ்மலோகத்துக்குப் போவதாம். ஆகையால் விதேகமோக்ஷத்திற்கு யோக்கியர்களான உபாஸகர்களெல்லாரும் பிரஹ்மலோகத்துக்குப் போகிறார்கள். அந்தப் பிரமலோகத்தில், உபாஸகனுடைய இச்சானுசாரமாகச் சகல சாமக்கிரியைகளுடன் கூடியதாக அப்பிரஹ்மலோகமே உபாஸகனுக்குப் பிரதீதியாகும்படியான இத்தன்மைய அற்புதமகிமையுடைத்தாயிருக்கிறது. இவ்விதத்தால் ஐந்துதேவதைகளின் உபாஸனைகளுக்கும் பலமொன்றே.

சங்கை:—ஐந்து தேவதைகளுக்கு நாமரூபங்கள் வெவ்வேறாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஈசுவரனோ ஒருவன். ஒரு ஈசுவரனுக்கு நானாரூபங்கள் சம்பவியா.

சமாதானம்:—பரமார்த்தமாக நாமரூபங்கள் எவையும் பரமாத்மாவினிடத்தில்லை. மந்தபுத்தி யுள்ளவர்களது உபாஸனையின் பொருட்டு நாமரூபரகித பரமாத்மாவிற்கு மாயையினலாக்கப்பட்ட கற்பித நாமரூபங்கள் சொல்லப்படுகின்றன. ஆகையால் ஒரே பரமாத்மாவினிடத்தில் மாயையாற் கற்பிக்கப்பட்ட நாமரூபங்கள் அநேகம் பொருந்துகின்றன. இவ்விதத்தால் சர்வ புராண வாக்கியங்களின்விரோதமும் நிவிர்த்தியாய் விடுகிறது.

புராண வாக்கியங்களின் விரோத சங்கைக்கு முக்கிய சமாதானம் இதுவாம்:—விஷ்ணு சிவன் கணேசன் தேவி சூரியன் முதலிய ஒவ்வொரு நாமமும் காரண பிரஹ்மத்தினதாம். காரிய பிரஹ்மத்துக்கும் இந்நாமங்களுண்டு. மாயாவிசிஷ்ட காரணத்தைப் பிரஹ்மமென்கிறார்கள். காரியமான ஹிரண்ய கர்ப்பத்தையும் பிரஹ்மமென்கிறார்கள். இவ்விதமாகக் காரண பிரஹ்மத்தையும் காரியப் பிரமத்தையும் விஷ்ணு சிவன் முதலிய பதங்கள் அறிவிக்கின்றன. இப்படியே இவ்வைந்து பதங்களுக்கும் நாரீயணன் நீலகண்டன் விக்கினேசன் சக்தி பானு முதலிய அநேகப் பிரதிபதங்களுண்டு. அவையாவும் காரணகாரியப் பிரஹ்மங்களிரண்டையும் போதிக்கின்றன. சிலவிடத்துக் காரணப்பிரஹ்மத்தையும் சிலவிடத்துக் காரியபிரஹ்மத்தையும் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி போதிக்கின்றன. திருஷ்டாந்தம்:—ஸைந்தவபதம் குதிரையையும் உப்பையும் அறிவிக்கிறது. போஜன சந்தர்ப்பத்தில் உப்பையும் நடை சந்தர்ப்பத்தில் குதிரையும் அறிவிக்கிறது. அதுபோல், வைஷ்ணவபுராணத்தில் விஷ்ணு நாராயணன் முதலிய

பதங்கள் காரணப்பிரஹ்மத்தையும் சிவன் கணேசன் முதலிய பதங்கள் காரியப்பிரஹ்மத்தையும் போதிக்கின்றன.

1—ஆதலால் வைஷ்ணவநூல்களில் விஷ்ணு ஸ்துதிக்கும் சிவாதிகளின் நிந்தைக்கும் வியாஸர் அபிப்பிராயம் இதுவாம்:— காரணப்பிரஹ்மம் உபாசிக்கத்தக்கது; காரியப்பிரஹ்மம் உபாஸிக்கத்தக்கதன்று.

2—ஸ்கந்தபுராணாதி சைவநூல்களில் சிவன் மகேசன் முதலிய பதங்கள் காரணப்பிரஹ்மத்தையும் விஷ்ணு கணேசன் தேவி சூரியன் முதலியபதங்கள் காரியப்பிரஹ்மத்தையும் போதிக்கின்றன. ஆகையால், இந்தப் புராணங்களிலும் காரணப்பிரஹ்மத்தின் ஸ்துதியும் காரியப்பிரஹ்மத்தின் நிந்தையும் இருக்கின்றன.

3—அப்படியே கணேசபுராணத்தில் கணேசபதம் காரணபிரஹ்மத்துக்கும் விஷ்ணு சிவன்முதலிய பதங்கள் காரியப்பிரஹ்மத்துக்கும் வாசகங்களாயின. ஆகையால், காரணத்தின் ஸ்துதியும் காரியத்தின் நிந்தையும் இருக்கினறன.

4—அப்படியே காளிபுராணத்தில் காளிதேவிமுதலிய பதங்கள் காரணப்பிரஹ்மத்தையும் விஷ்ணு சிவன் சூரியன் முதலிய பதங்கள் காரியப்பிரஹ்மத்தையும் போதிக்கின்றன. ஆகையால், காரணத்தின் ஸ்துதியும் காரியத்தின் நிந்தையு மிருக்கின்றன.

5-இப்படியே ஸௌரபுராணத்தில் சூரியன் பானுமுதலிய பதங்களால் காரணப்பிரஹ்மமும் விஷ்ணு சிவன் முதலிய பதங்களால் காரியப்பிரஹ்மமும் போதிக்கப்படுகின்றன. ஆகையால், காரணப்பிரஹ்மத்தின் ஸ்துதியும் காரியப்பிரமத்தின் நிந்தையுமிருக்கின்றன.

இவ்விதமாகச் சகல புராணங்களிலும் காரியகாரணங்களின் பெயர் வடிவு சங்கேதபேத மிருக்கிறது. எடுத்துக்கொள்ளும்படியாயும் தள்ளும்படியாயு மிருக்கிற அர்த்தத்தில் பேதமில்லை. சகல புராணங்களிலும் காரணப்பிரஹ்மத்தினுபாஸனை எடுத்துக்கொள்ளத்தக்கது. காரியப்பிரஹ்மத்தினுபாஸனை தள்ளத்தக்கது. ஆகையால், சகல புராணங்களும் ஒரே காரணப்பிரஹ்மத்தி னுபாஸனையைப் போதிக்கின்றன. இவற்றிற்குத் தம்மில் விரோதமில்லை.

சதுர்ப்புஜ திரிநேத்திர ஸுண்டமூர்த்தி அஷ்டபுஜமூர்த்தி முதலியவை மாயையின பரிணாமமாயும் சேதனத்தின் விவர்த்த

மாயும் இருப்பதால் காரியங்களா யிருக்கின்றன; அவற்றினுபாசனையுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. அங்ஙனமாயினும் அந்தச் சதுர்புஜாதி மூர்த்திகளின் மாயாவிசிஷ்டகாரணத்தை விசாரித்து பார்க்குமளவில் யாதொரு பேதமுமில்லை. ஆகையால், அவ்வாகாரங்களைப் பாதித்துக் காரணரூபத்தால் அவற்றை உபாசிப்பதில் கருத்தாம். ஏனெனின், ஆகாரம் காரியம். ஆகையால், அது துச்சமாம். காரணம் சத்தியமாம்; எவனுடைய மந்தப் பிரஞ்ஞை ஆகாரத்திலேயே ஸ்திரமாயிருக்கிறதோ அவன் சாஸ்திரத்திற் சொல்லிய ஆகாரத்தையே உபாஸிக்கவேண்டியது. அதனாலும் பிரஞ்ஞை நிச்சலமாகிக் காரணப்பிரஹ்மத்தினுபாஸனையில் ஸ்திரப்படுகிறது.

காரணப்பிரஹ்ம உபாஸனை இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது:—பிரஹ்மம் ஜகத்தின்காரணமாம். சத்தியகாமன், சத்தியசங்கற்பன், சர்வஞ்ஞன், சுதந்திரன், சர்வபிரேரகன், கிருபாளு என்று இப்படி ஈசுவரதர்மங்களைத் தியானிக்கவேண்டும். மூர்த்தியைத் தியானிக்கவேண்டுமென்பது சாஸ்திரத்தின் கருத்தன்று. சாஸ்திரத்தில் அநேகமூர்த்திகளைப்பற்றிச் சொல்லியது உபாஸனையின் பொருட்டன்று. ஆனால் எல்லா மூர்த்திகளும் காரணப்பிரஹ்மத்தினுபலக்ஷணங்களே.

எந்தவஸ்து எதன் ஏகதேசத்திலும் ஏககாலத்திலும் வியாவர்த்தகமாயுமிருக்கிறதோ அஃது உபலக்ஷண மெனப்படும்.

"காக முட்கார்ந்திருப்பது தேவதத்தன்வீடு" என்னும் வாக்கியத்தில் தேவதத்தன் வீட்டுக்குக் காகம் உபலக்ஷணமாயிருக்கிறது. ஏனெனின் வீட்டின் ஒருபக்கத்திலும் எப்போதாவது ஒருகாலத்திலும் காகம் உட்காருகிறது; எப்போதும் உட்காருகிறதில்லை. மற்றக் கிரகங்களினின்றும் தேவதத்தனது கிரகத்தை வேறுபிரித்தறிவிப்பதாம். அதுபோல் ஜகத்தின்காரணம் பிரஹ்மம். அதன் ஏகதேசத்தில் எப்போதாவது மூர்த்தியிருக்கிறது. சதுர்ப்புஜாதி மூர்த்திகள் காரணப்பிரஹ்மத்திலேயே இருக்கின்றன; வேறிடத்தில் இல்லை. ஆகையால், வியாவர்த்தங்களா யிருத்தலால் உபலக்ஷணங்களா யிருக்கின்றன.

உபலக்ஷணத்தின் பிரயோஜனம் இதுவாம்:—விசேஷிய வஸ்துவினது ஸ்வரூபத்தின் ஞானமுண்டாம். எப்படி காகத்தால் தேவதத்தன்வீடு அறியப்படுகின்றதோ வேறு பிரயோஜனமில்

லேயோ அப்படியே சதுர்ப்புஜாதி ஆகாரங்களால் நிராகார மான காரணப்பிரஹ்மத்தின் ஞானமே உபாஸனையின்பொருட்டு மூர்த்தியைச் சொல்லுதலின் பிரயோஜனமாம்; வேறில்லை.

மந்தப்பிரஞ்ஞையுள்ளவர்கள் சாஸ்திரத்தின் கருத்தை யறியாமல் அந்த ஆகாரங்களில் ஆக்கிரகஞ் செய்கிறார்கள். சியால ஸாரமேயநியாயத்தால் பரஸ்பரம் கலகஞ் செய்கிறார்கள்.

மனைவியின் சகோதரனைச் சியாலனென்பர். நாயினை ஸார மேயமென்பர். திருஷ்டாந்தத்தினை நியாயமென்பர். ஒருவனுடைய சியாலனுக்குப் பெயர் உத்பாலகன். அவன் விரோதியின் பெயர் தாவகன். அப்புருடன் வீட்டிலிருந்த நாய்க்குப் பெயர் தாவகன். மற்றொருவன் வீட்டிலிருந்த நாய்க்குப் பெயர் உத்பாலகன். அங்கு அப்புருஷனுடைய ஸ்திரீ முதல்முதல் வந்தாள். அப்போது இரண்டு நாய்களும் தம்மில் எப்போதும் சண்டையிட்டுக்கொள்ளும். அங்கு அந்த ஸ்திரீயின் பதி மாமியார் முதலியோர் உத்பாலகனை வைது தமது தாவகனைப் பெருமைப்படுத்துவார்கள். அப்போது அந்தஸ்திரீக்கு என் சகோதரனை வைது அவன் சத்துருவைப் பெருமைப்படுத்துகிறார்கள் என்னும் மயக்க முண்டாயிற்று. அதனால் தூஷிக்கப்பட்டவளாய்க் கணவனோடு பிணங்கினாள். எப்படி அவாகளது அபிப்பிராயத்தை யறியாமல் சமமானபெயராற் பிரமித்து ஸ்திரி துக்கித்தாள் அப்படி வைஷ்ணவ கிரந்தத்தில் சிவன் முதலிய பெயர்களால் காரியப்பிரமம் நிந்திக்கப்பட்டிருக்கிறதென்னும் அபிப்பிராயத்தை யறியாமல் சைவர் முதலியோர் துக்கிக்கின்றனர். அப்படியே விஷ்ணுநாமத்தால் காரியப்பிரஹ்மம் நிந்திக்கப்பட்டிருக்கிறதென்பதை யறியாமல் வைஷ்ணவர்கள் துக்கிக்கிறார்கள். சகலபுராணங்களுக்கும் அபிப்பிராயம் யாதெனின், காரணப்பிரஹ்ம்மம் உபாசிக்கத்தக்கது. காரியப்பிரஹ்மம் தள்ளத்தக்கதென்பதாம்.

மாயாவிசிஷ்ட சேதனம் காரணப்பிரஹ்மமாம்; மாயையாலுண்டான காரியவிசிஷ்ட சேதனம காரியப்பிரஹ்மமாம். இவ்வர்த்தமே பாரதவியாக்கியானத்தின் ஆரம்பத்தி லெழுதப்பட்டிருக்கிறது. சகல வேதாந்தங்களின் சித்தாந்தமு மிதுவே" என்பதாம்.

சி: அங்ஙனமாயின், வேதாந்த சித்வசிரோமணியாயும் அதமனுடே சிஷ்டாராபராயும் விளங்கிய அப்பையதீட்சிதர் முதலிய மகா

ன்கள் விஷ்ணுவை யிழித்தும் சிவனை யுயர்த்தியும் கூறியிருத்தற்குக் காரணமென்னை?

கு. சிலர் நாராயண வுபாசனை செய்து அத்வைத ஞானத்தை யடையமுயலாமல், நாராயணவுபாசனையைமாத்திரம் மேற்கொண்டு சிவனையிழித்துக் கூறிப் பேதமதத்தில் பிரவேசிப்பதைக் கண்டு அவர்கள் பேதமதத்திற் பிரவேசித்துக் கெட்டுப் போகாதவாறு சிவனுக்குயர்வும் விஷ்ணுவிற்கிழிவும் அத்வைத ஞானத்தையடைதற்குச் சாதனமாகக் கூறினார்களாதலால் அதில் யாதும் பிசகின்று. அப்பெரியார்கள் கருத்துவகையறியாது கூறினரல்லர். கருத்துவகையறிந்து பயன்பற்றிச் சிவவிஷ்ணுகளுக்குத் தாரதம்மியங்கூறியருளிய பெரியார்களை ஒன்று மறியாது வீண்சண்டையிட்டவமானமடையும் புன்மதியினர்கள் அப்பெரியார்களையும் தம்மோடுகூட்டிப் பேசிக் களியாட்டயர்வர். சிலர் அப்புன்மதியினரது பயனற்ற வார்த்தைகளைக்கேட்டு மனக்கலக்கமடைந்து துவேஷபுத்திகொண்டு திரிவது அவரது பாவத்தின் பயனேயாம்.

சி: சிவ விஷ்ணுக்கள் தம்முள் வேறுபட்டவரல்ல ரென்பதற்குரிய பிரமாணங்களை யீண்டெடுத்துக் கூறுமாறு பிரார்த்திக்கின்றனன்.

கு: கீழ்வருவனவே.

ஸ்கந்தோபநிஷத்.

ஶிவாய விஷ்ணுரூபாய ஶிவரூபாய விஷ்ணவே | ஶிவஸ்ய ஹ்ருதயம் விஷ்ணுர்விஷ்ணோஶ்ச ஹ்ருதயம் ஶிவ꞉ || யதா ஶிவமயோ விஷ்ணுரேவம் விஷ்ணுமய꞉ ஶிவ꞉ | யதாऽந்தரம் ந பஶ்யாமி ததா மே ஸ்வஸ்திராயுஷி | யதாऽந்தரம் ந பேதோऽஸ்தி ஶிவகேஶவயோஸ்ததா ||

(இ-ள்.) விஷ்ணுரூபமாயிருக்கின்ற சிவன்பொருட்டும் சிவரூபமாயிருக்கிற விஷ்ணுவின்பொருட்டும் (நமஸ்காரம). சிவனுடைய ஹிருதயமே விஷ்ணு. விஷ்ணுவினுடைய ஹிருதயமே சிவன், எப்படி யிவ்விருவர்களுக்குட் பேதத்தை நான் காணவில்லையோ அதனாலெனக்கு ஆயுட் காலத்திற் சுபமுண்டாகட்டும். சிவகேசவர்களுக்குட் பேதங்கிடையாது.

சிவபுராணம் ஞானஸம்ஹிதை.

ஐஶ்வர்யம் ஹரஸ்யைவ ததைஶ்வர்யம் கேஶவஸ்ய ந꞉ || த்ருவ யோரந்தரம் நைவ ஹ்ருஷ்ணாந்த்ரம் விசாரத꞉ || வஸ்துகே

[illegible]

(இ-ள்.) (சிவனானவர் விஷ்ணுவைப் பார்த்துச் சொல்வது) ஓ! புருஷோத்தமா! நீரென்றுந் தியானிக்கத் தக்கவராகவே யிருக்கிறீர். நானுமும்மாற் றியானிக்கத்தக்கவனாகவே யிருக்கிறேன். நம்மிருவர்கட்குள் பேதமென்பதணுமாத்திரமுமின்று. வஸ்துவின் தன்மை அனேகமென்று பிரவிர்த்தியுள்ளவனுக்குங்கூட விசாரித்தறிவதினாலே அப்படியேதான் (பேதமின்றென்றறிவான்). எந்த மனிதன் என் பக்தனாகவிருந்தும் உம்மை நிந்திக்கிறானோ அவனுடைய சகல புண்ணியங்களையும் மிச்சமின்றிச் சாம்பலாக்கி அந்தத் தோஷத்தினா லவனை நரகத்திற் றள்ளி விடுகிறேன்.

### பிரும்ம புராணம்.

[illegible]

(இ-ள்.) மார்க்கண்டேயர் சொல்லுகிறார்:—புண்ணியத்தைக் கொடுக்கத்தக்கதாயும்பரிசுத்தமானதாயுமிருக்கிற சிரேஷ்டமான விந்தப் புருஷோத்தம (விஷ்ணு)க்ஷேத்திரத்தில், ஓ தேவா! உத்தமமாயும் மஹிமைபொருந்தியதாயுமிருக்கிறசிவாலயப்பிரதிஷ்டை செய்கிறேன். உம்முடைய தானமாகிய வந்தவிடத்தில் சங்கரனைக் கிரமப்படி பிரதிஷ்டைசெய்கிறேன். அதனாலிந்தவுலகத்தில் ஹரி சங்கரர்களை ஒரேமூர்த்தியென் றறிவார்கள். ஜனார்த்தனனைவர் அந்தமஹாமுனியைப்பார்த்துப் பதில்சொல்லுகிறார்: ஓ! பிராம

ஞோத்தமா! சிவனைப்பிரதிஷ்டைசெய்வதினுலென்னைப்பிரதிஷ்டை செய்ததாகவாகிறது. எங்களிருவர்களுக்குள் அற்பமேனும்வேற்றுமையில்லை. ஒரேவஸ்துவானது இரண்டாகச் சொல்லப்பட்டிருக்கிறது. யார் உருத்திரனே அவர் தான் விஷ்ணு. யார் விஷ்ணுவோ அவர் தான மஹேசுவரன். எங்களிருவருக்குள் ஆகாசம் வாயு இவைகள்போல் வேற்றுமையென்பது கிடையாது. கருடத்துவஜனுகிய விஷ்ணு யாரோ அவர் ருஷபத்துவஜனுகிய உருத்திராயிருக்கிறுர். திரிபுரத்தை யெரித்தவர் யாரோ அவர் திருவிக்கிரமன. அஞ்ஞானிகளிப்படி யறிகிறதில்லை.

பத்துமபுராணம்.

யொஹிரோ விஷ்ணு ரேவ்ருக்ஷ ஜெவம்வாவி ரெஹஶ்வரு |
வணக்ஷாவெந வஶ்ய்ந்தி நஷேகஷாம் வுநாவஷ்வ:||

(இ-ள்) காணக்கூடாதவரும் பிரகாச சுவரூபியுமான இந்த விஷ்ணுவையும் மகேசுரவனையும் யார் ஒரே ரூபியாய்ப் பார்க்கிறுரோ அவர்க்கு மறுபிறப்பில்லை.

உதிவாக்ஶ்ரும் வஶகண்ய ரெஹஶவஶ்ய ரவாஶதஶ:| உவாவயிரயாவாணஹா க்ருவயா வஶணுமொஷநஃ|| ரோவஷி ஹ்ருதெயெ ஶவெஷா ஹவதொ ஹ்ருதயெகவஹம் | குவயொரஹாம் நாவஷி ஶேஷா: வஶ்ய்ந்தி துவிஷய:|| யெஹெதம் விதயதஶா குவயொ ரெகரஶவெயொ: | கும்ஷிவாகெஷு வஶ்யெ நராக வஹஶ்ரகம்|| யெகவுதகா வஷாதஉவம்வெ தகா யஶவம்யுதா: | தகா குவிஹஶயவ்ா ஹக்ருதவந்திம் கரா:||

(இ - ள்.) மஹேசுவாருடைய இந்த வார்த்தையைக்கேட்டு இரகுகுல சிரேஷ்டரான இராமர் கிருபையினுல் மலர்ந்த கண்களுடன் கெம்பீரமாய் வாத்தை சொலலுகிறுா. ஓ! சிவனே! உன்னுடைய ஹிருதயத்தில் நீரிருக்கிறீர். உமமுடைய ஹிருதயத்தில் நானுமிருக்கிறேன். நமமிருவருக்குட் பேதமில்லை. துர்புத்தியுள்ள மூடர்கள் நம்மைப் பேதமாய்ப் பார்க்கிறுர்கள். ஓரே ரூபமாயுள்ள நம்மிருவருக்குள்ளே எவர்கள் பேதத்தைக் கற்பிக்கின்றுர்களோ அவர்கள் ஆயிரங் கற்பகாலங் கும்பீபாகமென்னும் நரகத்திலேயே கவைக்கப்படுகிறுர்கள். யாரெப்போது மும்முடைய பக்தர்களோ

தருமத்தோடு கூடிய அவர்களென்னுடைய பக்தர்கள்தாம். என்னுடைய பக்தர்களும் மிகவும் பக்தியினாலுமக்கு வணக்கமுள்ளவர்களா யிருப்பார்கள்.

வாமநபுராணம்.

[illegible]

(இ - ள்.) இப்படிசொன்ன மஹேசுவரரைப் பார்த்துக் கணங்கள் சொல்லுகிறார்கள்:—ஞானத்திலே பரிசுத்தராயும் சுத்தஸ்படிகம்போற் பிரகாசிக்கிறவராயும் சாந்தராயும் வெண்மையுள்ளவராயும் களங்கமற்றவராயு மிருக்கிற நீரும், மைபோற் கருமைநிறமா யிருக்கிற ஹரியு மொன்றாயிருந்த தெப்படிகூடும்? இவ்விதமாய்க் கேட்ட கணங்களுடைய வாக்கியார்த்தத்தை ஜீமூதகேதனரான பகவான் கேட்டுச் சிரித்துக்கொண்டு கணங்களைப்பார்த்து மேககர்ஜனைபோற் கம்பீரமான வார்த்தை சொல்லுகின்றார்:—உங்களுக்குக் கீர்த்தி விருத்தியாகும்படியான வாக்கியத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். நீங்களோ விசேஷஞானத்திற் கெப்போதும் யோக்கியர்களல்லாதவர்களல்ல, எது என்னுடைய மனதிலெப்போது மிவ்விதமாய்ப் பிரீதியோடு கூடியிருக்கிறதோ இதனாலும் உங்களுடைய அபவாதத்திற்குப் பயந்தும்

இரகசியமானது வெளியிடப்படுகிறது. நீங்கள் எவ்விடத்தில் (என்னிடத்தில் அல்லது விஷ்ணுவினிடத்தில்) ஆசிரயித்திருந்தாலும் (எங்களை) ஒரே ரூபமாயு மொரேதேகமாயும் பாவிக்கவேண்டும். பிரயத்தினத்தினாலே சந்தனம் பால்முதலிய, சிரேஷ்ட வஸ்துக்களால் அபிஷேகஞ்செய்வது அந்நம் முதலியவைகளை நிவேதநஞ்செய்வது இவைகளினு லதைப்போல (ஏகரூபமாய்ப்பாவனைசெய்வதைப்போல) எனக்குப் பிரீதியுண்டாகிறதில்லை. யத்நத்தினாற் கத்தியை எடுத்துக்கொண்டு என்தேகத்தைவெட்டுங்கள். அப்படி வெட்டிப்பார்த்தாலுங்கூட அழிவற்ற விஷ்ணுவானவர் என்னுடைய தேகத்திற் காணப்படுவார். யாரை நீங்கள் நிந்தித்தீர்களோ அவர் (அந்தவிஷ்ணு) ஜகத்திற்கு நாதராயுஞ் செந்தாமரைக்கண்ணராயு மென் சுவரூபமாயு மிருக்கிறார். எப்போது மெங்கும் வியாபித்தவராயுங் கணங்களுக்கெல்லா மீசுரனுயும் ஸகல சுவரூபியாயு மிருக்கிற பகவானவரே. அவருக்குச் சமானமாக ஸ்தாவர ஜங்கமங்க ளடங்கிய விந்த ஜகத்தி லொருவருமில்லை.

கூர்மபுராணம்.

இன்னபுரி நாரணனை யெந்தைமுக நோக்கி
யுன்னுருவ மென்னுருவ மென்னுருவு நீயே
பின்னமிலை யென்றுதமு வப்பெரிது மாயன்
றன்னிகரி லீசனுரு விற்றனி கரந்தான்.

புன்மொழி வியற்றிழி குலப்புலைய ரேனு
நன்றறிவு கல்விபொறை ஞானமில ரேனு
மன்றல்கம ழுந்துளவ மாலையெனை யுள்ளத்
தொன்றென நினைந்தவர் தமைக்கதியி னுய்ப்பேம்.

பாரதம்.

மருவரு கானக மலரினுலைமைப்
பொருவரு பூசனை புரிதி யையநீ
யிருவரு மொருவரே யென்ப தின்றுபோ
யருவரை யவனடி யடைந்து காண்டியால்.

கண்ணனன்மே லணிமல ரிணைத்துங் காயெரி
வண்ணனன்மேற் காண்டனு மகிழ்ந்துமேதினி
யுண்ணுமா தவன்சிவ னுருவ மென்றுணர்ந்
தண்ணலு முடல்புள கரும்பி னனரோ.

## ௩௩ - வது சம்வர்தம்.

அயனரியுருத்திராபேதரேயெனல்.

சி:—சுவாமி! இவ்விருவரும் தம்முளபேதராயின் சிருஷ்டி கர்த்தாவாய பிரமன் இவர்களுக்கு வேறுபட்டவரோ?

கு:—அவரும் வேறுபட்டவரல்லர்.

சி:—அங்ஙனமாயின் திரிமூர்த்திகளும் தம்மு ளபேதரென்பதற்குப் பிரமாணமென்னை?

கு:—கீழ்வருவனவே.

உருத்திர ஹ்ருதயோபநிஷத்.

யே நமஸ்யந்தி கோவிந்தம் தே நமஸ்யந்தி ஶங்கரம்| யேऽர்சயந்தி ஹரிம் பக்த்யா தேऽர்சயந்தி வ்ருஷத்வஜம்|| யே த்விஷந்தி விரூபாக்ஷம் தே த்விஷந்தி ஜநார்தநம்| யே ருத்ரம் நாபிஜாநந்தி தே ந ஜாநந்தி கேஶவம்|| கார்யம் விஷ்ணு: க்ரியா ப்ரஹ்மா காரணம் து மஹேஶ்வர:|| ப்ரயோஜநார்த்தம் ருத்ரேண மூர்த்திரேகா த்ரிதா க்ருதா ||

(இ-ள்.) கோவிந்தனை யார் வந்தநஞ் செய்கிறார்களோ அவர்கள் சங்கரனை வந்தனஞ் செய்தவர்களாகிறார்கள். யார் ஹரியைப் பக்தியோடு பூஜிக்கிறார்களோ அவர்கள் விருஷபத்துவஜனை (சிவனை)ப்பூஜித்தவர்களாகிறார்கள். யார்விருஷபத்துவஜனை தவேஷிக்கிறார்களோ அவர்கள் ஜநார்த்தனனைத் துவேஷித்தவர்களாகிறார்கள். யார் உருத்திரனை யறியவில்லையோ அவர்கள் கேசவனையுமறியவில்லை. உலகப் பிரயோசனத்தின் பொருட்டு ஒரே சுவரூபமான உருத்திரரானவர் காரிய சுவரூபமான விஷ்ணுவாகவும், கிரியாசுவரூபமான பிரும்மாவாகவும், காரணசுவரூபமான மகேசுவரனாகவும் மூன்றுவிதமா யிருக்கிறார்.

பத்மபுராணம்.

ஶ்ரீபகவாநுவாச|| த்ரயாணாமபி தேவாநாம் பேதம் நாஸ்தி ஶோபநே| ப்ரஹ்மா ஸ்ருஷ்டிக்ருதோ யேந ஶங்கரோ வரவாரநநே| தேநாஸ்ருஷ்டிக்ருதா நித்யம் நாத்ரகார்யா விசாரணா| ஸைகைவ மூர்த்திர் நித்யம் வாணி த்ரிதைவாஹு ||

(இ - ள்.) விஷ்ணு சொல்லுகின்றார்:—ஓ! சோபனே! இம்மூன்று தேவதைகளுக்குள்ளே பேதமானது கிடையாது. ஓ! சுமுகி! எவனுலே பிரும்மாவாவது சங்கரராவது செவ்வையாய்ப்

பூஜிக்கப்படுகிறார்களோ அவனாலே நானெப்போதும் பூஜிக்கப் பட்டவனாயிருக்கிறேன். இவ்விஷயத்திற்சந்தேகமில்லை. இந்தப்பிரும்மா சங்கரா இவர்களென்னைக் காட்டிலும் எப்போதும் வேறல்லாதவர்களே. மூன்று ரூபமாயும நானே யிருக்கிறேன்.

[illegible]

(இ-ள்.) (விஷ்ணுவைப்பார்த்துச் சிவன் சொல்லுகிறார்) ஸாக்ஷாத புருஷனாகிய நீரொருவரே பிரகிருதிக் கப்புறப்பட்டவ ரென்றுசொல்லப்படுகிறீர். உமமுடைய அம்சமாகிறகலையினாலே நீர இவ்வுலகத்தைச சிருஷ்டிக்கிறீர்; இரக்ஷிக்கிறீர்; அழிக்கிறீர். உருவமற்றவராகிய நீர இந்த ஸகல ஜகத்திற்கும் காரணராயும் சிரேஷ்டராயுமிருக்கிறீர். மாயையுடன்கூடி மூன்றுவிதமானரூபத்தைக்கிரஹிக்கிறீர். (அவையாவன) சிருஷ்டியில் நீர் பிரும்மாவினுடைய ரூபத்தைக்கிரஹிக்கின்றீர். இரக்ஷணையில் நீர் தானே பிரகாசிக்கின்றீர். ஜகத்தினுடைய பிரளயத்தில் ஸாக்ஷாத் நீரே ஸர்வனென்கிற நாமகவாகின்றீர்.

பிருஹந்நாரதீயபுராணம்.

[illegible]

(இ-ள்) ஹரி சங்கரர் பிருமமா இவர்களுக்குட் பேதத்தை யெந்தமனிதனெண்ணுகிறானோ அவன சந்திராதித்தர்களுள்ள வரையில் நரகத்தையநுபவிக்கிறான். சங்கரனையும ஹரியையும் பிருமமாவையும் ஒரேரூபமா யெவனறிகிறானோ அவன் பிரும்மானந்தத்தை யடைகிறான். இதுதான் சாஸதிரங்களின் நிச்சயம்.

வராகபுராணம்

[illegible]

த்ரய்யாம் | யோ பேதம் குருதே ஹ்யேஷாம் த்ரயாணாம் த்விஜஸ த்தம: | ஸ பாபகாரீ துஷ்டாத்மா துர்கதிம் ஸமவாப்னுயாத் ||

(இ-ள்.) உருத்திரர் சொல்லுகிறார்:—யார் விஷ்ணுவோ அவரே பிரும்மா, யார் பிரும்மாவோ அவரே மஹேசுவரரென்று மூன்று வேதங்களினாலேயும் யக்ஞவிதிகளினாலேயும் வித்துவான்களினாலேயும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. எந்தப் பிராம்மணனானவனெங்கள் மூவருக்குட் பேதத்தை யெண்ணுகிறானோ அவன் பாபத்தைச் செய்கிறவனாயுந் துர்ப்புத்தியுள்ளவனாயு மிருக்கிறான். இப்படிப்பட்டவன் துர்க்கதியை யடைகிறான்.

### கூர்மபுராணம்.

கமலப் பொருட்டுப் புத்தேளும் காயா மேனித் திருமாலு
மமிழ்தென் கடலின் விடநுகர்ந்த தேவு மொருவ ரீங்கிவரி
லமைவுற் றொருவர் தமைப்பூசை யன்பிற் புரியி னொருமூவர் [ர்.
தமைமுற் றுணர்ந்து வழுத்துவோர் பெறுபே றதனிற் சார்குவா

### திருமந்திரம்.

ஆதிப் பிரானு மணிமணி வண்ணனு
மாதிக் கமலத் தலர்மிசை யாயனுஞ்
சோதிக்கின் மூன்றுந் தொடர்ச்சியி லொன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின் றார்களே.

சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
வாதிக்கு ளாவ தறிகிலா தார்க
ணீதிக்க ணீச னெடுமா லயனென்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றாரே.

பரத்தி லொன்றாயுள் ளாய்ப்புற மாகி
வரத்தினுண் மாயவ னாபய னாகித்
தரத்தினுட் டான்பல தன்மய னாகிக்
கரத்தினு ணின்று கழிவுசெய் தானே.

### திருவாய்மொழி.

உணர்ந்துணர்ந் திழிந்தகன் றுயர்ந்துரு வியந்தவிந் நிலைமை, யுணர்ந்துணர்ந் துணரினு மிறைநிலை யுணர்வரி துயிர்காள், ருணர்ந் துணர்ந துரைத்துரைத் தரியய னரனென்னு மிவரை, யுணர்ந்து ணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்ட தொன்றே.

ஒன்றெனப் புலவென வறிவரும் வடிவினு ளின்ற
நன்றெழி ஞாண ஞன்முக னரனென்று மிவரை
ஒன்றறும் மனத்துவைத் துள்ளிறும் மிருபசை யறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே.

கைவல்லியநவநீதம்.

என்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனுய் மாலாய்
ஆன்றவீ சனுமாய்த் தானே யநந்தமூர்த் தியுமாய் நிற்கும்
மூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனுய் நாளும்
தோன்றிய விமலபோத சொரூபத்தைப் பணிகின் றேனே.

---

## ௩௪-வது சம்வாதம்.

---

வாசியை மடக்கினும் மனமழியாதெனல்.

சி: தேவரீரருளியவற்றுள் ஒவ்வொன்றும் மனேலயமாவதற் கேதுவாயிருப்பினும் அஜபாகாயத்திரிஜபமே மனேலயமாவதற்கு அடுத்தகாரணமா யிருப்பதாகத் தோன்றுவதால் அதனை விரித்துரைக்குமாறு வேண்டுகின்றனன்.

கு: யோகியே அஜபாகாயத்திரி ஜபத்துக்கு உரியவனுவன். இயமநியமங்களுடன் ஆசனசித்தியடைந்த புருஷன் பிராணுயாமஞ் செய்தற்குரியவனுகின்றுன். பிராணவாயுவைத் தடுத்தல்தான்பிராணுயாமமெனப்படும். வாயுவினசைவுள்ளபோது சித்தத்தினசைவும் வாயுவினசைவில்லாதபோது சித்தத்தி னசைவில்லாமையு மிருத்தல் நியமமாயிருத்தலால், மனேவிருத்தியின்மையை விரும்புகிறவன் பிராணுமஞ் செய்யவிரும்புகிறுன். பிராணவாயுவைத் தடுத்தலென்னும் பிராணுயாமம் பூரகம், கும்பகம், இரேசகம் என மூவகைப்பட்டிருக்கும். பதுமாசனத்திருக்கும் யோகியானவன் பிராணவாயுவைச் சந்திரனென்னும் இடைகலையாற் பூரித்துச் சக்திக்கியன்றவளவு கும்பித்துமறுபடியும் சூரியனென்னும் பிங்கலையால் இரேசிக்கவேண்டும். அவ்வாறு செய்யுமிடத்துச் சூரிய நாடியாகிய பிங்கலையால் பிராணவாயுவை யிழுத்து மெல்லமெல்ல வயிற்றைநிரப்பி, விதிப்படி பந்தபூர்வகமாகிய கும்பகஞ்செய்து, மறுபடியும் சந்திரநாடியாகிய இடைகலையால் இரேசிக்க வேண்டும்.

(1) முன்னர்ச் சந்திரநாடியினாலும் பின்னர்ச், சூரியநாடியினாலும் பிராணவாயுவை நிரப்புதல் பூரகமாம்.

(2) பூரித்த பிராணவாயுவை நிறுத்துதல் கும்பகமாம்.

(3) நிறுத்திய பிராணவாயுவைத் தைரியமாக விடுதல் இரேசகமாம். இதன் விசேடக்கிரமம் வருமாறு:—சந்திரன் அல்லது சூரியன் என்னும் எந்தநாடியினால் பிராணவாயு இரேசிக்கப்படுகின்றதோ அந்தநாடியினாலேயே பூரித்து, மிகுந்த நிரோதத்தால் (வேர்வை நடுக்கம் முதலானவை யுண்டாகும வரையில்) கும்பித்து, எந்த நாடியினால் பூரகம் செய்யப்பட்டதோ அதற்கன்னியமான நாடியினால் வேகமில்லாமல் மெல்ல இரேசிக்கவேண்டும். [மூக்கின் இடதுதுவாரத்தினால் வெளிவாயுவைப் பிரயத்தன பூர்வகமாக வுள்ளுக்கிழுத்தல் பூரகமென்றும், சுழுமுனையால் அதனை யடக்குதல் கும்பகமென்றும், மூக்கின் வலதுதுவாரத்தினால் அதனை விடுதல் இரேசகமென்றும் முக்கியமா யிங்கறிதல் வேண்டும்.]

பிராணாயாமஞ் செய்யும்போது வியர்வையுண்டானால் அது கனிஷ்டமென்றும், நடுக்கமுண்டானால் அது மத்தியமென்றும், பிரமரந்திர ஸ்தானத்தை யடைதலுண்டானால் அஃது உத்தமமென்றும் அறியத்தக்கனவாம்.

எண்வகைப்பிராணாயாமம்.

இப்பிராணாயாமம் எட்டுவகையா யிருக்கும். அவை வருமாறு:—

(1-2.) வாயு நாசிநுனிமுதல் சிரசுவரையிலும், சிரசுமுதல் இருதயம் வரையிலு மாகச்செல்லுதல் இருவகையுட் பூரகமாம்.

(3) அபானன் ஒடுங்கிப் பிராணன் இருதயத்தி லுண்டாகா திருக்கும் பூரணாவஸ்தை உட்கும்பகமாம்.

(4) இருதயத்தினின்றும் பிராணன் தோற்றுவதற்கு வாயு வெளி நோக்குதல் (சிரசுபரியந்தம் செல்லுதல்) உள் இரேசகமாம்.

(5-6.) வாயு சிரசுமுதல் நாசிநுனிவரையிலும், நாசிநுனி முதல் வெளியிற் பன்னிரண்டங்குலம்வரையிலு மாகச்செல்லுதல் இருவகைப் புறப்பூரகமாம்.

(7) பிராணன் ஒடுங்கி அபானன் துவாதசாந்தத்திலுண்டாகாதிருக்கும் பூரணாவஸ்தை புறக்கும்பகமாம்.

(8) வெளியிலிருந்தும் அபானன் தோற்றுவதற்கு வாயு உள்நோக்குதல் புற இரேசகமாம்.

இஃது இன்னும் பலவகைப்பட்டிருக்கும்; ஆயினும், யாவும் அகர்ப்பம் சகர்ப்பம் என்னும் இருவகைப் பிராணாயாமத்தின்கண் அந்தர்ப்பவிக்கும்.

(1) பிரணவத்தின் உச்சாரணமின்றிய பிராணாயாமம் அகர்ப்பமாம்.

(2) பிரணவத்தின் உச்சாரணத்தோடு கூடிய பிராணாயாமம் சகர்ப்பமாம்.

பிரணவத்தின் உச்சாரணத்தோடு கூடிய பிராணாயாமந்தான் முன்னர்க்கூறிய அஜபாகாயத்திரிமந்திரஜபமாம்.

ஸோஹம் என்னும் மந்திரத்தைத் தியானித்தல் ஸோபாதிகத்தியான மென்றும், ஸகரத்தையும் ஹகரத்தையும் நீக்கி ஓம் என்னும் மந்திரத்தைத் தியானித்தல் நிருபாதிகத்தியான மென்றும் சொல்லப்படும்.

இப்பிராணாயாமத்தால் மனம் இலகுவில் இலயப்படுவதாயிருத்தலால் இஃதத்தியாவசியம் செய்யத்தக்கதேயாம். ஆயினும், இஃதப்பியசித்தற் கதிகாரி துறவியே யாவன். மனம் அடிக்கடி விஷயாகாரப்பட்டு, அடங்காது போமிடத்தே இஃதப்பியசிக்கப் படுகின்றது.

சி: மனோலய முண்டாவதற்குப் பிராணாயாமமே பெருங்கருவியாயிருத்தலால் அஃதொன்றையே அப்பியசித்தால் போதாதோ?

கு: போதாது.

சி: அதனை விளக்கல் வேண்டும்.

கு: பிராணவாயுவைத் தடுத்தலாலே மனோலயமுண்டாவது உண்மையே யாயினும் அதனால் அஃதழியாது. பிராணவாயுவைத் தடுக்காதபோது மனம்விஷயாகாரப்பட்டுவிரிந்தோடுவதால்ஈதறியப்படும். பிராணாயாம வாயிலாக மனோலயஞ் சம்பாதித்தல் அதிகாரிவாயிலாகத் திருடனைக் கட்டிவைப்பதுபோலாம். கட்டில் நீங்கிய திருடன் பிறர்பொருள்களை யபகரிக்க விரைந்து செல்வது போன்று தடையொழிந்த மனமும் விரைந்து விஷயங்களை நாடியோடுகின்றது. இதனால் மனோநாசத்திற்குக் காரணமே கேவலம்

பிராணாயாம மன்றென்பது நன்குவிளங்கும். காமக்குரோதாதி விருத்திகளுக்கு மூலகாரணமாயிருப்பது மனதாம். அது சத்துவம் இரசசு தமசு என்னு முக்குணத்துடனிருப்பினும் ஒருகுணம் அதிகரித்தெழுந்தபோது மற்றிரண்டு குணமு மடங்கினதாயிருக்கும். அம்மூன்று குணங்களும் சமுத்திரத்தி னலைபோன்று மனத்தினின்று நிரந்தரம் பரிணாமமடைந்தேவரும். சத்துவகுண மதிகரிக்கும்போது தெய்வசம்பத்தும், இராசோகுண மதிகரிக்கும்போது லோகவாசனை தேகவாசனை சாஸ்திரவாசனையும், தமோகுண மதிகரிக்கும்போது அசுரசம்பத்து முண்டாகும். மனம் சூக்குமன்னாயுவின் சத்துவகுணத்தினின்றும் உண்டானதா யிருத்தலால் அதனது நிரமான வடிவம் சத்துவகுணமேயாம். மற்றை யிரண்டுகுணங்களும சகாயமாக நடுவே வந்து பொருந்தினவாயிருத்தலால் அக்குணங்களொழிய மனத்தின் இயற்கையுருவமான சத்துவகுணமே அதிகரித் தெழுமாறு ஒருவன் இடைவிடாது அப்பியாசஞ்செய்வானாயின், விஷயபரிணாமத்திற் கேதுவாய தமோகுணமும் சலனத்திற்கேதுவாய இராசோகுணமும சொரூபங்கெட்டொழியும். "சத்தமாஞ் சத்துவமே யுண்மையாகும் தூகளிருள் போனால் மனமென் சொல்லும் போம் போம்." [தூகள்-இராசோகுணம், இருள்-தமோகுணம்.] என்று பெரியோரருளியபடி இராஜோகுணமும் தமோகுணமும் கெடவொழிந்தவிடத்து மனமென்பதேயின்றும்.

"தனது சன்மார்க்கத்தை விடாதிருந்தபோது தமோகுணமும் ரஜோகுணமும் சமிக்கும்" என்றபடி சன்மார்க்கமான தெய்வசம்பத்தால் இரஜோகுணத்தையும் தமோகுணத்தையும்போக்குப்போது சத்துவகுணமே அந்தக்கரணத்தின் வடிவமாக மிஞ்சும்; அச்சத்துவகுணமும் சலனத்திற் கேதுவாய இரஜோகுண மில்லாமையினல் ஒருமுகப்பட்டதாயும் மயக்கத்திறை கற்பிக்கப்பட்ட அநான்மவடிவ பதார்த்தங்களின் ஆகாரமாதற் கேதுவாய தமோகுணமில்லாமையினலே சூட்சுமமாயும் ஆன்மதரிசனத்திற்குத் தகுதியானதாயு மிருக்கும். இங்குக் கூறியமனோநாசம் கேவலம் பிராணாயாமத்தினு லுண்டாகின்ற தில்லை. மனோநாசத்தை விரும்புகின்றவன் ஒருகாலும் பிராணாயாமஞ் செய்யமாட்டான். பிராணாயாமம் மோக்ஷத்திற்கு நேர்சாதனமு மன்றும். மேலும், மனத்தை ஆத்மஞானத்தினால் கெடுக்காது பிராணாயாமத்தினால் அடக்க அஃது

டங்கிக்கிடத்தல் பிறவிக் குருடனாகிய வேறொருவன் விஷத்தினை யுண்டு குடிபோன வூரிலுள்ள வோர்பாழ்ங்கிணற்றில் வெடிப்பா சற்று விழுந்து கிடந்ததினும் கேடாயிருத்தலால் அதனால் பெரும் பயனின்றென்க.

சி: "உயிர்த்தலைக்கே பெருகவுடைத்தா மியோகப்பேய" என்று வாசிஷ்டங் கூறுவதால் பிராணாயாமமே யோகமென்றா யிற்று "யோகியர்க்கே ஞானமொழுங்காம்" என்றபடி யோகம் ஞானத்தை யுண்டாக்குவதற்கு அடுத்த சாதனமா யிருத்த லால் அதனைத் தாங்களிழித்துக்கூறுவ தென்னை?

கு: பிராணாயாமம் கேவலம் மூச்சைப் பிடிப்பதாயிருத்த லால் அதனை யெவ்வாறாயினும்? மனோலயத்திற்குப் பிராணாயாமங் கா ரணமாயிருப்பினும் மனோநாசத்திற்கு அது காரணமாகாமையின் அதனை விட்டு மனோநாசத்திற்குரிய மேற்சாதனத்தை அப்பிய சிப்பதே முமுட்சுக்களுக்குச் சிறந்ததாம். கிரியையை நோக்கச் சரியை யும் யோகத்தை நோக்கக் கிரியையும் இழிந்ததா யிருப்பது போன்று யோகமும் ஞானத்தை நோக்க இழிந்ததாயிருக்கிறது. கேவலம் யோகத்தையே பெரும்பயனாக வெண்ணி மேற்செல்லாது இருப்பவர் நிமித்தம் அதையிழித்துக் கூறப்படுகின்றதென்று மின் கறிதல் வேண்டும். மேலும்,

"யோகியர்க்கே ஞானமொழுங்காம்" என்றருளிய தாயு மான சுவாமிகளே "மந்தமாருத குழுகிற் குலமென்ன நின்றிலகு வாயிலுடன் மதிபகடுதோய், மாடகூடச் சிகர மொய்த்தசந் திராகா ந்த மணிமேடை யுச்சிமீது, முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு முற்றமுற் றாய்க்குலாவி, யோகத்திருந்துமென் யோ கத்தி னிலைநின்று மூச்சைப் பிடித்தடைத்துக், கைத்தல நகைப் படை விரித்தபுலி சிங்கமொடு காடுநூழை நாடுகொண்ட, கான மலையுச்சியிற் குகையூடிருந்துமென்" என்று யோகத்தைப் பழித் துக்கூறிச் "கரதலாமலகமென்னச் சத்தமற மோனநிலை பெற்றவ ராகளுய்வர் காண், ஜனகாதி துணிவிதன்றே" என்று உய்தற்கு ரிய நிலை மோனநிலையென்று விளக்கியிருத்தலினாலும் யோகத்தி னிழிவு நன்கு விளங்கும். ஆதலால், கழைக்கூத்தர் மூச்சைப் பிடிப் பதுபோன்ற பிராணாயாமத்தால் பயனெழியாதாகலின், அஃதகமு க்யாதற்குரிய சாதனத்தையே அப்பியசிக்கவேண்டும். அப்பியசி க்கும்போது இயம நியமாதிகளின் சூக்ஷுமார்த்தங்களை யறிந்தே அப்பியசிக்க வேண்டும்.

சி: இயமநியமாதிகளின் ஞானார்த்தங்களை யனுகிரகிக்கும்படி பிரார்த்திக்கின்றனன்.

கு: (1) சர்வம் பிரமமென்னும் ஞானத்தால் இந்திரிய சமூகத்தை யடக்குதல் இயமமாம்.

(2) சஜாதியப் (ஆத்மாகாரவிருத்தி) பிரவாகமும் விஜாதீய (அனாத்மாகாரவிருத்தி) திரஸ்காரமும் நியமமாம்.

(3) எதனிடத்து இடைவிடாத பிரமசிந்தனம் சுகமாகவே யுண்டாகுமோ அஃதாஸனமாம்.

(4) சித்தமுதலிய சர்வபாவங்(இருப்பு)களையும் பிரமத்தன்மையாகப் பாவித்தலாற் சகல விருத்திகளையும் நிரோதித்தலெதுவோ அது பிராணாயாமமாம்.

பிரபஞ்சத்தை நிஷேதித்தல் இரேசகமாம்; பிரமமேயானென்னும் விருத்தி பூரகமாம்; அதன்பின் அவ்விருத்தியின் நிச்சலத்தன்மை கும்பகமாம். [இவ்வாறு செய்யாது மூக்கைப் பிடித்திருத்தல் அவிவேகிகளின் கிரியையாம்.]

(5) விஷயங்களில் ஆன்மத்தன்மையை யறிந்து மனம் சேதனத்தில் அழுந்துதல் பிரத்தியாகாரமாம்.

(6) எங்கே யெங்கே மனம் செல்லுகின்றதோ அங்கே அங்கே பிரமத்தைக் காண்டலால் அதனை நிறுத்துதல் தாரணையாம்.

(7) பிரமமே யானென்னும் சத்விருத்தியினால் (வேறு பிரமாணங்களால் பொய்யென்று நிச்சயிக்கப்படாத விருத்தியினால்) நிராலம்பத் (சித்திரதீபத்) தன்மையாக நிற்றலெதுவோ அது பரமாநந்தத்தைத் தருவதாகிய தியானமாம்.

(8) நிர்விகாரத்தன்மையினால் மீண்டும் விருத்தியின் பிரமாகாரத்தன்மையாகச் செல்வனை (பிரபஞ்சவாசனை யின்றித்) தியேயாகார விருத்தி சூனியமாயிருத்தல் (துலைதாறு சந்தானமின்மை) சமாதியாம்.

இங்ஙனமன்றித் தேகேந்திரியாதிகளி லுண்டாகும் வைராக்கிய மியமமென்றும், பரமாத்துமாவின்கண் இடைவிடா துண்டாகு மன்பு நியமமென்றும், நாமரூபவஸ்துக்களிடத் தசட்டையாயிருத்தல் ஆசனமென்றும், நாமரூபவிஷய சகத்தை மித்தையாகக்காண்டல் பிராணாயாமமென்றும், சித்தத்தின் அந்தர்முகத் தன்மை பிரத்தியாகாரமென்றும், சித்தத்தின் நிச்சயத்தன்மை தார

ணையென்றும், சின்மாத்திரவடிவே நானென்று சிந்தித்திருத்தல் தியானமென்றும், அத்தியானம் நழுவிச் சின்மாத்திரவடிவாகவே யிலைத்தல் சமாதியென்றும் கூறுதலுமுண்டு.

சி: அவ்வாறாயின் யோகத்தை யிழித்துக்கூறும் பிரமாணங் களைக் கூறுமாறு வேண்டுகின்றனன்.

சி: கீழ்வருவனவே.

வராகோபநிஷத்.

த்ரிணாசிகாதி யோகாந்தா ஈஶ்வரப்ராந்திமாஶ்ரிதா: | லோகாயதாதி ஸாங்க்யாந்தா ஜீவவிப்ராந்திமாஶ்ரிதா: | தஸ்மான்முமுக்ஷுபிர்நைவ மதிர்ஜீவேஶவாதயோ: | கார்யா கிந்து ப்ரஹ்மதத்வம் நிஶ்சலேன விசார்யதாம் | அத்விதீய ப்ரஹ்மதத்வம் ந ஜானந்தி யதா ததா | ப்ராந்தா ஏவாகிலாஸ்தேஷாம் க்வ முக்தி: க்வேஹ வா ஸுகம் ||

(இ - ள்.) திருணசகம் (ஒரு விதயக்ஞம்) முதல் யோகம் வரையிலுள்ள கருமங்கள் ஈசுவரப் பிராந்தியை ஆசிரயித்தவைக ளாக விருக்கின்றன. லோகாயதம் முதல் சாங்கியம் வரையிலுள் ளவைகள் (மதங்கள்) ஜீவப்பிராந்தியை ஆசிரயித்தவைகளாக விருக்கின்றன. ஆனபடியினால் முமுக்ஷுக்கள் ஜீவேசவாதத் தில் புத்தியை ஒருபோதும் செலுத்துதல் தகாது. நிச்சலமா யிருந்துகொண்டு பிர்மதத்துவம் விசாரிக்கத்தகுந்தது. இரண் டாவதற்றதாகிய பிர்ம தத்துவத்தை எப்படியிருக்கிறதோ அப் படி அறியாதவர்க ளெல்லோரும் பிராந்தர்கள்தாம். அவர்களு க்குமுக்தியேது ? இவ்விடத்தி (பிரபஞ்சத்தி)ல் சுகமேது?

தேஜோபிந்தூபநிஷத்.

நிரோத: ஸர்வவ்ருத்தீனாம் ப்ராணாயாம: ஸ உச்யதே | நிஷேதனம் ப்ரபஞ்சஸ்ய ரேசகாக்ய: ஸமீரித: | ப்ரஹ்மைவாஸ்மீதி யா வ்ருத்தி: பூரகோ வாயுருச்யதே | ததஸ்தத்வ்ருத்திநைஶ்சல்யம் கும்பக: ப்ராணஸம்யம: | அயஞ்சாபி ப்ரபுத்தானாமஜ்ஞானாம் க்ராணபீடனம் ||

(இ-ள்.) சகல மனோவிருத்திகளையும் அடக்குதலே ஞானப்பிரா ணாயாமமென்றும், தேகாதிப் பிரபஞ்சங்கள் யானல்லவென்று

அந்தத் தேகாதிப்பிரபஞ்சவாசனைகளை விட்டுவிடுகிறதே ஞான ரேசகமென்றும், ஆத்மசொரூபனாகிய நானே பிரமமென்று நிச்சலமாய்த் தியானிப்பதே ஞானபூரகமென்றும், அப்படி நானே பிரமமென்கிற தியானமும் விட்டுச் சர்வசங்கற்பங்களும் நசித்துக் கேவலசொரூபமாய் நிற்பதே ஞான கும்பகமென்றும் சொல்லப்படும். அப்படியே ஞான கும்பகம் ஞான சாட்சாத்கார துரியசமாதியென்றுஞ் சொல்லப்படும். [கர்மப்பிராணாயாமங்களை ஞானிகளாநுசரிக்கார்கள்.]

ஹடயோகப் பிரதீபிகை.

ராஜயோக மஜாநந்த: கேவலம் ஹடகர்மண: |
ஏதாநப்யாஸிநோ மந்யே ப்ரயாஸ ஃபலவர்ஜிதாந் ||

(இ - ள்.) இராஜயோகத்தை யறியாதவர்களாய் அட கர்மத்தை மாத்திரமுடைய இவ்வப்பியாசிகளைப் பிரயாசத்தின் பலமில்லாதவர்களாக மதிக்கிறேன்.

கபிலர் வாக்கியம்.

மீநஸ்நாந ரதஃ ஃபணீ பவநபுக் மேஷாஸ் த்ருணாசீ பதந் | நிராசீ ரதிஸ்வாஸ வ்ருத்திநிரதோ மௌநவ்ரதீ ஸூகரஃ | ஸர்வேயத்யஸநேந ஸம்பவ முபேயுர்த்யாநயோகீ பகோ | ஸர்வேஷாம் ஸமவேதநாஸ்தி ஸகலம் ஜ்ஞாநம் பரம் தபஃ ||

(இ - ள்.) மீன்களைப்போல ஸ்நானஞ் சதாசெய்வதினாலும், சர்ப்பங்களைப்போலக் காற்றைப் புசிப்பதினாலும், ஆடுகள் சருகு முதலியவற்றைப் புசித்து வாழ்வதுபோலச் சருகாதிகளை ஆகாரஞ் செய்வதினாலும், சாதகபுட்களைப்போல நிராசனபரனானாலும், பெருச்சாளிகளைப்போல மலைநுழைவுகளில் வாழ்ந்தாலும், கழுதைப்புருஷனைப்போலப் பன்மமேலபனஞ்செய்வதினாலும், கொக்கைப்போலத் தியானஞ் செய்வதினாலும் இத்தியாதி நையிட்டியங்களால் மோக்ஷலாபஞ் சித்தியாது. (மோக்ஷலாபத்தை விரும்பிய) தபசிகளுக்கு ஞானமே பிரதானமானது.

பகவத்கீதை.

எல்லா வுயிருமொன்றாகப் பார்ப்பதியோக மெனவுரைத்தாய்
மல்லார் தோளா யிதற்குநிலை காணேன் மனமா கின்றவிது
நில்லா தியற்கைத் தாய்ப்புலனைக் கலக்குமதனை நிலைநிறுத்த லேறன்
லெல்லா நிலையுங் காற்றடக்கற் கொக்கு மெனமுன் னோர்கின்

### தாயுமானசுவாமிகள்.

சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
யிம்மாயா யோகமினி யேனடா — தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாங்கண்ம
ணிட்டா சிறுபிள்ளாய் நீ.

### கந்தரலங்காரம்.

துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறிக்
கருத்தி யுடம்பை யுருக்கிலென் னாஞ்சிவ யோகமெனுங்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே.

### நிஷ்டாநுபூதி.

பங்கமுற மனங்கொண்டு சுவாசமது தன்னைப் பந்தனஞ்செய் தருங்கற்பம் பற்பலவு மின்றே, யங்கமதைத் தான்சுழற்றி யபானவழி தன்னாலயம்வாங்கி யவ்வழியா லதைமீள விடுத்து, மிங்கிவைகள் பலவியற்றலட்டமா யோக மென்பரிவை சிவயோக மியற்றுவோர்க் கிலைபாற், றங்குசிவ யோகத்தா லாக்கமுடனழிவுந் தானிலா பரமசா யுச்சியந்தா னடைவார்.

புத்திகொள் கிரியா யோகசா தனையைப் புரிந்திடு மவர்களிவ்வுலகி, லெத்தனை கால மிருப்பினு மீண்டு மிறப்பொடு பிறப்பினையடைவார், சத்திய மாக வறிதிநீ யிந்தத் தனிச்சிவ யோகசா தனையை, யித்தனை வயதிற் போதிப்ப தென்றே யிறையவ னுமைதனக்கிசைப்பான்.

### தத்துவராயசுவாமிகள்.

வானிலே பறக்க மண்ணிலே நுழைய வானவர் வணங்கமற்றொருருவ, ரூனிலேநுழைய வவரவர் தங்க ளுளந்தனி லினைந்தவையுரைக்கப், போனதோ ருயிரை யெழுப்பவென் சித்திப் புகன்றதெலாங்கையில் வரினு, ஞானமே யில்லை யாயினன் கவரை நாயினுங் கடையென நாடே.

### தேவிகாலோத்தரம்.

சக்கர நாடிசான் றோர்வழி தெய்வருபமூல
மக்கர மண்டலங்கண் ஞானம்போ லழகின்றுகு
மக்கடோய் மாயாவிச்சை மந்திரம் பிராணயாமந்
தொக்கசீர் ஞானஞ்சேரத் தொடங்குவார் தொடங்கலாகா.

அட்டமா சித்திமுத லனைத்துள்ள பேறுகளுங்
கட்டமாங் கதிகடரும் பரகதிகா ணக்கொடா
மட்டிலா மாலையாய் வியாபகமா யறிவாகிக்
கிட்டலாகா முத்தி மற்றிவற்றாற் கிடையாதே.

பல்வகைய சித்திகளும் பாதாளத் திற்செலவுஞ்
சொல்லரிய பொருண்முழுதுஞ் சோராமற் பெற்றிடினு
மெல்லையி லாவின்பமா முத்திபெற வெண்ணுமவ
னல்லறநுஞ் சிற்றின்ப மடையவவா வொழிவான்.

உபதேசமாலை.

அறிவுநா மென்றறிய மாட்டாதா ரன்றோ
வெறிகாற் புனலருந்தி யென்றுந் - தறிபோலு
மிட்டையுடன் மட்டாய் நெடுங்கால நின்றார்க
ணட்டமலா துண்டோ நலம்.

ஒழிவிலொடுக்கம்.

உபதேசப் பித்தோ வுபமானப் பித்தோ
விபரீத மோபழக்கோ வேறோ—கபசிநீ
கண்மூடா விண்மூடத் தேடுங் கவுசனைபோ
லெண்மூடா யோகமிது வென்.

அறிவடங்கா வாயு வடங்கவசை வற்றுத்
தறியிருந்தாற் போலச் சமாதி—பெறுகி
லடந்த குருட்டுமெ னஞ்சருந்திப் பாழூர்க்
கிடந்தகுழிப் புக்கதினுங் கேடு.

## ௫௫-வது சம்வாதம்.

முத்திரைப்பேறு முடிவானதன்றெனல்.

சி: யோகமுத்திரைகளினால் மோக்ஷமுண்டாமென் றுன்றோர் கூறுவதா லவற்றையும் விவரித்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: சித்தலயத்தின் பொருட்டுச் செய்யும் பிராணயாமத்திற்குச் சாதனமாய முத்திரை (குறி)கள் பலவாம். அவை மகாமுத்திரை, மகாபந்தம், மகாவேதம், கேசரி, உட்டியானம், மூலபந்தம், ஜாலாந்தரபந்தம், விபரீதகரணி, வஜ்ரோலி, சத்திசால

னம் எனப்பலவாம். அவற்றுள் ஐந்துமுத்திரை சிரேட்டமாம். அவை கேசரி, பூசரி, மத்திமை, ஷண்முகி, சாம்பவி என்பன வாம்.

(1) கேசரி.—நேத்திரங்களைத் திறந்தாவது மூடியாவது திருஷ்டி தப்பாது புருவமத்தியில் இலட்சியம் வைத்துப் பார்ப்பதாம். இஃதந்தர்லட்சியமாம்.

(2) பூசரி.—நேத்திரங்களசையாது மூக்கினுனியைப் பார்ப்பதாம். இதுவு மந்தர் லட்சியமாம்.

(3) மத்திமை.—நேத்திரங்களை மூடி மூக்கின்மத்தியில் திருஷ்டியைவைத்து நடுநெற்றியைப் பார்ப்பதாம். இது மத்திய லட்சியமாம்.

(4) ஷண்முகி.—பெருவிரல்களால் செவியிரண்டையும், சுட்டுவிரல்களால் கண்களிரண்டையும், மோதிரவிரல்களால் மூக்கிரண்டையும் மூடி வாயையும் மூடிப் பகிர்லட்சியம் வைத்துப் பார்ப்பதாம். அப்போது பிராணாயாமத்தால் சுத்தமாயிருக்கும் சுழுமுனை மார்க்கத்தில் அமலமாகிய (களங்கமின்றிய) நாதம் ஸ்புடமாய் (வெளிப்படையாய்)க் கேட்கப்படும். இவ்வப்பியாசத்தில் மனத்தையும் நேத்திரத்தையும் அந்தர்முகமாக்கி நாத பிந்து கலைகளை ஸ்வாதீனஞ் செய்வதாம்.

(5) *சாம்பவி.—உள்ளே (ஆதாரமுதல் பிரமரந்திரம் வரையிலுள்ள சக்கரங்களுள் தன்னாற் கொள்ளப்பட்ட சக்கரத்தில்) இல

*சுகம் உண்டாகின்றது பற்றிச் சாம்பவியென்றும், சம்புவாகிய ஈசுரனதாகையால் சாம்பவியென்றும், தியானத்தினால் சம்புவை அடைவிப்பதால் சாம்பவியென்றும், சுகவடிவாய் நிற்கின்றதாகையால் சாம்பவியென்றும், சம்புவாகிய ஆத்மாவினதாயிருத்தலால் சாம்பவியென்றும், சித்து வெளிப்படுந் தானமாயிருத்தலால் சாம்பவியென்றும், தியானத்தால் ஆத்ம சாட்சாத்காரத்திற் கேதுவாயிருத்தலால் சாம்பவியென்றும் ஆன்றோர்களால் சொல்லப்படும். சித்தாசனத்திலிருக்கும் யோகி சாம்பவி முத்திரையைச்செய்து ஏகாக்கிரசித்தனாய் வலதுகாதில் சுழுமுனைநாடியிலுள்ள நாதத்தைக் கேட்பன். இந்நாதம் பத்துவகையாம். அவை (1) சிணி, (2)சிணிசிணி,(3) கண்டாநாதம்,(4) சங்கநாதம்,(5) வீணாநாதம்,(6) தாளசப்தம் (7) வேணுநாதம்,(8) பேரிசப்தம், (9) மத்தளசப்தம்,(10) மேகசப்தம் என்பனவாம்.

[அந்தர்லட்சியம், பாகியலட்சியம், மத்தியலட்சியமென்னும் மூன்றும் லட்சியத்திரயமெனப்படும்.]

ட்சியமு (அந்தக்கரண விர்த்தியு)ம் வெளியில் (தேகத்திற்கு வெளிப்பிரதேசத்தில்) மூடுதலும் திறத்தலுமில்லாத திருஷ்டியுமாக விருத்தலாம்.

(1) நாதம்.

வெண்கலமணி யடித்தபின்னர்க் கலீரென்றுண்டாகும் பொதுச்சத்தம் போன்ற தொடர்ச்சியாகிய சத்தம் நாதமாம்.

(2) பிந்து.

அநுஸ்வாரத் (()-என்ப)திற்குப் பின்னருண்டாகும் தொனி பிந்துவாம்.

(3) கலை.

நாதத்தின் ஏகதேசம் கலையாம்.

பிந்துஎன்பது புத்தி. நாதமென்பது ஸ்தூலதேகப் பிராணவாயுக்களின் சப்தம். அது பிரணவமாம். ஆத்துமாவின் பிரதிபிம்பமே கலை என்று கூறுதலுமுண்டு.

இவ்வைவகை முத்திரைகளிலும் கேசரி, மத்திமை, சாம்பவி யென்பன சிரேஸ்டமாம். அவற்றுள்ளும் சாம்பவியே சிரேஷ்டமாம். இது *சின் (ஞான) முத்திரையுண்டாவதற்கு அடுத்தசாதனமா யிருப்பதுபற்றி யாவற்றுள்ளும் சிரேட்டமாகக் கூறப்பட்டது.

இம்முத்திரையானது சின்முத்திரையாகிய மோன நிலையை யடைதற்கு அடுத்த சாதனமா யிருத்தலால் முத்திராப்பியாசம் அவசியம் செய்யத் தக்கதேயாம். ஆயினும் இம்முத்திரைகள் மனோலயத்திற்குக் காரணமாயிருப்பினும் இவற்றால் மனோநாசமுண்டாகாமையின் இவையும் மோனநிலையை அப்பியசிக்கும் போது விடத்தக்கனவாம். குறிகடந்தவொன்றைக் குறிவைத்தறிதல் கூடாமையினாலும், குறிகளிலேயே இலட்சியம் வைத்திருப்பவனுக்கு அணிமாதி யஷ்ட வைசுரியங்களுண்டாகி அவனைப் பகிர்முகப்படுத்தி விடுதலினாலும், அணிமாதி யைசுவரியங்களைப் பற்றி "முனிவர் சித்திகள் விரோதமாத் திரந்தரு முத்தியைத் தா

*சின்முத்திரையாவது பெருவிரல்முனையையும் சுட்டு விரல்முனையையும் ஒன்று சேர்த்து மற்றை மூன்றுவிரல்களையும் விரித்திருத்தலாம். பெருவிரல் முனையையும் சுட்டு விரல்முனையையும் ஒன்றுசேர்த்தல் ஜீவ (கூடஸ்த)பிரமஐக்கியத்தையும் மற்றை விரல்களை விரித்தல் ஜகஜீவபரங்களின் பாதத்தை (பொய்யென்னும் நிச்சயத்தை)யும் குறிப்பித்து நின்றன.

ராவே" என்றும், "சித்திநெறி கேட்டல் செகமயக்கம்" என்றும் பெரியாரருளி யிருத்தலினாலும், கேவலம் முத்திராப்பியாசம் காரியத்தோடு அஞ்ஞானத்தின் நிவிர்த்தியும் பிரமாநந்தப் பிராப்தியுமாயமோட்சத்திற்கு நேர்காரணமன்மையின் அதனைத் தத்துவஞானம் வாய்த்தபோது பிரயத்தன பூர்வகமாக விடவேண்டுமென்க.

சி: தாங்க ளருளியதற்குரிய பிரமாணங்களை விகசிதமாய்க் கூறுமாறு வேண்டுகின்றனன்.

கு: கீழ்வருவனவே.

ஹடயோகப்பிரதீபிகை.

ஊக்தாஸநெ ஸ்தி²தொயோகீ³ ஊஷ்ராம்ஸம் யாயஶாம்ஸவீம் |
ஶ்ருணுயா த³க்ஷிணெகணெ நாத³மந்த ஸ்த²மெகயீ:||

(இ - ள்.) சித்தாஸனமென்கிற முக்தாஸனத்திருக்கும் யோகியானவன் சாம்பவிமுத்திரையைச்செய்து ஏகாக்ர சித்தமுடையவனாய் வலதுகாதில் சுழிமுனை நாடியிலுள்ள நாதத்தைக் கேட்கக் கடவன்.

திரிபுராசார சமுச்சயம்.

விஜிதாஸவதீ ஹடேநவாயு: ஸஹஜோ யஸ்ய ஸமு-
த்தித: ப்ராணத:| ஸுமினோத்தி மாணாஸவந்தி தஸ்யராஜித வா-
ண்யஞ்ச ஸ்மரமாணாதயஸ்ய| ஸுரராஜ தநூஜவைரி
ரந்த்ரே விநிருத்ய ஸ்வகராங்குளீத்வயேந | ஜலதேரிவதீர
நாதஶப்தம் | ப்ரஸரந்தம் ஸஹஸா ஶ்ருணோதி மர்த்ய:||

* சுரராஜ குமார வைரி ரந்திரத்தில் (காதின்துவாரத்தில்) தனது கைப்பெருவிரல்களிரண்டினால் நிரோதித்து உள்ளே பரவும் சமுத்திரம்போன்ற தீரமான நாதத்தைச் சீக்கிரமாக மனிதன் கேட்கிறான். அதனால் எவனுக்குச் செவ்வையா யெழும்பிய நாதமும் வாயுவும் சகஜமாய் ஜயிக்கப்பட்டவைக ளாகின்றனவோ அம்மகா குணத்தையுமுள்ளவனுக்கு அணிமாதி குணங்களும் அளவிறந்த புண்ணியமு முண்டாகின்றன.

உத்தரகீதை.

ஊஹாக்ஷ ஓவியொமஶ்ரொ ஹாஸாஸெ ஓநவாவஸ |
ஸவஞ்ஜாதி வாபூர்ணம் தஸ்யஜ்ஞ ஶதாஜிதஷ்||

* சுரராஜன் - இந்திரன், அவன் குமாரன் - அருச்சுனன், அவன் வைரி - கர்ணன், கர்ணம் - காது.

(இ - ள்.) எவன் ஒருமுகூர்த்தமாயினும் நாசிநுனியில் மனதோடு செல்லுகின்றனோ (தத்துவஞானத்தி னிமித்தம் நிச்சலமாகிய பார்வையை வைக்கின்றனோ) அவன் (அத்தகைய அம்சமுத்திரையில் நிலைப்பவன்) நூறு ஜன்மங்களிற் சம்பாதிக்கப்பட்ட சகல பாவங்களையுங் கடக்கிறான்.

திருமந்திரம்.

நாலெழு மாறவை நண்ணிய முத்திரை
பாலான மோன மொழிற் பதிவித்து
மேலான நந்தி திருவடி மீதுய்யக்
கோலாகலங் கெட்டுக் கூடுநென் முத்தியே.

சாம்பவி நந்திதன்னருட் பார்வையா
மாம்பவ மில்லா வருட்பாணி முத்திரை
யோம்பயி லோங்கிய புண்மைய கேசரி
நாம்பயி னுதன்மெய்ஞ் ஞான முத்திரையே.

நிஷ்டாநுபூதி.

முத்தி ரைகளோர் மூன்று மொழிந்திடில்
சுத்த சாம்பவி சொல்லும் பைரவி
மெய்த்து கேசரி யென்று விளங்கிடும்
இத்தை யார்க்கு மியம்பவொண் ணாதரோ.

திருமங்கையாழ்வார் திருக்குறுந்தாண்டகம்.

இளைப்பினை யியக்க நீக்கி யிருந்துமுன் னிமையைக் கூட்டி
யளப்பிலைம் புலன டக்கி யன்பவர்க் கண்ணே வைத்து
துளக்கமிற் சிந்தை செய்து தோன்றலுஞ் சுடர்விட் டாங்கே
விளக்கினை விதியில் காண்பார் மெய்ம்மையை காண்கிற் பாரே.

---

## ௩௬ - வது சம்வாதம்.

துறவிபோனடிப்பவர் துரியவீ டுறரோனல்.

சி: தேவரீர் பலமுறையும் யாவற்றையுந் துறக்க (விட) வேண்டுமென் றருளுவதால் யாவற்றையுந் துறந்தவர் எத்தன்மையரா யிருப்பர்?

கு: அவர்: தைரியம், பொறுமை, வெளியிந்திரியங்களை யடக்குதல், கள்ளாமை, மனச்சரீரசுத்தி, மனத்தையடக்குதல், வெட்கம், ஞானம், சத்தியம், கோபமின்மை யென்னும் தருமத்துடன் கூடி இறந்தகால வருங்கால போகங்களை நினையாமலும் நிகழ்கால போகத்தில் சந்தோஷமடையாமலும் ஊமையாயும் நபுஞ்சகமாயும் முடமாயும் குருடாயும் செவிடாயும் ஜடமாயு மிருத்தலோடு

மனத்தைப் புறத்துப் போகாவாறடக்கி யொருமுகப்படுத்தி உயிரையே நோக்க வைத்திருப்பர்.

சி: ஊமை முதலியவாக விருத்தலை விளக்கமாய்க் கூறுமாறு வேண்டுகின்றனன்.

கு: (1) இது நன்றாயிருக்கிறது இது நன்றாயில்லை என்று போஜனத்தில்அபிமானம் வையாது ஹிதமாயும் சத்தியமாயும் மிதமாயும் பேசுதலே ஊமையாயிருத்தலாம்.

(2) இப்போது பிறந்த பெண்ணையும் நூறுவயதுள்ள கிழவியையும் பார்த்தவிடத்துக் காமவிகார மடையாதிருத்தல்போன்று யௌவனமாதைக் கண்டவிடத்துக் காமவிகார மடையாதிருத்தலே நபுஞ்சகமாயிருத்தலாம்.

(3) பிட்சையின் பொருட்டும் மலஜலம் விடுதற்பொருட்டும் ஒருயோஜனைக்குமேல் நடவாதிருத்தலே முடமாயிருத்தலாம்.

(4) நின்றாலும் நடந்தாலும் பார்வை நான்குநுகத்தடிக்கப்பாற் பூமியைவிட்டுப் போகாமையே குருடாயிருத்தலாம்.

(5) ஹிதம் அஹிதம் சந்தோஷம் விசனங்களை யுண்டாக்கக்கூடிய வார்த்தைகளைக் கேட்டவிடத்துக் கேட்காததுபோ லிருத்தலே செவிடாயிருத்தலாம்

(6) விஷயங்கள் சமீபத்திலிருந்தாலும் அவற்றால் கலங்காது தூங்குவதுபோன் றெப்போது மிருத்தலே ஜடமாயிருத்தலாம்.

சி: துறவிபோல் நடிப்பவ ரெத்தன்மையரா யிருப்பர்?
துறவிகள் "நடனமுதலிய காட்சி, சூதாடல், ரம்மியஸ்திரி, புஜிக்கத்தக்க வஸ்து, அனுபவிக்கத்தக்க வஸ்து, தூரஸ்திரி இவ்வாறையும் ஒருகாலும் பார்க்கக்கூடாது" என்று வேதம் விதித்ததற்கு மாறுபட்டவராய் ஆசை, துவேஷம்,கர்வம், கபடம், துரோகம், மோகமுதலியவற்றை யுடையவரா யிருப்பர். மொட்டையடித்துக் கொள்ளுவதினாலாவது சடைவளர்த்துக் கொள்ளுவதினாலாவது துறவு சித்திக்கின்றதில்லை "விட்டகலுந் துறவுக்கு விராகங் காரணமன்றி வேடமன்றே" என்று பெரியார் பணித்தவாறு துறவிற்கு விராகமே (ஆசையின்மையே) ஹேதுவா யிருத்தலால் காமசங்கற்ப மற்றவரே துறவியராவாரன்றி யேனையோர் உண்மையில் துறவியராகார். இப்போலித் துறவிகள் உலகத்தை வஞ்சிக்கும் நிமித்தம் கள்ளினைத் தீர்த்தமென்றும், மாமிசத்தைச் சுத்தமென்றும், கள்குடிக்கும் பாத்திரத்தைப் பதுமையென்றும், கள்ளிறக்கிக் கொடுப்போனைத் தீட்சிதனென்றும், வேசியைச் சேவிப்பவனைப் பிரயாகை சேவிப்பவனென்றும்,சக்கிலிச்சிமுதலிய சண்டாள ஸ்திரிகளைச் சேவிப்பவனைக் காசி சேவிப்

பவனென்றும், பைரவி முதலிய சக்கரமத்தியிலிருப்பவரைப் பிராமணரென்றும், அத்தியந்தம் வியபிசார ஸ்திரியை யோகினியென்றும், வியபிசாரியை யோகியென்றும் பிறவுமாக வேறுபேரிட்டுத் துன்மார்க்க நடையுடையராயிருப்பர். இவர் பசு புலித்தோலைப் போர்த்துக்கொண்டு பயிரை மேய்ந்தாற்போன்று தவவேடத்தைப் பூண்டு சைவர்க்குத் தத்துவம் 36, வேதாந்திக்குத் தத்துவம் 28, வைணவர்க்குத் தத்துவம் 24, சாங்கியர்க்குத் தத்துவம் 25, பொதுத்தத்துவம் 96, என்றற் றொடக்கத்தனவாகத் தத்துவவகைகளைக் கூறி, எமக்குத் தெரிந்தாற்போல் வேறியார்க்குத் தத்துவவகை தெரியப்போகின்றது; யாமே ஆத்மஞானி! எம்மையடுத்தவர்க்கே மோட்சமுண்டாகும்; நீவிர்செய்யும் தானமியாவும் எமக்கே செய்யவேண்டும்; நம்மைப் பூசிக்கவர்க்கே சகலபோகமுமுண்டாகும்; எமது பாதரேணுபடிந்த வீடு மோக்ஷஸ்தானமாகும்; எமக்கணிமாதி யெண் சித்திகளும் சித்தியாயிருக்கின்றன; எமக்குச் சகல மகிமையு மிருப்பதுபற்றித்தான் பண்டிதர் முதல் பாமரீறுயுள்ள யாவரும் எம்மையே யுபாசிக்கின்றார்கள் என்று தமது பிரதாபங்களை வீணேவிளக்கிப் பிறரை வஞ்சித்து பொருள்பெற்று மனமோடிய வழியே ஓடி இரகசியமாய்ப் பொதுமகளிரையும் பிறர்க்குரிய மகளிரையும் நயபயங்காட்டிப் புணர்ந்து மோக சோக ரோக முதலியவற்றை யுடையவராயிருப்பர். அப்படி யிருப்பினும் இருவகைப் பற்றுமற்றார் போன்று பிறர்க்குக் காட்டுவர்; சிவராஜ யோக முடையார்போன்று மிருப்பர்; காவிவேட்டி கட்டுவதிலும் விபூதி அல்லது நாமந் தரிப்பதிலும், உருத்திராக்கமாலை அல்லது துளசிவடம் பூண்பதிலும், (அடைக்காய் தின்னுமையால்) வெண்பல்லைப் பிறர் வந்தபோதெல்லாங் காட்டுவதிலும், இரகசியமாய் மாம்சாதி வர்க்கங்களை யுண்பதிலும், நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லென்போர், விடர், தூர்த்தர், நடர் முதலானவரின் நேசத்தையே உடையவராயிருந்தும் நல்லாரிணக்கத்தையே யுடையவர்போற் காட்டுவதிலும் மிகு சமர்த்தராயுமிருப்பர். இல்லறத்தைவிட்டுத் துறவறத்தையடைந்தும், துறவறத்திற்குரிய வொழுக்கத்தை மேற்கொண்டு சுவஸ்சொரூபதியானஞ்செய்து பரமாநந்தவடிவமாய் விளங்காது தாம் விட்ட காமவின்பத்தைக் கக்கியசோற்றை விரும்புவதுபோன்று விரும்பித் துறவறத்திற்கு மாறுப தீயவொழுக்கத்தை மேற்கொண்டு, கிழத்தனம் துக்கம் நோய் முதலியவைகள் வசிப்பதாயும், பசி தாகம் சீதம் உஷ்ணம் முதலியவைகளால் பயத்தை யுண்டுபண்ணுகிறதாயும், பெரும்பாலும் இரசோகுண முடையதாயும், பஞ்சபூதங்களாலாக்கப்பட்டதாயும், நிலையில்லாததாயுமுள்ள உடம்பின்கண் அவாவைத்துத் தமக்குத் தானஞ்செய்தவரை இழிபிறப்பினராக்கி வேடத்தாற் பிறரை வெருட்டி

யொழுகும்போலித் துறவிகள் ஒவ்வொரு குற்றமும் அறிந்தே செய்தலின், அவர்களுக்குண்டாகுங் கதி நரகமேயாம். ஆதலால் இவ்வடாஞானியரை யொருகாலு நேசிக்கலாகாது.

சி: போலித்துறவிகளைப் பற்றியும் தத்துவ வகைகளைப்பற்றியும் விவரித்துரைக்கும் பிரமாணங்களைக் கூறும்படி பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ் வருவனவே.

நாரதபரிவிராஜகோபநிஷத்.

𑌨 𑌦𑌣𑍍𑌡𑌧𑌾𑌰𑌣𑍇𑌨 𑌨 𑌮𑍁𑌣𑍍𑌡𑌨𑍇𑌨 𑌨 𑌵𑍇𑌷𑍇𑌣 𑌨 𑌦𑌂𑌭𑌾
𑌚𑌾𑌰𑍇𑌣 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌃 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑌣𑍍𑌡𑍋 𑌧𑍃𑌤𑍋 𑌯𑍇𑌨 𑌏𑌕𑌦𑌣𑍍𑌡𑍀 𑌸
𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌕𑌾𑌷𑍍𑌠𑌦𑌣𑍍𑌡𑍋 𑌧𑍃𑌤𑍋 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌰𑍍𑌜𑌿
𑌤𑌃 । 𑌸 𑌯𑌾𑌤𑌿 𑌨𑌰𑌕𑌾𑌨𑍍 𑌘𑍋𑌰𑌾𑌨𑍍 𑌮𑌹𑌾𑌰𑍌𑌰𑌵𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌾𑌨𑍍 ॥

(இ-ள்.) தண்டத்தைப் பிடித்துக்கொண் டிருக்கிறதினாலேயாவது தலை மொட்டை யடித்துக்கொண் டிருக்கிறதினாலேயாவது வேஷத்தினாலேயாவது டம்பாசாரத்தினாலே யாவது முத்தி சித்திக்கிறதில்லை. எவனாலே ஞானதண்டம் பிடிக்கப்பட்டிருக்கிறதோ அவன் தான் ஏகதண்டி (ஒன்றான பிர்ம்மத்தில் பிடிப்பையுடையவன்)என்று சொல்லப்படுகிறான். ஞானமில்லாதவனாய் மரதண்டத்தைப் பிடித்துக்கொண்டு எவ்விடத்திலும் எதையும் புஜித்துக்கொண்டிருக்கிற சந்நியாசி மகா ரௌரவமென்கிற கோரமான நரகங்களை யடைகிறான்.

சுபாலோபநிஷத்.

𑌨𑍈𑌷𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 । 𑌨 𑌬𑌹𑍁
𑌨𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌨 । 𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌨 𑌨 𑌮𑍇𑌧𑌯𑌾 𑌨 𑌵𑍇𑌦𑍈
𑌰𑍍𑌨 𑌯𑌜𑍍𑌞𑍈𑌰𑍍𑌨 𑌤𑌪𑍋𑌭𑌿𑌰𑍁𑌗𑍍𑌰𑍈𑌰𑍍𑌨 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍈𑌰𑍍𑌨 𑌯𑍋
𑌗𑍈𑌰𑍍𑌨𑌾𑌶𑍍𑌰𑌮𑍈𑌰𑍍𑌨𑌾𑌨𑍍𑌯𑍈𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍁𑌪𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 ॥

(இ-ள்.) அநேக வேதார்த்தத்தைச் சொல்வதனாலேயாவது வேதார்த்தத்தைக் கேட்பதினாலேயாவது தாரணாசக்தியுள்ள புத்தியினாலேயாவது பெரியோர்களிடத்திலிருந்து உபதேசம் பெற்றதனாலேயாவது நுண்ணறிவினாலேயாவது வேதாத்தியயநத்தினாலேயாவது யக்ஞங்களினாலேயாவது உக்கிரமான தபஸினாலேயாவது ஸாங்கிய யோகத்தினாலேயாவது கருமயோகத்தினாலேயாவது ஸந்நியாஸம் முதலிய ஆசிரம தருமத்தினாலேயாவது மற்றவைகளினாலேயாவது இந்த ஆத்துமா அடையப்படுகிறதில்லை.

மைத்திரேயோபநிஷத்.

[illegible] |
[illegible] ||

(இ-ள்.) திரவிய அபேட்சையால் அன்னவஸ்திரப் பிரதிஷ்டைக்குச் சன்னியாசம் பெற்றுக்கொள்ளுகிற வித்வாம்ஸன் உபயப்பிரஷ்டனாய் மஹா துன்பத்தை யடைவானேயன்றி முத்தியை யடையமாட்டான்.

சூதசங்கிதை.

ஆத்மாநாத்ம விவேகம் து த்யக்த்வா திஷ்டதி யோ நர: |
ஜடீ காஷாயீ ஶிகீ வாபி து:க்யேத நாத்ர ஸம்ஶய: ||

(இ-ள்.) ஆத்மா அநாத்மா விவேகஞான மின்றித் தாடியுஞ் சடைவளர்த்துத தலைவழித்துச் சன்னியாசி முதலாகிய வேடங்களைப் பூண்டு நடித்தபோதிலும் மோக்ஷலாபத்தை யடையார்கள்.

உத்தரகீதை.

தபேத்வர்ஷ ஸஹஸ்ராணி ஏகபாதஸ்திதோ நர: |
ஏகஸ்ய த்யாநயோகஸ்ய கலாம் நார்ஹதி ஷோடஶீம் ||

(இ-ள்.) நரன் ஒருகாலின்மேனின்றுகொண்டு அனேகமாயிர வருஷங்கள் தபசுசெய்யினும் அது தியானயோக மொன்றன்பதினாறில் ஒரு அம்சத்திற்கும சமானமாகாது.

திருமந்திரம்.

ஆடம் பரங்கொண் டடிசிலுண்பான் பயன்
வேடங்கள் கொண்டு வெருட்டிடும பேதைகா
ளாடியும் பாடியு மழுது மரற்றியுந்
தேடியுங் காணீர் சிவனவன் றாள்களே.

ஆற்றிக் கிடந்த முதலைகண் டஞ்சிப்போ
யீற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கு
நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்
சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே.

தத்துவசரிதை.

செந்துகில் புனைவார் சீவரந் தரிப்பார் திரிதண்டோ டொருதண்டு பிடிப்பார், தந்தமுத் திரைகள் பலபல தரிப்பார் தவமெனத் தம்முடம் பொறுப்பார், முந்துகாய் கிழங்கோ டிலையயின் றிடுவார் மோனமென் பார்கத றிடுவா, ரிந்தவா குலத்தா லீசன்மே விடுமோ விவர்துய ருறுவதே னந்தோ.

பாடுதுறை.

காயமா ளிகைய துண்டு மூவர்கா தலிக ளுண்டு
வாயல்காப் பறிவு முண்டு வளம்படு சமத மாதி
யாயநற் சுற்ற முண்டடங் கடக்கரும் பொருளு முண்டு
தூயநற் சொரூபா னந்தன் றெண்டர்க டெந்த தென்னே.

சித்தாந்ததரிசனம்.

*துறந்தாஞ் சிவயோகர் துன்னுத லேயோர்*
*பிறந்தும் பிறவா தவர்.*

*தண்டிகையுங் கொம்புந் தவசிக் கிறையடா*
*வய்யார்க்கு வைத்த வழி.*

*வுழைத் துறந்தா னுலகைத் துறப்பை யன்றி*
*யூழிருக்க நீதுறவி யோ.*

பட்டணத்தார் பாடல்.

*காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி*
*யோடே யெடுத்தென்ன வுள்ளன் பிலாதவ ரோங்குவிண்ணோர்*
*நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்*
*வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே.*

*மாத்தா னவத்தையு மாயா புரியின் மயக்கத்தையு*
*நீத்தார் தமக்கொரு நிட்டையுண் டோநித்த னன்புகொண்டு*
*வேர்த்தாற் குளித்துப் பசித்தாற் புசித்து விழிதுயின்று*
*பார்த்தா னுலகத் தவர்போ லிருப்பர்பற் றற்றவரே.*

போதரத்நாகரம்.

*சடையினைப் பரித்துந் தலையினைப் பரித்துஞ் சீவரந் தானுநற் கலிங்க, முடையெனப் புனைந்து முடைகளைத் தவிர்ந்து மூணுறக் கங்களைத் துறந்தும், படியுநற் சருகும் வாயுவு மயின்றும் பாரொடு கல்லிடைத் துயின்று, மிடையதற் றுழலு மிவையருட் சொருபன் மெய்யருட் பெறுதவற் கியல்பே.*

தாயுமானவர்.

*சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெலாம் பெற்றாலு*
*மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.*

நிஷ்டாநுபூதி.

*கட்டறத் துறந்தே யுயிர்பொருட் சார்பைக் கருதிடும் வாசனை யனைத்து, மொட்டற விடுத்து ஞானநூ லனைத்து மோர்ந்திடி லென்பய னுதவு, மெட்டுதற் கரிய சற்குரு வருளா லியம்புமோர் மொழியினைப் பெற்றே, நிட்டைசா தித்தே சகலகே வலங்க ணீங்கிடிற் பிறப்பிறப் பறுமே.*

### பெரிய திருமொழி.

காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கா னுகர்ந்து நெடுங்காலமைந்து,தீயோடு நின்று தவஞ்செய்ய வேண்டா திருமார்பனைச் சிந்தை யுள்வைத்து மன்பீர், வாயோது வேதம் மலிகின்ற தொல்சீர் மறையாளர் நாளு முறையால் வளர்த்த, தீயோங்க வோங்கப் புகழோங்கு தில்லைத் திருச்சித்திரக் கூடஞ் சென்றுசேர்மின்களே

(தத்துவபோதம்.)

### திருமந்திரம்.

நாலொரு கோடியே நாற்பத் தெண்ணாயிர
மேலுமோ ரைந்நூறு வேறு யடங்கிடும்
பாலவை தொண்ணூறொ டாறுட் படுமவை
கோலிய வையைந்து ளாகுங் குறிக்கிலே.

ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுவென்ப
ராகின்ற வாறு றருஞ்சைவர் தத்துவ
மாகின்ற * நாலேழ் வேதாந்தி வைணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே.

தத்துவ மானது தன்வழி நின்றிடில்
வித்தக னாகி விளங்கி யிருக்கலாம்
பொய்த்தவ மாமவை போயிடு மவ்வழி
தத்துவ மாவ தகார வெழுத்தே.

### ஒழிவிலொடுக்கம்.

தத்துவத்தை யெல்லாஞ் சடமென்று தாக்கற்றுச்
செத்தசத்தின் கண்போற் பிரியாது—வைத்தெடுத்தும்
பூரணமே யென்றழைத்துந் தேடிப் புரண்டழுதுங்
கோரணிகாட் டும்பேய்க் குவால்.

### பாலையானந்தசுவாமிகள்.

தத்துவக் குப்பையைத் தள்ளுங்கடி வேத
சாத்திரப் பொத்தலை மூடுங்கடி.

* வேதாந்திக்குத் தத்துவம் 28 என்றும் மாயாவாதி (சாங்கியனு)க்குத் தத்துவம் 25 என்றும் திருமந்திரம் கூறுவதுணராது சில சைவப் போலிகள் வேதாந்திகளை மாயாவாதிகளென்று வீணே கூறித் திரிகின்றனர்.

முத்திதரு ஞான வஸ்துவை வாவென்று
மூடிக் கொம்மி யடியுங்கடி.

சிற்றம்பலநாடி.

தத்துவக் கற்றூஞ் சமய விரோதமுஞ் சாத்திரஞ்சேர்
புத்தகப் பித்தையும் புந்திம தத்தையும் போட்டிடென்று
வித்தகச் சிற்றம் பலநாடி வேறு புரத்திறைவன்
உத்தம மான சிவானந்த போகத்தை யூட்டினனே.

தாயுமானசுவாமிகள்.

தத்துவப்பே யோடே தலையடித்துக் கொள்ளாமல்
வைத்தவருண் மவுன வள்ளலையே—நித்தமனு
பூணக்கருது நெஞ்சு போற்றக் கரமெழும்புங்
காணத் துடிக்குமிரு கண்.

பிரபுலிங்கலீலை.

தத்துவ முற்று மயக்குவ தள்ளி
மெய்த்த தனைப்பெற வேறு கொடுத்தான்
பொய்த்துறு குப்பை கிளைத்தொளி பொங்கு
முத்தை யளித்தென முத்தை தனக்கு.

---

## கஎ-வது சம்வாதம்.

அண்டத்தியல்பெலாம் பிண்டத்துளவெனல்.

சி: அண்டத்தியல்பெலாம் பிண்டத்துள வென்பதைக் கூறுமாறு பிரார்த்திக்கின்றனன்.

கு: அண்டம் ஐம்பூதத்தாலாக்கப்பட்டிருப்பதுபோலப்பிண்டமு (உடம்பு)ம் ஐம்பூதத்தா லாக்கப்பட்டிருப்பதால் அண்டத்தியலெலாம் பிண்டத்திலும அவசியமிருத்தல வேண்டும்.

அண்டத்தில் பல்வேறு பிராணிகள் தோன்றிநின் றழிவது போன்று பிண்டத்திலும் பல்வேறு பிராணி (கிருமிகீடாதி)கள் தோன்றிநின் றழிதலானும், அண்டத்தில் சூரியசந்திரர்கள் மாறி மாறிவருதல் போன்று பிண்டத்திலும் இரேசகபூரகங்கள் மாறி மாறி வருதலானும், அண்டத்திற்குப் பகலு மிரவு மிருப்பது போன்று பிண்டத்திற்கும் சகல கேவலமிருத்தலானும், அண்டம் அசத்து சட துக்க மனித்தங் கண்டமா யிருப்பதுபோன்று பிண்டமும் அசத்து சட துக்க மனித்தங் கண்டமா யிருத்தலானும், அண்டம் ஒருவ (ஈச)னல் நடத்தப்படுவதுபோன்று பிண்டமும் ஒருவ(சீவ)னல் நடத்தப்படுதலானும், அண்டத்தில் திவ்வியக்ஷேத்திரங்களிருத்தல் போன்று பிண்டத்தில் சிரசில் ஸ்ரீ பருப்பதமும்

நேத்திரத்திற் கேதாரமும் புருவங்களுக்கும் நாசிக்கும் நடுவில் வாரணாசி(காசி)யும் குசஸ்தானத்தில் குருக்ஷேத்திரமும் இருதயத்தின் மத்தியில் (சிதாகாசமாகிய) சிதம்பரமும் மூலாதாரத்திற் திருவாரூரு மிருத்தலானும், அண்டத்தில் கங்கையாதி திவ்விய நதிகளிருத்தற்போன்று பிண்டத்தில் இருதயம் பிரயாகையாகவும் இடதுபக்கநாடி கங்கையாகவும் வலதுபக்கநாடி யமுனையாகவும் சுழுமுனைநாடி ஸரஸ்வதியாகவு மிருத்தலானும், அண்டத்தில் திரிவேணி சங்கமமிருத்தல்போன்று பிண்டத்தில் இரேசகபூரக கும்பங்களின் சங்கமமிருத்தலானும், இன்னும் பிற வியைபுக ளிருத்தலானும் அண்டத்தியல்பெலாம் பிண்டத்திலுளவென்பதற்கு யாது மாசங்கையின்றுமென்க.

சி: இங்ஙனங் கூறியவைகளை விரித்துரைக்கும் பிரமாணங்களைக் கூறல்வேண்டும.

தர்சனோபநிஷத்.

[illegible] |
[illegible] |
[illegible] |
[illegible] ||

(இ - ள்.) சிரசினுடைய ஸ்தானத்தில் ஸ்ரீபர்வதம், நேத்திரஸ்தானத்திற் கேதாரம், ஓ! மஹாபுத்திமானே! புருவங்களுக்கும் மூக்குக்கும் நடுவாகிய ஸ்தானம் வாரணாஸீ(காசி), குசஸ்தானத்தில் குருக்ஷேத்திரம், ஹிருதயமாகிற தடாகம் பிரயாகை, ஹிருதயத்தினுடைய மத்தியில் (சிதாகாசமாகிய) சிதம்பரம், மூலாதாரத்திற் கமலாலயம் (இப்படியிருக்கின்றன).

சங்கராசாரியார் வாக்கியம்.

[illegible] |
[illegible] |
[illegible] |
[illegible] ||

(இ - ள்.) சரீரம் காசிக்ஷேத்திர மெனப்படும். தத்துவ ஞானத்தி லுண்டாகிய அபேத ஐக்ய ஞானம் கங்காநதியெனப்படும். சிரத்தை பக்தி கயாவெனப்படும். பிரமஞானத்தைப் போதிக்கும் சற்குருசரணங்களைச் சதாதியானிப்பது பிரயாகையெனப்படும். சரீரத்தின்கண் வியாபித்திருக்கும் சாட்சிசொரூபமாகிய ஆன்மா விஸ்வநாத னெனப்படும். இந்தச் சரீரத்தின்

கண்ணே சகலமும் இருப்பதினால் பிரமஞானிகள் தமக்கன்னியமாகக் கங்கையாதி தீர்த்தங்களிருப்பதாகக் கருதிச் செய்யவேண்டுமென்கிற பிராந்தி நீங்கியிருப்பார்கள்.

### உத்தரகீதை.

அமராவதீந்த்ர லோகோऽஸ்மிந் நாஸாக்ரே பூர்வதோ திஶி |
அக்நிலோகஸ்ததா ஜ்ஞேயஶ்சக்ஷுஷ்யே தேஜஸாவதீ || யாம்யா
ஸம்யமநீ ஶ்ரோத்ரே யமலோகஃ ப்ரதிஷ்டிதஃ | நைர்ருதோ
ஸ்ததா பார்ஶ்வே நைர்ருதோ லோக ஆஶ்ரிதஃ || விபாவதீ
ப்ரதீச்யாம் து ப்ருஷ்டே வாருணிகா புரீ | வாயோர்கந்தவ
தீ கர்ணே பார்ஶ்வே லோகஃ ப்ரதிஷ்டிதஃ || ஸௌம்யா புஷ்பவதீ
ஸௌம்யே ஸோமலோகஸ்து கண்டதஃ | வாமகர்ணே து விஜ்ஞே
யோ தேஹமாஶ்ரித்ய திஷ்டதி || வாமசக்ஷுஷி சைஶாநீ ஶிவ
லோகோ மநோந்மநீ | மூர்த்நி ப்ரஹ்மபுரீ ஜ்ஞேயா ப்ரஹ்மாண்டம்
தேஹமாஶ்ரிதம் ||

(இ - ள்.) இந்தச் சுழுமுனை நாடியின் கீழ்த்திசையில் நாசியின் நுனிப்பாகத்தில் அமராவதியென்னும் இந்திரபட்டணமும் பின்னா வலதுகண்ணில் அக்கினியின் லோகமாகிய தேஜோவதியென்னும பட்டணமுமுண்டு. வலதுகாதில் யமலோகமாகிய சம்யமனியென்னும பட்டணமிருக்கிறது. அதன் பக்கத்தில் நிருதியின் பட்டணமாகிய நைருதமிருக்கின்றது. மேற்குத்திசையாகிய பின்புறத்தில் விபாவதியென்னும் வருணனுடைய பட்டணமிருக்கின்றது. இடதுகாதின் பக்கத்தில் கந்தவதியெனனும் வாயுவின் பட்டணமிருக்கின்றது. வடதிசையின் கழுத்திலிருந்து இடதுகாது பரியந்தம் தேகத்தை ஆசிரயித்துப் புஷ்பவதியென்னும் ஸோமலோகமாகிய குபேரபட்டண மிருக்கின்றது. இடதுகண்ணில் ஈசான சம்பந்தியாகிய மனோன்மணியென்னும் சிவலோக மிருக்கின்றது. சிரசில் பிரஹ்மபுரியெனனும் பிரஹ்மலோக மிருக்கின்றது. இவ்வாறு பிரஹ்மாண்டம் தேகத்தை யாசிரயித்திருக்கின்றது.

பூலோகோ நாபிதேஶஸ்து புவர்லோகஸ்து குக்ஷிதஃ | ஹ்ருதயம் ஸ்வர்லோகஸ்து ஸூர்யாதி க்ரஹதாரகாஃ ||

(இ - ள்.) நாபிப்பிரதேசத்தில் பூலோகமும் வயிற்றில் புவர்லோகமும் இருதயத்தில் சுவர்க்கலோகமும் சூர்யாதிகிரகங்களும் நக்ஷத்திரங்களும் இருக்கின்றன.

ஹ்ருதயேச மஹர்லோகோ ஜநலோகஸ்து கண்டக: | தபோலோகோ ப்ருவோர்மத்யே மூர்த்நி ஸத்யம் ப்ரதிஷ்டிதம் | ஏவம் ப்ரஹ்மாண்டரூபம் தஸ்மிந் தேஹே ப்ரதிஷ்டிதம் ||

(இ-ள்.) ஹிருதயத்தின்மேல் மஹர்லோகமும் கண்டத்தில் ஜனலோகமும் புருவமத்தியில் தபோலோகமும் சிரசில் சத்தியலோகமும் இருக்கின்றன. (இவ்வாறாகப் பிரமாண்ட மியாவும் இந்தத் தேகத்தின்கண்ணே கற்பிக்கப்பட்டிருக்கின்றன.)

பிரமகீதை.

புகலரின் றிடுபிரம புரமெனும் பதியதனிற்
றகரபுண் டரிகமொனு மகமிலங் கியதகர
ககனமுண் டதுமறைகள் கருதரின் றுளபிரம
மிகவிரும் புவர்பிறவி விடவிரைந் துளவிமலர்.

கோயிற் புராணம்.

வலங்கைமான் மழுவோன் போற்றும் வாளர வரசை நோக்கி
யலந்திடும் பிண்ட மண்ட மவைசம மாத லாலே
யிலங்கைநே ரிடைபோ மற்றை யிலங்குபிங் கலையா நாடி
நலங்கிள ரிமய நேர்போ நடுவுபோஞ் சுழுனை நாடி.
நாடரு நடுவி னாடி நலங்கிளர் தில்லை நேர்போய்க்
கூடுமங் கதனின் மூலக் குறியுள ததற்குத் தென்னர்
மாடுறு மறைகள் காணு மன்னுமம் பலமொன் றுண்டங்
காடுது மென்று மெனரு மென்னையா ளுடைய வையன்.

சூதசங்கிதை.

சென்னிசி சைலம் பாலங்கே தாரந் திகழ்தரும் புருவமத் தியமே
மன்னிய காசி வண்குயத் தானம் வளர்குருக் கேத்திர மிதயந்
துன்னிய புண்ணி யப்பிர யாகை சொல்லுமவ் விதயத்தி னடுவண்
மின்னிடு தெய்வச் சிதம்பர மூலா தாரத்தா ரூரென்பர் மெய்க்கண்.

திருவிளையாடற் புராணம்.

அரைக்குமே லுலகே மென்று மரைக்குகீ ழுலகே மென்று
முரைக்கலா வுலக மெல்லா முருவமாம் புருடற் கிந்தத்
தரைக்குமே லனந்தந் தெய்வத் தானமுண் டனைத்துங் கூறின்
வரைக்குறா சிலதா னங்கள் வகுத்துரை செய்யக் கேண்மின்.

திருவள ராரூர் மூலந் திருவானைக் காவே நாபி
மருவளர் பொழில்சூ ழண்ணா மலைமணி பூரகீ வி
ரிருவருங் கண்ட மன்ற மிதயமாந் திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமாங் காசி.

பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமரந் திரமாம் வேத
மறைதரு துவாத சாந்த மதுரையி தகிகம்.

திருவாதவூ ரடிகள்புராணம்.

எண்டரு பூத மைந்து மெய்திய நாடி மூன்று
மண்டல மூன்று மாகி மன்னிய புணர்ப்பி னாலே
பிண்டமு மண்ட மாகு பிரமனோ டைவ ராகக்
கண்டவர் நின்ற வாறு மிரண்டினுங் காண லாகும்.

ஔவைகுறள்.

அன்னத்தா லாய உடம்பின் பயனெல்லா
முன்னோனைக் காட்டி விடும்.

---

## ௩அ - வது சம்வாதம்.

அகமுகப்பூசையை யறிநர் கோள்வாரேனல்.

சி: சுவாமி! அண்டத்தியல்பெலாம் பிண்டத்துளவென லென்பதனை யறிந்ததனாற் பெறும் பயன் யாது?

கு: அண்டத்தின் இருதய மத்தியான சிதம்பரத்தி லெழுந்தருளியுள்ள பரமபதியைத் தியானிப்பதுபோல் பிண்டத்தின் (உடம்பின்) இருதயமத்தியாய சிதம்பரத்தி லெழுந்தருளியுள்ள பரமாநந்தவடிவனைத் *தியானித்து அது வாயிலாக ஞானபூசை புரிதலே பயனும். இருதயமத்தியாய சிதம்பரத்தி லெழுந்தருளியுள்ள பரமாநந்தவடிவனைத் தியானித்தல் தகரோபாசனை யென்று சொல்லப்படும்.

சி: இதுசெய்யும் வகையை யுரைத்தருளல் வேண்டும்.

கு: ஜனங்கள் வசிக்காதவிடத்தில் சுகாசனத்திலிருந்து ஜடத்துவம் ஆலசிய முதலானவற்றை யுண்டுபண்ணும் தமோகுணவிருத்தியையும்காமக்குரோதாதிகளை யுண்டுபண்ணும் இரஜோகுணவிருத்தியையும் ஞானரூபப்பிரகாசத்தை யுண்டுபண்ணும் சத்துவகுணவிருத்தியினாற்கெடுத்துச்சுத்தனாகி, கழுத்து சிரம்தேகமென்னுமிவைகளைச்செவ்வனேஒழுங்காயிருக்கச்செய்து, வருணச்சிரம

* உபாசனையானது அத்தியான்மமென்றும் அதிதைவமென்று மிருவகைத்தாம். ஈண்டுக்கூறப்படும் தியானம் அத்தியான்ம உபாசனையாம்.

சூரியமண்டலத்தில் எழுந்தருளியுள்ள சுவர்ணமயமான மீசைமுதலியவற்றையும் செந்தாமரைமலர்போன்ற கண்களையுமுடைய ஜோதிர்மயனை உத்தென்னும் பெயருடைய புருஷனைத் தியானித்தலும் இதுபோன்ற பிறவும் அதிதைவ வுபாசனையாம்.

தருமங்களைவிட்டு, இந்திரிய நிக்கிரகஞ்செய்து, அன்புடன் தனது குருவை வணங்கி, சப்தாவரண (சப்ததாதுக்கள்) மென்னும் மதில்களும் பஞ்சகோசங்களென்னும் கோபுரங்களு மமைந்த தேகாலயத்தின் இருதயகமலத்தை அதிபரிசுத்தஸ்தானமாகப்பாவித்து, அதன் மத்தியிலே சிதாநந்தவடிவ பரம்பொருளை எழுந்தருளச்செய்து, அன்பை நீராகவும் (யானெனதென்னும் பற்றோடுழலுகின்ற) உயிரை நைவேத்தியமாகவும் பிராணனைத் தூபதீபமாகவும் கொண்டு பூசித்துத் தியானித்தலேயாம். இது பாகியபூசை செய்தவர்களுக்கன்றி யேனையருக்குச் சாத்தியமாகாது. பாகிய பூசையினால் மனோவிருத்தி பாகியத்தில் விரிந்தோடுவதுபற்றி அதனையொழிக்க அந்தர்ப்பூசை விதிக்கப்பட்டது. அகத்திலெழுந்தருளியுள்ள ஆத்மலிங்கத்தைத் தியானிக்காது புறத்துப் பூசிப்பவன் புல்லியனே யாவன். கேவலம் புறம்பிற் செய்யும் பூசை புனர் ஜன்மத்தையும் போகத்தையும் தருவதாயிருத்தலால் அதனை விட்டு அந்தர்ப்பூசையினை யவசியம் இயற்றல்வேண்டும். அது செய்தவனுக்கே விரைவில் ஞானபூசை புரியும் பாக்கியங் கிட்டுமெனக.

சி: பாகிய பூசையைவிட்டு அந்தர்ப்பூசையினைச் செய்யவேண்டுமென்பதற்குரிய பிரமாணங்களைக் கூறியருளும்படி வேண்டுகின்றனன்.

கு: கீழ் வருவனவே.

சைவபுராணம் ஞானசம்ஹிதை.

கர்மயஜ்ஞஸஹஸ்ரேப்யஸ் தபோயஜ்ஞோ விஶிஷ்யதே |
தபோயஜ்ஞஸஹஸ்ரேப்யோ ஜபயஜ்ஞோ விஶிஷ்யதே | ஜப
யஜ்ஞஸஹஸ்ரேப்யோ த்யாநயஜ்ஞோ விஶிஷ்யதே | த்யாந
யஜ்ஞாத்பரம் நாஸ்தி த்யாநம் ஜ்ஞாநஸ்ய ஸாதநம் | ஸாநந்த
காரம்ஸம் விஶாலம் ஶிவதீக்ஷாகரம் | நிர்த்வந்த்வம் ஸர்வதம் ஜ்ஞேயம்
யோகிநாம் ஹ்ருதி ஸம்ஸ்திதம் | ஹிம்ஸம் து திவ்யம் ப்ரகாஶம்
ஸாஹஸ்ரஸூர்யஸங்காஶம் த்விஜா꞉ | பாஹ்யம் ஸர்வம் பரித்யஜ்யா꞉
ஸர்வேந்த்ரியஸங்கம் ஸமம் | கர்மயஜ்ஞரதாயேச ஸர்வஸம்ஸார
பந்தநா꞉ | ஸகலம் பாவநாமாத்ரம் ஸர்வேக்ஷிதம் ஸர்வ
விஷ்ரமம் | ஆத்யாத்மிகம் து யஜ்ஞம் ச ப்ரத்யக்ஷம் யஸ்யநாம
வேஸ | தஸ்ய ஸம்ஸாரமோக்ஷம் ஸத்யமேவ நாந்யதா |
ஜ்ஞாநிநாம் ஸர்வஸம்யம் மமைவ ப்ரத்யக்ஷவேத்யம் | யஸ்ய
ஸர்வம் யோகிநாம் ப்ரகாஶதைவ ப்ரத்யக்ஷிதம் | கர்மணாமி

[illegible] ॥ [illegible]
[illegible] ஸர்வம் ஶிவமயம் ஜகத் ॥ இதி விஜ்ஞாய [illegible]
[illegible] । இதி விஜ்ஞாய [illegible]
[illegible] ॥ [illegible]
[illegible] । [illegible]
நிர்குண [illegible] ।
ஸகுணா நிர்குண [illegible] ॥

(இ - ள்.) கர்மயாகங்கள் பல்லாயிரஞ் செய்வதைக்காட்டிலும் தீர்த்தயாத்திரை முதலிய தபோயாகஞ் சிறந்தது. தபோயாகங்கள் பல்லாயிரத்திலும் ஜபயாகஞ் சிறந்தது. ஜபயாகங்கள் பல்லாயிரத்திலும் மானசிகத்தியான யாகஞ் சிறந்தது. தியான யாகத்திலும் சிறந்தது பிறிதொன்றில்லை......பரமானந்தத்தை யுண்டுபண்ணுவதும் பரிசுத்தமானதும் நாசமில்லாததும் நிஷ்களமானதும் ஸர்வபரிபூரணமா யுள்ளதுமான சிவலிங்கத்தை இதயத் திருப்பதாக அவன் எண்ணுகின்றான். இந்தலிங்கம் பாஹ்யலிங்கம் ஆந்தரலிங்கம் என இருவகைப்படும். அவற்றுள் பாஹ்யம் ஸ்தூலமாகக் கண்ணுக்குப் புலப்படுவது. ஆந்தரம் இருதயத்திற் சூக்ஷ்மமாயுள்ளது. கர்மயாகத்திலிருக்கும் யாவரும் பாஹ்யலிங்கார்ச்சனை செய்யவேண்டும். ஏனெனில், அஞ்ஞானிகட்கெல்லாம் பக்தியுண்டாகும் நிமித்தமாய் ஸ்தூலத்தில் சூக்ஷ்மத்தைப் பாவனைசெய்து பூசிக்கவேண்டியது. ஞானிகட்குத் தோஷரகிதமான சூக்ஷ்மலிங்கம் பிரத்தியக்ஷமாக விருக்கும். அஞ்ஞானிகளியாவரும் மண் மரம் இவைகளாற் செய்யப்பட்ட லிங்கங்களைப் பூசிக்கவேண்டும். தத்துவார்த்தங்களை யுணர்ந்தவர்கள் இம்மிருத்துலிங்க முதலியவற்றாற் பயனின்றிச் சகலமும் சிவமயமென்று பாவித்து அகண்டபரிபூரணராக விளங்குகின்றவர் சிவபெருமானென்று தெரிந்திருப்பார்கள். ஞானிக்கு விக்ரஹ ஆராதனம் வேண்டுவதில்லை. இத்தகைய ஞானமில்லாதவனுக்குப்பிரதிமா கல்பனஞ் செய்துகொள்ள வேண்டுவது அவசியம். உயரவிடத்திற் செல்லவேண்டியவனுக்குச் சோபானம் (படி) இன்றியமையாததுபோல நிர்க்குணமான சிவலிங்கப் பிராப்தியை யடையவேண்டிய அஞ்ஞானிக்குப் பிரதிமாபூஜை சொல்லப்பட்டிருக்கிறது. சகுணபூஜையால் நிர்க்குணமான சிவப்பிராப்தி யுண்டாகும்.

வாயுசங்கிதை.

புறத்தினிற் பூசை செய்து பொற்புறத் தெளிந்து நம்மைத்
திறப்பட வுணர்ந்து நெஞ்சிற் செம்பொனே டிணையா வெண்ணி
நெறிப்பட வியற்று கின்ற கருமங்கள் யாவு நீத்துச்
சிறப்புடை யோகஞ் செய்வோர் சிவகதி சேர்கு வாரே.

வகைப்படப் புறத்திற் பூசை மாசறப் புரிந்து நன்னெஞ்
சகத்தினுட் பூசை செய்ய வேண்டுமோ லதனின் வேறு
மிகத்தனி யுயர்ந்த தில்லை விரித்துநா மெடுத்துக் கொண்டு
பகுத்திடு பூசை வேண்டா பரமஞா னிகட்குத் தானே.

சிறந்தகத்து ளான்மாவி லுறைசிவனைப் பூசையினைச் செய்யா னாகி
மறந்துபுறத் தினிற்பூசை வருந்தியேயியற்றுபவன் வயங்குமாவின்
கறந்தபா லடிசிலகங் கையுளே யிருப்பதுதான் கண்டு ணாது
புறங்கையினை நக்குபவன் போலுமால் யானறியப் புகலுங் காலே.

சிவதருமோத்தரம்.

அகத்திற் புரிவா ரருச்சனையை யரிய பலத்தை யடைந்திடுவர்
சகத்திற் புரிவார் சங்கரனைச் சார்வ ரதனிற் றணியபல
மகத்து ளேவல் புரிவார்க்கு மதிக பலமே யரையன்பாற்
சகத்தி னேவல் புரிவார்க்கு மதனிற் சிறுமை சார்ந்திடுமே.

அகத்தினுட் பூசை செய்வார்க் கருவருப் பில்லை கொல்லும்
பகைத்தொழி லில்லை யல்லற் படிதலு மூடலுக் கில்லை
யுகப்புறு பலமு மேலா முறும்பல முனையி னற்பஞ்
சகத்தினுட் பூசை செய்வார் தமக்கெலாம் வருத்தஞ் சார்தும்.

திருமந்திரம்.

உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசற்
றெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.

ஆலய மாக வமர்ந்த பஞ்சாக்கர
மாலய மாக வமர்ந்தவித் தூலம்பே
ராலய மாக வருகின்ற சூக்கும
மாலய மாக வமர்ந்திருந் தானே.

திருநேரிசை.

காயமே கோயி லாகக் கடிமன மடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி லிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை யீச னார்க்குப் போற்றவி காட்டி னோமே.

சிவஞானப் பிரகாச வெண்பா.

ஆலயமே காய மறிவே சிவலிங்க
மாலயனுங் காணாத வள்ளலுக்குச் - சீலமுறு
மன்பே யபிடேக மன்பேநல் லர்ச்சனையு
மன்பேநை வேத்தியமு மாம்.

அதிரகசியம்.

பூசை யென்பது பூவொடு பாணியோ
வாசை கோப மகந்தை யகற்றியே
நீச வைம்பொறி நெஞ்ச ணிறுத்தியே
யீச னைத்தம் மிபத்துட் காண்டலே.

பிரபுலிங்கலீலை.

புறம்பு காண்குவன் புல்லிய னீசனை
யறிந்த ஞானி யகமுறக் காண்பனு
லெறும்பி காணுமி னின்கரும் பேகொளுஞ்
செறிந்த வாடிலை தின்பன வென்பவே.

தாயுமானவர்.

நெஞ்சகமே கோயி னினைவேசு கந்தமன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே.

ஞானக்ஷேத்திரம்.

யோகசிகோபநிஷத்.

𑌦𑌶𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌪𑍁𑌰𑌂 𑌦𑍇𑌹𑌂 𑌦𑌶𑌨𑌾𑌡𑍀 𑌮𑌹𑌾𑌪𑌥𑌮𑍍 । 𑌦𑌶𑌭𑌿𑌰𑍍𑌵𑌾𑌯𑍁𑌭𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌦𑌶𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌦𑌮𑍍 । 𑌷𑌡𑌾𑌧𑌾𑌰𑌾𑌪𑌵𑌰𑌕𑌂 𑌷𑌡𑌨𑍍𑌵𑌯 𑌮𑌹𑌾𑌵𑌨𑌮𑍍। 𑌚𑌤𑍁𑌃𑌪𑍀𑌠 𑌸𑌮𑌾𑌕𑍀𑌰𑍍𑌣𑌂 𑌚𑌤𑍁𑌰𑌾𑌮𑍍𑌨𑌾𑌯 𑌦𑍀𑌪𑌕𑌮𑍍 । 𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌨𑌾𑌦 𑌮𑌹𑌾𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌶𑌿𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌨𑌿𑌕𑍇𑌤𑌨𑌮𑍍। 𑌦𑍇𑌹𑌂 𑌶𑌿𑌵𑌾𑌲𑌯𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍॥

(இ-ள்.) பத்துவழியுள்ள பட்டணமாகிய தேகம் 10-நாடிகளைப் பெரிய வழிகளாகவுடையது, 10-வாயுக்களால் வியாபிக்கப்பட்டது, 10-இந்திரியங்களைச் சேனைகளாகவுடையது, ஆறு ஆதாரங்களை யபவர்க்கமாகவுடையது, அந்வயங்களாறையும் பெரிய காடாகவுடையது, 4-பீடத்தினுல் வியாபிக்கப்பட்டிருக்கிறது, 4-வேதங்களையும் தீபமாகவுடையது, பிந்துநாத மென்பதையே பெரிய லிங்கமாகவுடையது, சிவசத்திக்கு வீடாக விருக்கிற சரீரமே சிவாலயமென்று சொல்லப்பட்டிருக்கிறது, எல்லாப்பிராணி

களுக்கும் சகல சித்திகளையும் கொடுக்கிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

மைத்திரேயோபநிஷத்.

𑌦𑍇𑌹𑍋 𑌦𑍇𑌵𑌾𑌲𑌯𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌸𑌜𑍀𑌵𑌃 𑌕𑍇𑌵𑌲𑌃 𑌶𑌿𑌵𑌃|
𑌤𑍍𑌯𑌜𑍇𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌂 𑌸𑍋𑌽𑌹𑌂 𑌭𑌾𑌵𑍇𑌨 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍 ||

(இ-ள்.) தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகிறது. அதிலிருக்கிறஜீவனானவன் சிவனே. (ஆதலால்) அஞ்ஞானமாகிய நிர்மாலியத்தைத் தள்ளி (ஸோஹம்) அவன் நானென்கிற பாவனையினாலே பூசிக்கவேண்டியது.

ஸ்கந்தோபநிஷத்.

𑌦𑍇𑌹𑍋 𑌦𑍇𑌵𑌾𑌲𑌯𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍋 𑌜𑍀𑌵𑍋 𑌦𑍇𑌵𑌃 𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌃|
𑌤𑍍𑌯𑌜𑍇𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌂 𑌸𑍋𑌽𑌹𑌂 𑌭𑌾𑌵𑍇𑌨 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍||

(இ-ள்.) தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகிறது. ஜீவனானவன் எப்போதும் மங்களசுவரூபியான தேவனாகவே யிருக்கிறான். அஞ்ஞானமாகிய நிர்மாலியத்தை நீக்கி அவன் நானென்கிற பாவனையோடு பூஜிக்கவேண்டியது.

பகவத்கீதை.

𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌭𑌾𑌰𑌤 |
𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌯𑍋𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑌤𑍍𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌮𑌤𑌂 𑌮𑌮||

(இ-ள்.) ஓ! பரதகுலத் துதித்தவனே! சகல க்ஷேத்திரங்களிலேயும் என்னையே க்ஷேத்ரஞ்ஞனாக அறி. க்ஷேத்திரம் க்ஷேத்திரஞ்ஞனென்கிற விவேக ஞானமெதுவோ அதுவே ஞானமென்பதென்னுடைய மதம்.

திருமந்திரம்.

ஓதலும் வேண்டா முயிர்க்குயி ருள்ளுற்றாற்
காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டாற்
சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே.

சொரூபசாரம்.

ஏகா வைத்திற் சிதாகாச தேவதையை
வாகாய சாந்தி மலராலே - யேகாந்த
மந்திரத்தாற் பூசைசெயு மாதவரை யாதரித்துச்
சந்ததம்வாழ் வார்க்கார் சரி.

### அதிரகசியம்.

அள்ளிக் கோவிலை யென்னுவா சாணையே
நள்ளிக் கோவிலை நத்திப்பெற் றுங்கொளி
யுள்ளக் கோவிலை யுன்றிப்பா ராதவர்
கள்ளக் கோவிலைக் காமுறு வார்களே.

### சிவஞானப் பிரகாச வெண்பா.

உள்ளந் திருக்கோயி லூனுடலே சுற்றுமதில்
வள்ளலுக்கு வாயே மணிச்சிகரந் - தெள்ளித்
தெளிந்தவர்க்குச் சீவன் திருமேனி நீப
மளந்தறியு மைம்புலனே யாம்.

## ஞானதீர்த்தம்.

### தரிசனோபநிஷத்.

𑌆𑌤𑍍𑌮𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌸𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌬𑌹𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌯𑍋 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ।
𑌕𑌰𑌸𑍍𑌥𑌂 𑌸 𑌮𑌹𑌾𑌰𑌤𑍍𑌨𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌾𑌚𑌂 𑌵𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑌤𑍇 ॥ 𑌭𑌾𑌵𑌤𑍀𑌰𑍍𑌥𑌂
𑌪𑌰𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 । 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾𑌲𑌿𑌙𑍍𑌗𑍍𑌯
𑌤𑍇 𑌕𑌾𑌨𑍍𑌤𑌾 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾𑌲𑌿𑌙𑍍𑌗𑍍𑌯𑌤𑍇 𑌸𑍁𑌤𑌾 ॥ 𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌤𑍋𑌯
𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌕𑌾𑌷𑍍𑌠𑌾𑌦𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌤𑌾𑌨𑍍 । 𑌯𑍋𑌗𑌿𑌨𑍋 𑌨
𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 ॥ 𑌬𑌹𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌥𑌾
𑌤𑍍𑌪𑌰𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌅𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌮𑌹𑌾𑌮𑍁𑌨𑍇 । 𑌆𑌤𑍍𑌮𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌮𑌹𑌾𑌤𑍀𑌰𑍍𑌥
𑌮𑌨𑍍𑌯𑌤𑍍𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌨𑌿𑌰𑌰𑍍𑌥𑌕𑌮𑍍 ॥ 𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑌂 𑌦𑍁𑌷𑍍𑌟𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑌸𑍍𑌨𑌾
𑌨𑍈𑌰𑍍𑌨 𑌶𑍁𑌧𑍍𑌯𑌤𑌿 । 𑌶𑌤𑌶𑍋𑌽𑌪𑌿 𑌜𑌲𑍈𑌰𑍍𑌧𑍌𑌤𑌂 𑌸𑍁𑌰𑌾
𑌭𑌾𑌣𑍍𑌡𑌮𑌿𑌵𑌾𑌶𑍁𑌚𑌿 ॥ 𑌵𑌿𑌷𑍁𑌵𑌾𑌯𑌨𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌗𑍍𑌰𑌹𑌣𑍇 𑌚𑌾𑌨𑍍
𑌤𑌰𑍇 𑌸𑌦𑌾 ॥ 𑌵𑌾𑌰𑌾𑌣𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌸𑍍𑌨𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑍁𑌦𑍍𑌧𑍋 𑌭𑌵𑍇
𑌨𑍍𑌨𑌰𑌃 ॥ 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌪𑌰𑌾𑌣𑌾𑌂 𑌤𑍁 𑌪𑌾𑌦𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑌿𑌤𑌂 𑌜𑌲𑌮𑍍 ।
𑌭𑌾𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌤𑌤𑍍𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌮𑍁𑌨𑌿𑌪𑍁𑌙𑍍𑌗𑌵 ॥

(இ - ள்.) தனக்குள்ளிருக்கிற (தேகத்திற்குள் பரிசுத்தமாயிருக்கிற) தீர்த்தத்தைவிட்டு வெளியிலிருக்கிற (காசி, பிரயாகை, குருக்ஷேத்திரம் முதலிய ஸ்தலங்களிலுள்ள) தீர்த்தங்களைக் குறித்தெவன் போகிறானோ அவன் கையிலிருக்கிற மஹாரத்தினத்தை எறிந்துவிட்டுப் பளிங்குக் கல்லைத் தேடுகிறவனுக் கொப்பாவான். எல்லாக் காரியங்களிலும் மனதினுடைய தோற்றத்தினுண்டான தீர்த்தந்தான் சிரேஷ்டமென்பது சாஸ்திரத்தின்

நிச்சயம். ஜலங்களால் நிறைந்த தீர்த்தங்கள் கட்டை முதலியவைகளாற் செய்யப்பட்டிருக்கிற தேவதைகளிவைகளைத் தன்னுடைய திருப்தியின் பொருட்டு, மனைவி புத்திரி இவர்களை ஆலிங்கனஞ் செய்துகொள்வதுபோல், யோகி தன்னுத்துமப் பிரயோஜனத்தின் பொருட்டு (தீர்த்தம் முதலியவைகளை)ச் சரணமடைகிறதில்லை. ஓ! மஹாமுநியே! வெளிதீர்த்தத்தைக் காட்டிலும் தேகத்திற்குள்ளிருக்கிற (மேற்குறித்த) தீர்த்தமானது ஸர்வசிரேஷ்டமாக விருக்கிறது. தனக்குள்ளிருக்குந் தீர்த்தமானது மஹாதீர் * த்தமாயிருக்கையில் மற்றத் தீர்த்தம் பிரயோஜன மற்றது. உள்ளேயிருக்கிற அசுத்தமான சித்தமானது (வெளி) தீர்த்தஸ்நானத்தாற் சுத்தமாகிறதில்லை. (எப்படிப்போலெனில்) அநேகந்தடவை ஜலத்தினாற் சுத்தஞ்செய்யப்பட்டாலும் கள்ளுக்குடமானது சுத்தமாகாததுபோற்றான். விஷுபுண்ணிய காலங்களிலேயும் தக்ஷிணாயந உத்தராயண புண்ணிய காலங்களிலேயும் கிரஹண காலத்திலேயும் மற்றக் காலங்களிலேயும் எப்போதும் காசிமுதலிய விடங்களிலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து மனிதன் சுத்தியை யடைகிறான். ஞானயோகத்திலேயே நிலையாயிருக்கிறவர்களின் பாதங்களைக் கழுவின ஜலமானது ஓ! முனிசிரேஷ்டா! அஞ்ஞானிகளுக்கு மனச்சுத்தியின் பொருட்டுத் தீர்த்தமாகிறது.

மைத்திரேயோபநிஷத்.

அஹம் மமேதி விண்மூத்ர லேபகந்தாதி மோசநம் | ஶுத்த ஶௌசமிதி ப்ரோக்தம் ம்ருஜ்ஜலாப்யாம் து லௌகிகம் || சித்தஶுத்திகரம் ஶௌசம் வாஸநாத்ரய நாஶநம் | ஜ்ஞாநவைராக்ய ம்ருத்தோயை: க்ஷாலநாச்சௌசமுச்யதே ||

(இ-ள்.) யானெனதென்பதே மலமூத்திரத்தினாற் பூசிய கந்தம். அதைக் கழுவிக்கொள்வதுதான் சுத்த சௌசம். ஜலத்தினாலும் மண்ணினாலும் செய்துகொள்ளும் சௌசம் உலகவழக்கம். வாசனாத்திரய நாசமானது சித்த சுத்திகரமான சௌசம். ஞான வைராக்கியமென்னும் மண் ஜலங்களினாலே செய்துகொள்ளும் சுத்திதான் சௌசமென்று சொல்லப்படுகிறது.

உத்தரகீதை.

தீர்த்தாநி தோயபூர்ணாநி தேவாந் பாஷாணம்ருண்மயாந் |
யோகிநோ ந ப்ரபத்யந்தே ஆத்மத்யாநபராயணா: ||

(இ - ள்.) ஆத்மதீர்த்தியான பராயணர்களாகிய யோகிகள் ஜல வடிவமான தீர்த்தங்களையும் கல் மண் வடிவமான தைவங்களை யும் அடைகிறதில்லை.

சூதஸங்கிதை.

ஜ்ஞாநஹ்ரதே த்ருடே ராகத்வேஷமலாபஹே யஸ்ஸ்நாதி |
மாநஸே தீர்த்தே ஸயாதி பரமாம் கதிம் ||

(இ - ள்.) மனசில் பிரமஞானதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து இராகத் துவேஷாதிகளை யொழித்துச் சுத்தமடைந்தவனே முத்தி யடைவன்.

ஆத்மதீர்த்தம் ஸமுத்ஸ்ருஜ்ய பஹிஸ்தீர்த்தம் வ்ரஜந்தி யே |
கரஸ்தம் ஸமஹாரத்நம் த்யக்த்வா காசம் விமார்கதே ||

(இ - ள்.) ஆத்மதீர்த்தத்தை விட்டவராய்ப் புறம்பிலுள்ள (கங்கா) தீர்த்தஸ்நானத்தை விரும்புதல் தமது கையிலுள்ள இர த்தினத்தை யெறிந்துவிட்டு வழியிற்கண்ட வளையற்கல்லைப் பத் திரப்படுத்துவதுபோலாம்.

ஞானவாசிட்டம்.

ஸம்ஸாரோத்தாரகம் நாம ஜ்ஞாநமேவ ஹி தீர்த்தம் |
தாரயேத் யஸ்ஸ ஜ்ஞாநேந ஜ்ஞாநமேவ பரம் தீர்த்தம் ||

(இ-ள்.) எந்த ஸ்வஸ்வரூபஞானம் ஜநந மரண சாகரத்தைக் கடப்பித்து மோக்ஷமென்கிற கரையிற் சேர்க்கிறதோ அந்த ஞானமே தீர்த்தமெனப்படும்.

ஆத்மபோதம்.

திக்தேஶகாலாத்யநபேக்ஷ்ய ஸர்வகம் ஶீதாதிஹ்ருந்நித்ய ஸுகம் நிரஞ்ஜநம் | யஸ்ஸ்வாத்மதீர்த்தம் பஜதே விநிஷ்க்ரிய: ஸஸர்வவித் ஸர்வகதோ ம்ருதோ பவேத் ||

(இ - ள்.) எல்லாக் கருமங்களையும் விட்ட எந்தச் சந்நியாசி காலந்திக்கு முதலியவற்றை இச்சியாமல், எல்லாவற்றிலும் வியாபித் திருக்கின்றதாயும். சீதோஷ்ணாதி துவந்துவங்களைப் போக்குகின்றதாயும் நித்தியாநந்த ஸ்வரூபமானதாயும் இடைய றாத பிரகாச ஸ்வரூபமாயுமிருக்கிற தன்னுடைய ஆத்மாவாகிய தீர்த்தத்தை அடைகிறானோ அவன் சர்வபரிபூரணனாகியும் ஜநந மரணமில்லாத நித்தியஸ்வரூபனாகியும் ஆவான்

### திருமந்திரம்.

உள்ளத்தி னுள்ளே யுளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப்
பள்ளமு மேடும் பரந்து திரிவரேற்
கள்ள மனமுடைக் கல்வியி லோரே.

### சூதசங்கிதை.

திருத்தகு மான்ம தீர்த்தத்தின் மூழ்கித் தெய்வதத் தலங்களு மாங்குக், கருத்துறக் கண்டு வணங்கிடும் போகர் கருமங்கள் வேண்டிடார் தென்று,முருத்துவல் லிருளை யுண்டெழு கதிரோ னொத்த மா மணிகள்விற் றுண்போன், பெருத்த வடமிகங்க முதலிய தாங்கிப் பேணிவிற் றுண்பனே வுணர்வீர்.

கழிசுரா பாண்டந் தன்னைநன் னீரிற் கணக்கில்பல் தரங்கழு விடினும், பழியகன் றறுமோ சுத்தியை யதுபோற் பைம்புன லாற் சுத்தி யடையா, மொழிதரு முடல மான்மநீர்த் தத்தான் முழுச் சுத்தி யெய்திடு முடனே, யழிவரு சித்த சுத்தியு ஞான போகமுந் தியுமடைந் திடுமால்.

அறிவினிற் பெரியோ ரகத்தினும் புறத்து மாகிய தீர்த்தங்கள் மூழ்கிச், செறிதரு தெய்வத் தலங்களும் போற்றிச் சிவானந்த முத்தியை யடைவா,ரறிவினல் வளவு சிறந்திடார் புறத்தே யாகிய தீர்த்தங்கள் மூழ்கிச், செறிதருந் தெய்வத் தலங்களும் போற் றிச் சிவனுறுவர் போகமே தானும்.

### ஞானவாசிட்டம்.

வெகுவா யடைந்த பொருள்களிலே மேவித் தனது மெய்யு ணர்வாற், தகுநீர் முழுக்கான் மலமற்றுத் தப்பில் போத பூசனை யான்,மிகுநற் போத விலிங்கத்தை மேவு பூசை செயல்வேண்டும், பகுதி யில்லா விப்போதம் பயிலா திருக்கு மிடமுண்டோ.

### காசிகண்டம்.

சத்தியக் தானஞ் சம்மத மின்சொற் சாற்றுத லொருவழிப் படுதல், புத்திமே முதல கரணமோர் நான்கு மடக்குதல் புலன்கள்போம் வழியி, னுய்த்திடா தமைத்தல் பொறைதிட ஞான முயிர்க்கெலாந் தண்ணளி புரித, லித்திற மனைத்து மானத தீர்த்த மெனவெடுத் தியம்பினர் மேலோர்.

அறத்துறை பயிலு மானத தீர்த்த மாடல ராகிநீ ராடிற், புறத் தழுக் கொழிவ தல்லது புனித ராகிலர் பூந்திரை சுருட்டுஞ்,சிறை ப்புன லதனின் முழையுறழ் பகுவாய்த் தீவிழிக்கூரெயிற் றிடங்கர், சுறக்குல முதல வளப்பருங் காலந் தோய்ந்ததாற் றுறக்கமுற் றனவோ.

உரைப்பரு மானத தீர்த்த மோதிடிற்
சுருக்கமின் ஞானநீர் தோய்தன் மற்றது
விருப்பொடு வெறுப்பென விளம்பப் பட்டதோர்
கருப்புகுத் திடுமலங் கழுவு மென்பவே.

கைவல்லிய நவநீதம்.

இவனதி காரி யானே னிந்திரி யங்க ளாலும்
புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும்
தவனமுன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்
பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே.

பதிபசுபாச விளக்கம்.

யாவ னொருவ னஞ்ஞானச் சேற்றை ஞான விரும்புனலா
லோவக் கழுவு வானவனே யொழிசே ரமல சதாசுத்தன்
றுவு கரும தற்பரனுய்த் தபன னெழுமுன் றரியானு
யாவ லோடெங் கங்கைமுதற் படிந்தா னேனு மசுத்தனே.

தணிகைப் புராணம்.

தமனியக் கடமே யாயினும் பவ்வித் தங்குறின் விழைஞ ரும் பற்று,ரமிழ்தமே யானுந் துய்ப்புறிற் பவ்வி யாக்குமிவ் வுடற் புக ரறிந்து, மிமிழ்தரப் பற்று மடவருக் குரைத்து மென்பயன் றீர்த்தமா டிடினு, முமிழ்முடை யாக்கை சுசியுறு திறைவ ணுண மைதேர்ந் துயிர்சுத்தி யுறுமே.

அதிரகசியம்.

தீர்த்தந் தேடித் திகைத்துத் திரிவீர்கா
டீர்த்த மாவது தேசிகன வாசகந்
தீர்த்த மீதெனத் தேர்ந்துகொ ளாதவர்
தீர்த்த மாடியுந் தேரையொப் பார்களே.

சிவவாக்கியம்.

தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடுந் தீதரே
தீர்த்தலிங்க முள்ளினின்ற சிவனைத் தெளியுமோ
தீர்த்தலிங்க முமுளே தெளிந்துகாண வல்லிரேற்
றீர்த்தலிங்கந் தானதாய்ச் சிறந்ததே சிவாயமே.

## ௯௯ - வது சம்வாதம்.



### நிர்க்குணபூசையே நிஜபூசையாமெனல்.

சி: தேவரீர் ஞானபூசையென்றதியாது ?

கு: அது: காட்சியையெல்லாங் கண்ணதாக் கரைத்துக் கண்ணாகவே நிற்றலாம். ஞான பூசையெனினும் நிர்க்குண பூசையெனினுமொக்கும்.

காட்சி—திர்சியம், கண்—திருக்கு,கரைத்தல்—அறிவையன்றியறியப்படும்பொருள் சிறிதுமின்றெனத் தெளிவா யறிதல்.

சி: நிர்க்குண பூசையை நன்கு விளக்கிக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: விருத்தியை நாமரூப ஆகாரமாக வொட்டாது சச்சிதாநந்தாகாரமாகச் செய்வதே நிர்க்குணபூசையாம்.

சி: அதன் பயன்யாது ?

கு: சத்துவகுணத்தால் ஈசுவரனையும், இராஜோகுணத்தால் சீவரையும், தமோகுணத்தால் உலகத்தையுமுண்டாக்கி அவைகளைச் சிருட்டிதோறும் விரித்தடக்கி விநோதியா நிற்கும் பிரகிருதிக்கு அதீதமாய்ச் சுத்த அதிஷ்டானமாய்ச் சச்சிதாநந்த வடிவமாயுள்ள ஆன்மாவாக நிலைத்தலே நிர்க்குணபூசையின் பயனும். வியவகாரதசை அல்லது பிராதிபாசிகதசையைக் குறித்துப் பிரமத்தின்பாற் கற்பிக்கப்படும் சர்வஞ்ஞத்வாதிகுணங்கள் ("இல்லையிருப் பதுபொய்மெய் விளக்க மஃதின்மையென விவைமுன்னாகச், சொல்லும்விவ காரமெலா மாயையினாற் றுனின்ப சொரூபனென்னும், வல்லசிவன் கற்பித்த மாயாகாரியப்பவஞ்ச மருவுந்தோற்றஞ்,செல்லலுறு விவகார திசையினன்றிப் பரமார்த்த திசையினில்லை" என்று சூதசங்கிதை கூறியவாறு) பரமார்த்த தசைக்கண் இன்மையால் பிரமம் நிர்க்குணமாம். பிரமம் எனினும் ஆன்மா எனினும் ஒக்கும். "சிவனே யுள்ளான் பிறிதில்லையென்று திரமா யறிவதுவே, பவமே யொழிக்கும் பரமார்த்தம்" என்று பிரமகீதை கூறியபடி சிவனேயுள்ளான என்று திடவபரோட்சமாகவறிவது நிர்க்குணபூசையாம். அஃதாகவே பிறழ்ச்சியின்றி நிலைத்தல் அதன்பயனுமென்க.

சி: அதனங்கங்களை நன்கு விளக்கிக் கூறுமாறு பிரார்த்திக்கின்றனன்.

### (1) ஆவாகனம்.

பரிபூரணமாயுள்ள பிரமத்தை ஓர் வடிவத்தில் ஆவாகித்தல் (தாபித்தல்) ஆகாயத்தை யோர்கரகத்தில் தாபித்தல்போல்

வதாயிருத்தலின், மாயையும் அதன் காரியவடிவப் பிரபஞ்சமும் காலத்திரயத்திலுமில்லை; நாசரகிதனானநானே சேடமாய் (மிஞ்சி) இருக்கிறேனென்று சிந்திப்பதே ஆவாகனமாம். (ஆகாயத்தை யோர் கரகத்தில் தாபிக்கமுடியாமைபோல் பிரமத்தை யோர் வடிவத்தில் தாபிக்கமுடியாதென்பது கருத்து.)

(2) ஆசனம் (பீடம்.)

கயிற்றிற்றோன்றிய வரவிற்குக் கயிறு ஆதாரமாயிருத்தல் போன்று நாமரூபவடிவப் பிரபஞ்சத்திற்கு ஆதாரமாயிருக்கும் பிரமத்திற்கு ஆசனமளித்தல் கூடாமையின், தன்னிலேதானு யிருக்கும் பரமசிவமே நானென்று சிந்தித்தல் ஆசனமாம். (கயிற் றிற்றோன்றிய வரவு அக்கயிற்றிற்கு ஆதாரமாயிருத்தல் முடி யாமை போன்று, பிரமத்திற்றோன்றிய உலகத்தி லோர்பொருள் அதற்கு ஆதாரமாயிருக்க முடியாதென்பது கருத்து.)

(3) அர்க்கியம் (கால்கழுவு நீர்.)

எஞ்ஞான்றும் பரிசுத்தமாயிருக்கும் பரசிவத்திற்கு * அர்க்கிய பாத்தியாதிகள் தருதற்கிடனின்மையின், அநாதியாயுள்ள அவித் தையென்னும் விபரீதபுத்தியை விடுதலே ஆன்மலிங்கத்திற்கு அர்க்கியமாம்.

(4) பாத்யம் (கைகழுவு நீர்.)

இருவினைகள் அவித்தை அல்லது அந்தக் கரணசகித ஆபாச னுக்கேயன்றி மாயாரகிதனாகியவெனக்கு (எனது நிசவடிவமான ஆன்மாவிற்கு) எஞ்ஞான்று மில்லையென்று சிந்திப்பதே பாத்தி யமாம்.

(5) ஆசமனம் (குடிநீர்.)

† மனுடன்முதல் இரணிய கருப்பனீறாயுள்ள யாவரும் பிரமாநந்தத்தின் லேசத்தினும் லேசத்தையே யனுபவிக்கின்றன ரென்று சிந்தித்தலே ஆசமனமாம்.

(லேசத்தினும் லேசம்—சிறிதினும் சிறிது.)

(6) அபிஷேகம்.

சச்சிதாநந்தவடிவ ஆன்மா நாமரூபமின்றி யிருத்தலின் அதற்கபிஷேகஞ் செய்தல் கூடாதகாரியமாயிருத்தலின், பரி

* அர்க்கிய முதலிய வுபசாரங்கள்:—கைகழுவுநீர், கால்கழுவுநீர், ஆசனப்பலகை, விசிறுதல், உணவு, குடிநீர்தருதல முதலியவைகளாம்.

† மனுடன் மனுடகந் தருவன் றேவகன் மாகந் தருவனென் பிதி ரோடே, பனுமா ஜானர்கள் கருமத்தேவர்கள் பகர்முக் கியரிந் திரனுசான், கனமார் பிரஜா பதியென் விராட்டுபொன் கர்ப்பப் பிரமனென் றின்னோர் கள், பினவா நந்தங்க ளுலையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மாநந்தம். என்று கைவல்லியநவநீதம் கூறுகின்றது.

பூரணமாயும் ஆநந்தக்கடலாயுமுள்ள என்னால் உலகமுற்றும் நனைக்கப்பட்டிருக்கிறது (வியாபிக்கப்பட்டிருக்கிறது) என்றும் நான் நீரினால் நனைத்தற் கியலாத நிஷ்களப்பிரமமென்றுஞ் சிந்தித்தலே அபிஷேகமாம்.

(7) ஆடைசாற்றல்.

திகம்பரனாய் வியாபகமாயிருக்கும் பரமசிவத்திற்கு ஆடைசாற்றல் முடியாதாகலின், எத்தகைய ஆடையுந் தரித்தற் கியலாத பூரணவடிவன் நான் என்றறிவதே ஆடைசாற்றலாம். (திகம்பரன் - திக்கையாடையாக வுடையவன்.)

(8) உபவீதம் (பூணூல்) தரித்தல்.

வருணாச்சிரமமென்ப தொன்றுமின்றிய பரமசிவத்திற்கு உபவீதந் தரித்தல் ஒருவாற்றானு மியையாததாயிருத்தலின், முக்குணவடிவாயுள்ள உலகமெனனும் சூத்திரத்தைத்தரித்து அதற்கு அதிஷ்டானமாயுள்ள பரப்பிரமவஸ்துவே நானென்று சிந்தித்திருத்தலே உபவீதந் தரித்தலாம்.

(9) ஆபரண மணிதல்.

அவனவளது வென்னும் பேதஞ் சற்றுமின்றி நிராகார வடிவாயுள்ள பரமசிவத்திற்கு ஆபரணமணிதல் பொருந்தாததாயிருத்தலின், நிர்விசேஷ சின்மாத்திர ஆன்மாவே நானென்று சிந்தித்திருத்தலே ஆபரண மணிதலாம்.

(10) கந்தம் (சந்தனக்குழம்பு) பூசல்.

கானல் ஜலத்துடன் கானலுக்குச் சம்பந்த மில்லாமைபோன்று, உலகத்துடன் சம்பந்தமின்றிய (அசங்கவடிவ) பிரமத்திற்குக் கந்தத்தைப் பூசுதல் இயைவதன்றாயிருத்தலின், நாமரூபபேதத்தால் பலவாய் விரிந்துள்ள உலகத்தைக் கற்பிதமாகத் தரித்துள்ள விபு எதுவோ அதுவே நானென்று சிந்தித்திருப்பதே கந்தம் பூசுதலாம்.

(11, 12) அர்ச்சனை, அட்சதை.

யாதொரு வருத்தமுமின்றிய பரம்பொருளுக்கு வில்வமுதலியவற்றா லருச்சித்தலும் அட்சதை தரித்தலும் பொருந்தாவாகலின், இவர் குரு, நான் சிஷியன், இவன் ஈசுவரன் என்னும் பேதமூன்றையு மொழித்தல் அர்ச்சனையும், முக்குணவிருத்திகளையும் விடுதல் அட்சதையுமாம்.

(13, 14) தூபம், தீபம்.

நாசி (மூக்கு) கை முதலியவைகளின்றிப் பரிசுத்தமாகப் பொருந்திய சுயஞ்சோதி வடிவப்பிரமத்திற்குத் தூபத்தையும் தீபத்தையும் காண்பிக்கும் வகை கூடாததாயிருத்தலின், விஷய வாச

ளைகளை யொழித்தலே தூபமும், சுயஞ்சோதியாய் விளங்கும் நிர்க்குணவடிவ பரமசிவனே நானென் றிடைவிடாது பாவிக்கும் பாவனையே தீபமுமாம்.

(15) நைவேத்தியம்.

நித்தியாநந்த திருப்தனாயிருக்கும் பரமசிவனுக்குப் போஜனமாக நைவேத்தியஞ் செய்தல் அமையாததாயிருத்தலின், சர்வம் மித்தை, சர்வம் பிரமம், சர்வம் நானென்று சிந்தித்திருத்தலே நைவேத்தியமாம்.

(16) தாம்பூலமளித்தல்.

எல்லாப் பிராணிகளும் ஆநந்தமடைவதற் கேதுவாயுள்ள சங்கரனுக்கு ஆநந்தமுண்டாம்படி தாம்பூல மளித்த லடாததாயிருத்தலின், வெகுவிதமாக விருப்பமுறுதற் கேதுவான சப்தாதி விஷயங்களைப் பிரயத்தன பூர்வகமாக விடுதலே தாம்பூல மளிப்பதாம்.

(17) மலர்மாலை சாற்றல்.

எல்லாமாய் விளங்கும் பரம்பொருளுக்கு இடங்குறித்து மலர்மாலை தரித்தல் ஏற்காததாயிருத்தலின், காணப்படுவனவெல்லாம் பிரமமென்னும் ஞாநோதயமே மலர்மாலை தரித்தலாம்.

(18) கற்பூர வாராத்தி.

அக்கினி ரவி முதலிய வெப்பொருள்களையும் விளங்கச்செயயும் சிற்சோதிக்குக் கற்பூரவாராத்தி செய்வது அமையாததாயிருத்தலின், உள்ளஞ் சுயஞ்சோதி யென்றுணர்தலே கற்பூரவாராத்தி செய்வதாம்.

(19) நீராஞ்சனம் (ஆலாத்தி).

யாதொருதிருஷ்டிக்கும் விஷயமாகாது திருக்குவடிவாயுள்ள பரம்பொருளுக்குத் திருஷ்டி கற்பித்து ஆலாத்தி சுற்றுதல் அசம்பாவிதமா யிருத்தலின், அவிச்சையை யொழித்தற்கியன்ற பிரமாத்ம ஐக்கியஞானத்தை யடைதலே நீராஞ்சனஞ் சுற்றலாம்.

(20) வலம் வரல்.

கால தேச வஸ்து பரிச்சேதமின்றிய பரம்பொருளை வலம் வருதல் யுக்திக் கியன்றதன்றாயிருத்தலின், காரியமாய பிரமாண்டமியாவும் என்னிடத்திற் கற்பிதமாய் மாறிமாறி வருகின்றனவென்னுஞ் சிந்தனையே வலம் வரலாம்.

(21) வணங்குதல்.

எஞ்ஞான்றும் அத்துவிதமாயிருக்கும் ஏகனை அஷ்டாங்க பூருவகமாய் வணங்கல் ஆகாததொன்றா யிருத்தலின், வணங்கத்

தக்கவர் எனக் கயலாயின்மையின் யான் யாரையும் வணங்கேன் என்னுந் திடஞானமே வணங்குதலாம்.

(22) வழுத்துதல் (துதித்தல்).

மன வாக்கு முதலியவைகளுக் கெட்டாதுள்ள மகாதேவனை சங்கர சுயம்புவே சம்புவே என்றற் றொடக்கத்தனவாய்த் துதித்தல் கூடாமையாயிருத்தலின், அகண்டமாயுள்ள வென்னிடத்தில் நாமரூபங்கள் சிறிதுமில்லையென்று சிந்தித்தலே அரநாமசங்கீர்த்தனமாம்.

(23) தியானம்.

நாமரூபத்தை முன்னிட்டுக் கற்பிக்கப்படும் உருவம் சிறிதுமின்றிய பரமசிவத்திற்கு ஓர் வடிவத்தைக் கற்பித்துத் தியானித்தல் இயைவதன்றாயிருத்தலின், உலகத்தில் கர்த்தவ்வியம் (செய்யத்தக்கது) எனக்குச் சிறிதுமின்றென்று சிந்தித்தலே தியானமாம்.

(24) விசர்ச்சனம் (மலங்கழிதல்.)

அகம்புறமெங்கும நிறைந்துள்ள ஆநந்த வடிவனுக்கு விசர்ச்சனமுண்டென்பது கூடாமையின், மனோசங்கற்பமும் அதற்கேதுவாய விட்சேபமும் சிறிதுமின்றிக் கருவிகரணங்களெல்லாம் தன்னிலையில் ஒத்து நிற்றலாகிய சமாதியே விசர்ச்சனமாம்.

(25, 26, 27) வியஞ்சனம், அத்தந்துலக்கல், புஷ்பாஞ்சலி.

பிரமாநந்தாகாரமாயிருக்கும் அகண்டாகாரவிருத்தியே வியஞ்சன (கறி) மென்றும், ஞானதீர்த்தத்தாலே மூலாஞ்ஞானமென்னும் அழுக்கைக் கழுவுதலே அத்தந் துலக்க (கண்ணடி காட்ட) லென்றும், பூரணமாய் ஆநந்தவடிவாயுள்ள ஆன்மாவே நானென்று சிந்தித்தல் புஷ்பாஞ்சலி (பூச்சொரிந்து வந்தித்தல்) என்றுங்கொள்க. [இந்நிர்க்குணபூசை ரிபுகீதையை யனுசரித்தெழுதப்பட்டது.]

சி: நிர்க்குண. பூசைக்குரிய பிரமாணங்களைக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ்வருவனவே.

மண்டல ப்ராஹ்மணோபநிஷத்.

𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 । 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮 𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌮𑌾𑌵𑌾𑌹𑌨𑌂 । 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌸𑌨𑌂 । 𑌉𑌨𑍍𑌮𑌨𑍀𑌭𑌾𑌵𑌃 𑌪𑌾𑌦𑍍𑌯𑌂 । 𑌸𑌦𑌾𑌮𑌨𑌸𑍍𑌕𑌮𑌰𑍍𑌘𑍍𑌯𑌂 । 𑌸𑌦𑌾𑌦𑍀𑌪𑍍𑌤𑌿𑌰𑌪𑌾𑌰𑌾𑌮𑍃𑌤𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 ॥ 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌭𑌾𑌵𑌨𑌾 𑌗𑌨𑍍𑌧𑌃 । 𑌦𑍃𑌕𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑌕𑍍𑌷𑌤𑌾𑌃 ॥

[illegible]

(இ-ள்.) நிர்ச்சிந்தையாக விருப்பதே தியானம், சர்வ கர்மங்களையும் நிராகரிப்பதே ஆவாகனம், நிச்சயஞானமே ஆசனம், உன்மனிபாவமே பாத்தியம், மனமற்றநிலையே அர்க்கியம், ஸதா ஞாநாகாரமாய எல்லையற்ற அமிர்தவிருத்தியே ஸ்நாநம், சர்வத்தையும் ஆத்மாவாகப் பாவிப்பதே கந்தம், மாறுதபடி திருஷ்டியைப பிர்ம்மத்தின்கண் வைப்பதே அக்ஷதை, (ஆன்மதரிசனஞ் செய்யவேண்டுமென்னும்) ஞாநாப்தியே புஷ்பம், ஞாநாக்நி ஸ்வரூபமே தூபம், ஞாநாதித்திய ஸ்வரூபமே தீபம், பிரமான்ம ஐக்கியமே நைவேத்தியம், நிச்சலத்துவமே பிரதக்ஷணம், ஸோஹம் பாவனையே நமஸ்காரம், மௌன சுபாவமே ஸ்துதி, சர்வ சந்தோஷமே விசர்ஜனமாம், (இப்படி ஞாநிகள் பூசிப்பார்கள்).

ஸ்கந்தோபநிஷத்.

[illegible]

(இ-ள்.) அபேதமாய்ப் பார்க்கிறதே ஞானம், மனது விஷயத்தில் பற்றுமைதான் தியானம், மனதிலுள்ள தோஷத்தை விடுவதுதான் ஸ்நாநம், இந்திரியங்களை யடக்குதல்தான் சௌசம். பிரும்மாமிருதத்தைக் குடிக்கவேண்டியது. (இதுதான் பானம்.) தேகஸம்ரக்ஷணைக்காகப் பிக்ஷையெடுத்துண்ணவேண்டியது. ஒருவனாகவே யேகாந்தமான விடத்தில் இரண்டாவதற்றவனாக (பிரம்மத்தைத்தவிர வேறே வஸ்துவைப் பாராதவனாக) வாசம் செய்ய வேண்டியது. அத்வைதப் பிர்ம்மத்தில் ஒரே பாவனை யுள்ளவனாக விருக்கவேண்டியது. இவ்வாறு நடக்கின்ற புத்திமானெவனோ அவன் முத்தியடைகிறான்.

பிரமகீதை.

எப்பொருள் களுந்தா னாகி யிலங்கிடு மறிவா மீச
னப்படி விளங்கு கின்ற தறிதலே யவன்ற னக்கு
மெய்ப்படு பூசை வேறோர் செயலினா லன்று மெய்யே

யிப்படி ஞானந் தன்னு லிறைஞ்சிடப் படுவா னீசன்.
ஆன தாகாத் தெய்வமதே யடையும் விடய மிந்தியமாய்த்
தானு மாகித் தனைத்தன்றற் றனே நகருந் தன்மையது
வூன மாகு ஞாதாதி யொழிந்தே யுள்ள வறிவதனாற்
றனே யாகக் கண்டிடுதல் சத்தா யுள்ள பூசையதே.

ஞானவாசிஷ்டம்.

தீவினையெல் லாமறுத்து மங்கலமெல் லாமுதவுந் தேவ பூசை, யாவதெனக் கேட்டலுமே யருள்செய்வான் றெய்வந்தா னியாதெ ன்றேதிற், கேவலமே யரியல்ல யரனல்ல பூதவுடற் கிடைத்த தல்ல, வோவுமன மன்றடியு முடிவுமிலா செபப்படா வுணர்வே தெய்வம்.

அறிவுசம பாவனைசந் தோடமெனு மலர்களா லந்தத் தே வாம், பிறிவரிய வாத்துமதத் துவத்தைபருச் சிப்பதே பெரிய பூசை, குறிவடிவிற் பூசனைபூசனையல்ல வகண்டமெனக் கூறுந் தெ ய்வ, நெறிகொள்புறத் தொழில்களா னேராதிங் கதனுலே நிறை யு மின்பம்.

தன்ன தறிவே வடிவாகித் தயங்கு தேவின் பூசைக்கு
மன்னு முபசா ரங்களெலா மரபன் றகு மெய்போது
மின்ன லன்றிக் குளிர்ந்தழிவற் றேக மாகி யமுதாகித்
துன்னுந் தன்போ தத்தாலே தூய பூசை செயல்வேண்டும்.

திகழாத் துமதத் துவத்தினுயர் தியான முபகா ரங்களொடு, நிகழ்பூ சனையா மிவ்வழியா லன்றிப் பிறிதோர் நெறிகளினுற், புகழ்மெய் யுணர்வு கிடையாது புராண தியான பூசையினை, யிகழ் மூ டர்கள்செய் யினும்பதின்மூன நிமைப்பிற் பசுவீந் துளபே றும்.

பாசமின்றி யுள்ளுணர்வைப் பதினைங் கடிகை பூசிக்கி
லிராச சூய விலககநிக ரிவ்வா றெருநா ளருச்சிக்கி
லாசி லாத பரவொளியி லமர லாகு மிதுதானே
யேசில் பரம யோகமிது தானே பரம கிரியையுமே.

அமிர்தசாரம்.

இன்பக்கண் ணீராட்டி யேத்தி யெழின்மலரா
லன்பிட்டுத் தம்மை யமிர்தாக்கி—முன்புற்ற
சிற்சட மெல்லாஞ் சிவமாக நோக்கல்சிவற்
கர்ச்சனை யாகு மது.

உபதேசகாண்டம்.

மனத்தி னேத்திய பூசனை வரன்முறை மாக்க
ணினைத்த போதுமாங் காலைமா லையினுமா நினைத்த
வனைத்து மீசனுக் காக்கவெத் தலத்தினு மாமாற்
புனைத்த வார்சடைப் புனிதர்காண் ஞானத பூசை.

பூதத்தாழ்வார் திருவந்தாதி.

அன்பே தகளியா வார்வமே நெய்யாக
வின்புருகு சிந்தை யிடுதிரியா - நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினே னாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்.

---

## ௪௰-வது சம்வாதம்.



அந்தியாசவகையினை யமையக்கூறல்.

சி:—சுவாமி! தாங்கள் திருவாய்மலர்ந்தருளியவாற்ருல் நிர்க்குணபூசையின் சொரூபத்தை விளக்கமாக வறிந்தேன்; அதனை அறிந்தவாறியற்றுவது அருமையெனத் தோன்றுகின்றது. ஆதலின், அப்பூசையினைத் தடையின்றிச் செய்வதற்குரிய வேதுவினை யெளிதில் அறியுமா றடியேனுக் குரைக்கும்படி பிரார்த்திக்கின்றேன்.

கு:—அத்தியாசவகையினை யறிந்தார்க்கன்றி யேனையோர்க்கு நிர்க்குணபூசை புரிதலெளிதிலியலாது?

சி:—அத்தியாசமாவதியாது?

அத்தியாசலக்ஷணம்.

கு:—பிராந்தி (மயக்க) ஞானத்தின விஷயமாகிய மித்தியா வஸ்துவிற்கும் (பழுதையிற்ருேன்றிய பாம்பிற்கும்) பிராந்தி ஞானத்திற்கும் அத்தியாசமென்று பெயராம். இவ்வத்தியாசம் அர்த்தாத்தியாசம் ஞானாத்தியாசமென விருவகைத்தாம. (பழுதையிற்ருேன்றிய பாம்பு அர்த்தாத்தியாசமாம். அதன் ஞானம் ஞானாத்தியாசமாம்.) இவ்விரண்டனுள் அர்த்தாத்தியாசம் (1) கேவல சம்பந்தாத்தியாசம், (2) சம்பந்தசகித சம்பந்தியத்தியாசம், (3) கேவலதர்மாத்தியாசம், (4) தர்மசகித தர்மியத்தியாசம், (5) அன்னியோன்னியாத்தியாசம், (6) அன்னியதராத்தியாசம் என்றறுவகைத்தாம்.

(1) கேவலசம்பந்தாத்தியாசம்.

அநாத்மாவி (சடத்தி)ல் ஆன்மாவின் அத்தியாசமுண்டாகின்றது. ஆண்டு அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது அதனது தாதான்மிய (ஒற்றுமைவடிவ) சம்பந்தம் அத்தியஸ்தமாம். ஆகவே, அநான்மாவில் ஆன்மாவின் சம்பந்தம் கேவல சம்பந்தாத்தியாசமாம். (அநாத்மாவில் ஆத்மாவின் சம்பந்தமிருப்பதாகத் தோன்றுதல் மயக்கத்தினாலாவதன்றி யுண்மையிலின்றென்பது கருத்து) வானவெளியில் வானத்தின் சம்பந்த மிருக்கின்றதென்பது மிதற்குதாரணமாம்.

(2) சம்பந்தசகித சம்பந்தியத்தியாசம்.

"கயிற்றினிடத்து (அதிற்றோன்றிய) பாம்பின் சம்பந்தமும் (பாம்பாகிய) சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமாதல் (கற்பனையாயிருத்தல்) போன்று ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்தமும் (அதன்) சொரூபமுமாகிய இரண்டும் அத்தியாசமாகின்றன. ஆதலால், ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்தசகித (கூடிய) சம்பந்தியினத்தியாச முண்டாகின்றது. சம்பந்தத்தை யுடையது சம்பந்தியாம்.

(3) கேவல தர்மாத்தியாசம்.

நான் வெளுத்தேன் நானிளைத்தேன் என்றவிடத்து ஸ்தூல தேகத்தின் வெண்மை முதலியனவும், நான் பார்த்தேன் நான் கேட்டேன் என்றவிடத்துச் சூட்சுமதேகத்தின் பார்வை முதலியனவுமாகிய தர்ம்மங்கள் ஆத்மாவில் அத்தியஸ்தமாகின்றன; அத்தேகங்களின்சொரூபம் அத்தியஸ்தமாகின்றதில்லை. ஆதலால், ஆத்மாவில் ஸ்தூல சூக்கும தேகங்களின் கேவலதர்மத்தினத்தியாச முண்டாகின்றது. வேறொன்றனை யாசிரயித்ததாய் (பற்றுக்கோடாகவுடையதாய்)ச் சுதந்தரமின்றி யிருப்பது தர்மமெனப்படும். வெண்மை, இளைத்தல், பார்த்தல், கேட்டல் முதலியவைகள் தர்மங்களாம்.

(4) தர்ம சகிததர்மியத்தியாசம்.

நான் கர்த்தா நான் போக்தா என்றவிடத்துக் கர்த்திருத்துவமும் (கர்த்தாவாந்தன்மையும்), போக்திருத்துவமும் (போகத்தை யனுபவிக்குந் தன்மையும்) ஆத்மாவின் தர்மமாயிராது ஆபாசசகித அந்தக்கரணத்தின் தர்மமாயிருக்கின்றன. ஆத்மா நிர்விகாரமா யிருத்தலால் அதன்கண் யாதொரு விகாரமுமின்றாம்.

ஆயினும், அந்தக்கரணத்தின் கர்த்திருத்துவாதி தர்மங்களும் சொரூப (அந்தக்கரண)முமாகிய இரண்டும் ஆத்மாவில் (கிளிஞ்சிலில் வெள்ளித்தன்மையோடு கூடிய வெள்ளி கற்பனையாயிருத்தல் போன்று) அத்தியஸ்தமாயிருக்கின்றன. ஆதலால், ஆத்மாவில் அந்தக்கரணத்தின் தர்மசகிததர்மியின் அத்தியாசமுண்டாகிறது. தர்மத்தையுடையது தர்மியெனப்படும்.

(5) அன்னியோன்னியாத்தியாசம்.

காய்ச்சிய இரும்பில் இரும்பின்றன்மை அக்கினியிலும் அக்கினியின்றன்மை இரும்பிலும் இருத்தல்போன்று ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசமும் அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாசமும் இருத்தல் அன்னியோன்னியாத்தியசமாம. ஒன்றற்கொன்றத்தியாசமாதல் அன்னியோன்னியாத்தியாசத்தின் தன்மையாம்.

சத்து, சித்து, ஆநந்தம், * அத்வைதத்துவம் என்னு மிந்நான்கு விசேஷணங்களும் ஆத்மாவிற்குரியனவாம். அசத்து, சடம், துக்கம் † துவிதசகிதத்துவம் என்னு மிந்நான்குவிசேஷணங்களும் அநான்மாவிற்குரியனவாம். இவற்றுள் அநான்மாவின் துக்கம், துவிதசகிதத்துவம் என்னு மிவ்விரண்டு விசேஷணங்களும் ஆத்மாவின் ஆநந்தத்தையும் அத்வைதத்துவத்தையும் மறைக்கின்றன. அம்மறைத்தலினால் ஆத்மாவில் "நான் ஆநந்த ரூபனும் அத்துவித ரூபனுமிருக்கிறேன்" என்னும் ஞானமுண்டாகாது "நான் துக்கியாயும் ஈசுவராதிகளிலும் வேறானவனாயும் இருக்கிறேன்" என்னும் ஞானமுண்டாகின்றது. ஆத்மாவின் சத்து சித்து என்னு மிவ்விரண்டு விசேஷணங்களும் அநான்மாவின் அசத்துவத்தையும் ஜடத்துவத்தையும் மறைக்கின்றன. அதனால், அநான்மாவாகிய அகங்காராதிகளில் "அசத்தாயும் ஜடமாயுமிருக்கிறது" என்னும் ஞானமுண்டாகாது ‡ "இருக்கிறது விளங்குகிறது" என்னும் ஞானமுண்டாகின்றது. இவ்வாறு ஆன்மாநன்மாக்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) அத்தியாசமிருக்கின்றமை காண்க.

---

* அத்வைதத்துவம் - இரண்டென்பதின்றியிருத்தல்.

† துவிதசகிதத்துவம் - இரண்டோடு கூடியிருத்தல.

‡ இருத்தல் என்பது சத்து; விளங்குதலென்பது சித்து.

(6) அன்னியதராத்தியாசம்.

இரண்டில் ஒன்றனது அத்தியாசம் அன்னியதராத்தியாசமாம் (அன்னியதரம் - இரண்டிலொன்று). அரவில் கயிற்றின் சொரூபம் அத்தியஸ்தமாகாது கயிற்றில் அரவின் சொரூபம் அத்தியஸ்தமாதல்போன்று அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது ஆன்மாவில் அநாத்துமாவின் சொரூபம் அத்தியஸ்தமாதல் அன்னியதராத்தியாசமாம்.

இங்குக் கூறிய ஆறுவகை யத்தியாசமும் கீழ்க் கூறப்படும் இருவகை யத்தியாசத்து ளடங்கும். அவை (1) சொரூபாத்தியாசம், (2) சம்சர்க்காத்தியாச மென்பனவாம்.

(1) சொரூபாத்தியாசம்.

தத்துவஞானத்தினுல் பொய்யென்று நிச்சயிக்கத்தக்க வஸ்து (பாம்பு) அதிஷ்டானத்தில் (கயிற்றில்) சொரூபமாக அத்தியஸ்தமா யிருக்கிறது. தேகாதிப் பிரபஞ்ச அநான்மாவிற்கு அதிஷ்டான (ஆன்ம) ஞானத்தினுல், பாதம் (பொய்யென்று நிச்சயித்தல்) உண்டாதலால், ஆன்மாவில் அதன் சொருபாத்தியாசமுண்டாகின்றது. ஒன்றன் முழுவடிவமும் மற்றொன்றில் அத்தியஸ்தமாதல் சொரூபாத்தியாசமாம்.

(2) சம்சர்க்காத்தியாசம்.

பாதிக்க (பொய்யென்று நிச்சயிக்க)த்தகாத வஸ்துவின் சொரூபம் அத்தியஸ்தமாகின்றதின்று. ஆனுல், அதன் சம்பந்தம் அத்தியஸ்தமாம். ஆதலால், அநான்மாவில் ஆன்மாவின் சம்சர்க்காத்தியாச முண்டாகின்றது. ஆகவே இது சம்சர்க்காத்தியாசமாம். சம்சர்க்கம் - சம்பந்தம்.

அத்தியாசத்தின்றன்மை யறியுமாறு இங்குச் சுருக்கமாகக் கூறப்பட்டது. இங்ஙனமன்றி யெண்வகையாகக் கூறலுமுண்டு. அவ்வெட்டுமேற் கூறியவற்று ளந்தர்க்கதமாம்.

சி: அவை யாவை?

கு: அவை: மித்தியாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம், சத்தியாத்தியாசம், நிரூபாதிகாத்தியாசம், சோபாகாத்தியாசம், தத்தரூமாத்தியாசம், சம்பந்தமாத்திராத்தியாசம் என்பனவாம்.

சி: இவ்வெட்டும் மேற்கூறியவற்று ளடங்குமாயினும் அவற்றினையு மறிந்துகொள்ள விருப்பமுள்ளவனு யிருத்தலின், அவற்றுள் ஒவ்வொன்றனையும் விளக்கமாகக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

(1) மித்தியாத்தியாசம்.

கு:—நெருப்பினது சம்பந்தத்தினுற் புனலுக்குச் சூடுண்டாதல்போன்று பிரத்தியகாத்ம சந்நிதியில் முறையே நடத்தல், காண்டல், நினைத்தல், அறிதல் ஸ்தூலசரீரத்திற்குண்டாதலால் அத்தூலசரீரம் ஆத்மாவின்கண் மித்தியாத்தியாசமாம். நடத்தலை ஸ்தூலதேகத்திற்கும், காண்டலை ஞானேந்திரியத்திற்கும், நினைத்தலை அந்தக்கரணத்திற்கும், அறிதலை (ஆபாசசகித) மூலவங்காரத்திற்குங்கொள்க. நடத்தல் முதலியவை தூலசரீரத்தை முன்னிட்டு நிகழ்தலின் அவையாவும் ஸ்தூலசரீரத்திற் குரியனவாகச் சொல்லப்பட்டன.

(2) இதராத்தியாசம்.

இந்திரியங்களில் ஆத்மா சொரூபமாக வத்தியாசமாகாது ஆத்மாவில் இந்திரியங்கள் சொரூபமாக அத்தியாசமா யிருத்தலின், இந்திரியவர்க்கம் இதராத்தியாசமாம். இதராத்தியாசமெனினும் அன்னியதராத்தியாசமெனினும் ஒக்கும்.

(3) இதரேதராத்தியாசம்.

நான் கர்த்தா நான் போக்தா என்னுமிடத்து அந்தக்கரணத்தின் விசேஷணமாகிய கருத்திருத்துவமும் போக்திருத்துவமும் ஆன்மாவினிடத்திலும் அந்தக்கரணம் இருக்கிறது விளங்குகின்றது என்னுமிடத்து ஆத்மாவின் விசேஷணமாகிய சத்து சித்தும் அந்தக்கரணத்திலும் அத்தியாசமாயிருத்தலின், அந்தக்கரணத்திற்கும் ஆத்துமாவிற்கு முள்ள அத்தியாசம் இதரேதராத்தியாசமாம். இதரேதராத்தியாசமெனினும் அன்னியோன்னியாத்தியாசமெனினு மொக்கும்.

(4) சத்தியாத்தியாசம்.

சுருதிசம்பந்தஞானம், யுக்திசம்பந்தஞானம், உலகசம்பந்தஞானமென்னு மூன்றனுள் உலகசம்பந்த ஞானத்தால் மூலவகங்காரம் அல்லது மாயை சத்தியமாக விவகரிக்கப்படுதலின், அது சத்தியாத்தியாசமாம். [மாயை சுருதிசம்பந்த ஞானத்தால் ஆகாயத் தாமரை போன்று துச்சமாயும், யுக்திசம்பந்த ஞானத்தால்

கயிற்றரவுபோன்று மித்தையாயும் பிரதீதியாமென்க.] ["சிரௌதம் யௌத்திகம் லௌகிகம் என்னும் மூவகை ஞானங்களால் இச்சகத்தாகிய காரியத்தோடுகூடிய மாயையைத் துச்சை, அநிர்வசநீயை, வாஸ்தவியென்னும் பேதத்தால் மூன்றுவகையாக வழியத்தக்கதாம்" என்று 'பஞ்சதசி கூறுகின்றது.] கயிற்றின்கண் அரவுபோன்று ஆத்மாவின்கண் மித்தையாகவிருக்கும் மாயையை ஆத்மாநாத்ம விவேகமின்றிய பாமரர்களும் விஷயிகளும் ஆத்மாவைப்போலச் சத்தியப்பொருளாக விவகரித்தல்பற்றி அது சத்தியாத்தியாசம் எனப்பட்டது.

(5) நிருபாதிகாத்தியாசம்.

நான் என்னுஞ் சொல்லுக்குப் பொருளாக மயக்க காலத்தில் பிரத்தியகாத்மாவென்றும் அகங்காரமென்றும் பேதமின்றிக் கயிற்றரவுபோன்று விவகரிக்கப்படுதலின், இது நிருபாதிகாத்தியாசமாம்.

(6) சோபாதிகாத்தியாசம்.

செவ்வரத்தம் பூவின் நிறம் படிகமணியில் ஆரோபமாக விளங்குதல்போன்று நான் கருத்தாவென்னுமிடத்து அகங்காரத்தின் தருமமாகிய கருத்துருத்துவம் நான் என்னும் சொல்லுக்குண்மைப்பொருளாகிய ஆத்மாவினிடத்தில் ஆரோபமாக விளங்குதலின், இது சோபாதிகாத்தியாசமாம்.

[காரணத்தைக் கண்டவிடத்துக் காரியந் தோன்றுதொழிவது நிருபாதிகாத்தியாசமாம். அது கயிற்றைக் கண்டவுடன் அதிற் றோன்றிய பாம்பு தோன்றுதொழிவதுபோலாம். காரணத்தைக் கண்டவிடத்தும் காரியந் தோற்றிக்கொண்டிருப்பது சோபாதிகாத்தியாசமாம். அது கானலைக் கண்டவிடத்தும் கானனீர் தோற்றுவதுபோலாம். இவற்றின் விளக்கம் வருமாறு:—

நிருபாதிக அஞ்ஞான ஜந்நியம் சோபாதிக அஞ்ஞான ஜந்நியம் என்னும் பேதத்தால் பிராந்தி (மயக்கம்) இருவகைத்தாம். விலக்ஷண (தனது சமகாலபரியந்தம் காரியத்தை நிறுத்துவதாகிய) நிமித்தகாரணம் இங்கு உபாதியெனப்படுகின்றது. அவ்வுபாதியின்றிக் கேவல அஞ்ஞானத்தால் தோன்றும் பிராந்தி நிருபாதிகப் பிராந்தியாம். அது ரஜ்ஜு சர்ப்பம் சுக்திரஜத முதலியவற்றின் பிராந்தியாம். விலக்ஷணமான நிமித்தகாரண வடிவ உபாதியோடு கூடிய அஞ்ஞான ஜந்நியப் பிராந்தி சோபாதிகப் பிராந்

தியாம். எங்ஙனம், பிரகாச அந்த காரங்களின் சம்பந்தவடிவ உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தால் தோன்றும் ஆகாயத்தினது நீலத்தன்மையின் பிராந்தி யிருக்கின்றதோ, எங்ஙனம் பிம்பத்தின் சந்நிதிவடிவ உபாதியோடு கூடிய கண்ணாடியின் அஞ்ஞானத்தால் தோன்றிய பிரதி பிம்பத்தின் பிராந்தி இருக்கின்றதோ, அங்ஙனமே ஜீவர்களது அதிருஷ்டவடிவ உபாதியோடு கூடிய மூலாஞ்ஞானத்தால் தோன்றிய பிரபஞ்சத்தின் பிராந்தி இருக்கின்றது. அது முற்கூறிய உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தால் தோன்றியதாயிருத்தலின், சோபாதிகப் பிராந்தியாம். நிருபாதிகப் பிராந்தியின் பாதிதாநுவிருத்தி (பாதமாகியபின் தோற்றுதல்) உண்டாகிறதில்லை; ஏனெனில், உபாதியின்மையால் ஆதன்நாசமும் பாதமுமாகிய இரண்டு மிருத்தலினென்க. சோபாதிகப் பிராந்தியின் பாதிதாநு விருத்தி யுண்டாகின்றது; ஏனெனின், மித்தியாத்தன்மை நிச்சயவடிவ பாதம் [பொய்யென்று நிச்சயத்தால் உண்டாகியும் உபாதியின் இருப்புவரையில் ஸ்வரூபத்தின் அப்பிரதீதி (விளங்காமை) வடிவ நாசமின்மையாலென்க.]

(7) தத்தருமாத்தியாசம்.

நான் இச்சிக்கின்றேன் என்பதில் அந்தக்கரணத்தின் தருமமாயஇச்சை நான் என்னும் சொல்லிற்குப் பொருளாய ஆத்மாவில் நீரிற் பிரதிபலித்த சூரிய பிம்பம்போன்று அத்தியாசமாய்த் தோன்றுதல் தத் (அந்தக்கரணத்தின்) தருமாத்தியாசமாம். இங்கு அந்தக்கரணத்தின் தருமமாத்திரம் ஆத்மாவில் அத்தியாசமாதல்பற்றித் தத்தருமாத்தியாசமென்று கூறப்பட்டது.

(8) சம்பந்தமாத்திராத்தியாசம்.

யான் குடும்பி என்னுமிடத்துத் தனக்கும் புத்திரர் முதலானவர்களுக்குமுள்ள சம்பந்தம் கப்பலிற் பிரயாணஞ்செய்யும் மக்களது விவகாரம்போன்றிருத்தலின், இது சம்பந்தமாத்திராத்தியாசமாம்.

அத்தியாசத்தின் வகையினை நன்கறிந்து நிர்க்குணபூசை புரிபவரிடத்து அத்தியாவசியமாகத் திருஷ்டித்திரயஞ் செறிந்திருக்கும்.

சி: தாங்கள் கூறியவாற்றால் அத்தியாசத்தின் சொரூபத்தினை நன்கறிந்தேன். இனி அதுபற்றிக்கூறும் பிரமாணங்களை அறியுமாறு விரும்புகின்றனன்.

கு: கீழ்வருவனவே.

அந்நபூர்ணோபநிஷத்.

ப்ராந்தி: பஞ்சவிதா பாதி ததேவேஹ ஸமுச்யதே| ஜீவேஶ்வரௌ பிந்நரூபாவிதி ப்ராதமிகோ ப்ரம:| ஆத்மநிஷ்டம் கர்த்ருகுணம் வாஸ்தவம் வா த்விதீயக:| ஶரீரத்ரய ஸம்யுக்த ஜீவஸ்ஸங்கீ த்ருதீயக:| ஜகத்காரண ரூபஸ்ய விகாரித்வம் சதுர்த்தக:| காரணாத்பிந்ந ஜகத: ஸத்யத்வம் பஞ்சமோ ப்ரம:| பஞ்ச ப்ரமநிவ்ருத்திஶ்ச ததா ஸ்புரதி சேதஸி| பிம்ப ப்ரதிபிம்ப தர்ஶநேந பேதப்ராந்திர் நிவ்ருத்தா| ஸ்படிகலோஹித தர்ஶநேந பாரமார்த்திக கர்த்ருத்வ ப்ராந்திர் நிவ்ருத்தா| கடமடாகாஶ தர்ஶநேந ஸங்கித்வ ப்ராந்திர் நிவ்ருத்தா| ரஜ்ஜு ஸர்ப தர்ஶநேந காரணாத்பிந்ந ஜகத்ஸத்யத்வ ப்ராந்திர் நிவ்ருத்தா| கநக குண்டல தர்ஶநேந விகாரித்வ ப்ராந்திர் நிவ்ருத்தா| ததா ப்ரப்ருதி மச்சித்தம் ப்ரஹ்மாகாரம் அபூத் ஸ்வயம்||

(இ-ள்.) பிராந்தியானது ஐந்துவிதமாக விளங்குகிறது. அது இவ்விடத்திற் சொல்லப்படுகிறது. ஜீவேசுவரர்கள் வேறு வேறு ரூபமென்பது முதலாவது பிராந்தி. கருத்திருத்துவ குணமானது வாஸ்தவமாய் ஆத்மாவினிடத்தி லுள்ளதென்பது இரண்டாவது. மூன்று சரீரத்துடன் கூடியிருக்கிற ஜீவன் அச்சரீரத்திலொட்டியிருக்கிறனென்பது மூன்றாவது. ஜகத்காரண ரூபனுக்கு விகாரித்துவம் சொல்வது நான்காவது. காரணத்தைக்காட்டிலும் ஜகத் வேறென்றும் ஜகத் ஸத்திய மென்றுமுள்ளது ஐந்தாவது பிராந்தி. இப்பஞ்சப் பிராந்திகளும் நிவிருத்தியாயின. (எப்படி யென்றால்) பிம்பப்பிரதிபிம்ப தரிசனத்தினாலே பேதப்பிராந்தி நிவிருத்தியாயிற்று. ஸ்படிகத்தில் சிகப்பைப் பார்த்ததினாலே கர்த்துருத்துவம் வாஸ்தவமென்னும்பிராந்திநிவிருத்தியாயிற்று. கடாகாச மடாகாசதரிசனத்தினாலே ஒட்டியிருக்கிறதென்னும்பிராந்தி நிவிருத்தியாயிற்று. கயிற்றில் பாம்பைப் பார்த்ததினாலே காரியத்தைக் காட்டிலும் ஜகத் வேறு ஜகத் ஸத்தியமென்னும் பிராந்தி நிவிருத்தியாயிற்று. தங்கக்கின்னப் பார்வையினாலே விகாரித்துவப் பிராந்தி நிவிருத்தியாயிற்று. அதுமுதலென்னுடைய சித்தமானது தானாகவே பிரம்மாகாரமாக வாயிற்று.

## நிராலம்போபநிஷத்.

𑌰𑌜𑍍𑌜𑍌 𑌸𑌰𑍍𑌪𑌵𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁𑌸𑍍𑌯𑍂𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌮𑌯𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌦𑍇𑌵𑌤𑌿𑌰𑍍𑌯𑌙𑍍𑌨𑌰 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌰𑍁𑌷 𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑍋𑌪𑌾𑌧𑌿 𑌨𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌭𑍇𑌦𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍॥

(இ - ள்.) இரண்டாவ தற்றதாயும், எங்குந் தொடர்ச்சியா யுள்ளதாயும், சகல ஸ்வரூபமாயும் இருக்கிற பிர்ம்மத்தினிடத் திலே தேவ, மிருக, நர, ஸ்தாவர, ஸ்திரீ, புருஷ, வருணாசிரம, பந்தமோக்ஷ உபாதியாக விருக்கிற பல தேகபேதங்களினாலே கயிற்றில் பாம்பென்னும் பிராந்திபோல் கற்பிதமா யிருக்கிற ஞானமே அஞ்ஞானம்.

## யோகசிகோபநிஷத்.

𑌯𑌥𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑍍𑌘𑌟𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌨𑌕𑍇 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌾𑌧𑌿𑌯𑌾 । 𑌶𑍁𑌕𑍍𑌤𑍌 𑌰𑌜𑌤𑌵𑌦𑍍𑌭𑌾𑌤𑌿 𑌜𑍀𑌵𑌤𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌪𑌰𑌮𑍍 । 𑌯𑌥𑍈𑌵 𑌵𑍍𑌯𑍋𑌮𑍍𑌨𑌿 𑌨𑍀𑌲𑌤𑍍𑌵𑌂 𑌯𑌥𑌾 𑌨𑍀𑌰𑌂 𑌮𑌰𑍁𑌸𑍍𑌥𑌲𑍇। 𑌪𑍌𑌰𑍁𑌷𑌤𑍍𑌵𑌂 𑌯𑌥𑌾 𑌸𑍍𑌥𑌾𑌣𑍌 𑌤𑌦𑍍𑌵𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 । 𑌯𑌥𑍈𑌵 𑌶𑍂𑌨𑍍𑌯𑍋 𑌵𑍇𑌤𑌾𑌲𑍋 𑌗𑌂𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌂 𑌪𑍁𑌰𑌂 𑌯𑌥𑌾 । 𑌯𑌥𑌾𑌕𑌾𑌶𑍇 𑌦𑍍𑌵𑌿𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑍍𑌵𑌂 𑌤𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑍇 𑌜𑌗𑌤𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃। 𑌯𑌥𑌾 𑌤𑌰𑌙𑍍𑌗𑌕𑌲𑍍𑌲𑍋𑌲𑍈𑌰𑍍𑌜𑌲𑌮𑍇𑌵 𑌸𑍍𑌫𑍁𑌰𑌤𑍍𑌯𑌲𑌮𑍍 । 𑌘𑌟𑌨𑌾𑌮𑍍𑌨𑌾 𑌯𑌥𑌾 𑌪𑍃𑌥𑍍𑌵𑍀 𑌪𑌟𑌨𑌾𑌮𑍍𑌨𑌾 𑌹𑌿 𑌤𑌨𑍍𑌤𑌵𑌃 । 𑌜𑌗𑌨𑍍𑌨𑌾𑌮𑍍𑌨𑌾 𑌚𑌿𑌦𑌾𑌭𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌕𑍇𑌵𑌲𑌮𑍍। 𑌯𑌥𑌾 𑌵𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌸𑍁𑌤𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌯𑌥𑌾 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌮𑌰𑍌 𑌜𑌲𑌮𑍍 । 𑌯𑌥𑌾 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨𑌭𑍋𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑍍𑌤𑌥𑌾 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌜𑌗𑌤𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 । 𑌗𑍃𑌹𑍍𑌯𑌮𑌾𑌣𑍇 𑌘𑌟𑍇 𑌯𑌦𑍍𑌵𑌨𑍍𑌮𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌾 𑌭𑌾𑌤𑌿 𑌵𑍈 𑌬𑌲𑌾𑌤𑍍 । 𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑍇 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍇 𑌤𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌭𑌾𑌤𑌿 𑌭𑌾𑌸𑍁𑌰𑌮𑍍 । 𑌸𑌦𑍈𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌹𑍍𑌯𑌶𑍁𑌦𑍍𑌧𑍋 𑌭𑌾𑌤𑌿 𑌵𑍈 𑌸𑌦𑌾 । 𑌯𑌥𑍈𑌵 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾 𑌰𑌜𑍍𑌜𑍁𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌨𑌿𑌶𑌮𑍍 । 𑌯𑌥𑍈𑌵 𑌮𑍃𑌣𑍍𑌮𑌯𑌃 𑌕𑍁𑌮𑍍𑌭𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑌦𑍍𑌦𑍇𑌹𑍋𑌽𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌮𑌯𑌃। 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌯𑌂 𑌮𑍁𑌧𑍈𑌵 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌬𑍁𑌧𑍈𑌃। 𑌸𑌰𑍍𑌪𑌤𑍍𑌵𑍇𑌨 𑌯𑌥𑌾 𑌰𑌜𑍍𑌜𑍂 𑌰𑌜𑌤𑌤𑍍𑌵𑍇𑌨 𑌶𑍁𑌕𑍍𑌤𑌿𑌕𑌾। 𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌣𑍀𑌤𑌾 𑌵𑌿𑌮𑍂𑌢𑍇𑌨 𑌦𑍇𑌹𑌤𑍍𑌵𑍇𑌨 𑌤𑌥𑌾𑌤𑍍𑌮𑌤𑌾। 𑌘𑌟𑌤𑍍𑌵𑍇𑌨 𑌯𑌥𑌾 𑌪𑍃𑌥𑍍𑌵𑍀 𑌜𑌲𑌤𑍍𑌵𑍇𑌨 𑌮𑌰𑍀𑌚𑌿𑌕𑌾। 𑌗𑍃𑌹𑌤𑍍𑌵𑍇𑌨 𑌹𑌿 𑌕𑌾𑌷𑍍𑌠𑌾𑌨𑌿 𑌵𑍃𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑍇𑌨𑍈𑌵 𑌮𑍋𑌹𑌤𑌾 । 𑌤𑌦𑍍𑌵𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌦𑍇𑌹𑌤𑍍𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌤𑌃॥

(இ - ள்.) மண்ணிற் குடமென்னும் பெயரும், தங்கத்திற் குண்டலமென்னும் பெயரும், கிளிஞ்சலில் வெள்ளியென்னும்பிரசித்தமும் எப்படியோ அப்படியேபரப்பிரம்மத்தில்ஜீவனென்னும் சப்தமுண்டாயிருக்கிறது. ஆகாசத்தில் நீலத்தன்மையும் பாலைநிலத்தில் ஜலத்தோற்றமும், கட்டையில் புருஷன் என்னும் பிராந்தியும்போலச் சிதாத்மாவினிடத்தில்பிரபஞ்சந்தோற்றுகிறது.வேதாளமென்பதும் கந்தர்வ நகரமென்பதும் ஆகாசத்தி லிரண்டு சந்திரனும் எப்படி யில்லையோ அப்படியே சத்தியமான பிர்ம்மத்தினிடத்தில் ஜகத்தினிருப்பு. ஜலமே அலையென்றும், பொங்குதலென்றும் எப்படி விளங்குகிறதோ மண்ணனது குடமென்னும் பெயரினல் எப்படி விளங்குகிறதோ நூல்கள் துணியென்னும் பெயரினல் எப்படியோ அப்படியே ஜகத்தென்னும்பெயரினல்சித்தே விளங்குகிறது. சகலமும் பிர்ம்மமாத்திரமே. மலடிமைந்தன் கானல் ஜலம் ஆகாச விருக்ஷம் இவைகள் எப்படி இல்லையோ அப்படியே ஜகத்தினிருப்புமில்லை. குடத்தைப் பகுத்தறிகையிலது பிரயத்தினமன்றித் தானகவே மண்ணைய் விளங்குகிறதுபோலப் பிரபஞ்சத்தை ஆராய்ந்துபார்த்தால் பிரகாசமான பிரம்மமேவிளங்குகிறது. கயிறனது ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் இரண்டுவிதமாய் (ஞானிக்குக் கயிறகவும் அஞ்ஞானிக்குப் பாம்பாகவும்) தோற்றுவதுபோல எப்போதும் சுத்தனகவே யிருக்கிற ஆத்மாவானவன் எப்போதும் அசுத்தன்போல விளங்குகிறன். குடமானது மண்மயமாயிருப்பது எப்படியோ அப்படியே தேகமும் சின்மயமாயிருக்கிறது. வித்துவான்களால் ஆத்மானத்தும விசாரமானது வீணகவே செய்யப்படுகிறது. மூடனலே கயிறனது பாம்பாகவும், கிளிஞ்சலானது வெள்ளியாகவும் நிச்சயிக்கப்படுவதுபோல ஆத்மத்தன்மையானது தேகமாக நிச்சயிக்கப்படுகிறது. மண்ணனது குடமாகவும், பாலைநிலத்தோற்றம் ஜலமாகவும், மரங்கள் வீடாகவும், இரும்பானது கத்தியாகவும் எப்படி கிரகிக்கப்படுகின்றனவோ அப்படியே அஞ்ஞானத்தினல் ஆத்மாவினிடத்தில்தேகத்துவத்தை அறிகிறன்.

பைங்களோபநிஷத்.

தவி நராஸ்கிகாவாணா வடிகாதள ஜருவளவு
வாவாஷ ரெவாதி வஜொஷித ஸாக்கதஷ மாணயீ மாண
வாஜா நியபாவா உலவ க்ருதிராவீக||

(இ - ள்.) அதனிடத்தி(பிரம்மத்தினிடத்தி)ல் மருபூமியில் (பாலைநிலத்தில்) ஜலம், கிளிஞ்சலில் வெள்ளி, கட்டையிற் புருஷன், ஸ்படிகத்தில வர்ண முதலியவைபோல் சிவப்பு, வெளுப்பு, கறுப்பு இந்தக்குணமயமானதும் ஏற்றக்குறைவின்றி ஒவ்வொன்றும சமமாயிருக்கிற குணசுவரூபமானதும், வாக்குக்கெட்டாததுமாகிய (மித்தையானதுமாகிய) மூலப்பிரகிருதியிருந்தது.

மஹோபநிஷத்.

உத்தே வொராவதொ பஜஸஷ்டீகோணகொடரெ | உமெக நகூதம் யாஜம் ஸிஹெ வெயாணா கொடீரெ | வதாகெஷ ஸாவிதொ ஊராநிபீணெரா ஸ்ரும மஸமதநா | நிதாவ விஜிதா த்ஹூகும் ஜமதெதததூகம் || ஊராஸமஊள ஜலம் ஸவபும் ஊராஸமஊதவேதக | ஜமதூய நிதம் ஸவபும் விநாதூம ஸவிசாரதஃ||

(இ - ள்.) கடுகின ஒருமூலையிலிருக்கிற துவாரத்திற்குள் மதயானை கட்டப்பட்டது. அணுவின் துவாரத்திற்குள் கொசுவானது சிம்மக்கூட்டத்துடன் யுத்தஞ்செய்கிறது. தாமரைவிதையில் வைக்கப்பட்டிருக்கிற மகமேருபருவதத்தை வண்டுக் குஞ்சு விழுங்கிவிட்டது. ஓ நிதாகா! பிராந்திசுவரூபமாயிருக்கிற ஜகத்தை அவைகளுக்கொப்பாக நினை. பாலைநிலத்தில்தோற்றும ஜலமுழுதும பாலைநிலமே தவிர வேறில்லை. மூன்றுலகமும் சகலப் பிரபஞ்சமும் விசாரணையினால் சின்மாத்திரந்தானே.

நாதபிந்தூபநிஷத்.

குயஸ்ய ஸத்ய கொதாஜந ஜநாஸாவெ குதஃஸ்திதிஃ| உபாதாநம் பூவஞ்ஜஸ்ய பூதாணஸ்யைவ பஸ்யதி | அஜாநம் வெதி வெதாந்தை ஸவிநஷ்டெ கவிஸுதா| யதாரஜும் பரித்யஜ்ய ஸவபும் ஹணாதிவெஹ்ரஊக | ததஸ்தத் உவிஜாய ஜமதஸ்யதி ஊஜய:| ரஜும் வெணெ பரிஜாதெ ஸவபுரூபம் நதிஷ்டதி | குயிஷாநெ ததாஜாதெ பூவஞ்வெ ஸமநஸ்தாம் மதெ | தெஹஸ்யாபி பூவஞ்சுவாக, பூாரப்தாவஸ்திதிஃ குதஃ||

(இ-ள்.) பொய்யான தோற்றத்திற்கு உற்பத்தியேது? உற்பத்தியில்லாதபோது இருப்பேது? மண்பாத்திரத்திற்கு உபாதான

காரணம் மண் எப்படியோ அப்படியே பிரபஞ்சத்திற்கு அஞ்ஞானமே உபாதான காரணமென்று வேதாந்தங்களினால் அறிகிறான். அந்த அஞ்ஞானம் போய்விட்டால் பிரபஞ்சமெங்கே? பிராந்தியினால் கயிற்றைவிட்டுப் பாம்பை எப்படி கிரகிக்கிறானோ அப்படியே சத்தியத்தை யறியாமல் மூடபுத்தியுள்ளவன் ஜகத்தை யறிகிறான். கயிற்றின் துண்டென்கிறஞானமுண்டானால் பாமபென்கிற ஞானம் போய்விடுகிறது. ஆதாரமான வஸ்துவின் ஞானமுண்டாய்ப் பிரபஞ்சம் சூனியமாய்ப் போனபோது தேகமும் பிரபஞ்சமானதால் பிராப்தத்தின் இருப்பெங்கே?

## ஆத்மபோதோபநிஷத்.

[illegible]

(இ-ள்.) விவேகமான புத்தியினாலே இரண்டாவதற்ற ஆத்மாவை நான அறிகிறேனாகிலும் பந்தமோக்ஷாதி விவகாரம் காணப்படுகிறது. பிரபஞ்சமானது எனக்கு நிவிருத்தியானாலும் எப்போதும் சத்தியம்போல விளங்குகிறது. கயிற்றில் பாம்புமுதலியனபோன்று பிரபஞ்சத்திற் காதார ரூபமாய்ப் பிர்ம்மசத்து மாத்திரமே சூழ்ந்துகொண்டிருக்கிறது. ஆகையால், ஜகத்தில்லை. கரும்பின் ரசமானது எப்படி சர்க்கரையை வியாபித்து நிறைந்திருக்கின்றதோ அப்படியே அத்துவயப்பிரம்மரூபத்தினால் மூன்று லோகத்திலும் நிறைந்திருக்கிறேன். குமிழிமுதலிய விகாரங்களும் அலைகளும் சமுத்திரத்திலெப்படியோ அப்படியே பிரம்மாமுதற் சிறுபூச்சி வரையிலுள்ள பிராணிகள் என்னிடத்தில் கற்பிக்கப் பட்டிருக்கின்றன.

### புராதனவசனம்.

[illegible]

(இ-ள்.) நானென்பதும் பிராந்தி, நீ யென்பதும் பிராந்தி, உபாஸனை முதலியனவும், மனதும் பிராந்தி, ஈஸ்வராதிபாவனையும பிராந்தி, சர்வ ஜகத்தும் பிராந்தியாம்.

### பிரமகீதை.

*தற்பரந் தன்னிற் கற்பனை யாலே சாக்கிரக் கனவுறக் கங்க, ளற்புத மாக விளங்கு மல்லதுதா னைகவவ் வவத்தைகள் விளங்கா, கற்பனை யாகிக் காட்சியாங் கடம்போ லுடம்பினைத் தானெனக் கருதிற், புற்புத வுடம்பாய்ச் செற்றவார் வங்கள் பொருந்துமை யுறேலினிப் பொருளில்.*

*தற்பர னுருவஞ் சித்தே தற்பர னிடையேயக்*
*கற்பித சீவன் றானு மதாணக் காலந்தச்*
*சிற்பொரு ளொன்றே வேறெனின் மற்றது சித்தாமோ*
*வற்பமு வேறு காதுசித் தாகா ரத்தாலே.*

*தற்பரந் தன்னிலே சதா சிவன்றன*
*துற்பவ வுலகெலா முறுதி யாமதிற்*
*கற்பித மாய்நிகழ்ந் திடுமெய் காணுறி*
*லற்புத மாபர னல்ல தில்லையே.*

### சூதசங்கிதை.

*முன்னு மவித்தையாற் பசுபேதமு மொய்வலிய மாயையாற்*
*பன்னு பரதத்துவ பேதமுங் கற்பிக்கப் பட்டதுவான்*
*மன்னு தேகேந் திரியாதி வாசனு பேதத்தாலே*
*பின்னு பேத மாமவித்தை பேசுபசு பேதத்திற்கும்.*

*தண்டத்தை நோக்கி யீது சர்ப்பமென் றிடுபி ராந்தி*
*தண்டஞா னத்தாற் றீரிற் றகவிது வென்ற வொன்றே*
*தண்டமா னதுபோ லாரோ பிதமான சமுசா ரிக்குத்*
*தண்டமை யுணர்ச்சி யாலே தத்துவம் பிரம மாகும.*

### திருமந்திரம்.

*மரத்தை மறைத்தது மாமத யானை*
*மரத்தின் மறைந்தது மாமத யானை*
*பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்*
*பரத்தின் மறைந்தது பார்முதல் பூதமே.*

*பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்*
*பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணந்*
*தன்னை மறைத்தது தன்கர ணங்களாந்*
*தன்னின் மறைந்தது தன்கர ணங்களே.*

### அதிரகசியம்.

*சித்தனன் றுரைத்த வீக்கிய படியே நீசழ்த்துவன் பிராந்தி யைந் தினையும், சத்திய மிந்த வுலகெனல் கருவி தணந்திடா துட லேநா னென்னல், கத்தபோத் தாவு நானென றானுங் கடவுளும் வேறெனக் கருதல், சித்துரு வாகி யிருந்துநா னேகன் சிவனென லெ தொடர்பா லறியே.*

பதிபசுபாசவிளக்கம்.

இப்பியிற் பிராந்தி யாலே யிரசிதந் தோன்று மாபோன்
மெய்ப்படு மென்னி லிந்த வியஞ்சக முதித்த தென்றே.

ரிபுகீதை.

அரவுமுதல் பலவிதமாய்த் தோற்றி னுறு மதிட்டான விரச்சுவினை யாயந்த றிந்தால், மருள்வடிவா மரவுமுத லனைத்து மந்த மாசற்ற ரச்சுவடி வாவ தேபோல், விரவுசக முதலியவாய்த் தோற்றி னுறும் விமலவதிட் டானபரப் பிரமந் தன்னை, யருமையுடனன்றாய்ந் தறிந்தா லவையாவு மகண்டபரப் பிரம மாமே.

காசிகாண்டம்.

கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினில்வா ளரவுமலை கடலிற் பட்ட, கூனமுதுகிப் பியிற்றோன்றும் வெள்ளியுமம் முதலுண்மைக் குறிக்கிற் றீரும், அனைவைபோ னினையறியிற் றோன்றுசக மனைத்து நில்லா தழியு மாற்றால், தேனவிழ்பூங் கடுக்கையணி செல்வநின தறைகழற்றாள் சென்னி சேர்ப்பாம்.

சிவாகமார்த்த தரிசனம்.

சட்டெனத் தெளிந்தான் சர்ப்ப மிரச்சுவிற் காணு தாற்போற்
கட்டின பாசம் விட்டாற் கண்டிலன் பெத்தம் பின்பு
சிட்டநற் சுபாவ மேயாஞ் சீவன்முத் தன்றே கத்தை
விட்டபின் பரம முக்தன் வியோமம்போற் கடநா சத்தில்.

பிரபோத சந்திரோதயம்.

விழித்த பொழுதிற் கனவெனவும் விரைப்பூந் தெரிய லரவெனவுந்
தொழிற்செய் மரத்துக் களிறெனவுஞ் சுத்திகா ரஜித மெனவும்
பழித்த பூத விகாரமெலாம் பாற மாயை மாறியபின்
செழித்த சோதிப் பிரபோதச் செய்யோ னினைய திறஞ்செய்தான்.

---

## சுக - வது சம்வாதம்.

* திருஷ்டித்திரயந் தெளிவா யறியெனல்.

சி: அத்தியாச க்ஷகையினை நன்கறிந்து நிர்க்குணபூசை புரிபவரிடத்துத் திருஷ்டித்திரயம் செறிந்திருக்குமென் றுரைத்தமையின் அவையாவை?

---

* திருஷ்டி - ஞானம்.

கு: அவை: வாததிருஷ்டி, மித்தியாதிருஷ்டி, பிரவிலாபதிருஷ்டி யென்பனவாம்.

சி: வாததிருஷ்டியாவதியாது?

கு: † "தாணுவா யெல்லாந் தோன்றுதற் கிடமாம்" பிரமமாகிய என்னிடத்தில் பிறிதொன்றுபோற் காணப்படுந் திரிசியமனைத்தும் அணுவளவேனும் பாரமார்த்திகமாக வில்லை; உள்ளதென் றுண்மையிற் சொல்லப்படுவதியாதோ அது நானே யென்னும் ஞானமே வாததிருஷ்டியாம்.

சி: மித்தியாதிருஷ்டியாவதியாது?

கு: பிரமவடிவாயுள்ள வென்னிடத்திற் பிறிதொன்றுபோற் காணப்படும் நாமரூபவடிவ ஜகமனைத்தும் சொப்பனம்போலும் இந்திரஜாலம்போலும் மித்தையாய்; யாதார்த்தப் பொருளாயுள்ளவன் நானே என்னும் ஞானமே மித்தியாதிருஷ்டியாம்.

சி: பிரவிலாபதிருஷ்டியாவதியாது?

கு: சிதாகாசவடிவாய வென்னிடத்திற் பின்னமா யிருப்பதுபோன்று காணப்படுவன வனைத்தும் சமுத்திரத்திற் றோன்றிய தரங்கம்போலும் மனத்திற் றோன்றிய சொப்பன வுலகுபோலும் எனது விவர்த்தகாரியமாய் இருத்தலின், அவை யாவும் பிரமவடிவாயுள்ளநானே யென்னும் ஞானமே பிரவிலாப திருஷ்டியாம். [இம்மூன்று திருஷ்டியினாலும் சர்வம் மித்தை; சர்வம் பிரமம்; சர்வம் நான் என்னும் சித்தாந்தம் பெறப்பட்டவாறறிக.]

சி: இத்திருஷ்டித்திரயத்தின் பயன்யாது?

கு: குருபதேசத்தினால் உள்ளஞ் சுயஞ்சோதியாய் நிற்கும் நிலை சாத்தியமாகாதபோது இப்பார்வைகளுள் தனக்கிசைந்தொன்றால் திரிசியபாவனையை யொழித்தலால் திருக்குவடிவாய் நிற்கு முண்மைநிலை சாத்தியமாகும். இதுவே அதன் பயனும்.

சி: இம்முப்பார்வைகளுள் உத்தமபார்வை யாது?

கு: பிரத்தியகபின்ன பிரமஞானத்திற்கு இம்முப்பார்வையும் சாதனமா யிருப்பினும் அவற்றுள் பிரவிலாப திருஷ்டியே உத்தம

† "விரிந்த பூதங் களினொடு விளம்பிந் தியங்க டத்துவங்க
டிருந்தா வகங்கா ரத்தினொடு செறிமுக் குணங்கண் மாத்திரைகள்
பொருந்து மாயை சிவனிவை பொய்யாம் யாமே பொய்யின்றி
யிருந்தெவ் விடத்து நிலைபெறவோ மதனாற் றாணுவெனவிசைப்பார்."
என்று இலிங்கபுராணம் கூறுகின்றது.

சாதனமாமென்க. அது மற்றவற்றினும் உத்தமமாயுள்ள பது அதனிலக்கணத்தால் நன்குவிளங்கும்.

இவையேயுமன்றி விகாரதிருஷ்டி, ஏகதேசதிருஷ்டி, பூரண திருஷ்டியெனவு மூன்றுண்டு. இவற்றுள் மண்மயமான கடத்தை மண்ணுக்கு வேறாய பொருளென வறிதல் விகாரதிருஷ்டி; காரியமாய கடத்தில் மண் உள்ளீடாயிருக்கிறதென வறிதல் ஏகதேசதிருஷ்டி; மண்ணைத் தவிர கடமின்று, உள்ளது மண்ணேயென வறிதல் பூரண திருஷ்டியாம். இங்ஙனமே சிவமயமான வுலகத்தைச் சிவத்திற்கு வேறாய பொருளென வறிதல் விகாரதிருஷ்டி; காரியமாயவுலகில் சிவம் உள்ளீடாயிருக்கிறதெனவறிதல் ஏகதேசதிருஷ்டி; "சிவனை யுள்ளான் பிறிதில்லை" என்று பிரமகீதை கூறியவாறு சிவத்தைத்தவிர வுலகின்று, உள்ளது சிவமேயென வறிதல் பூரணதிருஷ்டியாமென்க.

சி: இப்பார்வைகளைப்பற்றிக் கூறும் பிரமாண முண்டாயின், அதனை யெடுத்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ் வருவனவே.

விவேகசூடாமணி.

பரவிய திருஷ்டி மூன்றின் பகுப்பினைப் பகரக் கேளாய்
விரிவுறு வாத திருஷ்டி மித்தியா திருஷ்டி மற்றும்
பிரிவெலா நீக்கா நின்ற பிரவி லாப திருஷ்டி மூன்று
மிருமைதீ ரிவைக டம்மி னிலக்கண மியம்பு வாமே.

மருவிய சுழுத்தி போலு மகத்தான தாறு போலும்
பிரமமா மென்னிடத்திற் பிறிதுபோற் காண்ப தெல்லா
மொருவனு வேனு மில்லை யுள்ளவ னானே யென்று
திருமலப் பார்வை தானே நிகழ்த்திய வாத திருஷ்டி.

இருமைசேர் கனவு போலு மிந்திர சாலம் போலு
பிரமமா மென்னி டத்திற் பிறிதுபோற் காணப் பட்ட
சருவமு மித்தை யாகுஞ் சத்திய னானே யென்று
விரிவுறும் பார்வை தானே மித்தியா திருஷ்டி யாகும்.

பரவிய வாழி போலும் பார்த்திடுங் கனவு போலு
மொருசிதா காச மான முழுவமா மென்னி டத்திற்
பிரிவுபோற் காண்ப தெல்லாம் பிரமமா நானே யென்று
பிரிவிலாப் பார்வை தானே பிரவி லாபத் திருஷ்டி யாகும்.

ஓதிய திருஷ்டி மூன்றி னுளத்தினு ளிசைந்த தான
வேறொரு திருஷ்டி யானு மிருமையாந் திரிசி யத்தைத்
தீதற நீக்கி சித்தந் திருக்குமாத் திரமாய் நின்ற
பேதமில் பரமு ணர்ந்து பேறினை யடைய வேண்டும்.

பரவிய திருஷ்டி மூன்றும் பரசிதா காச மர்ன
பிரமஞா னத்தி னுக்குப் பேணிய வேத வேனும்
பிரிவிலாப் பார்வை யாகும் பிரவிலாப திருஷ்டி தானே
யொருமையா ஞானஞ் சேர வுத்தம வேத வாகும்.

எவ்வவத் தையினு மெந்த விடத்தினு மெக்கா லத்தும்
விவ்விதத் தோற்றம் பெற்று வேறெனக் காண்ப தெல்லாஞ்
செவ்விய பிரம மேயாஞ் சிறிதும்வே றில்லை யென்னு
மிவ்விதப் பார்வை தானிங் கியம்பிய் நல்லு பாயம்.

திரிசியத் தோற்றந் தன்னைத் திருக்குமாத் திரமே யாகப்
பிரவிலா பித்து நின்னைப் பிரமமாத் திரமாய்ப் பார்த்திங்
கரியனே வெளியி னுள்ளி லாவது சமாதி பெற்றுக்
கருமபந் தம்வரைக்கும் காலநீ தள்ளு வாயே.

பாடுதுறை.

கரைபுரளப் பெருகு மாற்றிற் கங்குறங்கி நில்லா தாற்போ, லுரைமுதலாம் யோகத்தாலே யொருமை தன்னைக் குலைக்க வல்ல, விருமையென்னு மாற்றையேறி யேகமண்ட பத்திருந்து, பிரம மென்னும் பார்வையாலே பிறவாவண்ண மாடஞ்சல்.

---

## ௪உ-வது சம்வாதம்.



### சாதனமேட்டின் றன்மையுரைத்தல்.

(சிஷ்ய லட்சணம்.)

சி: ஞானத்தினாலன்றி யேனைய சாதனங்களால் முக்தியுண் டாகாதென்று பன்முறை யருளியிருப்பதால் எத்தகைய ஞானத் தினால் முக்தியுண்டாகும்? அந்த ஞானம் எவ்வா றெழுகுபவனுக் குண்டாகும்?

கு: நிஷ்காமகர்மத்தினால் மல (பாவ) மும் ஈசுவரோபாசனை யினால் விட்சேபமு (மனமொருமுகப்படாமையு)ம் நிவிர்த்தியா கிச் சொரூபா வரணமாத்திர முடையவனும், பூரணமாயசாதன சதுஷ்டயமுடையவனும் யான் யார்? எனக் கிச்சம்சாரம் எவ்

வாறு வந்தது? இஃதியாவரால் நிவிர்த்தியாம்? என்று சகல பிரபுத் தனமும் விட்டு மனைவி, மக்கள் பொருளென்னும் ஈஷணாத்திர யங்களினின்று முள்ளவாறு விலகிக் "கானவர் வலையிற்பட்டுக் கைதப்பி யோடுமான்போல்" விரைந்துசென்று சந்நிதிக்குரிய பத்திரம் புஷ்பம் பல முதலியவற்றை யேந்திய கரத்தையுடையவனாய்ச் சற்குருவையடைந்து "சைதந்நியம் ஸாஸ்வதம் சாந்தம், வியோமாதீதம் நிரஞ்சனம், நாதபிந்து களாதீதம், தஸ்மை ஸ்ரீ குரவே நம: "என்னும் அஷ்ட மந்திர பூருவகமாய்ச் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து பின்னரெழுந்து பயபக்தியினாலே அடிமைத் தன்மை மிகுந்து கும்பிட்டுக்கொண்டுநின்று அடியேனுக்கு இப் பிறவித் துன்பம் எவ்வாற்ற‌ொழியுமென்று வினவி குருநாதன் கடாக்ஷம் செய்யும்வரை சாயைபோல் விடாதிருப்பவனுக்கே பிரம்மாத்ம ஐக்கிய ஞானத்தினால் முத்தியுண்டாகும், இந்த ஞானம் அந்தரங்க சாதனங்களாற் சித்திக்குமன்றிப் பகிரங்க சாதனங் களால் சித்தியாது.

சி: அவ்வந்தரங்க பகிரங்க சாதனங்களை அடியேனதுள்ளத் தமையுமா றருள்செய்யும்படி பிரார்த்திக்கின்றேன்.

கு: நித்தியா நித்திய வஸ்துவிவேகம், இகபர போக விராகம், சமாதிசட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் என்னும் (சாதன சதுஷ்டயம்)நான்கும், சிரவண மனன நிதித்தியாசன மென்னு மூன்றும, தத்துவம் பதார்த்தங்களின் சோதன மொன்றுமாகிய எட்டும் பிரமாத்ம ஐக்கிய ஞானத்திற்கு அந்தரங்க சாதனங்களாம். கர்மோபாசனைகள் பகிரங்க சாதனங்களாம. அந்தரங்கம்-உள்; பகிரங் கம்—வெளி.

வில்லினின்றும் விடுபட்ட அம்பு இலட்சியத்தைத் துளைப்பதிற் சமீபிதத சாதனமாயும் வில் அம்பை விடுதல் வாயிலாக அதற்குத் தூரசாதனமாயும் இருத்தல்போன்று நித்தியாநித்திய வஸ்து விவேகமாதி யெட்டும் ஞானத்தை யுண்டுபண்ணுவதற் கடுத்திருப்பது பற்றி அந்தரங்க சாதனமென்றும் கர்மோபாசனைகள் அந்தரங்க சாதனத் துற்பத்திக் கடுத்திருப்பதாயும் ஞானத்தை யுண்டுபண்ணுவதற்குத் தூரத்திருப்பதாயு மிருப்பதுபற்றிப் பகிரங்கசாதனமென்றும் சொல்லப்படுகின்றன. இங்குக்கூறிய சாதன மிரண்டனுள் அந்தரங்க சாதனத்தைச் சம்பாதித்த பின்னர்ப் பகிரங்க சாதனத்தை யவசியம் விட்டுவிடல் வேண்டும். அந்தரங்க

சாதனத்தை யடைவதன்முன் ஒருவன் பகிரங்க சாதனத்தை விட்டுவிடுவானாயின், அவன் (கிணற்றிற் றவறி விழுந்து மரவேர் முதலியவற்றைப் பிடித்துக்கொண்டு தொங்குகின்ற வொருவன் தன்னைக் கரையேற்றுவதற்கு விடும் கயிற்றைப் பிடிப்பதற்குமுன்னர் அவற்றை விட்டுவிடுவானாயின் அவன் கிணற்றில் விழுந்து மூழ்கிப்போவது போன்று) உபயப் பிரஷ்டனாய்த் துன்புறுவானென்க.

சி: பகிரங்க சாதனங்களாய கர்மோபாசனைகளைப் பற்றித் தாங்கள் விரிவாய்க் கூறியிருப்பதால் அவற்றின் றன்மைகளை நன்குணர்ந்திருக்கிறேன். ஏனைய நான்கும் மூன்றும் ஒன்றுமாகக் கூறிய அந்தரங்கசாதனங்களுள் முன்னர் நான்கு சாதனங்களையும் விளங்கக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ்வரும் வினாவிடைகளைக் கவனித்தாலவற்றின் தன்மை நன்கு விளங்கும். அவை வருமாறு:—

வினா: மோக்ஷத்திற் கதிகாரி யார்?

விடை: இராஜசூய யாகத்திற்கு க்ஷத்திரியனதிகாரியாயு மற்றவர்களல்லராயும், பிரகஸ்பதிசவனமென்னும் யாகத்திற்குப் பிராமணனதிகாரியாயு மற்றவர்களல்லராயு மிருத்தல்போன்று அந்தக்கரணத்திலுள்ள மலம் (பாவம்) நிஷ்காம கர்மத்தினாலும் விட்சேபம் (புடைபெயர்ச்சி) ஈசுவரோபாசனையினாலும் நீங்குமாறு செய்து தனதெதார்த்த சொரூபத்தை மறைத்திருக்கின்ற அஞ்ஞானத்தோடும் நான்கு சாதனங்களோடும் கூடியிருக்கிறவனே மோக்ஷத்திற் கதிகாரியாவன்; மற்றவரதிகாரியாகார்.

(சாதன சதுஷ்டயம்.)

வினா: நித்தியாநித்திய வஸ்து விவேகமாவதென்ன?

விடை: நித்தியவஸ்து இன்னதெனவும் அநித்திய வஸ்து இன்னதெனவும் விசாரித் தறியலாம.

வினா: நித்தியவஸ்து எத்தகையதாயிருக்கும்?

விடை: "அழிவுபாட்டபாவத்திற் கெதிர்மறை யாகாதது நித்தம்" என்று தர்க்கநூல் கூறியபடி நாசமின்றி யிருக்கும் வஸ்து யாதோ அதுவே நித்தியவஸ்துவாம்.

வினா: அநித்திய வஸ்து எத்தகையதாயிருக்கும்?

விடை: "அழிவுபாட்டபாவத்திற் கெதிர்மறையாவது அநித்தம்" என்றவாறு நாசத்தை யடைவதாயிருப்பது யாதோ அதுவே அநித்திய வஸ்துவாம்.

வினா: நித்தியவஸ்து வென்ப தெதனை ?

விடை: ஆத்மாவை.

வினா: அநித்தியவஸ்து வென்ப தெதனை ?

விடை: விஷயங்களை.

வினா: அழிவுபாட்டபாவ (பின்னின்மையும்) மும் அந்நியோந்நியா பாவ (ஒன்றிலொன்றின்மை)மும், அத்தியந்தாபாவ (முழுது மின்மை) மும் நாசமின்றி யிருத்தலின் அவைகளும் நித்தியமாமே ?

விடை: அழிவுபாட்டபாவம் தனது பிரதியோகி (எதிர்மறை) யின் சமவாயி(முதற்)காரணத்தி லிருத்தலானும் அக்காரணம் நாசமுடையதா யிருத்தலானும் அதனை நித்தமெனல் கூடாது. மண்ணாகிய காரணங் கெட்டபோது அதிலுள்ள அதின் காரிய கடத்தின் தொம்ஸாபாவம் (அழிவுபாட்டபாவம் - அழிந்து பின்னில்லாமற் போதல்) அழிவின்றி யிருக்குமெனல் யுக்திக்கொவ்வாது.

'கடம் படமன்று' என்புழிப் படத்தின் பேதம் கடத்திலிருக்கிறது. கடம் அழிந்தபோது அக்கடத்திலிருந்த படத்தின் பேதமும் அழிந்துவிடுதலின் படத்தின்பேதம் எங்ஙனம் நித்தியமாகும்? பேதத்தை அந்நியோந்நியா பாவமென்பர். 'தீயின்கட் சீதளமாண்டுமின்று' என்புழித் தீயின்கண் சீதளம் அத்தியந்தாபாவமாயிருக்கிறது. தீயழிந்தபோது அத்தீயிலிருந்த சீதளத்தின் முழுதுமின்மையு மழிந்துவிடுதலின் அத்தியந்தா பாவம் நித்தியம் என்று கூறுவது அசங்கதமாம். பிராகபாவம் (முன்னின்மை) காரணமாக விருந்து தனது பிரதியோகி யுண்டாயபோது நாசத்தை யடையுமென்றும், தொம்ஸாபாவம் உற்பத்தி யுடையதாய் நாசமின்றி யிருக்குமென்றும், அத்தியந்தா பாவமும் அந்நியோந்நியா பாவமும் நித்தியமா யிருக்குமென்றும் தார்க்கிகர் கூறுவர்.

வினா: விஷயங்களெவை ?

விடை: அஞ்ஞானமு மதன்காரியமாகிய வுலகமுமாம்.

வினா: ஆத்மாவை நித்தியமென்றும் விஷயங்களை யநித்தியமென்றும் கூறுத லெக்காரணத்தால் ?

விடை: ஆத்மா நாசரகிதமாயும் கிரியாரகிதமாயு மிருத்தலினாலும், விஷயங்கள் நாசசகிதமாயும் கிரியாசகிதமாயும் இருத்தலினாலும், ஆத்மா நித்திய வஸ்து என்றும், விஷயங்க ளநித்திய வஸ்துக்களென்றும் கூறப்படுகின்றன.

வினா: நாசமுடையது நித்திய மாகாவிடினும் கிரியையுடையது என் நித்தியமாகாது?

விடை: கிரியை(தொழிலை)யுடைய மூர்த்தத்திரவிய(வடிவுடைப்பொருள்) மெல்லாம் பரிச்சின்னமா (கண்டப்பொருளா) யிருத்தலின் அவையெல்லாம் பின் முன் மேல் கீழ் என்றறற்றொடக்கத்து அவயவங்களை யுடையனவாம். அவயவங்களை யுடையனவெல்லாம் "காரிய மவயத்தாற் கண்டனம் கடாதிபோல" என்றவாறு காரியங்களாம். உற்பத்தியின்றி யிருந்து நாசமடைவதும் உற்பத்தியாகி நாசமடைவதும் அநித்தியமாமென்னும் நியமப்படி முன்பில்லாதிருந்து பின்புண்டாகுங் காரியங்களு மநித்தமாம். ஆகாய முதலியன கிரியையில்லாதிருந்தும் நாசமடைவதா யிருத்தலின் அவையும் அநித்தியங்களாம்.

வினா: பிராணத்தை நித்தியமென்று கூறாது ஆத்மாவை நித்தியமென்ற தெற்றிற்கு?

விடை: நித்தியபதார்த்தம் அநாத்மா வன்றென் றுணர்த்த ஆத்மா நித்தியமானதென்று கூறப்பட்டது.

வினா: அங்ஙனமாயின் ஆத்மாவே பிரமமோ?

விடை: ஆம்.

வினா: எங்ஙனம்?

விடை: வியாபகமா யிருப்பது பிரமமென்று சொல்லப்படும். அங்ஙனமே ஆத்மாவுமாம். தேச(இட)த்தா லெதற்கு முடிவின்றோ அது வியாபகமெனப் படுகின்றது. ஆத்மா பிரமத்திற்கு வேறுபட்டதாயின் அது தேசத்தினால் முடிவுடையதாம். எது தேசத்தினால் முடிவுடையதாகின்றதோ அது காலத்தினாலும் முடிவுடையதாமென்பது நியமம். ஆதலால், தேசத்தானும் காலத்தானும் முடிவுடைய அவ்விரண்டும் (ஆத்மாவும் பிரமமும்) கடபடம்போலக் கண்டமாய்க்காரியமாய்அநித்தமாயொழியும். இவ்வேதுவினால்ஆத்மா பிரம்மத்திற்கு வேறுபட்ட தன்றென்பது பெறப்படுகின்றது. ஆத்மாவிற்கு வேறாய்ப்பிரம மிருக்கும்பட்சத்தில், பிரமம்(ஆத்மாவல்லாத) அநாத்மாவாம். (ஆத்மபேதத்தையுடைய அநாத்மா சடமாவது போலப் பிரமமுஞ் சடமாகும்.) ஆத்மாவிற்கு வேறுபட்டது பிரமமெனக் கூறின் அப்போது அது காரியமாயும் அநாத்மாவாயு மிருத்தலை யேற்றலின் அவ்வாறு கூறல் தகுதியன்றாம். சண்டாத்மாவென்றது, சிவசாட்சியான கூடஸ்தனை. • ஆத்மாவே

பிரமமென்பது பிரமகீதை, ஐகரேய வுபநிடதார்த்தத்தில் "சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வா னியாதுக்கு, முன்மாத் திரமும் வேறில்லை முற்று மவனே மொழிவுற்ற, நன்மாத்திரமா யான்மாவென் றுரைக்கு நாமத் தினையுடையான், றன்மாத்திரமே யாகியவத் தன்மை யான சங்கரன்றான்" என்று கூறுவதாலறிக.

வினா: நான் என்னும் சொல்லுக்குப் பொருளாயிருப்பது ஆத்மாவன்றே?

விடை: ஆம்.

வினா: அங்ஙனமாயின் அது பலவாயிருப்பானேன்?

விடை: அங்ஙனம் உபாதியாற் பலவாய்ச்சொலலப்படுகிறது. நான் என்பதற்குப்பொருள்மயக்ககாலத்தில்தேகத்தின்கண்ணும், இந்திரியத்தின்கண்ணும், கரணத்தின்கண்ணும், பிராணவாயுவின் கண்ணும், சீவன் கண்ணும், தெளிவுக்காலத்தில் இவைகளைப் பற்றின்றி வறி(பிரகாசிப்பிக்)கிற சாட்சி (கூடஸ்தன்) யின்கண்ணும் பொருந்துகிறது. அச்சாட்சி அல்லது ஆத்மா ஒன்றாயிருந்தும் (ஸ்தூல சூட்சுமகாரண) தேகபேதத்தால் நான் நான் என்று பலவாய்ச் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு பிராணிக்கும் நான்நான் என்னும் போதம் வியத்த(வெளிப்படை)மாயும் அவ்வியத்தமாயுமிருத்தலின் நீ என்னும் முன்னிலையும், அவன், அவள் அது என்னும் படர்க்கையும் தன்மையாகிய நான் என்பதற்கு வேறாயுண்டென்று பெறப்படவில்லை. படவே, நான் என்னும் தன்மையொருமைப்பொருளன்றி வேறெப்பொருளுமுண்டெனல் மயக்கமாகினறது. அந்த நான் என்பது யதார்த்தத்தில் பிரமவடிவ ஆத்மாவா யிருத்தலின் அது பலவகைப்பட்டதன்றாம்.

வினா: நான் நான் என்னும் வியவகாரம் மயக்கமின்றி நிகழுதலின் அதனை யெங்ஙனமொன்றென்று கொள்வது ?

விடை: நான் சிசு, நான் கௌமாரன், நான் யுவா, நான் விருத்தன் என்னும்வியவகாரத்தில் நான் என்பது சிசுமுதலிய அவஸ்தாபேதநோக்கிப் பலவாய்ச்சொல்லப்படினும் அது பலவாதலின்றியுண்மையி லொன்றாகவே யிருத்தலான், நான் நான் என்று விவகரிப்பது பற்றி அது பலவாதல் கூடாது. நான் என்பதற்குப்பொருளாயுள்ள வாத்மா சித்தாயிருப்பதாலும், சித்திற்கு உற்பத்தி நாசமின்றாதலாலும், உற்பத்தி நாசமில்லாதது நிராபேட்சிக (மற்

ரொன்றை யவாவாத) வியாபகமாயிருத்தலாலும் அது பலவாதல் எவ்வாறும்? பலவாயின் கடபடம்போல அநித்தியமாகும். ஆகவே பிரமவடிவ ஆத்மா நித்தியமென்னும் விஷயத்தில் சங்கையின்றாம்.

வினா: அஞ்ஞானமு மதன் காரியமாகிய வுலகும் என்னும் விஷயங்களெத்தனை வகையாம் ?

விடை: அஞ்ஞானம் ஒன்றாயும் அதன் காரியவுலகு இருவகையாயு மிருக்கும். ஒன்றென்பது சொல்லாமலே விளங்கும். உலகானது ஸ்திரமென்றும், அஸ்திரமென்றும் இருவகையாம். சாக்கிரவுலகு ஸ்திரமென்றும் சொப்பனவுலகு அஸ்திரமென்றும் கொள்ளல்வேண்டும். சாக்கிரவுலகு சொப்பனவுலகைக் காட்டிலும் நீடித்திருப்பதாகக் காணப்படுதல்பற்றி அது ஸ்திரமென்று சொல்லப்படுகிறது.

வினா: இவை மூன்று மநித்தமாதலெப்படி ?

விடை: உற்பத்தியுடையது நாசமுடையதாமென்னும் நியமத்தை ஸ்திரமென்னும் சாக்கிரவுலகும் அஸ்திரமென்னும் சொப்பனவுலகு மேற்றலின அவை யநித்தியமாம. இவைகளுக்குக் காரணமான அஞ்ஞானம் பிரமவிசாரத்தில் தனக்கென வோர்வடிவின்றி யொழிதலின இதுவு மநித்தியமாம். மேலும் இவை யொன்றி லொன்றில்லாமையினாலு மநித்தியமாம்.

வினா: அஃதெங்ஙனம் ?

விடை: சாக்கிரத்தில் சொப்பனமும் சுழுப்தியும், சொப்பனத்தில் சாக்கிரமும் சுழுப்தியும், சுழுப்தியில் சாக்கிரமும் சொப்பனமுமில்லாமையால் இவை யநித்தியமா யிருக்கின்றன.

வினா: நான் என்னும் சொல்லுக்குப் பொருளாயுள்ள ஆத்மாவு மிங்ஙன மிருப்பதா லதுவு மநித்தியமாமே !

விடை: நான் ஒன்றுமறியா துறங்கினேன் என்றும், நான் சொப்பனங் கண்டேனென்றும, நான் விழித்துக் கொண்டேனென்றும் விவகரிப்பதின்கண் நான் என்பதுமாத்திரம் மாறாதொருபடித்தாயும் ஏனையவை மாறி மாறி விகாரப்பட்டும் வருதலின் ஆத்மா அநித்தியமென்ப தேதற்காதென்க.

வினா: இதனால் என்ன சித்தித்தன ?

விடை: ஆத்மா நித்தியமென்றும் விஷயங்களநித்திய மென்றும் சித்தித்தன.

வினா: இகமுத்திரார்த்த பலபோக விராகமாவ தென்னே?

விடை: இம்மையிலும் மறுமையிலு மடையத்தகுவதாயுள்ள விஷய போகங்க ளெல்லாம் நிலையற்றனவென்றும் உண்மையில் துன்பத்தைத் தருவனவென்று மறிந்து அவற்றின்கண் ஆசையில்லா திருத்தலாம். ராகம்-ஆசை. விராகம்—அஃதில்லாமை.

வினா: இகலோக பரலோக போகங்கள் எதனுலுண்டாகின்றன?

விடை: நல்வினையாலுண்டாகின்றன.

வினா: போகமென்ற தென்ன?

விடை: இன்பத் துன்பங்கள் புலப்படத்தோன்றல் போகமெனப்படும். சீவனது உடல் அதற்கிடமாம். வாசனை யென்பதும் குணமென்பதும் வகுப்பைநோக்காதுழி நற்கந்தத்தையும் நற்குணத்தையு முணர்த்துவதுபோல ஈண்டுப் போகமென்பதும் இன்பம் புலப்படத் தோன்றலை யுணர்த்தி நின்றதென்க.

வினா: இகலோக பரலோக போகங்கள் நிலையற்றனவென்றும் துன்பந் தருவதென்று மறிவதெப்படி?

விடை: இகலோகமும் பரலோகமும் காரியவடிவாயிருத்தலினால் அநித்தியமாம். எது அநித்தியமோ அது நிலையற்றதென்பதில் யாதுஞ் சங்கையின்றும். இகலோக பரலோகங்களே நிலையற்றனவாயின் ஆண்டுநிகழும் போகங்கள் நிலையற்றனவென்று சொல்லுதல் கூடாது. மதுவுண்டார் மகிழ்ச்சி துன்பத்தைத் தருவதாயிருத்தல் போன்று நிலையற்ற வப்போகங்களும் துன்பத்தைத் தருவனவாமென்பதில் யாதுஞ் சங்கையின்றும்.

வினா: இகலோகத்தில் இராஜாக்களும் பிரபுக்களும் சுகானுபவிகளா யிருத்தலான், அவர்களுக்கு அச்சுகம் துன்பத்தைத் தருவ தெங்ஙனம்?

விடை: தாங்களனுபவிக்கும் சுகம் நிலையற்றதென்றுணர்ந்துழி யவர்களுக்கு அச்சுகம் போய்விடுமே என்று துன்பமுண்டாதல் நிச்சயமாதலின், அது அவர்களுக்குத் துன்பத்தைத் தருகிறதென்று கூறப்பட்டது. மேலும் புலியானது பசுவின்தோலைப் போர்த்துக்கொண்டிருத்தல்போன்று துக்கமென்பது சுகப்போர்வையைப் போர்த்துக்கொண் டிருக்கிறதென் றறிதல் வேண்டும். இகலோகத்தில் சுகமென்பது லவலேசமுமின்று. அரசர்களுக்குத் தேகத்திலுண்டாகும் வியாதியினாலும், பிள்ளை யில்லாமையினாலும்

தார்க்குணப்பிள்ளை யிருப்பதினாலும், அன்புள்ள பிள்ளை யிறந்து போவதினாலும், சத்துருபயத்தினாலும், தேசத்தில் ஸமமழையில்லாமையினாலும், ஸ்திரிகளாலுண்டாகின்ற பிணக்கினாலும், கிழத்தனத்தினாலும், தேசத்தில் பரவுகின்ற கொடிய நோய்களினாலும், ஐசுவரியங்களை நமக்குப் பிறகு காப்பாற்றுவார்யார் என்னும் சிந்தனையினாலும், செத்துப்போகப் போகிறோமே என்னும் ஏக்கத்தினாலும், பிறவாற்றாலும் துன்பமே யுண்டாகின்றதன்றி யின்பமுண்டாகிறதின்று. மோகத்தினால் துக்கம் சுகமாய்க் காணப்படுகின்றது.

வினா: அஃதெங்ஙனம் ?

விடை: மூட்டை யெடுப்போரும், போயிகளும், வேலைசெய்வோரும், பிரயாணஞ்செய்வோரும், மாவுத்தரும் முறையே அதிகக்கூலியும், தமது எஜமானனுக்குப் பிரயாணமும, வேலையும், பிரயாணமும், புதியயானையும் அகப்பட்டால் சந்தோஷமடைதலும் அகப்படாவிட்டால் துக்கப்படுதலுமுடையவராகின்றார்கள். இவர்களுக்கு எங்ஙனம் மோகத்தினால் துக்கம் சுகமாய்க் காணப்படுகிறதோ அங்ஙனமே இராஜாக்களுக்கும் பிரபுக்களுக்கும் துக்கம் சுகமாய்க் காணப்படுகின்றது. இன்னுமிவ்விஷயசுகம் காட்டுப்பசுவானது முன்னரொருவனுக் கின்பமுண்டாம்படி நக்கிப் பின்னரவனைக் கொல்லுவதுபோலத் துன்பத்தை யுண்டாக்குகிற தென்க. 'போகத்தி லிச்சை பிறப்பை யுண்டாக்கும்' என்பதனாலும் போகம் துக்கத்திற்கு மூலமாமென்க.

வினா: இகலோகபோகம் துக்கமூலமாயினும் பரலோகபோகத்தையு மங்ஙன முரைக்கலாமோ ?

விடை: உரைக்கலாம். பரலோகத்திலுள்ள தேவர்கள் தம்முள் பொறாமை யுடையவர்களா யிருக்கிறார்களென்று சாஸ்திரம் கூறுதலினால் அவர்கள் துக்கமுடையவர்களென்பதுசொல்லாமலே விளங்கும். பிறராக்கங்கண்டு சகியாமையினாலல்லவோ பொறாமை யுண்டாகின்றது. தேவர்களிற் பலர் சாபம்பெற்றிருக்கிறார். அவர்கள் அரக்கர்களால் படுமுறைகளவின்று. *ஒருவன் பாரியை மற்

* "பொதுமாதர் தோளே புணர்வ தமிர்த
மதுமான மூண்டே மகிழ்வ—தெதுகோடி
சாவார் பிறப்பார் சதுமுகனோர் நாளிலிது
தேவா நிபரெய்துஞ் சீர்" என்றமிர்தசாரங் கூறுவதறிக.

ளுருவ னபகரித்துக் கொள்வதும், சுரா (கள்) பானஞ் செய்வதும் அவர்களது தொழிலாம். புண்ணியகர்மக்ஷயம் வந்தவர்கள் அந்நிலையைவிடும் பதினைந்துநாட்களுக்கு முன்னர்க் கண்ணிமைத்தலையும் கண்ணி (மாலை) வாடுதலையு முடையராவார்கள். அங்ஙன மாயபோது நஞ்சைபுள்ளேயுடைய அமுதத்தையுண்டாரைப் போல மயங்கிப் பலநாளாக வீணே இத்தேவபோகத்தை நுகர்ந்து காலத்தைப் போக்கினோமே யென்று வருத்தத்தை யுடையராய் மண்ணிடைப் பிறப்பார்கள். புண்ணியக்கழிவை நோக்கி வருந்துமவர்கள் அனுபவிக்கும் சுகம் சுகமாகாது. ஜய விஜயர்களும், நந்தியும், பிறரும் ஆண்டு வருந்தினார்களென்று சொல்லப்படுமாதலால் அவர்களுக்குச் சுகமுண்டென்பது எவ்வாறு பொருந்தும்? இது பற்றியன்றோ "தீய வசுரர் பகையுண்டு செற்ற மார்வ மிகவுண்டு, நோயுண் டநங்க னுருண்டு நோய்கட் கெல்லாந் தாயான, காய முண்டு கைதொழவேண் டொரு முண்டு கற்பகத்தே, மாயுந் தன்மை யுண்டானால் வானோர்க் கென்னை வளனுளதே" என்றறிஞர் கூறியிருக்கின்றனர்.

வினா: தேவர்க ளாநந்தவடிவினரென்றுஞ் சாத்திரங்கள்கூறுதலா லஃதெவ்வாறிருக்கும்?

விடை: மக்களினும் தேவர்களுக்கு விசேஷ ஐசுவரிய மிருத்தல்பற்றி யவ்வாறு சொல்லப்படுகின்றது. பொன்விலங்கும் இரும்புவிலங்கும் தம்முள் தாரதம்மியமின்றித் துக்கசாதனமாயிருத்தல்போன்று சாமானிய ஐசுவரியமும் விசேஷ ஐசுவரியமும் துக்கசாதனமேயாம். ஐசுவரியத்தாலே நிலைத்த சுகம் வருகின்றதின்று. ஐசுவரியத்தால் வரும் சுகம் சுகம்போல் காணப்படுகின்றதேயன்றி யுண்மையிலின்று. அச்சுகத்தை யனுபவிக்கும்போது அதனது யோக்கியதையை யுன்னிப்பார்த்தால் அது வாஸ்தவத்தில் துக்கமென்றே விளங்கும்.

தேவர்க ளாநந்த வடிவினரென்று கூறியது சாமானிய தேவர்களை யன்று. அவர்களின்றன்மை முன்னர்க் கூறப்பட்டது. விசேஷ தேவர்கள் அல்லது உத்கிருஷ்ட தேவர்களை யாநந்த வடிவினரென்று கூறப்பட்டிருக்கிறது. சரீரத்திற் கூடியிருத்தல்பற்றி விவேகிக்குத் துக்கமுண்டானாலும் அவ்விவேகி அத்துக்கத்தை அந்தக்கரண தருமமாகக்கண் டெங்ஙன மிருக்கின்றானோ அங்ஙனமே உத்கிருஷ்ட தேவர்(பிரமன் முதலியோர்)களும் ஆண்டுண்

டாகும் துக்கத்தை யந்தக்கரண தருமமாகக் கண்டிருக்கிறார்கள். அதுபற்றித்தா னவர்களை யாநந்த வடிவினரென்று சொல்லப்படு கின்றது.

வினா: அங்ஙனமாயின் யாதுண்மையினால் துக்கமுண்டாகின் றது ?

விடை: சரீர முண்மையினால்.

வினா: எங்ஙனம் ?

விடை: சரீரமுள்ள விடத்தில் துக்கமும் அஃதில்லாவிடத்தி லஃதின்மையுமிருத்தல் அவஸ்தாதிரயத்தினா லுணரலாம். சுழுத்தி யவஸ்தையில் சரீரமில்லாத படியினாற்றா னுண்டு துக்கமில்லாமலிரு க்கிறது. உறங்கி விழித்தோன் "நான் சுகமாய்த் தூங்கினேன்" என்றுரைப்பதே அதற்குப் போதிய சான்றும். சாக்கிராவஸ்தை யிலும் சொப்பனவஸ்தையிலும் சரீரமிருக்கிறது. சரீரமுள்ள விட த்துத் துக்கமுண்டாகாமற் போகாது. சீரணித்துப்போவதால் சரீரமெனப் பெயர்வந்தது என்னும் அதனது காரணார்த்தமே துக்கமுண்டெனலைத் தாபிக்கின்றது. சீரணித்துப் போவதாகிய சரீரம் துக்கத்தைத் தராமற் போவதின்மையின், சரீரமுள்ளவிட த்தில் துக்கமுண்டென்பது சிதையாத சித்தாந்தமாம்.

வினா: இங்ஙனங் கூறியதினால் என்ன சித்தித்தன ?

விடை: அன்னுவய (உடன்பாடு) வியதிரேக (எதிர்மறை) ங்க ளால்சரீரமுள்ள விடத்துத் துக்கமுண்டென்றும் அஃதில்லாவிடத் துத் துக்கமின்றென்றும் சித்தித்தன.

அஃது (சரீரம்) இருந்தால் அஃது (துக்கம்) இருத்தல் அந் வயமாம். அஃது (சரீரம்) இல்லாதிருக்க அஃது (துக்கம்) இல் லாதிருத்தல் வியதிரேகமாம்.

வினா: இச்சை யில்லாமையென்னும் பொருளதாகிய விரா கம் எத்தனைவகையாம ?

விடை: அஃது: அபர விராகமெனவும் பரவிராகமெனவு மிரு வகைப்படும். அவற்றுள் அபரவிராகம் யதமானம், வியதிரேகம், ஏ கேந்திரியம், வசீகாரமென நால்வகைத்தாம். இந்நான்கனுள் யதமா னமாவது இவ்வுலகில் சாரமாயுள்ள தின்னதென்றும் அசாரமாயு ள்ள தின்னதென்றும் குருவாயிலாகவும் சாஸ்திரவாயிலாகவும் நிச்சயிப்பன் என்னும் பிரவிருத்தியாம். வியதிரேகமாவது தனது

சித்தத்தின்கண் பூர்வமுள்ள தோஷங்களுள்ளே அப்பியாசித்த விவேகத்தால் இவ்வளவு தொஷம் நீங்கிற்று, இவ்வளவு தோஷம் மீந்திருக்கிறதென்று பகுத்தறிதலாம். நகுலக்கொடியை யாசிரயித்துக் கீரிப்பிள்ளை பாம்போடு போர்புரிவதுபோல் சற்சங்கத்தால் துர்க்குணத்தை விடுதலுமிதுவே. ஏகேந்திரியமாவது சித்தத்தின்கண் ஸ்தூலமான ஆசையிருந்தும் துக்கமென்று நிச்சயித்து விஷயங்களிற் பிரவிருத்தியின்றி யிருத்தலாம். வசீகாரமாவது ஆசை ஸ்தூலமாகவெழாமல் அந்தக்கரணத்தில் சம்ஸ்காரமாத்திரமாயிருத்தலாம். இவ் வசீகார விராகமும் மந்தம், தீவிரம், தீவிரதரமென மூவகைத்தாம். இம்மூன்றனுள் மந்தமாவது புத்திர தனாதிகளின் நாசத்தால் குடும்பத்தை வெறுக்கும் புத்திவிருத்தியாம். தீவிரமாவது புத்திரர்முதலானோர்களா லுண்டாகும் சுகத்தை விரும்பாதிருத்தலாம். தீவிரதரமாவது புனர்ஜன்மமுண்டென்பதை யறிந்து எவ்வுலக போகத்தையும் விரும்பாதிருத்தலாம். பரவிராகமாவது சம்ஸ்காரமாத்திரமா யந்தக்கரணத்திலிருக்கும் ஆசையைப் புனர்ஜன்ம முண்டென்று எவ்வுலக போகத்தையும் விரும்பாதிருத்தல் திடப்படுதலினு லொழித்தலாம். ஈண்டுப் பரவிராகந்தான் கொள்ளப்படும்.

வினா: இதுகாறுங் கூறியதன் பயன்யாது?

விடை: விஷயபோகங்களை விஷமென வெறுத்து ஒன்றினுமாசையில்லாம லிருக்கவேண்டு மென்பது பெறப்பட்டது. இதனையடையவேண்டித் திருமூலர் "ஆசை யறுமின்க ளாசை யறுமின்க, ளீசனோ டாயினு மாசை யறுமின்க, ளாசை படப்பட வாய்வருந் துன்பங்க, ளாசை விடவிட வானந்த மாமே." என்றருளியதையு மறிக.

வினா: சமாதிசட்கசம்பத்தி யாவதென்ன?

விடை: அது: சமம், தமம், திதிக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதியென்றாறுவகையாம். மூன்றாஞ்சாதனமானது சிறந்தவிக்குணங்களை யுடைத்தாயிருத்தல்பற்றிச் சமமுதலாகவுள்ளவா றைசுவரியத்தை யுடைத்தாயிருக்கிறதென்று கூறப்பட்டது. சமாதியென்பது, சம+ஆதியெனப் பிரிபட்டு நிற்கும். சமம், தமம், எனலேச் சமை, தமையென லுமுண்டு.

வினா: (1) சமமாவதென்ன?

விடை: உட்கரணமென்னு மந்தக்கரண (மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களை) த்தை விஷயங்களிற் பிரவிர்த்திக்காவாறு

தடுத்தலாம். பாகிய வியாபாரமின்றி மனத்தைத்திருப்பி வேதாந்த சிரவணத்திலழுந்தச்செய்வது மிதுவேயாம.

வினா (2) தமமாவதென்ன ?

விடை: செவிபாதிப் புறககரணங்களைச சப்தாதி விஷயங்களிற பிரவாததிககாவாறு தடுததலாம.

வினா (3) திதிக்ஷையாவதென்ன ?

விடை: காமககுரோதாதிகளைத தலைபெடுக்கா வண்ணமடக்கிசசீதோஷ்ணம பசிதாகமுதலிய துவநதுவஙகளைச சகிததுக கொண்டிருத்தலாம. அன்றியும,பிராரதத வசததினாலெககாலத்திலெதுவருமோ அக்காலத்திலதனை யனுபவிததுததீரவேண்டுமெனறெணணிக தனககுரியதாகப பாவிககபபடும பொருள தன்னைவிட்டொழிவதைபபற்றி வருததமும தனககு மேனமையுண்டாமாறுகிடடுகிற பொருளைப்பற்றி மகிழசசியுமின்றிச சமபுததியுடனே யிருபபது மிதுவேயாகும.

வினா: (4) உபரதியாவதென்ன ?

விடை: ஸதிரீ,தனம,ஜாதி,அபிமானமுதலிய சாதநஙகளோடு கூடிய சகலகாமஙகளையும விட்டும, விஷயபோகஙகளை விஷமாகக கருதியும, ஸதிரீயை வெறுதது மிருததலாம. (விகித கருமததைப பலனிலிசசையைவயாது பகவத பிரீதியாகப புரிதலீணடுவிலக்கன்று) உபரதியை உபராமமென்றும விட்டெலன்றுங கூறுவதுணடு

வினா. விஷயபோகங்களை விஷமாகக் கருதுதலும ஸதிரீயை வெறுததிருததலுமீணடுங கூறுவதெறறிறகு ?

விடை விராகததிறகும உபரதிககு முளள வேறறுமை விளஙகின விசசநதேகம நிகழாது ?

வினா: அவ்விரணடறகுமுள்ள வேறறுமையெனனை?

விடை: அடையபபடாத விஷயஙகளில தோஷதிருஷடி பூரவகமாயிசசையிலலாம லிருபபது விராகம. தியாகஞசெயதுவிட்ட விஷயஙகள மீணடுமடையபபடுமாயின அவறறினகண சிறிது மிசசையிலலாமலிருபபது விராகததின பயனான உபரதி. விராகம சாதனமாயும உபரதிசாததியமாயுமிருததலின நிமிததமின்றி மீணடுங கூறுதலென்னுங குறறமின்றாமெனக

வினா விஷயபோகஙகளில ஸதிரீபோகமு மொன்றாயிருகக மீணடும ஸதிரீயை வெறுததிருததலுமென்றதேன ?

விடை: விஷய போகங்களில் ஸ்திரிபோகமும் சேர்ந்திருப்பினும் அதனை மீண்டுங் கூறியது ஓர்நிமித்தம்பற்றியாகலின் அது கூறியது கூறலென்னுங் குற்றமாகாது.

வினா: அந்நிமித்தமாவ தென்ன?

விடை: கீழ்ப்போன பிறவிகளிற்செய்த ஸ்திரிசம்பந்தம் மிகுதியாயிருத்தலாலும், ஸ்திரியினிடத்தில் சுவை யொளி யூறு ஓசை நாற்றம் மைதுனமென்னு மாறுவிஷயங்க ளடையப்படுவதாலும், ஒருகாலத்தி லொருங்கே யாறுவிஷயங்களையு மடையச்செய்யும் ஸ்திரி யற்றவிஷயங்களைக்காட்டிலும் பிரபலமாயிருக்கிறள். அப் பிரபலம்பற்றி ஸ்திரியை வெறுத்திருத்தலுமென்று கூறப்பட்டது. படவே, ஸ்திரிபோக மில்லாதவனுக்கு மற்ற விஷயபோகங்களை விடுதல் இலேசாமென் றேற்படுகின்றது. இது "பாரியை யுடையோன் யாவ னவனுக்கே பற்றும் போகம், நாரியை யில்லா தாற்குப் போகத்தி னலமெங் குண்டாம், காரிகை தன்னை நீங்கிற் கருத்துறு சகத்து நீங்கும்" என்றான்றோர் கூறியதினாலு முணரற்பாற்றும்; ஆகவே இதர விஷயபோகங்களுக்கெல்லாங் காரணமாயிருக்கும் ஸ்திரியினிடத்தில் அதிக வெறுப்பிருக்கவேண்டுமென்பது சித்தாந்தமாயிற்றென்க.

வினா: (5) * சிரத்தையாவதென்ன?

விடை: குருவினிடத்தும் வேதத்தினிடத்தும் பூரணவிசுவாசம் வைத்தலாம்.

*"சாஸ்திரம் குருமுதலியவற்றின் வாக்கியங்களிலுண்டாகும்சிரத்தையானது ஈசுவரன் குரு முதலியோர்களின் பக்தியின்றி யுண்டாகாது. எவனுடைய சித்தத்தில் முதலில் ஈசுவரன் குரு மற்ற இருஷிகள் முனிகள் பிரஹ்மநிஷ்டர்கள் என்னு மிவர்களிடத்தில் பூஜ்ய (பூஜிக்கப்படுவரென்னும்) புத்தியாகப் பிரீதிவடிவமான பக்தியுண்டாகின்றதோ, அவனுக்கே வேதமுதலிய சாஸ்திரங்களிலும் குரு முதலியோர்வாக்கியங்களிலும் பக்தியநுசாரமாகச் சிரத்தை யுண்டாகின்றது. ஆதலால் பக்தியெதுவோ, அது ஞானத்திற்கும் ஞானத்தின் சர்வசாதனங்களுக்கும் முக்கியகாரணமாம். இதனாலேயே சிரத்தை பக்திபூர்வகமா யிருத்தலால் சர்வ சாதனங்களிலும் முக்கிய சாதனமாம்.

இங்கே இஃதுருவகம்:—க. மோக்ஷசாதனங்களின் சம்பத்தி (அடைவு) விருக்ஷமாம். உ. அதற்கு நிஷ்காம கர்மமுதலிய பிரயத்தினங்களாற் செய்யப்பட்ட சுத்த சித்தம் நிலமாம். ௩. ஈசுவரன் குரு முதலியோர்களின் பக்தி விதையாம். ௪. மந்தவிவேகம் முளையாம். ௫. திடவிவேகம் அடிமர

வினா: (6) சமாதியாவதென்ன?

விடை: விஷயங்களின் தோஷதிருஷ்டியென்னும் அங்குசத்தா லடக்கப்பட்ட அகக்கரணமாகியயானையும், தோஷதிருஷ்டி பூர்வக மாய்ச் சாஸ்திரசிந்தனையென்னுஞ் சாட்டியால் சப்தாதிவிஷய வடி வமார்க்கத்திற் செல்லாவண்ணமடக்கிய இந்திரியங்களாகிய குதி ரைகளும், சம்ஸ்காரவசமிலாக வரப்பட்டவிஷயங்களில் மறித்தும் பிரவேசித் தல்லற்படாவாறு ஆரியனனுக்கிரகித்ததை யனுசந்தித் துச் சலிப்பின்றி யொருமுகப்பட்டிருத்தலாம்.

வினா: வெவ்வேறு வகைப்பட்டிருக்கும் சமமுதலியவாறை யும் ஒரே சாதனமாகக் கூறியது எங்ஙனமமையும்?

விடை: ஒருகோவையின்கண் வெவ்வேறு வகைப்பட்ட பலவிரத்தினங்கள் கோக்கப்பட்டிருப்பினும் பலவிரத்தினங்கள் கோக்கப்பட்டிருத்தல்பற்றிப் பலவென்று கூறாது ஒருகோவை

---

மாம். சு. விவிதமான வைராக்கியம் சாகை(கிளை)களாம். எ. சமமுதலிய வைந்து சாதனங்கள் புஷ்பங்களின் கொத்துக்களாம். அ. குருவாக்கியசிரவ ணம் அதன்பேரிலுண்டாகும் ஆண் விருக்ஷத்தின் சையோகமாம். கூ. சிர வணமனன நிதித்தியாசன முதலிய அன்னியசாதனங்கள் அப்பழச்சம்பந் தியான அந்நியப் பிரயத்தினங்களாம். க0. சிரத்தைப்பழமாம். கக. முமுட் சுத்துவம் பழத்தின் பரிபாகதசையாம். கஉ. ஞானம் அப்பழத்தின் இரச மாம். கங. அப்பழத்திலும் நிஷ்பிரயோஜனமாகிய பக்தியென்னும் பீஜ மிருக்கின்றது.

அப்பழத்தின் ஞானமென்னும் இரசமெதுவோ அதுசிரத்தை யென் னும் பழத்தின் அதீனமாம். ஏனெனின், முற்கூறிய சிரத்தை யென்னும் பழம் உலர்ந்துபோனால் அதன் ஞானமாகிய இரசமும் உலர்ந்துபோகும். ஆதலால் ஞானமென்னும் இரசம் சிரத்தையென்னும் பழத்தின் அதீன மாம். அப்பழத்தைப் புசித்தலவாயிலாக வயிற்றில் ஸ்தாபிக்கவே, அத னிரசமும் வயிற்றில் நிலைபெறும். ஆதலால், ஜீவித்திருக்குமளவும் வித்து வான்களது சித்தத்தில் சாஸ்திர குருவாக்கியங்களால் நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தில் சுபாவமான சிரத்தை யிருக்கும். அதுபரியந்தம் ஞானநிஷ் டையு மிருக்கும்.

அப்பழத்தை அஞ்ஞன் (அறிவின்றிய) புருஷன் பக்தியென்னும் உருசியுள்ள விதையின் உபேக்ஷையோடு பக்ஷணஞ் செய்கின்றான். அவ னுக்கு அதிக உருசியுண்டாகிறதில்லை. தஞ்ஞன் (அறிவுள்ள) புருஷன் பக்தியென்னும் விதையோடும் ஞானமாகிய இரசத்தோடும் அப்பழத்தைச் சாப்பிடுகின்றான். அவனால் அதன் அதிக உருசி அநுபவிக்கப்படுகின்றது. இவ்வாற்றால் முற்கூறிய சிரத்தை யென்னும் பழத்திற்கு ஜீவன் முக்தி உருசியாம். விதேகமுக்தி அதனாலாகிய பசியை நிவர்த்தித்தல் பூர்வகமான திருப்தியாம்'' என்று பாலபோதம் கூறுகின்றது.

யென்றே சொல்லப்படுதல் போன்று மூன்றுஞ் சாதனமாகக் கூறிய சமதமாதிகள் வெவ்வேறு வகைப்பட்ட விலக்கண முடையனவாயினும் அவை பரஸ்பர சகாயத்தை யபேட்சிக்கிறபடியால் அவ்வாறுங் கூடியது ஒரே சாதனமென்று கொள்ளப்பட்டதென்க.

வினு: அவ்வாறும் பரஸ்பர (ஒன்றற்கொன்று) சகாயத்தை யபேட்சித்தலெப்படி?

(க) (1) தமம் சமத்தை யபேட்சித்தல்.

விடை: சரீரவடிவ இரதத்திற்கு * இந்திரியங்களாகிய குதிரைகளும், மனமாகிய கடிவாளமும், புத்தியாகிய சாரதியும், ஆத்மாவாகிய இரதிகனு மிருக்கின்றன.

புத்தியாகிய சாரதி இராசத தாமசகுண வாகாரமாகாது தனதியற்கை வடிவசத்துவகுண வாகாரமாயே இருப்பின், இந்திரியங்களாகிய குதிரைகள் பிரவிர்த்திமார்க்கத்திற் செல்லாது நிவிர்த்திமார்க்கத்திற் சென்று ஆத்மாவாகிய இரதிகனை யுயர்நிலையிற் பொருந்தச்செய்யும். ஆகையால், ஆத்மாவாகிய இரதிகன் புத்தியாகிய சாரதியையும் இந்திரியங்களாகிய குதிரைகளையும் (இஷ்டப்படி நடக்காமலும் பிரவிர்த்தி மார்க்கத்தில் செல்லாமலும்) அடக்கியாளவேண்டும்; வேண்டவே, உட்கரணத்தை யடக்குதலென்னும் சமமும், புறக்கரணத்தை யடக்குதலென்னும் தமமும் முன்னரப்பிய சிக்கத்தக்கனவாம்; சாரதியின் அதீனத்தில் குதிரைகளும் குதிரைகளின் அதீனத்தில் சாரதியும் இருத்தல்போன்று புத்தியின் வசத்தி லிந்திரியங்களும் இந்திரியங்களின் வசத்தில் புத்தியுமிருத்தலினென்க. ஈண்டு ஒன்றற்கொன்று அதீனமாதலிருப்பினும் உட்

---

* ஆத்மாநம் ரதிநம் வித்தி ஶரீரம் ரதமேவ து ।
புத்திம் து ஸாரதிம் வித்தி மந꞉ ப்ரக்ரஹமேவ ச ॥
இந்த்ரியாணி ஹயாநாஹுர் விஷயாம்ஸ்தேஷு கோசராந் ।
ஆத்மேந்த்ரியமநோயுக்தம் போக்தேத்யாஹுர்மநீஷிண꞉ ॥

(இ-ள்.) ஆத்மாவை ரதிகனென்றும், சரீரத்தைரதமென்றும், புத்தியினைச் சாரதியென்றும், மனதினைக் கடிவாள மென்றுமறிக. இந்திரியங்களைக் குதிரைகளாகவும், விஷயங்களை மார்க்கங்களாகவும் சொல்லுகிறார்கள். சரீரம் இந்திரியம் மனசு இவைகளொடு கூடிக்கொண்டிருக்கிற புருஷனைப் போக்தாவென்று சொல்லுகிறார்கள். கடோபநிஷத்.

கரண மடங்கிய காலத்துப் புறக்கரணத்திற்கு ஆற்றலொழிந்து போதலின் உட்கரண மடங்காதவரையில் புறக்கரண மடங்காதென்பது தெளிவாயிற்று; ஆகவே, புறக்கரண மடக்குதலென்னும் தமம் அகக்கரணத்தை யடக்குதலென்னும் சமத்தையபேட்சிக்கின்றது.

(2) திதிக்ஷை சமத்தை யபேட்சித்தல்.

பகிர்முகப்படாத மனத்தால் சீதோஷ்ணாதி துவந்துவங்களைச் சகித்தலும் அஃதின்றிய மனத்தினு லவைகளைச் சகியாமையுமிருத்தலின் காமாதி தணித்திடுதலாம் திதிக்ஷையும் சமத்தை யபேட்சிக்கின்றது.

(3) உபரதி சமத்தை யபேட்சித்தல்.

பால்வார்த்து வளர்த்து வந்த பூனையானது கட்டிலுட்படாத சமயத்தில் தனக்கெதிர்ப்பட்ட எலியின்மேல் விரைந்து பாய்வதுபோன்று விஷயத்தினின்றும் நிவிர்த்தியடைந்த மனதும் அடக்காத வரையில் நவீனமாய்க் கிட்டும் விஷயத்தில் மீண்டும் செல்லுகின்றது ; செல்லவே அபிமான சகித கருமங்களனைத்தினையும் சுமையாகக் கருதி விட்டுவிடலாகிய உபரதியும் சமத்தை யபேட்சிக்கின்றது.

(4) சிரத்தை சமத்தை யபேட்சித்தல்.

தன்னை யடக்காத வரையில் மனைவி மக்க ளர்த்தங்களில் மனத்திற்கு விருப்பம் நீங்குகிறதின்று ; இன்றாகவே, அதற்குக் குருவினிடத்தும் வேதத்தினிடத்தும் விசுவாசமுண்டாகாது; ஆகவே, சுருதி குருவைத் துணிவினு னம்புவதாகிய சிரத்தையும் சமத்தை யபேட்சிக்கின்றது.

(5) சமாதி சமத்தை யபேட்சித்தல்.

மனத்தை யடக்காதவரையில் சித்தம் ஆசாரியனுபதேசித்தவாறு சொரூபத்தில் ஒருமுகப்பட்டிருத்தல் கூடாமையின், குருமொழி நெஞ்சமையுறவே திட்பமுறலாகிய சமாதியும் சமத்தை யபேட்சிக்கின்றது.

(உ) (1) சமம் தமத்தை யபேட்சித்தல்.

இந்திரியங்களி னடக்கும் மன வடக்கத்திற் கேதுவாயிருத்தலின், இந்திரியங்க ளடங்காதவரை மனவடக்கமின்றாம்; இன்றாகவே, அகக்கரண மடக்கலாகிய சமமும் புறக்கரண மடக்கலாகிய தமத்தை யபேட்சிக்கின்றது.

(2) திதிக்ஷை தமத்தை யபேக்ஷித்தல்.

இந்திரிய நிக்கிரகமில்லவழி மனது விஷயவாயிலாகச் சென்று சலித்தலை யடைகின்றது. அத்தகைய மனதால் சீதோஷ்ணாதி துவந்துவங்(இருமை)களைச் சகித்தல் முடியாது; முடியாதாகவே, திதிக்ஷையும் புறக்கரண மடக்கலாகிய தமத்தை யபேக்ஷிக்கின்றது.

(3) உபரதி தமத்தை யபேக்ஷித்தல்.

செவியாதி யிந்திரியங்களை நிக்கிரகஞ் செய்யாவிடின் சாட்சாத்தாக வனுபவிக்கப்படும் சப்தாதி யனுகூல விஷயங்களில் சம்ஸ்காரவாயிலாகப் பிரியமுண்டாகின்றது. ஆகையினால், உபரதியும் தமத்தை யபேக்ஷிக்கின்றது.

(4) சிரத்தை தமத்தை யபேக்ஷித்தல்.

சப்தப் பரிசாதி விஷயங்களில் பிரியமுள்ளவனுக்குக் குருவினிடத்தும் சுருதியினிடத்தும் விசுவாசமுண்டாகாதாகலின் சிரத்தையும் தமத்தை யபேக்ஷிக்கின்றது.

(5) சமாதானம் தமத்தை யபேக்ஷித்தல்.

இராசதகுண தாமசகுண வாகாரத்தால் விடாது சலித்துக் கொண்டிருக்கு மனமானது இந்திரிய நிக்கிரக மில்வழி ஒருமுகப்படுதல் கூடாமையின் சமாதியும் தமத்தை யபேக்ஷிக்கின்றது.

(க) சமதமாதிகள் திதிக்ஷையை யபேக்ஷித்தல்.

சீதோஷ்ணம், பசிதாகம், லாபநஷ்டம் முதலிய துவந்துவங்களைச் சகித்த லில்வழி (1) மன நிரோதமென்னும் சமமும், (2) இந்திரிய நிரோதமென்னும் தமமும், (3) அடையப்பட்ட தனுதிகளை விரும்பாமை யென்னு முபரதியும், (4) சுருதி குருவைத் துணிவினால் நம்புவதென்னும் சிரத்தையும், (5) குருமொழி நெஞ்சமையுறவே திட்ப முறலாகிய சமாதியு முண்டாகாமை யொருதலையாயிருத்தலின், சமதமாதிகளும் திதிக்ஷையை யபேக்ஷிக்கின்றன.

(உ) சமதமாதிகள் உபரதியை யபேக்ஷித்தல்.

அபிமான சகித கருமங்களனைத்தையும் விட்டுவிட லென்னு முபரதி யில்லாதபோது சமதமாதி குணங்கள் சித்தித்தலின்று; இன்றாகவே, சமதமாதிகளும் உபரதியை யபேக்ஷிக்கின்றன.

(ங) சமதமாதிகள் சிரத்தையை யபேக்ஷித்தல்.

குருவினிடத்தும் வேதத்தினிடத்தும் பூரணவிசுவாசம்வைத்தலாகிய சிரத்தையில்வழிச் சிரவணத்திற் பிரவிர்த்திக்கும் விரு

ப்ப முண்டாகாது. முண்டாகாதாகவே, சிரவணத்தில் உபயோக முடைய சமமுதலிய எச்சாதனங்களும் சிரத்தையில்வழிப் பய னற்றனவாம்; ஆகவே சமதமாதிகளும் சிரத்தையை யபேட்சிக் கின்றன.

(ரு) சமதமாதிகள் சமாதியை யபேட்சித்தல்.

மனம் ஒரு முகப்படுதலென்னும் சாமாதி சித்திக்காதவரை மனோநிக்கிரகம் இந்திரிய நிக்கிரகமுதலியவை சித்திக்காமையின், சமதமாதிகளும் சமாதியை யபேட்சிக்கின்றன.

இங்ஙனங் கூறியவாற்று லொன்றற்கொன்று சககாரியாயிரு த்தலை யோர்ந்துணர்ந்துகொள்க.

(4) முமுக்ஷுத்துவம்.

வினா: முமுட்சுத்துவ மென்று லென்ன?

விடை: மோட்ச விருப்பத்திற்கு முமுட்சுத்துவ மென்று பெயராம். மோட்சமாவது பிரமப்பிராப்தி (அடைதல்)யும் அநர்த்த (துக்க) நிவிர்த்தியுமாம். அதன்கண் (வீடுபற்றிக்கொண்ட போது அதனுளிருந்தவன் தனது மனைவி மக்களாத்தங்களைக் கவனியாது உஷ்ணத்தால் தபிக்கப்பட்ட தன்னுடம்பின்கண்ணு ள்ள வெப்பத்தைத் தணிக்குமாறு தண்ணீரை யொருவரது பிரய த்தினமில்லாமலே தேடுவதுபோலவும் பசியெடுத்தவன் அன்னத் தைத் தேடுவதுபோலவுமுள்ள) இயல்பாய விருப்பமே யீண்டு முமுட்சுத்துவ மெனப்படும். மலவிட்சேப முள்ளவரிடத்துள்ள முமுட்சுத்துவம் அவைகளின் நீக்கத்திற்கும் சாதன சதுஷ்டயங் களைப் பெறுதற்கு மேதுவா யிருக்கின்றது. அவ்வாறிருப்பினும் அஃது அத்தியந்த துக்கநிவிர்த்திக்கும் தடையற்ற வாநந்தப் பிரா ப்திக்குஞ் சாட்சாத் சாதனமாக விராமையபற்றி மந்த முமுட் சுத்துவமெனப்படுகிறது. படவே ஈண்டுக்கூறிய முமுட்சுத்து வம் தீவிரமுமுட்சுத்துவ மாயிற்று. மந்தமுமுட்சுத்துவமே பரி பாகதசையால் தீவிரமுமுட்சுத்துவ மாகின்றமையினென்க.

சாதன சதுஷ்டயத்திற்குள்ள ஏது முதலானவைகள்.

வினா: இச்சாதனங்களுக்கு ஏது முதலானவைகளுண்டோ?

விடை: உண்டு.

வினா: அவை யாவை?

விடை: ஏது, சொரூபம், காரியம், அவதி, பலமென்னு மிவ் வைந்து மொவ்வொரு சாதனத்திற்குமுண்டு.

(க) (1) அந்தக்கரண சுத்தியில்லாதவர்களுக்கு நித்தியா நித்திய வஸ்து விவேகமுண்டாகாமையினு லந்தக்கரண சுத்தியே நித்தியா நித்தியவஸ்து விவேகத்திற்கு ஏது (காரணம்) (2) பிரமமே நித்தியமாயுள்ளது ஏனையதனித்தியமா யுள்ளதென்று சாஸ்திர வாயிலாக நிச்சயித்தலே சொரூபம். (3) சாஸ்திர வாயிலாக நித்திய மின்னது அனித்தியமின்னதென்று நிச்சயித்ததைச் சதா சிந்தித்துக்கொண்டிருத்தலே காரியம். (4) நாமரூப வடிவங்களி யாவும் அநித்தியம் அவையின்றியது நித்தியமென்று நிச்சயித்தது எவ்வாற்றானும் நீங்காது நன்றாய்த் திடப்பட்டிருப்பதே அவதி (எல்லை). (5) புண்ணியலோகப் பிராப்தியே பலம்.

(உ) (1) சப்தாதி விஷயங்களில் தோஷதிருஷ்ட்டி யுண்டாகாத போது விராக முண்டாகாமையின், விஷயங்களிலுள்ள தோஷ திருஷ்ட்டியே இகபரபோக விராகத்திற்கு ஏது. (2) அவாவின்றி விஷயங்களைப் பற்றற விடுத்தலே சொரூபம். (3) வாந்திசெய்த்த அன்னம் போன்று அவாவின்றிப் பற்றறவிடுத்த விஷயங்களில் மீண்டும் சம்ஸ்காரவாயிலாக அவாவுண்டாகாதிருத்தலே காரியம். (4) யாண்டு யாண்டு நாமரூபமுண்டு ஆண்டாண்டுத் துக்கமுண்டென்று காண்டல் கருக லுரைவாயில்களா லுணர்ந்து நாமரூபமுள்ள விடங்களை யெல்லாம் நரகமாகக் காண்டலே அவதி. (5) புண்ணியலோகப் பிராப்தியே பலம்.

(ங) (1) இயமநியமாதிக ளில்லாதபோது சமாதிசட்க சம்பத்தி யுண்டாகாமையின், இயமநியமாதிக ளுண்டாயிருத்தலே சமாதி சட்கசம்பத்திக்கு ஏது. (2) சித்தநிரோதமே சொரூபம். (3) விஷயவாகார க்ஷயமே காரியம். (4) பிரவிருத்தியற்றுச் சுழுத்தி யவஸ்தையைப்போல விஷயங்களை மறந்திருத்தலே அவதி. (5) புண்ணியலோகப் பிராப்தியே பலம்.

(ச) (1) சாதுசங்கப் பழக்கமில்லாதபோது அத்தியந்த துக்க நிவிர்த்தியும் தடையற்ற வாநந்தமுமாகிய மோட்சத்தின்கண் தீவிர விச்சை யுண்டாகாமையின் சாதுசங்கப் பழக்கமே முமுட்சுத்துவத்திற்கு ஏது. (2) (மனைவிமக்களர்த்தங்களிற் சிறிதேனு மிச்சையின்றி) மோட்சமாத்திரத்திலுள்ள விச்சையே சொரூபம். (3) ஆறு நற்கல்வி யறிவுடைமை வயிராக்கியமாதிகளையுடைய பிரமநிஷ்ட குருவையடைதலே காரியம். (4) குருவிற்குச் செய்யுந் தொண்டொன்றையே கைக்கொண்டு மற்றக் கருமங்களை யெல்

லாம் விட்டுவிடலே அவதி. (5) புண்ணியலோகப் பிராப்தியே பலம். இந்நான்குசாதனமு மொருமித்துக் கூடியிருந்தாலின்குத் தானே விளைவில் ஆத்மவிசாரமே பலமா மென்க.

அதிகாரி தாரதம்மியம்.

வினு: சாதன சதுஷ்டயமுள்ள வதிகாரிகளுக்குள் தாரதம்மியமுண்டோ ?

விடை: உண்டு.

வினு: எங்ஙனம் ?

விடை அவர்கள்:உத்தமோத்தமர், உத்தமர், மந்தர், மூத்திமரென நான்கு பிரிவினராகச் சொல்லப்படுகிறார்கள். முற்கூறிய ஏது சொரூபம் காரியம் அவதி யென்பனவே யிவ்வாறு கூறுவதற்குக காரணமாகும்.

வினு: (1) உத்தமோத்தம வதிகாரி யெவ்விதமா யிருப்பன் ?

விடை: உத்தமோத்தமாதிகாரி நித்தியா நித்திய வஸ்து விவேகத்தினுல் யதார்த்தத்தில்அநித்தியமாயிருக்கிற தேகாதிப்பிரமலோகபரியந்தமான சகலபோக்கிய வஸ்துக்களிலும் நாய்கான்ற வன்னத்திற்போல அத்தியந்த வயிராக்கியத்தை யடைந்து, சகல விஷயங்களையும் விஷம்போலவும் அக்கினிபோலவும் நரகம்போலவுங் கண்டு, ஒரு விஷயத்திலும் பிரவிருத்தியின்றி நிவிர்த்தியை யடைந்து, சுழுத்தி யவஸ்தையைப்போன்று விஷய ஞானமின்றி யிருக்கப்பெற்று, சாட்சாத்கார மின்மையினுல் அடிக்கடி பகிர்முகப்பட்டு, தன்னைப்பற்றி வருவனவும் பிறவுயிரைப்பற்றி வருவனவும் தெய்வத்தைப்பற்றி வருவனவுமாகிய தாபத்திரயங்களால் சிரசில் அக்கினி பற்றினவனைப்போன்று வருந்தி, ஒரு விஷயத்திலு மின்பத்தை யடையாது, ஒரு க்ஷணப்போதாயினும் பிறவித்துன்பங்களாகிய தாபத்திரயங்களைச் சகிக்கமுடியாது, "எப்போது இந்தச் சம்சார சாகரத்தினின்றும் நீங்கப்போகின்றோம். எப்போது இதை விடப்போகின்றோம். எதனுலே இந்தத் துக்கத்தினின்று விடுபடுவோம்" என்றிப்படி யத்தியந்தமோட்சவிச்சையோடு கூடியிருப்பவன். இவன் ஆத்மதத்வ விசாரத்திலே உத்தமோத்தம அதிகாரியென்று சொல்லப்படுகிறுன். இதனுல் நான்கு சாதனங்களிலும் அவதிபரியந்த முள்ளவனே உத்தமோத்தம வதிகாரியென்று பெறப்பட்டதென்க.

வினு: (2) உத்தமாதிகாரி யெப்படியிருப்பன் ?

விடை: உத்தமாதிகாரி சாதன சதுஷ்டயங்களில் காரிய பரியந்தமுள்ளவனா யிருப்பன்.

வினா: (3) மந்தாதிகாரி யெவ்வாறிருப்பன் ?

விடை: மந்தாதிகாரி சொரூபபரியந்தம் சாதன சதுஷ்டயங்களையுடையவனா யிருப்பன்.

வினா: (4) மத்திமாதிகாரி யெங்ஙனமிருப்பன் ?

விடை: மத்திமாதிகாரி ஏதுவரை சாதன சதுஷ்டயங்களையுடையவனாயிருப்பன்.

வினா: இவர்களுக்கு ஆத்மவிசாரஞ்சித்திக்குமடைவு எப்படி?

விடை: உத்தமோத்தம வதிகாரிக்கு விரைவாயும், உத்தமாதிகாரிக்குக்கிஞ்சித் மெதுவாயும், மந்தாதிகாரிக்குப் பலநாட் சென்றும், மத்திமாதிகாரிக்குச் சதா விசாரஞ்செய்யவும் ஆத்மவிசாரஞ் சித்திக்கும்.

வினா: இந்நால்வரில் யோகாப்பியாசத்திற் குரியவர்களியார் ?

விடை: அவர்கள் மந்தாதிகாரியும் மத்திமாதிகாரியுமாவர்.

வினா: எங்ஙனம் ?

விடை: விசாரமில்வழி மந்த மத்திமாதிகாரிகளுக்குச் சித்தம் வியாகூலமயமாய் விடுகின்றது. ஆத்ம விசாரத்தி லதிகாரம் மிகுகுறைவா யிருக்கிறபடியால் அவர்கள் யோகாப்பியாசந்தான் செய்யவேண்டும். அதனாற்றான் அவர்களது சித்தவிருத்தி கெடும். இதனாலவர்களுக்கு யோகமே முக்கியமென்று சொல்லப்படுகின்றது. இவ்விருவர்களுக்கும் சித்த நிரோதத்திற்கு யோகமே முக்கியமென்று கூறியபடியால் மற்றவர்களுக்கு ஆத்மவிசாரமே முக்கியமென்று பெறப்பட்டதென்க.

சாதன சதுஷ்டயங்களி னடைவு.

வினா: சாதன சதுஷ்டயங்களினடைவு எப்படி ?

விடை: சுருதி ஸ்மிருதி புராணேதிகாசங்களை (பரோட்சமாக)த்தெளிவுற வறிந்திருக்கின்ற பண்டிதர்களுக்கு நித்தியாநித்திய வஸ்துவிவேக மிருந்தும் அவர்கள் விஷயங்களிலாசக்தி (ஆசை) யுடையவர்களாய்க் காமிய கருமங்களைப் புரிகின்றபடியால் ஆசக்தி யொழிய இகமுத்திரார்த்த பலபோக விராகமென்னு மிரண்டாஞ் சாதனமும் வேண்டியதாகின்றது. இவ்விரண்டு சாதனமுடைய

வர்களும் மனவடக்கம் புலனடக்கம் முதலியவைகளின்றிக் கோப தாபங்களை யுடையவர்களா யிருக்கிறபடியால் அவைகளை யொழிக்கச் சமாதி சட்கசம்பத்தியும் வேண்டியதாகின்றது. இம்மூன்று சாதன முடையவர்களும் மான்றோல் முதலியவற்றைக் கக்கத்திலிடுக்கிக்கொண்டு, சடைமுடி யுடையவராய், யோகியரென்னும் பெயரைத் தாங்கி, குடும்பபந்தங்களை யொழித்து, விரக்தியும் உபசாந்தமு முடையவர்களா யொருவர் மாட்டொன்றையும் பெறுதிருக்கிறார்கள். அவ்வாறிருந்தும் அவர்கள் சிரவணாதி லிச்சையில்லாதிருத்தல்பற்றி நான்காஞ் சாதனமாகிய முமுட்சுத்துவமும் வேண்டியதாகின்றது. இதுவே ஒன்றற்கொன்று தொடர்பென்னு மடைவாமென்க.

சி: இதுகாறும் கூறிய வினு விடைகளால் சாதனசதுஷ்டயத்தின் சொரூபத்தை நன்குணர்ந்தேன்; இனி யச்சாதனசதுஷ்டயத்தைப்பற்றிக் கூறும் பிரமாணங்களை யறிய விரும்புகின்றனன்.

கு: கீழ்வருவனவே.

வராகோபநிஷத்.

நித்யாநித்ய விவேகஶ்ச இஹாமுத்ர விராகதா | ஶமாதி ஷட்கஸம்பத்தி: முமுக்ஷா தாம் ஸமப்யஸேத் || ஏவம் ஜிதேந்த்ரியோ பூத்வா ஸர்வத்ர மமதாம் | விஹாய ஸாக்ஷி சைதந்யே மயி குர்யாத் அஹம்மதிம் ||

(இ - ள்.) நித்தியாநித்திய வஸ்து விவேகம்—இந்தவஸ்து அழிவற்றது; இந்தவஸ்து அழியத்தக்கது என்கிற அறிவு. இஹாமுத்திரார்த்த பலபோக விராகம்—இந்தவுலகத்திலும் சுவர்க்கம் முதலிய பரலோகத்திலு முள்ள விஷயங்களில் ஆசையில்லாதிருத்தல். சமாதி சட்கசம்பத்தி—சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதானம்; இவ்வாறுகளுடன் கூடியிருப்பது. முமுக்ஷுத்வம்—மோக்ஷவிச்சை; இவற்றை அப்பியசிக்கவேண்டியது. இவ்விதமாய் இந்திரியங்களை ஜயித்தவனாய்ச் சகல விஷயத்திலும் எனதென்னும் புத்தியை விட்டுச் சாக்ஷி சைதன்னியமாயிருக்கிற என்னிடத்தில் "நான்" என்கிற புத்தியை வைக்கவேண்டும்.

நாரதபரிவிராஜகோபநிஷத்.

ப்ரஹ்மவிஜ்ஞாந லாபாய பரஹம்ஸ ஸமாஹ்வய: |
ஶாந்தி தாந்த்யாதிபி: ஸர்வை: ஸாதநை: ஸஹிதோ பவேத் ||

(இ-ள்.) பிரம்ம ஞானத்தை யடையும்பொருட்டுப் பரமஹம்ஸனென்னும் பெயரையுடையவன் சாந்திதாந்தி முதலான சகல ஸாதனங்களோடு கூடினவனாகவேண்டும்.

வாசுதேவமனனம்.

யதா ப்ருஹஸ்பதிஸவேந ப்ராஹ்மண ஏவ | ராஜஸூயேந க்ஷத்ரிய꞉| ததா வேதாந்தஶாஸ்த்ரே ஸாதநசதுஷ்டய ஸம்பந்ந ஏவாதிகாரீ | ஸாதநசதுஷ்டயம் நாம நித்யாநித்யவஸ்துவிவேக꞉| இஹாமுத்ரார்த்தபலபோகவிராக꞉| ஶமாதிஷட்கம் முமுக்ஷுத்வம் சேதிஸாதநசதுஷ்டயம்||

(இ - ள்.) பிரகஸ்பதி ஸவனமென்கிற யக்ஞத்தில் எப்படி பிராமணனே யதிகாரியோ, ராஜசூய யாகத்தில் எப்படி க்ஷத்திரியனே அதிகாரியோ அப்படியே வேதாந்த சாஸ்திரத்தில் சாதன சதுஷ்டய சம்பன்னனே யதிகாரி. சாதன சதுஷ்டயமாவது நித்தியாநித்திய விவேகம், இஹாமுத்திரார்த்த பலபோகவிராகம், சமாதிஷட்கம், முமுட்சுத்துவம் இவைகளே.

ஆத்மபோதம்.

தபோபி꞉ க்ஷீணபாபாநாம் ஶாந்தாநாம் வீதராகிணாம்|
முமுக்ஷூணாமபேக்ஷ்யோऽயமாத்மபோதோ விதீயதே||

(இ-ள்.) (சாந்திராயண முதலிய நித்யநைமித்திக விரதாநுஷ்டான சொரூபங்களாகிய) தவசுகளினாலே க்ஷீணபாவங்களுடையவர்களாகியும், பொறுமையுடையவர்களாகியும் (இகபரலோகங்களில்) இச்சை யில்லாதவர்களாகியும் சம்சாரபந்த நிவிர்த்தியை விரும்பினவர்களுக்கு விரும்பத்தக்கதாகிய இந்த ஆத்ம சொரூபத்தைத் தெரிவிக்கின்ற நூலானது விதிமுகமாகச் சொல்லப்படுகின்றது.

பிரமகீதை.

சாதன மாகுஞ் சதுஷ்டயங்கள் சமைந்தவத் ததன்மை யோர்க்கு
நீதி யாக வருமறைதா னின்றே யிவர்க ளறியுவணம்
பூக மாயும் புவனங்கள் பிறவு மாகி யிருந்ததுவு
மேத மில்லா தொன்றாய பரமே யென்றே யியம்பினதால்.

சூதசங்கிதை.

சாதன சம்பத்தியாலவ் வீச்சுவரனைத் தெரிந்துணர்வான் முத்தி
யாதரவா னுலகிற் சிவேச ரெப்போது மபேதமுள்ளார்.

### திருமந்திரம்.

சீரார் ஞானத்தி னிச்சைசெலச் செல்ல
வாராத காதற் குருபரன் பாலாகச்
சாராத சாதக நான்குந்தன் பாலுற்றோ
ராராயு ஞானத்த னாமடி வைக்கவே.

சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை
சற்குரு பாதமே சாயைபோ னீங்காமை
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்த
லற்புத மேமேநா லாற லாகுஞ்சற் சீடனே.

### வேதாந்த சூளாமணி.

நித்தியமான் மாவேபொய் விடயமெலா மெனத்தேர் நிலைதரு நித்தியாநித்ய வத்துவிவேகம்பின், மெத்திவரு மிகமுடனுத்தரத் தில்வரு போக விராகமிம்மை மறுமையுள விடயநுகர் வனைத்து ம, பொய்த்தழியு மிடும்பையென மனம்விடுத லாகும் புகழ்சமை யே முதலாய சட்குணங்கள் பெறுதல், வைத்தசமை யியல்பாய முத்திவிருப் பதுவே வயங்குமுமுட் சுத்துவமென் றறிந்திடுக மதிக்கே.

சமைதமையே திதிக்கையுப ரதிசிரத்தை சமாதி சமைமுதலா மறுகுணங்க ளுட்கரண மடக்கல், சமைதமைதான் புறக்கரண மடக்குதல்கா மாதி தனித்திடுத றிதிக்கைகரு மங்களனைத் தினையுஞ், சுமையெனவே விடுதலுப ரதிகருதி குருவைத் துணிவினு னம்புவதே சிரத்தைகுரு மொழிநெஞ், சமைவுறவே திட்பமுறல் சமாதியிச்சா தனஞ்சேர் ததிகாரி செயுங்குருசே வையினையெடுத் தியம்பில்.

### விவேகசூடாமணி.

சாதன நான்க தாகச் சாற்றலான் மேலோ ராலே
யோதிய வதிகா ரிக்கிங் குரைத்தவீ திருக்குங் காலே
போதமாம் பிரம நிட்டை பொருந்தலா மீதி லாக்காற்
கோதிலா வந்த நிட்டை கூடுவ தென்று மில்லை.

நித்தியா நித்தி யங்க ணிகழ்த்திய விவேக மொன்று
மித்திலும் பரத்தி லுஞ்சே ரின்பிடை விரக்தி யொன்றுஞ்
சத்தியஞ் சமத மாதி சட்கசம் பத்தி யொன்றுஞ்
சுத்தமா முமுட்சுத் தன்மை சொல்லலா மற்றொன் றாக.

விஞ்ஞானசாரம்.

முன்னாட் புரிந்த தவபப்பயனுன் முதல்வ னொருவ னுளனென்றே
யன்னான் பணியே முத்திபத மடையக் கூட்டு மெனவெண்ணிப்
பின்னு சான்முன் னுறுமூன் றும் பேணி யொழுங்கிற் சாதனங்க
ளன்னான் கிணையு முடையோனே வகுத்த விந்நூற் குரியவனும்.

அத்துவிதவுண்மை.

மேலாஞ் சதுஷ்ட சாதனங்கண் மேவிநிறைந்த பேர்க்கு ரைக்கின், மேலா மதுநா மெனத்திடமாய் விளங்கு மவையில் லாதவர்க்கு, மேலாம் பரமன் மான் மழுவாய் விளங்கி யுரைத்துழும் விளங்காது, மேலாஞ் சாத னங்கள்வர மேவவேண்டுஞ் சாது சங்கம்.

கைவல்லியநவநீதம்.

நித்திய வனித்தி யங்க ளிண்ணயங் தெரிவி வேகம்
மத்திய விகப ரங்கள் வருபோகங் களினி ராசை
சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் றாறு கூட்டம்
முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சா தனமிந் நான்கே.

சமந்தமம் விடல்ச கித்தல் சமாதானஞ் சிரத்தை யாறும்
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்ட
மமர்தரு கருமம் பற்ற தறுத்தலே விடலென் றாகும்
மமர்செயுங் காம மாதி வறினடக் குதல்ச கித்தல்.

சிரவணப் பொருளைத் தானே சித்தஞ்சிந் திக்கு மாறு
சரதமா வைக்கு மித்தைச் சமாதான மென்பர் மேலோர்
பரமசற் குருநூ லன்பு பற்றலே சிரத்தை யாகும்
வரமிகு சமாதி யாறு வகையின்சொற் பொருளி தாமே.

சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
யாதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகும்
நூதன விவேகி யுள்ள நுழையாது நுழையு மாகில்
பூதசன் மங்கள் கோடி புனிதனும் புருட னாமே.

பதிபசுபாசவிளக்கம்.

பூதகா ரியங்க ளெல்லாம் பொய்ம்மைமெய்ப் பூத நாத
னுதலாற் புவனத் தாசை யந்தரத் தாசை யற்ப
மோர்தரு வகைச்சம் பத்து முயர்முத்தி விருப்பு மிந்தச்
சாதன னான்குந் தானே சீடர்க்குச் சடல மென்ப.

அதிரகசியம்.

சதுமெய் யீது பொய்ம்மை யெனும்வித்து விவேக மெய்திப்
பூதலத் தாசை மேலைப் புவனத்தி லாசை போக்கிச்
சாதுநற் சமமே யாதி சட்குண தரனாய் மீளா
மோதுவெங் கலியை மாய்ப்பான் முத்தியில் விருப்ப முற்றான்.

## குருவிலிலக்கணம்.

சி: சுவாமி! எத்தன்மையர் குருவாவார்?

கு: ஆறு நற்கல்வி யறிவடக்கமாதி யுடையவராய் ஜீவப்பிரம ஐக்கிய நிச்சயத்தால் ஆத்மஞானத்தில் நிலைத்தவராய்ச் சிஷ்யனுடைய புத்தியிற் றோற்றும் ஜீவேசுரபேதம், ஜீவர்களின் பரஸ்பரபேதம், ஜீவஜடபேதம், ஈசுரஜடபேதம், ஜடஜட பேதமென்னும் ஐவகைப் பேதங்களையும் நாநாவித யுக்திகளாற் கெடுப்பதிற் சமர்த்தராயிருப்பவரே *குருவாவர். கேவலம்ஆத்மஞானநிஷ்டையுடையவர் உத்தமஸம்ஸ்காரத்துடன்கூடிய அதிகாரிகளுக்கு உபதேசிக்கச்சமர்த்தராயிருந்தாலும் தம்மைவந்தடுத்தவர்களியாவர்

* சாதகரான சிஷ்யர்களுக் குபதேசஞ் செய்யும் அதிகாரபேதம்பற்றிக் குரவர் போதககுரு, வேதககுரு, நிஷிதகுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, காரககுரு, விஹிதகுரு என வெண்வகைப்படுவர். அவருள்:—

1-சாஸ்திரத்திலுள்ள அர்த்தங்களை விளக்கமாக வெடுத்துப் போதிப்பவர் போதககுரு வெனப்படுவர்.

2-பிருதிவியாதி தத்துவங்களை நிஷேதித்துப் பரதத்துவத்தைத் தெரிசிப்பிக்கின்றவர் வேதககுருவெனப்படுவர்.

3-ஸ்தம்பனம், மோகனம், வசியம், ஆகர்ஷணம், உச்சாடனம், வித்வேஷணம், பேதனம், மாரணம் என்னும் அஷ்டகருமங்களால் இகலோகத்திற் சுகமும் பரலோகத்திற் துக்கமும் உண்டுபண்ணுகிறவர் நிஷிதகுரு வெனப்படுவர்.

4-நல்வினைபுரியுமாறு உபதேசித்துப் பரலோகத்திற் சுகமடையச்செய்கிறவர் காமியகுருவெனப்படுவர்.

5 விவேகவாயிலாக ஸமதமாதி குணங்களை உண்டுபண்ணுகிறவர் சூசககுருவெனப்படுவர்.

6-நாமரூபவடிவ விஷயங்களை மித்யாவடிவமாகத் தெரிசிப்பித்தல் வாயிலாக ஆத்மாவினிடத்தில் பிரியத்தை யுண்டுபண்ணுபவர் வாசககுரு வெனப்படுவர்.

7-ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தைப் போதிக்கின்றவர் காரககுருவெனப்படுவர்.

8-ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்திற்றோன்றிய சம்சயத்தை யொழிக்கும்வாயிலாகச் சர்வதுக்கநிவிர்த்தி பரமானந்தப் பிராப்திவடிவ நித்திய முத்தியை யருள்செய்பவர் விஹிதகுருவெனப்படுவர். அதிகாரிகளின் பேதம்பற்றிப் பரமாசிரிய ரொருவரே பல பெயர்களை யேற்பதுமுண்டு. பரமஞானியராகிய சூதபுராணிகர் அதிகாரிகளின் பேதம் நோக்கிப் பலவாறு தம்மைவந்தடுத்த சிஷ்யர்களுக்குப் போதித்திருத்தலைப் புராணங்களின்மூலமா யறிந்துகொள்க.

க்கும் பயத்திற்குக் காரணமாய பேதங்களை நாநாவித யுக்திகளாற் கெடுத்தற்குச் சமர்த்தராகாதிருப்பதால் அவர் யாவர்க்கும் குருவாகமாட்டார். எனவே, ஆறு நற்கல்விபாதியுடையவராயும் ஆத்மஞான நிஷ்டையுடையவராயும், பேதத்தை நிராகரித்தலால் அத்வயமாயும் அவித்தையாதி மலரகிதமாயுமுள்ள ஆன்மசொரூபத்தை ஐயந்திரிபின்றியுள்ளவாறு தரிசிப்பித்துஞ் சகலசமுசாரத்தையும் மித்தியா வடிவமாக்கி யறிவிற் கரைத்து அறிவாகாரமாகவே சிஷ்யனை நிலைக்கச்செய்விப்பவராயுமிருப்பவரெவரோ அவரே குருவாவாரென்பது பெறப்படலால் மற்றையோர் குருவாகாரென்பது திண்ணமாயிற்று. மற்றையோரென்றது ஞானமின்றிச் சடைவளர்த்துக்கொண்டும் மொட்டை யடித்துக்கொண்டும் விபூதி, நாமம், உருத்திராக்கவடம், துளசிவடம் முதலியசின்னங்களைப் பிறர் பார்த்து மருளும்படி தரித்துக்கொண்டும் அப்படியே தமது சிஷ்யர்களைச் செய்வித்துக்கொண்டு மிருப்பவர்களை. "வேடநெறிநில்லார் வேடம்பூண்டென்பயன்" என்று பெரியோர் பணித்தவாறு கேவலம்வேடதாரிகள் ஒருகாலத்தும் உண்மையில் குருவாகமாட்டார். சம்சாரமாகிய முதலைவாயினின்றும் விடுவிக்கின்றவருமா தத்துவபோதனை செய்கிறவருமா யுள்ளவரே குருவாவர். குரு என்பதில் கு என்பதன் பொருள் அந்தகாரம் (அஞ்ஞானம்), ரு என்பதன் பொருள் ஒழிக்கின்றதென்பது. எனவே, அஞ்ஞானத்தை நீக்குகின்றவரே குருவாவாரென்பதாயிற்று. சிஷ்யனுடைய அஞ்ஞானத்தை யொழிக்குந்திறமை யற்றவர் குருப்பட்டம் விழைந்து பொருள் பறிக்கத் திரிதல் பசு புலித்தோலைப்போர்த்துத் திரிதல் போலவாம்.

சி: இவ்வகைப் பேதங்களைக் கண்டிக்கும் * யுக்திகளைக் கூறுமாறு வேண்டுகின்றனன்.

(க) ஜீவேசுவரபேத கண்டனம்.

கு: (1) ஜீவேசுரர்களின் பேதம் கற்பிதம்—பிரதிஞ்ஞை;

(2) அவித்தியா மாயாவடிவ வுபாதிகளாலாயினவா யிருத்தலால்—ஏது;

(3) கடாகாச மடாகாசங்களின் பேதம்போல—உதாரணம்.

(உ) ஜீவர்களின் பரஸ்பர (ஒன்றற்கொன்று) பேதகண்டனம்.

(1) ஜீவர்களின் பரஸ்பரபேதம் கற்பிதம்—பிரதிஞ்ஞை;

* இது கூடும், இது கூடாதெனத் தன்கண்ணே தோன்றுவது யுக்தியெனப்படும்.

(2) ஆபாச சகித அந்தக்கரண வடிவ வுபாதியினு லாகியன வாயிருத்தலால்—ஏது;

(3) நாநா கடாகாசங்களின் பேதம்போல—உதாரணம்.

(ஈ) ஜீவஜடபேத கண்டனம்.

(1) ஜீவஜடங்களின் பேதம் கற்பிதம்—பிரதிஞ்ஞை;

(2) சாபாஸ அந்தக்கரண நிராபாச நாமரூபமய வுபாதிகளா லாகியனவாயிருத்தலால்—ஏது;

(3) சொப்பனத்திலுள்ள சராசரங்களைப்போல—உதாரணம்.

(ச) ஈசுவர ஜடபேத கண்டனம்.

(1) ஈசுவர ஜடபேதம் கற்பிதம்—பிரதிஞ்ஞை;

(2) ஸாபாஸ மாயை நாமரூபமய வுபாதிகளா லாகியனவாயிருத்தலால்—ஏது;

(3) சாக்கிர சொப்பனப் பிரபஞ்சங்களின் பேதத்தைப்போல—உதாரணம்.

(ரு) ஜடஜடபேத கண்டனம்.

(1) ஜடஜடங்களின் பேதம் கற்பிதம்—பிரதிஞ்ஞை;

(2) நாமரூபமய வுபாதிகளா லாகியனவா யிருத்தலால்—ஏது;

(3) இரச்சுவிற் கற்பித சர்ப்பதண்ட முதலியவற்றின்பேதம் போல—உதாரணம்.

இவ் வைவகை யனுமானங்களும் பஞ்சபேத கண்டனத்தின் யுக்திகளாம்.

சி: ஐவகைப் பிராந்தியையும் குரு நீக்குவாரென்று பெரியோர் கூறுவதால் ஐவகைப் பிராந்தியையும் அவை நீங்கும் வழியையும் விளக்கமாகச் சொல்லியருளல்வேண்டும்.

கு: அவை: பேதப்பிராந்தி, கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி, சங்கப்பிராந்தி, விகாரப்பிராந்தி, பிரமத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தி யென்பனவாம்.

(1) மேற்கூறிய ஐந்துபேதமும் உண்டென்றல் பேதப்பிராந்தியாம். (2) அந்தக்கரணத்தின் தருமமாயகருத்திருத்துவபோக்திருத்துவங்கள் ஆன்மாவினிடத்துத்தோன்றுதல் கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி. (3) ஆன்மாவிற்குத் தேகாதிகளிலபரன் என்பதும், நிருகாதிகளில் எனதென்பதுமாகிய சம்பந்தம் தோன்றுதல் சங்கப்பிராந்தி. (4) பாலின் விகாரம் தயிராதல்போ

லப் பிரமத்தின் விகாரம் ஜீவேசுரஜகத் தென்றல் விகாரப்பிராந்தி. (5) ஜகத்து எக்காலத்தும் பொய்யாகாதென்றல் சத்தியத்துவப்பிராந்தி.

(1) பிம்பப் பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தால் பேதப்பிராந்தியும், (2) ஸ்படிகத்தில் சிவப்பு வஸ்திரத்தின் செந்நிறம் தோற்றும் திருஷ்டாந்தத்தால் கருத்திருத்துவபோக்திருத்துவப்பிராந்தியும், (3) கடாகாச திருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தியும், (4) இரச்சுவிற் கற்பிதமாகிய சர்ப்ப திருஷ்டாந்தத்தால் விகாரப்பிராந்தியும், (5) பொன்னிற் குண்டலந்தோற்றும் திருஷ்டாந்தத்தால் பிரமத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தியும் நிவிர்த்தியாகும்.

சி: இவற்றை நன்கு விளக்கிக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: (1) கண்ணாடியிற்றோற்றும் முகத்தின் பிரதிபிம்பம் முகத்தைவிட்டிராது அபேதமாயிருத்தல்போன்று அவித்தை அல்லது அந்தக்கரணத்திற்றோற்றும் சேதனத்தின் பிரதிபிம்பமாகிய சீவர்கள் சேதனத்தை விட்டிராது அபேதமாயிருக்கின்றன ரென்பதனாற் பேதப்பிராந்தி நிவிர்த்தியாகின்றது.

(2) சிவப்பு வஸ்திரத்தின்மேல் வைக்கப்பட்ட படிகமணியில் வஸ்திரத்தின் செந்நிறம் சையோக சம்பந்தத்தாற் றோற்றுதல் போன்று அந்தக்கரணத்தின் தர்மமாகிய கருத்திருத்துவபோக்திருத்துவங்கள் ஆன்மாவில் தாதான்மிய சம்பந்தத்தாற் றோற்றுகின்றன. வஸ்திரமும் படிகமும் பிரிந்தகாலத்துச் செந்நிறம் படிகத்திற் றோற்றாவாறுபோன்று சுழுத்தியில் ஆன்மாவும் அந்தக்கரணமும் பிரிந்தகாலத்துக் கருத்திருத்துவபோக்திருத்துவங்கள் ஆன்மாவின்கண் றோற்றுகிறதில்லை யென்பதனாற் கருத்திருத்வபோக்திருத்துவப்பிராந்தி நிவிர்த்தியாகின்றது.

(3) கடாகாயம் கடத்தோடு கூடியதாகத் தோற்றியபோதினும், கடத்தின்தர்மமாகிய உற்பத்தியாதிகள் ஆகாயத்தைப் பரிசியாமையால் அஸங்கமா (கூட்டமற்றதா) யிருத்தல்போன்று தேகோபாதியுடைய ஆன்மா தேகத்தோடு கூடியதாகத் தோற்றியபோதினும், தேகத்தின் தர்மமாகிய ஜனனமரணாதிகள் ஆன்மாவைப் பரிசியாமையால் அஸங்கமா யிருக்கிற தென்றதனாற் சங்கப்பிராந்தி நிவிருத்தியாகின்றது.

(4) இரச்சுவில் கற்பிதமாகத் தோற்றிய சர்ப்பத்தால் இரச்சு விகாரமடையா திருத்தல்போன்று பிரமத்திற் கற்பிதமாகத் தோற்றிய சகத்தால் பிரமம் விகாரமடைகிறதின்றென்பதனால் விகாரப்பிராந்தி நிவிர்த்தியாகின்றது.

(5) பொன்னின் (விவர்த்த) காரியமாய குண்டலத்திற்கும் பொன்னிற்கும் காரியகாரணத் தன்மையாற் றோற்றும்பேதம் கற்பிதமாயிருத்தல்போன்று பிரமத்தின் (விவர்த்த) காரியமாய ஜகத்திற்கும் பிரமத்திற்கும் காரியகாரணத்தன்மையாற் றோற்றும் பேதம் மெய்யன்றென்பதனாற் பிரமத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப்பிராந்தி நிவிர்த்தியாகின்றது.

பேதயுத்தியை யுக்திசாமர்த்தியத்தினால் ஒழித்து அபேதயுத்தியை யுண்டுபண்ணி அதன் வாயிலாக ஆத்ம சாக்ஷாத்காரத்தையுண்டுபண்ணும் குருவை ஈசுவரனிடத்தில் வைக்கும் பக்தியினும் அதிக பக்திவைத்து வணங்கி அவரே சிவமெனக் கருதி அவர் குறிப்பறிந்து நடந்துகொள்ளல்வேண்டும்.

சி: குருவே சிவமெனற்குப் பிரமாணங்களுண்டா?

கு: கீழ்வருவனவே!

யோகசிகோபநிஷத்.

𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌦𑌾𑌚𑍍𑌯𑍁𑌤𑌃। 𑌨𑌗𑍁𑌰𑍋𑌰𑌧𑌿𑌕𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇। 𑌦𑌿𑌵𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌪𑌦𑍇𑌷𑍍𑌟𑌾𑌰𑌂 𑌦𑍇𑌶𑌿𑌕𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌂। 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍 𑌪𑌰𑌯𑌾𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑌸𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌫𑌲𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍॥

(இ-ள்.) குருவே பிரும்மா, குருவே விஷ்ணு, குருவே எப்போதும் நாசமற்ற தேவன். இம்மூன்றுலகங்களிலும் குருவைக் காட்டிலுஞ் சிரேஷ்டனொருவனுமில்லை. திவ்விய ஞானத்தையுபதேசிக்கிறவராயும் பரமேஸ்வரராயுமிருக்கிற குருவை அதி பக்தியுடன் பூஜிக்கவேண்டியது. அப்படி பூஜிக்கிறவனுக்கு ஞானமாகிறபல னுண்டாகிறது.

அந்வய தாரகோபநிஷத்.

* 𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌾𑌗𑌤𑌿𑌃। 𑌗𑍁𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌰𑍁𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑍋𑌧𑌕𑌃। 𑌅𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌨𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌗𑍁𑌰𑍁𑌰𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇॥

---

* குருவென்கிற விரண்டக்ஷரங்களில் கு வெனும் அக்கரம் சுத்தநிர்க்குணசொரூபமும் ரு-வெனுமக்கரம் கேவல நிராகாரமும் ஆகின்றன வாதலால் சுத்த நிர்க்குண நிராகார பரப்பிரமத்தை இது வெனும்படி போதிப்பவனே குருவெனப்படும்.

(இ-ள்.) குருவே பரப்பிரம்மம். குருவே யடையத் தகுந்த சிரேஷ்டமான கதி. குருவென்கிற பதத்தில் கு என்னும் எழுத்தானது அந்தகாரம் (இருட்டு - அஞ்ஞானம்) என்னும் அர்த்த முள்ளது. ரு என்னும் எழுத்தானது அதை விலக்குகிற தென்னும் அர்த்தமுள்ளது. அஞ்ஞானமாகிற இருட்டைப் போக்குவதனால் குருவென்று சொல்லப்படுகிறார்.

மஹாநாராயணோபநிஷத்.

யதா ஜாத்யந்தஸ்ய ஸ்வரூபஜ்ஞாநம் நவித்யதே ததா குருபதேசேந விநா கல்பகோடிபி ஸ்தத்வ ஜ்ஞாநம் நஜாயதே||

(இ-ள்.) பிறவிக்குருடனுக்கு வஸ்துக்களுடைய சுவரூப ஞான மெப்படி விளங்காதோ அப்படியே குருபதேசமின்றி நூறு கோடி கற்பங்களானாலும் தத்துவஞான முண்டாகமாட்டாது.

குருரேவ ஸாக்ஷாதாதி நாராயண: புருஷ:| ஸ குரு: நாராயணோஹமேவ | தஸ்மாந்மதீயம் சரணம் வ்ரஜந் மத்பக்திநிஷ்டாவாந்||

(இ-ள்.) குரு புருஷோத்தமனாகிய ஸாக்ஷாத் ஆதிநாராயண ன். அந்த ஆதிநாராயணனே நானதலா லென்னுடைய சரண கமலத்தை யடைந்து என்னுடைய பக்திநிட்டையைப் பெறுவா யாக.

---

குகாரம் மாயையென்றும், ருகாரம் அந்த மாயையை நாசஞ்செய்யும் பரப்பிரமமென்றும் சொல்லப்படும். இப்படி குருவென்கிற பதம் மாயை யாகியும் பரப்பிர்ம்மமாகியும் இருக்கின்றது.

குகாரமென்றால் சத்துவ ரஜோதமோ குணங்களில்லாதது எனப் படும். ருகாரமென்றால் கரசரணாதி அவயவங்களற்ற நிராகார சொரூப மெனப்படும். ஆதலால் குருவெனும் பதத்துக்குச் சுத்த நிர்க்குணமாய் ரூப மற்ற நிராகாரமாயிருக்கும் பரப்பிர்ம்ம மெனப்பொருளாம்.

கு வென்றால் காடாந்தகாரமெனவும், ரு வென்றால் அந்த காடாந் தகார நிவிர்த்தியென்றும் சொல்லப்படும். ஆதலால் அஞ்ஞானாந்தகாரத்தை நீக்குமவனே குருவாவன். குருவென்பது அஞ்ஞான மென்கிற பேரிருளை நீக்கி விளக்கும் ஞானஜோதியைத் தந்துகாக்கும் பொருளாம்.

சப்தகோடி மகாமந்திரங்களில் குருவென்னும் இரண்டக்கரங்கள் சேர்ந்த மந்திரமே மிகுந்த சிலாக்கியமுடையதாம். இவ்வாறு குருகீதை கூறுகின்றது.

நிராலம்போப நிஷத்:

ஸர்வஶரீரஸ்த சைதந்ய ப்ரஹ்ம ப்ராபகோ குருருபாஸ்ய:॥

(இ-ள்.) எல்லாச் சரீரத்திலு மிருக்கிற சைதன்னியமாகிற பிர்ம்மத்தை அடைவிப்பிக்கும் குருவே உபாசிக்கத் தக்கவன்.

அடயோக தீபிகை.

நம: ஶிவாய குரவே நாதபிந்துகலாத்மநே। நிரஞ்ஜந பதம் யாதி நித்யம் யத்ர பராயண:॥

(இ-ள்.) சிவமா (சுகவடிவா) கிய அல்லது ஈசுவராபின்னமாகிய குருவிற்கு அல்லது ஸர்வாந்தரியாமித் தன்மையால் சகல ஜகத்திற்கும் உபதேசிக்குஞ் சிவமென்னும் ஈசுவரனாகிய நாதபிந்து கலா சொரூபமாகிய குருவிற்கு நமஸ்காரம். அவரிடத்துப் பிரதிதின மூடம் கவனமுள்ள புருஷன் நிரஞ்சன பதமாகிய பிரமத்தை யடைகிறான்.

குருகீதை.

குருஶ்ஶிவோ குருர்தேவோ குருர்பந்துஶ்ஶரீரிணாம்। குருராத்மா குருர்ஜீவோ குரோரந்யம் ந வித்யதே॥ நகுரோரதிகம் நகுரோரதிகம் நகுரோரதிகம் நகுரோரதிகம்। ஶிவஶாஸநத: ஶிவஶாஸநத: ஶிவஶாஸநத: ஶிவஶாஸநத:॥ இதமேவ ஶிவம் இதமேவ ஶிவம் இதமேவ ஶிவம் இதமேவ ஶிவம்। மமஶாஸநதோ மமஶாஸநதோ மமஶாஸநதோ மமஶாஸநத:॥ விதிதம் விதிதம் விதிதம் விதிதம்। விஜநம் விஜநம் விஜநம் விஜநம்॥ ஹரிஶாஸநதோ ஹரிஶாஸநதோ ஹரிஶாஸநதோ ஹரிஶாஸநத:॥

(இ-ள்.) குருவே சிவன் குருவே தேவன். குருவே தேக ஆத்மாககளுக்கு பந்து. குருவே ஆத்ம சுவரூபன். குருவே ஜீவன். குருவைவிட அந்நிய மேதுமில்லை. ஈசுவராக்ஞையால் குருவைவிட அதிகமில்லை, ஈசுவராக்ஞையால் குருவையன்றிச் சிரேஷ்டமானதின்று, ஈசுவராக்ஞையினுல் குருவைவிடச் சிரேஷ்டமானதின்று, ஈசுவராக்ஞையினுல் குருவையன்றிச் சிரேஷ்டமானது இல்லை, என்னுடைய ஆக்ஞையினுல் இதுவே மங்களமானது, என்னுடைய ஆக்ஞையினுல் இதுவே மங்களமானது, என்னுடைய ஆக்ஞையினுல் இதுவே மங்களமானது, என்னுடைய ஆக்ஞையினுல் இதுவே மங்களமானது. விஷ்ணுவினுடைய

ஆக்ஞையினால் மிகுந்த ஞானசுவரூபமானது. விஷ்ணுவினுடைய ஆக்ஞையினால் மிகுந்த ஞானசுவரூபமானது. விஷ்ணுவினுடைய ஆக்ஞையினால் மிகுந்த ஜந்மரகிதமானது. விஷ்ணுவினாக்ஞையினால் மிகுந்த ஜன்மரகிதமானது.

சூதசங்கிதை.

அனையகுரு பரனையே தந்தைதா யென்றுள்ளத் தமைக்க வேண்டு
நினைதருமக் குருபூசை யாதிசிவ பூசை யாதி யாய்நிலாவும் [மேலோர்
புனைதருமக் குருத்துரோகஞ் சிவத்துரோக மெனப் புகல்வார் நல்
வினையறுமெய்ஞ் ஞானகுரு பரனையடை தரின்ஞான மேவலாமே.

புகழுந் தயையாற் பரம வத்துவித புண்ணியஞா னங்கொடுத்துத்
திகழுந் தெய்வச் சிவரூபந் தெரிவிப் பவனே குருவாவா
னிகழும் பரிசில் லாவவனே சிவனென் றுரைக்கு மெம்மறையு
மகழு மலத்த ராயின்ப மடைய மூயலு மவரீரே.

திருமந்திரம்.

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்குங்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே.

ஞானசாரம்.

தேனார் கமலத் திருமா மகள்கொழுநன்
றானே குருவாகித் தன்னருளான்—மானிடர்க்கா
விந்நிலத்தே தோன்றுதலால் யார்க்குமவன் றாளிணையை
யுன்னுவதே சால வுறும்.

தப்பில் குருவருளாற் றாமரையா ளாயகன்ற
னொப்பி லடிகணமக் குள்ளத்து—வைப்பென்று
தேறி யிருப்பார்க டேசுபொலி வைகுந்தத்
தேறியிருப்பார் பணிகட் கேய்ந்து.

குருசேவையி னிலக்கணம்.

சி: பரமேசுவரனே சீவர்களின் பரிபக்குவங் கண்டிரங்கிக் குருவாகவந் தவர்களுக் குபதேசிப்பாரென்பது ஆன்றோர் கொள்கையா யிருத்தலால் குருவிற்கும் பரமேசுவரனுக்கும் வேற்றுமையின்றென்பது பெறப்படுகின்றது; அங்ஙனமாகத், தேவரீர் குருவினிடத்தில் ஈசுவரனிடத்தில் வைக்கும் பக்தியினும் அதிக பக்தி வைக்கவேண்டுமென்று வேறு பிரித்துக்கூறிய தென்னையோ?

கு: பரமேசுவரனே குருவாக வருகின்றா ரென்பது உண்மையே. பரமேசுவர பக்தியால் உண்டாகும் பயனிலும் குருபக்தியா லுண்டாகும்பயன் பெரிதாயிருப்பதுபற்றி யங்ஙனம் பிரித்துக் கூறினும்.

சி: அதனை நன்கு விளக்கல்வேண்டும்.

கு: பரமேசுவரசேவை அதிருஷ்ட (பிரத்தியட்சமாகாத) பலத்திற்குக் காரணமாம். குருசேவையோ அதிருஷ்டம் திருஷ்டமென்னும் இரண்டு பலங்களுக்கும் காரணமாம். எது தர்மா தர்மங்களின் உற்பத்திவாயிலாகப் பலத்திற்குக் காரணமாயிருக்கிறதோ அஃது அதிருட்டபலத்தின் காரணமெனப்படும். எது தருமா தர்மங்களின் உற்பத்தியின்றி நேரே பலத்திற்குக் காரணமாகின்றதோ அது திருஷ்டபலத்தின் காரணமெனப்படும்.

பரமேசுவர சேவை தர்மத்தின் உற்பத்தி வாயிலாக அந்தக்கரண சுத்தி வடிவ பலத்திற்குக் காரணமாயிருக்கிறது. ஆதலால், பரமேசுவர சேவை அதிருஷ்ட பலத்திற்குக் காரணமாம். குருசேவை தர்மாபேட்சையின்றி உபதேச வடிவபலத்திற்குக் காரணமாயிருத்தலால் திருஷ்டபலத்திற்குக் காரணமாம். அன்றியும் அது தர்மத்தி னுற்பத்திவாயிலாக அந்தக்கரண சுத்திவடிவ பலத்திற்கும் காரணமாயிருத்தலால் அதிட்டபலத்திற்கும் காரணமாம். பரமேசுவர சேவையால் அதிருஷ்ட பலமும் குரு சேவையால் திருஷ்ட அதிருஷ்ட பலங்களும் உண்டாவதா யிருத்தலால் பரமேசுவரசேவையினும் குருசேவையே உத்தமமாமென்க.

சி: குருசேவை எத்தனை வகையாம்?

கு: அது: நான்குவகையாம்.

சி: அவற்றை விவரித்துரைத்தல்வேண்டும்.

கு: அவை: ஆப்தம், அங்கம், ஸ்தானம், சற்பாவம் என்பனவாம்.

(1) குருவிற்கு அனுகூலமாய காரியங்களைச் செய்தல் ஆப்தமாம்.

(2) குருவினது பாதசுசுரூஷையே அங்கமாம்.

(3) குருவினது மனை நிலமுதலானவைகளைப்பழுதுபடாவண்ணம் காத்தல் ஸ்தானமாம்.

(4) குருவைச் சாட்சாத் பரமசிவமெனக் கருதுதலே சற்பாவமாம்.

னுவான். தாய் தந்தைகளுக்குப் பிரதிதினமும் பிரியமுண்டாகும்படி நடக்கவேண்டியது. ஆசாரியனுக்கு எப்போதும் பிரியமுண்டாம்படி நடந்துகொள்ளலவேண்டும். இம்மூவருஞ் சந்தோஷமடைந்தால் இவன் செய்கிற தபசின் ஸகலப் பிரயோஜநத்தையுமடைகிறான். இம்மூவர்களுடைய சுசுரூஷையானது உயர்ந்த தபசாகச் சொல்லப்படுகிறது. அவர்களநுமதியின்றி வேறு தருமத்தைச் செய்யலாகாது.

ஶய்யாஸநே(அ)த்யாசரிதே ஶ்ரேயஸா ந ஸமாவிஶேத்।
ஶய்யாஸநஸ்தஶ்சைவைநம் ப்ரத்யுத்தாயாபிவாதயேத்॥
ஶரீரம் சைவ வாசம் ச புத்தீந்த்ரியமநாம்ஸி ச। நியம்ய
ப்ராஞ்ஜலிஸ்திஷ்டேத்வீக்ஷமாணோ குரோர்முகம்॥ நித்யமுத்த்ருத
பாணி: ஸ்யாத் ஸாத்வாசார: ஸுஸம்யத:। ஆஸ்யதாமிதி சோக்த:
ஸந்நாஸீதாபிமுகம் குரோ:॥ ஹீநாந்நவஸ்த்ரவேஷ: ஸ்யாத்
ஸர்வதா குருஸந்நிதௌ। உத்திஷ்டேத் ப்ரதமம் சாஸ்ய சரமம்
சைவ ஸம்விஶேத்॥ ப்ரதிஶ்ரவண ஸம்பாஷே ஶயாநோ ந
ஸமாசரேத்। நாஸீநோ ந ச புஞ்ஜாநோ ந திஷ்டந்ந பராங்
முக:॥ ஆஸீநஸ்ய ஸ்தித: குர்யாதபிகச்சம்ஸ்து திஷ்டத:।
ப்ரத்யுத்கம்ய த்வாவ்ரஜத: பஶ்சாத்தாவம்ஸ்து தாவத:॥ பராங்
முகஸ்யாபிமுகோ தூரஸ்தஸ்யைத்ய சாந்திகம்। ப்ரணம்ய
து ஶயாநஸ்ய நிதேஶே சைவ திஷ்டத:॥ நீசம் ஶய்யா
ஸநம் சாஸ்ய ஸர்வதா குருஸந்நிதௌ। குரோஸ்து சக்ஷுர்வி
ஷயே ந யதேஷ்டாஸநோ பவேத்॥ நோதாஹரேதஸ்ய நாம
பரோக்ஷமபி கேவலம்। ந சைவாஸ்யாநுகுர்வீத கதிபாஷண
சேஷ்டிதம்॥

(இ-ள்) குருவின் படுக்கையிற் (சிஷியன) படுக்கவும் அவருடைய ஆஸநத்திலுட்காரவுங் கூடாது. தான் (சிஷியன்) படுக்கையிற் படுத்திருக்கும்போதாவது தான் ஆஸநத்திலுட்கார்ந்திருக்கும்போதாவது குருவந்தாலெழுந்து வந்தனஞ் செய்யவேண்டியது. தேகம், வாக்கு, புத்தி, இந்திரியம், மனசு, இவைகளையடக்கிக்கொண்டு கைகளைக் கூப்பிக்கொண்டு குருவின முகத்தைப் பார்த்துக்கொண்டே நிற்கவேண்டியது. எப்போதும உத்தரீயத்திற்கு வெளியிற் கையைத்தூக்கிக்கொண்டிருக்கிற வலது

க்கையையுடையவனும் (போர்த்துக்கொள்ளாதவனும்) குரு வுட்காரும்படி உத்தரவு கொடுத்தா லவருக்கெதிரில் தன்காலுமு தலிய அவயவங்களைத் துணியினாற் மறைத்துக்கொண்டுட்காருகி றவனுமு மிருக்கவேண்டியது. குருவின்முன்பாக விருக்கும்போது உயர்ந்த அங்காதியாகாரங்களை புஜிக்கவுங்கூடாது. உயர்ந்த வஸ்தி ரங்களை யணிந்திருக்கவுங்கூடாது. உயர்ந்தவேஷத்தோடிருக்கவுங் கூடாது. விடிபற்காலமே குருவெழுந்திருக்கிறதற்கு முன்னமே சிஷனெழுந்திருக்கவேண்டும். இரவிற குரு படுத்து நித்திரைசெ ய்தபிறகு சிஷியன் படுக்கவேண்டும். குருவின் கட்டளையைச் சிஷி யன் படுத்துக்கொண்டும் உட்காரந்துகொண்டும் புஜித்துக்கொ ண்டும நடந்துகொண்டும் பராமுகமா யிருந்துகொண்டும் கேட் கக்கூடாது; மறுமொழி சொல்லவுங்கூடாது. குரு உட்கார்ந்து சொலலுமபோது தான் நின்றுகொணடும அவா நிற்கும்போது அவருக்கு ஸமீபத்தில் நின்றுகொண்டும் அவர் தனக்கெதிராக வந்து சொல்லுமபோது தான் எதிர்கொண்டுபோயும் அவர் நடக் கும்போது தான் பின்தொடர்ந் தோடிக்கொண்டும் அவர் பரா முகமா யிருக்குமபோது அவர்க்கெதிரில் வந்தும் அவர் தூர த்திலிருக்கும்போது கிட்டவந்தும் அவர் படுத்திருக்கும்போ தும் சமீபத்திலிருக்கும்போதும் தன் தேகத்தை வணக்கிக்கொ ண்டு குருவின் கட்டளையைக் கேட்கவும் மறுமொழி உரைக்கவும் வேண்டும். குருவுக்கெதிரில் இவனுடைய ஆஸனமும் படுக் கையையும் அவருடைய ஆஸனத்திற்கும் படுக்கைக்குந் தாழ்ந்த தாயிருக்கவேண்டும். குருபார்வைக்கெதிரிற் றனக்கிஷ்டமான ஆசனத்தி லுட்காரலாகாது. குருவானவர் ஆக்ஞாபித்தாலுமி ல்லாவிட்டாலும் வேதாத்யயனத்திலும் குருவின் பணிவிடையி லும் தான்தானே நாடோறும் முயறசிசெய்யவேண்டும்.

பிரமகீதை.

வருபிறப்பறவே வேண்டினன் மறையி றென்னுமம் புயத் தின மலர்த்தற், கிரவியாய் நெஞ்சிற் கிசைந்தநற் குருவை யா தொரு வழியினு லிறைஞ்சி, யருள்சுரந் திடுதற் காவதே செய்வா னருமறை முடிவெலா மறையும், பொருளோதே ராக வுமக்கெனக் கீசன் புகன்றவப் படியிலே புகன்றேன்.

வேதாந்தசூளாமணி.

ஆத்தமுடனங்கமே தானஞ்சற் பாவ மாமவற்றுட் குருபக ஷக் கனுகமாக்கிரித்தி, யாத்தமுயர் குருபாற்குத் றேவலேயங்க

மருட்குரவற் குரியமனை நிலமுதலா மவற்றைக், காத்தலது தான மாஞ் சற்குருவே மெய்யாக் கண்டசிவ மெனநம்பு மதுவேசற் பாவ, மேத்துகரு மம்பத்தி மிகுஞான காண்ட மெனுமிவற்றுன் மூவதிகா ரிகள்வேறு முளரால்.

விஞ்ஞானசாரம்.

இந்நேர் நெறியிற் சாதனங்க ளிவைநான் கினும்வந் தெய்தியதே
தன்னேர் குரவன் றனையடைந்து சாற்றுஞ் சீடா சாரமுறை
அந்நேர் பிசகா தேவல்புரிந் தருடன் மீதிற் சுரப்பளவும் [ம்.
பின்னே திரிந்து மவன்கொடுக்கப் பெறலே வேண்டும் விஞ்ஞான

அருட்பிரகாசம்.

குருப்ர னுக்கவ னெஞ்சகம் போலனு கூலத்தனுப்
கரசர ணுதியி னேவற்செய் தேதினங் கடமைமோ
னுரிய மனைமுதல் யாவையுங் காத்தன்மை யாயொருதற்
பரமிவ னேயெனக் கான்பான்சற் சீடன் பகர்ந்திடினே.

பதிபசுபாச விளக்கம்.

நரனல னிவனமை யாள வந்திடும்
பரசிவ மெனத்தினம் பணியத் தக்கவ
னிருவினை யாழியை யெளிதி னீந்துவான்
றிருமலி முத்தியைச் சேருந் திண்ணியன்.

முன்புறுவா னிரவெல்லா முப்போதும் பணிந்தெழுவான்
பின்புறுவான் பகலெல்லாம் பெட்புறுவா னெப்போது [யை
கொன்புனைந்த வுரைகொள்ளான் குறிக்கொள்வான் றிருமொழி
யன்புடைய மாணுக்கற் களவிற்குறி யுண்டாமால்.

நிஷ்டாநுபூதி.

உடற்குயிர் போலுங் கட்கிமை போலு மூசிபு நூலுமே போலும், படப்பொறி யரவைப் பிடியெனப் பிடிக்கப் பாயுமவெம் புலி தனைத் தழுவத்,தொடற்கருந் தழலை யெடுவென வெடுக்கத் தும்பி முன் னஞ்சுறு திருக்க, விடற்கருஞ் சித்த மென்னவே யுதவும் விவேகியற் களித்திட லாமால்.

வருங்காலத்திரங்கல்.

என்றுங் குருநாத ரிட்டபணி செய்துமிக
நின்றபடி யில்லாத நெஞ்சுவிடு நாளெந்நாள்.
குன்றாத ஞானக் குருவாரோர் சொற்கேட்டும்
பொன்றாத வாதனையைப் போக்கிவிடு நாளெந்நாள்

### திருக்தத்திரிசிய விவேகம்.

ஆகாயம் வன்னி யடல்வீரன் றெய்வத்தி
மீகாமன் சொற்கடவாள் வேய்க்கூத்தன—நீகாய்
பவனமந் திரிபனனம் பாற்பசுலைவ யொப்பா
னவனைமா ஞககனென்ப னும்.

சுநு. நேசம்.

சி: குருபதேச மெங்ஙனம்.

கு: தாபத்திரயங்களை ரஷணாபாத்திரமுஞ் சகிக்கமுடியாது, ஈஷணாத்திரயங்களைத் துக்கசாதனமென றுவெறுத்தகன்று, சமரய விபரீத பாவனைகளை நீக்காதவரும் ஸகுணபாவத்தைப் பிரித்து நிர்க்குணபாவத்தை யறிவிக்கமாட்டாதவரும் ஆடம்பரவேஷமுடையவரும் காரியத்தினிமித்தம் கொக்கைப்போலசையாமலிருப்பவரும் மந்திர லய அட்டயோகங்களில் ஒரு லக்ஷியத்தைச்சொல்லி அதில் அப்பியாசஞ்செய்யச்செய்ய அப்பியாசவிருத்தி குணியமும் உபாசநாமயக்கமுமுண்டாவதே மோக்ஷமென்று அறிவிப்பவருமாகிய அஞ்ஞாசிரியர்பாலடையாது, முன்னர்க் கூறியுள்ள சற்குருவைத் தஞ்சமெனவடைந்து, வணங்கவேண்டிய முறைமைப்படி வணங்கிப் பிறவியாதியினா லுண்டாகிய துக்கத்தை நினைந்து நினைந்தழுது இருகரமுஞ் சிரத்திற் கூப்பிச் சம்சார துக்கத்தினால் மிகவும் வருந்துகின்றேன்; எனதுள்ளம் குளிரும்படி தத்துவோபதேசஞ்செய்து அஞ்ஞானத்தைநீக்கி மெய்ஞ்ஞானத்தைத் தந்து காத்தருளல்வேண்டுமென்று பிரார்த்திக்குஞ் சீடனை அநுபவமே திருமேனியாகவுடைய ஞானாசிரியர் அச்சீடனை நோக்கித் தமது சந்நிதானத்தில் சிலகாலமிருக்கச்செய்து, * திரவியாதிவிஷயப் பிரயோஜனத்தினிமித்தம்பிரசித்தியினிமித்தம்தனக்கு பூஜார்த்த வந்தன மரியாதையினிமித்தம் நம்மிடத்திற் றத்துவந் தெரிந்துகொள்ள வந்தவனோ அல்லது நம்முடைய தத்துவத்தின ரஹசியத்தையறிந்துபிறகு † தூஷிக்குமாறுகரந்தவேடங்கொண்டு

* திரவியாதி விஷயப்பிரயோசனத்தினிமித்தம பிரசித்தியினிமித்தம் பூஜார்த்த வந்தன மரியாதையினிமித்தம் தத்துவ சாஸ்திரம்படிப்பவர்களுக்கு இம்மையிற் பொருள், புகழ், பூசை முதலிய பிரயோஜனமும், மறுமையில் பரிபக்குவத்துக் கேடாய்ச் சொர்க்காதிலோகப் பிராப்திப் பிரயோசனமும் சித்திக்கும்.

† தூஷிக்குமாறு கரந்த வேடங்கொண்டு தத்துவசாஸ்திரம் படிப்பவருக்கு நரகப்பிராப்தியும், மிருகாதி ஜன்மப்பிராப்தியும் கிடைக்கும்.

வந்தவனோ வென்றாராய்ந்து பார்த்து, ஆலஸ்யன் நிஷ்டூரன், குருசேவை வஞ்சகன், ஸம்பகாதியவஷ்டவிதகர்மங்களைச் செய்கிறவன், விஷயாசக்தியுடையவன், பாஷாண்ட மதஸ்தன், லோபன், பொய்யன், ஞானசோரன், சாரவிசாரன், கோபன், மூர்க்கன், டம்பன், சோரன், காமுகன், சித்தசுத்தியில்லாதவனுகாது ஞான வைராக்கியனும் ஜீவபாவமில்லாதவனும் சித்தசுத்தியுடையவனும், ஆசாரனும், சத்தியனும், திடவிரதனும, குருபக்தி விசுவாசமுடையவனுயும இருத்தலை நன்குணர்ந்து, கிருபா நோக்கத்தால் பார்த்துப் பயப்படாதே யென்று அபயாஸ்தகுசிரசில்வைத்து சுருதி யுக்திகளால் நீ பஞ்சகோச விலக்ஷணன், அவத்தாத்திரயசாக்ஷி. பஞ்சகோசங்கள் அநாத்மாக்கள். உன்னுடைய நிஜசொரூபம பரப்பிரம்மமே யென்று உள்ளபடி உடம்பினிற் சிவனைப் பார்தது உபதேசிப்பதே குருவின் உபதேசமாம்.

சி: சுவாமி! தாங்களிங்ஙனங் கூறியதற்குரிய பிரமாணங்களையறிய விரும்புகிறேன்.

கு: கீழ்வருவனவே.

முக்திகோபநிஷத்:

[illegible]

(இ-ள்) நாஸ்திகன், நன்றியற்றவன், துராசாரத்தில் முழுகினவன, என்னுடைய பக்தியில்லாதவன், அசத் சாஸ்த்திரமாகிய குகையில்விழுந்து மோகிக்கிறவன, குருபக்தியில்லாதவன் இவர்களி லொருவனுக்கும கொடுக்கக்கூடாது.

[illegible]

(இ-ள்.) விஷ்ணுசமபந்த மான இந்த ஆத்மநிஷ்டா வித்தையை அதிகமாய்க் கேட்டவனும் ஜாக்கிரதையுள்ளவனும், புத்திசாலியாயும், பிரும்ம சாரிவிரதத்தில பூரணமடைந்தவனும், விருப்பமுள்ளவனுயு மிருக்கிறவன் பொருட்டுச் செவ்வையாய் அவனைப் பரிக்ஷித்துக் கொடுக்கவேண்டியது.

நாரதபரிவிராஜகோபநிஷத்.

[illegible]

[illegible]

(இ-ள்) நபும்சகன், பதிதன் (ஜாதிகெட்டவன்) அங்கஹீநன், ஸ்திரீலோலன், செவிடன், பாலன், ஊமை, பாஷண்டன் (வேததூஷகன், நாஸ்திகன், மதங்கெட்டவன்) சக்கிரீ, லிங்கி, வைகானசன், சிவத்துவிசன், கூலிக்கு அத்தியயனஞ் சொல்லுகிறவன், சொட்டைத்தலைவன், அக்கினியில்லாதவன் இவர்கள் வைராக்கிய மடைந்திருந்தாலுங்கூட சந்நியாசத்திற்கு அருகரல்லர். (அவர்கள்) சந்நியாசம் செய்துகொண்டாலும் மகாவாக்கியோபதேசம் பெற்றுக்கொள்ள அதிகாரிகளல்லர்.

சூதசங்கிதை.

காமமிக் குடையார் களிமயக் குறுதார் கடுங்கொலை புரிவதற் கஞ்சார், மாமறைப் பொருளை யிகழ்ச்சிசெய் பதகர் மாட்சியில் கயத்தொழில் புரிவார், தேமலர்க் கடுக்கை யெம்பிரா னடியார் திறத்தினி லூறுசெய் தழலும், பாமரக் கொடியார்க் கென்றுமீ துரைக்கப் படாததா லுணர்மின்மா தவத்தீர்.

வேணவா வெகுளி வேரறக் கடிந்து விரும்புமா சானடி யடைந்து, மாணமற் றவன்சொற் படிகட வாராய் மதிமுடிப் பிரானடி யவரைக், காணுறிற் சிவனே யெனப்பணிந் தேத்திக் கருதரு பூசனை யியற்றிப், பேணுதல் வல்ல பக்குவத் தினர்க்குப் பேசலா மெனமறை பேசும்.

ஈச னுக்கப ராத மியற்றிடின்
மாசி றேசிக னெண்ணுபு மாற்றிடும்
பேசு தேசிகற் குப்பிழை செய்யினத்
தேசிக னன்றித் தீர்ப்பவ ரில்லையே.

திருமந்திரம்.

அறிவிக்க வேண்டா மறிவற் றயர்வோர்க்கு
மறிவிக்க வேண்டா மறிவிற் செறிவோர்க்கு
மறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
யறிவிக்கத் தம்மறி வாரறி வோரே.

தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப்
பழுதறி யாத பரம குருவை
வழியுறி வார்நல் வழியறி வாள
ரழிவறி வார்மற்றை யல்லா தவரே.

### ஞானவாசிஷ்டம்.

ஓதுகின்ற பொருண்முழுது முன்பின்கூட்டி யுணர்பவர்க்கல் லதுபசுவை யொப்போர்க் கெல்லாந், தீதகன்ற குருவுண்மை செப் பாரன்றே திகழ்சாந்தி விசாரமொடு செறிசந் தோட, சாதுசங்க மெனவீட்டின் வாயில்காக்குஞ் சதுட்டயரு முறவாகிற் றடை வே றுண்டோ, மேதினிகா வலர்மனையிற் கடைகாப்பாளர் விடு வதுபோல் வீட்டிலவர் விடுவ ரன்றே.

பேசியதன் விசாரத்தாற் சனகாபிரான் பெறும்பேறு பெற் றதல்லால், வாசியுள மற்றொன்றால் வந்ததல்ல வாரீச மலர்க்கண் மாலே, யாசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தா லடை வ தல்லாற், றேசிகரில லாவினை செய்தொழிலாற் பெறலாமோ சிற்சொ ரூபம்.

### ஒழிவிலொடுக்கம்.

உடற்குயிர்போற் கட்கிமைபோ லூசி நூ லொத்து
விடிற்புலிநீ பாமபினிலவீழ் வாக்காரு—சுடச் சுடினும்
மாழைக்கா காவேதி மட்கலதிற் காகாவா
றேழைக்கா காத திது.

### சிந்தாந்ததேரிசனம்.

பக்குவர்க்குத் தோன்றும் பயன்கொடுக்கு மற்றொழிந்த
பக்குவர்க்குத் தோன்றியுமென் பாழ்.

### சிவாகமக்கச்சியாலே.

துட்டற்கு ஞானச் சுருதிக ளோதியுந துர்க்குணம்போய்ச்
சிட்டற் குளகுண மெள்ளள வேனுந் திகழ்தல்செய்யா
விட்டுச சொரியினு மான்பாலுந் தேனும் விரவியென்று
மெட்டிப பழத்துக் கினிப்புமுண் டோகரசி யேகமபனே.

### ஞா னசாரம்.

நெறியறியா தாரு மறிந்தவா பாற் சென்று
செறிதல்செய்யாத் திமனத்தா தாமு—மிறையுரையைத்
தேறா தவருந் திருமடநதை கோனுலகத்
தேறா ரிடாழுந்து வார்.

### திருக்குந்திரியவிவேகம்.

குயிலெருமை யில்லிக் குடமுணிபன் றுடை
வயல்கதலி யெனமச மந்தி—வயிறுபுலி

பாச்சியுடல் பிப்பாய் பதருடன்வெள் ளாட்டியொப்பார்
சிச்சிமா ணாக்கரோ செப்பு.

வீராகமம்.

அடுத்ததின் றன்மை யான்மா வாகுமென் றறிந்து நல்லோர்
நடித்திடுஞ் சமய வாத நற்றவஞ் செபந்தி யானம்
படித்தல வியற்கை யாவும் பரகதி வில்க்கா மென்றே
விடுத்தருட் குருவன் பாத மேவியே பணிசெய் வாரே.

மெய்ஞ்ஞானவிளக்கம்.

கறையுறு பிறவிவெங் கடலு ளேவிழுந்
தயர்வுறு துயருழந் தவரை யோவென
விரைவொடு வினைகெட நோக்கி வேதகக்
கரையினை யருள்பவன் கருணை நன்குரு.

ஒழிவிலொடுக்கம்.

தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான் சற்குருவா
மன்னுபெருஞ் சிய மதயானை—தன்னடைமேற்
சொற்பனத்தே தோன்றித் துடிப்பற்றுக் கேவலமாய்
நிற்பதுபோற் பாரா னெனின்.

பட்டணத்தார்.

குருமார்க்க மில்லாத குருடருடன் கூடிக்
கருமார்க்கத் துள்ளே கருத்தழிந்து கெட்டேனே.

ஔவைக்குறள்.

குருவி னடிபணிந்து கூடுவ தல்லார்க்
கருவமாய் நிற்குஞ் சிவம்.
நெறிபட்ட சற்குரு நேர்வழி காட்டில்
பிறிவற் றிருக்குஞ் சிவம்.

தாயுமானசுவாமிகள்.

குருமொழியே மலையிலக்கு மற்றமொழி யெல்லாங்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்.

சீடாசாரம்.

கட்டுண்ட கள்வன் றனோ க்கட்டினை விட்டுக்கொள்வான்
விட்டவே தனையைத் தீர்த்து விடுவிப்பா னொருவன் வேண்டு
மட்டமா சித்தி யோகா லறிவினா லறிய வாமோ
தட்டறப் பாசந் தீர்க்கத் தற்பர குருவே வேண்டும்.

எல்லாமெய்ச் சிவரூபமெனுஞானமுண்டாகி யிருள்போ னின்ற, பொல்லாத சமுசார நிவிர்த்தியா மந்நிவிர்த்தி பூப்ப தற்குமல லார்கொண் ஞானஞ்சா தகமந்த ஞானவிலா பத்துக் காகப், பல் லார்சொ லருண்மிகுத்த குருபரனை யாசிரித்தல் பண்பு மாதோ.

கோடிசந் திரர்போ லொளிர்வதா யரூபங் கொண்டதாய்ப் புருவமத் தியத்து, கூடிய பரைபோ டினிதமர்ந் தருளு நன்மகா லிங்கத்தை யுஞ்சீர், கூடிய குரவ னனுக்கிர கத்தாற் குறைவற வோர்ந்துகொண் டன்பி, னீடிய சீர்த்தி முனிவர்காள் போற்ற னெறியெனப் பகர்வர்கற் றுணர்ந்தோர்.

குரவனனுக் கிரகத்தால் வேதாந்தப் பேருண்மை கூர வோர்ந்து, வரமுறக்கொள் சிவஞான மொருகடிகை யுறினறியா மர பிற் செய்த, பரவுபா தகமொழியும் பானுடங் குறினறிந்து பண் ணிக் கொண்ட, விரவுகொடும் பாதகங்க ளனைத்துமொழிந் தகனு மெனு விரிப்பார் மேலோர்.

அத்தகு சொரூபஞ் சற்குரு முகத்தி னறிதர வேண்டுமஃ தன்றி, யெத்தனை நூல்கற் றுணரினு மறித லியலுறா தான்முன முரைத்த, வுத்தம வாப்பி யந்தரபூசை யுண்மையி னுளத்திடை யொருவாச், சுத்தம்வாய்த் திடிற்பா கியமொரிஇ யியற்றத் துணி யலா மற்றது தானும்.

குகைநமசிவாயர்.

செப்பரிய ஞானச் செழுஞ்சுடரே சோணகிரி
யப்பனே நன்னூ லறிந்தாலு—மிப்புவியிற்
கொண்டகுரு வைப்பொருளாக் கொள்ளார் பயனனைத்துங்
கண்டவெலாம் வீணிலே கற்று,

குருநமசிவாயர்.

சற்குருவைப் போற்றுமற் சற்குருவைச் சாற்றுமற்
சற்குருவைச் சந்ததமுஞ் சாராமற்—சற்குருவை
நின்று தரியாம னீள்பிறவி நீங்கிடுமோ
மன்று சிதம்பரதே வா.

பதிபசுபாச விளக்கம்.

பூசையால் விரதந் தன்றாற் புண்ணிய தீர்த்தந் தன்று
லிசறு தருமந் தன்று லளவறு வேள்வி தன்றாற்
பாசமுந் தங்கள் பொன்று பாரிடை நம்போல் வந்த
தேசிக னருளு ஞான தீக்கைபாற் பொன்று மன்றே

மெய்ம்மொழி.

பிழிந்திடக் கடைந்த வெண்ணெய் பின்புமோ ரதனைக் கூடிற்
செறிந்திடா வாறு போலத் தேகமுந் தேகி தானும்
பிரிந்திடப் பார்த்த பின்பு பெயர்த்ததி னிற்பி னுங்கேள்
செறிந்திடா வாறு செய்யுந் தேசிகன் றேசி கன்றான்.

தீக்ஷாத்ரயம்.

சி: உபதேசஞ் செய்யும்போது சற்குரு கருதுதலும் நோக்குதலும் பரிசித்தலு மெங்ஙனம்?

கு: (1) கரையிலுள்ள தன் முட்டை குஞ்சாமாறு அதனை ஆமை பாவிப்பதுபோன்று சொரூபாவரண மொழிந்து நிஜவடிவமாய் விளங்கும்படி சிஷ்யனைப் பாவிப்பர்.

(2) தனதுசினை (முட்டை) குஞ்சாமாறு அதனை மீன் நோக்குமாறுபோன்று கற்பிதஜீவபாவ மொழிந்து பிரமவடிவமாய் விளங்குமாறு சிஷ்யனை நோக்குவர்.

(3) தனது முட்டை குஞ்சாமாறு அதனைப் பறவை பரிசிப்பதுபோன்று * அசம்பாவனை † விபரீதபாவனை யொழிந்து முடிவான ஆத்மவிசார மிவனுக்குண்டாக வேண்டுமென்று அஸ்த மஸ்தக சையோகஞ் செய்வர் (தனது திருக்கரத்தைச் சிஷ்யனது தலையில் வைப்பர்).

[பாவித்தல் - எண்ணுதல்; நோக்குதல் - பார்த்தல்; பரிசித்தல் - தொடுதல்.] இவ்வாறு செய்தல் தீக்ஷாத்ரய மெனப்படும்.

சி: இதுபற்றிக் கூறும் பிரமாணங்களை யெடுத்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ்வருவனவே.

புராதன சுலோகம்.

ஸ்பர்சேந த்யாந ஸந்தர்சநைர் மத்ஸ்யகூர்மவிஹங்கமா:।
போஷயந்தி ஸ்வகாந் புத்ராந் தத்வத் ஸம்வித் வ்ருத்தய:॥

* அசம்பாவனை - சந்தேகம். அஃதிரண்டிருவகைத்தாம். முன்னது வேதாந்தத்தில் ஜீவப்பிரமங்களின் பேதம் சொல்லப்பட்டிருக்கிறதா? அல்லது அபேதம் சொல்லப்பட்டிருக்கிறதா வென்பது. இது பிரமாணகத சம்சயமெனப்படும். பின்னது ஜீவப்பிரம்மங்களின் பேதம் சத்தியமா? அல்லது அபேதம் சத்தியமா? என்பது. இது பிரமேயகத சம்சய மெனப்படும்.

† விபரீதபாவனை - விபரீத நிச்சயம். அது ஜீவப்பிரம்மங்களின் பேதமும் சத்தியம்; தேகாதிப் பிரபஞ்சமும் சத்தியம் என்பது.

(இ-ள்.) முட்டைகளை மீன்கள் பார்த்தும் ஆமைகள் நினைத்தும் பக்ஷிகள் சிறகுகளாற் பரிசித்து மெப்படி இரக்ஷிக்குமோ அப்படியே சற்குருவும் சீடர்களின் அஞ்ஞானத்தை நோக்குதல் உன்னுதல் பரிசித்தலென்னும் (தீக்ஷா) கிரயத்தினால் நீக்கி(ஆத்மஞானமீந்து) இரக்ஷிப்பர்.

சத்தியஞானபோதம்.

கட்கிமை மொத்துக் காற்றுணை வருடும்
பக்குவர்க் கிரங்கிப் பரசிவ னுருவத்
திருவடி யானுந் திருநோக் கானு
மைய லகன்ற மறைநா லானும்
பாவனை யானும் பரிசத் தானும்
யோகத் தானு முணர்வாக் கும்மே.

சிந்தாந்த தெரிசனம்.

மீன்போற் றிருநோக்கால் விமலனுரு வாக்குந்
தான்போக்கி நின்ற தரம்.
ஆமைபோற் சிந்தித் தருளுருவ மாக்குமாற்
காமாதி நீத்தவரைக் காண்.
கோழிபோற் றீண்டியுயிர்க் குற்றமறுத் தாளு
மாழிவிட முண்ட வரன்.

கைவல்லியநவநீதம்.

அன்னதன் சிசுவை யைய னுமைமீன் பறவை போலத்
தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சன் னிதியி ருத்தி
உன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டு சொல்வேன்
சொன்னது கேட்பா யாகிற் றொடர்பவந் தொலையு மென்றான்.

உபதேசமாலை.

பார்த்தான் பரிசித்தான் பாவியேன் சென்னிமிசைச்
சேர்த்தான் திருவடியைச் சிந்தித்தா—னோத்துரைத்தா
னஞ்சு கலையு மடைவி னறுத்தொழித்தா
னென்செய்கை னென்றுரைக்கே னியான்.

வேதாந்தசூளாமணி.

அனையவன தகிகாரந் தெரிந்தருளா னோக்கி யஞ்சலோம் மென்றபய கரஞ்சிரத்தி லிருத்திப், புனையவருஞ் சுருதியுத்தி யாலவ னனென்ம புத்தியினை யொழித்துத்தா தான்மியவாக் கியத்தா, னினைவரிய வொருபிரம நீயேயென் றுள்ள நிலையை யுணர்த்துதல் குரவ னுபதேச மாகு, மினைபவுப தேசமுறை யுத்தேச முடனே யிலக்கணஞ்சோ தனையெனுமூன் றினையுமுடைத் தாமால்.

சி: அதிதீவிரதர பக்குவனுய சிஷன் குருவடி தொழுது குறைகளை விளுவுதற்குரிய பிரமாணங்களை யறியுமாறும் விரும்புகின்றேன்.

கு: கீழ் வருவனவே.

முண்டகோபநிஷத்.*

𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌕𑌰𑍍𑌮𑌚𑌿𑌤𑌾𑌨𑍍 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋 𑌨𑌿𑌰𑍍𑌵𑍇-
𑌦𑌮𑌾𑌯𑌾𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍃𑌤𑌃 𑌕𑍃𑌤𑍇𑌨 । 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸 𑌗𑍁𑌰𑍁-
𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍 𑌸𑌮𑌿𑌤𑍍𑌪𑌾𑌣𑌿𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌮𑍍 ॥

(இ-ள்.) நம்முடைய கர்மங்களாலுண்டான இவ்வுலோகத்திலுள்ள பதார்த்தங்களைப் பார்த்து, இப்படியே யஞ்ஞமுதலிய கர்மங்களா லுண்டாகும் சுவர்க்க* முதலியவைகளும் நாசத்தை யடைந்துவிடும், நித்தியமாகமாட்டா வென்றிப்படி நிச்சயஞ்செய்து வைராக்கியத்தை யடைந்தவன் ஆத்மசொரூபத்தைத் தெரிந்துகொள்ளவேண்டியதற்காக ஸமித்தைக் காணிக்கையாக வெடுத்துக்கொண்டு பரம்பரையாக வேதந் தெரிந்தவனும் பிரம்மஞான முள்ளவனுயு மிருக்கிற ஆசாரியனிடத்திற்குப் போகவேண்டும்.

பகவத்கீதை.

𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌾𑌤𑍇𑌨 𑌪𑌰𑌿𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍇𑌨 𑌸𑍇𑌵𑌯𑌾 । 𑌉𑌪-
𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ॥ 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌨
𑌪𑍁𑌨𑌰𑍍𑌮𑍋𑌹𑌮𑍇𑌵𑌂 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 । 𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯-
𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌥𑍋 𑌮𑌯𑌿 ॥

(இ-ள்.) ஓ! பாண்டவா! (ஆத்ம) தத்துவத்தையறிந்த பிரம்மஞானிகள் எந்தப் பிரம்மஞானத்தை உனக்கு உபதேசஞ் செய்வார்களோ எந்த ஞானத்தையடைந்து மறுபடியும்* இவ்விதமோகத்தை அடையமட்டாயோ எதிஞலே (எந்த ஞானத்திஞலே) ஸகலப் பிராணிகளையும் உன்னிடத்திலும் அப்படியே என்னிடத்திலும் பார்ப்பாயோ அந்தஞானத்தைச் சாஷ்டாங்க நமஸ்காரத்திஞலேயும் செவ்வையாய்க் கேட்பதிஞலேயும் குருவணக்கத்திஞலேயும் அறிந்துகொள்.

வேதாந்தசூளாமணி.

நாஞரிப் பவமெனக்கு வந்தவா றென்கோ ணசிப்பதெவ ராலெனவரய்ந் தலர்கரங்கொண் டேகி, யாஞநற் கல்வியறி வடக்க

ப்வை ராக மாதியாங் குணமுடைச்சற் குருவையடைந் தேதி
ன், ஞானப் பணிந்தெழுந்தன் பாற்கரங்கள் குவித்து வுறவு
த்தி யருட்குருவே யென்பாசத் தழிவு, தானுமெத் திறத்தின
லெனவினவல் சீடன் றனதுவிதி வத்துபசன் னத்துவமா மன்றே.

ஞானவாசிட்டம்.

என்னிங் குள்ள தப்பாலென் னெல்லை சொல்லப் பட்டுளதென்
றன்னு மெல்லை யில்லாதென் சொல்லு நானுர் நீயாரிம்
மன்னு முலக மேதென்று மயக்கந் தீர வருளென்ன
வன்ன தெல்லாந் தெரிவிரித் தவனுக் கிவனன் றறிவித்தான்.

விவேகசூடாமணி.

பத்தியால் வணங்கிச் செய்த பலவிதச் சேவை யாலே
மெத்தவுந் தன்னி டத்தின் மெய்யருண் மேவா நின்ற
வுத்தம குருவை நோக்கி யுணரவேண் டியதை யெல்லாம்
புத்திமா னுன சீடன் போற்றியே வினவ வேண்டும்.

படர்ந்ததீ வினையே யாகும் பவனனு லுலர்த்தப் பட்டுக்
கடந்திடாப் பவமே யாகுங் கானவன் னியினுல் வெம்பித்
தொடர்ந்தபீ தியினு னீயே துணையென நம்பு மென்னை
முடிந்திடா மரண மாதி முடிவுறச் செய்து காப்பாய்.

இப்பவச் சிந்து தன்னை யெவ்வித மியான்க டப்பே
னெப்படி யிங்கு பாய மேதுதான் கதியெ னக்கா
மிப்படி யென்றி வற்றை யெவளவு முணர்கி லேனியா
னப்பனே யருளா லிந்த வரந்தைதீர்த் தென்னை யாள்வாய்.

நாதனின் சரணம் போற்றி நல்லருட் கடலே போற்றி
பாதமே பணிந்தோ ருக்குப் பந்துவே பவமாம் பவ்வ
மீதினுண் முழ்கு மென்னை யினியநற் கருணை கூர்ந்து
கோதினின் றிட்டி நாவாய் கொண்டுமே லேற்றி வைப்பாய்.

கைவல்யநவநீதம்.

வணங்கிநின் றழுது சொல்வான் மாயவாழ் வெனுஞ்சோ கத்தால்
உணங்கினே னைய னேயென் னுள்ளமே குளிரும் வண்ணம்
பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்ன மாக்கி
யிணங்கிய குருவே யென்னை யிரட்சித்தல் வேண்டு மென்றான்.

சுகர்கைவல்யம்.

அரியசற் குருவை யடைந்திடுஞ் சீடனுரென மூனிவனை
வினவ, வுரியநா னுரிவ் வுடலெதிவ் வுலக மேதென விசாரமு

[illegible], விரியுமவ் விருத்தி யுருமனன் விட்டை மேவியே யுப்பெய்து புனல்போற், சரியநாய் வருத்து நிற்பதே சீடனா முமெனக் சனகனுக் குரைத்தான்.

சி: ஆத்மா பஞ்சகோசவிலட்சணமென்று கூறினமையின், பஞ்சகோசங்களை யாத்மாவென்று கூறுவாருமுண்டென்பது பெறப்படுகின்றமையின், பஞ்சகோசங்களை யாத்மாவென்பாரது மதங்களையும், அவற்றின் கண்டனங்களையும், பஞ்சகோசவிலக்ஷணம் ஆத்மாவென்பதன் காரணத்தையும் தெளிவாயறியுமாறு விரும்புகின்றேன். தேவரீர் தயவுசெய்து அவற்றைச் சுருங்கச்சொல்லலும் விளங்கவைத்தலுமாகக் கூறியருளல் வேண்டும்.

கு: நீ வினவியவாறே கூறுகின்றேன். அவை வருமாறு:—

(1) ஸ்தூலசரீரமே ஆத்மா.

பாமரர்களிற் சிலர் 'ஸ்தூல சரீரமான அன்னமயகோசமே ஆத்மாவாம். ஏனெனின், எதில் நான் என்னும புத்தியுண்டாகிறதோ அஃதாத்மா எனப்படும்; அன்றி எதில் முக்கியமான பிரீதியுண்டாகிறதோ அஃதாத்மாவாம். நான் மனிதன், நான் பிராமணன், நான் க்ஷத்திரியன் என்றற்றொடக்கத்த புத்தி எல்லாருக்குமுண்டாதலால் மனிதத்தன்மை முதலியன ஸ்தூல சரீரத்திலேயே யிருக்கின்றன. ஸ்திரீ, புத்திரன், பசு, தனம் முதலியவை ஸ்தூல சரீரத்திற் குபயோகமாயின் அவற்றில் பிரீதியுண்டாகின்றது; ஸ்தூல சரீரத்திற் குபயோகமாகாவிடின் பிரீதியுண்டாகின்றதில்லை. எந்த ஸ்தூல தேகத்தின்பொருட்டு அன்னிய பதார்த்தங்களில் பிரீதியுண்டாகின்றதோ அந்த ஸ்தூல சரீரத்திலே முக்கியப் பிரீதியிருக்கிறது. இதனால் நான் என்னும புத்திக்கு விஷயமாயும் முக்கியப் பிரீதிக் கிடமாயுமிருப்பது ஸ்தூல சரீரமே யென்பது பெறப்படலால்* ஸ்தூல சரீரமே ஆத்மவாம். ஆதலால், அதனையே ஆடையாபரண போஜனாதிகளா லலங்கரிப்பித்துப் போஷித்தலே பரமபுருஷார்த்தமாம். புருஷர்களின் இச்சைக்கெது விஷயமோ அது புருஷார்த்த மெனப்படும்' என்று கூறுவர்.

* மமதைக்கு (எனதென்பதற்கு) விஷயமாவது அகந்தைக்கு (நான் என்பதற்கு) விஷயமாகாதென்பது நியமமாம். என் தேகம் என்றவிடத்துத் தேகம் மமதைக்கு விஷயமாயிருத்தலால் அஃது அகந்தைக்கு விஷயமன்றென்பது பிறழுகின்றது. ஆதலால் ஸ்தூலதேகம் ஆத்மாவாகமாட்டாதென்க.

இவர்களுக்குப் பிரத்தியட்சமொன்றே பிரமாணம்; மரணமேமோக்ஷம்; இன்பமும் பொருளுமே புருஷார்த்தம். இங்ஙனம் கூறுதல் அசுரஸ்வாமியாகிய விரோசனரது சித்தாந்தமாம்.

## (2) இந்திரியமே ஆத்மா.

வேறு சிலர் 'ஸ்தூல சரீரம் ஆத்மாவாகமாட்டாது; ஆனால் ஸ்தூல சரீரத்தில் யாதொன்றிருப்பதனால் ஜீவன விவகாரமும் யாதொன்றில்லாமற் போவதினால் மரண விவகாரமுமுண்டாமோ அதுவே ஆத்மாவாம். அது ஸ்தூல சரீரத்தைப்பார்க்கிலும் வேறாம். ஜீவனமும் மரணமும் இந்தியங்களின் வசமாயிருக்கின்றன. எவ்வளவு காலஞ் சரீரத்தில் இந்திரியங்களிருக்குமோ அவ்வளவு காலம் ஜீவனமுண்டாயிருக்கிறது. எப்போது இந்திரியங்களில்லாமற் போமோ அப்போதே மரணமென்றுரைக்கப் படுகின்றது. நான் காண்கின்றேன், நான் உரைக்கின்றேன், நான் கேட்கின்றேன், நான் நடக்கின்றேன் என்றிங்ஙனம் நான் என்னும் புத்தி இந்திரியத்திலிருக்கின்றது; ஆதலால் ¶ இந்திரியமே ஆத்மாவாம்' என்பர். இங்ஙனம் கூறுதல் சார்வாகரின ஏகதேசிகளாகிய இந்திரியாத்மவாதிகளின் சித்தாந்தமாம்.

ஈண்டு இந்திரியாத்மவாதியால் தேகாத்மவாதி மறுக்கப்பட்டவாறறிக.

## (3) பிராணனே ஆன்மா.

மற்றொரு வகையார 'இந்திரியம் ஆத்மாவாக மாட்டாது; ஆனால் பிராணனே (பிராணவாயுவே) ஆத்மாவாம. ஏனெனின், ஒருவனுக்கு எப்போது மரணசமயத்தில் மூர்ச்சையுண்டாகின்றதோ அப்போது அவனது சமீபத்திலிருக்கும் புத்திரன் முதலியோர் பிராணனிருந்தால பிழைத்திருப்பதாகவும் அஃதில்லாவிட்டால் இறந்துபோய்விட்டதாகவு மறிகின்றார்கள். மேலும், சரீரத்தில் இந்திரியமில்லாமற் போனால் மரணமுண்டாகின்றதின்று. ஆனால், நேத்திரேந்திரியமில்லாமல் குருடன் சரீரமும், சுரோத்திரேந்திரியமிலலாமற் செவிடன் சரீரமும் வாக்கிந்திரியமில்லாமல்

¶ என்னுடைய இந்திரியமென்றிவ்வாறு இந்திரியம் மமதைக்கு விஷயமாயிருத்தலால் இந்திரியம் ஒருபோதும் ஆத்மாவாகமாட்டாது. ஏனெனில், யாது எனதென்று சொல்லப்படுகின்றதோ அது நான் என்னும் சொல்லுக்குப் பொருளாவதில்லை. இந்திரியம் எனது என்னும் சொல்லிற்கே தெளிவுக்காலத்தில பொருளாயிருத்தலால் அஃதெங்ஙனம் ஆத்மாவாகுமென்க.

னைமையன் சரீரமும ஜீவித்திருக்கின்றன. இதனால் இந்திரியங்களும் அவற்றின் வியாபாரமுமின்றியே சரீரம் ஜீவித்திருக்கிறதென்பது தெளிவாய்ப் புலப்படுமே. பிராணன் இல்லாமற்போனாலோ அந்தக்கணமே சரீரம் பிணமாய் விழுந்துவிடுகின்றது. நான் பார்க்கிறேன், நான் கேட்கிறேன் என்னும் ஞானத்தினாலும் இந்திரியங்களுக் கன்னியமாகவே ஆத்மா பெறப்படுகின்றது. எப்படியெனின், நேத்திரவடிவமான நான் பார்க்கிறேன் சோத்திர வடிவமான நான் கேட்கிறேன் என்று ஞானமுண்டானால் இந்திரியமே ஆத்மாவாதல் பெறப்படும். அங்ஙனமின்றி நேத்திரமுடைய நான் பார்க்கிறேன், சோத்திரமுடைய நான் கேட்கிறேனென்றறிவுண்டாவதால் இந்திரியத்திற் கன்னியமாகவே ஆத்மாவிருக்கிறதென்பது சித்தமாம். மேலும், சுழுத்தியவத்தையில் சகலவிந்திரியங்களும் அபாவமாம். அங்ஙனமிருந்தும பிராணனது இருப்பினால் ஜீவன விவகாரமுண்டாகின்றது. ஆதலால், ஜீவனமும் மரணமும் இந்திரியங்களின் வசமாகா. ஸ்தூலசரீரத்தினினறும் பிராணன் பிரிதலே மரணமெனப் படுதலாலும், ஜீவனமும் மரணமும் பிராணனின் வசமாயிருத்தலாலும பிராணனே ஆத்மா' என்பர். இவ்வாறு கூறுதல் சமஷ்டிப்பிராணனை யுபாசிக்கின்ற இரணியகர்ப்பர்களின் மதசித்தாந்தமாம.

ஈண்டுப் * பிராணாத்மவாதியால் இநதிரியாத்மவாதி மறுக்கப்பட்டவாறறிக.

(4) மனமே ஆத்மா.

இன்னொருவகையார் 'பிராணன் ஆத்மாவாகமாட்டாது; ஆனால் மனமே ஆத்மாவாம். ஏனெனின், கடபடம் போன்று பிராணன் சடமாயிருத்தலின் அஃதநான்மாவாம். பந்தமும் மோக்ஷமும் மனத்தின்வசமாயிருக்கின்றன. விஷயத்திலாசையுள்ள மனம் பந்தத்திற்குக் காரணமாகின்றது. விஷயவாசனையொழிந்த மனம் மோக்ஷத்திற்குக் காரணமாகின்றது. இந்திரியங்கள் மனத்தின் சம்பந்தத்தினாலேயே (கடாதிவிஷய) ஞானங்களுக்குக் காரணமாகின்றன. மனத்தின் சம்பந்தமின்றி இந்திரியங்களால் ஞானமுண்

* பிராணன் கேவலம் ஜடமாயிருப்பதாலும், என்பிராணனென எனதென்னுஞ் சொல்லுக்குப் பொருளாயிருத்தலாலும், ஆந்தர(உள்)வாயுவானபிராணன் ஆத்மாவாகும் பட்சத்தில் பாகிய (வெளி) வாயுவும் ஆத்மாவாகவேண்டு மாதலாலும் பிராணன் ஆத்மாவாக மாட்டாதென்க.

டாகமாட்டா தென்பது நியமமாயிருத்தலின், சர்வ விவகாரத்திற்கும் காரணமான * மனந்தான் ஆத்மா' என்பர். இவ்வகை கூறுதல நாரத பாஞ்சராத்திரத்தை யனுசரித்தவர்களது சித்தாந்தமாம். ஈண்டு மனாத்மவாதியால் பிராணாத்மவாதி மறுக்கப்பட்டவாறறிக.

(5) புத்தியே ஆத்மா.

மற்றொரு வகையார 'மனம ஆத்மாவாகமாட்டாது; ஆனால் புத்தியே ஆத்மாவாம, ஏனெனின், மனத்தின வியாபாரம் புத்தியின் வசமாயிருக்கின்றது; புத்தியின ஆகாரமே மனமாகததோன்றுகலால், க்ஷணிக விஞ்ஞானவடிவ புத்தியே ஆத்மாவாம்; மனம் ஆத்மாவாகமாட்டா' தெனபர்.

க்ஷணிகவிஞ்ஞானவடிவ புத்தியே ஆத்மாவென்பதன் அபிப்பிராயம வருமாறு:—

(1) விஞ்ஞானத்தின ஆகாரமாகவே சகல பதார்த்தங்களுமிருக்கின்றன. (2) அந்த விஞ்ஞானம பிரகாச வடிவமாம. (3) அந்த விஞ்ஞானம க்ஷணத்திற்கு க்ஷணம உற்பத்தியாய் நாசமடைகிறது.

பூர்வ விஞ்ஞானத்திற் கொப்பாக வேறு விஞ்ஞான முற்பத்தியாவதால் பூர்வ விஞ்ஞானம் நாசமடைகிறது. அங்ஙனமே மூன்றாவது விஞ்ஞானத்தி னுற்பத்தியால் இரண்டாவது விஞ்ஞானமும், நான்காவது விஞ்ஞானத்தி னுற்பத்தியால் மூன்றாவது விஞ்ஞானமும் நாசமடைகின்றன, இங்ஙனம நதியின் பிரவாகம் போன்று விஞ்ஞான தாரை (ஞானவரிசை) யுண்டாகின்றது. அந்த விஞ்ஞானதாரை ஆலய விஞ்ஞானதாரை பிரவிருத்தி விஞ்ஞானதாரையென விருவகைத்தாம.

(1) நான் நான் என்னும் விஞ்ஞான தாரை ஆலய விஞ்ஞான தாரையாம். அதுவே புத்தியெனப்படும. (2) இது கடம் இது படம், இது சரீரம் என்னும் விஞ்ஞானதாரை பிரவிர்த்தி விஞ்ஞான தாரையாம். பிரவிர்த்தி விஞ்ஞானதாரை ஆலய விஞ்ஞான தாரையினின் றுண்டாகின்றது. மனத்தின் சொரூபம் பிரவிர்த்தி விஞ்

* என்மனமென்னும் விவகாரம் நிகழ்தலின் மனம் ஒருபோதும் ஆத்மாவாகமாட்டாது. மேலும், வாய்ச்சி உளி முதலியவற்றைப்போன்று மனம் விஷயங்களை யிந்திரியங்களின் வாயிலாகச் சீவன் அறிதற்குக் கருவியாயிருத்தலின் அஃதெங்ஙனம் ஆத்மாவாகுமெனக.

னென் தாரையிலிருக்கிறது. ஆதலால் மனம் ஆலய விஞ்ஞான தாரை வடிவமான புத்தியின் காரியமாம். அந்தப் புத்தியே ஆத்மா வாம். ஆலய விஞ்ஞான தாரையில் பிரவிர்த்தி விஞ்ஞானதாரையின் பாதத்தை (பொய்யென்பதை)ச் சிந்தித்தலாலுண்டாகும் நிர் விசேஷ க்ஷணிகவிஞ்ஞான தாரையின் ஸ்திதியே மோக்ஷமாமெ ன்பர். இங்ஙனம் *புத்தியை க்ஷணிக வடிவமாகவும் சுயம்பிரகாச வடிவமாகவுங் கற்பித்து ஆத்மாவென்று கூறுதல் புத்தரின் சிஷ்யருள் ஒருவனாகிய யோகாசாரனை யனுசரித்தவர்களது சித்தாந்தமாம். ஈண்டுப் புத்தியாத்ம வாதியால் மனாத்மவாதி மறுக்கப்பட்டவாறறிக.

(6) ஆநந்தமயகோசமே ஆத்மா.

மற்றொருசாரார் 'மின்னலைப்போன்று ஆத்மா க்ஷணிக ரூபமன்று. ஆனால், ஸ்திரவடிவமான ஆத்மா ஜடவடிவமாகவும் சித்வடிவமாகவுமிருக்கிறது. எப்படியெனின் சுழுத்தியினின்றும் விழித்த புருஷன் 'நான் ஜடனாகத்தூங்கினேன்' என்றுரைப்பதால் ஆத்மா ஜடவடிவமென்பது பெறப்படுகின்றது. ஆயினும், விழித்தவுடன் 'நான் ஜடமாகத் தூங்கினேன்' என்னும் ஸ்மிருதி (நினைப்பு) உண்டாகின்றது. அறியப்படாத பதார்த்தின் ஸ்மிருதியுண்டாகா தென்பதோ நியமமாயிருக்கிறது. ஆத்மசொரூபத்திற்கு வேறாக யாதொரு ஞானசாதனமும் சுழுத்தியவஸ்தையிலோ இன்று.ஸ்மிருதிக்குக் காரணமாகச் சுழுத்தியிலும் ஞானமிருக்கிறது; இராத பட்சத்தில் சுழுத்தியினின்றும் விழித்தவனுக்கு ஸ்மிருதியுண்டாதல் கூடாது. உண்டாகிறபடியால் ஸ்மிருதிக்குக் காரணமான ஞானம் சுழுத்தியிலுள தென்பது திண்ணமாம். அந்த ஞானம் ஆத்மாவின் சொரூபமாகவே இருக்கிறது. இவ்வாறாக ஆன்மா மின்மினிப் பூச்

* மனம்போன்று புத்தியும் சீவனுக்குக் கரணமாயிருத்தலால் அஃதாத்மாவாகமாட்டாது. அந்தக்கரணத்தி னொருபகுதியாய புத்தியை ஆத்மாவெனக்கூறி அது க்ஷணிகவடிவம் (க்ஷணப்போதிருப்பது) என்றுகூறுவதுஒப்பத்தக்கதாகாது. ஆத்மாக்ஷணிகவடிவமாயின் முதல் மாதத்தில் கடன் கொடுத்தவன் அடுத்தமாதத்திலதனைக் கேட்டல் கூடாது; முதல் க்ஷணத்தில் போஜனஞ் செய்தவன் அடுத்தக்ஷணத்திலிராமையால் போஜனத்தின் முடிவில் நான் திருப்தியடைந்தேனென்றுரைத்தலுங் கூடாது. ஆதலால் ஆத்மாக்ஷணிகவடிவமென்பது பொருந்துமாறுடன் பொருந்துவதன்றாம்.[பொருந்துமாறு—யுக்தி.] மேலும், மோக்ஷமடைதற்பொருட் டேற்பட்டுள்ள சாதனங்களும் பயனற்றனவா யொழியும்.

சியைப்போன்று * பிரகாச வடிவமாயும் அப்பிரகாச வடிவமாயு மிருக்கிறது. ஞானவடிவமா யிருத்தலால் பிரகாச வடிவமாயிருக் கிறது. ஜடவடிவமாயிருத்தலால்அப்பிரகாச வடிவமாயிருக்கிறது' என்பர். இவ்வாறு கூறுதல் கரும மிமாம்சகருளொரு பகுதியின ராய பட்டரது சித்தாந்தமாம். இங்கு ஆத்மா ஸ்திரமாய் ஜடசித் வடிவமாயிருக்கு மென்னும் வாதியால் புத்தியாத்மவாதி மறுக்கப் பட்டவாறு காண்க. [இவ்வாதியை ஆநந்தமயகோசமே ஆத்மா என்னும் வாதியாகக்கூறிய தெங்ஙனமெனில், கூறுதும்:—பிர காச அப்பிரகாச வடிவமாயுள்ளது ஆநந்தமயகோசமாம். சுழுத் தியிலிருக்கும் சேதனத்தின் ஆபாச சகித (கூடிய) அஞ்ஞானமே ஆநந்தமயகோச மெனப்படுகின்றது. அங்கே ஆபாசம் பிரகாச வடிவமாகவும் அஞ்ஞானம் அப்பிரகாச வடிவமாகவுமிருக்கின் றன. இதனால் பிரகாச அப்பிரகாச வடிவினது ஆன்மாவென்றது ஆநந்தமயகோசத்தையேயாமென்பது நன்கு விளங்கும்.]

### (7) சூனியமே ஆத்மா.

வேறுமொருசிலர் 'ஆத்மாவைப் பிரகாச அப்பிரகாச வடிவமாகக் கூறுதல் பொருந்தாது. மின்மினிப் பூச்சியின் ஒருபாகம் பிரகாசமாகவும் மற்றொருபாகம் அப்பிகாசமாகவு மிருக்கின்றன. அவ்வாறு கூறுபாடில்லாத ஆத்மாவின்கண் இரண்டு ரூபங்களைக் கூறுதல் அசங்கதமாம். இரண்டு வடிவ ங்கள் சித்திக்கும் நிமித்தம் ஆத்மாவைக் கூறுபாடுடையதாக வொப்பவேண்டும். ஆத்மா கூறுபாடுடையதாமாயின் அது கூறு பாடுடைய கடபடம்போன்று உற்பத்தி நாசமுடையதாயிருத்தல்

---

* ஆத்மா பிரகாசவடிவமாகவும் அப்பிரகாச வடிவமாகவும் இருக்கிற தென்பது சூரியன் ஒளியுருவமாகவும் இருளுருவமாகவு மிருக்கிறானென் பதுபோன்றசங்கதமாம். மேலும் ஒருடலில் ஒருபாதி பால்யம் மற்றொரு பாதி கிழம் என்றுரைப்பதுபோலு மசங்கதமாம். பிரகாசமும் அப்பிரகா சமும் தம்முள் மாறுபட்ட பதார்த்தமாதலின் அவை யிரண்டும் ஒருங்குசே ர்ந்திருத்தல் எஞ்ஞான்று மியையாது. நான் ஜடமாயிருக்கிறேனென்பத ற்கு யாதொரு பிரமாணமுமின்று. நான் சித்தாயிருக்கிறேனென்பது யாண் டுஞ் சிதையாத சித்தாந்தமாயிருத்தலின் ஆத்மா சித் ஜடமென்றுரைப்பது எங்ஙனமாமென்க. அறிப்படுதலே யிலக்கணமாகவுடைய ஜடமும் அறி தலே யிலக்கணமாகவுடைய சித்தும் ஒருங்குசேர்ந் தொன்றாயிருக்குமென் பது குயவனும் குடமும் ஒரே பொருள் என்று கூறும் அவிவேகவார்த்தை போல்வதா மென்க.

வேண்டும். உற்பத்தி நாசமுடைய பதார்த்தம் உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் அசத்தாம். யாது உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப்பின்னும் அசத்தா யிருக்கிறதோ அது மத்திய காலத்திலும் (அஃதாவது உற்பத்தியாய் நாசமடையாதிருக்குங் காலத்திலும்) சத்தாகமாட்டாது; ஆனால் அசத்தேயாம். ஆதலால் (கூறுபாடுடைமையால் கடபடம் போன்று காரியமாயிருக்கும்) ஆத்மா அசத்து வடிவமாம். அப்படியே ஆத்மாவிற்கு வேறான சகல பதார்த்தங்களும் உற்பத்தி நாசமுடையனவா யிருத்தலின் அவையும் அசத்து வடிவமாம்.

இவ்வாற்றால் ஆன்மா அநான்மாக்களாய சகல பதார்த்தங்களும் அசத் வடிவமாயிருப்பதால் சூன்யமேபரமதத்துவம்'என்பர். இங்ஙனம் கூறுதல் மாத்தியமிக பௌத்த மதசித்தாந்தமாம். மேற்கூறிய பட்டர் மதசித்தாந்தம் இச்சூன்னியவாதியால் மறுக்கப்பட்டமை காண்க. [சூன்யமே பரம தத்துவமென்னும் வாதியும் ஆநந்த மயகோசத்தையே ஆத்மாவென்று கூறும் வாதியாம். சிரௌதம், யௌத்திகம், லௌகிகம் என்னும் பேதத்தால் அஞ்ஞானம் துச்சை (அசத்து) மித்தை, சத்தையென த் தோன்றுகின்றது. அத்வைத சாஸ்திர சம்ஸ்காரமின்றிய மூடர்களுச்கு ஜகத்பரிணும மடைந்த அஞ்ஞானம்: சத்தியமாகவும் அத்வைதசாஸ்திரானுசாரமான யுக்தியில் வல்லவராகிய பண்டிதர்களுக்கு மித்தையாகவும் ஜீவன் முத்த வித்வானுக்கு அசத்தாகவும் தோன்றுகின்றது. இங்ஙனமாக ஜீவன் முத்த புருஷனுக்குத் துச்சமாகத்தோன்றும் அஞ்ஞானத்தில் சூன்யவாதி மோகமடைந்து பரமபுருஷார்த்தத்தை யடையாது துச்சவடிவ ஆநந்த மய கோசத்தையே ஆன்மா வென்பன்.]

(8) ஜடமே ஆத்மா.

இன்னொருசாரார் 'ஆன்மா சூன்ய வடிவமன்று, எவன் ஆத்மாவைச் சூன்யவடிவமாக ஒப்புக்கொள்ளுகின்றானோ அவனை நீ சூன்யவடிவத்தை யனுபவித்தனையா? அல்லது அனுபவிக்கவில்லையா வென்றுகேட்பாம். சூன்யம் அனுபவிக்கப்படுகிறதெனில், எவன் சூன்யத்தை யனுபவித்தனனோ அவன் சூன்யத்திலும் வேறுபட்டவனென்பது பெறப்படுகின்றது. சூன்யம் அனுபவிக்கப்படவில்லையெனில் அப்போது சூன்யமே இல்லையென்பது பெறப்படுகின்றது. இவ்வாற்றால் சூன்யத்திற்கு வேறாய் ஆத்மா உளதென்

பது சித்தித்தது. அவ்வாத்மாவின்கண் மனதின் சையோகத்தி ஞல் ஞானமுண்டாகின்றது. அந்த ஞான குணத்திஞல் ஆத்மா சேதனமென்று சொல்லப்படுகிறது. சொரூபமாக ஆன்மா ஜட மாம். அங்ஙனமே சுகம், துக்கம். இச்சை, த்வேஷம், பிர யத்தனம், தர்மம், அதர்மம் முதலிய குணங்கள் ஆத்மாவின் கணிருக்கின்றன. ஆதலால், ஆத்மா ஜடமே' என்பர். இவ்வாறு கூறுதல் பிரபாகர *நையாயிகரது மதசித்தாந்தமாம். ஈண்டு ஜடா த்மவாதியால் சூன்யவாத்மவாதி மறுப்புண்டமை காண்க.

[இவ்வாதியும் ஆநந்தமயகோசமே ஆன்மாவென்னும் வாதி யாம். விஞ்ஞானமயகோசத்திலிருக்கும் புத்தி ஆத்மாவின் ஞான குணமெனப்படுகிறது. ஆநந்தமயகோசத்தில் சேதனம் கூடமா (மறைவா)யிருத்தலால் அது விவேகமில்லாதவர்க்குத் தோன்று கிறதில்லை. ஆதலால், பிரபாகரரும் நையாயிகரும் சுழுத்தியில் ஆத் மாவை ஞானமின்றியதாக வொப்பிச்சொரூபமாக ஜடமென்பர். இதஞல் அவர்களுக்கு ஆநந்தமயகோசத்திலேயே ஆன்மப்பிரா ந்தியிருக்கிறது. அவர்கள் நித்திய ஞானத்தை ஜீவனிடத் தொப்ப வில்லை; ஆஞல் அனித்திய ஞானத்தை யொப்பியிருக்கின்றனர். அவ்வநித்திய ஞானம் அந்தக்கரண விருத்தியாகிய புத்திவடிவமா யிருத்தலின் அவர்கள் கொள்கையுங் குணமுடையதன்றும்.]

* தருக்கசங்கிரவுரையில் "சுகமுதலியனவுடைமை சீவான்மாவின் இலக்கணம். அற்றேல், 'யான்மனிதன்' 'யான்பார்ப்பான்' என யாண்டும் யானென்னுமுணர்விற்குச் சரீரமே விடயமாகலின், சரீரமே ஆன்மாவெ னிற்படு மிழுக்கென்னையெனின், அற்றன்று; சரீரமே ஆன்மாவென்பார் க்குக் கைகால்முதலிய சரீரம் நசித்தலால் ஆன்மாவும் நசித்ததெனல்வேண் டுமாகலினென்க. ஆயின், இந்திரியங்கள் ஆன்மா வென்ஞமோவெனின், என்ஞம். குடத்தைக் கண்ட யானே இப்பொழுது குடத்தைத் தீண்டி னேன் என்னுந் தொடர்ச்சியறிவு நிகழாதொழிதல் வேண்டுதலின். ஒரு வன் அனுபவித்ததனை மற்றொருவன் ஒட்டியுணர்தல் கூடாமையுணர்க. அதஞல் சீவான்மா உடம்பு பொறி முதலியவற்றின் வேறெனப்படும். சுக முதலியவற்றின் வேறுபாட்டால் உடம்புதோறும் வெவ்வேறெனவுணர்க. பரமாணுவெனின், உடம்பு முழுதும் வியாபித்த சுகதுக்க அனுபவங்கூடா தாகலானும், இடைப்பட்ட பரிமாணமுடையதெனின் அநித்தமாதல்வேண் டும்; வேண்டவே செய்தவினை அழிந்து செய்யாதவினை தோன்றிற்றெனல் வேண்டுமாகலானும், அவ்வாறன்றி நித்தமாய்வியாபகமாயுள்ளது சீவான்மா வென்றுணர்க" என்று கூறியுள்ளதிங்கவசிய மறியத்தக்கதாம்.

### (9) பஞ்சகோச விலக்ஷணம் ஆத்மா.

ஞானத்திற்கு வேறாயகடாதிஜடவஸ்துக்கள் அநித்யமாயிருக்கின்றன. ஆன்மாவும் கடாதிவஸ்துகள் போல ஜடப்பொருளாயின் அநித்தியமா யொழியும். ஆன்மா அநித்தியமாயின் மோக்ஷ நிமித்தமாய சாதனங்கள் நிஷ்பலமாய்விடும். ஆத்மா பஞ்சகோச விலக்ஷணமாய்ச் சச்சிதாநந்த வடிவமாயுளதென் றறியாது மதவாதிகள் பஞ்சகோசங்களில் யாதானுமொன்றையே ஆன்மாவாக வொப்பி முக்கிய ஆன்மசொரூபமான சாக்ஷியை யறியாது வாளா போயினர். சுழுத்தியினின்றும் விழித்தவன் ஒன்று மறியாது சுகமாய்த் தூங்கினேன் என்பதினாலேயே ஆத்மா (ஸ்தூல சூக்குமகாரணமென்னும்) சரீரத்திரயத்திற்கும், (அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயமென்னும்) பஞ்சகோசத்திற்கும்வேறாய்(சாக்கிர சொப்பன சுழுத்தியென்னும்) அவஸ்தாத்திரயத்திற்குச் சாட்சியாய்ச் சச்சிதாநந்த வடிவமா யிருக்கிறதென்பதுநன்குவெளியாம். சுழுத்தியில் ஆத்மா ஜடமாயிருக்கும் பட்சத்தில் சுழுத்தியிலுள்ள ஆநந்தத்தின்ஸ்மிருதி யுண்டாதல் கூடாது. உண்டாகின்றபடியால் ஆத்மா ஜடவடிவமென்பது அவசித்தாந்தமாம். சுழுத்தியிலுள்ள ஆநந்தத்தின் ஸ்மரணை சாக்கிரத்திலிருக்கிறபடியால் ஆத்மா ஆநந்தவடிவமென்பது பெறப்படுகின்றது. அறியப்படாதநின்ஸ்மிருதி யுண்டாகா தென்பது நியமமாதலின் ஆத்மா சித்தென்பதும் பெறப்பட்டது. சுழுத்தியின் ஆநந்தத்தை நினைத்தற்கு ஆண்டான்மா அவசியமிருக்கவேண்டியதாதலின் அதுசத்தென்பதும்பெறப்பட்டது. படவே ஆன்மா சச்சிதாநந்தவடிவமென்பது சிதையாத சித்தாந்தமாம். இதனால் சச்சிதாநந்தமய ஒருமையே ஆத்மாவென்பது நன்குவிளங்கும். விளங்கவே வாதிகள் கூறுவதுபோலாகாது பஞ்சகோசங்களுக் கப்பாற்பட்டது ஆத்மாவென்பது இனிது தோன்றுமென்க.

### பஞ்சகோசம்.

சி: பஞ்சகோசத்தின் சொரூபத்தை யறிய விரும்புகின்றேனாதலின் அவற்றை விளக்கமாய்க் கூறல்வேண்டும்.

### (க) அன்னமயகோசம்.

கு: மாதாபிதாக்களுண்ட அன்னத்தினாலுண்டாகிய சோணித சுக்கிலங்களால் மாதாவின் உதரத்தி லுற்பத்தியாகி, அதன் பிறகு பால்முதலிய அன்னத்தினால் விருத்தியடைந்து, மரித்தபின்

அன்னமயமாகிய பிருதிவியில் ஒடுங்கும் ஸ்தூலசரீரமே அன்னமயகோசமாம். இதுதான் சுக துக்கங்களின் அனுபவமாகிய போகத்திற்கு இடமாயிருக்கிறது. உண்டாதல், இருத்தல், மாறுபடுதல், அதிகரித்தல், குறைதல், நாசமடைதல் என்னும் சட்பாவவிகாரமும் எச்சரீரத்திற்குமுண்டு.

(௨) பிராணமயகோசம்.

வாக்காதி கன்மேந்திரிய மைந்துடன் கூடிய பஞ்ச (ஐந்து) பிராணன் (வாயுக்களும்) பிராணமயகோசமாம். அன்னமயகோசத்திற்குள்ளாய், தேகத்திற்குக் கட்டாய், அசைதல் முதலாகிய தொழில்களையுடைத்தாயிருத்தல் இதன் தர்மமாம்.

(௩) மனோமய கோசம்.

செவியாதி ஞானேந்திரிய மைந்துடன் கூடிய மனம் மனோமய கோசமாம். பிராணமயகோசத்திற்குள்ளாய்க் காமக் குரோத லோப மோக மத மாத்சரிய மென்னும் ஆறு பகைவர்க்கங்களும், சரீரத்தில் நான் என்னும் புத்தியும், மனைவிமக்களாதியோரிடத்தில் எனது என்னும் புத்தியு முடைத்தாயிருக்தல் இதன் தர்மமாம்.

(௪) விஞ்ஞானமயகோசம்:

ஞானேந்திரிய மைந்துடன் கூடிய புத்தி விஞ்ஞான மய கோசமாம். மனோமய கோசத்திற்குள்ளாய், இகபர கருமவிஷய அறிவினையுடைத்தாய், கர்த்திருத்துவ அபிமான முடையதாய் நான் என்னும் சொல்லிற்கு (மயக்ககாலத்தில்) பொருளாய், சேதனத்தின் பிரதிபிம்பத்திற் கிடமாயிருத்தல் இதன் தர்மமாம்.

பிராணமயகோச முதலிய மூன்றும் (போகத்திற்கிடமாகிய ஸ்தூல தேகத்திலுள்ளிருந்து போகத்தை யனுபவிப்பதற்குச் சாதனமாயுள்ள) சூக்குமசரீரத்தினு ளிருக்கும்.

கன்மேந்திரியத்துடன் பிராணவாயு தேகத்திற் பூரித்து அதற்குப் பலத்தைக்கொடுத்து இந்திரியங்களை அவைகளின் காரியங்களிற் பிரவர்த்திக்கும்படி செய்வதா யிருப்பதால் பிராணமயகோசம் கேவலம் ரஜோகுணத்தின் அவஸ்தையாம் என்றும், ஞானேந்திரியங்களுடன் கூடிய மனம் கர்மேந்திரியங்களால் விவகாரங்களைச்செய்து இச்சை முதலிய ரஜோகுண விருத்தியுடன் கூடியிருப்பதால் மனோமய கோசம் சத்துவ ரஜோகுணங்களின் அவஸ்தையாம் என்றும், ஞானேந்திரியங்களுடன் கூடிய புத்தி (ஈக

துனிமுதல் சிகைவரையிலும் சரீரத்தில் வியாபித்துக் கர்த்தாவ டிவமாயிருந்து) விஷயங்களைப் பகுத்துணர்தல் வடிவாயிருப்ப தால் விஞ்ஞான மயகோசம் கேவலம் சத்துவகுணத்தின் அவஸ் தையாம என்றும் அறிந்துகொள்க.

"பிரத்தியகாத்ம சைதன்னிய சாயையுடனே லோகாந்த குந்தம்போலிருக்கும அகங்காரமும் ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞானமயகோசமாம்" என்று கூறுவாருமுண்டு.

(ரு) ஆனந்தமயகோசம்.

அவித்தை (அஞ்ஞான) வடிவ காரணதேகமே ஆனந்தமய கோசமாம். ஆத்ம (பிரமத்தின்) சொரூபவடிவ ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தோடு கூடிய பிரியமோதப் பிரமோத விருத்திகளின் லயத்திற்கிடமாய், போக்தா வடிவமாயிருத்தல் இதன் தர்மமாம்.

சாக்கிர சொப்பனங்களில் புண்ணிய கன்மத்தின் பயனை அநுபவிக்க நோக்கவிடத்து, புததிவிருத்தி அந்தா (உள்) முக மாய் ஆத்மசொரூப (வடிவ)மாகிய ஆனந்தத்தின்பிரதிபிமபத்தை யடைகின்றது. அப்போது அப்புத்திவிருத்தி பிரிய மோதப் பிர மோத விருத்தியாம. புண்ணிய கன்ம பலபோகம நிவிர்த்தியா கும் காலத்திலுண்டாகுஞ் சுழுத்தி யெதுவோ அதன்கண் அவ் விருத்தி தனது காரணமான அஞ்ஞானத்தில் ஒடுங்குகின்றது; அவ்வஞ்ஞானமே ஆனந்தமயகோசமா மென்பது மேலே கூறிய தற்கு விவரமாம்.

இஷ்டமான வஸ்துவைப் பார்த்தவிடத் துண்டாகும் விரு த்தி பிரியமாம்; அவ்வஸ்துவின லாபத்தால் உண்டாகும் விருததி மோதமாம்; அவ்வஸ்துவின் போகத்தாலுண்டாகும விருத்தி பிர மோதமாம்.

அன்னமயகோசம் (ஸ்தூலசரீரம) சுகதுக்க வடிவ போகத் தை யனுபவிததற்கு இடம; (இந்திரிய காணுதிவடிவமா யிருதத லாமேல போகத்தை யனுபவித்தறகுச சாதனமாயுள்ள சூக்கும சரீரத்தின்கணுள்ள) பிராணமய கோசம கிரியா சக்தியுள்ள கா ரியவடிவம்; மனோமயகோசம் இச்சாசக்தியுள்ள கரண (காரண) வடிவம்; விஞ்ஞானமயகோசம் ஞானசக்தியுள்ள கர்த்தா (செய் பவன்) வடிவம்; ஆனந்தமயகோசம போக்தா (போகத்தை யனு பவிப்பவன்) வடிவமாம.

### கோசம்.

கோசமென்பது கத்தியினுறைக்கும், திரவியப் பொக்கிசத்திற்கும், கோசகாரமென்னும் புழுவின்கூட்டிற்கும் இவை போன்றவற்றிற்குமாம். கோசமெனினும் உறையெனினும் மூடியெனினுமொக்கும். உறை முதலானவை கத்தி முதலானவைகளை மறைத்திருத்தல்போன்று அன்னமயாதிகளும் ஆத்மாவை மறைத்திருத்தலினலே அவைகளும் கோசம் என்று சொல்லப்படுகின்றன. மறைத்தல் இருவகையாம். ஒன்றுயதார்த்தமாய் மறைத்தல்; மற்றொன்று கற்பிதமாய் மறைத்தல். புளியம்பழத்தை யதனது ஓடு மறைத்தல் முன்னதற்கு உதாரணமாம்; கயிற்றிற் றோன்றிய பாம்பு அதனையே மறைத்தல்பின்னதற்கு உதாரணமாம்.கயிற்றில் (அத்தியாசமாகத்) தோன்றிய பாம்பு அக்கயிற்றையே மறைத்தல்போன்று ஆத்மாவி (பிரமத்தி)ற் றோன்றிய அஞ்ஞானவடிவ ஆநந்தமய கோசமும் அதன் காரிய வடிவ ஏனையகோசமும் அவ்வாத்துமாவையே மறைக்கின்றன.

இங்ஙனம் மறைதலினுற்றான் வாதிகள் வேதாந்த வாக்கியங்களில் விசுவாசமில்லாது தத்தமக்குத் தோன்றியவாறு கூறிவாளாபோயினர். சரீரத்திரயங்களின் வேறு ஆத்மா என்றறிவதினுலும் அது பஞ்சகோசங்களினும் வேறுமென்னுஞானம் நன்குண்டாமென்க.

### ஆத்மா சரீரத்திரயத்தின் வேறு.

சி: சரீரத்திரயங்களின் வேறு ஆத்மா என்பதைக் கூறும்படி பிரார்த்திக்கின்றேன்.

கு: தோல், இரத்தம், மாமிசம், நரம்பு, எலும்பு, கொழுப்பு என்னும் இவைகளா லாக்கப்பட்டது ஸ்தூலதேகம். இது சொப்பனவத்தையில் விளங்குகிறதின்று; ஆனல் ஆன்மா விளங்குகின்றது. அந்தக்கரணம், ஞானேந்திரியம், பிராணுதிவாயுக்கள், கன்மேந்திரியம் இவைகளின் சமுதாயம் சூட்சுமசரீரமாம். இது சுழூத்தியவத்தையில் விளங்குகிறதின்று. ஆனல் சுகஸ்சொரூபமான ஆன்மா சுயம்பிரகாசவடிவத்தால் விளங்குகின்றது. சுழூத்தியில் சுகஞானமில்லாதிருக்கின் விழித்தபிறகு நான் சுகமாயுறங்கினே னென்னும் ஸ்மிருதி யுண்டாதல் கூடாது; உண்டாதலின் சுழூத்தியில் சுகத்தின் ஞானமிருக்கிறது. அந்தச் சுகம் சுழூத்தியில் விஷயத்தினுலுண்டானதன்று. ஆனல் அஃது ஆன்ம வடிவ

மேயாம். அவ்வான்மா ஸ்வயம்பிரகாசமாயிருத்தலால் சுகஸ்சொரூபமான ஆத்மா சுயம்பிரகாச சொரூபத்தால் விளங்குகின்றது.

ஆநந்தமயகோசமாகிய காரணதேகம் நிர்விகற்பசமாதியில் விளங்குகிறதின்று; ஆனால் ஆன்மா ஆவரணமி(மறைப்பி)ன்றி விளங்குகின்றது. இவ்வாறு சரீரத்திரயம பிறழுகின்றன; ஓர் அவஸ்தைவிட்டு மற்றோர் அவஸ்தையில் விளங்குகின்றதில்லை. சகல அவஸ்தைகளிலும் ஆன்மா உள்ளீடாயிருந்து விளங்குதலால் வியாபகமாம். இவ்விவேகத்தால் மூன்று சரீரங்களுக்கும் விலட்சணமா(வேறு)க ஆத்மா இருக்கிறதென்பது விளங்குமென்க.

ஆத்மா சரீரத்திரயத்தின் வேறு என்பதை மற்றொருவகையாகவும விளக்கிக் கூறுவாம:—

(1) ஸ்தூல சரீரத்தினும் ஆத்மா வேறு.

ஸ்தூலசரீரம் உற்பத்தியாதறகு முன்னும் நாசமடைந்ததன் பிறகும் ஆத்மா ஒன்றாயிருப்பதினால் ஆகாசம் கடத்தைக்காட்டிலும் வேறாயிருப்பது போனறு ஆத்மா ஸதூலசரீரத்தைக்காட்டிலும் வேறும்; ஆகவே வியபிசார (பிறழ்ச்சி) மினறியதாம். ஸ்தூலசரீரம கடபடம்போன்று உறபத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் இல்லாமையாலும் பலவாயிருத்தலாலும் ஆத்மாவைக் காட்டிலும் வேறும்; வியபிசாரமுடையதாம். அதிக காலத்திலும் அதிகதேசத்திலுமிருப்பது வியபிசாரமின்றிய தெனப்படும. எல்லாச்சரீரங்களிலுமுள்ள ஆத்மா ஏகமாயிருததலால் ஆகாசம்போன்று * வியாபகமாயிருக்கிறது. ஆதலால் அஃதெல்லா விடங்களிலுமிருக்கிறது. சரீரங்களி னுற்பத்திக்குமுன்னும் அவற்றின் மரணத்திற்குப் பின்னும் ஆத்மா விருத்தலின், அது முக்காலத்திலும் பொய்யென்று நிச்சயிக்கப் படாததாம்; ஆகவே சர்வகாலத்திலும் சர்வதேசத்திலு மிருப்பதென்பது சித்திக்கின்றது. சித்திக்கவே ஆத்மா வியபிசாரமின்றியதாம்.

சிறிது காலத்திலும் சிறிது தேசத்திலுமிருப்பது வியபிசாரியெனப்படும். கடபடம போன்று ஸதூல சரீரமும் உற்பத்தி நாசமுடையதாயிருத்தலின் சொற்ப காலத்திருப்பதாம்; கண்டமாயிருத்தலின சொற்ப விடத்திருப்பதாம். ஆகவே அது வியபிசார

* காலத்தாலும் தேசத்தாலும் அந்த (முடிவு) மில்லாதது வியாபகமெனப்படும்.

முடையதாம். ஆத்மாவும் ஸ்தூல சரீரமும் முறையே வியபிசார மின்றியதாயும் வியபிசார முடையதாயு மிருத்தலால் அவ்விரண் டும் தம்முள் வேறுபாடுடையனவா மென்க.

(2) சூக்ஷ்ம சரீரத்தினும் ஆத்மா வேறு.

நன்னுடம் பென்னும் சூக்குமசரீரம் மரணம், மூர்ச்சை, சுழுத்தி, பிரளயம், சமாதியென்னு மிவ்வவஸ்தைகளில் தன் காரணமாய அவிச்சையில் லயமாகின்றது; அதனால் வியபிசாரியாம். ஆத்மா சர்வகாலங்களிலும் பிரகாசித்துக் கொண்டிருத்தலால் வியபிசாரமின்றியதாம். இதனால் ஆத்மாவும் சூக்கும சரீரமும் தம் முள் வேறுபாடுடையனவா மென்க.

(3) காரண சரீரத்தினும் ஆத்மா வேறு.

அஞ்ஞான மென்னும் காரணசரீரம் நிர்விகற்ப சமாதியில் சொரூபத்தில் (கற்பிதமாக) லயமாய் விடுதலின் வியபிசாரியாம். ஆத்மா யாண்டும் சொப்பிரகாசமாக விளங்குதலின் வியபிசார மின்றியதாம். ஆகவே, ஆத்மாவும் காரணசரீரமும் தம்முள் வேறு பாடுடையனவா மென்க.

இங்ஙன மாராய்ந்தறிவதனால் நான் ஸ்தூல சரீரமல்லன்; ஸ்தூல சரீரம் என்னுடைய தன்று; ஆனால் பஞ்சமகா பூதங்களு டையது. நான் ஸ்தூல சரீரமில்லாதவனாயிருத்தலின் ஸ்தூல சரீ ரத்திற்குக் கூறும் பெயர், ஜாதி, ஆசிரமம், நிறம், ஆகார முதலிய தர்மங்கள் நானல்ல; அவைகளும் என்னுடைய வல்ல என்பதும், நான் சூக்கும சரீரமல்லன்; சூக்குமசரீரம் என்னுடைய தன்று; ஆனால் அஃது அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் காரியமாம். நான் சூக்குமசரீர மின்றியவனாயிருத்தலின், சூக்கும சரீரத்தின் ஒரு பகுதியாய அந்தக்கரணத்தின் தர்மங்களாய கர்த்ருத்துவாதி கள் நானல்ல; அவைகளும் எனதல்லவென்பதும், நான் அஞ்ஞான மாய காரணசரீரமல்லன்; அஃதென்னுடைய தன்று; காரணசரீ ரத்தின் தர்மங்களாய ஆவரணவிட்சேபங்களும் நானல்ல; அவை களும் எனதல்லவென்பதும் பெறப்பட்டவாறறிக.

சி: தேவரீ ரிங்ஙனங் கூறியதற்குரிய பிரமாணங்களை யறியு மாறு விரும்புகின்றனன்.

கு: கீழ் வருவனவே.

ஸர்வஸாரோபநிஷத்.

கொஹொவா ஏகூ-வஹிக வவ |
கூதாகொஹ ஐகூ-வஹய-ஓெக ||

(இ-ள்.) கோசங்களாகிற உபாதிகளோடு கூடியிருக்கிற ஆத்மா கோசமென்று உபசாரமாய்ச் சொல்லப்படுகிறது.

வராகோபநிஷத்.

𑌅𑌹𑌿𑌨𑌿𑌰𑍍𑌲𑍍𑌵𑌯𑌨𑍀 𑌸𑌰𑍍𑌪𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍋 𑌜𑍀𑌵𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 | 𑌵𑌲𑍍𑌮𑍀𑌕𑍇 𑌪𑌤𑌿𑌤𑌸𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌪𑍋 𑌨𑌾𑌭𑌿𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 | 𑌏𑌵𑌂 𑌸𑍍𑌥𑍂𑌲𑌂 𑌚 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌚 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌨𑌾𑌭𑌿𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 | 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌶𑌿𑌖𑌿𑌧𑍍𑌵𑌸𑍍𑌤𑍇 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌸𑌹𑍇𑌤𑍁𑌕𑍇 | 𑌨𑍇𑌤𑌿 𑌨𑍇𑌤𑌿 𑌰𑍂𑌪𑌤𑍍𑌵𑌾𑌦𑌶𑌰𑍀𑌰𑍋 𑌭𑌵𑌤𑍍𑌯𑌯𑌮𑍍 ||

(இ-ள்.) பாம்பினால் நீக்கப்பட்டதும உயிரற்றதுமான பாம்புச் சட்டையானது புற்றிலிருக்கையில பாமபானது அதிலபிமானத்தை யெப்படி பாராட்டுகிறதில்லையோ அப்படியே (ஞானி)ஸ்தூலதேகத்தையும் சூட்சுமதேகத்தையும மதிககிறதில்லை. மிதியாஞானமானது(ஜகத் சத்தியமென்னும விபரீத ஞானமானது) அகங்காரணத்துடன் (ஸமூலமாய்) ஆத்ம ஞானமாகிற அக்கினியினால் நாசமடைந்தால் நேதி நேதி (ஈதலல, ஈதல்ல) எனகிற நிஷேதரூபத்தினால் இநத ஞானியானவன் சரீரமற்றவனாகிறான்.

மைத்ராயணியுபநிஷத்.

𑌅𑌯𑌂 𑌵𑌾𑌵 𑌖𑌲𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌤𑍇 𑌕𑌤𑌮𑍋 𑌭𑌗𑌵𑌨𑍍𑌨𑌿𑌤𑌿 𑌤𑌂 𑌹𑍋𑌵𑌾𑌚𑍇𑌤𑌿 | 𑌅𑌥 𑌯 𑌏𑌷𑍋𑌚𑍍𑌛𑍍𑌵𑌾𑌸𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌮𑍍𑌭𑌨𑍇𑌨𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍁𑌤𑍍𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍋 𑌵𑍍𑌯𑌯𑌮𑌾𑌨𑍋𑌽𑌵𑍍𑌯𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑌮𑌃 𑌪𑍍𑌰𑌣𑍁𑌦𑌤𑍍𑌯𑍇𑌷 𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑌾𑌹 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌮𑍈𑌤𑍍𑌰𑍇𑌯𑌃 | 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌹𑍍𑌯𑌾𑌹 | 𑌅𑌥 𑌯 𑌏𑌷 𑌸𑌂𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍋𑌽𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌾𑌤𑍍𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑌾𑌯 𑌪𑌰𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍁𑌪𑌸𑌂𑌪𑌦𑍍𑌯 𑌸𑍍𑌵𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌭𑌿𑌨𑌿𑌷𑍍𑌪𑌦𑍍𑌯𑌤 𑌏𑌷 𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌹𑍋𑌵𑌾𑌚𑍈𑌤𑌦𑌮𑍃𑌤𑌮𑌭𑌯𑌮𑍇𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 ||

(இ-ள்.) ஓ! பகவானே! அந்த ஆத்மா எவன்? எப்படிப்பட்டவன்? (தேகேந்திரிய மனோபுத்தி பிராணன் என்னும இவைகளுக்குள் ஒருவனா, அல்லது இவைகளுக்கு விலக்ஷணனா?) என்று கேட்டார். அதற்கு அவர் (சாகாயனனியா) சொல்லுகிறார். (முன்னர் ஜாக்கிராவஸ்தையில் ஸ்தூலதேகத்தினிடத்தில் நான் என்னுடைய தென்னும் அகங்கார மமகாரக் கூட்டத்தை யநுபவிக்கிறவனே உன்னுடைய ஆத்மாவென்று சொல்லப்பட்டது. அதனால் ஆத்மாவானவன் ஸ்தூலசரீரத்திற்கு அந்நியனே

ன்று சொல்லப்பட்டதாக வாயிற்று. இப்போது பிராணன் அந்தக்கரணம் முதலிய கூட்டம் ஆத்மாவோ வென்கிற சந்தேகத்தை நிவிர்த்தி செய்வதினாலே அவைகளுக்கு அந்நியமாயிருக்கிற ஆத்மா உபதேசிக்கப்படுகிறது.) பின்பு (ஜாக்கிராவஸ்தைக்குப் பிறகு) பிராணவாயுவின் சஞ்சாரத்திற்குத் தடையன்றி மேலேபோய் (சுவப்னவஸ்தையின்பொருட்டுச் சூட்சுமதேகத்தில்பிரவேசித்து) நானாவித அந்தக்கரண விகாரங்களை யநுபவிக்கிறவன்போல் காணப்பட்டாலும் (வாஸ்தவத்தில்) அநுபவிக்காதவனாய் மோகத்தை ஏவிக்கொண்டிருக்கிறவனெவனோ அவன் தான் ஆத்மாவென்று பகவானான மைத்திரேயர் சொன்னார். (என்று சாகாயன்னியர் இராஜாவுக்குச் சொல்லுகிறார்.) பின்பு (சுவப்னவஸ்தைக்குப் பிறகு) இந்தச் சரீரத்தைவிட்டுக் கிளம்பி (சூட்சும சரீரத்தைவிட்டுக் கிளம்பிக் காரண சரீரத்தில் பிரவேசித்து) பரஞ்சோதியை யடைந்து தன் சுவஸ்வரூபத்தோடு இருக்கிறவனெவனோ அவன் றானாத்மா (ஸ்தூல சூட்சுமதேகத்தைச் சேர்ந்த சகல காரணவாசனைகளின்றி உத்தமமான ஜோதிரூபத்தில் லயித்து உவமையற்ற தன் சுவஸ்வரூபத்தோடு சுஷுப்தி யவஸ்தையிலுள்ளவன்றான் ஆத்மா). இது தான் அமிருதம், இதுதான் பயமற்றது. இதுதான் பிர்ம்மம்.

ப்ரம்மோபநிஷத்.

சுயாவஸ்) வா-ா-ஷவஸ்) வகோர்ியூா நா நிலவம்தி | நாவிவ-ரூரயம் கண்டம் ஊலய-ரவெதி | தத்ர வசு-ஷாதம் ப்ரஹ்ம விலாதி| ஜாமரிதெ ப்ரஹ்மா ஸவெப்நெ விஷ்ணு:| ஸு-ஷு-வெள ரு-த்ரஸ்-ரீய ஊக்ஷரஊாதிதெ்யா விஷ்ணுெஶ்வரஸ ||

(இ - ள்.) இனி யிப்புருடனுக்கு நான்கு ஸ்தானங்கள் உள்ளனவாம். அவை, நாபி, இருதயம், கண்டம், உச்சியாம். அங்கு நான்கு பாதமுள்ள பிர்ம்மம் விளங்குகின்றது. ஜாக்கிரத்தில் ப்ரம்மா, சொப்பனத்தில் விஷ்ணு, சுழுத்தியில் ருத்திரன், துரியமானது அக்ஷரம்; ஆதித்தியன் விஷ்ணு ஈசுவரனுமாம்.

விவேக சூடாமணி.

விரிவுறு பஞ்ச கோச விலக்ஷணவுருவ மாகிக்
கருதிய வவத்தை மூன்றின் கரியதாய் நிருவி கார
நிருமல போதா னந்த நிலைமையா மிவ்வான் மாவை
யரியனே விவேகி யானோ னகமென வறிய வேண்டும்.

பதிபசுபாச விளக்கம்.

அன்னமய முதலாக வானந்த மயமீறாய்ப்
பின்னநிலை யிவைகடந்த பேரின்ப சாகரத்து
ளின்னபடி யென்றறியா திருந்தசிவ யோகிக்குச்
சொன்னமக னுமபுவியுந் துரும்பாகத் தோற்றுமால்.

ஆசிலன்ன மயகோசந் தாண்டி யப்பா லழியாத பிராணமய கோசந் தாண்டி, மாசின்மனோ மயகோசந் தாண்டி யென்று மாறாவிஞ் ஞானமய கோசந் தாண்டி, நாசமுறு மானந்த கோசந் தாண்டி ஞானவடி வாய்நின்ற குரவ னினைக், கோசமெலா மற்ற சிவகோசி யாகிக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட் டேனே.

சிவஞானப் பிரகாசவெண்பா.

ஆக்கையு நீயல்ல வைம்பொறியு நீயல்ல
தாக்கு கரணங்க டானல்ல—சூக்க
வுடலல்ல சீவனல்ல வுண்மைநீ யென்றாக்
குடனுருகி நிற்பே னுவந்து.

சசிவர்ணபோதம்.

அறிகின்ற பொருளொன்று மறிவானில் வேறே
யானிவ் வூனாக நானென்ன லாமோ
செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வகையே
செடமான வுடனின்னில் வேறென்று தெளியே.

நிலமாகும வர்க்கென்ற னெகிழ்கின்ற நீரா
நெருப்பா மிதிற்சுட்ட வெல்லாமு மநிலஞ்
சலமான புரையான வானிந்த வுடலஞ்
சடமான வைம்பூத வுருவங்க டாமே.

விழிமைப்பு மானென்னில் ரவியாதி யாலே
விளங்கின்ற தல்லால் விளங்காமை யாலே
யொழியப்ப டுங்கன்ன முகனனு முன்ற
னுருக்கண்ட கண்டன்னை யொப்பாக வுன்னே.

அழலுண்பொருள் களிலுண்பவை முக்கூறதின் முதற்கூ
றணியென்பு நடுக்கூறது மச்சைக் கணியாகு
மெழில்கொண்ட கடைக்கூறது வாக்கா யெழுமென்றே
யிபனுன்மறை யந்தங்க ளிசைக்கின்றன தாமே.

உன்னும்புனன் முக்கூறதின் முதற்கூறுவர் நீரா
முதிரம்நடு விற்கூறு கடைக்கூறு பிராண
னெண்ணுமிதி லிருகூறவை நீயாயிடி னன்றோ
விறுகின்ற பிராணன்னது நீயாகுவை யிசையே.

பிராணனு மல்லதுஞ்சி லுணர் வின்மை யாலஃ துணரும் புலன்க ளொழிவாற்,பிராணனெ தென்னின் மன்னே யொழியாது சேனை நகர்சூழ் வலஞ்செய் பொழுதே.

கரணமொ டிங்கவாயு நிகழ்வென் கோ லென்னி லுடல்காவ லாகு டலிதன், மரண மடைந்ததென்று தமர்சுட்டி டாமுன் மலைவாலின் ஞாளி கொளுமே.

இனமுற வெண்ணவுள்ள கரணத்தி லொன்று தெனலாமி தென்ன தெனலோன், மனமுன மன்மையென்ற வதனாலு மல்ல மதியல்ல வந்த வகையே.

இடரின் புளகாய் மிலியற் றுயிலற் றெண்ணுங்கர ணங்க ளிலா யெவரு, மடருஞ்சிற விக்கடி யென்றுணரு மகங்காரமு நீயல வென்றறியே.

ஐயப்படலோர் பொருளைச் சயமா யுமியப்படல் யானெனை தென்றுமதன், செய்யப்படல் செய்வது சிந்தனையாஞ் சித்தமது வன்றென நிதெளியே.

முன்னுக வுடம்பது சித்தமதே முடிவாக மொழிந்த பொரு ட்டிரடா, னின்னுகில நீயுமி யும்பொருளாய நிகழ்கின்றத னுலென நின்மலனே.

உன்னுலறி யப்படுயாவையு நின் னுருவன்றென வோதினை யொக்குமெனச், கென்னுலறியா தொழியும் பொருளோ யானுரு வ தென்றன னென்றனுமே.

அறியாப்பொருள் காரண மாயைகுறித் தறியும்பொருள் காரிய மாமுலகிங், கெறியாத்திகழ் நான்மறை யந்தமெலா நீயன் றென வோது நிரந்தரமே.

அறியும் பொருளன் றறியாப் பொருளன் றறிவாகிய நீயெனு மப்பொருடான்,பொறியின் வழியின் றறியும் பொருளோ போதக் கண்விழித் தறியும்பொருளே.

அவிரோத வுந்தியார்.

ஒயுமறனுந்த காதைத் துருத்துவெந்
தீபட லானுமிங் குந்திபற
தேகமீ தானல்லே யுந்தீபற.

உணர்வின்றி நாளு முறக்கத் தடைந்த
மனாதிக ராதானு முந்தீபற
வாயுவு நீயல்லை யுந்தீபற.
ஒன்றுணர் போழ்தொன் றுணராமை யானும்வே
றொன்றுணர்ந் தோதலா னுந்தீபற
உணர்விந்தி யங்களன் றுந்தீபற.
ஏனை வுமற்கு மியானென்ன தென்றறி
யான மிருத்தலா னுந்தீபற
வாக்குநீ யானல்லை யுந்தீபற.
ஆங்கார நிச்சயித் தப்புத்தி பற்றலா
னைங்குள னன்பன முந்தீபற
ஒன்றுநீ யன்றிவற் றுந்தீபற.
அறிவா னினைவு மடங்கலாற் சித்த
மறிவன் றசித்தாமென் றுந்தீபற
அறிவன் னுருவமென் றுந்தீபற.

தாயுமான சுவாமிகள்.

பாராதி பூதநீ யல்லை—உன்னிப், பாரிந்திரியங் கரணநீ யல்லை, யாராயுணர்வுநீ யென்றான்—ஐய, னன்பா யுரைத்தசொல் லானந்தந்தோழி.

கைவல்ய நவநீதம்.

அரவன்று கயிறென் றாற்போ லானன்று தறியென் றாற்போற்
குரவன்சொல் லுபதே சத்தாற் கூறுநா லொளியைக் கொண்டு
புரமன்று புவன மன்று பூதங்க ளன்று ஞானத்
திரமென்னும் பிரம மென்று தெளிந்திடப் பவா தங்காண்.

ஆத்மா அவஸ்தாத்திரயசாக்ஷி.

சி: ஆத்மா அவஸ்தாத்திரய சாக்ஷியென்ப தெங்ஙனம்?

(1) சாக்கிரம்.

கு: சொப்பனாவஸ்தை சுழுத்தியவஸ்தைகளுக்கு விலக்ஷணமாய் இந்திரியங்களாற் றோன்றும் ஞானத்திற்கும் அதன் வாசனைக்கும் ஆதாரமாயிருக்குங் காலம் சாக்கிராவஸ்தையாம், இதில் ஞானேந்திரிய பஞ்சகம், கன்மேந்திரிய பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயம் என்னுங் கரணங்கள் (14), அவற்றின் விஷயங்கள் (14), அவற்றின் அதிதேவதை (14) ஆகிய 42-தத்துவங்களாலும் விவகாரமுண்டாகும். கரணங்களை அத்தியான்மமெ

ன்றும், விஷயங்களை அதிபூதமென்றும் கரணங்களை யியக்குந் தேவதைகளை அதிதேவதைக ளென்றும் கூறுவர்.

ஜாக்கிராவஸ்தையில் சிதாபாச வடிவ ஜீவனுக்கு (1) நேத்திரம்-ஸ்தானம்; (ஜாக்கிராவஸ்தையில் ஜீவன்சரீரமுழுமையும் வியாபித்திருந்தாலும் அதன் விசேஷ பாகம் நேத்திரத்திலிருப்பதால் நேத்திரம் ஸ்தானமெனப்பட்டது) (2) வைகரி-வாக்கு; (3)ஸ்தூலம்-போகம்; (4) கிரியை-சத்தி; (5) குணம்-சத்துவம்; (6) ஜாக்கிராபிமானத்தால் விசுவன் என்பதும் வியவகாரிக சீவன் என்பதும் பெயர்; (7) அகரம்-எழுத்து; (8) தெய்வம் - விஷ்ணுவாம். சாக்கிராவஸ்தையில் சீவன் சூட்சுமதேகத்தின் அபிமானத்தை விடாது விசுவ வடிவ (உலகவடிவ) ஸ்தூலதேகத்தில் நானென்னும் அபிமானத்தை யுடைத்தாயிருத்தலாலே விசுவனென்றும், அத்தியான்மம் அதிபூதம் அதிதெய்வம் என்னும் தத்துவங்க ளெல்லாவற்றோடுங்கூடி விவகரித்தலாலே வியாவகாரிக ஜீவனென்றும் சொல்லப்படுகிறான். இப்பெயர்களை யன்றித் தூலசரீர வியஷ்டி யபிமானி, புத்திப்பிரதி பலன சைதன்னியன், விட்சோபரூபன், க்ஷேத்திரஞ்ஞன், சரீரி, பிரமாத்துரு, கர்த்துரு, போக்துரு, சம்சாரி, விஷயி, கிஞ்சிஞ்ஞானமயன், துவம்பத முக்கியார்த்தன் என்றற் றொடக்கத்தனவாய பெயர்களு முண்டு.

(2) சொப்பனம்.

ஜாக்கிராவஸ்தையில் எப்பதார்த்தங்க ளநுபவிக்கப்படுகின்றனவோ அப்பதார்த்தங்களின் சம்ஸ்காரம் (வாசனை) மயிரினுனிப் பாகம் போன்று சூட்சுமமாய்க் கண்டத்திலுள்ள ஹிதை யென்னும் நாடியிற்றங்குகின்றது. அச்சம்ஸ்காரத்தினால் சப்தாதி பஞ்ச விஷயங்களும் அவற்றின் ஞானமும் முன்பின் தொடர்பின்றி யுண்டாகுங்காலம் சொப்பனவஸ்தையாம்.

சொப்பனவஸ்தையில் சீவனுக்கு (1) கண்டம் - ஸ்தானம்; (2) மத்திமை - வாக்கு; (3) சூட்சுமம் (வாசனைமயம்) போகம்; (4) ஞானம் - சத்தி; (5) குணம் - இராசதம்; (6) சொப்பனாபிமானத்தால் தைசதன் என்பதும் பிராதிபாசிக சீவன் என்பதும் சொப்பன கற்பிதனென்பதும் பெயர்; (7) உகரம் - எழுத்து; (8) தெய்வம் - பிரமனும். சொப்பனவஸ்தையில் சீவன் சோமசூரியாக்கினிகளின் சகாயமின்றித் தானே சோமசூரியாக்கினி வடிவமாக நின்று தன்னிற்றோன்றிய பிறவற்றை யெல்லாம் விளக்க

லாலே தைசதன் (தேஜஸ் வடிவாயிருப்பவன்) என்றும், தத்துவஞான மின்றியே பொய்யென்று நிச்சயிக்கத்தக்கவனாயிருத்தலாலே பிராதிபாசிக ஜீவனென்றும், ஜாக்கிர வாசனையினாலே சொப்பனத்திற் கயிற்றின்கணரவுபோலக் கற்பிதமாய்த் தோற்றலாலே சொப்பன கற்பிதனென்றும் சொல்லப்படுகிறான். இப்பெயர்களை யன்றிச் சூட்சுமசரீர வியஷ்டி யபிமானி என்றற் றொடக்கத்தனவாய பெயர்களு முண்டு.

### (3) சுழுத்தி.

கேவல சுகமும் அஞ்ஞானமு முள்ளகாலம் சுழுத்தியவஸ்தையாம். சுழுத்தியவஸ்தையில் ஜீவனுக்கு (1) இருதயம்-ஸ்தானம்; (2) பைசந்தி - வாக்கு; (3) ஆநந்தம் - போகம்; (4) திரவியம் - சத்தி; (5) குணம் - தமசு; (6) சுழுத்தி யபிமானத்தால் பிராஞ்ஞனென்பதும் பாரமார்த்திக ஜீவனென்பதும் பெயர்; (7) மகாரம் - எழுத்து; (8) தெய்வம் - உருத்திரனாம். சுழுத்தி யவஸ்தையில் ஜீவன் தனதெதார்த்த வடிவை கூடலதலை யடைக்கமாய்ச் சுகாகாரமாயிருப்பதுடன் ஆவரணமுள்ள அஞ்ஞானத்தையும் அறிந்துகொண்டிருப்பதினாலே பிராஞ்ஞன் (நன்றாயறிபவன்) என்றும், அவித்தியோபாதியுடன் யதார்த்த வடிவமாக விருத்தலாலே பாரமார்த்திக ஜீவன் (உண்மையாயுள்ள ஆத்மா) என்றும் சொல்லப்படுகிறான். இப்பெயர்களை யன்றிக் காரண சரீர வியஷ்டி யபிமானி, அவித்தியோபாதிகன், காரியோபாதிகன் என்றற் றொடக்கத்தனவாய பெயர்களு முண்டு.

(1) ஆத்மா ஜாக்கிராவஸ்தை யுண்டாதலையு மறிகின்றது; அதனின்மையையும் சொப்பன சுழுத்திகளில் அறிகின்றது. ஆதலால் ஜாக்கிராவஸ்தை யாத்மாவன்று; அதனுடையதுமன்று; இது (ஜாக்கிராவஸ்தை) ஸ்தூலதேகத்தினதாம்: ஆகவே இதை யறியும் ஆத்மா கடசாட்சியைப்போல இதனினும் வேறாயிருக்கின்றதென்பது சித்திக்கிறது. சித்திக்கவே, ஆத்மா ஜாக்கிராவஸ்தைக்குச் சாட்சியாமென்பது பெறப்பட்டது.

(2) ஆத்மா சொப்பனாவஸ்தை யுண்டாதலையும் அறிகிறது; அதனின்மையையும் ஜாக்கிரசுழுத்திகளில் அறிகிறது. ஆகையால் சொப்பனாவஸ்தை ஆத்மாவன்று; அதனுடையதுமன்று; இது (சொப்பனாவஸ்தை) சூட்சுமதேகத்தினதாம். இச்சொப்பனாவஸ்தையை அறியும ஆத்மா கடசாட்சியைப்போலே இவ்வவஸ்தை

யினும் வேறாயிருத்தலால் சொப்பனாவஸ்தைக்குச் சாட்சியா மென்பது சித்திக்கின்றது.

(3) ஆத்மா சுழுத்தியவஸ்தை யுண்டாதலையு மறிகிறது; அதனின்மையையும் ஜாக்கிரசொப்பனங்களில் அறிகிறது. ஆகையால் சுழுத்தியவஸ்தை யான்மாவன்று, அதனுடையதுமன்று. இது (சுழுத்தியவஸ்தை) காரணதேகத்தினதாம். இச்சுழுத்தியவஸ்தையையறியும் ஆத்மா கடசாட்சியைப்போலே இதைக்காட்டிலும் வேறாயிருத்தலால் சுழுத்தியவஸ்தைக்குச் சாட்சியாமென்பது அறியப்படுகிறது.

சகல திரிபுடிகளை (காண்பான் காட்சி காணப்படும்பொருள்களை)யும் சம்பந்தமின்றிக் காண்பது சாட்சியெனப்படும். ஆத்மாவானது அவத்தாத்திரயங்களின் தபருள்மாறிமாறிவரினுந் தான் மாறுதொருபடித்தாயிருந்து சம்பந்தமின்றி யவஸ்தைகள் மூன்றினையுமறிந்துகொண்டிருப்பதால் ஆத்மா அவஸ்தாத்திரயசாட்சியாமென்பது சிதையாத சித்தாந்தமாயிற்றென்க.

சி: இதுபற்றிக்கூறும் பிரமாணங்களை யெடுத்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ்வருவனவே.

ஸர்வஸாரோபநிஷத்.

ஜாத்ரு ஜ்ஞாந ஜ்ஞேயாநாமாவிர்பாவ திரோபாவ ஜ்ஞாதா ஸ்வயம் | தமாவிர்பாவ திரோபாவ ரஹிதஃ ஸ்வயம் ஜ்யோதி ஸ்ஸாக்ஷீ ||

(இ - ள்.) காண்பான் காட்சி காணப்படு பொருளென்னும் திரிபுடிகளின் ஆவிர்ப்பாவ (தோன்றல்) திரோபாவங் (மறைதல்) களை யறிகிறவனும் தனக்கு ஆவிர்ப்பாவ திரோபாவங்கள் இல்லாதவனும் சுவப்ரகாச முள்ளவனுமி யிருக்கிற சேதனனே சாக்ஷியெனப்படுகிறான்.

ஏவம் ஸர்வேஷாம் தேஹாநாம் யாநி கர்மாணி |
ப்ரவர்த்தந்தே தேஷாம் ஸாக்ஷ்யேவ ||
ஸ்வப்நே ஸுஷுப்தௌ ஜாக்ரதி ஸ்தித்யாம் ...
...

நாஹம் கர்த்தா நைவ போக்தா ப்ரக்ருதேஸ் ஸாக்ஷிரூபகஃ |
ஸாந்நித்யாத் ப்ரவர்த்தேதே தேஹாத்யா அஜடா இவ ||

[illegible] |
[illegible] ந ஸம்ஶய:||

(இ-ள்) நான் தேகமுமல்ல, இந்திரியங்களுமல்ல, புத்தியுமல்ல, மனமுமல்ல, சீசனுமல்ல. அப்படியே அகங்காரமுமல்ல பிராணனையுடையவனுமல்ல, மனதையுடையவனுமல்ல. ஒளிபொருந்தியவன். நான் புத்திமுதலியவைகளுக்கு எப்போதும் சாக்ஷியாயிருக்கிறவன். நான் எக்காலத்திலும் நாசமில்லாதவன். சித்தாகவேயிருக்கிறவன். எப்போதும் மங்களகரமானவன். நான் கர்த்தாவுமல்ல, போக்தாவுமல்ல, பிரகிருதிக்கு சாக்ஷிசுவரூபமாகவேயிருக்கிறவன். என் சந்நிதிமாத்திரத்திலே தேகாதிகள் ஜடமல்லாதவைபோல் காரியங்களை நடத்துகின்றன. நான் ஸ்திரமாயும் நித்தியமாயும் எப்போதும் ஆனந்தமாயும் சுத்தமாயும் ஞானசுவரூபியாயும் அழுக்கற்றவனுமாயிருக்கிறவன். நான் சர்வபூதங்களுக்கும் ஆத்மா, எங்கும் பரவியிருக்கிறவன், சாக்ஷியாயிருக்கிறவன். (இவற்றில்) சந்தேகமில்லை.

கைவல்லியோபநிஷத்.

த்ரிஷு தாமஸு யத்போக்யம் போக்தா போகஶ்ச யத்பவேத் |
தேப்யோ விலக்ஷண: ஸாக்ஷீ சின்மாத்ரோஹம் ஸதாஶிவ:||

(இ-ள்.) மூன்று ஸ்தானங்களிலேயும் (ஸ்தூல சூக்ஷ்ம காரண தேகங்களிலேயும்) புசிக்கத்தக்கது புசிக்கிறவன் போகமென்பது யாதுயாதுண்டோ அதைக்காட்டிலும் அந்நியனும் சாக்ஷியாயும் சின்மாத்திரமாயுமிருக்கிற சதாசிவன் நான்தான்.

வராகோபநிஷத்.

ஸர்வஸாக்ஷிணமாத்மானம் வர்ணாஶ்ரமவிவர்ஜிதம் |
ப்ரஹ்மரூபதயா பஶ்யன் ப்ரஹ்மைவ பவதி ஸ்வயம் ||

(இ-ள்.) சர்வசாக்ஷியாயும் வருணாசிரமமற்றதாயு மிருக்கிற ஆத்மாவைப் பிரம்மசொரூபமாகவே பார்க்கிறவன் பிரம்மமேயாகிறான்.

த்ரயாணாம் ஸாக்ஷிணம் ஸத்யஜ்ஞானானந்தாதிலக்ஷணம் |
த்வமஹம்ஶப்தலக்ஷ்யார்த்தமஸக்தம் ஸர்வதோஷத:||

(இ-ள்.) மூன்று (ஜாக்கிர சுவப்பன சுஷுப்தி) அவஸ்தைகளுக்குச் சாக்ஷியாயும், சத்தியஞானாநந்த லக்ஷணமுடையதாயும், நீ நான் என்னும் பதங்களுக்கு லக்ஷியார்த்தமாயுஞ் சர்வ தோஷரகிதமாயு மிருப்பது (பிரம்மம்).

ஆன்மா சச்சிதாநந்தசொரூபம்.

சி: ஆத்மா சச்சிதாநந்தவடிவமென்று கூறினமையின் சத்து முதலியவற்றின் றன்மையை யறிய விரும்புகின்றனன்.

சத்து.

கு: முக்காலத்திலும் பொய்யென்று நிச்சயிக்கப்படாதது சத்தெனப்படும்.

சித்து.

முக்காலத்தும் எல்லாவற்றையும் அறிவதாயும் அறியப்பட்டவற்று லறியப்படாததாயு மிருப்பது சித்தெனப்படும்.

ஆநந்தம்.

முக்காலத்தும் மிகுந்தபிரியத்திற்கு விஷயமாயிருப்பது ஆநந்தமெனப்படும்.

குளிர்ச்சி நெகிழ்ச்சி வெண்மைவடிவம் ஜலம் என்றுரைப்பதினாலும்,பிரகாச உஷ்ண லோகித (சிகப்பு) வடிவம் அக்கினியென்றுரைப்பதினாலும் ஜலமும் அக்கினியும் மும்மூன்று கூறுடைய பொருள்களாகாமல் எங்ஙனம் ஒவ்வொரு பொருள்களாகவே யிருக்கின்றனவோ அங்ஙனமே சச்சிதாநந்த வடிவம் பிரமமென்றுரைப்பதினாலே பிரமம் மூன்றுகூறுடைய பொருளாகாது ஒரே பொருளாயிருக்கிற தென்றறிதல்வேண்டும்.

சி: சச்சிதாநந்தங்களின் ஒருமையை விவரித்துரைக்கும்படி வேண்டுகின்றனன்.

கு: சத்தே சித்தாயிருக்கிறது, சத்திற்குச் சித்து வேறுபட்டதென்று லப்போதஃதசத்தாகும். சித்து பரிக்கோடுபோன்று அசத்தாமாயின் அஃதெங்ஙனம்சாக்ஷியாம்.ஆதலால்சத்தேசித்தாகும். எங்ஙனம் சத்தேசித்தாயிருக்கிறதோ அங்ஙனமே சித்தே சத்தாயிருக்கிறது. சித்திற்கு சத்துவேறுயின் அப்போதது * ஜடமாம். ஜடத்திற்குக் கயிற்றரவுபோன்று இருப்பின்றுகலின் சித்தே சத்தாகும். சத்தும் சித்துமே ஆநந்தமாம். ஆநந்தம் சத்துக்கும் சித்துக்கும் வேறுயின் அப்போது அஃது அசத்து ஜடமாம். அசத்து ஜடங்களாற் சுகானுபவ முண்டாகாமையின் சத்தும் சித்துமே ஆநந்தமாம். இங்ஙனம் சச்சிதாநந்தங்கள் பரஸ்பரம்

* தன்னையும் பிறவற்றையும் அறியாமலிருக்கும் பதார்த்தம் ஜடமெனப்படும்.

பின்னமாகாதிருத்தலின் ஆன்மா சச்சிதாநந்தவடிவ மென்பது இனிது விளங்கும். எஞ்ஞான்றும் நிவிர்த்தியின்மைபற்றிச் சத்தென்றும், ஜடத்திற்குவேறுய்ப் பிரகாசவடிவமா யிருத்தல்பற்றிச் சித்தென்றும், துக்கத்திற்கு வேறுய் முக்கியப் பிரீதிக்குவிஷயமா யிருத்தலின் ஆநந்தமென்றும் ஆன்மா சொல்லப்படுகின்றது. இங்ஙனம் ஒவ்வோர் நிமித்தம்பற்றி விதிமுகமாகவும் மறைமுகமாகவும் ஆன்மாவிற்குப் பலவிசேஷணங்கள் கூறுதலுமுண்டு.

"இந்தச் சொரூபத்தினுடைய வர்ணநீய நாமங்கள் பிரபஞ்சத்தைக்குறித்து வந்ததேயல்லாமல்வேறல்ல. எப்படியேனில், அசத்தைக்குறித்துச் சத்தென்றும, சடத்தைக்குறித்துச் சித்தென்றும், துக்கத்தைக்குறித்து ஆநந்தமென்றும், சகுணத்தைக்குறித்து நிர்க்குணமென்றும, ஆவரணத்தைக்குறித்து நிராவரணமென்றும், சாகாரத்தைக்குறித்து நிராகாரமென்றும், விஷயாநந்தத்தைக்குறித்து நிர்விஷயாநந்தமென்றும், பேதத்தைக்குறித்து அபேதமென்றும், பரோக்ஷத்தைக்குறித்துஅபரோக்ஷமென்றும், துவிதத்தைக்குறித்து அத்துவிதமென்றும்,விகாரத்தைக்குறித்து நிர்விகாரமென்றும், ஆலம்பத்தைக்குறித்து நிராலம்பமென்றும், சங்கத்தைக்குறித்து நிர்ச்சங்கமென்றும், அப்பிரகாசத்தைக்குறித்துப் பிரகாசமென்றும், கண்டத்தைக்குறித்து அகண்டமென்றும், நாமத்தைக்குறித்து நிர்நாமமென்றும், சூனியத்தைக்குறித்துப் பூரணமென்றும், வாச்சியத்தைக்குறித்துஅநிர்வாச்சியமென்றும், சத்தத்தைக்குறிதது நிர்ச்சத்தமென்றும், அஞ்ஞானத்தைக்குறித்து நிரஞ்சனமென்றும், வேத்தியத்தைக்குறித்து நிர்வேத்தியமென்றும், சலனத்தைக்குறித்து நிர்ச்சலனமென்றும், மிர்தத்தைக்குறித்து அமிர்தமென்றும், ஆதியந்தசகிதத்தைக்குறித்து ஆதியந்தரகிதமென்றும், பிரபஞ்சத்தைக்குறித்து நிஷ்ப்பிரபஞ்சமென்றும; சித்தநிரோதத்தைக்குறித்து யோகமென்றும், லட்சியத்தைக்குறித்து நிர்லட்சியமென்றும் பெயர்களாம். பின்னும் சர்வம் பிரமமென்றும் சர்வம் சூனியமென்றும் இவைமுதலான தன் சொரூபத்தினுடைய வர்ணநீயநாமங்கள் பிரபஞ்சத்தைக்குறித்து அத்தியாசயாய்த் தோற்றினவேயல்லாமல் சுதாவாக இந்த நாமங்கள் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்த மித்தியாபுருஷன் போலவே காலத்திரயத்திலும் தனக்கில்லை" என்று சத்தப்பிரகாணங் கூறுவதுமிங் கறியத்தக்கதாம்.

### ஆன்மாவின் * விசேஷணம்.

சி: ஆன்மாவிற்கு விதிமுகமாகவும் மறைமுகமாகவும் கூறும் விசேஷணங்களை விளக்கமாக அறியுமாறு விரும்புகின்றேன்.

கு: உடம்பாட்டுவாயிலாகக்கூறும் விசேஷணம் விதிமுகவிசேஷணமென்றும் எதிர்மறைவாயிலாகக் கூறும் விசேஷணம் மறைமுகவிசேஷணமென்றும் சொல்லப்படும்.

நித்தியம், பூரணம், ஏகம், பரமார்த்தம், பரப்பிரமம், நிதானம், சாதகம், சத்தியம், கேவலம், துரியம், சமம், திருக்கு, கூடஸ்தன், சாட்சி, போதம், சுத்தம். இலக்கியம், சனாதனம், சிவம், தத்துவம், விண், சோதி, ஆன்மா, முத்தம், விபு, சூக்குமம் என்றற்றொடக்கத்தவை விதிமுக விசேஷணங்களாம்.

அசலம், நிரஞ்சனம், அமிர்தம், அப்பிரமேயம், விமலம், வசனாதிதம், அசடம், அநாமயம், அசங்கம், அதுலம், நிரந்தரம், அகோசரம், அகண்டம், அசம், அநந்தம், அவிநாசி, நிர்க்குணம், நிட்களம், நிரவயவம், அநாதி, அசரீரம், அவிகாரம், அத்துவிதம் என்றற்றொடக்கத்தவை மறைமுக விசேஷணங்களாம்.

விதிமுக விசேஷணவிளக்கம் வருமாறு:—

#### நித்தியம்.

உற்பத்திநாசமின்றி யிருத்தலின் பிரமம் நித்தியமாம்.

#### பூரணம்.

நீரினாற் பூரிதமான கடம் போன்று பஞ்சகோசங்கள் பூர்வ பூர்வம், உத்தரோத்தரங்களாற் பூரிக்கப்பட்டுச் சிவனாலும் பூரிக்கப்பட்டிருக்கின்றன, அக்கோசங்களாற் பூரிக்கப்பட்டுள்ள பஞ்சபூதங்களாற் பூரிக்கப்பட்டிருப்பது சகம்; அச்சகத்தெவ்விடத்தும் வியாபித்துள்ள மாயாவிசிட்ட(ஈச)னும் தன்னாற் பூரிக்கப்பட்டு (வியாபிக்கப்பட்டு) தான் பிறிதொன்றாற் பூரிக்கப்படாதிருத்தலின் ஆத்மா பூரணமாம்.

#### ஏகம்.

தனக்குச்சஜாதியமா(இனமுள்ளதா)கியவேறு ஆத்மாவில்லாதிருத்தலின் ஆத்மா ஏகமாம்.

#### பரமார்த்தம்.

முக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படுதலின்றி யிருத்தலின் ஆத்மா பரமார்த்தமாம்.

---

* ஒன்றைப்பிறவற்றினின்றும் வேறுபிரித்தறிவித்தற்கேதுவாயிருப்பது விசேஷணமெனப்படும்.

சாட்சி.

சொரூபவடிவ ஞானத்தாலே சர்வப்பிரபஞ்சத்தையும் மறைவில்லாது நேரே தொடக்கின்றி யறிவதால் ஆத்மா சாக்ஷியாம்.

போதம்.

இந்திரியம் மனத்தின் சம்பந்தத்தாலும், மனம் சீவனின் சம்பந்தத்தாலும், சீவன் தனது சம்பந்தத்தாலும் போதவடிவமாயிருப்பதுபோலாகாது தான் (பிறிதொன்றை யபேட்சிக்காத) சம்வித் (அறிவு) வடிவமாயிருத்தலின் ஆத்மா போதமாம்.

சுத்தம்.

ஜாதிவருணாச்சிரமாதியவற்றால் தொடக்குற்றசீவன், கிருபை அவதார முதலியவற்றால் தொடக்குற்ற ஈசுவரன், ஜீவ சம்பந்தத்தால் அசுத்தமுற்ற பூதங்கள் ஆகிய இவற்றுடன் கூடியிருப்பினும் (ஆகாயம்போன்று) தான் ஓரசுத்தமுமின்றி யிருத்தலின் ஆத்மா சுத்தமாம்.

இலக்கியம்.

இலட்சணைவாயிலாகப் போதிக்கப்பட்ட அர்த்தமாயிருத்தலின் ஆத்மா இலக்கியமாம்.

சநாதனம்.

எஞ்ஞான்றுமொரே வடிவமாயிருத்தலால் ஆன்மா சநாதனமாம்.

சீவன்.

கடத்தால் வளைவுபட்ட ஆகாசம் போன்று சரீரத்திரயங்களால் வளைவுபட்டிருத்தலின் ஆத்மா சீவனும்.

தத்துவம்.

தத்துவம் பதங்களின் மெய்ப்பொருளாயிருத்தலின் ஆத்மா தத்துவமாம்.

விண்.

அசங்கத்துவ முதலிய தருமங்களால் ஆகாயத்திற்கொத்திருத்தலின் ஆத்மா விண்ணு(ஆகாசமா)ம்.

சோதி.

தீபத்தைப்போன்று தனதுபிரகாசத்தில் பிறிதொன்றை யபேட்சியாது தான் எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்யும் சொப்பிரகாசவடிவமா யிருத்தலின் ஆத்மா சோதியாம்.

### ஆன்மா.

நானென்னும் புத்திக்கு முக்கியவிஷயமாக அல்லது முக்கியமான பிரீதிக்கிடமாக விருத்தலின் சேதனம் ஆன்மாவெனப்படுகிறது.

[ஆன்மா விசேஷியமென் றிதுகாறுங் கூறிவந்தது விரோதமாகாது; சுத்தசேதனத்தை ஆன்மாவென்று கூறுவதும் ஓர்விசேடம்பற்றியே யாகலின்.]

### முக்தம்.

இயல்பாகவே சம்சாரபந்தம் விடுபட்டதாயிருத்தலின் ஆத்மா முக்தமாம்.

### விபு.

தேச கால வஸ்துக்களாலாகிய பரிச்சேதமி (முடிவி)ன்றியிருத்தலின் ஆத்மா விபுவாம். [இது (விபு) அநந்தம், அபரிச்சின்னம், பூமா, வியாபகமென்றும் சொல்லப்படும்.]

### சூக்ஷ்மம்.

"சூக்குமமா யெட்டாமையிறைற் சொன்ன பரமே பரமாணு" "நுண்மை யாமதி நுண்மையாம" என்றவாறு சூக்குமமா (நுண்மையா)புள்ள யாவற்றினும் அதிசூக்குமமாயிருத்தலின் ஆத்மா சூக்குமமாம்.

மறைமுகவிசேஷண விளக்கம் வருமாறு:—

### அசலம்.

அவஸ்தாத்திரயத்தால் சலிக்கின்ற ஜீவசஜகத்திற்குச்சாக்ஷியாய்ச் சலிப்பி (அசைவி)ன்றி யிருத்தலின் ஆத்மா அசலமாம்.

### நிரஞ்ஜனம்.

அஞ்ஜன (கமலம் அல்லது மனோவியாபார) மின்றியதா யிருத்தலின் ஆத்மா நிரஞ்ஜனமாம்.

### அமிர்தம்.

மிர்த (மரண) மின்றியதாயிருத்தலின் ஆத்மா அமிர்தமாம். [இஃது அமரமென்றும் சொல்லப்படும்.]

### அப்பிரமேயம்.

(உபநிஷத்துப் பிரமாணத்தாலன்றி யிதரப்) பிரமாணங்களுக்கு விஷயமாகாதிருத்தலின் ஆத்மா * அப்பிரமேயமாம். (பிரமாணத்தாலறியப்படுவது பிரமேயமெனப்படும்.)

---

* ஆத்மா சப்தபரிசாதிகுணங்களின்றி யிருத்தலின் கடபடம்போன்று (1) பிரத்தியட்சப்பிரமாண விஷயமுமன்று; காரியலிங்கமின்மையின் (2) அனுமானப்பிரமாண விஷயமுமன்று; ஒப்புமையின்மையின் (3) உப

விமலம்.

மலமூத்திராதி மலம் பொருந்திய பிருதிவி, கலங்கல் புகை புழுதிமுதலிய மலம் பொருந்திய மற்றநான்கு பூதங்கள், கோழை சளி பித்தம் மலம் மூத்திரமுதலிய மலமுடைய ஸ்தூலதேகம், காசபடலங் காமக்குரோதமுதலிய மலமுடைய சூக்குமதேகம், ஞானஞ்ஞான மலமுடைய ஜீவன், சிருஷ்டியாதிகிருத்திய மலமுடைய ஈசுவரன் ஆகிய விவற்றிற்கு விலட்சணமாய் யாதொரு மலமுமின்றிச் சிதாநந்த வடிவமாயிருத்தலின் ஆத்மா விமலமாம்.

வசனாதீதம்.

வாக்கினு (சொல்லின் சக்திவிருத்தியினு) லறியப்படாதிருத்தலின் ஆத்மா வசனாதீதமாம்.

அஜடம்.

தேகாதிப்பிரபஞ்சம் போன்று ஜடமாகாதிருத்தலின்ஆத்மா அஜடமாம்.

அநாமயம்.

ஆமயம் (பிறப்பு முதலிய நோய்) இன்றியிருக்தலின் ஆத்மா அநாமயமாம்.

அசங்கம்.

சங்கமென்பது சம்பந்தமாம். அது சஜாதீயம் விஜாதீயம் சுவகதமென மூவகைத்தாம். படத்திற்குப்படத்தோடுள்ள சம்பந்தம் சஜாதீய (தன் ஜாதியோடுள்ள) சம்பந்தமாம். படத்திற்குக் கடத்தோடுள்ள சம்பந்தம் விஜாதீய (வேறு ஜாதியோடுள்ள) சம்பந்தமாம். படத்திற்கு நூலோடுள்ள சம்பந்தம் சுவகத (அவயவத்தோடுள்ள) சம்பந்தமாம்.

ஏகமாயிருத்தலால் சஜாதீய சம்பந்தமும், அநான்மா கயிற்றரவுபோன்று தன்னிடத்துக் கற்பிதமாயிருத்தலின் விஜாதீய சம்

மானப்பிரமாண விஷயமு மன்று; ஜாதிகுணக்கிரியைக ளின்மையின் (4) சப்தப்பிரமாண விஷயமுமன்று; உபபாதனதர்ம மின்மையின் (5) அருத்தாபத்திப்பிரமாண விஷயமுமன்று; (6) யதார்த்தபாவ வடிவமாயிருத்தலின் அனுபலத்திப்பிரமாண விஷயமுமன்றாம். இங்ஙனமாயின் உபநிஷத்துக்களின் வாயிலாகப் பிரமம் அறியப்படுவதென்ப தெங்ஙனம் பொருந்துமெனின், உபநிஷத்துவாயிலாக இலட்சியார்த்தமாக வறியப்படுதலின் தவறின்றாம். ஆத்மா சொப்பிரகாசமா யிருத்தலால் எப்பிரமாணத்தாலு மறியப்படுவதன்றாம். ஆனல், பிரமாணங்களோ ஆத்மாவால் விளங்குகின்றன வென்க.

பந்தமும், நிரவயவமா(அவயவமின்றியதா)யிருத்தலின் சுவகதசம் பந்தமும் ஆத்மாவிற்கில்லை ; ஆகவே அஃது அசங்கமாம்.

அதுலம்.

தனக்குவமை பிறிதொன்றின்றி யிருத்தலின் ஆத்மா அதுலமாம். [துலம் - உவமானம், அதுலம அஃதின்றியது.]

நிரந்தரம்.

அந்தர (அவகாச) மின்றி யிருத்தலின் ஆத்மா நிரந்தரமாம (இது நிசசித்திரமென்றும சொல்லப்படும.)

அகோசரம்.

தானென்றதற்குக் கோசர (விஷய) மாகாதிருத்தலின ஆத்மா அகோசரமாம.

அகண்டம்.

காலத்தினாலும் தேச (இட) த்தினாலும வஸ்து (பொருளி) னாலும கண்டிக்க (வேறுபடுத்த)ப் படாதிருத்தலின ஆத்மா அகண்டமாம்.

[ஆத்மா உற்பத்தி நாசமின்றி (நித்தியமா) யெக்காலத்துமிருப்பதாலும், கடபடம்போல ஓரிடத்துமாத்திர மிராது ஆகாசம போன்றெல்லாவிடங்களிலும வியாபித்திருப்பதாலும, கடமும் படமும்போன்று வேறுபட டிராமல் மண் தனது காரியவடிவ கடத்திற்கு வேறுபட்டிராமைபோன்று தனது விவர்த்தகாரிய வடிவப்பொருளிற்கு வேறுபட்டிராமையாலும் அதற்குக் கால தேசவஸ்துக்களால் முடிவின்றும.]

அஜம.

ஜன்மமின்றி இருத்தலின் ஆத்மா அஜமாம். அஜமெனினும் அஜன்மமெனினு மொக்கும். [உற்பத்தியில்லாதது என்பதாம.]

அநந்தம்.

அந்தமி (முடிவி) ன்றியிருத்தலின ஆத்மா அநந்தமாம்.

அவிநாசி.

நாசமின்றியிருத்தலின் ஆத்மா அவிநாசியாம். (விநாசி—நாசமுடையது.)

நிர்க்குணம்.

வியவகாரதசையில் சிருஷ்டியைக்குறித்துக் கற்பிக்கப்படும் சர்வஞ்ஞத்வாதி குணங்கள் பாரமார்த்திகதசையில் சிறிதேனுமுண்டென்பதற்கிடம் பெறாதிருத்தலின் ஆத்மா நிர்க்குணமாம.

நிஷ்களம்.

சகளவடிவ (மூர்த்தவடிவம் அஃதாவது கண்டமாய வடிவ) மின்றியிருத்தலின் ஆத்மா நிஷ்களமாம்.

நிரவயவம்.

அஸ்தபாதாதி அவயவங்க (உறுப்புக்க)ளின்றி யிருத்தலின் ஆத்மா நிரவயவமாம்.

அநாதி.

உற்பத்தியில்லாதிருத்தலின் ஆத்மா அநாதியாம். [ஆதி—உற்பத்தி.]

அசரீரம்.

யாதொரு சரீரமின்றி யிருத்தலின் ஆன்மா அசரீரமாம்.

அவிகாரம்.

பிறப்பு, இறப்பு, வளர்ச்சி, திரிவு, குறைவு, அழிவு என்னும் சட்பாவவிகாரமு மின்றியிருத்தலின் ஆத்மா அவிகாரமாம்.

அத்துவிதம்.

துவிதவடிவப் பிரபஞ்சம் சொப்பனம்போன்று கற்பிதமாயிருத்தலின் வாஸ்தவமன்று; ஆத்மா துவிதமின்றியதா யிருத்தலின் அத்துவிதமாம். [துவிதமென்பதிரண்டு, அஃதின்றியது அத்துவிதமாம்.]

சுருதியினு ளேகமே வாத்துவித மென்னுஞ்
சொற்கிடையு ளேகமெனுஞ் சொல்லதனுக் கயிக்க
மரிதிலுண ரேவவெனு மிடைச்சொற்குத் தேற்ற
மத்துவித மெனுமொழிக்குத் துவிதவிலக் காகக்
கருதுபொருள் வருதலினு லிம்முறையே மாயா
கற்பனைகள் கடந்துநிர வயமாகி யென்றுந்
திரிதலில்சின் மயமாகு மொருபிரமந் தனக்குத்
தெரித்தசுவ கதமுதலா யினமூன்று மிலையே.

என்று வேதாந்தசூளாமணிகூறுவது மிங்கறியத்தக்கதாம். [அத்துவிதமென்பதன் பொருள் துவிதமின்றிய தென்பது சிதையாத சித்தாந்தமாயிருக்கச்சிலர் (சைவருளொருசாரார்) "அத்துவிதமாவது பேதப்பொருளிரண்டுந் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம்" என வாளாகூறி வீணே போயினர்.]

ஈண்டுக்கூறியனவேயன்றி அக்ஷரம், அவ்வியயம், நிராகாரம், நிர்விகாரம், அஜாதம், நிஷ்கிரியம் முதலியனவும் கொள்க.

ஒரு புருஷன் மனைவிமுதலியோரது திருஷ்டியால் கணவன் முதலியவாகச் சொல்லப்படுதல்போன்று ஒரே ஆத்மா பிரபஞ்சத்தின் விசேடணமாகிய அசத்து முதலிய திருஷ்டியால் சத்து சித்து முதலியவாகச் சொல்லப்படுகின்றமையின் ஆத்மாவின் விசேஷணங்கள் தம்முள் பின்னமாகாவென்பது பெறப்பட்டவாறறிக. ஆத்மா நிர்விசேஷ சின்மாத்திரமாயிருப்பதால் அது விசேஷண விசேஷியபாவங்களுக் கப்பாற்பட்டதாம். அங்ஙனமாயினும் வியவகாரநிமித்தம் அதற்கு விசேஷண மிருப்பதாகச் சொல்லப்படுகின்றது.

கைவல்லியநவநீதம்.

நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ் சாந்தம், சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடஸ்தன் சாட்சி போதம், சுத்தமிலக் கியஞ்சநா தனஞ்சிவன் றத்துவம் விண் சோதி யான்மா, முத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம் விதிகுணங்கள் மொழியும் வேதம்.

அசலநிரஞ் சனமமிர்த மப்பிரமே யம்விமலம் வசனாதீதம்
அசடமநா மயமசங்க மதுலநிரந் தரமசோ சரம கண்டம்
அசமநந்த மவிநாசி நிர்க்குணநிட் களநிரவ யவம நாதி
அசரீர மவிகார மத்துவித மெனவிலக்கா மநேக முண்டே.

பிரபோதசந்திரோதயம்.

அத்துவிதம் வாசாம கோசர மநேநீத மசலமூலம், தத்துவப் பிரமேயஞ் சர்வசமம் சச்சிதாநந்தம் சாந்தம், சுத்தமவி யத்தமவி காரமநு பவந்துரியம் சுயம்பிர காசம், நித்தியநிர்க் குணமனந்த நிரதிசயம் பிரமமென நின்றதொன்றே.

இச்செய்யுட்களின் கவசியஞ் சிந்திக்கத் தக்கனவாம்.

(௫) சிரவணம்.

சி: மூன்றென்னுந் தொகையாகக்கூறிய சிரவண மனன நிதித்தியாசனங்களுள் சிரவணமாவதியாது?

கு: சட்விதலிங்கத்தினால் வேதாந்த வாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயஞ்செய்வது சிரவணமெனப்படும். [சிரவணமாவது சற்குருவாயிலாக வேதாந்தார்த்தத்தை யன்புடன் கேட்டல்.]

சட்விதலிங்க லக்ஷணம்.

சி: சட்வித லிங்கமாவதென்னை?

மறைந்துள்ள அக்கினியின் ஞானத்தை (காணப்படும்) புகை யுண்டுபண்ணுவதால் அக்கினியை நிச்சயித்தற்குப் புகை லிங்கமா(குறியா)யிருத்தல்போல் வேதாந்தவாக்கியங்களின் தாற்பரியமாகிய அத்வைத சொரூபஞானத்தை உபக்கிரம உபசங்கார மாதிக ளுண்டுபண்ணுவதால் தாற்பரிய நிச்சயத்திற்கு அவை இலிங்கங்களா யிருக்கின்றன. அவ்விலிங்கங்கள் ஆறும். அவை (1) உபக்கிரம உபசம்மாரம், (2) அப்பியாசம், (3) அபூர்வதை, (4) பலம், (5) அருத்தவாதம, (6) உபபத்தி என்பனவாம்.

(1) உபக்கிரம உபசம்மாரம்.

உபக்கிரமமாவது விஷயத்தின் ஆரம்பம். உபசம்மாரமாவது விஷயத்தின் முடிவு. ஆரம்பத்திற கூறியபொருளையே அந்தத்திலுங் கூறுவது உபக்கிரமு உபசம்மாரமாகிய ஏகலிங்கமாம்.

சச்சிதாநந்த வடிவப்பிரமத்தில் கிளிஞ்சலில் வெள்ளிதோன்றினாற்போன்று நாமரூபவடிவசகத்துண்டாயிற்று; சிருட்டிக்கு முன அது நாமரூபரகிதமாய்ச சத்தாமாத்திரமா யிருந்ததெனறு கூறுவதுஉபக்கிரமமும,இங்ஙனந்தோன்றியஜகத்துஅச்சத்தினது சொரூபமாம்; அதுவே யதார்த்தமாயுள்ளது; அதுவே ஆத்மசொரூபமென்று கூறுவது உபக்கிரமுமாமென்க. ஈண்டுக்கூறியவற்றுள் முதலும் முடிவும் மாறுகோளின்றி யிருத்தலறிக.

(2) அப்பியாசம்.

வேதாந்தார்த்தத்தை அடிக்கடி சொல்லுதற்கு அப்பியாசமென்று பெயராம். யாசகன் தனது பிரயோஜனமான ஒரேகருத்தைவெவ்வேறு சொற்களால் வெளியிடுவதுபோன்று வெவ்வேறு யுக்திவாயிலாக அத்வைதப் பிரமத்தைக் கூறுவதே அப்பியாசமாம். சாந்தோக்கிய உபநிஷத்தின் ஆறுவதத்தியாயத்தில் ஒன்பது முறை தத்துவமசி மகாவாக்கியம் ஒவ்வோரேதுவை முன்னிட்டுக் கூறியிருத்தலறிக.

(3) அபூர்வதை.

வேறுபிரமாணங்களால் அறியப்படாதது அபூர்வதையாம். அகண்டைக்கரசமாய பிரமம் உபநிஷத்துப் பிரமாண மொழிந்த மற்றப்பிரமாணங்களாலறியப்படாதென்றும், ஸ்வயம் பிரகாசமாயிருத்தலால் இதரப்பிரமாணங்களை யபேட்சிக்கிறதின்றென்றும் கூறுவதே அபூர்வதையாம.

அஷ்டப்பிரமாணம்.

சி: பிரமாணங்க ளெத்தனை வகையாம.

கு: எட்டுவகையாம்.

சி: அவை யெவை?

கு: பிரத்தியக்ஷம், அனுமானம், உவமானம், ஆகமம், அருத்தாபத்தி, அனுபலத்தி, ஐதிகம், சம்பவமென்பனவாம்.

சி: அவற்றின் றன்மைகளை யொருவாறாக விளங்குமாறு கூறியருளல் வேண்டும்.

கு: யான் நினைத்தபடி நீ வினவியதற்காகச் சந்தோஷிக்கின்றேன். கீழ்க் கூறுவனவற்றை நன்கு சிந்தித்தால் பிரமாணங்களின் வகை ஒருவாறு நன்கு விளக்கமாம்.

(1) செவியாதி யிந்திரியங்களால் சப்தாதி விஷயங்களைக் காணும் அறிவு பிரத்தியட்சமெனப்படும்.

(2) புகை முதலிய குறிகளால் மலைமுதலியவிடங்களில் நெருப்பு முதலியவை யுண்டென் றாராய்ந்தறிதல் அனுமானமெனப்படும்.

(3) ஒன்றற்கொன்றுள்ள சாதாரணதருமம் (பொதுமை) பற்றி யறிதல் உவமானமெனப்படும்.

(4) சிருஷ்டியினாரம்பத்தில் சீவர்களுய்யுமாறு பரமேசுவரன் எடுத்துச் சொல்லிய வேதமும் அதற்கு விரோதமின்றிய சாஸ்திரமும் ஆகமமெனப்படும்.

(5) இங்ஙனமன்றாயின் இதுகூடாதென் றெதிர்மறை வாயிலாக வறிதல் அருத்தாபத்தியெனப்படும்.

(6) விளங்குத லுண்மைக்கு மாறுபட்ட விளங்குதலில்லாமை அனுபலத்தியெனப்படும்.

(7) தொன்றுதொட்டு இம்மரத்தில் பேயுளதென்று வழங்கி வருதல் ஐதிகமெனப்படும்.

(8) ஆயிரத்தில் நூறுண்டெனும் ஞானம் சம்பவமெனப்படும்.

இவ்வஷ்டப்பிரமாணங்களுள் ஆறுபிரமாணங்களே வேதாந்திகளால் சிரேஷ்டமாக வெடுக்கப்பட்டுள்ளன.

சி: அவையெவை?

கு: ஐதிகமும்சம்பவமுமொழிந்தமற்றைப்பிரமாணங்களாம்.

சி: இதற்குப் பிரமாண மென்னை?

கு: "புகலுலகாயிதனுக்குக் காட்சியொன் றேசயின புத்தவைபாடிகர்கடமக் கிரண்டனுமானத்தோ, டுகளுறுசாங்கியர்க்கி மூன்றுரையோடுநான் குவமையோடுநியாயற்கருத்தா பத்தியோடைந் தாகு, மிருபிரபாகரற்காறு மபாவமொடு பாட்ட வேதாந்திகட்காகு மெனவறிக தெரிவுற், றிகலறுமௌன் புராணிகர்கடமக் களவையெட்டா மென்றுரைப்பர் சம்பவமை திகங்களுட னன்றே" என்று வேதாந்த சூளாமணி கூறுவதுமெனக.

சி: இப்பிரமாணங்களின்பயன் விளங்குமாறு கடாட்சிக்க வேண்டும்.

கு: வேதாந்தவாக்கியமொழிந்த மற்றைப்பிரமாணங்கட்குப் பிரமத்திற்பிரவிர்த்தி யில்லையென்பது சித்தாந்தமா யிருப்பினும் அவை வேதாந்த வாக்கியமாய ஆகமத்தை யெட்டிப் பிரமநிச்சயத்திற் கேதுவாமிடத்துக் கொள்ளப்படுகின்றன; சுதந்தரமாக மாட்டாவென்பதிங் கறிதல்வேண்டும்.

(1) பிரத்தியட்சம்.

செவியாதியிந்திரியங்களா லறியப்படும் சத்தாதி விஷயங்களுள் பிரமம் ஒன்றன்றுமாகலின் பிரத்தியட்சப் பிரமாணத்தினா லறியப்படுவதன்றாம். ஆயினும் (தசபுமான்கதையில்) "பத்தாமவன்நீ" என்னும் வாக்கியத்தினைப்போலச் சுரோதாவின் (கேட்பவனின்) ஆன்மவடிவமாகப் பிரமத்தை மகாவாக்கியம் போதித்தலால் பிரமத்தின் பிரத்தியட்சஞானம் உண்டாகின்றது. இப்பிரத்தியட்சஞானத்திற்கு மகாவாக்கியமாயசப்தம் அசாதாரண (சிறந்த) காரணமாம். இதற்கு நித்தியாநித்தியவஸ்து விவேக முதலிய சாதனங்களால் சம்ஸ்கரிக்கப்பட்டமனம் சககாரி (உதவி)யா யிருக்கிறது. இவ்வாற்றால் பிரமப்பிரத்தியட்சத்திற்கு மகாவாக்கியமாய சப்தம் பிரமாணமாக நின்றவாறு காண்க.

(2) அனுமானம்.

(1) ஜீவன் பிரமாபின்னன்—பிரதிஞ்ஞை; சச்சிதாநந்த வடிவமாயிருத்தலால்—ஏது; ஈசுரசேதனம்போல்—உதாரணம்.

(2) ஜீவப்பிரமங்களின் பேதம் மித்தை — பிரதிஞ்ஞை; உபாதியினாலாகியதா யிருத்தலால்—ஏது; கடாகாச மகாகாசங்களின் பேதத்தினைப்போல்—உதாரணம்.

இவ்வனுமானங்கள் வேதாந்தவாக்கியங்களால் ஜீவனிடத்து நிச்சயிக்கப்பட்டிருக்கும் பிரமத்தின் அபேதத்தை மந்தவிஞ்ஞாநிகளுக்கு விளங்கும்படி யுறுதிப்படுத்தி நின்றவாறறிக.

(3) உவமானம்.

கடாகாசம், ஜலாகாசம், மகாகாசம், மேகாகாசம் என்னும் நான்காகாசங்களுள் ஜலாகாசத்திற்கும் மேகாகாசத்திற்கும் அபேதமில்லையாயினும், கடாகாசத்திற்கும் மகாகாசத்திற்கும் பரமார்த்தமாகப் பேதமின்றென்றாற்போல், கூடஸ்தன், ஜீவன், பிரமம், ஈசுவரன் என்னும் நான்கு பேதங்களுள் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் அபேதமில்லையாயினும் அவற்றின் அதிஷ்டானமாய கூடஸ்தனுக்கும் பிரமத்திற்கும் பரமார்த்தமாய்ப் பேதமின்றென்றதாம். எனவெடுத்துக்கூறிய உவமானமும் வேதாந்தவாக்கியத்தையொட்டிக் கூடஸ்தப்பிரமவைக்கியத்தை விளக்கியவாறறிக.

(4) அருத்தாபத்தி.

ஜீவப்பிரமங்களின் அபேதமின்றேல் பேதநிஷேதங் கூடாது (ஜீவப்பிரமங்களின் அபேதமிருத்தற்படியாற்றான் பேத நிஷேதங் கூடுமென்றது) என்னும் அருத்தாபத்தியும் வேதாந்தவாக்கியத்தையொட்டி விளக்கியவாறறிக.

(5) அநுபலத்தி.

சாக்கிரசொப்பனங்களில் உபாதிகளிருக்கலால் ஜீவப்பிரமங்களின் பேதம் விளங்குகின்றது, சுழுத்தியில் அவ்வுபாதியின்மைபோல அவற்றின் பேதம் விளங்குகின்றில்லை (ஆகலால் ஜீவப்பிரமங்களின் பாரமார்த்திக அபேதம் விளங்குகின்றது) என்னும் அநுபலத்தியும் வேதாந்தவாக்கியத்தையொட்டி விளக்கியவாறறிக.

(4) பலம்.

பலம்—பிரயோஜனம் அசங்கையப்பிரமஞானசித்தியால் ஆத்மஞானியானவனுக்குக் காரணத்தோடு (மாயையோடு) கூடிய பந்த மோகங்களின் நிவிர்த்தியே பலமாம் (அஃதாவது துவந்துவமென்பது சிறிதுமின்றி ஆகமவழிவாக்கிலே நிலைத்தல் பலமாமெனக்)

(5) அருத்தவாதம்.

ஸ்துதியை அல்லது நிந்தையை அறிவிக்கும் வாக்கியம் அருத்தவாதமெனப்படும். ஈண்டுப் பேதஞானத்தின் நிந்தையையும் அபேத ஞானத்தின் ஸ்துதியையும் அறிவிக்கும் வாக்கியங்கள் அருத்தவாதமாம்.

இவ்வருத்தவாதம் (1) சிருஷ்டி, (2) ஸ்திதி, (3) பிரளயம், (4) பிரவேசம், (5) நியமனம், (6) தத்துவம் பதார்த்தப்பிரதர்சனம், (7) பலமென வெழுவகைத்தாம்.

(1) ஸிருஷ்டி—அந்த ஆத்மாவிலிருந்து ஆகாயமுதலாயின வுண்டாயினவென்பது.

(2) ஸ்திதி—அவ்வாறுண்டானவை ஆத்மாவிலேயே இருக்கின்றனவென்பது.

(3) பிரளய—அங்ஙனமிருப்பவை ஆத்மாவிலேயே லயிக்கின்றனவென்பது.

இவ்விஷயத்தி லறியத்தக்க சுருதிகள் வருமாறு:—

மந்திரோபநிஷத்.

ப்ரஹ்மாத்யம் ஸ்தாவராந்தம் ச பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ:| ததேகமேவ பஶ்யந்தி பரிஶுப்ரம் விபும் த்விஜா: || யஸ்மிந் ஸர்வமிதம் ப்ரோதம் ப்ரஹ்ம ஸ்தாவரஜங்கமம் | தஸ்மிந்நேவ லயம் யாந்தி ஸ்ரவந்த்ய: ஸாகரே யதா ||

(இ-ள்) ஞானக்கண்ணுள்ள பிராமணர்கள் பிரும்மா முதல் ஸ்தாவரம்வரையிலுள்ளவைகளைப் பார்க்கிறார்கள். எப்படியென்றால், பரிசுத்தமாயும் எங்கும் வியாபித்ததாயும் ஒன்றாயிருக்கிற அந்தப் பிரஹ்மமாகவே பார்க்கிறார்கள். ஸ்தாவர ஜங்கமங்களான ஸகலப் பிரபஞ்சங்களும் எந்தப் பிரஹ்மத்தில் நிலைபெற்றிருக்கின்றனவோ அதனிடத்திலேயே லயிக்கின்றன. நதிகள் ஸமுத்திரத்தில் லயிப்பதுபோல.

ஸாந்தோக்கியோபநிஷத்.

ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம ||

(இ-ள்) இந்த ஸகலப் பிரபஞ்சமும் பிரமமே.

யதா ஸோம்யைகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் ||

(இ-ள்.) ஓ சௌமியா! ஒரே மண்கட்டியை யறிந்ததனால் அதிலிருந்துண்டான (குடம் முதலிய) ஸகலமும் மண்ணென்றே அறியப்படுகின்றன; விகாரமும் பெயரும் வெறும் வாய்ப்பேச்சுத்தான்; மண்தான் ஸத்தியமானது.

கைவல்லியோபநிஷத்

மய்யேவ ஸகலம் ஜாதம் மயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் | மயி ஸர்வம் லயம் யாதி தத்ப்ரஹ்மாத்வயமஸ்ம்யஹம் | அணோரணீயாநஹமேவ தத்வந்மஹாநஹம் விஶ்வமிதம் விசித்ரம் ||.

(இ-ள்.) என்னிடத்திலிருந்தே சகலமு முண்டாகிறது; என்னிடத்திலேயே சகலமுமிருக்கிறது; என்னிடத்திலேயே சகலமும் லயமடைகிறது. அந்த அத்துவயமான பிரம்மம் நானே. அணுவைக்காட்டிலும் அணுவாயிருக்கிறேன்; அப்படியே (மகத்தைக்காட்டிலும்) மகானுமிருக்கிறேன். விசித்திரமான இந்தப் பிரபஞ்சமும் நானே.

வாசுதேவமனனம்.

[illegible]

(இ-ள்.) "ஆகாசம் முதலான யாவும் பிர்ம்மத்தினிடத்திலிருந்துற்பத்தியானபடியினாலும் அதினிடத்திலேயே யிருக்கிறபடியினாலும் அதினிடத்திலேயே லயிக்கிறபடியினாலும் மண்ணிலிருந்து உற்பத்தி ஸ்திதி லயங்களையடைந்த குடம் முதலானவைகட்கும் மண்ணிற்கும் பேதமில்லாததுபோல (சிஷ்டிஸ்திதிலயங்களுக்கு) காரணம் பிர்ம்ம மாத்திரமே" என்று (சுருதிகள்) நமக்குறிவிக்கின்றனவைகளாக விருந்துகொண்டு மகாவாக்கியத்தில் சொல்லப்பட்ட பிர்ம்மத்தினுடைய இரண்டாவதற்ற தன்மையை யாதரிக்கின்றன.

[மண்ணிற் றோன்றி நின்றழியும் கடம் மண்ணேயாவது போன்று ஆத்மாவிற்றோன்றி நின்றழியும் ஆகாசாதிகள் ஆத்மாவேயாமெனபது பெறப்படலால் ஆத்மாவிற் கன்னியமாய்ப் பிறிதுபொருளுண்டெனபது பெறப்படவின்று; இன்றாகவே, ஆத்மாவேயுளதென்பது சிருஷ்டியாதி மூன்றினாலும் பெறப்பட்டதென்க.]

(4) பிரவேசம்—ஆத்மா ஜீவரூபமாய்த் தேகத்திலுட் பிரவேசித்திருக்கின்றதெனபது. அது,

பைங்களோபநிஷத்.

[illegible]

ற்கும் அதினின்றுண்டான உத்தரீயமாதிகளுக்கும், இரும்பிற்கும் அதினின்றுண்டான கட்காதிகளுக்கும் பேதமில்லாதிருத்தல் போன்று காரணமான பிரமத்திற்கும் அதன்காரியமாய ஜகத்திற்கும் பேதமின்றெனக் கூறுவதே உபபத்தியாமென்க.

இச்சட்விதலிங்கங்களாலும் வேதாந்த வாக்கியங்களின் அத்வைதார்த்தத்தை நிச்சயிப்பதே சிரவணமாம். வேதாந்த சாஸ்திரத்தின் அபிப்பிராயம் அதற்குச் சாதனமாயிருத்தலின் அதுவும் சிரவணமெனப்படும்.

சி: சிரவணத்திற் கேது யாது?

கு: * ஆத்தியாத்மிகம், ஆதிபூதம், ஆதிதெய்வங்களாலுண்டாகும் துன்பங்களைப் பொறுக்கமாட்டாமல் "வெய்யிற்சகிக்கிடாப் புழுப்போல் வெய்யிற் பவமதுநாதா தீர்த்தமபடிந்திடப்பத"மும் தீவிரதரமுமுட்சுத்துவமே ஏதுவாம்!

சி: சொரூபம் யாது?

கு: ஆத்மசொரூபத்தைக் கூறும் வேதாந்த வாக்கியங்களைச் சதா சற்குருவினிடத்திற் கேட்டலே சொரூபமாம்.

சி: காரியம் யாது?

கு: ஜீவசப்தாவத்தையுள் நிகழும் ஆத்மா இல்லையென்னும் அசத்தாவரணம் ஒழிவதே காரியம்.

சி: அவதி (எல்லை) யாது?

கு: ஒழிந்துபோய அசத்தாவரணம் மீண்டும் வாராதிருக்கின்றபரியந்தம் சிரவணஞ் செய்தலே அவதி.

சி: பலமாவதியாது?

கு: திடமாயிருக்கிற ஆத்மாவின் பரோட்சஞானமே பலம்.

(6) மனனம்.

சிரவணத்தினாலே பரோட்சமாயறிந்திருக்கின்ற அத்வைதவஸ்துவை ஆத்மாவை யுக்தி தர்க்க அனுமானங்களாயிலாகச் சிந்தித்தலே மனனமெனப்படும்.

* (1) வியாதிமுதலானவைகளாலுண்டாகும் துக்கம் அத்தியாத்ம துக்கமாம்.

(2) சோர வியாக்கிர ஸர்ப்பாதிகளாலுண்டாகுந்துக்கம் அதிபூததுக்கமாம்.

(3) இடக்க நிராக்கத ப்ரேத கிரஹாதிகளாலும், சீதவாத ஆதபங்களாலுமுண்டாகுந் துக்கம் அதிதெய்வ துக்கமாம்.

## யுக்தி.

(1) இதுகூடும் இதுகூடாதெனத் தன்கண்ணே தோன்றுவது யுக்தியாம். இது பொருந்துமாறென்றுஞ் சொல்லப்படும். இதுகூடும் என்பது அன்வயம் (உடம்பாடு), இது கூடாது என்பது வியதிரேகம் (எதிர்மறை). அது (மண்ணாகிய காரணம்) இருந்தால் அது (கடமாகிய காரியம்) இருத்தல் அன்வயமாம். அஃது (மண்ணாகிய காரணம்) இல்லாதிருக்க அஃது (கடமாகிய காரியம்) இல்லாதிருத்தல் வியதிரேகமாம்.

அன்வயம் வியதிரேகம் என்னு மிரண்டங்கங்களோடு கூடியதே யுக்தியாம்.

## தருக்கம்.

(2) வியாப்பியத்தை யாரோபித்தலால் (தீயில்லையானல்) வியாபகத்தை யாரோபிப்பது (புகையுமில்லையாதல் வேண்டுமென்பது) தருக்கமாம். அஃதாவது அநிஷ்டத்தைச்சம்பாதிப்பது தருக்கமாம். இது பிரத்தியட்சாதிப் பிரமாணங்களுக்குச் சககாரி (உதவி)யாயிருப்பதென் றறிதல்வேண்டும்.

## * அனுமானப் பிரமாணம்.

"மறைந்திருக்கும் பொருளைக் குறியாலறிவது அனுமானப் பிரமாணமாம். உதாரணம் புகையைக்கண்டு வன்னியுண்டென் றறிவதுபோலும்.

அடுக்களைமுதலிய விடங்களில் தினந்தோறும் புகையிருக்கக்காண்கிற புருஷனுக்கு, புகையுள்ள விடங்களிலெல்லாம் அக்கினியிருக்குமென்கிற ஓர் அனுபவமுண்டாகிறது. இதற்கே உடனிகழ்ச்சி ஞானமென்றுபெயர்.

பிறகு அவன் பர்வதமுதலிய இடங்களுக்குப்போகுங்கால், புகையின் பிரத்தியக்ஷமுண்டாகுமிடத்து, அவனுக்குப் புகைக்

* இவ்வனுமானப் பிரமாணம் சென்னைமாநகரத்தின்கண் வேதாந்த பாஸ்கரராயெழுந்தருளியிருந்த மகான். சை. இரத்தின செட்டியாரவர்களிடத்து வேதாந்த அப்பியாசஞ்செய்தவர்களிலொருவரும், சென்னை இந்து தியலாஜிகல் ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும் நமதுநண்பருமான ம-ள-ள-ஸ்ரீ கோ. வடிவேலு செட்டியாரவர்கள் திருக்குறளின் பரிமேலழகருரையை விளக்கியெழுதிய வுரையினின்று மெடுத்தெழுதப்பட்டது. முன்னெழுதியுள்ள அனுமானங்களையன்றிப் பின்வரு மனுமானங்களும் நன்குவிளங்குதற்பொருட்டிஃதெழுதப்பட்டதென்க.

கும் வன்னிக்குமுள்ள உடனிகழ்ச்சியின் ஞாபகமுண்டாகிறது. இது வாயிலாக மலையில் வன்னியுண்டென்கிற ஞானமுண்டாகிறது.

இதுவே அனுமிதியெனப்படும்:— இவ்விடத்தில் புகைக்கு ஏது அல்லது இலிங்கம் என்று பெயராம்.

ஏது அல்லது இலிங்கத்தாலறியப்பட்ட வன்னி சாத்தியமென்று சொல்லப்படும்.

ஏது சாத்தியமிரண்டிற்கும் ஆசிரயமாயிருக்கும் பர்வதமுதலியவை பக்ஷமாம். எவ்வதிகரண(இட)த்தில் சாத்தியத்தையறியும் விருப்பமுண்டாகி, சாத்தியத்தின் அனுமதி வடிவ நிச்சயம் உண்டாகின்றதோ அது பட்சமெனப்படும்.

தூமமுள்ள விடத்து மில்லாவிடத்தும வன்னியிருப்பதால் தூமத்தைவிட வன்னி யதிகவிடத்திலிருப்பதாம்; ஆகையால் வன்னி (தீ) வியாபகமாம். வன்னியுள்ள விடத்தெல்லாம் தூமமில்லாமையால் தூமம் வியாப்பியமாம் (சொற்ப விடத்திலிருப்பதாம்).

அனுமிதிஞானத்தில் ஏது சாத்தியங்களின் வியாப்தியனுபவம் கரணமாம். இந்த வியாப்திஞானத்தின் ஸ்மிருதி அல்லது ஞாபகம் வியாபாரமாம். அனுமிதியறிவு பயனும். உடனிகழ்ச்சி ஞானமெனினும் வியாப்தி ஞானமெனினுமொக்கும். சிலர் வியாப்தி ஞானத்தையும், சிலர் வியாப்தி ஸ்மிருதியினையும், சிலர் ஏது ஞானத்தையும், சிலர் ஞானவேறுவினையும் கரணமென்பர்.

அனுமானம் (1) கேவலாந்நுவயி (2) கேவலவியதிரேகி (3) அன்னுவய வியதிரேகியென மூவகைப்படும். அன்னுவயம்—உடன்பாடு, வியதிரேகம் - எதிர்மறை.

அவற்றுள்:—கேவலாந்நுவயியாவது அந்நுவயத்தில் மாத்திரம் வியாத்தியையுடையது. அது குடம் அபிதேயம் (பெயரிட்டு வழங்கற்பாலது); பிரமேயத்தன்மையால்; என்பது போலவாம். ஈண்டுக்குடம் பக்ஷம்; அதன் அபிதேயத்தன்மை சாத்தியம்; பிரமேயத்தன்மையால் என்பது ஏது. ஈண்டு, யாண்டு யாண்டுப் பிரமேயத்துவம் ஆண்டு ஆண்டு அபிதேயத்துவம் படம்போல என அன்னுவய வியாப்திமாத்திரமுளது; யாண்டு ஏதுவில்லை ஆண்டு சாத்தியமில்லை என வியதிரேக வியாத்தியின்மையா (பிரமேயத்துவமும், அபிதேயத்துவமு மெங்கு மிருத்தலா) லெனக.

கேவலவியதிரேகியாவது வியதிரேகத்தில் மாத்திரம் வியாத்தியுடையது. அது பிருதிவி ஏனையவற்றின் வேறு; கந்தமுடைமையால்; யாது ஏனையவற்றின் வேறன்று அது கந்தமுடையதன்று அப்புப்போல் என்பது. இங்கு யாது கந்தமுடைத்து அஃது ஏனைய பொருள்களின் வேறு இதுபோல என அந்நுவயத்தில் திருட்டாந்த மில்லை; பிருதிவி முழுதும் பக்ஷமேயாகலினென்க.

அந்நுவய வியதிரேகியாவது அன்னுவயத்திலும், வியதிரேகத்திலும் வியாப்தியையுடையது. வன்னியைச் சாதிக்குங்கால் புகையுடைமை அந்நுவய வியதிரேகியாம்; யாண்டுப் புகை ஆண்டு வன்னி அடுக்களைபோல என அந்நுவயத்திலும், யாண்டு வன்னியில்லை ஆண்டுப் புகையில்லை மடுப்போல என வியதிரேகத்திலும் வியாப்தி யுடைமையி னென்க.

மீண்டும் அநுமானம் சுவார்த்தாநுமானம் (தன்பொருட்டநுமானம்) பரார்த்தாநுமானம் (பிறர்பொருட்டநுமானம்) என்னும் வேறுபாட்டா லிருவகைத்து.

தன்பொருட்டநுமானமாவது தனக்கநுமிதி ஞானம் விளங்குதற்குக் காரணம். வாக்கியப் பிரயோகமின்றி வியாத்தி ஞான முதலியவற்றால் எவ்வநுமிதியுண்டாகிறதோ அது சுவார்த்தாநுமானமெனப்படும்.

பிறர்பொருட் டநுமானமாவது தானே புகையால் வன்னியை அநுமித்துப் பிறருணர்தற் பொருட்டு ஐவகை யுறுப்புடன்கூடிய வாக்கியத்தைக் கூறுவது

ஐவகை யுறுப்பாவன:—(1) பிரதிஞ்ஞை—(மலை வன்னியுடைத்து). (2) ஏது—(புகையுடைமையால்). (3) திருஷ்டாந்தம்—(யாது யாது புகையுடையது அது அது வன்னியுடையது அடுக்களை போல). (4) உபநயம்—(இதுவு மங்ஙனம்). (5) நிகமனம் (ஆகலினங்ஙனம்). (அஃதாவது மலை வன்னி யுடைத்தென்பது).

பிரதிஞ்ஞையாவது பக்ஷத்தைத் துணிபொருளுடையதாகக் கூறல்.

ஏதுவாவது இன் ஆன் உருபு ஈறாக இலிங்கத்தை யெடுத்துக் காட்டுவது.

திருட்டாந்தமாவது ஏது சாத்தியங்களின் உடனிகழ்ச்சியை யறிவிப்பதாகிய திருஷ்டாந்தத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியம்.

வாதிப் பிரதிவாதிகளுக்கு யாண்டு விவாதமில்லையோ யாண்டு இருவராலும் நிச்சயிக்கப்பட்ட அருத்தமுளதோ அது திருஷ்டாந்தமெனப்படும்.

உபநயமாவது பக்ஷ தருமத்தன்மை யுணர்தற் பொருட்டு திருட்டாந்தத்தைச் சார்த்திக் கூறுவது.

நிகமனமாவது முடிந்தது முடித்தல். மறுதலையின்மை காட்டல் முதலியன நிகமனத்திற்குப் பயனும்."

மனனத்திற்குச் சாதனமான யுக்தி முதலிய மூன்றனுள் யுக்தி வருமாறு:—

சாங்கியாதியோர் ஆத்மா பலவாயும் வியாபகமாயு மிருக்கிறதென்று கூறுவர். சுருதி ஆத்மா ஒன்றாயும் வியாபகமாயுமிருக்கிறதென்று கூறும். இவ்விரண்டையு மறிந்தவன் குரு சிரவணத்தின் பின்னர்த்தாகிய சிந்தனைக்கண் ஆன்மா ஒன்றாயும் வியாபகமாயு மிருப்பது நியாயமா? அன்றிப்பலவாயும் வியாபகமாயு மிருப்பது நியாயமாவென்று யுக்தியினு லாராய்ந்தறிய வேண்டும்.

(க) சாங்கியாதி மதத்துள் அநேகமாய் வியாபகமாயிருக்கும் ஆத்மாக்களுக்கு ஒவ்வொரு சரீரத்திலும் சம்பந்தமிருத்தல் அத்தியாவசியகமாதலால் இவ்வான்மாவிற்கே இந்தச் சரீரம் போகசாதனமாம், மற்ற ஆன்மாக்களுக் காகாதென்று போகஸ்திதி சொல்லுதல் கூடாது. [ஒரு சரீரம் பல ஆத்மாக்களுக்கும் போகசாதனமாயிருக்கவேண்டு மென்பது கருத்து.] [போகசாதனம்—சுகதுக்கங்களைப் புலப்படச்செய்வதற் கேதுவாயிருப்பது.] (உ) இவ்வான்மா நல்வினை முதலியவைற்றால் சம்பாதித்துக்கொண்ட இச்சரீரம் இதற்கேயாம், மற்ற வான்மாக்களுக்கில்லை யென்றால் அந்நல்வினை முதலியவை எல்லா வான்மாக்களுக்கு மிருத்தலால் அவற்றிற்கெல்லாம இச்சரீரம் போகசாதனமா யிருக்கவேண்டு மாதலால் அது கூடாது. (ங) இவ்வான்மா பூர்வ தேகாபிமானத்தினால் செய்த நல்வினை முதலியவை இவ்வான்மாவினதே யென்றால் அவ்வபிமானம் பூர்வதேகத்திலிருந்த எல்லா வான்மாக்களுக்கு முடைத்தாயிருத்தலால் அது கூடாது. இங்ஙனம் எல்லாவற்றினும் கலத்தலாகிய அநவஸ்தாதோஷம் (வரம்பின்றிச் சேறலென்னுங் குற்றம்) ஒழிக்கத்தக்க தன்றாம். ஆத்மா ஒன்றாய் வியாபகமாயிருக்கிறதென்னும் பட்சத்தில் போகவிவஸ்தை (வேறுபாடு) பொருந்துகின்ற தின்றென்று அநேகாத்ம பட்சத்தை யங்கீகரிக்கினும்

அங்கும் போகவிவஸ்தை பொருந்துகின்றதில்லை. இங்ஙனம் இருபட்சத்திலும் சங்கையிருப்பினும் ஏகாத்ம பட்சத்தில் போகவிவஸ்தை பிம்பப்பிரதிபிம்ப நியாயத்தினால் உபாதிகளாய அந்தக்கரணங்களின் மந்தம் கலக்க முதலிய பல்வகைக் கூறுபாட்டால் பொருந்து மென்பதே யுக்தியாம்.

பிம்பப்பிரதிபிம்பமாவது முகமுதலியவஸ்துக்கள் கண்ணாடி முதலிய வஸ்துக்களில் வேறொன்றுபோல் எதிர்முகமாகத் தோன்றுவதாம். ஈண்டு ஆத்மா பிம்பம், அந்தக்கரணங்கள் பிரதிபிம்பித்தற்கிடம், அவற்றுள் பிரதிபிம்பித்துள்ள ஆபாச ஆத்மாக்கள் சீவர்கள். உபாதியாய அந்தக்கரணங்கள் பலவாயிருத்தலால் அவற்றுள் பிரதிபலித்துள்ள சீவர்கள் பலவாயிருக்கின்றனர். இருக்கவே தம்முள் வேறுபட்டிருக்கும் சீவர்களுக்குப் போக விவஸ்தை பொருந்துமென்பது சிதையாத சித்தாந்தமாமென்க. இவ் விஷயம்,

"எல்லாச் சீவரு மிவனு மென்றி ரிவன்றான் முத்தியடைந்
தெல்லாச் சீவரு முத்தி பெறும விருப்பா னேனையா
எல்லாச் சீவரும் வெவ்வே றானு னிவனெல் லாமலனே
எல்லாப் பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழியீரே."

"அகமெனு மான்மா பூரண மேக மநேகவி தஞ்சீவர்
அகமெனு மந்தக் கரணோ பாதிக ளளவிலை யாதலினால்
சகமுழு துங்குளிர் சந்திர னேகஞ் சலசந் திரர்பலராம்
சகமதி லேரி குளஞ்சிறு குழிகால் சட்டிகு டம்பலவால்."

"சட்டி குடங்களி லொன்று நசித்திடி னதினுட் சலசந்திரன்
ஒட்டு முதற்சந் திரனோடு கூடுமொ ழிந்தவை கூடாவே
கட்டுமு பாதி நசித்திடு சீவன் காரண வான்மாவில்
கிட்டு மயிக்கிய முபாதி கெடாதவர் கேவல மாகாரே"

என்று கைவல்லிய நவநீதங் கூறுவதால் நன்கு விளங்கும்.

தருக்கமும் அனுமானமும் கீழ் வருவதா லினிது விளங்கும்.

ஸ்ரீ விருத்திப் பிரபாகரம் உ-வது பிரகாசம்.

"வேதாந்த வாக்கியங்களால் ஜீவனிடத்து நிச்சயிக்கப்பட்டிருக்கும் பிரஹ்மத்தினபேதம் எதுவோ, அது அநுமானத்தாலும் இவ்வாற்றாற் சித்திக்கின்றது:—ஜீவன் பிரஹ்மா பின்னம், சேதனத்தன்மையால், யாண்டு யாண்டுச் சேதனத்தன்மை யுண்

டோ, ஆண்டாண்டுப் பிரஹ்மாபேதமுண்டு; பிரஹ்மத்திற்போல. இது மூன்றவயவங்களின் சமுதாயமாகிய மகாவாக்கியமாம். ஆகையாற் பரார்த்தாநுமானமெனப்படும். ஈண்டுச் சீவன் பக்ஷம், பிரஹ்மாபேதம் சாத்தியம், சேதனத்தன்மை ஏது, பிரஹ்மம் திருஷ்டாந்தம். ஈண்டுப் பிரதிவாதியானவன் ஜீவனிடத்துச சேதனத்தன்மையாகிய ஏதுவே யிருக்கின்றது, பிரஹ்மாபேதமாகிய சாத்தியமில்லை யென்றிவ்வாறு பக்ஷத்தில் சேதனத்தன்மையாகிய ஏதுவிற்குப் பிரஹ்மாபேதரூப சாத்தியத்தோடு வியபிசார சங்கை செய்யின், தர்க்கத்தால் அச்சங்கையை நிவிருத்திசெய்யவேண்டும். ஈண்டுத் தர்க்கத்தின் சொரூபம் இதுவாம்:—ஜீவனிடத்துச் சேதனத்தன்மையாகிய ஏதுவை யங்கீகரித்துப் பிரஹ்மாபேதமாகிய சாத்தியத்தை யங்கீகரியாவிடின, சேதனத்திற்கு அத்விதீயத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிக்கு விரோதமுண்டாகும். அநிஷ்டத்தைச் சம்பாதித்தல் தர்க்கமெனப்படும். சுருதியின் விரோதம் சர்வ (வைதிக) ஆஸ்திகர்களுக்கும் அநிஷ்டமாம். வியவகாரிகப் பிரபஞ்சம் மித்தை, ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந்தன்மையால், யாண்டு யாண்டு ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந்தன்மை யுண்டோ, ஆண்டுஆண்டுமித்தியாத்துவமுண்டு, இப்பி வெள்ளி முதலியவற்றிற்போல. ஈண்டு வியாவகாரிகப் பிரபஞ்சம பக்ஷம், மித்தியாத்தன்மை சாத்தியம், ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந் தன்மை ஏது, இப்பி வெள்ளி முதலியன திருஷ்டாந்தம். வியாவகாரிகப்பிரபஞ்சம் மித்தையென்பது பிரதிஞ்ஞை வாக்கியம், ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந் தன்மையாலென்பது ஏதுவாக்கியம, யாண்டு யாண்டு ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந் தன்மையுண்டோ, ஆண்டு ஆண்டு மித்தியாத்துவமுண்டு, இப்பி வெள்ளி முதலியவற்றிற்போல வென்பது உதாகரண வாக்கியம். ஈண்டும் பிரபஞ்சத்திற்கு ஞானத்தால் நிவிருத்திக்கப்படுந் தன்மையை அங்கீகரித்து மித்தியாத் தன்மையை யங்கீகரியாவிடின் சத்தி (உள்ளது) ற்கு ஞானத்தால் நிவிருத்தி பொருந்தாது. அதனால் ஞானத்தால் சகலப் பிரபஞ்சமும் நிவிர்த்தியாதலைப் பிரதிபாதிக்கும் சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமுண்டாமென்னும் தர்க்கத்தால் வியபிசார சங்கையின் நிவிருத்தி யுண்டாகின்றது."

கயிறென்பு தொன்றிலே யானல் அதிற்றோன்றும் பாம்பென்ப தெங்ஙனமின்றே அங்ஙனமே நான் என்னும் பொருளொன்றில்லை யானல் என்னிடத்தில் நாமரூப வடிவ வுலகந்தோனறுதற்

கிடனின்றும். நான் எல்லா வவத்தையினும் மாறுதிருத்தலினுலும் நாமரூப வடிவ வுலகம் என்னிடத்துப் பாவமாகவும் அபாவமாக வும் மாறி மாறி வருதலானும் நானே யுளன். பிறிதொன்றென் பது யதார்த்தமாக வென்னைவிட்டில்லை. ஆதலால் நானே உலகி ற்கு ஆதாரமாகவும் அதிஷ்டானமாகவு மிருக்கிறேன். உலகு என் னிடத்தில் ஆதேயமாகவும்,ஆரோபமாகவு மிருக்கிறதென்று சிந் தித்தல் தருக்க வாயிலாக வுண்டாய சிந்தனையா மென்க.

மனனத்திற்குச் சகாயமாக ஸ்ரீவிருத்திப் பிரபாகரத்துட் கூறிய அநுமானங்களை யன்றி வேறு அநுமானங்களும் வருமாறு:—

(1) ஆத்மா மித்தியா பதார்த்தத்தின் வேறு என்பது பிரதிஞ் ஞை,பாரமார்த்திகமாயும் சித்தனமாயுமிருத்தலான் என்பது ஏது, யாது யாது பாரமார்த்திகமாயும் சித்தனமாயு மிருப்பதன்று அது அது வாத்மா வன்று கடம்போல என்பது—உதாரணம்.

(2) உலகம் தனக்கென வடிவ மொன்றிலாதது—பிரதிஞ் ஞை, விசாரணை முகத்து மித்தையாய்ப் போவதால்—ஏது, யாது, யாது விசாரணைமுகத்து மித்தையாய்ப் போவது அது வது தனக் கென வடிவமொன்றில்லாதது கானல் நீர்போல—உதாரணம்.

(3) உலகு அசத்து—பிரதிஞ்ஞை,உணருருவாயிருத்தலால்— ஏது, யாது யாது உணருரு அதுவது அசத்து, கடபடம்போல— உதாரணம்.

(4) தேகேந்திரியாதிகளுக்கு விலட்சணமாயுள்ள நான் பிரம த்திற்கு வேறு பட்டவனன்று—பிரதிஞ்ஞை,சச்சிதாநந்த வடிவமா யிருத்தலால்—ஏது,யாது யாது சச்சிதாநந்த வடிவமாயிருப்பதன்று அதுவது பிரமத்திற்கு வேறுபட்ட தன்றன்று கடம்போல—உதா ரணம்.

(5) எத்தகைய பதவிமோக்ஷங்களும் அநித்தியமே—பிரதிஞ் ஞை, கிரியமாயிருத்தலால்—ஏது, யாது யாது கிரியம்அதுவது அநித்தியம் கடம்போல—உதாரணம்.

(6) இக்கடம் வியாவகாரிகசத்து—பிரதிஞ்ஞை,பிராதிபாஸிக சத்தினும் வேறாய்த் தத்துவஞானத்தினுல்பொய்யென்று நிச்சயித் தற் குரித்தாயிருத்தலின்—ஏது, யாது யாது பிராதிபாஸிக சத்தி னும் வேறாய்த் தத்துவஞானத்தினுல் பொய்யென்று நிச்சயித்தற் குரிய தன்று, அதுவது வியாவகாரிக சத்தன்று, பாரமார்த்திக சத்தாய ஆத்மாபோல—உதாரணம்.

[தத்துவஞானத்தினல் பொய்யென்று நிச்சயித்தற் குரியது வியாவகாரிக சத்தெனவும், தத்துவஞானமின்றியேபொய்யென்று நிச்சயித்தற்குரியது பிராதிபாஸிக சத்தெனவும், எவ்வகையாலும் பொய்யென்று நிச்சயித்தற் குரிய தாகாதது பாரமார்த்திக சத் தெனவுமறிக.] இக்கடமெனக் கூறப்பட்டதேனும் இனம் பற்றி இவ்வாருய ஒவ்வொன்றையும் இங்ஙனமே அனுமானஞ் செய்து கொள்க.

வேறு நூல்களிலுள்ள அனுமானங்களுட் சில வருமாறு:—

(1) சித்தாந்தபிந்து.

"பிரமத்திற்கு அந்நியமானவை மித்தை, திருசியமாயிருத்த லால், கிளிஞ்சல் வெள்ளி முதலியவற்றைப்போல."

(2) பாலபோதம்.

"பிரபஞ்சம் மித்தை, திருசியமாயிருத்தலால், சொப்பன முதலியவற்றைப்போல, எங்கே மித்தியாத்துவமில்லையோ அங்கே திருசியத்துவமுமில்லை, ஆன்மாவிற்போல வென்பது வெதிரேக வியாப்தி."

(3) பதார்த்த மஞ்சூஷா.

"வியாவகாரிகப் பிராதிபாஸிகமாகிய சகல துவைதமும் பார மார்த்திக சத்தியமன்று, அநான்மாவா யிருத்தலால், யாது பார மார்த்திக அசத்தன்று, அநேகஞத்துமாவுமன்று சேதனமாகிய ஆன்மாவைப்போல, இங்கே சகல துவைதமும் பக்ஷம்."

(4) வேதாந்த பரிபாஷை.

"பிரமத்திற்குப் பின்னமான யாவும்மித்தை, பிரமத்திற்குப் பின்னமாயிருத்தலால், சுத்தி வெள்ளியைப்போல."

சி: இம்மனனத்திற் கேது யாது ?

கு: நித்தியா நித்திய வஸ்து விவேகமேயாம்.

சி: சொரூபம் யாது ?

கு: அத்வைத ஆத்மதத்துவத்தை விசாரிக்கின்றதேயாம்.

சி: காரியம் யாது ?

கு: ஆத்மா இருந்தால் தோன்ருத என்னும் அபானுவரணத்தை (நபாதியை) நாசஞ் செய்கிறதேயாம்.

சி: அவதியாவதென்னை ?

கு: நஷ்டமாய அவ்வாவரணம் மறுபடியும் வாராதிருக்கும் வரை ஆன்மசொரூபத்தைச் சிந்திப்பதேயாம்.

சி: ஃலமாவதியாது ?

கு: ஆத்மாவின் அபரோக்ஷ ஞானமேயாம்.

(7) நிதித்தியாசனம்.

சி: நிதித்தியாசனமாவதியாது ?

கு: அநாத்மாகார விருத்திகளைத் தடுத்தல் பூர்வகமான ஆத்மாகார விருத்திகளின் பிரவாகம் † நிதித்தியாசன மெனப்படும்.

அஃதாவது சிந்தனையால் நிச்சயிக்கப்பட்ட ஆத்மாவில் சித்தம் நிச்சலமாயிருப்பதாம்.

இஃதைந் தங்கங்களுடைத்தா யிருக்கும்.

அவை (1) மந்திரயோகம், (2) பரிசயோகம், (3) பாவயோகம், (4) அபாவயோகம், (5) மகாயோக மென்பனவாம்.

(1) பிரணவ முதலிய மந்திராப்பியாசத்தினால் மனம் ஆத்மாவில் இலயமாவதே மந்திரயோகமாம்.

(2) அம்மந்திரயோக சகிதமாய் மனமும் பிராணவாயுவும் ஒருமைப்பாடடைந்து மூலாதாரத்திருந்து சுழிமுனை நாடி மார்க்கத்துளேறிச் சிரசின் நடுவிலுள்ள ஆத்மப் பிரகாசத்தில் அம்மனம் இலயமாவதே பரிசயோகமாம்.

(3) சுவர்க்கம் சிரசாகவும்; திக்குகள் காதாகவும், சூரிய சந்திரர்கள் கண்ணாகவும், அக்கினி முகமாகவும், ஆகாயம் நாபியாகவும், பூமி பாதமாகவுமுடைய பரமேசுவரனது விராட்புருஷ வடிவத்தைத் தியானித்துப், பின்னும் சகஸ்திராபரண சகிதமான பர

† நிதித்தியாஸனத்தின் பரிபாக அவஸ்தையே சமாதியாயிருத்தலால் சமாதி வேறு சாதனமாய் நில்லாது நிதித்தியாஸனத்தி லடங்கும். காண்பான் காட்சி காணப்படும் பொருளென்னும் திரிபுடி விளக்கத்தோடு கூடிய சவிகற்ப சமாதி நிதித்தியாசன மென்றும், அதனப்பியாச வாயிலாக வுண்டாகும் (திரிபுடியின் விளக்கமின்றிய) நிர்விகற்பசமாதி சமாதி யென்று மறிக.

நிதித்தியாசனத்தில் ஆத்மாகார விருத்தியினிருப்பு பிரயத்தனங்கொண்டு வளைத்தவரை யிருக்கும் கிளையின் வளைவுபோலிருக்கும். கரத்தாற் பற்றியிருத்தலாகிய முயற்சி நீங்கிய விடத்துக் கிளையின் வளைவு நீங்கி விடுதல் போன்று நிதித்தியாஸனத்தில் அநாத்மாகார விருத்திகளைத் தடுத்தல் பூர்வகமான பிரயத்தினம் நீங்கியவுடன் ஆத்மாகார விருத்தி நீங்கிவிடும், சாட்சாத்காரத்திலோ அநாத்மாகார விருத்தியின் மறைப்பின்றிய ஆத்மாகார விருத்தியினிருப்பு இயல்பாகவே வளைந்துள்ள மரத்தின் கிளையினைப் போன்று பிரயத்தினமின்றி யுண்டாயிருக்கும். நிதித்தியாசனம் சாதன மென்றும் சாட்சாத்காரம்*(சமாதி) ஆத்தியமென்று மறிக.

மேசனது திவ்வியவடிவைத் * தியானித்து, அப்பால் அவ்வடிவத்தின் அவயவங்களைக் காலக்கிரமத்தி லொன்றொன்றாய் விட்டு மிஞ்சிநின்ற அவயவி ரூபமான சத்ரூபப்பிரமத்தில் மனம் இலயமாய்ப்போவதே பாவயோகமாம்.

(4) அவாங்மனோ கோசரமாய்ப் பிரமாண்டத்திற் கதீதமாயுள்ள நிரூபாதிகப் பிரமத்தில் மனம் இலயமாவது அபாவயோகமாம்.

(5) தோற்ற வொடுக்கத்திலும் அறிவறியாமையிலும் தனக்கொரு கெடுதியுமின்றி யொரே பரிசாய் விளங்கும் பிரத்தியகாத்மப் பிரமத்தில் மனம் இலயமாவது மகாயோகமாம்.

இவ்வைவகை யோகத்திற்கு, முறையே பிரமாணம் வருமாறு:—

* தியானஞ் செய்வது பற்றி வாசுதேவ மனனங் கூறுவது அவசியமாயிங் கறியத்தக்கதாம். அது வருமாறு:—"மனம் பட்டியாட்டைப்போன்றது. அப்பட்டி மாடு சர்வதாப் பயிரைக் குறித்துக்கொண்டே போகும்; பிடித்துக் கட்டப்போனால் ஓடிப்போம். அதனைப் பிரயாசத்தினால் பிடித்துக்கட்டி வீட்டுக்குள் கொண்டு வந்தாலும் அதின்முன் வைக்கோலாதிகளைப் போட்டாலும்அவைகளை மோந்துவிட்டு முன்னர் மேய்ந்த பயிர்களையே சிந்தித்துக் கொண்டிருக்கும்; பின்பவிழ்த்து விட்டால் திரும்பவும் அந்தப்பயிரை நாடிக் கொண்டே போய் விழும். மறுநாளு மிந்தப்படியே பிடித்துக்கட்டி வீட்டுக்குள் வைக்கோல் தவிடு முதலானவற்றைப் போட்டாலும் அவற்றைச் சற்றுநேரந்தின்று விட்டுப் பிறகு எப்போதும்போல் அப்பயிரையே சிந்தித்திருக்கும். இந்தப் பிரகாரம் நாள்தோறும் விடுவித்தும் கட்டுவித்தும் தீனிபோட்டும் பழக்கிக்கொண்டு வரவர வீட்டுத் தீண்டி யப்பியாசமாய் வெளியிலோட்டி விட்டாலும் அதுதானே போனாலும் மறுபடியும் வீட்டிற்கேவரும்; பிறகுத் தோட்டினாலும் போகாது. அந்தப் பட்டிமாடு அப்பியாசத்தினால் வீட்டுக்குள்ளே தானே கட்டுப்பட்டது போன்று இந்த மனத்தையும் அப்பியாசத்தினாலும் வைராக்கியத்தினாலும் நிறுத்தலாம். நித்தியமும் தனக்கபிஷ்டமான மூர்த்தியைத் தியானஞ் செய்ய வுட்கார்ந்தால் அம்மனம் அகமுகப் படாமல் முன்போலவே பகிர் முகப்பட்டு விஷயங்களிற் போய் விழும். அவ்வாறு விழுகின்ற மனத்தைத் திருப்பித்திருப்பி யகமுகப்படுத்தி மூர்த்தி சொரூபத்தில் நிறுத்தினால் சற்றே நிற்கும். திரும்பவும் பழக்கப்படியே போய் விழும். மறுநாளிரண்டு நாழிகை, அதற்கு மறுநாள் நான்கு நாழிகை, அதற்கு மறுநாள் எட்டுநாழிகை இவ்வாறே அப்பியாசப்படுத்திக்கொண்டே வரவர, இந்த அப்பியாசத்தினால் முன் போடிய மனம் எங்கே நிறுத்தினாலும் அங்கேயே நிற்கும். இதுவே அப்பியாசமாம்.

பூதலத்திற் பார்க்கி லில்லை, விங்கியவா சைகளெல்லா மிறந்தகாலை விரிந்தமன மிறப்பதுவே வீடென் றோது, மோங்கியவீ டெனக் குளதென் றுள்ளே யெண்ண முண்டாகின் மீண்டுமன முற்ப விக்கும்.

சி:—நிதித்தியாசனத்திற் கேது யாது?

கு:—சாதன சதுஷ்டயத்துடன்கூடி அவதி பரியந்தம் நன்று யனுஷ்டிக்கப்பட்ட சிரவண மனனங்களேயாம்.

சி:—சொரூபம் யாது?

கு:—அகண்ட பரிபூரண சச்சிதாநந்த பிரமமே நான்; நானே அகண்ட பரிபூரண சச்சிதாநந்த பிரமமென்று பிரியத்துடன் (இடைவிடாது) தைலதாரை போன்று சுஜாதிய (ஆத்மாகார) விருத்தியோடு சதாத்தியானஞ் செய்வதாம்.

சி:—காரியம் யாது?

கு:—அகமும் புறமும் சப்தாதி விடயங்கள் தோன்றாது தியானமாத்திரமா யிருப்பதாம்.

சி:—அவதி யாது?

கு:—தியானமும் தியானிக்கப் படுகின்றவனு மிழந்து சுத்த சத்துவ மனதாய்ப் பாலிற் சேர்ந்த ஜலம் போன்று அகண்ட பரிபூரண சச்சிதாநந்த பிரமத்தில் ஏகரசமாயக் கலந்திருப்பதாம்.

சி:—பலம் யாது?

கு:—பிரதிபந்த ரகித அபரோக்ஷ சாக்ஷாத்காரமாய ஞானமாம்.

ஞானத்திற்குச் சிரவணாதிகள் பரம்பரையாகக் காரணமாதல்.

சி:—சிரவணாதிகள் ஞானத்திற்குப் பரம்பரையாதலைக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு:—நான் பிரமமன்றென்பதே அஞ்ஞானமாம்; நான் பிரமமோ அல்லனோ என்பதே சமசயமாம்; நான் பிரமமாயினும் சுருதியுக்தியால் எனக்கு முன்னுள்ள ஜீவபாவமிருக்கின்றதென்பதே விபரீதமாம். இம்மூன்றும் சிரவணாதிகளால் முறையே நிவர்த்தியாம். ஆகவே, சிரவணாதிகள் பரம்பரையாகக் காரணமாயிருக்கின்றன வென்பதாம்.

சி:—இவ்விஷயத்தினை நன்கு விளக்கிக் கூறுமாறு வேண்டுகின்றனன்.

மகாவாக்கியம்.

சி:—மகாவாக்கியமாவதியாது?

கு:—தத்பதார்த்த துவம்பதார்த்தங்களின் அபேதத்தையறி விக்கும் தத்துவமசி முதலியன மகாவாக்கியமாம்.

மகாவாக்கியத்தினால் பிரமம் நான்; என்னும் அபரோட்ச ஞானமுண்டாகும். அபரோட்ச மெனினும் பிரத்தியட்ச மெனினு மொக்கும். ஞானாசிரியன் சீடனைநோக்கி "நினைவரிய வொரு பிரமம் நீயே" யென்றவ்வளவிலே உபதேசிக்க அவனுக்கவ்வாக்கியம் சாதிர்சமபந்தப்பட்டவுடனே நான்பிரமம் என்னும் அபரோட்சஞானமுண்டாகின்றது. உண்டாகவே, சுரோத்திரசம்பந்தமுள்ள மகாவாக்கியமே அபரோட்சஞானத்திற்குச் சாட்சாத் (நேர்) காரணமென்பது தெள்ளிதின் விளங்கும்.

இதுகாறுங் கூறிய வாற்றால் சுரோத்திர சம்பந்தமுள்ள அவாந்தரவாக்கியத்தால் பிரமம இருக்கிறது அல்லது ஜீவன் இருக்கிறது என்னும் பரோட்சஞானமும் மகாவாக்கியத்தால் பிரமம் நான் என்னும் அபரோட்சஞானமுமுண்டாமென்பது பெறப்பட்டவாறறிக.

சி:—தத்பதார்த்த துவம்பதார்த்தங்களின் அபேதத்தையறி விக்கும் மகாவாக்கியம எத்தனை வகையாம்?

கு:—அவை நான்குவகையாம்?

சி:—அவற்றை விரித்துரைத்தருளல் வேண்டும்?

மகாவாக்கியவகை.

கு:—வேதத்திலுள்ள வாக்கியங்களியாவும் மூன்றுவகுப்பினவாயிருக்கும். அவை: விதிவாக்கியம், நிஷேதவாக்கியம், சித்தார்த்தபோதகவாக்கியமென்பனவாம். அவற்றுள் "ஜோதிஷ்டோமத்தால் சுவர்க்ககாமன் யஜிக்கக்கடவன்" என்றாற் போல்வது விதிவாக்கியமாம். "கலஞ்சம் (கஞ்சா) தின்னலாகாது" என்றாற்போல்வது நிஷேதவாக்கியமாம். விதிநிஷேத சூனியமாய்ப் பிரமாத்தும வைக்கியப் பொருள்மாத்திரத்தைப்போதிக்கும் வாக்கியம் * சித்தார்த்தபோதகவாக்கியமாம்.

---

* சித்தித்த (பெறப்பட்டுள்ள) அர்த்தத்தை (பொருளை) ப்போதிக்கும் வாக்கியம் சித்தார்த்த போதகவாக்கியமாம். சாதனவாயிலாகப்பெறும் பொருளைப்போதிக்கும் வாக்கியம் சாத்தியவாக்கியமாம்.

அச்சித்தார்த்த போதகவாக்கியமே மகாவாக்கியமாம். [அவாந்தரவாக்கியம் சித்தார்த்தபோதக வாக்கியத்தில் அந்தர்க்கதமாம். இங்ஙனமன்றி விதிவாக்கிய, நிஷேதவாக்கியம், அவாந்தர வாக்கியம், மகாவாக்கியம என வேதவாக்கியம் நான்குவகைப் படுமென்று கூறுதலுமுண்டு.]

அம்மகாவாக்கியம் இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென்னும் நான்குவேதங்களிலும கிரமத்தில் நானகுண்டு. அவை (1) ப்ரஞ்ஞானம் பிரமம் (2) அகம்பிரமாஸ்மி (3) தத்துவமசி (4) அயமாத்மாப்பிரமம் எனபனவாம இந்நான்கனுள் தத்துவமசி எனபது உபதேசவாக்கியமாம். ஏனையவை அனுபவவாக்கியமாம். இங்ஙனமன்றி அகம்பிரமாஸ்மியென்பது சிந்தனாது அனுபவவாக்கியம், ப்ரஞ்ஞானம் பிரமம் என்பது லட்சணவாக்கியம், அயமாத்மாப் பிரமம் என்பது சாட்சாத்காரவாசகியமென்று கூறுதலுமுண்டு.

தத்துவமசியென்பது உபதேசவாக்கியமாயிருத்தலின் அதுபற்றி யஃதேனையவற்றினும் சிறந்ததாகக்கொள்ளப்பட்டிருத்தலின் முன்னர்த்தத்துவமசி மகாவாககியம் விவகரிக்கப்படுகின்றது.

(1) தத்துவமசி.

தத்துவமசியென்பது சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்திலுள்ள மகாவாக்கியமாம். அது தத், துவம், அசியென மூனறுவகையாய்ப்பிரிபட்டிருக்கும்.

தத்பதவாச்சியமாய ஈசனுக்கும் துவமபத வாச்சியமாய சீவனுக்கும ஐக்கியம கூடாமையின தத்பதலட்சியமாய பிரமத்திற்கும் துவம்பதலட்சியமாய கூடஸ்தனுக்குமே ஐககியம் சம்பவிக்கும்.

சி:—ஈசனுக்கும் சீவனுக்கும யாதுபற்றி ஐக்கியம் சம்பவிக்கவில்லை?

கு:—ஈசனும் சீவனும் மாயா அவித்தியா உபாதியால் மேகாகாசம்போலும் கடப்பிரதிபிமபவாகாசம் போலுமிருத்தலின் அவ்விருவர்க்கும் ஐக்கியமொருபோதுஞ் சித்திக்காது.

சி:—பிரமத்திற்கும் கூடஸ்தனுக்கும் ஐக்கியம் சம்பவிக்குமென்பதெப்படி?

கு:—பிரமமும் கூடஸ்தனும் மகாகாசம்போலும் கடாகாசம் போலுமிருத்தலின் அவ்விருபேதனங்கட்கே ஐக்கியஞ்சம்பவிக்கும்.

சி:—தேவரீர் இங்குக்கூறியவைகளை நன்குவிளக்கிக் கூறுமாறு பிரார்த்திக்கின்றனன்.

கு:—சாந்தோக்கிய உபநிஷத்தில் உத்தாலகமுனிவர் தமது புத்திரனுபசுவேதகேதுவிற்கு ஜகத்தைபுண்டுபண்ணும் ஈசனைக்காட்டித்தத்துவ (அது நீ) மசியென்றுகூறினர். அதன் வாச்சியார்த்தமிதுவாய்:—

தத் என்பது சர்வசக்தியானும், சர்வஞ்ஞனும், விபுவும், சுதந்திரனும், பரோட்சனும், மாயியும், பந்தமோக்ஷமின்றியவனுமாய ஈசனும். அஃதாவது தத்பதத்தின் வாச்சியார்த்தம ஈசனுமென்பது.

துவம் என்பது அற்பசக்திமானும், அற்பஞ்ஞனும், பரிச்சின்னனும், அநீசனும், காமாதீனனும், அவித்தியாயோகிதனும், பந்தமோக்ஷமுடையவனும் பிரத்தியட்சனுமாய சீவனும். அஃதாவது துவம்பதத்தின் வாச்சியார்த்தம் சீவனுமென்பது. அசியென்பதன்பொருள் ஐக்கியம் அல்லது இருக்கிறாய் என்பது.

இங்குத்தத்துவமசி (அது நீயாயிருக்கிறாய்) என்றுரைப்பதினால் ஈசுவர ஜீவர்களின் அபேதம் வாச்சியார்த்தத்தால் விளங்குகின்றது. விளங்கினும் அது பொருந்தாது; ஏனெனின், தமமுள் மாறுனதர்மமுள்ள (மாயையைச் சுவாதீனத்தில் வைத்துள்ள) ஈசனும (அவித்தியாயோகிதனன) சீவனுமாய இருவரும் ஒன்றெனக்கூறுவது ஆகாயம் கனத்திருக்கிறது நெருப்புக்குளிர்ந்திருக்கிறது என்றுரைப்பதற் கொப்பாயிருத்தலின், விரோதப்படுகின்ற வாச்சியார்த்தத்தைவிட்டு லட்சணையால் லட்சியார்த்தத்தை யறியவேண்டும். விட்டலட்சணை, விடாதலட்சணை, விட்டுவிடாதலட்சணையென்னும் மூன்றனுள் விட்டுவிடாத லட்சணையினாற்றான் தத்துவமசி மகாவாக்கியத்தில் விரோதம்நீங்கி ஐக்கியஞ்சம்பவிக்கும்.

லக்ஷணையின் பேதம்.

சி: அதனை விளக்கமாகக் கூறல் வேண்டும்?

கு: சப்தத்திற்(சொல்லிற்)கு அர்த்தத்தோ (பொருளோ)டுள்ள சம்பந்தம் சப்தத்தின் விருத்தியெனப்படும். அவ்விருத்தி சக்தி லட்சணை யென்னும பேதத்தா லிருவகையாம். சப்தத்திற்கு அர்த்

தத்தோடுள்ள சாக்ஷாத் (நேர்) சம்பந்தம் சக்தி விருத்தியாம். அச்சக்தி விருத்தியினு லறியப்படுவது * வாச்சியார்த்தமாம். அவ்வாச்சியார்த்தத்தின் சம்பந்த மெதுவோ அது லட்சணு விருத்தி யெனப்படும். அந்த லட்சணு விருத்தியினு லறியப்படுவது லக்ஷியார்த்த மெனப்படும்.

அந்த லக்ஷணை விட்ட (ஜகல்) லக்ஷணை, விடாத (அஜகல்) லக்ஷணை, விட்டுவிடாத (பாகத்தியாக) லக்ஷணை யென மூவகைத்தாம்.

(1) விட்டலக்ஷணை.

யாண்டு வாச்சியார்த்தம் முழுவதும் விடுபட்டு வாச்சியார்த்தத்தின் சம்பந்தி கிரகிக்கப்படுகிறதோ அது விட்டலக்ஷணையாம். ஒருவன் மற்றொருவனை நோக்கி இடைச்சேரி யாண்டுளதென்று வினவ, அதற்கவன் இடைச்சேரி கங்கையிலிருக்கிறதென்று கூறுவானாயின், ஆண்டுக் கங்கை யென்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாய கங்காநதியின் பிரவாகத்தில் இடைச்சேரியிருத்தல் பொருந்தாமையின், வாச்சியார்த்தமாய கங்காநதியின் பிரவாகம் முற்றும் விடுபட்டு அதன் சம்பந்தியான கரை கிரகிக்கப்படுகின்றது.

கங்காபதத்தின் வாச்சியத்திற்குங் கரையோடுள்ள சம்பந்தம் லக்ஷணையாம். வாச்சியம் முற்றும் விடுபட்டமையின் ¶ விட்ட லக்ஷணையாம்.

"மஞ்சுகூப்பிடு மென்றல்போலவும் வடபகிரதி யுள்ளதே, விஞ்சுகோசமதென்றல் போலவும் விட்டலக்கணையாவதே" என்று சசிவன்னபோதங் கூறுவது மறிக.

(2) விடாத லக்ஷணை.

யாண்டு வாச்சியார்த்தம் விடுபடாது அதன் சம்பந்தி கிரகிக்கப்படுகின்றதோ அது விடாதலக்ஷணையாம்.

ஒருவன் வெள்ளை ஓடுகின்றது என்று கூறுவானாயின் ஆண்டு வெள்ளை யென்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய வெண்மை நிறத்தில் ஓடுதல் சம்பவியாதாகலின், வெண்ணிறமுள்ள குதிரை ஓடுகின்றதென வாச்சியார்த்தம் விடுபடாமல் அதன் சம்பந்தியான குதிரை யென்னும் அதிக அர்த்தம் கிரகிக்கப்படுகின்றது.

---

* வாச்சியார்த்தைச் சக்தியார்த்த மென்றும் முக்கியார்த்த மென்றும் கூறுவர்.

¶ "சொல்லின்பொருட்குக்கொண்டு கூட்டில்லாதவிடத்து விட்டலக்கணை. அது கட்டில் கரைகின்றது" என்று தருக்க சங்கிரகம் கூறுகின்றது.

வெண்மை நிறத்திற்கும் குதிரைக்கும் ஒற்றுமைச் சம்பந்தமிருத்தலால் வெள்ளையென்னும் பதத்தின் வாச்சியமான வெண்ணிறத்திற்குக் குணியாகிய குதிரையோடுள்ள ஒற்றுமைச் சம்பந்தம் லக்ஷணையாம். வாச்சியத்தினை விடாது அதிக அர்த்தத்தைக் கிரகிப்பதாயிருத்தலால் * விடாத லட்சணையாம்.

"சிவலைநின்றதுவெள்ளைபோயின தென்றுசெப்புதல்போலவே, கவலைபன்றிவிடாதலக்கணை யென்றுநீகொள் கருத்திலே" என்று சசிவன்னபோதம் கூறுவது மறிக.

(3) விட்டுவிடாத லக்ஷணை.

யாண்டு விரோதமுடைய சிலவாச்சிய பாகம் விடப்பட்டு அதன் சம்பந்தியாகிய விரோதமில்லாத சிலவாச்சியபாகம் கொள்ளப்படுகின்றதோ, அது விட்டுவிடாத லக்ஷணையாம்.

முன்னமொரு தேசகாலங்களில் பார்க்கப்பட்டுள்ள தேவதத்தன் அன்னிய (வேறு) தேசகாலங்களில் பார்க்கப்படுவானாயின், அப்போது அவனைப்பார்க்கும் யஞ்ஞதத்தனானவன் அந்தத்தேசத்திலும் அந்தக்காலத்திலும் பார்க்கப்பட்ட தேவதத்தன் எவனோ அவனே இந்தத்தேசத்தில் இந்தக்காலத்தில் வந்திருக்கிறானென்றுரைக்கின்றான். ஈண்டு அந்தத் தேசகாலங்களும் இந்தத்தேசகாலங்களுமாகிய வாச்சிய பாகங்களுக்கு ஐக்கிய (ஏகத்துவ) விரோதமிருத்தலின், அவற்றின் பார்வைவிட்டு, தேவதத்தனிவன்றான் என்னும் விரோதமில்லாத வாச்சியபாகம் கிரகிக்கப்படுகின்றது.

ஈண்டுத் தேவதத்தனிவன்றான் (தேவதத்தன், இவன்றான்) என்னுமிரண்டு பதங்களிலுமுள்ள தேசகாலங்களாகிய வாச்சிய பாகம் விடப்பட்டு வஸ்து (உடல்) மாத்திரத்தில் ஆ இரண்டு பதங்களுக்கும் † விட்டுவிடாத லக்ஷணையாம்.

"மேவும்விட்டுவிடாதலக்கணை மெய்ம்மையாதெனிலந்தவித்; தேவதத்தனெனும்பொருட்படி சிந்தைசெய்திடுநீரே"

* "சொல்லின் பொருட்குக்கொண்டு கூட்டுள்ளவிடத்துவிடாத விலக்கணை. அது கவிகையாளர் செல்கின்றார் என்பது" என்று தருக்க சங்கிரகங் கூறுகின்றது.

† "சொற்பொருளினேகதேசத்தை விட்டு ஏகதேசத்திற்குத் தோன்றுள்ள விடத்து விட்டுவிடாத விலக்கணை. அது 'அது நீயாகின்றாய்' என்பது" என்று தர்க்கசங்கிரகங் கூறுகின்றது.

"விட்டலக்கணைதணையும்விட்டுவிடாதலக்கணைதணையுநீ, விட்டுவிட்டு விடாதலக்கணை யால்விளங்கும்விளங்கவே." "போதுமேவியதேக சம்விட்டொரு புருடனைக்கொளுமாறுபோ, லோதுமீருடல்கண்டு விட்டத னுண்மைகாணவுணர்ந்திடே." என்று சசிவன்னபோதங் கூறுவது மறிக.

தத்பதத்தின் வாச்சியம்.

மாயை, அதிலுள்ள சேதன ஆபாசம், அதனதிஷ்டான சேதனம் இம்மூன்றுங் கூடியது சர்வ சக்தி முதலிய தர்மங்களுடன் கூடிய ஈசுவரனும். இவ்வீசுவரன் (தத்துவமசி மகாவாக்கியத்தின்) தத்பதத்தின் வாச்சியமாம்.

துவம்பதத்தின் வாச்சியம்.

வியஷ்டி அவிச்சை, அதிலுள்ள சேதன ஆபாசம், அதனதிஷ்டான சேதனம் இம்மூன்றுஞ் சேர்ந்தது அற்ப சக்தி முதலிய தர்மங்களுடன் கூடிய ஜீவனும். இசீவன் துவம்பதத்தின வாச்சியமாம்.

தத்பதத்தின் லக்ஷியம்.

இவ்விரண்டற்கும் ஐக்கியத்தைத் தத்துவமசி மகாவாக்கியம் போதிப்பது பொருந்தாதிருத்தலால் ஆபாச சகித (கூடிய) மாயை மாயையாலுண்டாய சர்வசத்தி முதலிய தர்மங்கள் ஆகிய வாச்சிய பாகத்தை விட்டால் சேதன (ஈசுவர சாக்ஷியாய பிரம) பாகத்தில் தத்பதத்திற்கு விட்டுவிடாதலக்ஷணை சம்பவிக்கின்றது.

துவம்பதத்தின் லக்ஷியம்.

ஆபாச சகித அவித்தியாம்சம், அதனாலுண்டான அற்பசத்தி முதலிய தர்மங்கள்ஆகிய வாச்சியபாகத்தைவிட்டால் சேதன (ஜீவ சாக்ஷியாய கூடஸ்த) பாகத்தில் துவம்பதத்திற்கு விட்டுவிடாத லக்ஷணை சம்பவிக்கின்றது.

இங்ஙனம் விட்டுவிடாத லக்ஷணையினுல் ஈசுவர ஜீவர்களின் சொரூபத்திலுள்ள லட்சியமான சேதன (பிரமகூடஸ்த) பாகங்களின் ஐக்கியத்தைத் தத்துவமசி மகாவாக்கியம் போதிக்கின்றது.

இத்தத்துவமசி மகாவாக்கியம் சம்பந்தத்திரயத்தால் அகண்டார்த்தைப் போதியா நிற்கும்.

சி:—அவை யாவை?

கு:—அவை: சமானாதிகரணியபாவசம்பந்தம், விசேஷண விசேஷியபாவசம்பந்தம்; லக்ஷயலக்ஷணபாவசம்பந்த மென்பனவாம்.

சி:—அம்மூன்றையும் விளங்கக் கூறுமாறு பிரார்த்திக்கின்

(1) பதங்களின் சமானாதி கரணியபாவ சம்பந்தம் வருமாறு:—

கு:—சமான(ஒரு)வேற்றுமையின் பலத்தால் சமான (ஒரு) அதி கரண(அர்த்தவடிவ ஆசிரய) த்தினையுடைய இரண்டுபதங்கள் சமானாதிகரணமெனப்படும். ['கடவுள் ஒருவர்' என்னும்வாக்கியத்தில் கடவுளென்னும் பதமும் ஒருவர் என்னும் பதமும் சமான வேற்றுமை (முதல் வேற்றுமை) யாயிருத்தலால் ஒரு பொருளையே குறிப்பித்தவாறு காண்க.] அவ்விரண்டு பதங்களுக்குமுள்ள பரஸ்பர சம்பந்தம் சமானாதி கரணியம் (ஒரு பொருளுடைமை) எனப்

அவன்றான் இவன் (இத்தேவதத்தன்) என்னும் வாக்கியத்தில்அந்தக் காலத்துடன்கூடிய தேவதத்தனைக் குறிப்பித்துக்காட்டும் அவன் என்னும் பதமும்,இந்தக்காலத்துடன் கூடிய தேவதத்தனைக் குறிப்பித்துக் காட்டும் இவன் என்னும் பதமும்,ஒரு வேற்றுமை (அவன் இவன் என்னும் முதல்வேற்றுமை)யின் பலத்தால் ஒரே தேவதத்த சரீரத்தில் தாற்பரிய முடையனவாயிருத்தலால் (அவன் இவன் என்னும்) இவ்விரண்டு பதங்கட்கும் சமானாதிகரணியபாவசம்பந்தம் சித்திக்கின்றது. இவ்வாறே'தத்துவமசி'மகாவாக்கியத்தில் பரோட்சத்துவாதிகளுடன் கூடிய சேதனத்தைக் குறிப்பித்துக் காட்டும் 'தத்' என்னும் பதமும், அபரோட்சத்துவாதிகளுடன்கூடிய சேதனத்தைக் குறிப்பித்துக் காட்டும்'துவம்' என்னும் பதமும், ஒரு வேற்றுமை (தத் துவம் என்னும் முதல் வேற்றுமை)யின் பலத்தால் ஒரே சேதனத்தில் தாற்பரிய முடையனவாயிருத்தலால் (தத் துவம் என்னும்) இவ்விரண்டு பதங்களுக்கும் சமானாதி கரணியபாவசம்பந்தம் சித்திக்கின்றதென்க. இதன்கண்விருத்தமான பரோட்சத்துவாதிதர்மங்களும்அபரோட்சத்துவாதிதர்மங்களும்விடுபட்டுச் சேதனபாகம் விடப்படாதிருத்தலால் இச்சம்பந்தம் விட்டுவிடாத லட்சணையாமென்க. பின்வரும் சம்பந்தங்களும் இவ்விலட்சணையா மென்பதை யுய்த்துணர்ந்து கொள்க. விட்டுவிடாத லட்சணையெனினும், பாகத்தியாகலக்ஷணையெனினும், ஜகதஜகத் லட்சணை யெனினு மொக்கும்.

(2) பதார்த்தங்களின் விசேஷண விசேஷிய பாவசம்பந்தம் வருமாறு:—

ஒன்றைப்பிறித் தறிவிப்பதற்கேதுவா யிருப்பது விசேஷணமெனப்படும். அதனால் பிறித்தறிவிக்கப்பட்டது விசேஷியமெனப்படும். அவன்றான் இவன் (இத்தேவதத்தன்) என்னும் வாக்கியத்தில் இவன் என்னும் சொல்லால்விளங்குகிற இந்தக் காலதேச (இட) ங்களுடன்கூடியதேவதத்தனாகிய இவன், அவன் என்னும் சொல்லால் விளங்குகின்ற அந்தக் காலதேசங்களுடன் கூடிய தேவதத்தனினும் வேறுபட்டவனல்லனென்றெப்போது விளங்குகின்றதோ அப்போது இவன் என்னும் சொற்பொருளின் பேதத்தை அவன் என்னும் சொல்லின் பொருள் வேறுபடுத்துவதால் அவன் என்பது விசேஷணமும், இவன் என்னும் சொல்லின் பொருள் வேறுபடுத்தப்படுவதா யிருத்தலால் இவன் என்பது விசேஷியமுமாம். இவ்வாறே இவன்றான் அவன் (அத்தேவதத்தன்) என்னும் வாக்கியத்திலும் இவன் என்பது விசேஷணமும் அவன் என்பது விசேஷியமுமாம். இதனால், அவன்றான்இவன் இவன்றான் அவன் என்னும் வாக்கியங்களில் அவன் இவன் என்னும் பதங்கள் பொருள்நோக்கம்பற்றிப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) விசேஷண விசேஷியங்களா யிருக்கின்றன. [அஃதாவது அவன் என்பது ஒருநோக்கத்தில் விசேஷணமாயும் மற்றொருநோக்கதில் விசேஷியமாயும், இவன் என்பதும் அங்ஙனமே விசேஷணமாயும் விசேஷியமாயு மிருக்கின்றன வென்பதாம்.] இருக்கவே, விசேஷண விசேஷிய பாவவடிவசம்பந்தம் சித்திக்கின்றது. இதுபோன்று 'தத்துவமசி' மகாவாக்கியத்தில் 'துவம்'பதவாச்சியமாய அபரோட்சத்துவ (பிரத்தியட்சமாய) கிஞ்சிக்ஞத்வாதிகளுடன் கூடிய சைதன்னியம்,'தத்' பதவாச்சியமாய பரோட்சத்துவ சர்வஞ்ஞத்வாதிகளுடன கூடிய சைதன்னியத்திலும் வேறுபட்டதன்றென றெப்போது விளங்குகின்றதோ அப்போது 'துவம்' பதார்த்தத்தின் பேதத்தைத் 'தத்' பதார்த்தம் (பதப்பொருள்) வேறுபடுத்துவதால் 'தத' என்பது விசேஷணமும் 'துவம்' பதார்த்தம் வேறுபடுத்தப்படுவதா யிருத்தலால் துவம் என்பது விசேஷியமுமாம்.

இவ்வாறே 'துவந்ததசி' என்னும் வாக்கியத்தில் 'துவம்' என்பது விசேஷணமும், 'தத்' என்பது விசேஷியமுமாம். இதனால் 'தத்துவமசி' 'துவந்ததசி' என்னும் வாக்கியங்களில் 'தத' 'துவம்' என்னும் பதங்கள் பொருள்நோக்கம் பற்றிப் பரஸ்பரம் விசேஷண விசேஷியங்களா யிருக்கின்றன. [அஃதாவது தத்' தென்பது ஒருநோக்கத்தில் விசேஷணமாயும், மற்றொரு

நோக்கத்தில் விசேஷியமாயும், 'துவம்' என்பதும் அங்ஙனமே விசேஷணமாயும், விசேஷியமாயும் யிருக்கின்றன வென்பதாம்.] இருக்கவே, 'தத்துவமசி' மகாவாக்கியத்தில் விசேஷண விசேஷியபாவரூப சம்பந்தம் சித்தித்தவாறு காண்க.

(3) பிரத்தியகாத்ம பரமாத்மாக்களின் லட்சியலட்சண பாவ சம்பந்தம் வருமாறு:—

சிறந்தகுறியை யெடுத்துரைப்பது லட்சணமாம். அதனை யுடையது லட்சியமாம். அவன்றான் இவன் (இத்தேவதத்தன்) என்னும் வாக்கியத்தில் அவன் இவன் என்னும் சொற்களால் விளங்குகின்ற விருத்த தருமமாய அந்தக்காலதேசங்கள் இந்தக் கால தேசங்கள் இவைகளுடன் கூடியிருப்பவை ஆகிய விவைகளை விடுவதனால் அவிருத்தமாய தேவதத்தவிசிட்ட (கூடிய) தேவதத்த பிண்டத்தோ (பொருளோ)டு தேவதத்தத்தன்மையுடன் கூடிய தேவதத்தசப்தத்திற்கு லட்சியலட்சணபாவரூபசம்பந்தம் சித்திக்கின்றது. இவ்வாறே 'தத்துவமசி' மகாவாக்கியத்தில் 'தத்' 'துவம்' என்னும் சொற்களால் விளங்குகின்ற விருத்ததருமமாய பரோட்சத்துவ அபரோட்சத்துவாதிகளை விடுவதனால் அவிருதமாய சேதனத்தோடு தத்துவம் பதங்களுக்கு லட்சியலட்சணபாவரூப சம்பந்தம் சித்திக்கின்றதென்க.

இங்குத் 'தத்' 'துவம்' பதங்களுக்கும் அவைகளின் பொருள்களுக்கும் விடப்பட்ட விருத்தாம்சங்களில் லட்சணமும் அகண்டசேதனத்தில் லட்சியமும் இருத்தல்காண்க. [அவன்றான் இவன் (இத்தேவத்தன்) என்னும் வாக்கியத்தில் அந்தக்காலதேசங்களும் இந்தக்காலதேசங்களும் லட்சணமாம். தேவதத்தபிண்டம் லட்சியமாம். 'தத்துவமசி' மகாவாக்கியத்தில் பரோட்சத்துவாதிகளும் அபரோட்சத்துவாதிகளும் லட்சணமாம். அகண்டசேதனம் லட்சியமாம்.]

மகாவாக்கியத்தில் விட்டலக்ஷணையின் சம்பவமின்மை.

சி: விட்டலக்ஷணையால் மகாவாக்கியம் ஜீவேசுவரர்களின் ஐக்கியத்தைப் போதிக்காதோ?

கு: போதிக்காது.

சி: எப்படி?

கு: யாண்டு விட்ட லக்ஷணையுண்டோ ஆண்டு வாச்சியார்த்த முற்றும் விடுபடுகின்றது. மகாவாக்கியத்தில் விட்டலக்ஷணையைக் கொள்வோமானால், 'தத்' 'துவம்' பதங்களின் வாச்சியார்த்தங்க (ஈச ஜீவர்க)ளில் பிரவேசித்துள்ள பிரமசைதன்னிய சாக்ஷிசைத

ன்னியங்களுக்கு விடுபாடுண்டாய், அவற்றினும் வேறாய அநிர்த ஜடதுக்கவடிவப் பிரபஞ்சம் கொள்ளப்படுவதாம். அவ்வாறு கொள்வதனால் பெருமனர்த்தத்தின் அடைவுண்டாகும்; உண்டாகவே, அதனால் புருஷார்த்தம் சித்திக்கின்றதில்லை. ஆகையால் மகாவாக்கியத்தில் விட்டலக்ஷணை பொருந்தாது.

மகாவாக்கியத்தில் விடாதலக்ஷணையின் சம்பவமின்மை.

சி: விடாதலக்ஷணையால் மகாவாக்கியம் ஜீவேசுவரர்களின் ஐக்கியத்தைப் போதிக்காதோ?

கு: போதிக்காது.

சி: எப்படி?

கு: யாண்டு விடாதலக்ஷணையுண்டோ ஆண்டு வாச்சியார்த்தத்தின் ஒருபாகமும் விடுபடுகிறதில்லை. மகாவாக்கியத்தில் விடாதலக்ஷணையைக் கொள்வோமானால் 'தத்' 'துவம்' பதங்களின் வாச்சியார்த்தத்தின் ஐக்கியவிரோதம் நீங்காது. அதனால் லக்ஷணையைச் செய்தற்கு ஒருபயனுஞ் சித்திக்கவில்லை. ஆகையால் மகாவாக்கியத்தில் விடாதலக்ஷணை பொருந்தாது. தத்துவமசி மகாவாக்கியமேயன்றியேனைய மகாவாக்கியங்களிலும் விட்டுவிடாத லக்ஷணையன்றி யேனைய லக்ஷணைகள் சம்பவிக்கா.

சி: பிரஞ்ஞானம் பிரமம், அகம் பிரமாஸ்மி, அயமாத்மாப்பிரமம் என்னும் ஏனைய மகாவாக்கியங்களில் விட்டுவிடாத லக்ஷணை சம்பவித்தலைக் கூறியருளும்படி பிரார்த்திக்கின்றேன்.

கு: (1) பிரஞ்ஞானம் பிரமம், (2) அகம்பிரமாஸ்மி, (3) அயமாத்மாப் பிரமம் என்பனவற்றில் பிரஞ்ஞான பதத்திற்கும், அகம்பதத்திற்கும், ஆத்மபதத்திற்கும் வாச்சியம் ஜீவனும்; லட்சியம் கூடஸ்தனும். * பிரமபதங்களுக்கு வாச்சியம் ஈசுரனும்; லட்சியம் சுத்தப்பிரமமாம்.

---

(1) இஃது இருக்குவேதத்தின் ஐதரேயவுபநிஷத்தின் மகாவாக்கியமாம்.

இம்மகாவாக்கியத்தின் பொருள் பிரத்தியக் (உள்) சேதனம் பிரமம் என்பது.

(2) இது யசுர்வேதத்தின் பிருகதாரண்ணிய வுபநிஷத்தின் மகாவாக்கியமாம.

இம்மகாவாக்கியத்தின் பொருள் யான் (ஜீவசாக்ஷி) பிரமம என்பது.

(3) இஃததர்வணவேதத்தின் மாண்டூக்கிய வுபநிஷத்தின் மகாவாக்கியமாம்.

இம்மகாவாக்கியத்தின் பொருள் இந்த ஆத்மா பிரமம் என்பது.

* பிரமபதத்திற்கு மாயாசகித பிரமம் வாச்சியமென்றும், சுத்தப்பிரமம் அஃதாவது மாயாரகித சேதனம் லட்சியமென்று மறிக.

ஜீவேசுவரரென்னும்பெயர்களாலும்,பிண்டாண்டமென்னும் இடத்தாலும், அவித்தியா மாயா வென்னுமுபாதியாலும், வியஷ்டி சமஷ்டியென்னும் சரீர அபிமானத்தாலும், கிஞ்சிஞ்ஞன் சர்வஞ்ஞனென்னும் உணர்வினாலும், பிறவாற்றாலும் பாதலமும் விசும்பும்போன்று பின்னப்பட்டிருக்கும் வாச்சியார்த்தங்களாகிய ஜீவேசுவரர்களுக்கு ஐக்கியம் ஏஞ்ஞான்றுமுண்டாகாமையின், இம் மகாவாக்கியங்கள் வாச்சியார்த்தங்களைவிட்டு லட்சியார்த்தங்களாய கூடஸ்த பிரமங்களுக்குப் (பாகத்தியாக லட்சணையினால்) ஐக்கியத்தைப் போதிக்கின்றனவென்க.

சி: இங்குத் தேவரீரருளியதைச் சுருக்கமாகவெடுத்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: தன்னைவந்தடுத்துள்ள சீஷனுக்குக் குரு பக்குவங்கண்டருள்புரிந்து சொப்பனத்தில் சாக்கிரத்திலுள்ள ஸ்தூலதேகங் காணப்படாமையால் ஸ்தூலதேகம் நீயன்று; சுழுத்தியில் சொப்பனத்திலுள்ள சூக்குமதேகம் காணப்படாமையால் சூக்குமதேகமும் நீயன்று; சுழுத்தியில் விளங்கும் அஞ்ஞானமாய காரண சரீரம் சமாதியில் காணப்படாமையால் காரணதேகமும் நீயன்று; நீ இம்மூன்று சரீரங்களையும் கண்டுகொண்டு அவற்றிற்கு விலட்சணமாயிருக்கிறாய். ஆதலால், பஞ்சகோசங்கடக்கப்பாற்பட்டு விளங்கும் உனது நிசவடிவையுள்ளவாறறியக் கடவாய். உனது நிசவடிவந்தான் கூடஸ்தனெனப்படுவது; பந்தமுடையேனென்று துக்கின்ற நீதான் சீவனெனப்படுவது. உலகத்திற்குக்காரணமாயிருப்பதே ஈசுவரனும். இவ்வீசுவரன் பிண்டாண்டங்களைச்சரீரமாகவுடையவன். இவ்வீசுவரன் உலகம்பொய்யென்று நிச்சயிக்கப்படுமிடத்துச் சச்சிதானந்தவடிவமாத்திரமானபிரமமெனப்படுவன். தத் என்னும் பதவாச்சியார்த்தனான சர்வஞ்ஞத்துவாதிகுணத்துடன்கூடிய ஈசுவரனுக்கும், துவம் என்னும் பதவாச்சியார்த்தனான கிஞ்சிக்ஞத்வாதியின குணத்துடன் கூடிய சீவனுக்கும் ஐக்கியம் கூடாமையால்அசியென்னும்பதம் விரோதபாகமான சர்வஞ்ஞத்துவாதிகளையும் கிஞ்சிக்ஞத்துவாதிகளையும்விட்டு அவிரோதபாகமான சைதன்னியமாத்திர லக்ஷியார்த்தமாய பிரமகூடஸ்தரையங்கீகரித்து அதுவே இது இதுவே அது என்றேகத்துவத்தைப் போதிக்கும். சர்வஞ்ஞத்துவாதிகளும் கிஞ்சிக்ஞத்துவாதிகளும் மாயை அவித்தைகளினாற் கற்பிக்கப்பட்டனவாயிருத்தலால்

அவை மித்தையாம். மகாவாக்கியம் அறுஜிசித்தமாயுள்ள சேதன த்தையே போதித்தலின் சித்தார்த்தவாக்கிய மெனப்படுகின்றது.

சி: 'அதுவே இது' 'இதுவே அது' என்று போதிக்கும் கிரமத்தையெடுத்துரைத்தல் வேண்டும்.

கு: தத் துவம் (அதுநீ) துவம் தத் (நீஅது) என்று பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் ஐக்கியத்தினை அந்வயமென்றும், ஒதப்புரோதபாவமென்றும், வியதிகாரமென்றும், குறுக்கு நெடுக்குஎன்றும் கூறுவர். [பரஸ்பரம் - ஒன்றுக்கொன்று.] ஈசுவரவுபாதியாகியமாயையும் ஜீவவுபாதியாகிய அவித்தையும் அவற்றினலாகிய தர்மங்களாய சர்வஞ்ஞத்துவாதிகளும் கிஞ்சிக்ஞத்துவாதிகளுமில்லாதசேதனத்துக்குச் சொரூபமாகப் பேதமின்று. உபாதிகளையும் அவற்றாலுண்டாய தர்மங்களையும் விட்டுவிடுவதனால் கடாகாசம் கடப்பிரதிபிம்பாகாசம் மேகாகாசம் மகாகாசம் என்னும் நான்காகாசங்களுள் கடப்பிரதிபிம்பாகாசத்திற்கும் மேகாகாசத்திற்கும் ஐக்கியம் சம்பவியாமல் கடாகாசத்திற்கும் மகாகாசத்திற்கும் உள்ள உபாதியை விடுவதனால் ஐக்கியஞ்சித்திப்பதுபோன்று தத்துவம் பதங்களின் லட்சியமாய பிரமகூடஸ்த சேதனத்திற்கு ஐக்கியம் சித்திக்கின்றது.

சித்திக்கவே, அதுவே இது (நீ) இது(நீ)வே அது என்பது பெறப்படுகின்றது. இவ்வாறு கூறுதலால் பரோக்ஷத்துவப்பிராந்தியும் பரிச்சின்னத்துவப் பிராந்தியும் கெடும். தத்துவம் என்றுகூறுவதினுல் தத்பதத்தின் அர்த்தத்திற்குத் துவம் பதத்தின் அர்த்தத்தோடு பேதமின்மை கூறுவதாயிற்று. துவம் பதத்தின் அர்த்தமாகிய சாக்ஷி (கூடஸ்தன்) நித்திய அபரோக்ஷ (பிரத்தியட்ச)மா யிருத்தலால் பரோட்சத்தன்மைப் பிராந்திகெடுகின்றது. துவம் தத் என்றுரைப்பதனுல் துவம் பதத்தின் அர்த்தத்திற்குத் தத்பதத்தின் அர்த்தத்தோடு பேதமின்மை உரைப்பதாயிற்று. தத்பதத்தின் அர்த்தமாகிய சாக்ஷி (பிரமம்) வியாபகமாயிருத்தலால் பரிச்சின்னத்துவப் பிராந்தி (யான் கண்டமாயிருக்கிறேனென்னுமயக்கம்)கெடுகின்றது. இவ்வாறே பிரஞ்ஞானம்பிரமம், அகம்பிரமம்,ஆத்மாப்பிரமம் என்றுகூறுவதால் பரோட்சத்துவப் பிராந்தியும், பிரமம் பிரஞ்ஞானம், பிரமம் அகம், பிரமம் ஆத்மா என்று கூறுவதால் பரிச்சின்னத்தன்மைப் பிராந்தியும் நிவிர்த்தியாமென்க. ஜீவப்பிரமங்களின் ஐக்கியத்தைக் கூறும் வாக்கியங்கள் யாண்டிருப்பினும் ஆண்டு முறறும் விட்டுவிடாத லட்சணையே யதார்த்தமா யுண்டென்க.

தத்துவமசி மகாவாக்கியத்தினாற் பெறப்படும் ஜீவப்பிரமங்களுக்குள்ள ஏகத்துவம் சூரியனது வாக்கியத்தினால் கர்ணனுக்கு நான் ராதையின் புத்திரனென்னும் பிராந்திநீங்கி உள்ளபடியே நான் குந்தியின்புத்திரன்என்னும் ஞானமுண்டானதுபோலவாம்

இதனால் மகாவாக்கியம் சுபாபசித்தமாயுள்ள ஜீவப்பிரம ஐக்கியத்தைப் போதிப்பதன்றி வேறுவகையாகப்போதிப்பதில்லையென்பது நன்குவிளங்கும். மகாவாக்கியம் சுபாபசித்த அர்த்தத்தைப் போதிப்பதென்பதுபற்றிக் கர்ணனைத் திருஷ்டாந்தமாக வெடுத்துச் சித்தாந்த முத்தாவலி முதலிய நூற்கள் விரிவாய்ப் பேசுகின்றன.

சி: அதனையானறிய விரும்புகின்றனன்.

கு: ஸ்ரீவிருத்திப்பிரபாகரம் எட்டாவதுபிரகாசத்தில்அதனை விரிவாயெடுத்துக் கூறியிருக்கின்றது. அதுவருமாறு:—

ஏகஜீவவாதம்

விருத்தம்.

"வெளிப்படா மையினிற் குந்தி சுதனெனக் கன்ன வேந்தன்
இழிபடு ராதை மைந்த னெனத்துய ருற்ற வாங்கு
மிளிர்சிதா நந்த ரூப மெய்க்கனப் பிரஹ்மந் தானே
எளியதோர் ஜீவ பாவ மெய்திய தென்பர் மேலோர்."

எப்போதும் அசங்கமும் நித்தியமுக்தமு மாகிய சிதாநந்தப் பிரஹ்மத்தில் கற்பித அவித்தைமுதலியவற்றின் சம்பந்தத்தால் பிரதிபிம்பிக்குந் தன்மையும் அவச்சின்னத் தன்மையும் சம்பவியா. எங்ஙனம் கானற்சலத்தால் நிரப்பப்பட்டதும், மலடிமைந்தனாகிய குலாலனால் முயற்கோடாகிய தண்டத்தினால் ஆக்கப்பட்டதுமாயுள்ள கடத்தின் சம்பந்தத்தால் ஆகாயத்தில் பிரதிபிம்பிக்குந் தன்மை அல்லது அவசின்னத்தன்மை உண்டாகிறதில்லை, ஆனால் ஆகாயத்தின் சமானசத்தையுடைய ஜலம் நிரம்பிய கடம் தடாக முதலியவற்றின் சம்பந்தத்தினாலேயே ஆகாயத்தில் பிரதிபிம்பிக்குந்தன்மையும் அவச்சின்னத்தன்மையும் உண்டாகின்றன. அவித்தையும் அதன்காரியமும் பிரஹ்ம சேதனத்தின் சமானசத்தை யுடையனவன்று; ஆனால் சுவயமே சத்தாசூன்யமாயிருக்கின்றன. பிரஹ்மத்தின் சத்தையினால் சத்தையுடையன அவித்தைமுதலியனவாம். ஆதலால் முயற்கோடு முதலியவற்

றைப்போல அத்தியந்தம் இல்லாதனவாகிய அவித்தைமுதலியவற்றோடு சேதனத்தின் சம்பந்தத்தைக் கூறுதலே சம்பவியாது. சம்பந்தமின்றியபோது பிரதிபிம்பிக்குந் தன்மை முதலியனவோ அத்தியந்தம் தூரமாம். ஆதலால் எப்போதும் ஏகரசம் பிரஹ்மமாம். அதனிடத்து அவச்சின்னத்தன்மை அல்லது பிரதிபிம்பத் தன்மை வடிவ ஜீவத்தன்மை சம்பவிக்கிறதில்லை. ஆனால் கற்பித அஞ்ஞானத்தின் கற்பிதசம்பந்தத்தால் பிரஹ்மத்தில் உண்டாகாமலே சீவத்தன்மை தோற்றுகின்றது. எங்ஙனம் அதிகாரியாகிய குந்திபுத்திரனிடத்து ராதாபுத்திரத் தன்மையின் பிரதீதி பிராந்தி (மயக்க) வடிவமா யுண்டாயிற்றோ, அங்ஙனமே பிரதிபிம்ப முதலிய விகார மின்றியே பிரஹ்மத்தில் ஜீவத்தன்மைப் பிராந்தி உண்டாகின்றது. பிரதிபிம்பவடிவ அல்லது அவச்சேதவடிவஜீவத் தன்மையின் அடைவு உண்டாகிறதில்லை. தனது அவித்தையினால் ஜீவத்தன்மையை அடைந்த பிரஹ்மமே பிரபஞ்சத்தைக் கற்பிப்பதாயிருக்தலின் சர்வஞ்ஞத்தன்மை முதலிய தர்மங்களோடு கூடிய ஈசுவரனும் இந்தப்பக்ஷத்தில் ஜீவகற்பிதனேவர். எங்ஙனம் சொப்பனகற்பித இராஜாவின்சேவையினால் சொப்பனத்தில் பலப் பிராப்தி உண்டாகின்றதோ, அங்ஙனமே சொப்பன கற்பித ஈசுவர பஜனத்தினால் பலப்பிராப்தியும் சம்பவிக்கின்றது. இவ்வாறு அநாதி அவித்தையின் வலியால் தனது பிரஹ்மத்தன்மையின் ஆவரணத்தால் ஜீவத்தன்மைப் பிராந்தி உண்டாகின்றது. தத்துவமசி முதலிய வாக்கிய ஜன்னிய சாக்ஷாத்காரத்தால் ஜீவத் தன்மைப் பிராந்தியின நிவிர்த்தியுண்டாகின்றது. பிராந்திகாலத்திலும் ஜீவத்தன்மையில்லை. ஆனால் நித்தியமுக்தசிதானந்தசொரூபப் பிரஹ்மமே உளதெனும் பக்ஷத்தினையே * பாஷியகார † வார்த்திககாரர்கள் பிருகதாரணியகத்தின் வியாக்கியானத்தில் கர்ணனது திருஷ்டாந்தத்தாற் கூறியிருக்கின்றனர். குந்தி புத்திரனாகிய கர்ணனுக்கு ஈனஜாதியின் சம்பந்தத்தால் இழிந்ததன்மைப்பிராந்தி உண்டாயிற்று. அநேகவித திரஸ்காரத்தாலுண்டாகிய துக்கத்தை அநுபவிக்கின்றவனைத் தானாகச் சிந்தித்துள்ள குந்தி புத்திரத் தன்மை நிமித்தத்தாலுள்ள மேன்மையினின்றுமகழுவினவனானன்.

* பாஷியகாரர்—ஸ்ரீ சங்கராசாரியர்.

† வார்த்திககாரர்—ஸ்ரீ சுரேசுவராசாரியர். இவர் ஸ்ரீ சங்கராசாரியார் சிஷ்யர்களுள் ஒருவர்.

ஒருநாள் ஏகாந்தத்தில் சூரியபகவானானவர் 'நீராதா புத்திரனல்லன்; எனது சமபந்தத்தால் குந்தியின் உதரத்தினின்றும் உண்டானாய்' என்றுகூறினார். இத்தன்மைய சூரியனதுவாக்கியத்தினால் தன்னிடத்திருந்த ஈனஜாதியின் மயக்கத்தை விட்டு இயல்பாய்ச் சித்தித்துள்ள குந்திபுத்திரத்தன்மை நிமித்தத்தாலுள்ள மேன்மையை அறிந்தான். அங்ஙனமே சிதாநந்தப் பிரஹ்மமும் அநாதி அவித்தையின் சம்பந்தத்தால் ஜீவத்தன்மைப் பிராந்தியையடைந்ததாய்ச் சுயமாகச் சித்தித்துள்ள பிரஹ்மபாவத்தை மறந்து அநேகவித துக்கத்தை அநுபவிக்கின்றது.

ஒருகாலத்துத் தனது அஞ்ஞானத்தினால் கற்பிதசொப்பன கற்பித ஆசாரியருக்குச் சமானமான ஆசாரியர் வாயிலாக மகாவாக்கிய சிரவணத்தால் தன்னைக் கோசரிக்கும் வித்தையினால் அவித்தையின் நிவிருத்தி உண்டாக, நித்தியபரமாநந்தத்தைச் சொரூபசைதன்னியமாக அநுபவம்செய்கின்றான். இவ்வாறுபிருகதாரணியத்தின் வியாக்கியானத்தில் பாஷியகாரர் வார்த்திகக்காரர் எழுதியிருக்கின்றனர். எங்ஙனம் ஜீவனது அவித்தியாகற்பித ஆசாரியர் வேதவுபதேசத்திற் கேதுவாவரோ, அங்ஙனமே ஈசுவரனும் சொப்பனகற்பித இராஜாவைப்போல ஜீவகற்பிதரேயாய்ப் பஜனத்தினால் பலத்திற்கேதுவாகின்றார். இம்மதத்தில் ஏகஜீவவாதமுளது. ஆதலால் ஏகஜீவகற்பித ஈசுவரனும் ஏகமேயாவர். நாநா (பல) ஈசுவரரது அடைவில்லை. சுகர் வாமதேவர் முதலியோரது முக்தியைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரத்தினாலும் சொப்பன கற்பித நாநா புருஷர்களைப்போல ஜீவாபாசர்களும் நாநாவாகச் சித்திக்கின்றனர். நாநா ஜீவவாதம் சித்திக்கின்றதில்லை. எங்ஙனம் சொப்பனத்தில் ஒருதிருஷ்டாவிற்கு நாநாபுருஷர்கள் தோற்றுகின்றார்கள். அவர்களுள் ஒருவன் பெரியகாட்டில்தப்புவழியிற் செல்பவனாய்ப் புலிமுதலியவற்றாலுண்டாகிய துக்கத்தை அநுபவிக்கின்றான். ஒருவன் இராஜமார்க்கத்திற் செல்லுகின்றவனாய்த் தனது நகரத்தை அடைகின்றான். ஆண்டு வனத்திற் றிரிதலும் தனதுநகரத்தை அடைதலும் சொப்பனதிருஷ்டாவிற்கில்லை. ஆனால் ஆபாசபுருஷர்களுக்கு உண்டாகின்றது. அங்ஙனமே அவித்தையோடு கூடிய பிரஹ்மவடிவ ஜீவனுக்குப் பந்தமோக்ஷத்தின் அடைவில்லை. ஆனால் ஆபாசவடிவ ஜீவர்களுக்குப் பந்தமோக்ஷம் தோற்றுகின்றது.

இப்பக்ஷத்தில் யாருடைய ஞானத்தினுல் அவித்தையின் நிவிருத்திவடிவ மோக்ஷமுண்டாகும் என்றுவினுயின், அதற்கு உனது ஞானத்தினுல் உண்டாகுமென்பது உத்தரமாம். அல்லது ஒருவனுடைய ஞானத்தினுலும் மோக்ஷமுண்டாகிற தில்லையென்பது உத்தரமாம். ஏனெனின், இந்தமதத்தில் பந்தத்தின் அத்தியந்த அசத்துத் தன்மை ஆத்துமாவிலிருக்கின்றது. நித்தியமுக்தமாகிய ஆத்மாவிற்கு மோக்ஷமுண்டாகும், அல்லது உண்டாயிருக்கின்றதுஎன்று கூறுதல் சம்பவியாது. இவ்வபிப்பிராயத்தால் மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்களை அர்த்தவாதமென்பர். பந்தமிருக்கின்றது; இற்றைபவரை ஒருவரும் முக்தராகவில்லை; மேல்புருஷார்த்தத்தால் மோக்ஷமுண்டாகும் என்னும் அபிப்பிராயத்தால் வாமதேவர் முதலியோர்களது முக்தியைப் பிரதிபாதிக்கும வாக்கியங்களை அர்த்தவாதமென்று சொல்லவில்லை. ஏனெனில் பந்தமிருக்க, வாமதேவாதிகளுக்கு மோக்ஷம் உண்டாகாதிருக்குமாயின், மேலும் மோக்ஷத்தை விரும்புதல் பயனின்றியதாமென்னும் புத்தியினுல் சிரவணத்தில் பிரவிருத்தியின் அபாவமேயுண்டாகும். ஆதலால் ஆத்மாவில் பந்தத்தின் அத்யந்த அசத்பாவமிருக்கின்றது; நித்தியமுக்த பிரஹ்மவடிவம் ஆத்மாவாம்; அதற்கு மோக்ஷம் சமபவியாது என்பது உத்தமபூமியிலேறிய வித்துவானது நிச்சயமாம்.''

சி: 'மகாவாக்கியம் சுபாவசித்தமாயுள்ள ஜீவப்பிரம ஐக்கியத்தைப் போதிப்பதன்றி வேறுவகையாகப் போதிப்பதில்லை' யென்று கூறியதினுல் வேறுவகையை யறியவும விரும்புகின்றேன்.

கு: வேறுவகை யென்றது அர்த்தவாதமுதலியவைகளை.

சி: அவற்றினைக் கூறல்வேண்டும்.

கு: அவை: அர்த்தவாதம், உபாசனுபரவாதம், ஸ்துதிபரவாதம், உபசாரவாதம், குணசாதிருசியவாதம், ஜாதிவியக்திபரவாதம், காரியகாரணவாதம், குணகுணிவாதம், விகாரவாதம், அம்சாமிசவாதம், பிம்பப்பிரதிபிம்பவாதம் என்பனவாம்.

சி: சுபாபசித்தார்த்தத்தைப் போதிக்கும் மகாவாக்கியத்தில் இவை பயன்படா வென்பதை விளக்கமாய்க் கூறுமாறு வேண்டுகின்றேன்.

(1) அர்த்தவாதம்.

கு: ஒருமலர்கொண்டுஅரனை யருச்சித்தவனுக்குச் சிவனோ கஞ்சித்திக்குமென்று மோக்ஷவிச்சையை யுண்டாகும் வாக்கியம் போல்வது அருத்தவாதமாம்.

ஸ்துதியை அல்லது நிந்தையை யறிவிக்கும் வாக்கியம் அர்த்தவாதமெனப்படும். ஸ்துதியையாவது நிந்தையையாவது மகாவாக்கியம் போதிப்பதன்றாயிருத்தலின் அஃதர்த்தவாத மன்றாம்.

சிவாலயமுதலியவிடத்துச் சிறிதுபாவம் மறந்தேனுஞ் செய்யினும் செய்தவனுக்கு அதன் பயனாகப் பெரியதீண்டனை மறுமையிலுண்டாகு மென்றும், அவ்விடத்துச் சிறிதுபுண்ணியம் மறந்தேனுஞ் செய்யினும் செய்தவன் மகாபாவியாயிருந்தாலும் அவனுக்கு அதன்பயனாகப் பெரியபேறு மறுமையிலுண்டாகு மென்றும் நூல்கள் கூறுவது மர்த்தவாதமாமென்க.

(2) உபாசனாபரவாதம்.

தீர்த்தம், க்ஷேத்திரம், சிவலிங்கமாதி மூர்த்தங்களாகிய விவைகளைச் சிவவடிவம் அல்லது விஷ்ணுவடிவமென்றுபாசிக்கும்படி கூறும் வாக்கியம் போல்வது உபாசனாபரவாதமாம். உபாசனையால் மோக்ஷமுண்டாமென்று கூறும் வாக்கியம் உபாசனாபரவாதமாம். மகாவாக்கியம் உபாசனையால் மோக்ஷமுண்டாமென்றுகூறுதுசுபாவசித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்மவைக்கியத்தைக் கூறுதலால் அஃதுபாசனாபரவாதமன்றாம். உபாசனையெனினும் தியானமெனினுமொக்கும். அது பிரதீகத்தியானமென்றும் அகங்கிரகத்தியான மென்று மிருவகைத்தாம். இவற்றின்றண்மை * முன்னரே கூறப்பட்டுள்ளது.

ஜீவப்பிரம ஐக்கியஞானத்தினாலன்றியுபாசனையால்மோக்ஷம் சித்திக்காதென்ப தீண்டவசியமறியத் தக்கதாம்.

சி: அதனை விளக்கமாகக் கூறும்படி பிரார்த்திக்கிறேன்.

கு: தியானமானது விதி, புருஷனது இச்சை, விசுவாசம், அடம் என்பவற்றின் அதீனமாம். 'இவ்வுபாசனையைச்செய்' என்றொருவனைப் பிரவிருத்திக்கும்படி செய்யும் வசனம் விதியெனப்படும். அந்தக்கரணத்தின் விருப்பவடிவ இரஜோகுண விருத்தி இச்சை யெனப்படும். அவ்வசனத்திலுள்ள சிரத்தை விசுவாசமெனப்ப

* 158 - பக்கம்.

டும். ஹடமின்றியபோது உபாசனை யுண்டாதலின்று. எப்போதும் தியேயாகார (தியானிக்கப்படும் பொருள்வடிவ)மான சித்தவிருத்தி உபாசனையாயிருத்தலின் அதற்கு ஹடம் அவசியம் வேண்டும். ஷெ விருத்தியில் விட்சேப (கலக்க)முண்டானபோது ஹடத்தா (பிடிவாதத்தா)லவ்விருத்தியை நிறுத்துதல் வேண்டும்; நிறுத்தாவிடத்து அவ்விருத்தி நாசமாய் வேறுவிருத்தி யுண்டாய்விடும்.

ஞானமோ பிரமாணப் பிரமேயமென்பவற்றின் அதீனமாம்; விதி, இச்சை, விசுவாசம், ஹடம் என்பவற்றின் அதீனமன்று.

உண்மையனுபவ வறிவிற்குக் கருவியாயுள்ளது பிரமாணமெனப்படும். அதனாலறியப்படுவது பிரமேயமெனப்படும். சந்நிதிப்பட்டவற்றை யறிவதாயும் அறியப்பட்டவற்றா லறியப்படாததாயு மிருப்பது ஞானமெனப்படும். ஜீவப்பிரமங்களின் ஐக்கியஞானம் மகாவாக்கிய ஜன்னியமாயிருத்தலின், அதனால் நித்தியமாய மோக்ஷம் சித்திக்கின்றது. சரீரத்தாலும் வாக்கினாலும் மனதினாலும் செய்யுங்கர்மங்களில் உபாசனை மானசிககர்மமாயிருத்தலாலும் கர்மத்தால்பெறப்படும் பதவியாவும் அநித்தியமாயிருத்தலாலும்உபாசனையாலுண்டாகும் மோக்ஷமும்அநித்தியமாம். மேலும், உபாசனையால் மோக்ஷம் சித்திக்கும்பட்சத்து அம்மோக்ஷம் அஞ்ஞான நிவிர்த்தியுடையதன்றாம். ஞானத்தினால் அஞ்ஞானநிவிர்த்தியாதல் வாயிலாக மோக்ஷம் சித்திப்பதாயிருத்தலால் அஞ்ஞான நிவிர்த்திக்கேதுவாகாத வுபாசனையால் அஃதுண்டாகுமென்ப தொருபோதுங் கூடாது.

ஜீவப்பிரமஐக்கியம் சுபாவசித்தமாயிருப்பதென்று மகாவாக்கியம் பாகத்தியாக லட்சணைவாயிலாகப் போதிப்பதனாலே அவ்வாறுபகிலேயே நித்தியமாய மோக்ஷமாம்.

அஃது உபாசனை வடிவசாதனத்தாலடையப்படுவதாயின் சாத்தியமாம். சாதனத்தாற் பெறப்படுவது சாத்தியமெனப்படும். எது சாத்தியமோ அது புருஷதந்திரத்தா(பிரயத்தனத்தா)லடையப்படுவதாம். சுதந்தரமாய மோக்ஷம் நித்தியமாயிருத்தலால் அது புருஷதந்திரத்தாலடையப்படும்சாத்தியமென்பதொவ்வாது. மானசிககர்மங்களிலொன்றாய வுபாசனையாற்பெறப்படும் பயன்கேவலம் மோக்ஷமாயிருக்கும் பட்சத்தில் அஃதசங்கியமாயொழியும்.

மோக்ஷம் உபாசனையாலுண்டாவதாயும் நித்தியமாயுமிருக்குமென்பதுங் கூடாது; ஏனெனின் சாதனவாயிலாகப் பெறப்படும்

சாத்தியமியாவும் அநித்தியமாமென்பது நியமமாயிருத்தலால் நித்தியமாய மோக்ஷத்தைச் சாத்தியமென்றுரைப்ப தொருவாற்றானு மியையாது. அவித்தையும் அதனாற் கற்பிக்கப்பட்ட சம்சாரமும் ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானத்தினால் நிவிர்த்தியாதல்வாயிலாகப் பெறப்படும் மோக்ஷம் நித்தியமுக்த ஆத்ம சொரூபமாகவே சித்திக்கின்றபடியினால் அது ஞானத்தினாற் சித்தமானாலும் அநித்தியமென்னும் தோஷத்திற்குட்படுதலின்றுமென்க. இங்ஙனங் கூறியதினால் ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானம் புருஷவியாபாரத்தால் சாத்தியமாவதன் றென்றும் காண்டலாதிப் பிரமாணங்களுக்கு விஷயமான வஸ்து ஞானம்போன்று வஸ்துவின் அதீனமென்றும் பெறப்பட்டமை காண்க.

சி: ஞானமும் உபாசனைபோல மானசிகமாயிருக்க அதனை வேறுபிரித்துக் கூறுவதெங்ஙனமாம்.?

கு: வஸ்துவை யுள்ளவாறு விஷயமாக்கும் பிரமாணத்தினாலுண்டாகும் ஞானத்தைச் செய்யவாவது செய்யாமலிருக்கவாவது அல்லது வேறுவகையாகச் செய்யவாவது முடியாது. அது கேவலம் வஸ்துவையே பொருந்தியிருக்கிறதுதவிர, விதிக்குட்படுதலும் புருஷனது சுவாதீனத்திற்குட் படுதலுமின்று. ஆதலால், ஞானமும் விதி இச்சைமுதலியவற்றின் அதீனமானவுபாசனையும் மானசிகமாயிருந்தாலும் அவ்விரண்டற்கும் மிகுவித்தியாசமுண்டென்க.

இதுபற்றிக் கைவல்லியநவநீதம்.

"அருளுடை மையனே திரிவித கரணத்தா லாகிய தொழிலெல்லாங், கரும மல்லவோ விருத்திஞா னமுமந்தக் கரண காரியமன்றோ, உரிய கர்மமஞ் ஞானத்தைக் கெடுக்குமென் றோதினலாகாதோ, பெரிய ஞானமென் றதற்கொரு பெயரிட்ட பெருமையை யுரையீரே."

விருத்தி ஞானமந் தக்கர ணத்தொடு விருத்தியா கினுமைந்தா, ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்ற துலகெங்குங் கண்டோமே, கருத்த னாகிய புருஷதந் திரங்களாங் கருமங்களவைபோல, வருத்த ஞானமோ புருஷதந் திரமன்று வஸ்துதந் திரமாமே.

வருத்த கர்மங்கள் செய்யவுந் தவிரவு மற்றொன்றாக் கவுங்கூடும், மிருத்த ஞானமப் படியன்று தியானமும் விவேகஞா னமும்வேறே, செகத்தி லொன்றையொன் றாவிவன் பாவிக்குந் தியானங்கற் பிதயோகம், முகத்த மாக்கண்ட ஞானமே வாஸ்தவமோகமாய் மயங்காதே.

கண்ட றிந்தது ஞானங்கேட் டதுதனைக் கருதுபா வனை யோகம், கண்ட பேர் சொலக் கேட்டது மறந்துபோங் கண்டது மறவாதே, கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய் கறுவி யஞ் ஞானத்தைக், கண்ட லக்கணங் கொல்வது ஞானமே கருமமன் றறிவாயே.

என்று கூறுவதறிக.

சி: ஞானத்தினால் அனர்த்த நிவிர்த்திவாயிலாகப்பெறப்படும் மோக்ஷம் நித்தியமென்றுரைத்தநின் காரணத்தை நன்குவிளக்கிக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கயிற்றின்கண் பிராதிபாஸிகசத்தையாக (தோற்றல் மாத்திரமாக)த் தோன்றியுள்ள பாம்பு (வியாவகாரிக நோக்கில் முற்றுமில்லாதிருந்தும்) விசாரணை முகத்து நீங்குவதாக விவகரிக்கப்படுதல் போன்று சேதனத்தின்கண் வியாவகாரிகசத்தையாக (சற்குருவாயிலாக ஆத்மவிசாரஞ் செய்யாதவரையுள்ளதுபோல)த் தோன்றியுள்ள தேகாதிப்பிரபஞ்சம் (பாரமார்த்திக நோக்கில் அஃதாவது உண்மைநோக்கில் முற்றுமில்லாதிருந்தும்) விசாரணை முகத்து நீங்கிப்போவதாக விவகரிக்கப்படுகின்றது. விசாரணையின் முடிவில் (நீங்கிப்போய பாம்பும் அப்பால் பெறப்பட்ட கயிறென்பது மின்றிக் கயிறே சித்த வஸ்துவாயிருப்பது போன்று) சம்சார நிவிர்த்தியும் மோக்ஷப்பிராப்தியு மென்பதின்றி மோக்ஷமே சித்தவஸ்துவாயிருக்கிறதென்க. மேலும், கழுத்தில் போட்டிருக்கும் பூஷணம் பிராந்தியால் காணப்படாததுபோலமுன்னர்த் தோன்றிப் பின்னர்ப்பிராந்தி நிவிர்த்தி வாயிலாக அகப்பட்டது போற் றோன்றுவதுபோன்று சித்தவஸ்துவாயிருக்கும் மோக்ஷமும் பிராந்தியாலில்லாததுபோல முன்னர்த்தோன்றிப் பின்னர்ப் பிராந்திநிவிர்த்தி வாயிலாகவுண்டாவதுபோற் றோன்றுகிறதென்றறிக.

இதன்முடிவாவது கயிற்றின்கணரவு நித்தியநிவிர்த்தியாயிருந்தும் அது கயிற்றின் ஞானத்தினால் நிவிர்த்தியாதல் போன்று, ஆத்மாவின்கண் சம்சாரம் நித்தியநிவிர்த்தியா யிருந்தும் ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானத்தினால் நிவிர்த்தியாதல்போன்று தோன்றுகின்றது. ஆகவே ஆத்மாவின்கண் சம்சாரம் நித்தியநிவிர்த்தியாம். கழுத்திலுள்ள பூஷணம் முன்னரே அடையப்பட்டிருந்தும் அது பின்னரடையப்படுவதுபோன்றுதோன்றுதல் போன்று மோக்ஷம்

முன்னரே அடையப்பட்டிருந்தும் அது பின்னர் அடையப்படுவதுபோன்று தோன்றுகிறது.

ஆகவே, மோக்ஷம் நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியாம் (நித்தியமாக அடைந்துள்ளதின் அடைவாம்). விசாரசாகரம் 2-வது தரங்கத்தில் "பரமாநந்த சொரூபமான ஆத்மாவினிடத்தில் அவித்தையின் பலத்தினால் 'ஆத்மாபரமாநந்த சொரூபமன்று' 'பிரமமே பரமாநந்த சொரூபம்' அந்தப்பிரமத்திற்கும் எனக்கும் வியோகம் (பிரிவு) உண்டாய்விட்டது. உபாசனையினாலந்தப்பிரமத்தையடைவேனென்றநேகமூடஜனங்களுக்குப்பிராந்தியுண்டாயிருக்கிறது. வெகுபண்டிதர்களு மிவ்வாறு கூறுகின்றார்களென்றாலவர்களு மூடர்களேயாவர்; ஏனெனின், ஜீவப்பிரமவியோகத்தை யங்கீகரிப்பவர் மூர்கரெனப்படுவர். அப்புருஷர்களுக்கு உத்தமசம்ஸ்காரத்தினால் பிரம்மஞானியாகிய ஆசாரியரிடத்தினின்றும் ஒருகால் வேதாந்த சிரவணம் கிடைத்துவிடுமாயின் அப்போது கேட்ட அர்த்தத்தை நிச்சயித்துப் பரமாநந்தம் நமக்குக் கிரந்தத்தினாலும் ஆசாரியருடைய கிருபையினாலுங் கிடைத்ததென்றுரைக்கின்றார்கள். அவ்வாறவர்கள் கூறுவதற்கபிப்பிராயமிதுவாய்:—ஆத்மாவோ முன்னும் பரமாநந்தசொரூபமாகவே இருந்தது. ஆனால் எனது ஆத்மா பரமாநந்த சொரூபமாயிருக்கிறதென்று விளங்காதிருந்தது. ஆதலால், பரமாநந்தம் பிராப்தமில்லாததுபோலிருந்தது. ஆசாரியர்மூலமாகக் கிரந்தத்தைக் கேட்டலால் பரமாநந்தம் புத்தியில்விளங்குகின்றது. அதனால் பரமாநந்தத்தை யடைந்ததாகச் சொல்லுகிறார்கள்." என்று கூறுவதிங்கவசியம் கவனிக்கத்தக்கது.

(3) ஸ்துதிபரவாதம்.

விசேடமனிதனொருவனை நோக்கி இவன் இந்திரனென்று கூறும் வாக்கியம்போல்வது ஸ்துதிபரவாதமாம். ஒருவனை ஸ்துதிபற்றியுபர்த்திக் கூறும் வாக்கியம் ஸ்துதிபரவாதமெனப்படும். ஜீவனை ஸ்துதிபற்றி மகாவாக்கியம் சிவமாகக் கூறுவதென்பதற்குயாதோரேதுவுமின்மையின் அது ஸ்துதிபரவாதமன்றாம்; ஜீவப்பிரம ஐக்கியம் சுபாவ சித்தமாயுள்ளதென்று மேற்கூறப்பட்டிருத்தலினென்க.

(4) உபசாரவாதம்.

அடிமையை நோக்கி இவன் அரசனென்று கூறும் வாக்கியம்போல்வது உபசாரவாதம்.

ஒன் றன் றன்மையை மற்றொன் றன்மே லேற்றிக்கூறுதல் உப சார வாதமெனப்படும்.

பிரமத்தின் றன்மையைச் சீவன்மேலேற்றிக்கூறுது சுபாவ சித்தமான அவ்விரண்டன் ஐக்கியத்தை மகாவாக்கியங்கூறுதலால் அஃதுபசாரவாதமன்றும்.

(5) குணசாதிருசியவாதம்.

(சௌரியமுடைய வொருவனைநோக்கிச்) சிங்கம் தேவதத்த னென்று கூறும வாக்கியம் போல்வது குணசாதிருசிய வாதமாம்

குணம்—பண்பு; சாதிருசியம்—ஒப்பு. ஒருபொருளோடு மற் றொருபொருளைக் குணவொப்புமை நோக்கி அபேதப்படுத்திக் கூறும் வாக்கியம் குணசாதிருசியவாதமெனப்படும. குணத்தால் கிரகிப்பது கௌண மெனப்படும.

ஒருவகை யாகாரத்தோடும் தாடி மீசை முதலியவற்றோடுங் கூடிய மிருக விசேஷமாகிய சிங்கத்தின் சூரத்தன்மை முதலிய குணங்கள் தேவதத்தனிடத்துச் சமமாயிருத்தலை நோக்கிக் குண வொப்புமையால் சிங்கம் தேவதத்தன் என்று கூறுவதுபோலச் சிவத்தின் குணங்கள் ஜீவனிடத்துச் சமமாயிருத்தலை நோக்கிக் குணவொப்புமையால் ஜீவப்பிரம ஐக்கியத்தை மகாவாக்கியம் கூறுகின்றதென்ப தொவ்வாது; எனெனில், தத்பத லட்சியார்த்த சேதனத்திற்கும் துவம்பத லட்சியார்த்த சேதனத்திற்குமுள்ள ஐக்கியம் சுபாவசித்தமாயுள்ள தென்று மகாவாக்கியங் கூறுதலால் அது குணசாதிருசிய வாதமன்றும். மேலும் குணமுள்ளவை யாவும் அநித்தியத் திரவியமா மென்பது நியமமாயிருத்தலின் குண சாம்யம் பற்றியுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியமும அநித்தியமாகும். தத்பத வாச்சியார்த்த சேதனமும் துவம்பத வாச்சியார்த்த சேத னமும் குணமுடையனவா யிருக்கின்றன. அவ்விரண்டற்கும் ஐக் கியம் மகாவாக்கியம் கூறுவதின்று. கூறுமெனினும் அது கற் பனையாயிருத்தலின் ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் குணசாம்யம் பற்றி யுரைத்த லொருபோது மமையாது.

தத்பத லக்ஷியார்த்தமாய பிரமமும் துவம்பத லக்ஷியார்த்த மாய ஜீவ (கூடஸ்த)னும் நிர்க்குணமாயிருத்தலின் அவற்றின் ஐக் கியம் குணவொப்புமைபற்றியா மென்றுரைத்தல் கூடாதென்க. ஆகாயமொன்றே கட மட உபாதிகளால் கடாகாசமென்றும்

மடாகாசமென்றும் வியவகரிக்கப்படுதல்போன்று சேதனமொன்றே மாயா அவித்தியா வுபாதிகளால் பிரஹ்மமென்றும் கூடஸ்தனென்றும் வியவகரிக்கப்படுகின்றமையின், உபாதிகளைவிடுவதால் அவ்விரண்டற்கு முள்ள சுபாவசித்த ஐக்கியம் விளங்குதல் குணவொப்புமை பற்றியன்றென்பது சித்தாந்தமாமெனக.

(6) ஜாதிவியக்திபரவாதம்.

இதுகோ (பசு) வின்தேகம் என்று கூறும் வாக்கியம் போல்வது ஜாதிவியக்திபரவாதமாம். அநேகபதார்த்த (திரவியம் குணம் கருமம்) ங்களிலிருக்கும் ஒரு தர்மமெதுவோ அது ஜாதியெனப்படும், அது கடத்தன்மை, குணத்தன்மை, கருமத்தன்மை என்றற்போல்வதாம். ஜாதியின் ஆசிரயம் (பற்றுக்கோடு) வியக்தியெனப்படும். கோத்துவம் (ஆத்தன்மை) ஜாதியாம். கோவின் தேகம் கோத்துவத்திற்கு ஆசிரயமாயிருத்தலின் வியக்தியாம். ஜாதிக்கும் வியக்திக்குமுள்ள சமவாய அல்லது தாதாத்மிய (ஒற்றுமைவடிவ) சம்பந்தத்தைக் கூறும் வாக்கியம் ஜாதிவியக்திபரவாதமெனப்படும். ஜாதிக்கும் வியக்திக்குமுள்ள அபேதம்போன்று ஜீவப்பிரம ஐக்கியமுளதென்ப தொவ்வாது. ஜாதியென்பது அப்பிரசித்த கற்பனையா யிருத்தலானும், பிரசித்த கற்பனையாய்க் கொண்டாலும் ஊகித்துப் பார்க்குமிடத்துப் * பொதுமைக் குணமா யமைதலானும் ஜாதிவியக்திபரவாதம் குணசாதிருசிய வாதம்போலக் குற்றமுடையதாம்.

மேலும், தத்பத துவம்பதங்களின் லக்ஷியார்த்தமாய பிரம கூடஸ்த சேதனம் உபாதி நோக்கம் பற்றி வெவ்வேறுபோல் வியவகரிக்கப்படினும் யதார்த்தநோக்கத்தில் ஒன்றாகவே யிருத்த, அச்சேதனங்களின் அபேதம் ஜாதி வியக்திகளின் அபேதம் போல்வதன்றாம். ஆகவே, பிரமம், கூடஸ்த னென்பன சொல்லாலிரண்டாயும் பொருளாலொன்றாயு மிருக்கின்றனவென்பதாயிற்று.

மகாவாக்கியம் ஜீவ (கூடஸ்த)னையும் பிரமத்தையும் இரண்டு பேதபதார்த்தமாகக் கொண்டு அவற்றிற்கு அபேதங் கூறாமையின் அது ஜாதிவியக்திபரவாதமன்றாமெனக.

அர்த்தவாதமுதல் ஜாதிவியக்தி பரவாதமீறாய வாறும் பேதவாதமெனப்படும்.

---

* "அளவறி வொப்பு வடிவு நிறங்கதி, சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்" என்று நன்னூல் கூறுவதறிக.

### (7) காரியகாரணவாதம்.

(காரியமாய) கடம் (காரணமாய) மண்ணிற்கு வேறுபட்டதன்றென்னும் வாக்கியம் போல்வது காரியகாரண வாதமாம்.

முன்பில்லாதிருந்து பின்புண்டாவது காரியமெனப்படும். காரியத்திற்கு நியதமாய் முன்னிற்பது காரணமெனப்படும். [காரணமென்றதீண்டுச் சிறப்புக்காரணத்தை.] காரணம் முதற்காரணமென்றும் நிமித்தகாரணமென்றுமிருவகைத்தாம். உற்பத்திமாத்திரத்தின் காரணம் நிமித்த காரணமாம். குலாலன் கடத்தின் உற்பத்திக்கு மாத்திரம் காரணமாயிருத்தலின அவன் நிமித்த காரணனெனப்படுவன். உற்பத்தி ஸ்திதி லயங்களின் காரணம் முதற்காரணமாம். மண் கடத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்களுக்கு காரணமாயிருத்தலின் அது முதற் காரணமெனப்படும். எங்ஙனம் கடாகாசம் மகாகாசம என்னுமிடத்தில் கடாகாசம் காரியமாகாமலும் மகாகாசம் காரணமாகாமலுமிருக்கின்றனவோ அங்ஙனமே ஜீவ (கூடஸ்த)னும் பிரமமும் காரியகாரண மாகாதிருத்தலின் அவ்விரண்டன் ஐக்கியம் காரிய காரணத் தொடர்ச்சிக்குள் அகப்பட்டதன்றாம், ஆகவே, சுபாவசித்தமாயுள்ள ஜீவப்பிரம ஐக்கியத்தைக் கூறும் மகாவாக்கியம் காரியகாரண வாதமன்றாம். கடாகாசம் மகாகாசமென்பவை உபாதியினைக்கால் இரண்டென வியவகரிக்கப்படினும் உண்மை நோக்கி லெங்ஙனம் ஒன்றாகவே இருக்கின்றனவோ அங்ஙனமே கூடஸ்தப்பிரஹ்மமென்பவை உபாதியினைக்கால் இரண்டென வியவகரிக்கப்படினும் உண்மை நோக்கி லொன்றாகவே யிருக்கின்றன வென்பதாம்.

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண், மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்னுந் திருக்குறளின் விசேடவுரையில் "அஃதாவது (மெய்யாகிய பொருளைக் காண்பதாவது) கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ் சேரலிரும்பொறை யென்றவழி அரசனென்பதோர்சாதியும், சேரமானென்பதொரு குடியும், சேழ்நோக்கினையுடையானென்பதோர் வடிவும், சேஎ யென்பதோரியற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறை யென்பதோர் சிறப்புப் பெயரும ஒருபொருளின்கட் கற்பனையாகலின் அவ்வாறுணராது நிலமுதல் உயிரீறாகிய தத்துவங்களின் தொகுதியென வுணர்ந்து அவற்றை நிலமுதலாகத் தந்தங்காரணங்களுள் ஒடுக்கிக்கொண்டு

சென்றாற் காரணகாரியங்க ளிரண்டுமின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தலாம்" என்று பரிமேலழக ரருளியதுமிங் கறியத்தக்க தாம்.

கயிற்றிற் றோன்றிய பாம்பு பொய்யென்று நிச்சயித்தவிடத்துக் கயிறு காரணமென்னும் பெயரைப் பெறாதுபோதல் போன்று பிரமத்திற்றோன்றிய வுலகு பொய்யென்று நிச்சயித்தவிடத்துப் பிரமம் காரணமென்னும் பெயரைப் பெறாது போகின்றதென்பது திண்ணமாய்; ஆகவே அது காரியகாரணாதிதப் பொருளாமென்பதூஉம் சித்தமாயிற்று.

சுவேதாசுவதரோபநிஷத்.

ந தஸ்ய கார்யம் காரணஞ்ச வித்யதே॥

(இ - ள்.) அவனுக் (பிரமத்திற்)குக் காரியமும் காரணமுமில்லை.

என்று கூறுவது மறியத்தக்கதாம். காரியம் அசத்தென்பதுபற்றிச் சென்னைமாநகரத்தின்கண் வேதாந்தபாஸ்கரரா யெழுந்தருளியிருந்த மகான், சை. இரத்தின செட்டியாரவர்கள் தத்துவவாதமென்னும் நூலில் விரிவா யெழுதியிருக்கிறார்கள். அது வருமாறு:—

"சத் என்பது சத்தினிலக்கணம் கூறுகின்றது. சத்து யாண்டுமுள்ளது. சத்தெனினும் உள்ள தெனினுமொக்கும். அசத்தென்பது அசத்தினிலக்கணங் கூறுகின்றது. அசத்து யாண்டுமில்லது. அசத்தெனினும் இல்லதெனினு மொக்கும். சத்துக்கு உதாரணங் கூறுகின்றது; அது படம். படமென்னுஞ் சொல்லும் அதன் தோற்றமும் பொருளுமுட னிகழ்வது. படமெனினும ஆடையெனினு மமையும்.

அசத்துச் சொல்மாத்திரமுந் தோற்றல் மாத்திரமு மாதற்கு உதாரணங் கூறுகின்றது; அது கயிற்றரவு கானல்நீரென இவை.

அசத்தின் இரண்டுவகை உதாரணம் விளங்க வுரைக்கின்றது. மலடிமைந்தன் தோற்றல் மாத்திரமென்பது எனைத்துணையுமின்றிச் சொல்மாத்திரமாகவே நிகழ்வது.

கயிற்றரவு சொன்மாத்திரமுந் தோற்றல் மாத்திரமுமாய் நிகழ்வது. இதுமுன்னர் மயக்கத்தான் அரவெனத்தோற்றித் தெளிந்தவழிக் கயிறாகவே நிகழ்வது. அது, காரணமான கயிற்

றைக் கண்டபின்னர்க் காரியமான அரவு தோன்றாது கயிற்றொன்றே காணப்படுவதென்பது கருத்து.

கானல்நீர் சொல்மாத்திரமுந் தோற்றல்மாத்திரமுமாய் நிகழினும் கயிற்றரவுபோல் காரணங்கண்டவழிக் காரியந் தோற்றாதிருப்பதன்று; நீர் தோற்றிக்கொண்டே யிருப்பது போல்வது. அங்ஙனம் தோற்றியஞான்றும் நீரென்ப தெத்துணையுமின்றே.

மலடிமைந்தன் போன்று தோற்றமென்பதின்றிச் சொல்மாத்திரமாயிருப்பதூஉம், கயிற்றரவும் கானல்நீரும் போன்று சொல்மாத்திரமும் தோற்றல்மாத்திரமு மாயிருப்பதூஉம், கயிற்றரவு கயிற்றைக் கண்டவழி அரவு தோன்றாதிருப்பதூஉம், கானல் நீர் கானலையுணர்ந்தவழியும் நீர் தோற்றிக் கொண்டிருப்பதூஉமாமூவகையும் அசத்தின்பாற்படுமென்க.

படமென்பதற்குச் சொல்லும் தோற்றமும் பொருளுமென்னுமிம்மூன்றும் உண்மையின் சத்தெனப்படும். இது நிற்க:

இனி உலகம் சத்தா? அசத்தா? என மேற்கூறிப்போந்த நியாயவாயிலாகக் காரியகாரணவாதவேதுவின் கடத்தைக்கொண்டு விவகரிப்பாம்.

காரியமென்பது: காரியத்தினிலக்கணங் கூறுகின்றது. காரியம் முன்னின்மைக்கு எதிர்மறை.

காரணமென்பது: காரணத்தினிலக்கணங் கூறுகின்றது. காரணம் காரியத்திற்கு நியதமாய் முன்னிற்பது. நியதம்—இன்றியமையாமை. காரணமெனினுங் கருவியெனினு மொக்கும். காரியத்திற்குப் பேதகாரணமிரண்டும் அபேதகாரணமொன்றும் உண்டெனத்துணியப்படும். கடமாகிய காரியத்திற்குத் தண்டசக்கரந் துணைக்காரணமுங் குலாலன் நிமித்தகாரணமு மாகிப் பேதமும், மண் முதற்காரணமாகி அபேதமுமாகின்றன.

காரியம் வனைவதற்கு முன்னும் அழிவுபாட்டிற்குப் பின்னுமின்றென்பது துணிவேனும், வனையப்பட்டபின்னும் அழிவுபாட்டிற்கு முன்னும் முளதாதலான் இடைநின்ற காலத்தே காரியமாகுடம் சத்தாமெனின், யாது சத்தோ வது முன்னும் பின்னும் நிகழ்வுமென்னு முக்காலத்தும் நிகழவேண்டும்; முன்னும்பின்னு

மில்லாதது. "இல்லதுவாராது, உள்ளதுபோகாது" என்னும் நியாயத்தான் இடைநின்றகாலத்து யாங்ஙன நிகழும்? இடைநின்ற காலத்து உளதேல் மண்ணாய் நிகழுங்கால் கடமின்று; மண்ணின் கண் வளைவு குவிவு முதலாய குணங்களெய்தியவழிக் கடமென்னும் பெயரெய்தும். வளைவு குவிவுமுதலிய குணங்களை யன்றி குணியன்றாம்; அக்குணங்களும் குணியான மண்ணின்கட்டோன்றி யதன்கண்ணே நிகழும்.

குணியெஞ்ஞான்றுளதோ அஞ்ஞான்றே அதற்குக் குணமும் உண்டென்பதன்றே? வளைவு குவிவு முதலாயகுணங்கணிகழ்வதற்கு முன்னரும் உருட்சியல்லது வேறுகுணம் நிகழ்ந்தன. மண்ணென்னுங் குணி தன்குணத்தொடுங் கூடியவழியானே யாம் மண்ணுக்குக் கடமென்னும் பொருட்பெயரெங்ஙனம் பொருந்தும்? மண்ணென்னுங் குணியும் அதன்கணுளதாய வளைவு குவிவு முதலாய குணங்களுமே யல்லது கடமென்னுஞ் சொற்குப் பொருள் வேறின்மையான் இடைநின்ற காலத்துங் கடமின்றெனபது மேதின்னம். இதனானே எஞ்ஞான்றுங் கடமென்றொருபொருளின்றென்றே பசுமரத்தாணிபோல் நாட்டப்பட்டதென்க.

அற்றேல். கடமென்னுந் தோற்றமும் அபாவமாக வேண்டுமன்றே? கடதோற்றங் காணப்படுவதனால் கடமின்றென்றெவ்வாறு கருதப்படுவதெனின், தோற்றம் பொருளாகுங்கால் கயிற்றினிகழும் அரவுமுதலாகல் வேண்டும். அரவு பொய்ம்மையாகத் தோற்றினுங் கயிறென்றுணர்ந்தவழி அரவென்பது தோற்றக்கண்டாமில்லை. கடமங்ஙனமன்று; மண்ணல்லது எஞ்ஞான்றுங் கட மின்றென் றுணர்ந்தவழியும் பெயர்த்துந் தோற்றுகின்றதென்னையெனின் நன்று வினாவினாய்; கூறுதும். தோற்றமெனப இருதிறத்த. அவை காரணத்தைக் கண்டவழிக் காரியந் தோன்றாதிருப்பதொன்று; அது கயிற்றரவு முதலியனவென்க. காரணத்தைக்கண்டவழிக் காரியந்தோற்றுவதொன்று; அது கானல் நீர் முதலியனவென்க. கடத்தோற்றங் கானல்நீர் முதலியனபோல்வதொன்றாகலின் காரணமானமண்ணே யாண்டுமுளதெனவும காரியமானகட மில்லதெனவும் ஆய்ந்துணரினுங் கடத்தோற்றமில்லதாகாமற் போந்திலது. அற்றாகலினன்றே இத்துணையுந் தோற்றம் பொருளன்றெனக் கூறவந்தாமன்றித் தோற்றமும் இன்றெனக் கூறினுமில்லை.

‘இல்லது வாராது, உள்ளது போகாது’ என்னும் நியாயத்தால் காரியமின்றெனினும் காரியம் நிகழாக்காலில்லையே யல்லது நிகழ்ந்தாலுளதாகாதோ வெனின், செய்பவன் காரணத்தைக் குணவேற்றுமை செய்வதன்றி யிலதாய பொருளை ஆக்கற்கிடனின்றென்க.

மண்ணான்வனைந்த கடம் பெயர்த்து மண்ணாயவழி ‘உள்ளது போகாது’ என்னு நியாயத்தாற் கடமிலதாகாமற் போதலமையாது. கடம்போலும் தோற்றின தோற்றமிலதாய்ப் போயதன்றிக் கடமானபொரு ளிருந்தில்லாமற் போயதன்று. ஆதலின், ‘இல்லது இல்லதே’ ‘உள்ளது உள்ளதே’ இல்லதையுளதாக்கவும் உள்ளதை யிலதாக்கவும யாவராலுமாகலரிதென்க.

இனி ‘இல்லது வாராது’ என்பதுண்மையேனும் இல்லாத கடம் உளதாதலில்லை; காரியமான கடம் வனைவதற்கு முன்னர்க் காரண வடிவாகநின்று, காரியப்படுங்கால் வெளிப்பட்டதெனின், காரியப்படுஞான்றும் மண்ணன்றிக் கடமென்னுஞ் சொற்குப் பொருளின்மையானும், காரணமான மண்ணினுங் கடமின்மையானும் கடமென்ப தின்றேயென் றையமின்றிக் கூறத்தகுமன்றே? கடமுளதாய வழியன்றோ காரணத்தினிகழ்வதென்றாவது கூறத்தகும்? ஒருவர் மற்றொருவர்பாற் பேசாநின்று சிறிது ஞான்று வேறு காரியத்திலிருந்து பின்னரவரைக் கண்டவழிக் காணாமை நிகழின், அவரில்லின்கணல்லது வேறிடத்திலிருப்பரென் றனுமானிக்க விடமுளதன்றே? அவரைப்பேசியிராவழி, அவர்மேலையிடங்களிலிருப்பரென் றெங்ஙன மனுமானிக்கற்பாலது? அதுபோற் கடமுளதாகக் கண்டிருப்பேமெனின் கடமில்லாதவழிக் காரணமான மண்ணின்கண் அடங்கியிருக்கலாமென் றனுமானிக்கத்தகும். அங்ஙனம் எத்துணையும் இன்மையான் கடமின்றென்றே கூறத்தகும். இதனானே கடம் மண்ணின்கணிருக்கவு மின்றென்றும், வெளிப்படவுமின்றென்றுங் கருதப்பட்டதென்க.

பொருள்களிரண்டு மோரிடத்தின்கணிருப்பதாகாது. ஒன்று வேறொன்றினுக்கு மேலாகவேனுங் கீழாகவேனும் பக்கமாகவேனுமிருக்கவேண்டும். மண்ணுங் கடமு முளவாயின் மண்ணினுக்குக் கடம் யாண்டையுள்ளது? யாண்டேனுமுளதாயின் மண்ணினுக்கு வேறாகவே யிருக்கவேண்டும்; அங்ஙனமின்றாம். ஒன்றில் வேறொன்று நிகழ்வது ஒன்றுண்மையு மொன்று தோற்றல்

மாத்திரமுமாயினமையும்; பழுதையின்கண் பாம்பும், கானலின்கண்ணீரும்போல். அற்றேல் அற்றாக. இங்ஙனமே மண்ணின்கண் கடம் தோற்றமேயன்றிப் பொருளின்றென் றுணர்க.

மண்ணின்கண் வளைவுகுவிவு முதலிய குணங்களுளவேயெனின் அன்னவையுந் தோற்றமேயாம். அற்றன்றி ஒருமண்ணேனும் வளையவும் குவியவுங் காணப்படவேயன்று. மண்ணணுத்தொரொருங்குசேர்ந்து வளைதல் குவிதல் முதலிய தருமங்களையெய்தியவெனின், எல்லாமொருங்குசேர்ந் துண்டாய தருமம் ஒரோவொன்றினுக்குஞ் சிறிது சிறிதாகவேனுங் காணப்படவேண்டுமன்றே? அவ்வாறின்மையான மேற்கூறிய தருமங்களையும் பெற்றதேயின்றென்பது துணியப்படுமென்க.

இதுகாறும் கூறிப்போந்த நியாயங்களான் காரணமொன்றே முக்காலத்தினுமுளதென்பதூஉம், காரியமங்ஙனமில்லதென்பதூஉம், அஃதுஞ் சொன்மாத்திரமுந் தோற்றமாத்திரமுமாமென்பதூஉங் கூறினும். இதனானே மண் யாண்டுமுளதென்றும், கடம் யாண்டு மிலதென்றுந் துணியப்பட்டனவெனக.

ஒருபொருளுளதாக வேண்டின் முன்னரில்லாதிருந்தே நிகழவேண்டும். இல்லாதிருந்தது இறந்தகாலத்ததாம்; உளதாவது நிகழ்காலத்ததாம். இறப்பும் நிகழ்வுமொன்றெனப்படா. அங்ஙனமாகாதவழி இன்மையாய காலமும் உண்மையாய காலமும் வேறுமன்றே? ஒரேஞான்று இன்மையும் உண்மையுமாதலின்மையா. கடத்தோற்றமுளதாயிடத்துக் கடமிருந்து தோன்றிற்று? இல்லாது நிகழ்ந்ததா? என்றுசங்கை நிகழும். ஆண்டை நிகழ்ந்தவழியிருந்தே நிகழ்ந்ததெனின் இருந்தது தோனறுவதற் கிடனின்றே; இல்லாததே தோன்றிற்றெனின் இன்மையும உண்மையுங் காலவேறுபாடெய்தலின் நிகழ்வின்கணின்மையு முண்மையுங் கூடா. இப்பெற்றியாற் பொருடோன்றற் கிடனின்று. ஒருபொருளழிவுபா டெய்தவேண்டின் உள்ள தொருபோதும் அழிவுபாடொருபோது மிாதலியையும். அழியுஞான்று இருந்ததழிந்ததா? இல்லாததழிந்ததா? என்ற இக்கடாவினுக்கிருந்த தழிந்ததென்றே விடைகூறவேண்டும். இருப்பதாய வுண்மையும் அழிவதாய வின்மையும் ஒரேஞான் றியையா. இதனானே உள்பொருள் அழிதற் கிடனின்று. 'இல்லதுவாராது, உள்ளது போகாது' என்னும் நியாயமே ஈண்டைச் சாலும்.

காரியமான கடம் அசத்தேனும் காரணமாய மண்ணேனுஞ் சத்தென்பாமேயெனின் கூறுதும். எது காரணமெனப்படுமோ அது காரியப்படவே வேண்டும். ஆடைக்கு நூல் காரணமே னும் பஞ்சினுக்கர்நூல் காரியமாகும். அங்ஙனமே கடத்துக்கு மண் காரணமேனும் அம்மண்ணும் தன்காரணமாய அணுக்களுக் குக் காரியமாம். காரியமென்பதனைத்து மெக்காலத்து மின்றென் றிதுகாறுங் கூறிப்போந்தாமாகலின் அம்மண்ணும் அசத்தெனப் படுமென்க.

காரியமாகவேனுங் காரணமாகவேனு முள்ளதியாதோ அஃ தேயுண்மையாயுள்ளது, அஃதே சத்தெனின், காரியமாகவேனுங் காரணமாகவேனு மிருந்ததியாதோ அது காரியமாகவேனுங் காரணமாகவேனு மிருக்கவேண்டும். காரியமெனின் அது முக்கா லத்து மின்றென்று துணிபப்பட்டதென்க. யாது காரணமெனப் படுமோ அது காரணமாகவேயிராது வேறொன்றினுக்குக்காரியப் பட்டு அசத்தென்னும் பெயரெய்துகின்றது. காரியகாரணஞ் சங்கிலித்தொடர்பே போன்று முடிவின்றிநிற்குமெனின் அஃதுங் காரியகாரணத்தினடங்கி அசத்தெனப்படுமென்க.

பரமாணு அழிவின்றி யென்ஞான்று நின்று காரியப்பட்டு மீண்டுமழிந்து காரணமாகவே யிருக்கும், அது காரியப்படுவ தின்று, எஞ்ஞான்றுங் காரணமாகவே யிருப்பதொன்றுமாகலின் எனின், அனைத்துங் காரியப்பட்டு அஃதொன்றுங் காரியப்படா தெனக் கோடற்கு எனைத்துமே நியாயம் புலப்படுவதின்று. அஃ தேகாரணமாமெனின், ஓர் பரமாணுவினோடு வேறோர் பரமாணு விரவி, அது வேறோர் பரமாணுவினோடு விரவி, இங்ஙனமே காரி யப்பட்டு மகத்தாகவேண்டும். முன்னர் ஓரணுவினோடு வேறோர் அணு விரவுமாயின் ஓர்பால் விரவி, ஏனைய மூன்றுபாலும் விரவா திருக்க வேண்டும். திருட்டாந்தமாக ஒரெலுமிச்சங்கனியோடு வேறோர்கனி விரவுமாயின் ஓர்பால்விரவி யேனையவிரவா திருக்கக் கண்கூடாகக் கண்டாமன்றே? இவ்வாறே யோர்பொருளோடு வேறொன்று விரவுங்கால் ஓர்பால் விரவி யேனையபால் விரவா. விரவியவழி விரவாதனவும் நிகழ்தலின் முன் பின் னடு முதலியன நிகழ்வது ஒருதலையாமென்க. எது உறுப்பினிகழ்வதோ அது காரணமாகாமே காரியமேயாம். காரணமாக நிகழ்ந்தன எனைத் தும் காரியமாக, இஃதொன்றும் காரியப்படாதென்பது உத்திக்

கொத்ததன்று. யாது எவ்வாறு நிகழினுங் காரணமொன்றுள தாகவேண்டுமெனின், அஃதேதன் காரியப்படாது? உலகத்தோற் றரவுக்குக் காரணம் வேண்டற்பாற்றெனின், ஆண்டைக்காரண மாய அணுநிலை பேறுடைத்தாயினன்றோ ஈண்டையுலகமென்பது சத்தாம்? காரியகாரணம்முடிவின்றிச் சேறலின் அனவத்தாதோட மெய்தும்; ஆகலின் முடிவின்கண் எத்துணை யணுவு மிருப்பதா கக் கூறல் எவ்வாற்றானு மியையாதென்க.

கண்ணுக்கும் மனத்துக்கும் விடயமான அணு அசத்தாய்க் கழியினுங் கண்ணுக்கும் மனதுக்கும் எட்டா அதிநுட்ப அணு உண்மையாயுளதேல் அது கண்கூடாமா? அனுமானவள வையானறிதற்பாற்றோ? காண்டலளவையா னறிவதன்று, அனுமா னவளவையா னறிதற்பாற்றெனின், கண்கூடான சத்தைக்கொ ண்டு கண்கூடன்மையான சத்தையறிவது அனுமானத்துக் கிலக் கணமாம். இவ்விலக்கணத்கான் புகை சத்து; நெருப்புச் சத்து. புகை கண்கூடு; நெருப்பு அங்ஙனமல்லாதது. கண்கூடான புகை யானங்ஙனமல்லாத நெருப்பையுணர்வது தக்க திருட்டாந்தமாம். இதுபோன்று தாட்டாந்தத்துக் கொவ்வாது,கண்ணுக்கும் மனத் துக்கும் விடயமான அணு அசத்தெனத் துணியப்பட்டது; கண் ணுக்கும் மனதுக்கும் எட்டாத அணு சத்தெனச் சொல்லப்படு கினறது. கண்கூடாம் புகை சத்தாயிருப்பது போன்று தாட்டாந் தத்தும் கண்ணுக்கும் மனத்துக்கும் விடயமான அணு சத்தாக வே யிருக்கவேண்டும். அங்ஙனமன்றி அசத்தாய்ப் போந்தமை யின் திருட்டாந்தாபாசமாகின்றது. கண்ணுக்கும் மனத்துக்கும் விடயமான அணு சத்தாயிருப்பதாயின் கண்கூடான இச்சத்தைக் கொண்டு அங்ஙனம் அன்மையான கண்ணுக்கும் மனத்துக்கும் எட்டாத அணு சத்தாயிருப்பதென் றனுமானிக்கலாம். புகை யானது ஆராய்ந்துழிப் பனியாய்ப் போந்தவிடத்துப் புகை அசத் தாய்ப் போமன்றோ? அற்றேல் நெருப்பு எங்ஙனஞ் சத்தாம்? அனு மானம் தோற்றம் எதார்த்தமென்றிருகிறத்த. இவற்றுள் தோ ற்ற அனுமானத்தால் பொருள் சித்தித்திலது; எதார்த்த அனுமா னத்தால் பொருள் சித்திக்கும். புகை எதார்த்த அநுமானம்; புகையைப்போல் தோற்றி ஆராய்ச்சியின்கண் அஃதின்றி நின்ற பனி தோற்றவனுமானமாம். எதார்த்த அனுமானப்புகையால் நெருப்புச்சித்திக்குமன்றித் தோற்றஅனுமானப்பனியாற் சித்தித்

தற்பாலதா? அங்ஙனமே கண்ணுக்கும் மனத்துக்கும் விடயப் படும் அசத்தானதோற்ற அனுமானத்தால் கண்ணுக்கும் மனத் துக்கும் எட்டாத அணு சித்தித்தற்பாலதன்று.

உலகினின்றும் பற்பல பொருள்கள் காரியப்பட்டுப் பின்னைக் காரணமாவதைக் கண்டிருக்கின்றாமன்றி, உலகம் காரியப்படுவ தை நாமேனும் நம் முன்னோரேனுங் கண்டதுமின்று; கேட்டது மின்று. காண்ட லுடலானன்றியாகாது; கேட்டல் ஏனையோர் கூறக் கேட்கவேண்டுவது; கூறல் காண்டலின்றி யெங்ஙனமியை யும்? காண்டல் உடலினோடுங் கூடியே நிகழற்பாலதாம்; உடல் உலகன்றியின்றாம். உலகத்தினின்மை யுடலன்றிப் பிறிதோன்றி ருந்து கண்டாரைக் காண்கின்றிலேம். அற்றாகலின் உலகமெஞ் ஞான்று முள்ளது; காரியமன்று, காரணமேயெனின் கூறுதும்:—

எவ்வெப் பொருளினையு மாராயின் ஒன்றன் கூட்டம், பலவி னீட்டமென் றிருதிறத்த. ஒன்றன்கூட்டம் பலவினீட்டமென்ப வற்றின்பாற் படுவனவன்றி யெப்பொருளும் யாண்டு முளவாகா. திட்டாந்தமாகக் கடமொன்றன்கூட்டமா? பலவினீட்டமா? எனின் ஒன்றன் கூட்டமேயாம். ஒன்றன் கூட்டமாய மண்ணையன்றி முக்காலத்தினுங் கடமென்பதொன்றின்றாம்; அம்மண்ணுமொன் றன் கூட்டமான அணுவினையன்றியாகா. பலவினீட்டமும் இவ் வாறேகாண்க. இங்ஙனமே ஒவ்வொரு பொருளினையும் ஆரா யுங்கால் இன்றாகவே முடியும். உலக மிங்ஙனமாய ஆராய்ச்சியான் இன்றெனப்படும். ஒன்றன் கூட்டம், பலவினீட்டமென்பன கார ணமாகக் கூடிநின்று வேறாகத் தோற்று மவசரம் காரியமெனப் படும். முன்னரே யணுவினைப் பூருவபக்கப்படுத்தினாம்; ஆண்டை யுணர்க.

'உலகங் காரியப்படுவதைக் கண்டாருங் கேட்டாரு மின்றாகி லின், எஞ்ஞான்றும் நித்திய' மேல், உலகஞ்சத்தாய் எஞ்ஞான் றும் நித்தியமா? அசத்தாய் எஞ்ஞான்றும் நித்தியமா? சத்தாய் எஞ்ஞான்றும் நித்தியமேல் சத்தென்றுரைப்பது எவ்வாற்றானும் இயைந்திலது. அசத்தாய் நின்று நித்தியமேல் இல்லாதது நித்திய மென்றுரைத்தலா லென்பயன்? இல்லாத முயற்கொம்பினையும் நித்திய மென்றுரைப்பதற்கு ஒக்குமன்றா? உலகம் எக்காலத்து மின்றாகலின் உலகத்தினைக் காரியமென்றேனுங் காரணமென்றே னுங் கூறுத லெத்துணையும் இயையாதென்க.

இதுகாறுங் கூறிப்போந்ததனுன் உலகம் அசத்தாய்க் கழி யினும் கண்கூடாக இன்பத் துன்பங்களைத் துய்க்கின்ருமே;யாங்ங னம் உலகை அசத்தென்றுரைப்பதெனிற் கூறுதும்:—

இன்பத்துன்பங்களைத் துய்ப்பார் யார்? நாமே. நாம் யார்? மானிடர். மானிடர் காரியமா? காரணமா? காரியம். காரியம் பொய்யென்பதனை முன்னரேவிளக்கினும்.காரணமான உறுப்போ, அவைதாம் தமதுகாரணமாய ஊன், குருதி, என்புமுதலியவற்றை நோக்கக்காரியப்பட்டுப் பொய்யேயாம். இவ்வாறே ஒரோவொன் றும் பொய்யாமிடத்து இன்பத் துன்பங்களும் அவற்றினைத் துய்க்கும் அநுபவங்களும் பொய்யாகப் போதலாகும். இஃ தென்னை? வாயடி கையடியாயிருக்கின்றதன்றி ஐயநிகழ்ச்சி யொ ழிந்த தின்றெனின், சொப்பன முழுவதூஉம் பொய்யாமன்றே? சொப்பனத்திற்கண்கூடாகக் கண்டிருக்கும் இன்பத்துன்பங்களும் அவற்றினுக்கு முதலாயுள்ள சொப்பனஉலகமும் பொய்யென்று துணிந்ததின்றே? அவ்வாறே யிவ்வுலகினையும் இன்பத்துன்பங்களை யும் ஏன் பொய்யென்றியம்பற்பாற்றன்று?

ஒருபொருளினை யறியவேண்டுவான் அப்பொருட்கு வே ருய் நின்றே யறிய வேண்டும். வீட்டினை யறியவேண்டுவான் வீட் டிற்கு வேருய் நின்றே யறியவேண்டும். இவ்வாறே யெவற்றினை யும் உணர்கின்ரும். அற்றேல், உலகத்தை யறியவேண்டுவான் உல கினுக்கு வேருய் நின்றே யறியவேண்டும். அவ்வாறு கண்டுரைத் தா ரொருவருமிலர். காண்பவர் சமட்டியான உலக அமிச வியட் டி சரீரத்தைக்கொண்டு உணர்கின்றமையான் அது வேறுபட்டு உணர்ந்ததாக யாங்ஙனம் கூறற்கிடனுகும்? அசத்தியமான சொப் பன சகத்தின்கண் அச்சகத்தின் அமிச அசத்திய சரீரங்கொண்டு அச்சகத்தை ஆண்டுக் காணுந்துணையும் அது சத்தியமாகவே நிகழினும், அச்சகத்தினையும் அச்சகத்தினமிச சரீரத்தினையும் விட்டு வேருயிருக்கும் இஞ்ஞான்றுʼ தோன்ருது பொய்யாகப் போந்ததின்ரு? சொப்பனவத்தையின்கண் சொப்பனசகத்தைச் சத்தியமாகக் காணினும் காணுமஞ்ஞான்றும் அச்சொப்பனசகம் யாங்ஙன மித்தையோ, அங்ஙனமே இச்சகத்தினையும் இச்சகத் தின் அமிசமான சரீரத்தைக்கொண்டு காணுந்துணையும் சத்திய மாகத்தோற்றினும் அங்ஙனமே இச்சகமும் மித்தையென்றுரைத்

தல் ஏனடாது? இதனுனே ஒருபொருளினை யறியவேண்டின் அறிபவன் வேறாயிருந்தே யுணரவேண்டுமென்றும், அங்ஙன மின்றி யதுவாயிருந்துணர்ந்தால் பொய்யு மெய்யுமாகத் தோற்று மென்றுங் கூறியவாறாயிற்று.

ஒருபொருளினை யுளது இலதென் றாயுங்கால் அப்பொருளின் ஓர்பால மறறோர்பாலினோடு உறறநிலானை யுளதெனக் கோட லெவ்வாற்றானு மமையாது. அங்ஙனங் கொள்ளுங்கால் கானல் நீரின் அலை மற்றோரலையோடு பொருந்துவதனுனே அக்கானல் நீரும் உண்டெனக்கொள்ளவரும். இங்ஙனமே யுலகத்தின் ஓர் பகுதி மற்றோர் பகுதியினோடு பொருந்துமாற்றானே யறிந்தோர் உல கைச் சத்தென்று ஓதாரென்க.

இவையனைத்தும் நியாயமெனுங் கண்கூடாகக் கடத்தை வனைந்த நிமித்தகாரணனுன குலாலனையும், துணைக்காரணமாய தண்டு சக்கரங்களையும் எவ்வாற்றான் அசத்தியமாகக் கூறற்பாற் றெனின், குலாலனையுந் தண்டு சக்கரங்களையுங் காரியகாரணபக்க மாய் ஆராயுமிடத்துப் பொய்யாக முடிகின்றதன்றோ? சொப்ப னத்தின்கண் குலாலன் தண்டுசக்கரங்களைக்கொண்டு கடமுத லானவற்றை வனையக்காணினுங் குலாலனுந் தண்டு சக்கரங்களும் அவற்றினுக்கு உபாதானகாரணமான சகமும் யாங்ஙனம் பொய் யாமோ, அங்ஙனமே யிஞ்ஞான்றும் பொய்யெனனுமை யாது பற்றியென்க. இதனுனே யுலகமென்பது அசத்தென்றே துணி தற்பாற்றென்க."

(8) குணகுணிவாதம்.

நீலோற்பலம் என்னும் வாக்கியம்போல்வது குணகுணி வாதமாம். நீலத்தின் அபேதமுடைய ஒரு உற்பலமிருக்கின்ற தென்பது நீலோற்பலம் என்னும் வாக்கியத்தின் பொருளாம். * பதங்களின் கூட்டம் வாக்கியமாதலின் [நீல=உத்பலம் என

* பதங்களின் கூட்டம் தொடர்மொழியாம். தொடர்மொழியெனி னும் வாக்கியமெனினுமொக்கும். தொடர்மொழி இருமொழித்தொடரும் பன்மொழித்தொடருமென விருவகைத்தாம். அவை தொடருங்கால் பய னிலைவகையானும் தொகைநிலைவகையானும் எண்ணுநிலைவகையானும் தொடரும். பொன்னன் வந்தான் இது பயனிலைத் தொடர்; பூனைக்கண் இது தொகைநிலைத் தொடர்; இராப்பகல் இஃதெண்ணு நிலைத்தொடர். இவையிருமொழித் தொடர். அறம் வேண்டியரசன் உலகம் புரக்கும் என்பது பன்மொழித்தொடர்.

இருபதம் புணர்ந்த] நீலோற்பலமென்பது தொகைநிலைவகையாற்றொடர்ந்த வாக்கியமாம். இங்கு நீலமென்பது குணமும உற்பலம் (குவளை) என்பது குணியுமாம். பொருட்குப் பண்பாய்த் தனக்கு வேறு பொருளின்றி அதனை (பொருளை) நீங்காதிருப்பது குணமெனப்படும. அதனையுடையது குணியெனப்படும். குணியெனினும் பொருளெனினுமொக்கும் குணமுடையனயாவும் அநித்தியமாமென்பது நியமமாதலின், "ஆதலாற பிரம மொன்றே நித்தியம" என்று கூர்மபுராணங் கூறுகின்றபடி பிரமம யாதொரு குணமுமுடையதன்றாம். பிரஹ்மம் சாவஞ்ஞத்துவாதி குணமுடையதென்று சிருஷ்டியாதி நோக்கிச் சொல்லப்படினும, சிருஷ்டியாதியுண்மையிலில்லையென்று விசாரமுகததால நிச்சயிக்குமிடத்து அஃதெக்குணமுமற்றதாம. ஆகவே, பிரஹ்மம் நிர்க்குணமாம். எதற்குக் குணமின்றோ அதுகுணியெனும பெயருடையதன்றாதலின பிரஹ்மம் குணகுணிகளுக்கப்பாற் பட்டதாம். ஆகவே ஜீவப்பிரஹ்மவைக்கியத்தைக் கூறும மகாவாக்கியம் குணகுணிவாதமன்றாமெனபது தேற்றமாம.

## (9) விகாரவாதம்.

பாலின் திரிவுதயிர் என்னும் வாக்கியமபோல்வது விகாரவாதமாம். விகாரவாதமெனினும பரிணாமவாதமெனினும் ஒக்கும். உபாதான காரணததிற்குசசமான சுபாவமுடையதாயும் அநநியதா (வேறு) சொரூபமாயு முள்ளது பரிணாம மெனப்படும். பாலின்பரிணாமமாய தயிர் பாலுக்குச் சமானசுபாவ (சததை) முடையதாயும வேறு சொரூபமாயுமிருத்தல காண்க.

ஜீவன் விகாரப்பட்டுப் பிரஹ்மமாகின்றானென்று மகாவாக்கியம் கூறாமையின் அது விகாரவாத மன்றாமெனக.

## (10) அம்சாம்சிகவாதம்.

ஜலமும் அலையும் ஏகம் (ஒன்று) என்னும் வாக்கியம்போல்வது அம்சாம்சிகவாதமாம.

அம்சம்—கூறு. அம்சிகம்—கூற்றையுடையது. அஃதாவது உறுப்பு (அங்கம்) உறுப்பி (அங்கி) என்றாம். அலை அம்சமும் ஜலம அம்சிகமுமாம். அலையும் ஜலமும் அம்சாம்சிகபாவத்தால ஏகமாயிருத்தல்போல் ஜீவனும் பிரஹ்மமும் அம்சாம்சிகபாவத்தால் ஏகமாயிருக்கின்றனவென்பது கூடாது. பிரஹ்மம் நிரவயவ

மென்று சுருதிகூறுதலால். மேலும் "காரியம் அவயவத்தாற்கண்டனம் கடாதிபோல" என்றவாறு பிரமம் அவயவமுடையதாயின் அதுகடம்போல அநித்தியமாம். ஆகவே, ஜீவப்பிரஹ்மவைக்கியம் அங்காங்கிபாவம் போல்வதென்பது ஒப்பத்தக்கதன்றாம். இதனால் மகாவாக்கியம் அம்சாம்சிகவாதமன்றாமென்பது திண்ணமாமென்க.

(11) பிம்பப்பிரதிபிம்பவாதம்.

பிம்பப்பிரதிபிம்பங்களுக் கைக்கியமுண்டென்னும் வாக்கியம்போல்வது பிம்பப்பிரதிபிம்ப வாதமாம்.

ஜீவன் (கூடஸ்தன்) பிரதிபிம்பமும் பிரஹ்மம் பிம்பமுமாகாது கடாகாசம் மகாகாசம்போல்வதா யிருத்தலின் அவ்விரண்டற்கும் சுபாவசித்தமாயுள்ள ஐக்கியம் பிரதிபிம்பத்திற்கும் பிம்பத்திற்குமுள்ள வைக்கியம்போல்வதன்றாம். கண்ணாடிமுதலியவற்றில் முகத்தின் பிரதிபிம்பம் பாதிக்கப்பட்டு முகத்துடன் அபேதப்படுதல்போன்று அந்தக்கரணம் அல்லது அவித்தையிற் பிரதிபிம்பித்துள்ள ஜீவன் பாதிக்கப்பட்டுக் கூடஸ்தனுடன் அபேதப்படுகிறானென்றும், கடாகாசம மகாகாசத்துடன் ஐக்கியப்படுதல் போன்று தனது யதார்த்தவடிவமாய (ஜீவசாக்ஷியாய) கூடஸ்தன் பிரஹ்மத்துடன் ஐக்கியப்படுகிறானென்றும் இங்கறிதல்வேண்டும். மகாவாக்கியம் கூடஸ்தப் பிரஹ்மங்களுக்குள்ள சுபாவசித்த ஐக்கியத்தைப் பற்றிக் கூறுதலின் அது பிம்பப்பிரதிபிம்பவாதமன்றாமென்க.

காரியகாரண வாதமுதல் பிம்பப்பிரதி பிம்பவாத மீறாய வைந்தும் அபேதவாத மெனப்படும்.

---

சஙு-வது சம்வாதம்.

சிவமே நானெனல் சீவனுக்கே யெனல்.

சி: நான் பிரமம் என்னும் ஞானத்தினால் தேவரீர் சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாய மோட்சமுண்டாகுமென்று கூறுவதால் எனக்கொருசம்சயமுண்டாகின்றது. சீவன் பிராந்தி வடிவமா யிருத்தலால் பிரமத்திற்கு வேறான அவன் தன்னைப் பிரமமென் றறிதல் அரவிற்கு வேறான கயிற்றினை யரவென்றறி

தல் போலாம். ஆகவே, இது பிராந்திவடிவ ஞானமாம். பிராந்தி ஞானத்தினால் யதார்த்தம வெளிப்படுதலின்றென்பது நிச்சயமாயிருத்தலால், ஆபாசனுய சீவனுக்குண்டாகும் நான் பிரமம் என்னும் பிராந்திஞானத்தினால் மோக்ஷமுண்டாமென்ப தெங்ஙனம்?

சப்தாவஸ்தை.

கு: சப்தாவஸ்தைகளை யறிந்தவர்களுக்கு இச் சம்சயம் தோன்றாது. சப்தாவஸ்தையின் தன்மையைக் கூறுகின்றேன்; கவனமாய்க்கேள்.

(1) அஞ்ஞானம், (2) ஆவரணம், (3) விட்சேபம், (4) பரோட்சஞானம், (5) அபரோட்சஞானம், (6) சோகநிவிர்த்தி, (7) நிரங்குசதிருப்தி என்பன சீவசப்தாவஸ்தையாம்.

(1) அஞ்ஞானம்.

சீவன் சுருதிவிசாரததிற்கு முன்னர்ச் சம்சாரவாசையால் மயங்கி 'நான் பிரமத்தை யறியேன்' என்னும் வியவகாரத்திற்குக் காரணம் அஞ்ஞானமாம்.

(2) ஆவரணம்.

பின்னரொருசமயம்சிதாத்மப் பிரசங்கம் நேர்ந்தவிடத்துப் பிரஹ்மமில்லை;இருந்தால் அது தோன்றாதாஎன்னுமிவ்விருவகைச் சந்தேகமே அவ்வஞ்ஞான காரியமான ஆவரணமாம். பிரஹ்மம் இல்லையென்பதற்கு நாஸ்தியென்று பெயர். இருந்தால் அது தோன்றாதா எனபதற்கு நபாதியென்று பெயர்.

(3) விட்சேபம்.

அப்பால் நானே கர்மத்தைச் செய்பவன், நானே கர்மபலத்தை யனுபவிப்பவன் என்றெண்ணுவதே விட்சேப (தோற்ற) மாம். இது பிராந்தியென்றும் சோகமென்றும் சொல்லப்படும்.

இம்மூன்றும் பந்தநிலையாம்.

(4) பரோட்சஞானம்.

அதன்பின்னர்ப்"பிரஹ்மம் சத்தியஞானஅநந்தரூபமாயிருக்கிறது"என்று பிரமத்தினிருப்பைக் கூறும் சுருதி குரு வாக்கியங்களினால் பிரஹ்மம் உண்டென்று தெளிவதே ஆவரணத்தின் முதலம்சமான பிரஹ்மம் இல்லையென்னும் நாஸ்தியின் விரோதியாம்; மற்றொன்றற்கும் விரோதியன்றாம். [பரோட்ச ஞானமாவது ஒன்றுண்டென்று பிறர்சொல்லக்கேட்டுத் தானும் அஃதுண்டென்று தெரிந்து கொள்ளுதலாம்.]

(5) அபரோக்ஷஞானம்.

அதற்கப்பால் 'நீயே பிரஹ்ம' மென்று கூறும்வேதவாக்கிய விசாரப் பிரவாகப்பலத்தால் நானே பிரஹ்மமென் றையந்திரிபின் றித்தெளிவதே ஆவரணத்தி னிரண்டா மம்சமான இருந்தால் அது தோன்றுதா என்னும் கபாதிக்கு விரோதியாம். மேலும் இவ்வபரோக்ஷஞானம் 'நான் பிரஹ்மத்தை யறியேன்' என்னும் அஞ்ஞானம், 'பிரமம் இல்லை' 'இருந்தால் அது தோன்றுதா' என்னும் இருவகைச் சந்தேகவடிவ ஆவரணம்,'நான் பிரஹ்மமல் லன்; ஆனால் புண்ணியபாவகன்மங்களைச் செய்பவனும் அவற்றின் பலனாய சுகதுக்கங்களை யனுபவிப்பவனுமாய ஜீவன்' என்னும் விக்ஷேபமாகிய அவித்தியாசமூகத்தை நாசம்பண்ணுவதாமென்று மறிக.

(ஒன்றுண்டென்று பிறர் சொல்லக்கேட்டறிந்ததைத் தானே நேரிற் கண்டறிவது அபரோக்ஷஞானமாம்.)

(6) சோகநிவிர்த்தி.

நானே பிரஹ்மமென்றறிந்தபின்பிறகுநான்கர்த்தாவுமன்று; போக்தாவுமன்று. என்னிடத்தில் பிறப்பிறப்பும் சுகதுக்கமும் எஞ்ஞான்று மில்லையென்று சீவத்துவமொழிவதே சோகநிவிர்த்தியாம்.

(7) நிரங்குசதிருப்தி.

நான் அத்வயப் பிரஹ்மசொரூபன் என்று சம்சயரகிதமாகத் தனது சொரூபஞான முண்டானபோதுண்டான ஆநந்தத்தினால் செய்யத்தக்க கருமங்களியாவும் செய்யப்பட்டன; அடையத்தக்க பல மியாவு மடையப்பட்டன என்று சந்தோஷ முண்டாயிருப்பதே நிரங்குசதிருப்தியாம். நிரங்குசதிருப்தியெனினும் தடையற்ற வாநந்தமெனினுமொக்கும். சோகநிவிர்த்தி நிரங்குசதிருப்தியென்னு மிரண்டவஸ்தைகளும் அபரோக்ஷஞானத்தின் பலமாம்.

சி: இவ்வவத்தைகளைத் திருட்டாந்தவாயிலாக வுணர்த்துமாறு வேண்டுகின்றேன்.

கு: பத்துப் புருஷர்க ளொன்றாகக்கூடி மிகுதியும் நீர்ப்பெருக்குள்ள ஓராற்றை நீந்திக் கடந்துபோய்த் தம்மை யெண்ணிப்பார்க்குமிடத்தில், அப்பதின்மருள் ஒருவன் ஒன்பதின்மரை யெதிரிட் டெண்ணிப்பார்த்துத் தன்னைப் பத்தாமவனென்றறியா

தவே அஞ்ஞானமாம். பின்பு பத்தாமவனில்லை; இருந்தாலவன் தோன்றமாட்டான் என்னு மிருவகைப் பிராந்தியே அஞ்ஞான காரியமான ஆவரணமாம். அப்பால் பத்தாமவன் நதியிலிறந்தொழிந்தானென்பதே விட்சேபமாம். அதன்பின்னர் வேறொரு ஆப்தன் வசனத்தினால் பத்தாமவனைச் சுவர்க்கம்போல் உண்டென்றறிவதே ஆவரணத்தின் முதலம்சத்திற்கு விரோதியான பரோட்சஞானமாம். அதன்மேல் ஒன்பது புருஷருடன் கூட்டி முறையேயெண்ணி நீயே பத்தாமவனென்றறிவிக்கத் தானே தன்னைப் பத்தாமவனென்று பிரத்தியட்சமாக வறிவதே ஆவரணத்தின் இரண்டாமம்சத்திற்கு விரோதியான அபரோக்ஷஞானமாம். அவ்வாறறிந்தபின் பத்தாமவன் இறந்தொழிந்தானென்னும் துக்கத்தை விடுவதே சோகநிவிர்த்தியாம். பின் உள்ளவாறிருப்பதே நிரங்குச திருப்தியாம்.

இங்குக் கூறிய ஏழவத்தைகளில் நான் பிரஹ்மமென்னும் ஞானம்சீவனுக்கே யுளதாயிருத்தலானும் அது பிறிதொருவர்க்குண்டாவதாக ஏற்படாமையானும் சீவனுக்கே யான் பிரஹ்மம் என்னும் ஞானத்தினாலே மோட்சமுண்டாமென்க.

சி: இதனைச் சற்று விளக்கிக்கூறல் வேண்டும்.

கு: நான் பிரஹ்மமென்னும் ஞானம் சீவனுக்கே யன்றிச் ஜீவசாட்சியான கூடஸ்தனுக் குண்டாதலில்லை. ஆயினும் சீவன் தனதுசாட்சியான கூடஸ்தனையும் தானாகவேயறிகின்றான். அந்தக் கூடஸ்தன் நான் என்னும் சொல்லால் கிரகிக்கப்படுதலால் அதுவே நான் என்னும் சொல்லிற்குப்பொருளாம். கடாகாசத்திற்கும் மகாகாசத்திற்கும் எப்போதும் அபேதமிருப்பதுபோல நான் என்னும் சத்தத்தில் விளங்குகின்ற கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்திற்கும் எப்போதும் அபேதமிருக்கிறது. இக்காரணத்தால் கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்துடன் முக்கியசமானாதிகரணியமுண்டு. எந்த வஸ்துவிற்கு எந்தவஸ்துவோடு எப்போதும்அபேதமிருக்கிறதோ அந்தவஸ்துவிற்கு அதனுடன் முக்கிய சமானாதிகரணியம் சொல்லப்படுகின்றது. கடாகாசத்துக்கு மகாகாசத்துடன் எப்போதும் அபேதமிருப்பதுபோலக் கூடஸ்தனுக்குப் பிரமத்துடன் எப்போதும் அபேதமிருத்தலால் நான் என்னும் சத்தத்தில் விளங்குகின்ற கூடஸ்தனுக்குளப்போதும் பிரஹ்மத்துடன் அபேதமுண்டு. நான்என்னும்சத்தத்தில்விளங்குகின்றசீவனுக்குப்பிரஹ்மத்தோடு

தன்சொரூபத்தைப்பாதித்தலால் (பொய்யென்று நிச்சயித்தலால்) அபேதமுண்டாகின்றது. இதுமுகத்தின் பிரதிபிம்பத்திற்குப்பிம்ப சொரூபமானமுகத்துடன்பிரதிபிம்பசொரூபத்தைப்பாதித்தலால் அபேதமுண்டாதல்போலவாம். இக்காரணத்தால் சீவனுக்குப் பிரஹ்மத்துடன் பாதசமானாதிகரணியமுண்டு. எந்தவஸ்துவிற்குப் பாதமுண்டாய் எதனோடு அபேதமுண்டாகின்றதோ அந்த வஸ் துவிற்கு அதனோடு பாதசமானாதிகரணியம் சொல்லப்படுகின் றது. முகத்தின் பிரதிபிம்பத்திற்குப் பாதமுண்டாய் முகத்தோடு அபேதமாகின்றது. ஆகவே, பிரதிபிம்பம் முகமேயாம். எங்ஙனம் பிரதிபிம்பத்திற்கு முகத்துடன் பாதசமானாதிகரணிய மிருக்கிற தோ அங்ஙனமே ஆபாசனாய சீவனுக்குப் பாதமுண்டாய்ப் பிர மத்துடன் அபேதமுண்டாகின்றது. ஆதலால், நான் என்னும் சத்தத்தில் விளங்குகின்ற சீவன் பிரஹ்மமேயாம். ஆகவே, சீவ னுக்கு நான் பிரஹ்மம் என்றுண்டாகும ஞானம்பிராந்தியன்றாம். அஃதாவது யதார்த்தமாம். யதார்த்தமாகவே, நான் பிரஹ்மம் என்னும் ஞானத்தினாலேயே சீவனுக்கு மோக்ஷமுண்டாமென்க.

சி: நான் பிரஹ்மம் என்னும் ஞானத்தினாலேயே சீவனுக்கு மோக்ஷமுண்டாமென்பதற்குரியபிரமாணங்களை யெடுத்துரைக்கு மாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ்வருவனவே.

### சுகரஹஸ்யோபநிஷத்.

சுய மஹாவாக்யாநிவக்ஷ்யாமி| யதா ஓம் ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம| ஓம் அஹம் ப்ரஹ்மாஸ்மி| ஓம் தத்வமஸி| ஓம் அயமாத்மா ப்ரஹ்ம| தத்வமஸீத்யபேதவாசகமிதம் யேஜபந்தித ஶிவஸாயுஜ்ய முக்திபாஜோபவந்தி||

(இ - ள்.) மஹாவாக்கியங்கள் நான்கு. அவையாவன:—ஓம் பிரக்ஞாநம் பிர்ம்ம, ஓம் அகம்பிரமாஸ்மி, ஓம் தத்வமசி, ஓம் அயமாத்மாப்பிரம. தத்துவமஸியென்னும் இந்த அபேதவாக்கி யத்தை யார்ஜபிக்கிறார்களோ அவர்கள் சிவஸாயுஜ்ய முக்தியை யடைகிறார்கள்.

### ஹயக்கிரீவோபநிஷத்.

ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம| அஹம் ப்ரஹ்மாஸ்மி| தத்வமஸி| அய மாத்மா ப்ரஹ்ம| அஹம் ப்ரஹ்மாஸ்மி மஹாவாக்யைஃ ப்ரதிபாதிதமயம் யேஜபந்தி தே ப்ரதிபாத்யம்||

(இ - ள்.) பிரக்ஞானம் பிர்ம்மம், அகம்பிரமாஸ்மி, தத்வமஸி, இந்த ஆத்மாவானவன் அந்தர்யாமியாயும் அமிர்தனாயுமிருக்கிறான். அகம்பிரமாஸ்மி என்றற்றொடக்கத்து மஹாவாக்கியங்களினால் வெளிப்பட்டிருக்கிற அர்த்தத்தை இந்த உபநிஷத்திலுள்ள அந்த மந்திரங்கள் வெளிப்படுத்துகின்றன.

பைங்களோபநிஷத்.

தத்த்வமஸி | த்வம் ததஸி | த்வம் ப்ரஹ்மாஸி | அஹம் ப்ரஹ்மாஸ்மீத்யநுஸந்தாநம் குர்யாத் ||

(இ - ள்.) அது (பிர்ம்மம்) நீயாயிருக்கிறாய், நீ அதுவாயிருக்கிறாய், நீ பிர்ம்மமாயிருக்கிறாய், நான் பிர்ம்மமாயிருக்கிறேன் என்று அநுஸந்தானஞ் செய்யவேண்டும்.

கைவல்லியோபநிஷத்.

ஸூக்ஷ்மாத்ஸூக்ஷ்மதரம் நித்யம் தத்த்வமேவ த்வமேவ தத் ||

(இ - ள்.) சூட்சுமத்திலும் அதி சூட்சுமமாயும், நித்தியமாயுமிருக்கிற பரப்பிர்ம்மமெதுவோ அது நீ; நீயே அது.

அமிர்தபிந்தூபநிஷத்.

தத்ப்ரஹ்மாஹமிதி ஜ்ஞாத்வா ப்ரஹ்ம ஸம்பத்யதே த்ருவம் ||

(இ - ள்.) அந்தப் பிரம்மமே நான் என்று அறிந்தால் பிர்ம்மமேயாகிறான். நிச்சயம்.

மஹாநாராயணோபநிஷத்.

த்வம் ப்ரஹ்மாஸி | அஹம் ப்ரஹ்மாஸ்மி | ஆவயோரந்தரம் ந வித்யதே த்வமேவாஹம் அஹமேவ த்வம் இத்யுபதிஶ்ய தத்க்ஷணாதி நாராயணஸ்திரோததே ||

(இ - ள்.) நீ பிர்ம்மமாயிருக்கிறாய்; நான் பிர்ம்மமாயிருக்கிறேன்: நம்மிருவருக்குள் பேதமில்லை. நீயே நான்; நானே நீ; இவ்வணங்கூறி ஆதிநாராயணர் மறைந்தார்.

ஸ்கந்தோபநிஷத்.

ஸவைவ ஹி ஶிவம் ப்ரஹ்ம தத்ப்ரஹ்மாஹம் ந ஸம்ஶய: |

ஜீவ: ஶிவ: ஶிவோ ஜீவ: ஸ ஜீவ: கேவல: ஶிவ: | துஷேண பத்தோ வ்ரீஹி: ஸ்யாத் துஷாபாவேந தண்டுல: | ஏவம் பத்தஸ்ததா

ஜீவஃ கேவலநாமேஶ ஸதாஶிவஃ| ஸோஹம் ஸாவேந ஸம்ஶ யேக। கமெஷ தஶ்வநம் ஜ்ஞாநம் ||

(இ - ள்.) அவனே பரப்பிரம்மம்; அந்தப்பிரம்மம்நான்தான், சம்சயமில்லை. ஜீவனே சிவன்; சிவனே ஜீவன்; அந்த ஜீவன் சிவனேதான். உமியினால் கட்டுப்பட்டிருக்கிறபோது நெல்லாயிருக்கிறது; உமியற்றதினால் அரிசியாயிருக்கிறது; அப்படியே ஜீவனும் கட்டுப்பட்டிருக்கிறான். கருமநாசமானால் எப்போதும் சிவனாயிருக்கிறான். அவன்தானேயென்கிற பாவனையுடனே பூசிக்கவேண்டியது; அபேதமாய்ப்பார்க்கிறதே ஞானம்.

மைத்திரேயோபநிஷத்.

நித்யஶ்ஶுத்தஸ்ஸதாஶிவஃ| ஸோஹம் ஸ்வாத்மா। பரமாத்மா ஸ்வாத்மாஶிவஃ| அஹமேவ நாஶரஹிதோ ஸ்வாத்மாஹம் ||

(இ - ள்.) நித்தியனும் சுத்தனும் சதாசிவனும் இருக்கிறேன், அவன் நானாக விருக்கிறேன், பரமாத்மாவாயும் சிவனாயுமிருக்கிறேன், நாசமற்ற பிரஹ்மமாயிருக்கிறேன்.

சைவபுராணம்.

அஹங்கார தயாஜீவ ஸ்தந்நிர்முக்தஃ ஶங்கரஃ ஸ்வயம்| யதேகம் ஸ்வர்ணம்ஹி தாம்ரேண மிஶ்ரிதம் யதா || கல்மஷம் வ்யஜ்யதே தயாஜீவோஹம் வர்ணம் ஸ்வர்ணம் க்ஷாராதி ஶோதிதம்யதா || பூர்வவத் நிர்மலம் யாதி தயாஜீவஸ்ய ஸம்ஶித்| யதாஹம் ஸ்வரூபம் ஸ்வ்யாப்ய ஸக்திஸாவ ஸந்நிதஃ|| ஶிவம் ஸ்வ்யக்தம் கரோதித்யேவஃ பஶ்வநம் ஸ்வரணம் ஸ்வம்| யஸ்ய நம் ஸ்வகம்ஸ தஸ்ய ஸ்வாபாவாதி தர்மதோ மதம் || தயாதஜ்ஞாநஸம்பந்நஸ்ய ஶரீரம்ஸா ஸ்வராம்பூயஃ| ஏகஸ்ய நித்யரூபம்ஹி ஶிவமேவ ஸநாதநம் || அஜ்ஞாநதூஷ்ட தோஷதோஷைகா ஜ்ஞாநவாந் ஜாயதே யதா। ததாஹங்கார நிர்முக்தோ யாதிஶங்கரதாம் பரம் ||

(இ - ள்.) அகங்காரத்தன்மையால் ஜீவனாகின்றான், அவனே அதனினின்றும் விடுபட்டகாலத்துச் சுவயம் சங்கரனேயாகின்றான். எப்படி ஒருசுவர்ணமேதாமிரத்தினாற்சேர்க்கப்பட்டபோது அற்பவிலையுடையதாகின்றதோ, அதுபோலச் சிவன் அகங்காரத்

தோடுகூடிப் பெத்தனுகின்றான் அச்சுவர்னமே க்ஷாராதிகளாற் சோதிக்கப்பட்டகாலத்து முன்போல்விலைமதிப்பையடைகின்றது. அப்படியே ஜீவனுக்கும் சம்மதம் (அஃதாவது ஞானத்தால் அஞ்ஞானமும் அதன் காரியமாகிய அகங்காராதிகளும் நீங்கிய காலத்து முன்போல் சிவமேயாகின்று னென்பதுபொருள்), எப்படிச் சற்குருவையடைந்து பக்திபாவகத்தோடு கூடியவனுய்ச் சிவபுத்தியாக மிருந்த பூசை நல்லஸ்மரணம் தியானம் ஸ்தோத்திரம் என்பவற்றைச்செய்கிறான், அச்சிவபுத்தியால் பாவமுதலியன நீங்குகின்றன, அப்போது அஞ்ஞானம நசிக்கின்றது. விவேகியானவன் சரீரத்தை அநித்தியமென்றறிந்து நித்திய வடிவமான சநாதனமாகிய சிவத்தையே பஜிக்கிறான். எப்போது அஞ்ஞானத்தினின்றும் நீங்கி ஞானமுடையவனுகின்றானே அப்போது அகங்காரத்தினின்று நீங்கிச் சங்கரத்தன்மையை அடைகிறான்.

உத்தரகீதை.

யதாஜலம் ஜலேக்ஷிப்தம் க்ஷீரே க்ஷீரம் க்ருதே க்ருதம் |
அவிசேஷோ பவேத்தத்வத் ஜீவாத்மா பரமாத்மநோ: ||

(இ - ள்.) எப்படி ஜலத்தில் ஜலத்தையும் பாலிற் பாலையும் நெய்யில் நெய்யையும் ஊற்றினுல் அவை அவிசேஷமா (பேதமில்லாதனவா) கின்றனவோ, அவைபோல ஜீவாத்மா பரமாத்மாக்களுக்கு அபேதமுண்டாகின்றது.

ஸநந்தநர ஸம்ஹிதை.

மஹாவாக்ய ப்ரகரணம் ஸாக்ஷாச்சிவமயம் பரம் | முமுக்ஷூணாம்ச வக்தவ்யம் நாந்யேஷாம்ச கதாசந || மஹாவாக்ய ப்ரயோக்தாச ஸ ஏவ பரமச்சிவ: | தஸ்மாதப்யதிகோ நான்ய: ஸ ஏவ சங்கர: || ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்மவேதாதி மஹாவாக்ய சதுஷ்டயம் | மஹாவாக்ய சதுஷ்காணாம் ஸ்வரூபம் ஜ்ஞாநசம்பவம் ||

(இ - ள்.) சிரேஷ்டமானதாயும் சாக்ஷாத் சிவசொரூபமானதாயு மிருக்கிற மஹாவாக்கியப் பிரகரணமானது முமுக்ஷுக்களுக்குச் சொல்லத்தக்கது. மற்றவர்களுக் கொருபோதுஞ் சொல்லக்கூடாது. மஹாவாக்கியத்தை யுபதேசிக்கிற குரு யாரோ அவரே பரமசிவன். தத்துவோபதேசஞ் செய்கிறவரைவிட மேலான குருவில்லை. அவரேதான் சங்கரர். பிரக்ஞானம் பிர்மம்

என்றற் றொடக்கத்து நான்கு வாக்கியங்களும் மஹாவாக்கியங் களுமாம். இந்நான்கு மஹாவாக்கியங்களும் இருக்கு, யஜுஸ், ஸாமமாகிய வேதங்களிலுள்ளனவாம்.

ரிபுகீதை.

கடமடமென் றுணர்வுற்ற வுபாதிநீக்கிற் கடமின்று மடமி ன்று மொன்றேபோல, மடமைமுதற் சிவபர வுபாதிநீக்கின் மாசற்ற ஜீவபா மிரண்டுமொன்றென், றிடமருவு மூகத்தாற் பரஜீ வைக்கிய வியல்புதனை யிருமையற வறிந்தே யத்தால், அடருமக ண்டாகார சொரூபமாகி யசஞ்சலமா யான்மாவி லமர்ந்து நிற் பாய்.

சோயமெனச் சொல்லியிடும் வாக்கியத்திற் சோதித்து விரு த்தாமிசம் நீக்கும்போதங், காயசக சைக்கியமே யறியுமர்த்த மவ் விதமே தத்துவமசி வாக்கியத்து, மேயமதாம் விருத்தாம்ச மனை த்துநீக்கி யியல்பான வைக்கியமே யறிந்தே யத்தா, லாயமனை பேதமெலா மிழந்தெப்போது மசஞ்சலமாய் ஆன்மாவி லமர்ந்து நிற்பாய்.

விட்டவிலக் கணையாலும் ஐக்கியந்தோன்றா விடாதவிலக் கணை யாலு மைக்கியந் தோன்றா, திட்டமதா முபயவிலக் கணையொன் றாலே யிலங்குபர சிவைக்ய மிலங்கு மென்றே, நிட்டமுறத் தோற் றியவித் தோற்ற மெல்லாந் நிகழுருவாம் பரப்பிரம சொரூபமெ ன்றே, சிட்டமுறு மகண்டபர நிச்சயத்தாற் சின்மயமாம் பரப் பிரம மாத்ரமாவாய்.

மாயையெனு முபாதியுறு மீசன்றனை மருவியதற் பதமுறை செய் வாச்சியார்த்தம், ஆயதன தவித்தையுறுஞ் சிவன்றனை யறைகின்ற துவம்பதமோர் வாச்சியார்த்தம், ஏயமதா முபாதியெ லா மிழந்தபின்ன ரேகவிலக் கணமான வத்துத் தானே, தூயபத மிரண்டுக்கு மிலட்சியார்த்தந் தொடர்புற்ற வைக்கியமே யசிப தார்த்தம்.

தற்பத லட்சியமான பிரமரூபந் துவம்பத லட்சியமான நீயே யாவாய், அற்பமுமே யிதிலைய மமைவதில்லை யகண்டசிவன் றன் னுணை யறைந்த துண்மை, சொற்பமிலா வகண்டபரி பூர்ணமான சுத்தமதாம் பரப்பிரம நீயேயென்று, செப்பியிடுங் குருபரனே குருவாகின்றான் செப்பியவா றறிந்தவனே சீடனாவான்.

சித்திரமா முபாதியுறுஞ் சீவன்றானே செப்புமயம் பதத்துக்கு வாச்சியார்த்தம், வித்தரமா முபாதியுறு மீசன்றானே விளம்பியிடு மான்மபத வாச்சியார்த்தஞ், சுத்தமதாஞ் சீவபர சொரூபந்தானே சொல்லியவிவ் வுபயபத லட்சியார்த்தம், அத்திரமா முபயபத லட்சியத்தி னைக்கியமே பிரமமெனும் பதத்தினர்த்தம்.

இன்னவித மிருக்குமுத்தல் வேதாந்தத்தி லிலங்கியவிந் நான்கு மகாவாக்கியத்தின்,பின்னமிலா வைக்கியமாமகண்டார்த்தத்தைப் பேதமெனும் பிராந்தியெலாந் தீரும்வண்ணம், அன்னசிவ னருளியவா றடைவாய்ச்சொன்னோ மறைந்தபடி யழுத்தமுற வப்யாசித்தே, நின்னுருவாய் நிலைபெற்ற வகண்டார்த்தத்தை நிருமலமாய் நீயென்று மனுபவிப்பாய்.

சுயமதுவாந் தத்வமசி யென்னும் வாக்கியம் சொலலுமுபதேசமகா வாக்யமாகும், இயலுமகம் பிரமாஸ்மி யென்னும் வாக்யமிலகுமநு பூதிமகா வாக்யமாகு, மயன்மருவாப் பிரஞ்ஞானம் பிரமவாக்யம் மனனத்தி னப்பியாச வாக்கியமாகும், அயுமான்மா பிரமமென வறையும் வாக்கிய மதற்கெல்லாஞ் சம்மதமாம் வாக்யமாமே.

ஆதலினுற் றத்வமசி வாக்கியத்தா லருளியவா றகண்டார்த்த மறிந்துகொண்டு, பேதமறப் பிரஞ்ஞானம் பிரமமென்று பேசு மகா வாக்கதனுன் மனனஞ்செய்து, வாதகமி லயமான்மா பிரமமென்னும் வாக்கதனுற் சரியெனவே சம்மதித்திங், கோதுமகம் பிரமாஸ்மி வாக்கியத்தா லுரைத்தவகண் டார்தத்தை யனுபவிப்பாய்.

திருமந்திரம்.

காரிய மேழிற் கலக்கும் கடும்பசு
காரண மேழிற் கலக்கும் பரசிவன்
காரய காரணங் கற்பனை சொற்பதப்
பாரரும் பாழில் பராபரந் தானே.

நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலால்
தானென்று நானென்றுஞ் சாற்றகிலேனே.

தொம்பதந் தற்பதம் தோன்று மசிபதம்
நம்பிய சீவன் பரஞ்சிவ னாய்நிற்கும்.

தற்பதந் தொம்பதந் தாறு மசிபதம்
தொம்பத மூன்றுந் துரியத்துத் தோற்றவே
சிற்ப துயிர்பர சிகழ்சிவ மும்மூன்றின்
சொற்பத மாகுந் தொந்தத் தசியே.

தொம்பத மாயையுட் டோன்றிடுந் தற்பத
மம்பரை தன்னி லுதிக்கு மசிபத
நம்புறு சாநதியி னண்ணுமவ் வாக்கிய
மும்பருரை தொந்தத் தசிவாசி யாமே.

ஆகிய வச்சோமன் றெய்வது தன்னிடத்
தாகிய யவ்விட்டா காய முபாதான
லேகிய தொந்தத் தசியென்ப மெய்யறி
வாகிய சீவன் பரசிவ னாமே.

ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத விலக்கணைத்
தாகுப சாந்தமே தொந்தத் தசியென்ப
வாகிய சீவன் பரன்சிவ னாமே.

தொம்பதந் தற்பதஞ் சொல்லு மசிபத
நம்பிய முத்துரி யத்துமே னடமேவ
வும்பத முப்பத மாகு முயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாமே.

நீயது வானா யெனநின்ற பேருரை
யாயது நானானே னென்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரரு
ளாயது வாயனந் தானந்தி யாகுமே.

நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாற்
றானென்று நானென்று சாற்றகில் லேனே.

சீவ னென்னச் சிவனென்ன வேறில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே.

## சிவஞானபோதம்.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகியிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

பிரமகீதை.

நீயென்கின்ற வார்த்தைக்குப் பொருளாயென்று நிற்பதுவே
நானென்கின்ற வாசகத்தின் பொருளாய்நின்று நாடுவது
நானென்கின்ற வாசகத்தின் பொருளாய்நாடி நிற்பதுவே
நீயென்கின்ற வாசகத்தி னிற்கும்பொருளும் நிலைபெறவே.

வேதாந்தசூளாமணி.

முன்னமொழி தருஞ்சோயந் தேவதத்தனென்னு மொழி யுண்முத லவனென்னு மொழியிறந்தகாலந், தன்னில்வரு தேச வயோ விசிட்டனுந்தேவ தத்தனைக்காட் டிடுமிவனென் மொழி நிகழ்கா லத்தி, னுன்னவரு மவையுடைய தேவதத்தன் றன்னை யுணர்த்திடுமிவ் விருத்ததரு மப்பொருள்க ளிரண்டு, மன்னுதல் செய் யயிக்கமு முறைமையினலப் பொருட்கண் வருவிருத்த தருமங்க ளனைத்தினையும் விட்டே.

விருத்தமறு தருமமாந் தேவதத்தன் றனையே விடாதுகொளி னவனிவனே யிவனவனே யென்னுந், தெரித்தலரி தாயதாதான் மியங்கூ றுமாற் றேரினிதை விட்டுவிடா விலக்கணையினுடுதா, னருத்தவிலக் கணைபாகத் தியாகவிலக் கணையென் றறைதலினு லிதுவேதத் தொம்மசிவாக் கியத்திற், குரைத்திடுவ ருதாரணமா யுரியதென வுண்மை யுணர்ந்துடையோரஃதெவ்வா றெனின்முறை யே யுரைப்பாம்.

கைவல்லிய நவநீதம்.

பன்னிய சோயமென்னும் பதங்களின் வாச்சியார்த்த
மன்னிய தேயங்கால மவனிவ னென்பவெல்லாம்
சொன்னவிவ் விரோதம்விட்டுத் தொகையிலக் கியம்விடாம
லுன்னிடிற் றேவதத்த னொருவனை வெளியாக்காட்டும்.

தத்துவ பதங்கடாமுஞ் சாட்சியாய்ப் பிரமமான
வத்துவை விடாமற்பேத வாச்சியார்த் தத்தைவிட்டு
நித்தமு மதுநீயாகு நீயது வாகுமென்னு
மர்த்தமு மகண்டமென்றே யசிபத மைக்கியங் காட்டும்.

ஞானவிளக்கம்.

நல்லகுலத் திற்பிறந்து நல்லாரைச் சேர்ந்தொழுகி
நல்லறிவு பெற்றுடைய நன்மாணு - நல்ல
சிவம்வேறே யென்றெண்ணிச் சிந்தைகலங் காதே
சிவமென்ற நீயே சிவம்.

உபதேசமாலை.

ஜீவபர மிரண்டுந் தேருமிடத் தேகமென்று
மேவியசின் முத்திரைகொண் டென்கரத்தா-லோவில்
வழுக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுக்கரத்தி லேந்தியவெம் மான்.

சிந்தனைவெண்பா.

சிவன்வேறு சீவன்வே றென்றிரண்டாய்ச் செப்பு
மவன்சிவனை யென்றுமறி யாதான்-றவமில்லா
உள்ளத்தார்க் கெய்துமோ வூர்க்குருவி யாகாச
மெள்ளப் பறந்தறியு மே.

---

## ௪௪ - வது சம்வாதம்.

பந்தத்திரயத்தைப் பகுத்துணர்த்துதல்.

சி: ஆத்ம சாட்சாத்காரத்திற்கு விரோதித்திரயத்தை நன்குணர்ந்து விலக்கவேண்டு மென்பதை விளக்கமாக கூறியருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: அவை: பூதப் பிரதிபந்தம், வர்த்தமானப் பிரதிபந்தம், ஆகாமியப் பிரதிபந்த மென்பனவாம். பிரதிபந்தம்-தனக்கு வேறாக நின்று பந்திப்பது; தடை.

சி: பூதப் பிரதிபந்த மாவதுயாது?

கு: முத்திவிருப்பத்தினால் சர்வசங்கப் பரித்தியாகஞ்செய்து நன்காராய்ந்து சற்குருவை யடைந்து சிரவணாதிகளைச் செய்தாலும் முன்னர்க் கிருகஸ்தாசிரமத்திலிருந்து வனிதாதி (மனைவிமுதலிய) வஸ்துக்களை ரூபயௌவன சிங்காராதிகளுடனனுபவித்ததன் சம்ஸ்கார பலத்தாற் றோன்றித் தோன்றிச் சுகதுக்கங்களை யடிக்கடி கொடுத்துச் சிந்திக்கச்செய்து ஆத்மசாட்சாத்கார மாகவொட்டாது தடுப்பதே பூதப்பிரதிபந்தமாம். பூதம்-இறந்தகாலம்.

சி: வர்த்தமானப் பிரதிபந்த மாவதுயாது?

கு: சோம்பல், விஷயவிச்சை, தானல்லாத வுடம்பை யானெனனும் தன்னுடைமையில்லாத பொருளை யெனதெனனுமாகிய அபிமானம், சிற்றினஞ்சேர்தல், தருக்க நெறிகடந்து பேசுதல்,

ஸ்திரபுத்தியின்மை முதலியவை தத்துவவிசாரஞ் செய்தாலும் ஆத்ம சாட்சாத்கார மாகவொட்டாது தடுப்பதே வர்த்தமானப் பிரதிபந்தமாம். வர்த்தமானம்-நிகழ்காலம்.

சி: ஆகாமியப் பிரதிபந்த மாவதுயாது?

கு: இன்னுஞ் சில பிறப்பினை யடைந்தாலன்றிப் பிரமாதி யுலகில் வைத்துள்ளஆசை நீராதென்னும் தோஷத்துடன் பொருந்தி, வேதார்த்தத்தினை யறிந்தாலும் ஆத்ம சாட்சாத்கார மாக வொட்டாது தடுப்பதே ஆகாமியப் பிரதிபந்தமாம். ஆகாமியம்-மேல்வருவது.

சி: இப்பந்தத் திரயங்களைக் கெடுப்பதெவை?

கு: அவை: ஞானம், வைராக்கியம், உபரதியாம். பந்தத்திரயங்களைக் கெடுப்பதற்கு முக்கிய சாதனமாய ஞானாதிகளை யிடைவிடாதப்பியாசஞ் செய்வதற்கு அவற்றின் ஏது முதலானவற்றை நன்குணர்தல்வேண்டும்.

(1) (ஞானம்)

சி: (1) ஞானத்திற் கேதுவாவதுயாது?

கு: சிரவண மனன நிதித்தியாசனங்கள்.

சி: (2) சொரூபமாவதுயாது?

கு: ஆத்மாவிற்கும் அனாத்மாவிற்குமுள்ள அத்தியாச ஐக்கியத்தை வேறுசெய்து ஆத்மா தானென்றும் அனாத்மா தானல்லவென்று மறிவதே.

சி: (3) காரியமாவதுயாது?

கு: சந்தேக விபரீதமின்றித் தான் அனாத்மாவிற்குச் சாட்சியாய் விளங்குதலே.

சி: (4) அவதியாவதுயாது.

கு: மயக்க காலத்திற் தேகமே தானென்று திடநிச்சயம் வந்ததுபோலத் தெளிவுக்காலத்தில் பிரஹ்மமேதானென்னும் திடநிச்சயம்வருதலே.

சி: (5) பலமாவதுயாது?

கு: உபாதி ரகிதமாய மோக்ஷமே.

சி: ஞானம் எப்பிரதிபந்தத்தைக் கெடுக்கும்?

கு: ஆகாமியப் பிரதிபந்தத்தை.

(2) வைராக்கியம்.

சி: (1) வைராக்கியத்திற் கேதுவாவது யாது?

கு: வனிதாதி வஸ்துக்களில் அநித்தியத்துவாதி தோஷதரிசனமே.

சி: (2) சொரூபமாவது யாது?

கு: வனிதாதி வஸ்துக்களில் தோஷபுத்தியுண்டாய் அவற்றைக் கக்கின சோறுபோன்று காண்பதே.

சி: (3) காரியமாவதுயாது?

கு: வனிதாதி வஸ்துக்களை யேனனுபவிக்காமற் றள்ளிவிட்டோ மென்னுஞ்சங்கற்ப முண்டாகா திருப்பதே.

சி: (4) அவதியாவதுயாது?

கு: பிரமலோக பரியந்தம் துரும்பாய்க் கருதுதலே.

சி: (5) பலமாவது யாது?

கு: பிரமலோகப் பிராப்தியே.

சி: வைராக்கியம் எப்பிரதிபந்தத்தைக் கெடுக்கும்?

கு: வர்த்தமானப் பிரதிபந்தத்தை.

(3) உபரதி.

சி: (1) உபரதிக் கேதுவாவதுயாது?

கு: இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்திகாரம், தாரணை, தியானம், சமாதியென்னும் அஷ்டாங்கயோகமே.

சி: சொரூபமாவதுயாது?

கு: மனோ நிச்சல சித்தியே.

சி: (3) காரியமாவதுயாது?

கு: யாதொரு விவகாரமு மற்றிருத்தல்.

சி: (4) அவதியாவதுயாது?

கு: சுழுத்தியைப்போன்று சாக்கிரத்திலும் சமஸ்த விஷயங்களையு மறந்திருத்தல்.

சி: (5) பலமாவதுயாது?

கு: பிரமலோக சாமீபப்பிராப்தி.

சி: உபரதி எப்பிரதிபந்தத்தைக் கெடுக்கும்?

கு: பூதப்பிரதிபந்தத்தை.

சி: ஞான வைராக்கிய வுபரதிகளுள் சாதனமியாது சாத்திய மியாது?

கு: வைராக்கியத்தினாலே உபரதியும் உபரதியினாலே ஞான முஞ் சித்திக்குமென்றறிக.

சி: ஆத்ம ஞானியினிடத்து ஞானவைராக்கிய வுபரதியென்னு மிம்மூன்று மிருக்குமோ?

கு: மோக்ஷமடைதற்கு ஞானமே பிரதானமாயிருத்தலின் அஃது அவசியமாயிருக்கும். மற்றையிரண்டும் சிலரிடத்திருக்கும்; சிலரிடத்திரா? இம்மூன்றும் ஒருமிக்க விருக்குமாயின் அது மகா தபசின் பலனும். ஞானமின்றி வைராக்கிய வுபரதியிருப்பின் அவற்றினால் மோக்ஷஞ் சித்திக்காது.

சி: வைராக்கிய வுபரதிகளின் பயனாய பிரமலோகப் பிராப்தியைவிரும்பாத ஆத்மஞானியிடத்து அவ்விரண்டுமிருந்தா லவற்றின் பயன்யாது?

கு: வைராக்கிய வுபரதிக ளிருப்பவரிடத்துப் பிரத்தியட்ச துக்க முண்டாகாமையின் அத்துக்கமின்மையே அவற்றின் பலனும்.

சி: வைராக்கிய வுபரதியின்றிய ஆத்மஞானிக்குப் பிரத்தியட்ச துக்கம் போகாதாயின் அந்த ஞானிக்கு முத்தியுண்டாதலெப்படி?

கு: விருக்ஷத்தின் நுனி முறிந்தால் அந்நுனியி லிருப்பவனுக்கு விழவேண்டுமென்னும் விருப்பமில்லாமற் போயினும் அவன் விழுதல் எப்படி நிச்சயமோ அப்படியே வைராக்கிய வுபரதியின்றிய ஞானிக்கும் தேகாந்தத்தில் முத்தி சித்திக்குமென்றறிக.

---

## சரு · வது சம்வாதம்.

### அஞ்ஞான பூமியாகா தென்றிடல்.

சி:—ஞானத்திற் கேதுவாய சிரவண மனன நித்தியாசனங்கள் செய்பவ ரெப்படியிருப்பார்.

கு:—அஞ்ஞானபூமியினின் றகன்றிருப்பார். அதனின்றகலாவிடத்து ஞானபூமி சித்திக்காது.

சி:—அஞ்ஞான பூமியாவதுயாது?

கு:—ஞானபூமிக்கு விரோதமா யிருப்பதே அஞ்ஞான பூமியாம். பூமியென்றது ஈண்டவஸ்தையை. அவ்வஞ்ஞானபூமி எழுவகைத்தா யிருக்கும்.

சி:—அவையாவை?

கு:—அவை (1) பீஜசாக்கிரம், (2) சாக்கிரம், (3) மகாசாக்கிரம், (4) சாக்கிரசொப்பனம், (5) சொப்பனம், (6) சொப்பன சாக்கிரம், (7) சுழுத்தி யென்பனவாம்.

சி:—(1) பீஜசாக்கிரமாவதுயாது?

கு:—சிருஷ்டியி னாரம்பத்தில் அல்லது சாக்கிரத்தி னாரம்பத்தில் மாயையோடு கூடிய சேதனத்தினின் றுண்டான ஆபாச சேதனமே பிரதமாவஸ்தையான பீஜசாக்கிரமாம். தேகோற்பத்தியின்பின்னுண்டாய் விருத்தியாகா நிற்கும் சித்தம் சீவன் முதலிய பெயர்கட்கும் அவைகளின் அர்த்தங்கட்கும் காரணபூதமாய் நிற்றல்பற்றிப் பீஜசாக்கிரமென் றுரைக்கப்பட்டதென்க. பீஜம், விந்து, விதை, மூலமென்பன ஒருபொருட்கிளவி.

"சித்திலே நின்றோ ரறிவுமே பரின்றிச் செறிமல மின்றி மேல்வந்து, வர்த்தியா நிற்குஞ் சித்தசீ வாதி வருபெயர்செயல்களுக்கிடமாய், வித்துரூ பமதாய் நின்றிடு மதனால் விதைநன வாமுதற்பதமே" என்று வாசிட்டங்கூறுவதறிக.

சி:—(2) சாக்கிரமியாது?

கு:—பீஜ சாக்கிரமென்னு மிவ்வறிவில் அகமமதை (யானெனதெனுந்தன்மை)கள் சூட்சுமமாக வெழாநிற்பதே சாக்கிரமாம். சாக்கிரமெனினும் நனவெனினு மொக்கும். "இதுவறி வுக்கு முதலவத்தையதா மிதத்துறப் பிறந்தபின் னிவனுன், இதுவெனதெனப்பண் டிலாமையா னெய்தா யெழுந்துள வறுதியே நனவாம்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(3) மகாசாக்கிரமாவதுயாது?

கு:—பிறவிதோறு மிடைவிடாது சம்ஸ்கார வாயிலாகவந்து அகமமதைகள் திடதரமா யுண்டாதலே மகாசாக்கிரமாம். "இது தனையொழிய விவனவனே யிதுவதுவென்னதென் றெண்ணும், இதுமுதற் பிறப்பிற் றொடர்ச்சியாய்ப் பலர்க்கு மிந்தவிச் சயம் பெருநனவாம்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(4) சாக்கிரசொப்பனமியாது?

கு:—முன்னர்த்தான் அறிந்துள்ள விஷயத்தைப் பற்றியாவது பூரணமாயறியாத விஷயத்தைப்பற்றியாவது அதனதன்மயமாய் நின்று மனோராச்சியஞ் செய்தலே சாக்கிரசொப்பனமாம்.

"மனோராச்சியம்—வீணெண்ணம். "அறிந்துளதெனினு மறியலா தெனினு மழுந்துறத் தானதுவாகிச், செறிந்துள நனவிற் சித்தராச்சியமே செய்வது நனுக்கனவாகும" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(5) சொப்பனமாவதியாது?

கு:—உண்டுறங்கி விழித்து க்ஷணகாலத்தில் (தமதுற்பத்திக்கியன்ற காலதேசங்களைப்பெறாத) அநேகவிஷயங்களைக் கண்டறிந்தனமென்று சிந்திப்பதே சொப்பனமாம்.

"அற்பகாலத்தி லநேகமாஞ் செயல்கண் டறிந்தன மெனுங்கன வழிந்து, முற்படு செயலை நினைவது கனவாம்"என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—சொப்பனசாக்கிரமியாது?

கு:—சொப்பனங்கண்டு மறந்தவிஷயத்தை மீண்டுஞ் சிந்தித்து நினைப்பது சொப்பன சாக்கிரமாம். சொப்பனத்திற்கண்ட பதார்த்தம் சாக்கிரத்தில் (சாக்கிரபதார்த்தம் போன்று) தோன்றுதல் சொப்பனசாக்கிரமெனினும் ஒக்கும். இதற்குதாரணம் சித்தன்கதை, காதிகதை முதலியவற்றிற்காண்க.

"முந்துகண் டதனைநா ளகன்று, பிற்படக்காணும் பொருள்களை மறந்து பெரும்பொழு துணர்வுற நோக்கும்,சொற்பனநனவு போனனவுக்கே தோன்றுமிச் செயல்களு நனவே"என்று வாசிட்டங் கூறுறிக.

சி:—(7) சுழுத்தியாவதியாவது?

கு:—மேற்கூறிய ஆறவத்தைகளும் நீங்கி மேலனுபவிக்கத்தக்க சுபாசுபகர்மங்களின் சம்ஸ்காரம் இருத்தற்கிடமாய அஞ்ஞானவடிவவிருளால் மூடப்பட்டுச் சடமாயுள்ள அவஸ்தை சுழுத்தியாம்.

"அறுவகை யவத்தை யகற்றியசீவ னடைந்துள வவத்தையினியற்கை, யுறுசடமாகி மேல்வருந் துயர்கூ ருணர்வுள தாமிது சுழுத்தி" என்று வாசிட்டங் கூறுவதறிக.

இவ்வேழுபூமிகளில் *பீஜசாக்கிரமுதலிய ஆறுபூமிகளும்கர்ம பலபோக பூமியாயிருத்தலின், அவைகர்ம ஜன்னியங்களென்றும், சுழுத்தியென்னுமேழாம்பூமி அப்பூமிகளுக்கு மூலமான அஞ்ஞானத்தை யுபாதியாகவுடைய ஆன்மாமாத்திர மிருப்பதான வடிவமுடையதென்று மறிக. இதுபற்றி,

மஹோபநிஷத்.

பீஜஜாக்ரத்ததா ஜாக்ரந்மஹா ஜாக்ரத்ததைவச ।
ஜாக்ரத்ஸ்வப்நஸ்ததா ஸ்வப்நஸ் ஸ்வப்நஜாக்ரத்ஸுஷுப்திகம் ।
இதிஸப்த விதோமோஹ: புநரேஷ பரஸ்பரம் ॥

(இ - ள்.) பீஜசாக்கிரம், ஜாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிர சொப்பனம், சொப்பனம், சொப்பநசாக்கிரம், சுழுத்தியென்னு மிவ்வேழும் போகபூமிகளாம். இவ்வேழு பூமிகளும் ஒன்றற்கொன்று (காரணங்களா யிருக்கின்றன). என்றும்,

---

(க) ஜாக்கிரம்.

* (1) ஜாக்கிர ஜாக்கிரம்—வர்த்தமான ஜாக்கிரத்தி லுண்டாகும் சொரூபசாக்ஷாத்காரம்.

(2) ஜாக்கிர சொப்பனம்—ஜாக்கிரத்திலுண்டாகும் சென்ற அல்லது இனி வரும் விஷயங்களைச் சிந்தித்தலாகிய மனோராச்சியம்.

(3) ஜாக்கிர சுழுத்தி—ஜாக்கிரத்தில் பிராந்தியினாலுண்டாகும் ஜடசொரூபமாகிய விருத்தி.

(உ) சொப்பனம்.

(1) சொப்பன ஜாக்கிரம்—யதார்த்தமாகிய பொருளைச் சொப்பனத்திற் காணுதல்.

(2) சொப்பன சொப்பனம்—சொப்பனத்தில் இரச்சு சர்ப்ப முதலிய பிராந்திகளைக் காணுதல்.

(3) சொப்பன சுழுப்தி—கண்ட சொப்பனத்தின் மறதி.

(ங) சுழுப்தி.

(1) சுழுத்தி ஜாக்கிரம்—சாத்வீக விருத்தி பூர்வகமாகிய சுகசுழுத்தி.

(2) சுழுத்தி சொப்பனம்—இராஜச விருத்தி பூர்வகமாகிய தூக்க சுழுத்தி.

(3) சுழுத்தி சுழுத்தி—தாமச விருத்தி பூர்வகமாகிய காட (ஆழ்ந்த) சுழுத்தி.

என்று கூறுதலும் மறியத்தக்கதாம்.

57

கைவல்லியநவநீதம்.

முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல் வித்தாகும், இந்தவறி விற்பண்டில் லாவகந்தை முளைபோலா மிதுகனவாம், வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகாகனவாம், நந்துமகந் தொடுகனவின் மனோராச்சியஞ்செய லே கனக்கனவே.

உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப் பனமெனும்பே ருடையதாகும், பண்டுகனக் கண்டுமறந் ததைமீண்டு நினைப்பது சொப் பனகனவாம், மண்டுமிருள் மூடிவது சுழுத்தியா மஞ் ஞான வகைகள் சொன்னோம், விண்டுநிறை முத்திதரு ஞானபூ மிகளேழும் விளம்பக் கேளாய்.

என்றும் கூறுவதறிக.

---

௪௬ - வது சம்வாதம்.

ஞானபூமியைந்நன லவேவல்.

சி:—அஞ்ஞானபூமியின் றன்மையை நன்கு விளக்கிக் கூறி னாற்போன்று ஞானபூமியின் றன்மையையும் நன்கு விளக்கிக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு:—ஞானபூமி ஏழ்வகைத்தாயிருக்கும். அவை (1) சுபேச் சை, (2) விசாரணை, (3) தனுமானசி, (4)ஸத்துவாபத்தி, (5)அசம் சத்தி, (6) பதார்த்தாபாவனை, (7) துரியமென்பனவாம்.

சி:—(1) சுபேச்சையாவதியாது?

கு:—முற்பிறப்பிலாவது இப்பிறப்பிலாவது செய்துள்ள நிஷ்காமகர்ம வுபாசனைகளால் முறையே சுத்தமும் ஏகாக்கிரமும் பொருந்திய சித்தமுடைய புருஷருக்குச் சாதனசதுஷ்டய முண் டாய் ஆத்மாவை யறியவேண்டுமென்றுண்டாகும் தீவிர இச்சை யே சுபேச்சையாம். சுப + இச்சை யென்பது சுபேச்சையென்றா யிற்று; அதன்பொருள் நன்மையை விரும்புதலென்பதாம்.

"நவையுறு மோகத்தொடு நாமடைவ தென்னே நல்லோரா னன்னூலா னன்றுஞானச், சுவைபெறுது கிராசையினு லென்று நாடல் சுபம்விரும்ப லாகும்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(2) விசாரணையாவதியாது?

கு:—ஆத்மாவையறியவேண்டுமென்னுந் தீவிரவிச்சையால் சற்குருவையடைந்து விதிப்படிவணங்கி அவர்வாயிலாகச் சீவப்பிரமங்களின் அபேதத்தை யுணர்த்தும் வேதாந்தவாக்கியத்தைக் கேட்டு அதன்பொருள் மனத்தில் நன்றாய்ப்பதியு நிமித்தம் யுக்திகளால் மனன (விசார)ஞ் செய்தல் * விசாரணையாம்.

"இந்தச் சுபேச்சை முற்றிக், கவையறுநல் லோரியற்கை யாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல்வேண்டும்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(3) தனுமானசியாவதியாது?

கு:—சொரூபசாட்சாத்காரத்தின் பொருட்டுச் சிரவணமனனவாயிலாக நிச்சயிக்கப்பட்ட பிரமான்மவைக்கிய அர்த்தத்தை யிடைவிடாது சிந்தித்தலாகிய நிதித்தியாசனத்தால் ஸ்தூல (பகிர்முகமாகிய) மனதிற்குச் சூக்ஷுமத்தன்மை (அந்தர்முகத்தன்மை) யுண்டாதல் தனுமானசியாம்.

தநு-சூக்குமதமம். சூக்குமதமத்தன்மை யடைந்தமனத்திற்குத் தநுமாநசியென்றுபெயராம். தநுமானசியெனினும் சித்தஞ் சிறுகலெனினு மொக்கும்.

"இனையசுபம் விரும்பலொடு விசாரமென்ற விரண்டுநிறை தனும்விடயத் திச்சைமாற்றி, நினைவுருவி வதுசித்தஞ் சிறுகலாகும்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(4) சத்துவாபத்தியென்பதியாது?

கு:—சிரவண மனன நிதித்தியாசனங்களால் ஐயந்திரிபின்றிச் சொரூப சாட்சாத்காரமாகிய நிர்விகற்ப ஸ்திதியுண்டாவதினால் சித்தத்தில் சொரூபசத்தையின் அடைவுண்டாதல் சத்துவாபத்தியாம்.

சத்துவ+ஆபத்தி யென்பது சத்துவாபத்தியென்றாயிற்று.

சத்துவம் என்பதன்பொருள் சொரூபசத்தை, ஆபத்தியென்பதன் பொருள் அடைவு. உண்மைநிலை மருவுதலெனினும் சத்துவாபத்தியெனினுமொக்கும்.

"வனைதருமவ் விரத்தியினு லுண்மைப்போத மன்னுதலே யுண்மைநிலை மருவ லாகும்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(5) அசம்சத்தியாவதியாது?

* விசாரணை—ஆராய்ச்சி.

கு:—நிருவிகற்ப சமாதி யப்பியாசத்தின் பரிபக்குவத்தினால் உடலின்கண் எவ்வாற்றானும் யானெனதென்னும் பற்றொழிந்து ஆசக்தி (பிரியம்) யுண்டாகாதிருத்தல் அசம்சத்தியாம். சம்சத்தி-(தேகாதியின்) சம்பந்தம், அஃதின்மை அசம்சத்தியாம்.

அசங்கமெனினும் அசம்சத்தியெனினு மொக்கும்.

"அனையனவிந் நான்காலு முண்மைப் போதந் தழுந்தியயற் சங்கமற லசங்கமாகும்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(6) பதார்த்தாபாவனை யாவதியாது?

கு:—நிர்விகற்ப சமாதியப்பியாசத்தின் முதிர்ச்சியினால் தேகாதி சகல பதார்த்தங்களும் அதிஷ்டான பிரமவடிவமாகத் தோற்றுதலால், எப்பதார்த்தத்தின் அபாவம் (அப்பிரதிதி-விளங்காமை) உண்டாகின்றதோ அது பதார்த்தாபாவனையாம்.

பதார்த்த+அபாவனையென்பது பதார்த்தாபாவனையென்றாயிற்று. பதார்த்தம்-பாகியாந்தர (வெளி, உள்) பதார்த்தங்களின் அனுசந்தானம் (பற்று). அபாவம்-அஃதில்லாமை. பதார்த்த நினைவொழிதலெனினும் பதார்த்தாபாவனை யெனினு மொக்கும்.

"அறைந்தபத மைந்தாலுந் தானும்போதத் தழுந்தியவின் பத்தமைவாற் புறனுமுள்ளும், உறைந்தபதார்த் தங்கண்மறந் தயலோர்வன்பா லுணர்வதுவே பதார்த்தநினை வொழிதலாகும்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

சி:—(7) துரியமென்பதியாது?

கு:—ஞாதுரு (காண்பான்) ஞானம் (காட்சி) ஞேயம் (காணப்படும்பொருள்) என்னும் திரிபுடி நான்காம் ஐந்தாம் பூமிகளைப் போன்று பாவவடிவமாகவும், ஆறாம் பூமியைப்போன்று அபாவவடிவமாகவும் தோன்றாமல் தன்னாலும் பிறராலும் எழுதலில்லாத சொரூபத்தில் நிலைத்தமனதின்நிலை துரியமாம்.

"நிறைந்த விவையாறாலும் பேதம் போக்கி நிலைபெறுதற் சுபாவத்தே நிற்றலானே, மறைந்தபொருள் வெளியாக்குந் துரியமாகும்" என்று வாசிட்டங் கூறுவதறிக.

இவ்வேழுபூமிகளுள் முதல் மூன்று பூமியும் தத்துவஞானத்திற்குச் சாதனமாமென்றும், நான்காவது பூமி தத்துவஞான வடிவமாயிருத்தலின் ஜீவன்முத்தி விதேகமுத்திகளுக்குச் சாத

ணமாமென்றும், ஐந்தாவது ஆறாவது ஏழாவது பூமிகள் ஜீவன் முத்தியின் விலட்சன ஆநந்தத்திற்குச் சாதனமாமென்றுமறிக. இங்குக்கூறிய இப்பூமியேழனுள் முதல் மூன்று பூமியிலும் வசிப்பவன் முமுட்சுவாவான்; நான்காம் பூமியில் வசிப்பவன் பிரமவித்தாவான்; ஐந்தாம் பூமியில் வசிப்பவன் பிரமவித்வரனுவான்; ஆறும்பூமியில் வசிப்பவன் பிரமவித்வரியானுவான்; ஏழாம் பூமியில் வசிப்பவன் பிரமவித்வரிஷ்டனுவான். இவ்வேழுபூமியும் சாக்கிரசொப்பன சுழூத்தி துரியமென நான்காக வகுத்துங் கூறப்படும்.

சி:—எங்ஙனம்?

கு:—சுபேச்சையாதி மூன்றுபூமியாலும் ஆத்மஞானம் பூரணமாய்ச் சித்தித்தலின்மைபற்றி யுலகம் பரோட்சாவனித்தியமாய்த் தோற்றுதலாலே அம்மூன்று பூமியும் சாக்கிரமாம். நான்காம் பூமியில் உலகம் சொப்பனம்போன்று மித்தையாகத்தோன்றுதலாலே அது சொப்பனமாம். ஐந்தாம் பூமியில் யாதொன்றும் சுழுத்திபோன்று தோன்றுது சின்மாத்திரமாக நிற்றலாலே அது சுழுத்தியாம். ஆறுவது பூமியில் சகலவாசனைகளும் ஒழிந்து காடசுழுத்திபோன்று ஆநந்தாகாரமாக நிற்றலாலே அது காடசுழுத்தியாம். ஏழாவது பூமியில் மேற்கூறிய விவயகாரமொன்று மின்றிச் சொரூபமாகவே நிற்றலாலே அது துரியமாம்.

சுழுத்தி க்ஷீண (குறைந்த) சுழுத்தியென்றும் காடசுழுத்தியென்றும் இருவகையாம். எதனினின்றும் விழிப்பித்தலின்றித் தானே விழிக்கிறுனே அது க்ஷீணசுழுத்தியாம். எதனினின்றும் விழிப்பித்தாலன்றி விழிக்கிறதில்லையோ அது காடசுழுத்தியாம்.

இந்த ஞானபூமியைப் பிரணவவடிவமாகக் கூறுதலுமுண்டு.

சி:—எப்படி?

கு:—பிரணவத்தின் அகாராதிகள் ஸ்தூல, சூட்சும, பீஜ, சாக்ஷிபேதத்தினால் ஒவ்வொன்றும் நந்நான்கு வகைத்தாயிருக்கும். அவ்வாகாராதிகளின் அவஸ்தை ஜாக்கிர,சொப்பன,சுழுத்தி, துரியமென்பனவாம்.

(1) சாக்கிராவஸ்தை யுடையவனுக்கு அகரத்தின் ஸ்தூலாம்சத்தில் விசுவனென்றும், சூட்சுமாம்சத்தில் தைசதனென்றும்,

பீஜாம்சத்தில் பிராக்கியனென்றும், சாக்ஷியம்சத்தில் துரியனென்றும் பெயராம்.

(2) சொப்பனவத்தையுடையவனுக்கு உகாரத்தின் ஸ்தூலாம்சத்தில் விசுவனென்றும், சூட்சுமாம்சத்தில் தைசதனென்றும், பீஜாம்சத்தில் பிராக்கியனென்றும், சாக்ஷியம்சத்தில் துரியனென்றும் பெயராம்.

(3) சுழுத்தியவத்தையுடையவனுக்கு மகாரத்தின் ஸ்தூலாம்சத்தில் விசுவனென்றும், சூட்சுமாம்சத்தில் தைசதனென்றும், பீஜாம்சத்தில் பிராக்கியனென்றும், சாக்ஷியம்சத்தில் துரியனென்றும் பெயராம்.

(4) அர்த்தமாத்திரையின் ஸ்தூலாம்சத்தில் துரிய விசுவனென்றும், சூட்சுமாம்சத்தில் தைசதனென்றும், பீஜாம்சத்தில் பிராக்கியனென்றும், சாக்ஷியம்சத்தில் துரிய துரியனென்றும் பெயராம்.

அகாரத்தின் துரியாம்சம் முதல்மூன்று பூமிகள்; உகாரத்தின் துரியாம்சம் நான்காவது பூமி; மகாரத்தின் துரியாம்சம் ஐந்தாவது பூமி; அர்த்த மாத்திரையின் துரியாம்சம் ஆறாவது பூமி. இவற்றிற்கப்பாற் பட்டது ஏழாவது பூமி; அது துரியாதீதமெனப்படும்.

சி: முன்னர் ஆறும் பூமியைக் காடசுழுத்தியென்றும் ஏழாம் பூமியைத் துரியமென்றும் கூறியதற்கு மாறாக ஆறும் பூமியைத் துரியமென்றும் ஏழாம் பூமியைத் துரியாதீதமென்றும் கூறியவாறென்னை ?

கு: முன்னர் விதேகமுத்தியைத் துரியாதீதமென்று கூறுதல் பற்றிச் சுபேச்சை முதலிய ஏழனையும் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியமென்னும் நான்காக வகுத்துக் கூறினும். ஈண்டுவிதேகமுத்தியைவிட்டு அவ்வேழு பூமியினையும் பஞ்சாவஸ்தையாக வகுத்துக் கூறினும். இவ்வாறு கூறியவற்றுள் யாதும் பிசகின்றுமென்க. கைவல்லிய நவநீதம் "எவனாகிலு மிந்தத் துரியா தீதத்திலேழாம் பூமியி லிருந்தானேல், அவனு ரதன்சுகன் சிவன்மா லயன்முத லறிவோ ரனுபவ சுகபோதம், விவகா ரதிர்சய மிதுவே யனுபவ மெனமுன் சொல்லிய விவகாரி, யுவமா னமுமறி மகனே யவனடி யுதிரும் பொடிகளென் முடிமேலே" என்றும், "வத்து

யிருந்தபடி யிருந்த மவுன சுபாவந்துரியமாகும், இத்துரிய பூமியை மூன்றுரியாதீ தப்பதமென் றதுவுங்கேளாய்" என்றும், "துரிய நிலந் தனைத்துரியா தீதமெனின் மயக்கமென்று கருதிமேலோர், அரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா ரதுகணக்கி லாரும்பூமி, மருவுசுழுத் தியிற்சாட்சி சுழுத்தியென்பா ரென்பதுநீ மனதகிற் கொள்வாய்" என்றும் கூறியவாற்றானும் நன்கு விளங்கும்.

ஈண்டுக்கூறிய பூமிகளில் முதற்பூமி கிடைப்பது மாத்திரம ருமை. அது கிடைத்துவிட்டால் "நாற்றிற்கு மேலூற்" றென்ற படியேனைய பூமிகளெளிதிற் கிடைக்கும். இச்சப்த பூமிகளுள் சுபேச்சையாவது விசாரணையாவது அடைந்திருக்கும் புருஷர் கள் யாவராயினும் அவர்கள் தவறாது முத்தராவர்.

சி: அவ்வாறு முத்தரானவர்களியார்?

கு: அவர்கள் அஜாமிளன், கஜேந்திரன், அனுமான், கர்கடி, பிரகலாதர் முதலியோராவர். இதனால் மனிதரேயன்றி யேனைய அசு ரர், இராக்கதர் முதலியோரும் முத்தராவரென்பது தெள்ளிதின் பெறப்பட்டவாறறிக. மேற்கூறியவர்கள் முத்தரானது பற்றி வாசிட்ட முதலியவற்றிற் கண்டுகொள்க.

சி: ஞானபூமியைப் பற்றிக் கூறும் வேறு பிரமாணத்தையு மெடுத்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்?

கு: கீழ்வருவதே.

வேதாந்த சூளாமணி.

சாற்றரிய சுவேச்சைவிசா ரணைதனுமா னசிசத் வாபத்தி யச ஞ்சத்தி பதார்த்தபா வனையே, மேற்றரிய காமியெனு மிவற்றினை மூதறிஞர் விளங்குசுத்த ஞானபூ மிகளென்ப ரவற்றுட், டோற் றிடுநான் மூடனா யிருந்தகா ரணமென் சுருதிகுரு வாலறிவ லெ ன நினைதல் சுவேச்சை, மாற்றரிய சுருதிகுரு வாற்சிறிது தோன் றும் வைராகத் துறுதல்சத்சா சாரவிசா ரணையே.

மருவலுறு சுவேச்சைவிசா ரணைவலியால் விடய வலியறுத லொன்றனுமா னசியிவற்றின் பயில்வால், விரவுநன வாயவுல கினைக்க னவென் றெண்ணி மெய்த்தவான் மாவுண்மை கருதல்சத்வா பத்தி, பரவலுறு முலகுதோன் றுதுசுழுத் தியன்போற் பகரறிவு மாத்திரையாய் நிற்றலசஞ் சத்தி, யொருவிவா சனையனைத்து மிகு

துயிலோன்போல வுயிரானந் தத்தொடுங்கல் பதார்த்தபா வனை யாம்.

உண்டிலையென் ஞமலகங் கிருதிரங் கிருதி யுறுமலறி வுரு வாய வத்துவித பதத்துட், கண்டதொரு வறுங்குடம்போ லுட் புறஞ்சூ னியமாங் கதிதுரிய காமியாம்.

---

## சஎ - வது சம்வாதம்.

### முத்தி * அந்தியஜருக்கில்லையோவெனல்.

சி: யாவரு மோக்ஷ மடைதற் கதிகாரிகளென்ப துண்மையா யின் பிராமணர்களுக்கன்றி யேனையோர்க்கு முத்தி சித்திக்காதெ ன்று பிறர் கூறுவதேன்?

கு: முத்தியின் வடிவம் சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமா யிருத்தலின், அகனையடைதற்கு ஒவ்வொருவரு மதி காரியேயாம். சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியும் விரும்பாத பிராணிகள் ஒன்று மின்றென்பதும் பிரசித்தமாம்.

சாஸ்திரத்தின் கருத்தறியாதவர்க டாம் பிராமணனுக்கு மாத்திர முத்தியுண்டு; ஏனையோர்க்கு முத்தியின்றென்று கூறு வர். சத்தியம், திருடாமை, பொறுமை, சௌசம், தானம் (கொடை), மனத்தை விஷயத்தினின்றுந் திருப்புதல், பகவந்நாம உச்சாரணம், தீர்த்த ஸ்நானம், பஞ்சாக்கர அட்டாக்கர முதலியவ ற்றின் ஜெபம் முதலியவைற்றில் ஒவ்வொருவருக்கு மதிகாரமுண்டு. இவை பிராமணர்க்கே யுரியவை யென்பதற்கு யாதொரு பிரமா ணமு மின்று; ஆகவே, மேற்கூறிய தருமங்களை யப்பியாசிக்கு மொவ்வொருவரும் அந்தக்கரண சுத்தி வாயிலாகஞானமடைந்து மோக்ஷமடைவா ரென்பதற்கு யாது மாசங்கையின்றாம். அங்ங னமன்றாயின் இதிகாசாதிகளில் வேடராதியோர் முத்தி யெய்தின ரென்று கூறியுள்ளது பழுதாம். ஆகவே, சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப்பிராப்தியுமடையவிரும்பு மொவ்வொருவரும்மோக்ஷ மடைதற் கதிகாரிகளாவரென்க. இதுபற்றி விருத்திப்பிரபாகரத் தில் விரிவா யாட்சேப சமாதானங்களுடன் கூறப்பட்டிருக்கிறது.

---

* அந்தியஜர் - கீழ்ச்சாதியர். அவர்கள் பறையராதியோர்.

சி: விருத்திப்பிரபாகரத்தில் கூறியுள்ளவற்றுள் மிகவும் சாரமான பாகத்தை யெடுத்துரைக்கும்படி பிரார்த்திக்கின்றேன்.

கு: (விருத்திப்பிரபாகரம் 7-வது அம்சம்.) அது "ஜன்மாந்திர சம்ஸ்காரத்தினால் அந்தியஜர் முதலியோருக்கும் ஞானவிருப்புண்டாய் விடுமாயின், பௌருஷேய (கரும சாத்திர முதலியவற்றின்) வசனத்தினால் அவர்களுக்கும் ஞானமுண்டாய்க் காரியத்தோடு அவித்தையின் நிவிர்த்தி வடிவ மோக்ஷமுண்டாகின்றது. ஆதலால், தேவர் அசுரர்களைப்போலச் சகல மனுஷர்களுக்கும் தத்துவஞானத்தின் அதிகாரமுண்டு. ஆத்மசொரூபத்தின் யதார்த்த ஞானத்தினைத் தத்துவஞான மென்பர். ஆத்மாவின்றிய ஓர் சரீரமுளதாயின் ஞானத்தின் அதிகாரமின்மையுளதாம். ஆதலால் ஆத்மஞானத்தின் சாமர்த்தியம் மனுஷர் மாத்திரத்திலுண்டு. ஆனால், எவன் சரீரத்தில் தெய்வ சம்பத்துளதோ அவனுக்குத் தத்துவ ஞானமுண்டாம். அசுரசம்பத்தில் தத்துவஞான முண்டாகாது. சர்வபூதங் (பிராணி) களிடத்திலும் தயை, க்ஷமை, சத்தியம், நேர்மை, சந்தோஷ முதலிய தெய்வசம்பத்தின் சம்பவம் பிராமணனிடத்திருக்கின்றது. க்ஷத்திரியனுக்குப்பிரஜைகளைப்பரிபாலித்தற் பொருட்டுப் பிரவிர்த்தி கருமமிருத்தலால் பிராமணனிலும் சிறிது குறைந்த தெய்வ சம்பத்துச் சம்பவிக்கின்றது. தர்மபுத்தியாகப் பிரஜைகளைச் சம்ரக்ஷித்தற் பொருட்டுத் துஷ்ட பிராணிகளை யிம்சித்தலும் அஹிம்சையாம். ஆதலால், தெய்வசம்பத்தின் அசம்பவமில்லை. அப்படியே வைசியனுக்கும் கிருஷி வாணிபமுதலிய சரீர வியாபாரம் க்ஷத்திரியரினும் அதிகமாயிருத்தலால் ஆத்மவிசாரத்தில் அவகாசத்தின் அசம்பவமிருத்தலால், அவனுக்குச் சாமர்த்தியம் சம்பவிக்கிறதில்லை. அங்ஙனமாயினும் பாக்கியசாலிகளாகிய சில வைசியர்களுக்குச் சரீர வியாபாரமின்றியே சகல வியவகாரத்தின் நிர்வாகமுண்டாகின்றது. அவர்களுக்குத் தெய்வ சம்பத்தைப் பெறுதலாகிய சாமர்த்தியஞ் சம்பவிக்கின்றது. எந்த ஆசிரியர்களது மதத்தில் க்ஷத்திரிய வைசியர்களுக்குச் சந்நியாசத்தினதிகாரமிருக்கிறதோ அவர்கள் மதத்திலோ அநாயாசமாகவே தெய்வசம்பத்துச் சம்பவிக்கின்றது. நான்காவதுவருணத்திலும் அப்படியே அந்தியஜர் முதலியோரிடத்தும் தெய்வசம்பத்துத் துர்லபமாயினும் கர்மத்தின் பலன் அநந்தவிதமாம். சிலருக்கு ஜன்மாந்திரத்தின் கர்மத்தால் தெய்வசம்பத்தின் பேறு உண்டாய்

விடின் புராணமுதலியவற்றின் விசாரத்தால் நான்காவது வருணத்திற்கும் சம்ஸ்கிருதமல்லாத பாஷாப்பிரபந்த முதலியவற்றின் சிரவணத்தால் அந்தியஜர் முதலியோர்க்கும் பகவத் பக்தி தத்துவ ஞானங்களின் இலாப வாயிலாக மோக்ஷத்தின் இலாபம் நிர்விக்கினமாக (தடையில்லாமல்) உண்டாகின்றது. இவ்வாற்றால் பகவத்பக்தி, தத்துவஞானங்களி னதிகாரம் சகல மனுஷருக்கு மிருக்கிறது. இது சாஸ்திரத்தின் நிச்சயமாம்." என்பதாம்.

சி: சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியும் விரும்புமெவ்வரும் மோக்ஷத்திற் கதிகாரியாவரென்பதற்குரிய வேறு பிரமாணங்களையும் எடுத்துக் கூறும்படி வேண்டுகிறேன்.

கு: கீழ்வருவனவே.

நாரதபரிவிராஜகோபநிஷத்.

நாஹம் ஸ்வப்நம் ந ஜாக்ரம் ந ஸ்தூலம் ந ஜ்ஞாநம் நாஜ்ஞாநம் ஜாக்ரத் ஸ்வப்ந மத்யம் ஸ்வரூபம் ந கர்மேந்த்ரிய க்ராஹ்யம் ந நிரூப்யம் ஸ்வாந்தஸ்திதம் ஸ்வயமேவேதி ய ஏவம் வேத ஸ முக்தோ பவதி ஸ முக்தோ பவதீத்யாஹ பகவாந் பிதாமஹ:||

(இ-ள்.) (அந்தப்பிரஹ்மமானது) சுவப்நாவஸ்தையையுடையதுமன்று; ஜாக்கிரதாவஸ்தையை யுடையதுமன்று; ஸ்தூலமுமன்று; ஞானமுமன்று; அஞ்ஞானமுமன்று; ஜாக்கிர சொப்நாவஸ்தைகளுக்கு மத்தியான அவஸ்தையை யுடையதுமன்று; கருமேந்திரியங்களால் கிரஹிக்கத்தக்கதுமன்று; நிரூபித்துக் காட்டத்தக்கதுமன்று; தனக்குள்ளேயேயிருக்கிறது; தானாகவே யிருக்கிறதென்று எவனறிகிறானோ அவன் முக்தனாகிறான் அவன் முக்தனாகிறானென்று பகவானான பிதாமகர் சொன்னார்.

அபரோக்ஷாநுபூதி.

பரிபக்வம் மநோ யேஷாம் கேவலோऽயம் ச ஸித்தித: |
குருதைவத பக்தாநாம் ஸர்வேஷாம் ஸுலபோ ஜவாத் ||

(இ-ள்.) பரிபக்குவ மனமுடையவர்களுக்கு இது (ராஜயோகம்) மாத்திரமே மோக்ஷசித்தியைத் தருவதாம். குருவினிடத்தும் தெய்வத்தினிடத்தும் அன்புள்ளார் யாவர்க்கும் செவ்வனே சீக்கிரத்தில் சாதிக்கத் தக்கதாம்.

பகவத்கீதை.

𑌮𑌾𑌂𑌹𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥𑌵𑍍𑌯 𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌯𑍇𑌪𑌿𑌸𑍍𑌯𑍁𑌃 𑌪𑌾𑌪𑌯𑍋𑌨𑌯𑌃।
𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑍋𑌵𑍈𑌶𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍇𑌪𑌿𑌯𑌾𑌂𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂𑌗𑌤𑌿𑌮𑍍॥

(இ-ள்.) ஓ! குந்திபுத்திரா! ஸ்திரீகளும் வைசியர்களும் சூத்திரர்களும் அப்படியே எவர்கள் நீசப்பிறவிபாக இருக்கிறார்களோ அவர்களுங்கூட என்னை விசேஷமாகச் சேவித்து உத்தமமான கதியை நிச்சயமாயடைகிறார்கள்.

மஹரிஷிமாதங்கர் வாக்கியம்.

𑌅𑌗𑍍𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌮𑌾𑌦𑌿𑌕𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌹𑌾𑌯𑌦𑍍𑌵𑌿𑌜𑌸𑌤𑍍𑌤𑌮𑌃। 𑌯𑍋𑌗𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌰𑌤𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿। 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌶𑌾𑌂 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌞𑍍𑌚 𑌪𑌾𑌵𑌨𑌮𑍍। 𑌶𑌾𑌨𑍍𑌤𑌯𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑌨𑍍𑌯𑌦𑍍𑌯𑍋𑌗𑌾𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌯𑍇॥

(இ-ள்.) துவிஜோத்தமன் அக்கினிஷ்டோமம் முதலிய எல்லாவற்றையும் விட்டு யோகாப்பியாச பராயணனாய்ச் சாந்தனாய்ப் பரமப்பிரஹ்மத்தை யடைகிறான். பிராமண க்ஷத்திரிய வைசிய ஸ்திரீ சூத்திரர்களுக்குக் கர்மங்களின் சாந்தியாகிய முத்தியின் பொருட்டுப் பரிசுத்தமானது யோகத்தை விடவேறில்லை.

ரிபுகீதை.

வேதமுத னூற்களெலா மிகவுங்கற்ற வேதியரே யாயினுமிவ் வகண்டஞானம், பேதமறப் பொருந்தாதோ ரொருகாலத்தும் பிராமணரே யாகியிடா ருபவீதந்தான், சாதியுடை யாளமலாற் பிராமணத்வஞ் சாருவதிற் சாதகமன் றதனுலென்றும், பேதமிலா பரப்பிரம வுபவீதத்தைப் பெற்றவரே பிராமணராய் முத்தராவர்.

பேதமறப் பரபிரம வறிவுற்றோரே பிராமணரென் றங்கங்கே பேசலாகும், மீதியுளோர் சாதியினாற் பிராமணத்வ மேவினரென் றிவ்விதமாம் ரகசியார்த்த, மேதையுமே யெனக்கருளா லீசன்சொன்ன தியல்பாக நிதாகனேக் கியம்பினேனு, னோதியவிவ் வர்த்தத்தை யொருகாலேனு முள்ளபடி கேட்டுணர்வோன் பரமேயாவன்.

மாதருநற் சூத்திரரு மற்றுள்ளோரு மகிமைமிகு மிப்பொருளைக் கிரந்தவாக்காற், பேதமறக் கேட்டுணர விச்சிப்பாரேற் பிராமணரின் முகமாகக் கேட்கவேண்டும், வேதமுடி பொருளிதனை

யாவரேனும் விதியுடனே யுரமாகக் கேட்டுணர்ந்தாற், பிறிசெயும் பவபந்த மனைத்துந்தீர்ந்து பின்னமிலாப் பரவடிவே யாவரன்னோர்.

கைவல்லிய நவநீதம்.

இப்புவியி லிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தாராளு,லப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தர் குருபாதத் தாளை மெய்யே, தப்புரையென் றவைகெடுவார் நடுவான மறைகளீ சங்கியாதே, செப்புமொழி வழிதிடமா யகம்பிரம மென்றிருந்து தெளிந்திடாயே.

---

## சஅ - வது சம்வாதம்.

---

ஜீவன்முத்தரின் சொரூபமுணர்த்தல்.

சி: நான்காம் பூமி முதலியவற்றில் வசிக்கும் பிரமவித்து முதலியோரது சொரூபத்தை விதந்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: பிரமவித்து முதலிய நால்வரும் ஜீவன் முத்தர்களே.

சி: ஜீவன் முத்தி யென்றுலென்ன ?

கு: தேகாதிப்பிரபஞ்சம் தோற்றிக்கொண் டிருக்கும்போதே பிரம சொரூபமாகநிலைத்தல் ஜீவன்முக்தியாம், அஃதாவது ஜீவத்துவம் (யானெனதென்னு மபிமானம்) விடுபட்டிருத்தலாம். ஜீவன் முத்த புருஷனுக்கு அவிச்சையின் ஆவரண (மறைப்பு) விட்சேபம் (தோற்றம்) என்னும் சத்தியிரண்டனுள் சம்சார பரம்பரைக் கேதுவாய வாவரணமானது (இஷ்பிரபஞ்சப் பிரம்மாத்மாவின் ஏகத்துவமென்னும்) தத்துவஞானத்தினல் நசித்தும் (அவித்தையாலேசமென்னும) விட்சேபமானது (முளைத் தற்கேதுவாகாத வறுத்தவிதைபோன்று) விதேகமுத்திபரியந் தம் பிராரத்தத்தினுல் நாசமாகாதிருக்தல் பற்றி (விட்சேபத்தின் காரியமாய) தேகாதிப் பிரபஞ்சம் பொய்யென்று நிச்சயிக்கப்பட்ட வானவிளவு மீண்டுந் தோன்றுதல்போன்று தோற்றிக் கொண்டிருக்கிறதென்க.

சி: ஜீவன்முக்த ரெவ்வாறிருப்பர் ?

கு: அவர்கள் தத்துவஞானம், மனோநாசம், வாசனைக்ஷய மென்னு மூன்று முடைமையால் பந்தரகிதராகி நனவிற் சுழுத்தியைப் பெற்றிருப்பார்கள். நனவிற் சுழுத்தியாவது சாக்கிராவஸ்தையிலே சுழுத்திபவஸ்தையைப் பெற்றிருத்தல். அஃதாவது ஞானுஞ் ஞானரகிதமா யிருத்தலாம்.

சி: அவர்களின் தன்மையை விரிவா யெடுத்துரைக்குமாறு விரும்புகின்றேன்.

கு: பிராரத்த வினைக்கேற்றவாறு அவ்வக்காலத் தடையப்படுகின்ற போகங்களிலே விருப்பு வெறுப்பற்றவராயும் சந்தோஷம, வியசனம், பயம், கோபம், ஆசை, சிக்கனம் முதலியவற்றால் கலங்காதவராயும், அகங்கார வடிவாயுள்ள வாசனையையும் நியாணிக்கப்படும் வஸ்துவையும் நீக்கிச் சொரூபாகாரமாக நிலைத்தவராயும், சகல துக்கத்திலிருந்தும் விடுபட்ட சுகவடிவராயும், பரிசுத்த (சத்துவாகார)மனமுடையவராயும், உண்மை நோக்கில் யாதொன்றிலும் அபிமான மற்றவராயும், ஒன்றையும் அளவிற்கு மிஞ்சி விரும்பாதவராயும், அஸ்தி (இருப்பு) பாதி (விளங்கல்) பிரியநாமரூபவடிவாயுள்ள வுலகில் மாயாகாரியமாய நாமரூபங்களை அஸ்திபாதி பிரியத்தில் லயமாக்கி யாவற்றையும் சச்சிதானந்த வடிவமாகக் காண்பவராயும், விருப்பு வெறுப்பு, சுகதுக்கம், பலாபலம் என்றற் றொடக்கத்துத் துவந்துவங்க ளுண்டாயவிடத்தும் நடுநிலையினின்றும் பிறழாது உலகோபகாரமாகச்செய்யவேண்டிய வேலைகளை யொழுங்காய்ச் செய்பவராயும், கருமஞ் செய்யுமிடத்து அதனை அகங்காரமும் அபிமானமும் பொறாமையு மனக்கலக்கமுமற்று மௌனமாய்ச் செய்பவராயும் காண்பான் காட்சி காணப்படும்பொருள் என்னும் திரிபுடிக்கும் சாட்சியாய் விளங்குபவராயும்,ஆடம்பரமானவஸ்துகள் எவ்வளவு நேரிட்டாலும் அவ்வளவிலும் அபிமானம் சிறிது மின்றியவராயும், அப்பியாச காலத்தில் மயக்கத்தையுண்டாக்குவதற் கேதுவாய பழையதும் மூசியதும் மாமிசாதிகளுமாகிய தாமஸ பதார்த்தங்களையும், மமதையையுண்டாக்குவற் கேதுவாய கடினமும் உறைப்பும் காரமும் புளிப்பும் உப்பும் சூடானதுமாகிய இராஜசபதார்த்தங்களையும்,விலக்கி மயக்கத்தையும் மமதையையும் நீக்கித் தத்துவஞானத்தை யுண்டுபண்ணுதற் கேதுவாயதீப்பாயாஸவஸ்து அன்னம் முதலியனவுமாகிய சாத்விக பதார்த்தங்களை யுண்டுவந்த பிமத்தைவிட்டுத் திருப்தி,

புளிப்பு, கார்ப்பு, காழ்ப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் சடிரசங்களையுடைய வுணவுகளுள் இது குணமானது, இது குற்றமானது, இது சுத்தமுடையது, இஃதசுத்தமுடையது, இது பத்தியபதார்த்தம், இஃதபத்திய பதார்த்தமென்று பகுத்து நோக்காது காட்டுத்தீப்போன்று கிட்டினதைப் பொறுமையுடன் உண்பவராயும், ஜரை (கிழத்தனம்) மரணம் முதலியவைகளையும் இராஜஸம்பத்தையும் சமமாயெண்ணி யனுபவிப்பவராயும், மரணத்தைச் சந்தோஷமா யெதிர்பார்ப்பவராயும், பெற்றுள்ளதில் வெறுப்பும் பெறாததில் விருப்புமின்றியவராயும், "தாமரை யிலை நீர்போலும் புளிதந்த பழக்கிமேறெபோலும்" இல்லறத்துள்ளவராயும் துறவறத்துள்ளவராயு மிருப்பர். மேலும் நினைத்தற்கும் மற்றற்கும் மதித்தற்குமியலாத சொரூபத்தில் பிழம்சியின்றி நிற்கும் சிவனமுத்தர்கள் சென்றதைக் கருதாராகியும், இனிச் சேர்வதை நினையாராகியும், கண்முன் பிராரத்தவலியால் நேரிட்ட வுணவைப் புசிப்பாராகியும் எத்தகைய அற்புதத்தையும் விபவாராகியும் இது நன்று இது தீது என ஒன்றையும் குறிப்பிட்டுக் கூறாதவராயு மிருப்பர். அவ்வாறிருக்கு மவர் வியாபாரிகளாயும், அரசர்களாயும், மௌனியராகியும், ஐபமெடுப்பவராயும், அருந்தவஞ் செய்பவராயும், பண்டிதராயும், அஃதின்றியவராயும், இகழ்த்தக்க தொழிலுடையவராயும், இன்னும் பல திறத்தராயுமிருப்பர்.

(1) பிரமவித்து.

சி: நான்காம் பூமியிலுள்ள பிரமவித்தின் றன்மையாது?

கு: ஜீவன் முத்தியடைதற்குமுன்ன ரியற்றி வந்த தங்கட்குரிய வருணாச்சிரமங்களுக்குரிய கிரியைகளை லோகோபகாரமாகச் சாஸ்திரோக்தமாய்ச் செய்து தீர்ந்தநிலையில் மாறுதொருதகைத்தா யிருக்கும் ஞானிகளே பிரமவித்தெனப்படுவர். இவர்கள் பெரும்பாலும் இல்லற ஞானிகளா யிருப்பர்.

(2) பிரமவரன்.

சி: ஐந்தாம் பூமியிலுள்ள வரனின்றன்மை யாது?

கு: பாகிய கருமங்களியாவற்றையும் விட்டு ஏகாந்த நிட்டையிலே யிருப்பவராய்த் தேக நிலைத்தற் பொருட்டுத் தாமாக வுணவுண்ணும் ஞானிகளே பிரமவரனெனப்படுவர். இவர்கள் தம்மை வந்தடுத்த முமுட்சுகளுக் குபதேசமும் புரிவர்.

(3) பிரமவரியான்.

ஆறாம்பூமியிலுள்ள பிரமவரியானின் றன்மையாது?

சி: பாகிய கருமம் சிறிதுமின்றி யேகாந்த நிஷ்டையிலே யிருப்பவராய்ப் பிறரதுமுயற்சியால் சமாதியினின்றும் புகிர்முகப் பட்டு உணவுகொள்ளும் ஞானிகளே பிரவரியான் எனப்படுவர். இவரும் ஏகதேசமாய்த் தம்மை வந்தடுத்த அதிதீவிரபக்குவிக ளுக்குபதேசம புரிவர்.

(4) பிரமவரிட்டன்.

சி: ஏழாம் பூமியிலுள்ள பிரமவரிட்டனின் றன்மை யாது?

கு: பிரமவானைப் போன்று தமமா னுணாதலும் பிரமவரி யானைப்போன்று பிறரா லுணாதலுமின்றிச் சதாநிருவிகற்ப சமாதி யிலிருப்பவரே பிரமவரிட்டனெனப்படுவர். இவரின உணவு தூங் கிக்கொண்டே சிறுகுழந்தைக ளுண்பதுபோனறிருக்கும்.

சி: இந்நால்வரைப்பற்றி விதந்து கூறும் பிரமாணங்களைக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன.

கு: கீழ்வருவனவே.

வராகோபநிஷந்.

ஸம்ஜ்ஞத்ரயெஷு விஹரந் ப்ரஹ்மவிந்மோக்ஷபாக்ஷவதி தூரீயஸம் ஜ்ஞ்ராம் விஹரந் ப்ரஹ்மவிஜ்ஜவதி பஞ்சமஸம்ஜ்ஞ்ராம் விஹரந் ப்ரஹ்ம விதரோபவதி | ஷஷ்ட ஸம்ஜ்ஞ்ராம் விஹரந் ப்ரஹ்ம விதர்யாந் பவதி ஸப்தம ஸம்ஜ்ஞ்ராம் விஹரந் ப்ரஹ்ம விதரிஷ்டோபவதி ||

(இ - ள்.) (முதல) மூன்று பூமிகளில் சஞ்சரிக்கிறவன் முமு ட்சுவாகிறான்; நான்காவது பூமியில் சஞ்சரிக்கிறவன் பிர்ம்ம வித் தாகிறான்; ஐந்தாவது பூமியிற சஞ்சரிககிறவன பிரமம வித்வரனு கிறான்; ஆறுவது பூமியில சஞ்சரிககிறவன பிரம்ம வித்வரீயானுகி றான்; ஏழாவது பூமியில சஞ்சரிககிறவன் பிர்மமவித்வரிஷ்டனுகி றான்.

கைவல்லிய நவநீதம்.

முன்னிலங்க ளேறியமூ வருமப்பி யாசிகளா முத்த ரல்லர், பின்னிலங்கள் வரன்வரியா வரிட்டனெனுஞ் சீவன்முத்தர் பேத மாகுஞ், சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாந் தூய முத்த, ரின்னமுமப் பூமிகளின பெருமைதனை நீயறிய யான் சொல் வேனே.

ஞானமார் ஜீவன்முத்தர் நாலவகை யாவர் கேளாய்
வானிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்ட
னனவர் நாம மாகு மவர்களிற் பிரம வித்தின்
றனமு மற்றை மூவர் தாரதம் மியமுஞ் சொல்வேன்.

திராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியு முன்னம்
வாரமா யிருந்த தங்கள் வருணமாச் சிரமஞ் சொன்ன
பாரகா ரியமா னாலும் பலர்க்குப கார மாக
நேரதாச் செய்வர் தீர்ந்த ரிலேவிடார் சீவன்முத்தர்.

பின்னைமூ வரிலி ரண்டு பேர்களுஞ் சமாதி போகந்
தன்னையுற் றிருப்பார் தேக சஞ்சார நிமித்தந் தானு
முன்னுவோன் வரன்வேற் றோரா லுணர்பவன் வரியா னாகு
மன்னியர் தம்மாற் றன்னா லறியாதோன் வரிட்ட னாமே.

அரிதாகு மிவர்க ளிவ்வா றனைகரா னாலு முத்தி
சரியாகும் பாடு பட்ட சமாதிக்குப் பலனே தென்றாற்
பெரிதான திட்ட துக்கம் பிரமவித் தனுப விப்பன்
வரியானு வரனு மற்றை வரிட்டனுஞ் சுகமாய் வாழ்வார்.

## சகூ - வது சம்வாதம்.

### பிராரந்த கருமத்தின் பேருரைத்தல்.

சி: ஜீவன் முத்த புருஷர்கள் பலவகைப் பட்டிருத்தற்குக் காரணமென்னை?

கு: அவர்கள் பலவகைப் பட்டிருத்தற்குக் காரணம் பிராரத்தகருமமே.

சி: அதனை விளக்கமா யுரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: "பஞ்சினை யூழிக் தீப்போற் பலசன்ம விவித வித்தாஞ், சஞ்சித மெல்லாஞ் ஞானத் தழல்சுட்டு வெண்ணீறாக்கும், கிஞ்சிதா காமியந்தான் கிட்டாமல் விட்டுப் போகும், விஞ்சின பிராரத்தத்தின் வினையனு பவித்துத் தீரும்" என்று பெரியார் பணித்தருளியவாறு ஜீவன்முத்த புருஷர்களுக்குச் சஞ்சித வினையும் ஆகாமியவினையும் இன்றாம்; பிராரத்தவினை அனுபவித்த வழி யொழியும்.

ஜீவன் முக்த புருஷர்களுக்குச் * சஞ்சித கர்மமோ தத்துவ ஞானத்தினால் நாசமாய்விட்டது. ஆத்மாவின்கண் கருத்துருத்துவப் பிராந்தியின்றாகலின் அவர்களுக்கு ஆகாமிய கருமமு மின்றாம்.

பகவத்கீதை.

அதிஷ்டாநம் ததா கர்த்தா கரணஞ்ச ப்ருதக்விதம் ।
விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ॥

(இ-ள்.) அதிஷ்டானம் (சரீரம்) அங்ஙனமே கர்த்தா (அந்தக்கரணம்) வெவ்வேறு கரணங்கள் (தசேந்திரியங்கள்) அனேக விதமான பின்ன சேஷ்டைகள் (பஞ்சப்பிராணன்) தெய்வம் (பிரேரகனாகிய ஈசுவரன் அல்லது பிராரத்தம் அல்லது இந்திரியங்களின் தேவதை) என்பவை யிருக்கின்றன.

ஶரீரவாங்மநோபிர்யத் கர்ம ப்ராரபதே நர: ।
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ॥

(இ-ள்.) சரீரம் வாக்கு மனது என்பவற்றினால் எந்த நியாயமாகிய (சுப) அல்லது விபரீத(அசுப)யான கர்மத்தை நரன் தொடங்குகின்றானோ அதற்கு இச்சரீர முதலிய ஐந்தும் ஏதுக்களாம்.

தத்ரைவம் ஸதி கர்த்தாரமாத்மாநம் கேவலம் து ய: ।
பஶ்யத்யக்ருதபுத்தித்வாந்ந ஸ பஶ்யதி துர்மதி: ॥

(இ-ள்.) ஆண்டு இவ்வாறு கிரியைக்கு வேறு ஏதுக்கள் உளவாகக் கேவல (அக்கிரிய) ஆத்மாவை எந்தப் புருஷன் கிருதார்த்தமின்றிய புத்தியுடையவனா யிருத்தலின் கர்த்தாவெனக் காண்கின்றானோ அந்தத் துர்ப்புத்தியுடையவன் காணான் (ஆத்மாவை யதார்த்தமாக அறியான்).

ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வஶ: ।
அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே ॥

(இ-ள்.) சரீரம் இந்திரியம் முதலிய வடிவமாகப் பரிணாமத்தை யடைந்த பிரகிருதி (மாயை)யின் சத்துவ முதலிய குணங்களால் செய்யப்படுகின்றனவாய சகல கன்மங்களும் அவற்றை

*சஞ்சிதாதிகருமங்களின் றன்மையை ஆறாவது சம்வாதத்திற் காண்க.

அகங்காரத்தினால் (அகங்காரத்தின் தாதான்மியத்தினால்) எவனுடையஆத்மா விமூடமா (வேற்றுத்தன்மையை யடைந்ததா) யிருக்கின்றதோ அத்தன்மைய புருஷன் நான் கர்த்தாவெனக் கொள்கின்றான்.

𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍𑌤𑍁 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌃 ।
𑌗𑍁𑌣𑌾 𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤 𑌇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌸𑌜𑍍𑌜𑌤𑍇 ॥

(இ - ள்.) மகா பாகுவே! குணகர்மங்களினுடைய விபாகத்தின் தத்துவத்தை யுணர்ந்தவனே, குணங்கள் (இந்திரியங்கள்) குண (விஷய) ங்களி லிருக்கின்றனவென மதித்துத் தான் சங்கமுடையவனாகிறதில்லை.

𑌯𑌸𑍍𑌯 𑌨𑌾𑌹𑌂𑌕𑍃𑌤𑍋 𑌭𑌾𑌵𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 ।
𑌹𑌤𑍍𑌵𑌾𑌪𑌿 𑌸 𑌇𑌮𑌾𑌂𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌨 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥

(இ - ள்.) எந்தப் புருஷனுக்குச் சரீர முதலியவற்றால் செய்யப்படும் கர்மத்தால் இக்கர்மத்தின் கர்த்தா யானென இவ்வாறு அகங்காரத்தின் தன்மை யில்லையோ, அன்றியும் இச்சுபாசுப கர்மங்களினது சுவர்க்கநரகாதி வடிவபலத்தில் எந்தப்புருஷனது புத்தி நான் இதன் பலத்தை அநுபவிப்பவ னென்பதாகப் பற்றினை யடைவதில்லையோ, அந்தப்புருஷன் இவ்வுலகங்களைக் கொல்லுகின்றவனாயினும் உலகு திருஷ்டியால் கொல்லுதலைச் செய்கின்றான்; சாஸ்திர திருஷ்டியாகக் கொல்லுகிறதில்லை; அதன் பயனையுமடைகிறதில்லை.

இவை முதலிய ஆத்மாவின் அகர்த்துருத்தன்மை அபோக்திருத்தன்மை அங்ஙனமே ஆத்மாவின் ஞானம் என்பவற்றின் மகாத்மியத்தை பிரதிபாதிக்கும் வசனங்களால் ஆத்மா அகர்த்தா அபோக்தாவென்பது நன்கு விளங்கும். எது கிரியையின் ஆசிரிய வடிவமாயிருக்கின்றதோ அது கர்த்தாவெனப்படும். அது மேற்கூறிய சரீரமுதலிய சாமக்கிரிகைகளுடன் கூடிய அந்தக்கரணவடிவ கர்த்தாவைப்போலாம். ஆத்மா மேற்காட்டிய வாக்கங்களால் கிரியையின் ஆசிரய வடிவமற்றதாயிருத்தலின் அது கர்த்தாவன்றாம். எது கர்த்தாவாகின்றதோ அதுவே போக்தாவா மென்பது நியமமாம். ஆபாச சகித அந்தக்கரணம் கர்மத்திற்குக் கர்த்தாவா யிருத்தலால் அது கர்மத்தின் பலவடிவமான சுக துக்கங்களின் போக்தாவாயிருக்கின்றது; இருக்கவே, ஆத்மா கர்த்தாவும் போக்தாவு மன்றாம். ஜீவன்முக்த புருஷனிடத்துக் கர்த்திருத்து

ஷ்டீ ப்ராரத்தியின்ஸாமின் (எதிர்காலத்துப் பயனைக்கொடுப்பதாய) ஆகாமிய கர்மமின்றும். இன்றாகவே, பிராரத்த கன்மம் அநுபவி த்தே யொழிக்கத்தக்கதாம்.

ஜீவன் முக்த புருஷனுக்கு ஆவரணம் நாசமாகியும் விட்சே பம் நாசமாகாமலிருத்தலின் விட்சேபத்திலிருக்கும பிராரத்தகன் மத்தின பயன அநுபவித்து ஒழிகத்தக்கதாம்.

பிராரத்த பேதங்கள்.

அப்பிராரத்தகனமம் உத்தமம, மத்திபம், கனிஷ்டம், அத ம * தரம, அதம தமமென ஐந்துவகைத்தாம்.

1. ஜனனமுதல் மரணபரியநதம நிவிர்த்திக்கேதுவான பிரா ரத்தம் உத்தமமாம். அது சுகவாமதேவா முதலியோர்களது பிரா ர்த்தம் போலவதாம். சுகராதியோரது பிராரத்தம் சொற்பபோகத் திற்குக் காரணமாயிருந்தது. போகத்தில அருவருப்பு அவர்க ளுக் கெப்போது மிருந்தபடியால் பிரவிர்த்தியின் அபாவமே சொல்லப்படுகிறது.

2. முதலில பிரவிர்த்திக்கும, பிறகு நிவிர்த்திக்கும ஏதுவா யிருக்கும் பிரார்த்தம மத்திமமாம.

அது யாஞ்ஞவல்கியர் முதலியோரது பிராரத்தம் போல்வ தாம.

வாதசபையில் ஜயமடைந்து தனத்தைச் சேர்க்கும் வியவ காரம் ஆரம்பத்தில யாஞ்ஞவல்கியருக் கிருந்தது பற்றி அவரு க்கு முதலில் நிவிர்த்தியுண்டாகவில்லை.

3. எப்போதும் பிரவிர்த்திக் கேதுவான பிராரத்தம் கனி ஷ்டமாம்.

அது ஜனகமகாராஜா முதலியோரது பிராரத்தம போல்வ தாம்.

ஜனகமகாராஜாவிற்கு இராசசிய பரிபாலனம் முடிவுபரியந் தம் விடாதிருந்தமைபற்றி அவரது பிராரத்தம் கனிஷ்டமெனப் படுகின்றது.

4. முதலில் நிவிர்த்திக்கும பிறகு பிரவிர்த்திக்கும் ஏது வான பிரார்த்தம் அதமதரமாம். அது சிகித்துவஜன் முதலியோ

* இரண்டிலொன்று தரமென்றும் பலவற்றுளொன்று தமமென்றுஞ் சொல்லப்படும்.

ரது பிராரத்தம்போல்வதாம். சிகித்துவஜனுக்கு முதலில் நிவிர்த்தியும் பிறகு பிரவிர்த்தியு முண்டானதென்பது வாசிஷ்டத்தில் பிரசித்தம்.

5. இஷ்டப்படி நடத்தல், இஷ்டப்படி புசித்தல், இஷ்டப்படி பேசுதல் முதலிய பிரமாதங்களுக் கேதுவாகிய பிராரத்தம் அதமதமமாம். அது கடையிற் சுவாமிகள் பிராரத்தம் போல்வதாம். கடையிற் சுவாமிகள் யாழ்ப்பாணத்திலிருந்த ஜீவன்முத்த புருஷர்களுள் ஒருவர். விசுவாமித்திரமுனிவர் பசியினாற்றுன்பப்பட்டுச் சண்டாளன் கையிலிருந்த நாயின் முழங்கால் மாமிசத்தை வாங்கிப் புசித்தாரென்பதையும்; புசுண்டர் யோகி, கிருஷ்ணன் போகி, சுகர் தியாகி, ஜனகர் ராமர் இராஜாக்கள், வசிஷ்டர் கர்மகர்த்தா என்பனவற்றையும் இங்குக் கவனித்துப் பிராரத்தம் பலவகைப்படுமென்றறிதல்வேண்டும்.

### பிராரத்த சதுஷ்டயம்.

இங்ஙனமன்றிப் பிராரத்த கர்ம சம்ஸ்காரம் நான்குவகைப்படுமென்பாரு முண்டு. அவை தீவிரம், மத்தியம், மந்தம், சுத்தமென்பனவாம்.

(1) போகத்தோடு கூடினவனைப் பசுவைப்போல ஆத்மப்பிரீதி மாத்திரமாயிருப்பதே தீவிரமாம்.

(2) போகச்சிறப்பைப் பொருந்தினவனாயினும் ஆத்மாராமனைப்பாலனைப்போல விநோதமாத்திரமாயிருப்பதே மத்தியமாம்.

(3) சகல போகங்களையும் நீக்கி உன்மத்தனைப்போ லிருப்பதே மந்தமாம்.

(4) உலகவழக்கற்று நிருபாதிக ஆத்மாவில் பரமுத்தனைப்போலப் பரமசுகத்திலிருப்பதே சுத்தமாம்.

### பிராரத்தத்திரயம்.

எல்லாப் பிராரத்தமும் இச்சை, அநிச்சை, பரேச்சை யென்று மூன்றனுள் அடங்கும்.

#### (1) இச்சாப்பிராரத்தம்.

தனக்கு அபத்தியம் சேவக முதலியவற்றால் துன்பம் வருமென் றறிந்தவிடத்தும் விடாமல் செய்வித்தல் இச்சாப்பிராரத்தமாம்.

#### (2) அநிச்சாப்பிராரத்தம்.

தான் செய்யமாட்டே னென்றாலும் இராஜாக்கினையைப்போல இம்சாதிகளைச் செய்வித்தல் அநிச்சாப்பிராரத்தமாம்.

### பரேச்சாப்பிராரத்தம்.

தனக்கு இச்சை யநிச்சைக ளில்லாதிருந்தாலும் பரதாட்சண்ணியத்தால் ஊட்டுவிப்பதே பரேச்சாப் பிராரத்தமாம்.

### ஜீவன்முக்தனுக்குப் பிராரத்தமில்லையென்றதன் காரணம்.

#### அபரோக்ஷாநுபூதி.

𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑍇𑌽𑌪𑍍𑌯𑌾𑌤𑍍𑌮 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌂 𑌨𑍈𑌵𑌮𑍁𑌞𑍍𑌚𑌤𑌿 |
𑌇𑌤𑌿𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑌾𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇𑌽𑌧𑍁𑌨𑌾 ||

(இ-ள்) ஆத்மஞானமுண்டாறுலும் பிராரப்தம் விடுவதில்லையெனச் சாஸ்திரங்களில் யாது கேட்கப்படுகின்றதோ, அஃதிப்போது நிராகரிக்கப்படுகிறது.

𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌦𑌯𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌂 𑌨𑍈𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 |
𑌦𑍇𑌹𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌯𑌥𑌾𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑍋 𑌵𑌿𑌬𑍋𑌧𑌤𑌃 ||

(இ-ள்) விழித்தபின் சொப்பன மில்லாததுபோலத் தத்துவ ஞான முதயமானபின் தேகாதிகள் அசத்தாதலான் பிராரப்த மில்லை.

𑌕𑌰𑍍𑌮𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍀𑌯𑌂 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌮𑌿𑌤𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 |
𑌤𑌤𑍍𑌤𑍁𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌪𑍁𑌂𑌸𑍋𑌨𑍈𑌵𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌰𑍍𑌹𑌿𑌚𑌿𑌤𑍍 ||

(இ-ள்.) ஜன்மாந்தர கர்மமெதுவோ, அது பிராரப்த மெனப்படும். அதுவோ, ஜன்மாந்தர மின்மையால் புருஷனுக்குச் சிறிதுமில்லை.

𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌦𑍇𑌹𑍋 𑌯𑌥𑌾𑌧𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍 𑌤𑌥𑍈𑌵𑌾𑌯𑌂𑌹𑌿𑌦𑍇𑌹𑌕𑌃 |
𑌅𑌧𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑍁𑌤𑍋𑌜𑌨𑍍𑌮 𑌜𑌨𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑍇 𑌹𑌿𑌤𑌤𑍍𑌕𑍁𑌤𑌃 ||

(இ - ள்.) சொப்நதேகம்போல இத்தேகமும் அத்தியஸ்தமாம். அத்யஸ்தத்திற்கு ஜன்மமேது? ஜன்மமில்லையேல் பிரார்த்தமேது? இல்லையென்றபடி.

என்றுள்ளதை ஆதாரமாகக்கொண்டு ஜீவன்முத்த புருஷர்களுக்கு சஞ்சித ஆகாமிய கர்மங்களைப்போலப் பிராரத்த கன்மமு மின்றென்று கூறுவாருமுளர். அவர்களுக்கு அதன் அபிப்பிராயந் தெரியாது.

சி: அதன் அபிப்பிராயம் யாது?

கு: ஞானியின் திருஷ்டியால் ஆத்மாவில் கர்மம் அதன் பல மென்பவற்றின் சம்பந்தமில்லை: அதுபற்றி ஆத்மாவில் எல்லாக் கர்மங்களும் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றன வென்னும் அபிப்பிராயத்தால் ஜீவன்முத்த புருஷனுக்குப் பிராரத்தமில்லையென்று சொல்லப்படுகிறது. ஞானத்திற்கு முன்செய்த பிராரத்தத்திற்கு ஞானியின் சரீரத்தில் போகமுண்டாகாதென்னு மபிப்பிராயத்தால் பிராரத்தம் நிஷேதிக்கப்படவில்லை யென்க. இதனால் ஜீவன்முத்த புருஷனிடத்து ஆத்மதிருஷ்டியால் பிராரத்த மின்றென்றும் சரீர திருஷ்டியால் பிராரத்த முண்டென்றும் பெறப்பட்டமை காண்க, படவே, ஞானியினிடத்தில் பிராரத்த கன்மபலத்தால் சரீரபோஷண சம்பந்தமான கிரியைகள் அவசியமுண்டாகுமென்பது பெறப்பட்டது.

பிராரத்த கர்மம் பலஜன்மத்திற் கேதுவாமென்பதன் விபரம்.

பிராரத்த வினையானது வசிட்டர் பீஷ்மர் முதலிய அதிகார புருஷர்களுக்குப் பல சரீரத்திற் கேதுவாயினும் அவர்களின் ஞானத்திற்கு மறைப்பில்லையாம். எப்படியென்றால் பாலிய, கௌமார வார்த்திகாதிபேத முண்டானாலும் தேகமொன்றேயாதல் போலாம்.

வேதாந்த சூளாமணி.

அறைந்தநுகர் வினைபதுதா னுலோகயாத் திரைக
ளதிகாரியா துறுநரர்க்கே யொருடம்பு தன்னிற்
செறிந்துநுகர் வாமவற்றி னதிகிருத ராகிச்
சிறந்தமா புருடர்க்குத் தசசங்கை யுடம்பி
னுறைந்தலது தீர்ந்திடா தெனினு மறைப்பின்றி
யுறுதலா லொருவனுக்கிங் கிளமைமுதற் பேதம்
பிறந்திடினு மவனுக்கோ ருடம்பேயாய் நின்ற
பெற்றிபோ லாகுமென வுணர்ந்திடுக தெரிந்தே.

என்று கூறுவதால் நன்குவிளங்கும். அதிகாரபுருஷரல்லாதார்க்குப் பிராரத்த கன்மத்தின் பலனாகப் பலசரீரங்கள் உண்டாதலில்லை. உண்டாகுமாயின் அப்பிராரத்தமே ஞானத்திற்குப் பிரதிபந்தகமா (தடையா)ம். அந்தப் பிரதிபந்தகமாவது விஷயத்திலாசை, புத்திமந்தத்தன்மை, பேதவாதி வசனத்தில் விசுவாச முதலியவைகளாம். விஷயவாசை நிவிர்த்திக்கும் புத்திமந்தத்தன்மை நிவிர்த்திக்கும் ஏது ஞானவைராக்கியஉபாதிப் பிரசங்கத்திற் காண்க.

பேதவாதி வசனத்தில் விசுவாசங் கூடாதென்பதன் காரணம்.

* அந்தகோலாங்கூல நியாயம்.

ஒரு பணக்காரனது ஆபரணம்பூண்ட புத்திரனைத் திருடர்கள் இச்சைசனங் கூறி காட்டிற் கழைத்துக்கொண்டுபோய் ஆபரணங்களைப் பிடுங்கிக்கொண்டு அப்புத்திரனின் கண்களையும் கெடுத்து விட்டுப்போனார்கள். அப்பொழுது அழுதுகொண்டிருந்த புத்திரனைத் தயையற்றும் வஞ்சனையுற்றுமுள்ள ஒரு துஷ்டன் சந்தித்து ஒரு கொழுத்த காளையின்வாலை அவன் கையிற் பிடித்துக் கொடுத்து இதனை விடாமல் பிடித்துக்கொண்டுபோனால் ஊர்க்குப்போய் சேரலாமென்று கூறினான். துன்பமடைந்த அச்சிறுவன் அவன் வார்த்தையை நம்பி அவ்வாலைப் பிடித்துக்கொண்டு போய்ப் பெருந்துக்கமடைந்து நஷ்டமானான். அதுபோல விஷய வடிவ சோரன் ஒருவனது விவேகரூப நேத்திரத்தைக் கெடுத்து சம்சாரரூப வனத்தில் கொண்டுபோய் விடுகிறான். அப்போது தயை யற்றும் வஞ்சக முற்றுமுள்ள பேதவாதி வேதவிரோத சாஸ்திரங்களின் சித்தாந்தத்தில் விசுவாசம் வரும்படி செய்து என்னுடைய உபதேசமே பரமானந்தத்திற்குக் காரணமாகும் அதனை விடாதேயென்று சொல்லுகிறான். பேதவாதியின் வசனத்தை அப்புருஷன் நம்பி புருஷார்த்தத்தை யிழந்து ஜனனமரண வடிவ மகத்தான துக்கத்தை அநுபவிக்கிறான். ஆகையால் பேதவாதி வசனம் விசுவசிக்கத்தக்கதன்றாம்.

சமாதிலக்ஷணம்.

சி: மேற்கூறிய சமாதியின் நன்மையை விரித்துக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: எழுகின்ற ஸமஸ்காரத்தின் (விஷயவாசனைகளின்) தடையும், அடங்கியிருக்கின்ற சமஸ்காரங்களின் வெளிப்பாடுமுண்டாகிய அந்தக்கரணத்தின் ஏகாக்கிரத் தன்மையாகிய பரிணாமஞ் சமாதி யெனப்படும்.

அஃதாவது விஷயவடிவ சர்வ விருத்திகளையுந் தடுத்து நானே பிரஹ்மம் பிரஹ்மமே நானென்று நிலைத்திருத்தலாம். எனவே மனம் வாக்குக் காயங்கள் பிரயத்தினப் பூர்வகமாக ஆத்மாகார விருத்தியை முன்னிட்டு அசைவற்றிருத்தல் சமாதியெனப்

* அந்தன்—குருடன், கோ(பசு,லாங்கூலம் (வால்)—பசுவின்வால், நியாயம்—திருஷ்டாந்தம்.

படுகின்றது. இதனால் தானேதானாக நிலைத்தல் சமாதியென்பது சித்தாந்தமாயிற்று. தானென்றது ஜீவவடிவம், பின்னர்த் தானென்றது அதனது (நிஜவடிவமான) கூடஸ்த பிரஹ்மம்.

இச்சமாதி: சவிகற்பமென்றும், நிருவிகற்பமென்று மிருவகைத்தாம். சவிகற்பம்: பாஹ்ய திரிசியாநு வித்தம், பாக்கிய ஸத்தாநு வித்தம். அந்தர திரிசியானு வித்தம், அந்தர சத்தானு வித்தமென நால்வகைத்தாம்.

நிருவிகற்பம்: பாக்கிய நிருவிகற்பம்,அந்தர நிருவிகற்பமென்றிருவகைத்தாம்.

இதனால் புறச்சமாதி மூன்றென்றும் அகச் சமாதி மூன்றென்றும் பெறப்பட்டன.

'பாகிய திரிசியாநு வித்தம்,' பாகிய சத்தாநு வித்தம், பாகிய நிருவிகற்பமென்னும் மூன்றும் புறசசமாதிகளாம.

அந்தர திரிசியாநு வித்தம், அந்தர சத்தாநு வித்தம், அந்தர நிருவிகற்பமென்னு மூன்றும அகச் சமாதிகளாம்.

சவிகற்ப சமாதி லக்ஷணம்.

ஞாதுரு ஞானஞேய மென்னுந் திரிபுடித் தோற்றத்தோடு அத்விதீய பிரஹ்மத்தில் அந்தக்கரண விருத்தி நிலைத்தல் சவிகற்ப சமாதி யெனப்படும்.

திரிபுடியானது சுத்தத் திரிபுடி யெனவும் அசுத்தத் திரிபுடி யெனவு மிருவகைத்தாம்.

தேகமே தானென்பது அசுத்த ஞாதுரு, அறிவே தானென்பது சுத்த ஞாதுரு (காண்பான்); இந்த ஞாதுரு புத்திவிருத்தியோடு கூடி ஞானேந்திரிய வாயிலாகக் காணப்படும் பொருள்களில் விருப்புடையது இது வெறுப்புடைய திதுவென்றறிவது அசுத்த ஞானம்(காட்சி),அவ்வசுத்த ஞானத்தைப் பொய்யென்றறிந்தலே சுத்தஞானம்; பூதங்களானவைதடித்துப்பௌதிகங்களாய் எதிரே சப்தாதிவிஷயங்களாகத் தோற்றுவது அசுத்தஞேயம்,இச்சப்தாதி விடயங்களெல்லாம் சொரூபாகாரமாய்த் தோற்றுவது சுத்தஞேயம் (காணப்படும் பொருள்). சவிகற்ப சமாதியிற் கூறிய திரிபுடி சுத்தத் திரிபுடி யென்றறிதல் வேண்டும். இதனால் அசுத்தத் திரிபுடிகளை லயம்பண்ணிக் சுத்தத்திரிபுடிகளுக்கு லயம் வாராதபடி அத்துவிதிய பிரஹ்மத்தில் அந்தக்கரண விருத்தியை நிறுத்துதல் சவிகற்ப சமாதியின் சொரூபமாமென்பது பெறப்பட்டது.

நிருவிகற்ப சமாதி லக்ஷணம்.

சவிகற்ப சமாதியில் கூறிய சுத்தத் திரிபுடியின் நிவிர்த்தியோடு சித்தம் அத்விதீய பிரஹ்மத்தில் நிலைத்தல் நிர்விகற்ப சமாதியாம். இதனால் ஒரு விகற்பமின்றித் தானே தானாய் நிலைத்தலே நிர்விகற்ப சமாதியெனப்பது பெறப்பட்டது.

சவிகற்பசமாதியை * சம்பிரஞ்ஞாத சமாதியென்றும் நிர்விகற்ப சமாதியை அசம்பிரஞ்ஞாத சமாதியென்றும் கூறுவர்.

ஈண்டுக்கூறிய சமாதி யிரண்டனுள் சவிகற்ப சமாதி சாதனமும் நிர்விகற்பசமாதி யதன்பலனுமாம்.

சட்சமாதி.

(1) பாகிய திருசியாநுவித்த சமாதி.

கடாதிவிஷய சமூகத்துள் ஒன்றனைக்குறித்து அதன் நாமரூபமான மாயாம்சங்க ளிரண்டையும் பிரித்து அதிலுள்ள அஸ்தி பாதிப் பிரியமெனனும் சச்சிதாநந்த பிரஹ்மாம்சத்திரயங்களை அநுசந்தானஞ்செய்வதே பாகியதிருசியாநுவித்த சமாதியாம்.

ஒவ்வொருபதார்த்தத்திலும் நாமரூபமஸ்திபாதிப்பிரியமென வைந்து அம்சங்களிருக்கின்றன. கடமெனனு மெழுத்துக்களின் கூட்டம் நாம(பெயர்)மாம்; உருட்சியதனரூபமாம்; கடமிருக்கிறதென்பது அஸ்தியாம்; கடம் விளங்குகிறதென்பது பாதியாம்; கடம் பிரிய (ஆனந்த)மா யிருக்கிறதென்பது பிரியமாம். இவ்வைந்தனுள் அஸ்தி பாதிப் பிரியமெனு மூன்றம்சமும் வியாபகமாயிருக்கின்றன. நாமரூபங்களோ வியபிசாரியாம். எது ஓரிடத்திருந்து மற்றோரிடத்திருப்பதில்லையோ அது வியபிசாரியெனப்படும். கடமெனனும் நாமமும் உருட்சியான ரூபமும் படத்திலிருத்தலில்லை; படமென்னும் நாமமும் அதன் ரூபமும் கடத்திலிருத்தலில்லை. இவ்வாறுகச் சகல பதார்த்தங்களிலும் நாமரூப அம்சங்கள் வியபிசாரிகளாம். அஸ்திபாதிப்பிரியமெனனும் மூன்றம்சங்களும் எங்கும் வியாபகமாயிருக்கின்றன; அவை சத்தியமாயும் அதிஷ்டானமாயு மிருக்கின்றன. அஸ்திபாதிப்பிரியம சச்சிதானந்த ரூபமாயிருத்தலின் காணப்படு மொவ்வொன்றிலுமுள்ள மாயாம்சமான நாமரூபங்களைத் தள்ளி அப்பொருள்களைச·

* (1) விஜாதீய பிரத்தியய விருத்திகளின் அந்தராயமி (மறைப்பி)ன்றிய தைலதாரைபோன்று இடையறாத ஸஜாதீயப் பிரஹ்மாகார விருத்திப் பிரவாகம் ஸம்பிரஞ்ஞாத சமாதியாம்.

(2) சகல விருத்திகளின் நிரோததோடு சித்தம் நிர்விகற்ப பிரஹ்மாகாரமாய் நிலைத்தல் அசம்பிரஞ்ஞாத சமாதியாம்

சச்சிதானந்த வடிவமா (ஆத்மாவா)கக் காணவேண்டுமென்பது கருத்தாம். இதனால் துக்கத்தை யுண்டுபண்ணுவதற் கேதுவான நாமரூபங்களை மித்தியாவடிவமென் றொழித்து யாவற்றையும் சச்சிதானந்த வடிவமாகக் காண்டல் பாகிய சவிகற்பசமாதி யென்றாயிற்று. திரிசியத்தை அவலம்பித்துச் செய்யப்படுவது பற்றித் திருசியாநுவித்தமென்று சொல்லப்பட்டது. பாகியம்—வெளி. திருசியம்—காணப்படும் பொருள். அநுவித்தம்—கூடியது, திருசியாநுவித்தமென்பது திருசிய+அநுவித்தமெனப் பிரிபட்டு நிற்கும்.

(2) பாகிய சப்தாநுவித்த சமாதி.

அதிஷ்டானமாய சச்சிதாநந்தத்தில் கற்பிதமான நாமரூபங்களை லயஞ்செய்து, அகண்ட சச்சிதாநந்த அத்துவித சொரூபம் பிரமமென்னும் பாவனையைப் பொருந்தியிருப்பதே பாகியசப்தாநுவித்த சமாதியாம. சப்தாநுவித்தமென்பது சப்த+அநு வெனப் பிரிபட்டுநிற்கும். சப்தம்—ஒலி.

(3) பாகிய நிர்விகற்ப சமாதி.

பாகிய திருசியாநுவித்தம்,பாகியசப்தாநுவித்தமென்னு மிவ்விருவகைச் சவிகற்பசமாதிகளி னப்பியாசபலத்தினால் பரமாநந்த நிலையில் சித்தம் சென்றொடுங்கி நிஸ்தரங்க சமுத்திரம் (அலையின்றிய கடல்) போன்று நிச்சல (சலிப்பின்றிய) வடிவமாயிருப்பதே பாகிய நிர்விகற்ப சமாதியாம். நிர்விகற்பம்—வேறுபாடின்மை.

(4) அந்தர திருசியாநுவித்த சமாதி.

முக்குணவடிவமாய அந்தக்கரணத்திற்கும், அதன் மூன்று வித பரிணாம (விகார)மாகிய சாந்த கோர மூடவிருத்திகளுக்கும் அநுசூதமா (உள்ளீடா) யிருத்தலால் நான் அத்திரிசியங்களுக்குச் சாட்சியாயிருக்கிறேனென்னும் அநுசந்தானமே அந்தரதிரிசியாநுவித்த சமாதியாம். அந்தர்—உள். அந்தக்கரணமும் அதனது விருத்திகளும் உள்திரிசிய மெனப்படும.

(5) அந்தர * சப்தாநுவித்த சமாதி.

நான் அசங்கன், சச்சிதானந்த வடிவன், அத்விதிய சொப்பிரகாசன், ஏகன் என்றற் றொடக்கத்தனவாகச் சிந்தனைசெய்வதே அந்தரசப்தாநுவித்த சமாதியாம்.

---

* அசங்க முதலிய சப்தத்தை யவலம்பித்துச் செய்வதுபற்றிச் சப்தாநுவித்தமென்றுரைக்கப்படுகின்றது

சப்தாநுவித்த சமாதியேயன்றிச் சப்தாநநுவித்த மென்றுமோர் சமாதியுண்டு. சப்தாநநுவித்தமென்பது சப்த அநநுவித்தமெனப் பிரிபட்டுநிற்கும். மேற்கூறிய அசங்கன் முதலிய சப்தங்களுடன்கூடாதது சப்தாநநுவித்த சமாதியாம். அநநுவித்தம்—கூடாதது.

(6) அந்தரநிர்விகற்ப சமாதி.

மேற்கூறியவாறு செய்யும் சமாதியினப்பியாசத்தின் முதிர்ச்சியினால் பையப்பைய வெளிப்பட்டுப் பூரணமாய் விளங்கும் தனதாத்ம சொரூப ஆநந்தத்தினால் மேற்கூறிய சமாதிகளைவிட்டு நிவாத தீபம் (அசைவில்லாத விளக்குப்)போன்று நிர்ச்சிந்தையாய் (மனோவிருத்திச் சிறிதுமின்றி) இருப்பது அந்தர நிர்விகற்ப சமாதியாம். இச்சமாதி பொருந்தியவனே ஜீவன் முத்தனாவன். இச்சமாதிகளை யிடைவிடா தப்பியசித்தவனது மனம் பலவாறு விகற்பிக்காது; விகற்பித்தாலும் அதுவும் சமாதியே யாமன்றிப் பிறிதொன்றாகாது.

நிர்விகற்ப சமாதியில் சவிகற்ப சமாதியிற் போன்று திரிபுடித்துவைத மிருப்பினும் அது (திரிபுடித்துவைதம்) சலத்திற் கரைத்த உப்பு இருந்தும் சிறிதும் விளங்காததுபோன்று விளங்காதிருக்கின்றது. இருக்கவே, சவிகற்ப சமாதியில் திரிபுடித்துவைதம் விளங்குதலும், நிர்விகற்ப சமாதியில் அது விளங்காமையுமே அவ்விரண்டற்கும் வேறுபாடாம்.

சுழுத்தியும் நிர்விகற்ப சமாதியு மொன்றாகாவெனல்.

சுழுத்தியில் விருத்திசகித (கூடிய) அந்தக்கரணத்தின் அபாவமுண்டாகின்றதேயன்றி, அந்தக்கரணத்தின் விருத்தி பிரமாகாரமாகிறதின்று. [பிரஹ்மாகாரமாதல் — பிரமசொரூபமாய்ப் போதல்.] நிர்விகற்பசமாதியிலோ பிரமாகாரமான அந்தக்கரணத்தின் விருத்தி ஜலத்தில் கரைத்த உப்புப்போன்று விளங்காதிருக்கின்றதேயன்றி, இல்லாமற் போவதின்று. இதனால் சுழுத்திக்கும் நிர்விகற்பசமாதிக்குமுள்ள பேதம் பெரிதும்விளங்கும். நிர்விகற்ப சமாதியில் அந்தக்கரணவிர்த்தி யின்றாயின் அச்சமாதி செய்பவனது தேகம் தூங்குவோனது தேகம்போன்று விழவேண்டும்; விழாதிருக்கின்றமையின், நிர்விகற்பசமாதியில் அந்தக்கரண விருத்தி சலத்திற்கரைத்தவுப்பைப்போன்று புலனாகாதிருக்கின்றதென்பது.

நிர்விகற்ப சமாதியின் பேதம்.

நிர்விகற்பசமாதியும் இருவகைத்தாம். அவை : அத்துவைத பாவனுவடிவம், அத்வைதாவஸ்தானவடிவ மென்பனவாம்.

அத்வைதப் பிரஹ்மாகாரமாய அந்தக்கரணத்தின் அஞ்ஞாத விர்த்தியோடுகூடிய நிர்விகற்பசமாதி அத்வைதபாவனுவடிவ நிர்விகற்ப சமாதியெனப்படும்.

இச்சமாதியி னப்பியாசம் அதிகமாவதினுல் பிரஹ்மாகார விருத்தியும் சாந்தமாய் விடுகின்றது. விடவே,விர்த்திரகிதமாய நிர் விகற்பசமாதி அத்வைதாவஸ்தான வடிவ நிர்விகற்ப சமாதி யெனப்படும்.

காய்ச்சிய இருப்பின்மேற் றெளித்த ஜலத்திவலை யெங்ஙனம் அவ்விரும்பிலேயே லயமாய் விடுகின்றதோ அங்ஙனமே அத்வைதபாவனுவடிவ நிர்விகற்பசமாதியின் திடமான அப்பியாசத்தினுல் அத்தியந்தப்பிரகாசமான பிரஹ்மத்தின்கண்விருத்தி விலயமாகின்றது. இங்குக்கூறிய விருவகைச் சமாதிகளுள் முன்னது சாதனமும் பின்னது பலமுமாம். பலமாகக்கூறியவிச்சமாதி இராஜயோகமென்றும், உன்மனி யென்றும், மனோன்மனி என்றும், அமரத்துவமென்றும், இலயமென்றும், தத்துவமென்றும் சூனியாசூனியமென்றும், பரமபதமென்றும் அமநஸ்கமென்றும், அத்வைதமென்றும், நிராலம்பமென்றும, நிரஞ்ஞனமென்றும், ஜீவன்முக்தியென்றும், சகஜமென்றும், துரியமென்றும், சமாதி யென்றும் சொல்லப்படும்.

அத்வைதாவஸ்தானவடிவசமாதிக்கும் சுழுத்திக்குமுள்ள வேற்றுமை.

சுழுத்தியில் விருத்தி அஞ்ஞானத்தில் விலயமாகின்றது; ஆண்டுள்ள ஆநந்தம் அஞ்ஞானுவிர்தமாயிருக்கிறது. ஆவிர்தம்— மறைப்பு.

அத்வைதாவஸ்தானவடிவ சமாதியில் விருத்தி பிரஹ்மப்பிரகாசத்தில் விலயமாகின்றது; ஆண்டு ஆவரணமி(மறைப்பி) ல்லாத பிரஹ்மாநந்தம் விளங்குகின்றது. அவ்விரண்டன் வேற்றுமை இவ்வளவேயாம்.

நிர்விகற்பசமாதியின் மூவகைப்பேதம்.

இராஜயோகமென்னும் நிர்விகற்பசமாதி ஞானசாத்தியம், கிரியாசாத்தியம், ஞானக்கிரியாவுபயசாத்தியம்,(உபயசாத்தியம்— இரண்டாற் சாதிக்கப்படுவது) என்னும் பேதத்தால் மூவகைப் படும்.

(1) ஞானசாந்திய ராஜயோகம்.

சுந்தாந்தக் கரணமுடைய புருஷன் சாஸ்திரத்தினாலும் குருவின் கிருபையினாலும் பிரஹ்மாத்ம ஐக்கிய நிச்சயமாயதத்துவ ஞானத்தினையடைந்து, ஜீவன்முக்தி விலக்ஷணாநந்தத்தின் அனுபவத்தின்பொருட்டுச் சகலப் பிரவிர்த்திகளையும் விட்டு, ஏகாந்தமாய விடத்தி லிருந்துகொண்டு பிரஹ்மாகாரவிர்த்தியை அப்பியாசஞ் செய்ய அதனாற் சித்திக்கும் நிர்விகற்பசமாதி ஞானசாத்தியராஜயோகமெனப்படும்.

(2) கிரியாசாந்திய ராஜயோகம்.

சங்கற்பத்தை யுண்டுபண்ணும் சகலப் பிரவிர்த்திகளையும் விட்டுச் சொற்ப சாத்விக ஆகாரமுடையவனாய் இந்திரிய நிக்கிரகமுடையவனாய்ச் சப்த முதலிய தடைக ளில்லாததும், கொசுகு முதலிய பிராணிகளில்லாததும், காற்றோட்டமுடையதுமாய ஏகாந்தமான விடத்தில் இலவம்பஞ்சு முதலியவைற்றாலாய ஆசனத்தை விரித்துத் தெற்குத்திசையை நோக்கி யுட்கார்ந்து,குருகூறியநியமத்தில் நிற்பவனாய் முதலிற் சமாதி சித்தித்த குருவினதுகையின் தொழிலாற் பிரேரிக்கப்பட்ட சக்தியினாலும் பின்னர் அயஸ்காந்த முதலிய நிமித்தத்தாலும் எவன் எச்சமாதியைச் சித்திக்கச் செய்கிறானோ அவனுக்கு அது கிரியாசாத்திய ராஜயோகமெனப்படும்.

(3) ஞானக்கிரியா வுபயசாந்திய ராஜயோகம்.

இயமாதி யஷ்டாங்கங்களும் சித்தித்தபின்னர் லயம்,விக்ஷேபம், கஷாயம், ரசாஸ்வாதமென்னும் விக்கினங்கள் நான்கையும் விலக்கி, எழும்பிய சம்ஸ்காரத்தைக் கெடுத்து நிரோதசம்ஸ்காரத்தை வெளிப்படுத்தலை முன்னிட்ட திரிபுடியின் பான(விளக்க)மின்றிய பிரஹ்மாகாரவிருத்தியின் ஸ்திதியாகிய நிர்விகற்பசமாதி ஞானக்கிரியா உபயசாத்திய ராஜயோக மெனப்படும்.

நிர்விகற்ப சமாதியின் ஆரம்பத்திலுண்டாகும் மேற்படி நான்கு விக்கினங்களையும் பிரயத்தன பூர்வகமாக அவசியம் ஒழித்தல்வேண்டும்.

சமாதி விக்கினங்களும் அவற்றின் நிவிருத்தியும்.

(1) லயம்.

சி: லயமாவது யாது?

கு: ஆலஸ்யத்தினாலாவது சோம்பலினாலாவது நித்திரையினாலாவது பிரஹ்மாகார * விருத்தி சூன்யமாய்ப்போதல் லயமெனப்

* இருக்கிறது என்னும் உணர்ச்சிக் கேதுவான அந்தக்கரணத்தின் டரிணாமம் இங்கு விருத்தி யெனப்படும்.

படும். அந்த லயத்தினால் சுழுத்திக்குச் சமானமான அவஸ்தை யுண்டாகின்றது. அதனால் பிரஹ்மானந்தம் விளங்குகின்றதில்லை.

(1) லயநிவிர்த்தி.

சி: இதற்கு நிவிர்த்தி யெப்படி ?

கு: ஆலஸ்ய முதலிய வேதுக்களால் எப்போது பிரஹ்மாகார விருத்தி தனது உபாதான (முதற்) காரணமாய அந்தக்கரணத்தில் லயமாகின்றதோ அப்போது சமாதிபுரிவோன் சாவதானப்பட்டு ஆலஸ்ய முதலியவற்றை யொழித்துப் பிரஹ்மாகார விருத்தியை யெழுப்பவேண்டும்; அங்ஙனம் எழுப்பினால் லயம்நிவிர்த்தியாய்விடும். லயரூப விக்கினத்தின் விரோதியான முயற்சி சித்தசமபோதன மெனப்படும்.

(2) விட்சேபம்.

சி: விட்சேபமாவது யாது ?

கு: பிரஹ்மாகாரவிருத்தி ரஜோகுண தோஷத்தினால் சொரூபத்தில் நிலைக்காது பகிர்முகப்படுதல் விட்சேப மெனப்படும். பிரஹ்மாகாரவிருத்தி ஸ்திரப்பட் டிராமையால் சொரூபாநந்தம் அடையப்படுகிறதில்லை.

(2) விட்சேப நிவிர்த்தி.

சி: இதற்கு நிவிர்த்தி யெப்படி ?

கு: விஷயங்களிலுள்ள தோஷங்களை யாரோபித்து விருத்தியைச் சொரூபத்தில் நிறுத்தல்வேண்டும்; அங்ஙனம் நிறுத்தினால் விட்சேபம் நிவிர்த்தியாய்விடும். விட்சேபவடிவ விக்கினத்தின் விரோதியான முயற்சி சமமெனப்படும்.

(3) கஷாயம்.

சி: * கஷாயமாவது யாது ?

* "ராகத்துவேஷாதிகளின் சம்ஸ்காரத்திற்குக் கஷாயமென்று பெயர். அந்தச் சம்ஸ்காரம் அந்தக்கரண மிருக்கும்வரை நீங்குகிறதின்று; ஆதலால், சமாதிகாலத்திலும் அந்தக்கரணத்திலிருக்கிறது. ஆனால் ராகத்துவேஷாதிகளின் உற்பூத சம்ஸ்காரம் சமாதிக்கு விரோதமாம். அநுற்பூதம் விரோதியன்று. வெளியிடப்பட்டதை உற்பூதமென்பர். வெளியிடப்படாததனை அநுற்பூத மென்பர். சமாதியில் பிரவிர்த்தித்த யோகிக்கு ராகத்துவேஷங்களின் சம்ஸ்காரத்தின் வெளிப்படுத லுண்டாயின் தோஷ திருஷ்டியால் அதனை யழுத்திவிடல் வேண்டும்" என்று விசாரசாகரம் கூறுகின்றது,

கு: பிரஹ்மாகாரவிருத்தி இராசத தாமதகுணங்களால் மூடப்பட்டு லட்சியமான சொரூபத்திலும் நிற்காது பிரபஞ்ச விஷயத்தையும் நாடாது ஸ்தம்பம் போன்று சுத்தமூடமாயிருத்தல் கஷாயமெனப்படும். இங்ஙனமிருத்தலால் சொரூபாநந்தம் விளங்காது; அந்தகாரமே விளங்கும்.

(3) கஷாய நிவிர்த்தி.

சி: இதற்கு நிவிர்த்தி யெப்படி ?

கு: அகண்ட வஸ்துவின் சுகத்தையும் அதன் மகிமையையும் சொல்வதாகவும் திருசியங்களியாவும் துச்சமென்று போதிப்பதாகவுமுள்ள வேதாந்த சாத்திரார்த்தங்களை யடிக்கடி சொல்லல் வேண்டும்; அங்ஙனம் சொல்வதால கஷாயம் நிவிர்த்தியாய் விடும்.

(4) ரஸாஸ்வாதம்.

சி: ரஸாஸ்வாதமாவது யாது ?

கு: சமாதியில் விட்சேபத்தாலுண்டாய துக்க நிவிர்த்தியினாலுண்டாய ஆநந்தானுபவம் * ரஸாஸ்வாதமெனப்படும். இவ்வாநந்தம் பிரஹ்மாநந்த மாகாமையின் இதுவும் சமாதிக்குத் தடையாம்.

(4) ரஸாஸ்வாத நிவிர்த்தி.

சி: இதற்கு நிவிர்த்தி யெப்படி ?

சமாதிபுரியும் புருஷன் விருத்தி விட்சேபத்தாலாய துக்க நிவிர்த்தியினாலுண்டான ஆநந்தாகாரமாயிருத்தலை யூகயுக்தியினாலறிந்து அவ்வாநந்தாகாரமாய விருத்தியை யொழித்துப் பிரஹ்மாகார விருத்தியைச் சொரூபசிந்தனத்தினாலெழும்பச்செய்து சொரூபத்தில திரிபுடி விளக்கமற நிறுத்தல் வேண்டும்; அங்ஙனம் நிறுத்துவதால் * ரஸாஸ்வாதம் நிவிர்த்தியாய் விடும்.

* "ரஸாஸ்வாதத்தின பொருள இதுவாம:—யோகிக்குப் பிரஹ்மாநந்தத்தின் அனுபவமுண்டாகின்றது. விட்சேபரூப துக்கத்தின் நிவிர்த்தியின் அனுபவ முண்டாகின்றது. சில விடத்துத் துக்கநிவிருத்தியினாலும் ஆனந்த முண்டாகிறது.

எங்ஙனம்:—சுமையைத்தூக்கும் புருஷனுக்குச் சுமையை யிறக்குவதினால் ஆனந்த முண்டாகிறது. அங்குண்டான ஆனந்தத்தில் வேறு விஷயம் காரணமன்று; சுமையாலுண்டான துக்கத்தின் நிவிருத்தியினால் "எனக்கு ஆனந்த முண்டாகிறது" என்று சொல்லுகிறான். ஆதலால் துக்கநிவிருத்தியும் ஆனந்தத்துக்கு ஏதுவாம். அதுபோல் யோகிக்குச் சமாதியில் விக்ஷேபத்தாலுண்டான துக்க நிவிருத்தியினால் எந்த ஆனந்த முண்டாகிறதோ அதன் அநுபவத்துக்கு ரஸாஸ்வாத மென்று பெயராம்.

"வாங்கி யைம்பொறி நின்ற மனத்தினை" என்னும் பகவற்கீதைச்செய்யுளின் விசேடவுரையில் கோயிலூர் ஸ்ரீபொன்னம்பல சுவாமிகள் "காமம், போகமென்னும் இரண்டின்கண் விட்சிப்தமான மனத்தை யோகியாகிய புருஷன் வைராக்கியம், அப்பியாசமென்னும் உபாயங்களால் பிரத்தியகான்மாவின்கண்ணே நிருத்தமாகச்செய்க; இனி இதனையே விரித்தருளிச் செய்கின்றார். சப்தாதி விஷயங்களின் அவஸ்தை இருவகைத்தாம்: ஒன்று சிந்தியமா

இவ்வநுபவத்தினாலேயே யோகி திருப்தி யடைந்துவிட்டால் சகல உபாதிகளு மற்றப் பிரஹ்மானந்தாகார விருத்தி அவனுக்குண்டாகாமையால் அதன் அநுபவம் சமாதியில் உண்டாகாது. ஆதலால் துக்கநிவிருத்தியாலுண்டாகும் ஆனந்தத்தின் அநுபவரூப ரஸாஸ்வாதமும் சமாதியில் விக்கினமாகும்.

இச்சித்த பதார்த்தத்தின் அடையின்றியும் விரோதியின்நிவிருத்தியால் ஆனந்தமுண்டாகிற தென்பதற்கு வேறு திருஷ்டாந்தம்:—பூமியிற் புதையலிருக்கிறது. அது பொல்லாத விஷசர்ப்பத்தால் காக்கப்பட்டிருக்கிறது. புதையலை யெடுப்பதற்கு முன்னும் அதை யடைவதற்குத் தடையாயிருந்த சர்ப்பத்தை யொழிப்பதனால் ஆனந்தமுண்டாகிறது. அங்குச்சர்ப்ப நிவிருத்தியாலுண்டான ஆனந்தத்தில் ஒருவன் திருப்தி யடைந்து புதையலெடுக்கும் முயற்சியை விட்டுவிட்டால் புதையல் கிடைத்தலாலுண்டாகும் பரமானந்த முண்டாகாது. அதுபோல் அத்துவைதப் பிரஹ்மரூபம்-புதையல். தேகாதியனாத்ம பதார்த்தங்களின் பிரதீதிரூப விக்ஷேபம்-சர்ப்பம். விக்ஷேபரூப சர்ப்பத்தின் நிவிருத்தியால் உண்டாகும் அவாந்தர ஆனந்தரூப ரஸத்தின் அநுபவம் ஆஸ்வாதனம். அது புதையல் வடிவ அத்துவைதப் பிரஹ்மத்தை யடைவதாலுண்டாகும் பரமானந்தத்தினை அடைவதற்குத் தடையாயிருத்தலால் விக்கின மெனப்படுகிறது.

அல்லது ரஸாஸ்வாதத்திற்கு இது வேறு பொருளாம்:—ஸவிகற்ப சமாதிக்குப் பின் நிர்விகற்ப சமாதி யுண்டாகிறது. சவிகற்ப சமாதியில் திரிபுடி பிரதீதியாகிறது. ஆதலால் சவிகற்ப சமாதியின் ஆனந்தம் திரிபுடிரூப உபாதி சகிதமாயிருத்தலால் ஸோபாதிக மெனப்படுகிறது. நிர்விகற்ப சமாதியில் திரிபுடி பிரதீதியாகிறதில்லை. ஆகையால் நிர்விகற்ப சமாதியில் நிருபாதிக (உபாதியில்லாத) ஆனந்த முண்டாகிறது. இவ்விதத்தால் சவிகற்ப சமாதிக்குப் பின்னும் நிர்விகற்ப சமாதியின் ஆரம்பத்திலும் சவிகற்ப சமாதியின் சோபாதிகானந்தம் விடமுடியாது அநுபவிக்கப்படுகிறது. அது ரஸாஸ்வாத மெனப்படும். ஆதலால் விட்சேப நிவிர்த்தியாலுண்டாகும் ஆநந்தத்தின் அனுபவம் அல்லது சவிகற்பசமாதியினது ஆநந்தத்தின் அநுபவம் ரஸாஸ்வாத மெனப்படும். அவ்விருவித ரஸாஸ்வாதங்களும் நிர்விகற்ப சமாதியின் பரமானந்தாநுபவத்துக்கு விரோதிகளாதலால் விக்கினங்களாகின்றன. ஆதலால் ரஸாஸ்வாதத்தையும் தள்ளவேண்டும்" என்று விசாரசாகரங் கூறுகின்றது.

னம். மற்றொன்று [௯-ம] புஜ்பமானமாம். சப்தாதி விஷயங்களைச் சிந்திப்பது சிந்தியமானுவஸ்தை யென்று பெயர்; அச்சப்தாதி விஷயங்களைப் போகிப்பதற்குப் புஜ்பமானுவஸ்தை யென்று பெயர். அவ்விரண் டவஸ்தைகளும் மனத்தின் விட்சேபத்திற் கேதுக்களாம். ஆகலின், வைராக்கிய அப்பியாசரூப வுபாயங்களால் மனத்தின் விட்சேபங்களை நிவிர்த்தி செய்க. வைராக்கியவுபாயமாவது அவித்தையினுற் பண்ணப்பட்ட சர்வ தொய்தப் பிரபஞ்சமும் பரிச்சின்னமாகலின துக்கரூபமேயென் றிவ்வாறு நிரந்தரஞ் சிந்திப்பதாம். அப்பியாசவுபாயமாவது சர்வ சகததும் ஜநநரகித மான பிரமமே; பிரமத்தினும் வேறே வஸ்துவாக அற்பமுமில்லை என் றிவ்வாறு குரு சாஸ்திரங்களின் உபதேசத்தி னநந்தரம் விசாரித்து அத்துவிதியப் பிரமத்தினும் விபரீதமான இத்தொய்தத்தைக் காணுமையாம். இவ்வாறுன வைராக்கிய பாவனை தத்துவ தரிசன மென்னும் இரண்டுபாயங்களால் விஷயங்களினின்றும் நிவிர்த்தித்த சித்தமானது ஒப்போது நாடோறும் லயமடைந்து வந்த அப்பியாசவசத்தால் லயத்தி னபிமுகமாம். லயபாவத்தை யடைவது எதனிடம் அதற்கு லயமென்றுபெயர். இப்படிப்பட்டது சுழுத்தியாம். அச்சுழுத்தி ரூபமான லயத்தில் இம்மனமானது சுப்ரசன்னமாம். [சர்வ ஆயாசங்களினின்றும் விடுபட்டதா மென்று பொருள்.] இப்படிப்பட்ட சுப்ரசன்னமனத்தையும் யோகியாகிய புருஷன் நிக்கிரகஞ்செய்க. சங்கை;—சுழுத்தியின்கண் மனமானது சர்வ விட்சேப ரூப ஆயாசங்களினின்றும் விடுபடுமாயின் எதன்பொருட்டு அதை நிக்கிரகித்தல் வேண்டுமெனின்? அதற்குக் கூறுகின்றூர். எப்படி காமமானது விஷயகோசரமான பிரமாணமுதலிய விருத்திகளையுண்டுபண்ணிச்சமாதிக்குவிரோதியாமோ அப்படியே லயமும் நித்திராரூபவிருத்தியை யுண்டுபண்ணிச் சமாதிக்கு விரோதியேயாம். சர்வ விருத்திகளின் நிரோதமே * சமாதி யென்று சொல்லப்படுகிறதாதலால் காம முதலியவற்றுற் பண்ணப் படுவதான விட்சேபத்தினின்றும் எப்படி அம்மனம் நிரோதஞ் செய்ய யோக்கியமோ அப்படியே பரிசிரம முதலியவற்றுற் பண்ணப்பட்ட லயத்தினின்றும் அம்மனம் நிரோதிக்க யோக்கியமாம்.

---

* நானே பரப்பிரஹ்மம், பரப்பிரஹ்மமே நான் என்னும் நிலை சர்வ விர்த்தி நிரோதகமாகிய சமாதியாம். செவ்வையாகத் தியானத்தை மறத்தலும் சமாதியாம் பிரபா (ஒளி) சூன்னியமும் மன சூன்னியம் புத்தி சூன்னியமும் நிராமயமும் சர்வ சூன்னியமுமாகிய நிராபாசம் சமாதியாம்.

ஆகலின் நித்திரையின் சேஷம், அதிக போஜனம், அதிபரிசிரம முதலிய லயத்தின் காரணங்களை நிரோதஞ்செய்து வெளிப்படும் பிரயத்தனத்தால் அச்சித்தத்தை லயத்தினின்றுஞ் சாக்கிர மடையப்பண்ணுக. இவ்வாறு லயத்தினின்றும் சாக்கிரமடையப் பண்ணிய சித்தமானது ஓர்போது நாடோறும் பழகிவந்த சாக்கிரத்தின் அப்பியாச வசத்தால் மீண்டுங் காமபோகங்களில் விட்சிப்தமடையின் பூர்வஞ்சொன்ன வைராக்கிய பாவனையினாலும் தத்துவ சாட்சாத்காரத்தினாலும் அச்சித்தத்தை நிருத்தஞ் செய்க. இவ்வாறடிக்கடி லயவிட்சேப மென்னும் இரண்டு தோஷங்களினின்றும் நீக்கப்பட்ட சித்தமானது பிரமரூபமான சமபாவத்தை யடையாமல் மத்தியில் ஸ்தப்தமாய்விடும்; அந்த ஸ்தப்தபாவத்தைக் கஷாயதோஷ மென்பர். அக்காஷய மென்னுந் தோஷம் பிரபலமான வாசனாரூபமாகிய இராகத்தின்வசத்தா லடையப்படும். அக்கஷாய தோஷத்தோடுகூடிய சித்தத்தை யோகியானவன் சமாகித சித்தத்தால் விவேகித்தறிக; அறிந்த பின்னர் இந்த நமது சித்தமானது இப்போது சமாதியடையவில்லையென்று நிச்சயித்து லய விட்சேப தோஷங்களினின்றும் சித்தத்தை நிவிர்த்திசெய்ததுபோலக் கஷாய தோஷத்தினின்றும் நிவிர்த்திசெய்க. அதன்பின் லய விட்சேப கஷாய தோஷங்களினின்றும் விடுபட்ட சித்தமானது சமரூபமான பிரமத்தையே அடையாநிற்கும். அச்சமரூபமான பிரமத்தை யடைந்த சித்தத்தை யோகியானவன் கஷாயமென்றாவது லயமென்றாவது பிராந்திகொண்டு சலிப்பிக்கலாகாது. பின்னையோ தைரியத்தோடு கூடிய புத்தியினால் லய கஷாயங்களினும் வேறென்று அச்சமரூபப்பிரமத்தின் பிராப்தியிலேயே அத்தியந்தம் பிரயத்தனத்தால் அச்சித்தத்தை ஸ்தாபனஞ் செய்க. அன்றியும், அந்நிரோதசமாதி எப்படியும் பரமசுகத்தின் * அபிவியஞ்சகமாம். அப்படியானாலும் யோகியானவன் அந்நிரோதசமாதியின்கண் அச்சுகத்தை † ஆஸ்வாதம் பண்ணலாகாது; இதற்குப்பொருள் இவ்வளவுகாலபரியந்தம் நான் சுகியாயிருந்தேனென்றிவ்வாறு சுகத்தின் ஆஸ்வாத ரூப விருத்தியை யோகியுண்டு பண்ணலாகாதென்பது. உண்டுபண்ணில், அவ்வஸம்பிரஞ்ஞாத சமாதிக்குப் பங்கமாம். அன்றியும், பிரக்ஞையினால் யாதொரு சுகம் பிரதீதியாகு

* அபிவியஞ்சகம் - பிரகாசகம்.

† ஆஸ்வாதம் - அநுபவம்.

மோ அஃது அவித்தையினாற் கற்பிதமாதலால் மித்தையேயென்னும் பாவனையினால் யோகியானவன் சவிகற்ப சுகாகார விருத்தி ரூபமாகிய பிரக்ஞையோடு கூடாமல் அதைப் பரித்தியாகஞ் செய்யவேண்டும். சகல விருத்திகளினின்றும் விடுபட்ட சித்தத்தால் யாதொரு சொரூபசுகம் அநுபவமாமோ அவ்வநுபவத்தை யோகியானவன் பரித்தியாகஞ் செய்யலாகாது. யாதொரு காலத்திற் சித்தமானது லயம், கஷாயம், விட்சேபம், ரசாஸ்வாதமென்னும் இந்நான்கு தோஷங்களினின்றும் விடுபடுமோ அக்காலத்தில் அச்சித்தமானது சமரூபமான பிரஹ்மத்தை யடையாநிற்குமென்று கௌடபாதாசாரியரால் அருளிச்செய்யப்பட் டிருக்கிறது" என்று கூறியிருத்தல் இங்கு அவசியம் அறியத்தக்கதாம்.

சி: தாங்களருளிச்செய்த சமாதிகளைப்பற்றிக் கூறும் பிரமாணங்களையு மறிய விரும்புகின்றனன்.

கு: கீழ்வருவனவே.

பைங்களோபநிஷத்.

தத்வமஸ்யஹம் ப்ரஹ்மாஸ்மீதி வாக்யார்த்த விசாரஶ்ரவணம் பவதி। ஏகாந்தேந ஶ்ரவணார்தாநுஸந்தாநம் மநநம் பவதி। ஶ்ரவணமநந நிர்விசிகித்ஸேऽர்தே வஸ்துந்யேகதாநதயா சேதஸ்ஸ்தாபநம் நிதித்யாஸநம் பவதி। த்யாத்ருத்யாநே விஹாய நிவாதஸ்தித தீபவத்த்யேயைக கோசரம் சித்தம் ஸமாதிர்பவதி ॥

(இ-ள்.) தத்துவமஸி அகம்பிரஹ்மாஸ்மி இவைகளின் வாக்கியார்த்த விசாரமே சிரவணமாகிறது. ஏகாந்தத்தில் சிரவணத்தின் அர்த்தாநுசந்தானமே மனனமாகிறது. சிரவணமனனத்தினாலே தேடவேண்டிய வஸ்துவினிடத்து ஒரே நிலையாய் மனத்தை நிறுத்தலே நிதித்தியாசனமாகிறது. தியாகஞ் செய்கிறவன் தியானம் இவைகளை (தியானஞ் செய்கிறவனொருவன், தியானமென்பதொன்று என்னும் வேற்றுமைகளை)விட்டுக் காற்றில்லாத ஸ்தலத்திலிருக்குந் தீபத்தைப்போலத் தியானிக்கப்படும் வஸ்துவாகவே சித்தமிருக்கும் நிலைமை சமாதியாகிறது.

முக்திகோபநிஷத்.

ப்ரஹ்மாகாரமநோவ்ருத்தி ப்ரவாஹோऽஹங்க்ருதிம்விநா ।
ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதிஸ்ஸ்யாத் த்யாநாப்யாஸ ப்ரகர்ஷத:।

𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌂 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌦𑍀𑌪𑌕𑌮𑍍 ।
𑌅𑌸𑌂𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌤𑌨𑌾𑌮𑌾𑌯𑌂 𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌪𑍍𑌰𑌭𑌾𑌶𑍂𑌨𑍍𑌯𑌂 𑌮𑌨𑌃𑌶𑍂𑌨𑍍𑌯𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍂𑌨𑍍𑌯𑌂 𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 ।
𑌅𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑍋𑌽𑌸𑍌 𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑍍𑌮𑍁𑌨𑌿𑌭𑌾𑌵𑌿𑌤𑌃 ।
𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌧𑌃𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌮𑌧𑍍𑌯𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌶𑌿𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 ।
𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍍𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌖𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌃 ॥

(இ-ள்.) அகங்காரமற்றுப் பிரஹ்மாகாரப் பிரவாகமாயிருக்கும் மனோவிருத்தியானது தியானப்பியாசத்தின் மேன்மையால் ஸம்பிரஞ்ஞாத சமாதியாகவாகிறது. அடங்கியிருக்கிற விருத்தியையுடைய சித்தமானது பரமானந்தத்தைப் பிரகாசிப்பிக்கிறபோது (அதற்கு) அசம்பிரஞ்ஞாத சமாதியென்று பெயர். அது யோகிகளுக்குப் பிரியமானது. பிரகாசமில்லாமலும் மனதில்லாமலும் புத்தியில்லாமலும் சித்சொரூபமாத்திரம் மிஞ்சியிருக்கிற (நிலை)யெதுவோ, அஃது அதத்வியாவிருத்தி சமாதியென்று முனிவர்களால் பாவிக்கப்படுகிறது. மேலும் பூரணமாயும் கீழும் பூரணமாயும் மத்தியிலும் பூரணமாயும் மங்களசொரூபமாயுமிருக்கிறது. பரமார்த்தமான இந்தச்சமாதியானது சாட்சாத் விதிமுகமாயிருக்கின்றது.

அபரோக்ஷாநுபூதி.

𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌤𑌯𑌾 𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌕𑌾𑌰𑌤𑌯𑌾 𑌪𑍁𑌨𑌃 ।
𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌵𑌿𑌸𑍍𑌮𑌰𑌣𑌂 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑌃 ॥

(இ-ள்.) நிர்விகாரத்தன்மை விருத்தியினால் மீண்டும் பிரஹ்மாகாரத்தன்மையாகச் செய்வனே தியேயாகாரவிருத்தி சூனியமாயிருத்தல் எதுவோ, அது ஞானமெனப் பெயரிய சமாதியாம்.

விஷ்ணுபுராணம்.

𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌕𑌲𑍍𑌪𑌨𑌾𑌹𑍀𑌨𑌂 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌗𑍍𑌰𑌹𑌣𑌂 𑌹𑌿𑌯𑌤𑍍 ।
𑌮𑌨𑌸𑌾 𑌧𑍍𑌯𑌾𑌨𑌨𑌿𑌷𑍍𑌪𑌾𑌦𑍍𑌯𑌂 𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 𑌸𑍋𑌽𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥

(இ-ள்.) அதன் (நாமரூபாதி) கற்பனையின்றிய சொரூபக் கிரகணம் எதுவோ, அதுவே மனத்தின தியானத்தால் சம்பாதிக்கப்படும் சமாதியெனப்படும்.

பாதஞ்சலசூத்திரம்.

𑌤𑌦𑍇𑌵𑌾𑌰𑍍𑌥𑌮𑌾𑌤𑍍𑌰𑌨𑌿𑌰𑍍𑌭𑌾𑌸𑌂 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌶𑍂𑌨𑍍𑌯𑌮𑌿𑌵 𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 ॥

(இ-ள்.) அந்தத்தியானமே பிரத்தியய சொரூபமில்லாதது போலத் தியானிக்கப்படும்வஸ்துமாத்திரமாய் விளங்குதல் சமாதி யெனப்படும்.

ஹடயோகப்பிரதீபிகை.

𑌸𑌲𑌿𑌲𑍇 𑌸𑍈𑌨𑍍𑌧𑌵𑌂 𑌯𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑌾𑌮𑍍𑌯𑌂 𑌭𑌜𑌤𑌿 𑌯𑍋𑌗𑌤𑌃 ।
𑌤𑌥𑌾 𑌆𑌤𑍍𑌮𑌮𑌨𑌸𑍋𑌰𑍈𑌕𑍍𑌯𑌂 𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥
𑌯𑌦𑌾 𑌸𑌂𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌮𑌾𑌨𑌸𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇 ।
𑌤𑌦𑌾 𑌸𑌮𑌰𑌸𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥
𑌤𑌤𑍍𑌸𑌮𑌂 𑌚 𑌦𑍍𑌵𑌯𑍋𑌰𑍈𑌕𑍍𑌯𑌂 𑌜𑍀𑌵𑌾𑌤𑍍𑌮𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌃 ।
𑌪𑍍𑌰𑌨𑌷𑍍𑌟 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃 𑌸𑌮𑌾𑌧𑌿𑌸𑍍𑌸𑍋𑌽𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥

(இ-ள்.) ஜலத்தில் உப்புகலப்பால் எங்ஙனம் நீரின் ஐக்கியத்தை யடைகின்றதோ, அங்ஙனமே ஆத்துமாவிற்கும் மனதிற்குமுண்டாகும் ஐக்கியம் சமாதியெனப்படும். எப்போது பிராணன் தேய்ந்து மனதும் ஒடுங்குகின்றதோ, அப்போதுண்டாகும் சமரசத்துவமும் சமாதியெனப்படும். ஜீவாத்துமா பரமாத்துமா வென்னும் இரண்டின் ஐக்கியமாகிய சமத்தன்மையுண்டாய்ச் சகலசங்கற்பங்களும் நஷ்டமாதல் சமாதியெனப்படும்.

திருமந்திரம்.

காரிய மான வுபாதியைத் தான்கடந்
தாரிய காரண மேழுந்தன் பாலுற
வாரிய காரண மாய தவத்திடைத்
தாரியல் தற்பரஞ் சேர்தல் சமாதியே.

கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று
சிற்பனை யெல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்தண் சமாதியே.

ஈசுரகீதை.

ஓதுமா லம்பன மொன்று மின்றியே
போதமும் போதகப் பொருளு மென்றுணர்
பேதம தன்றியே யிருந்த பெற்றிநற்
சாதன மாகிய சமாதி யென்பரால்.

ஞானவாசிஷ்டம்.

சனகனெனு மன்னவர்கோ னிவ்வாறோதத் தன்னிலையாம் பரம்பொருளிற் றளர்ச்சியாறி, யனகசுகன் பயநீங்கிச் சோகமாறி

யயர்வகன்று செயலடங்கி யையந் தீர்ந்து, கனைகவரை யேறிநிரு விகற்பமான கலங்காத சமாதியிற்கிற் ககனத் தூற்றுன், றினைகர ணைச் செறிவருட மீனைஞ்ஞாற்றிற் றிரியொடுநெய் மாண்டவிழ் ந்த தீபம் போன்றே.

சன்னிதிமுறை.

அலையி லாத சாகரம்போ லவிலஞ் சேரா விளக்கதுபோ
லருங்க விரும்பொன் சமமாகியான தராசி னுனியதுபோல்,
நிலையொன் றியநற் சமாதியுற்று நின்றுட் கமலத் தெழும்பிரச
நிறைவா ரிதியிற் புகுந்ததனி னேசித் தடியே னிருப்பேனே,
விலையின் மகுடத் திருமுடியாய் மிளிர்குண் டலங்கள் செறிகாதா
வியன்கே யூரத் திருத்தோளா விஞ்சுஞ் சதங்கை சூழ்தாளா,
புலையுங்கொலையுங்களவுமிலாப் புனிதத்தவத்தோர்தொழுதேத்தும்
புராரி குமரா வுமைசிறுவா போரூர் முருகப் பெருமானே.

வேதாந்தசூளாமணி.

கடாதிவிட யத்தினிலொன் றினைக்குறித்து நாம கற்பனை யோ டுருவமெனு மாயையதன் றிறத்தைத், தடாதுவிடுத் தத்திபா திப்பிரிய மென்னுஞ் சச்சிதா நந்தமாம் பிரமத்தின் றிறத்தாக, விடாதனுசந் தானஞ்செய் திடுதலே புறத்து மெய்த்திரிசி யாநு வே தப்பெயர்கொள் கின்ற, கெடாதவொரு சவிகற்ப சமாதி யென லாகுங் கிளந்தபுற சத்தானு வேதமது கிளப்பில்.

சச்சிதா நந்தவுரு வாகுவதே பிரமந் தானெனவே தியானி த்த லதுவாகு மென்க, வச்சமா திகள்பயின்ற வலியினுற் றோ ன்று மிரும்பிரமா நந்தநிலை தனின்மனஞ் சென்றொடுங்கி, நிச் சலமா யலையில்கடல் போலிருத்தல் புறத்து நிருவிகற்ப சமாதியா மனேகதகா மாதிக், கச்சமறு கரிதானென் றெண்ணுதலுட் டிருசி யானுவே தப்பெயர்கொள் சவிகற்ப சமாதி.

சங்கமறு சச்சிதா நந்தவொளி யுருவந் தானெனச்சிந் தித் திடலும் சத்தானு வேதம்,பொங்குறுதன் னனுபூதி ரசந்தோனை று மதனுற் புகன்றதிரி சியஞ்சத்த மெனுமிரண்டு மகன்றே, யிங்க னைவி றீபமெனப் பந்தமற விருத்த லிலங்குமக நிருவிகற்ப சமா தியிவ்வா றுனுந், தங்கலற வொழுகுமியோ கிக்குமன மெங்கே சரிக்குமாண் டாண்டெலாஞ் சமாதியென லாமே.

தொல்காப்பியவுரைச்சூத்திரம்.

ஆங்கனங் குறித்த வம்முதற் பொருளொடு
தான்பிற னுகாத் தகையது சமாதி.

மஸ்தான் சாகிபு பாடல்.

சலனசஞ் சலமது தொலைத்தருண் மலைப்புடையில் சார்ந்திருப் பதுசமாதி, சர்வபரி பூரண வகண்டிதா காரமே சாட்சியென் பதுசமாதி; நிலையம்விட் டலையாது நீவாத தீபமென நிலையினிற் பதுசமாதி, நெற்றிவிழி ரண்டையு மொத்துநடு கொண்டொளிவி னேரில்வைப் பதுசமாதி; யிலகுஞ் சதாகால நிட்டைபல் குந்துறவி லெய்திநிற் பதுசமாதி, யென்றருள் பிரானேயடி யேனுமுமை நம்பினே னிதுவேளை யாளுதற்கே; மலைபோற் பெரும்பெருமை யுள்ளநீர் பின்றொடர வள்ளலிற சூல் வருகவே, வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண் மணியே முகியித் தீனே.

ஆரிருந் தென்னவார் போயென்ன வெனாறுமன மற்றிருப் பதுசமாதி, யாராலு மறியாத சூதான வெளிசென் றடைந்துபோவதுசமாதி; விரசு ரங்கண்மூத லதிகப் பிரசங்கமு மெலியமெலிவதுசமாதி, வேதவே தாந்தமும் விட்டுநா தாந்தநடு விடுசெல்வதுசமாதி; யேருறு மயிர்ப்பால மேறுமன மேயேறு மேறுமென் பதுசமாதி,யென்றருள் பிரானேயடி யேனுமுமை நம்பினே னிதுவேளை யாளுதற்கே; வாரிபோல் வான்கருணை யுள்ளநீர் பின்றொடர வள்ளலிற சூல் வருகவே, வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண் மணியே முகியித் தீனே.

கைவல்லியநவநீதம்.

பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனுமனு பவம்விடாமற், பலமலரின் மதுப்போலச் சச்சிதா னந்தமொன்றும் பரமார்த் தத்தைப், பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந் தான் விழித்துப் பார்த்த போது, பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமா னானே.

## ருo - வது சம்வாதம்.

தனிந்தவிடத்திற் சமாதி செய்யெனல்.

சி: சுவாமி! ஏகாந்தமானவிடத்திற், சமாதி செய்யவேண்டுமென்று தாங்கள் கூறினமையின் எத்தகையவிடம் ஏகாந்த ஸ்தலமாகும்? அத்தலத்தில் சமாதிபுரிபவன் எவ்வாறிருத்தல்வேண்டும்?

கு: ஏகாந்தமானவிடம்—ஜனங்கள் வசிக்காதவிடம். 'தவத்திற் கொருவர் கல்விக்கிருவர்' என்பதனால் ஏகாந்தமான விடத்திலே யே சமாதி செய்யவேண்டும். பலரிருந்தால் கலகமும் இருவரிருந் தால் பேச்சிற்கிடமுமுண்டாவதாயிருத்தலின் எப்போதும் ஏகா ந்தமான விடத்தையே நாடல்வேண்டும். அவ்விடமும் திருடர் புலி முதலியவற்றின் உபத்திரவமில்லாததாய், நல்ல ராஜ்ஜியத்தை யடு த்ததாய், குளிர் வெயில் முதலியவற்றின் சம்பந்தம் தேகஸ்திதிக் கிணக்கமாகவுடையதாய், சமயமறிந்து உணவு முதலியன வுதவு தற்குரிய கிராமத்தை யடுத்ததாயிருத்தல்வேண்டும். மேலும், அவ் விடம் பெருச்சாளி முதலியவற்றின் வளைகளில்லாதாயும், சமநில மாயும், கொசு மூட்டுப்பூச்சி முதலிய பிராணிகளில்லாததாயுமிரு த்தல்வேண்டும். சமாதி புரிவதற்குரிய ஏகாந்த ஸ்தானம் மலை முழை, புண்ணியக்ஷேத்திரம், நதிதீர முதலிவைகளாம். சமாதிபுரி பவன் சுகாசனத்தமர்ந்து தறிபோலிருக்கவேண்டும்.

சி: இதுபற்றிக் கூறும் பிரமாணங்களை யறிய விரும்புகின் றனன்.

கு: கீழ்வருவனவே.

கைவல்யோபநிஷத்.

விவிக்ததேஶே ச ஸுகாஸநஸ்த: ஶுசி: ஸமக்ரீவஶிரஶ்ஶரீர:| அத்யாஶ்ரமஸ்த: ஸகலேந்த்ரியாணி நிருத்ய பக்த்யா ஸ்வகுரும் ப்ரணம்ய ||

(இ-ள்.) எவ்வித விடையூறுகளு மில்லாத வேகாந்த ஸ்தான த்திற் சுகாசனத்திருந்து சுசியாய்க் கண்டம் சிரம் சரீரம் இவைக ளியாவையுஞ் சமமாக நிறுத்தி யத்தியாச்சிரமோசித தர்மத்துடன் புலன்களை யெல்லாமடக்கித் தனது ஞானாசிரியனைப் பக்திபூர்வ மாக வணங்கி.

பகவத்கீதை.

ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மந:|
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம் ||
தத்ரைகாக்ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய:|
உபவிஶ்யாஸநே யுஞ்ஜ்யாத்யோகமாத்மவிஶுத்தயே ||

(இ-ள்.) பரிசுத்தமான விடத்தில் அதிக உயரமற்றதும் தாழ்ந்திராததுமான வொரு மணையை யேற்படுத்தி அதன்மேரில்

ப்பாசனமும அதன்மேல் கிருஷ்ணாசனமும் அல்லது வியாக்கிராசனமும் அதன்மேல் வஸ்திரத்தையும் இவைகள் முறையே ஒன்றின்மேலொன்றாய்ப்போடுவித்து அடிக்கடி மாற்றாமலிருக்கக்கூடிய ஆசனத்திலுட்கார்ந்து மனத்தை நிச்சலப்படுத்தி மனோவியாபாரமு மதன்மூலமா யிந்திரிய வியாபாரங்களும் அற்றவனாய்ச் சித்தசுத்தியை யடைவதற்காகத் தியானாப்பியாசஞ் செய்யவேண்டும்.

ஸமங்காய ஶிரோக்ரீவம் தாரயந்நசலம் ஸ்திர꞉।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திஶஶ்சாநவலோகயந்॥
ப்ரஶாந்தாத்மா விகதபீர் ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்தித꞉।
மந꞉ ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர꞉॥

(இ-ள்.) யோகியானவன் சரீரங் கழுத்து சிரம் இவைகளை யசையாமற் சமமாய் வைத்துக்கொண்டும் ஸ்திரமா யிருந்துகொண்டும் தன்னுடைய மூக்கு நுனியைப் பார்த்துக்கொண்டும் திக்குகளைப் பாராதவனாக மனச் சமாதானத்தை யடைந்தவனாய்ப் பயங்களை விட்டவனாய்ப் பிரம்மசாரிய விரதத்தில் இருந்துகொண்டும் மனதைவிஷயங்களிற்போகாமல் திருப்பி என்னிடத்தில் சித்தத்தை வைத்தவனா யென்னையே தியானஞ்செய்துகொண் டிருக்கவேண்டும்.

நிஷ்டாநுபூதி.

இயம்புமா தனங்க டம்மிலொன் றுறவே யிடைகளஞ் சிரங்கணா னேராய், வயம்பெறத் தம்ப மெனநெறித் திருந்தே மனமது வடிவினை யுறாமல், நயம்பெற வுன்று துன்னியெப் போது நடுநிலை தன்னைநீங் காமல், தயங்கிய சுத்த மசுத்தமல் லாத தனிநிலை பொருந்துதல் சமாதி.

பிரமகீதை.

தக்கஞா னத்தைத் தான்பெறற் பொருட்டுத் தனியிடந் தனையடைந் திதய, துக்கமே வாமற் சுகாசனத திருந்து தோடலை கழுத்துடம் பிவைநே, ரொக்குமா றிருத்திப் பூதிகொண் டிந்த வுடம்பையுந் தூளனம் பண்ணி, மிக்கவாய் வருமிந் தியங்களை யெல்லாம் விடயமே லெழாவகை மீட்டும்.

ஞானிகள் நிலைமை.

அத்தனுமெய்ஞ் ஞானியரு முரைத்தவாறே யாகமுடி யிடையசையாத் தமிபோ லாகிப், பத்திரங்கோ முகம்வீரம் பதுமந் தோடு பகர்கூர்ம வாதனத்திற் படிந்தே காந்த, முத்திரைசாம் பவிவான நோக்க தாகி முயல்கருத்து நடுநிலையி லிருத்தி நாளு,

மித்தகைய சிவயோகத் திருப்பர் ஞானி யினியவர்க்குப் பிறவியு முண் டென்ன லாமோ.

**அமுதசாரம்.**

செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற
வெவ்வா தனத்தே யிருந்தெவர்க்குங்—கைவந்தால்
வாத முதலனைத்து நலியா மதியுடையோ
ராதன மென்ப தது.

---

## ருக - வது சம்வாதம்.

### தத்துவஞான பலனைச்சாற்றல்.

சி: சமாதியின் சொரூபத்தை யறிந்தனன். இனித் தத்துவ ஞான பலனையு மறிய விரும்புகிறேன்.

கு: தத்துவஞான பலன் நான்கு. அவை: துக்காபாவம், சர்வ காமாப்தி, கிருதகிருத்தியத்துவம், பிராப்தப்பிராப்பியத்துவமெ ன்பனவாம்.

### (1) துக்காபாவம்.

சி: துக்காபாவம் எங்ஙனம்?

கு: துக்கம்: இகலோக துக்கமென்றும் பரலோக துக்கமெ ன்று மிருவகைத்தாம். அவற்றுள் இகலோக துக்கம் மூவகைத் தாம். (1) ஸ்தூலசரீரத்தில் அழகின்மை, துர்க்கந்தம், கபம் குன் மம்,க்ஷயம், சூலைமுதலிய வியாதிகளிருத்தல் முதலாவது துக்கமா ம். (2) சூக்குமசரீரத்தில் காமக்குரோதாதிகளிருத்தல் இரண்டா வது துக்கமாம. [மானசதாபம் ஆதியென்றும். சரீரதாபம் வியாதி யென்றும் சொல்லப்படும்.] (3) காரணசரீரத்தில்அவ்வாதி வியாதிக ளுக்குப்பீஜமான சம்ஸ்காரமிருத்தல்மூன்றாவது துக்கமாம். புண் ணியமெப்போது வருமோ பாவம் எப்போது போமோஎன்னுமிச் சிந்தனையே பரலோக துக்கமாம். ஞானியினிடத்து மூவகைத்தாய விகலோக துக்கமும் பரலோக துக்கமுமின்மையின் தத்துவஞா னத்தின் முதலாவது பயன் துக்காபாவமாம். துக்காபாவம்-துக்க மின்மை.

சி: ஞானியினிடத்து இகலோகதுக்க மெங்ஙன மின்று?

கு: மித்தியா வடிவ மாயாகாரியமான ஸ்தூல சரீர முதலிய வற்றிற்கு விலட்சணமாயுள்ளது பிரத்யகாத்மா. அஃது அகர்த்தா அபோக்தா; அதுவே தனது நிஜவடிவமென்றுள்ள வாறறிந்த பிறகு பரமார்த்தமாகப் போக்கிய போக்திருக்களில்லாமையால் ஸ்தூலாதி சரீரங்களின் (இகலோக) துக்கம் ஞானியினிடத்தின்று மென்க.

சி: பரலோக துக்க மெங்ஙன மின்று?

கு: பிரத்யகாத்ம ஞானத்தின் பின்னர்த் தாமரையிலையிற் றண்ணீர் பற்றாமைபோன்று ஞானியைப் புண்ணியபாவமென்னும் அவ்விருவினைகளும் பற்றாமையின் அவனுக்குப் பரலோக துக்கமு மின்றுமென்க.

சி: அதனை விளக்கல்வேண்டும்?

கு: நெருப்பு விறகிலிருப்பினும் விறகு நெருப்பிலிராமைபோன்று புண்ணியபாவ வியவகாரகற்பனை ஞானியினிடத்திருப்பினும் ஞானி அக்கற்பனையிலிருத்தலின்று. இன்றாகவே, பற்றி யெரியுங் காட்டின்கண் மிருகாதிகள் சேராமைபோன்று ஞானியின்பால் இருவினைகள் பொருந்தாமையால் புண்ணியம் எப்போது வருமோ பாவம் எப்போது போமோ என்னும் சிந்தனையாய பரலோக துக்கமும் ஞானிக்கின்று மென்க.

(2) சர்வகாமாப்தி.

சி: சர்வகாமாப்தி யெங்ஙனம்?

கு: சார்வபௌமன்முதல் இரண்யகர்ப்ப னீறாக முறையே ஒன்றற்கொன்றதிகமாகவுள்ள ஆநந்தங்களியாவும் இருதயத்திற் காமதகனஞ் செய்துள்ள ஞானிக்குத் தனது சொரூபாநந்தக்கடலின் திவலைகளாகத் தோன்றலின், அவன் சர்வாநந்தங்களையு மடைந்தவனே யாம். இதுவே தத்துவஞானத்தின் இரண்டாவது பயனான சர்வ காமாப்தியாம். [சர்வ × காம + அப்தி—சர்வகாமாப்தி.] சர்வகாமாப்தி-சர்வ ஆநந்தத்தையு மடைதல். இது கைவல்லிய நவநீதம் "மனுடன் மனுடகந் தருவன் தேவகந் தருவனெண் பிதிரோடே, பனுமா ஜானர்கள் கருமத்தேவர்கள் பகர்முக் கியரிந் திரனுசான், கனமார் பிரஜா பதியென் விராட்டுபொன் கர்ப்பப் பிரமனென் றின்னோர்கள், பினவா நந்தங்க ளுரையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மாநந்தம்" என்று கூறுவதாலும் விளங்கும்.

சி: மனுடன் (சார்வபௌமன்) முதல் இரண்யகர்ப்ப னீருயுள்ளவர்களி லிவரிவ ரித்தன்மையரென்று கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: (1) யௌவனனும், ரூபவானும், வித்தை அரோகம் திடசித்தம் இவைகளுடையவனுய்ச் சேனுசமுகங்களுடன் கூடிச் சர்வப் பிருதிவியையும் பாலனஞ்செய்பவன் சார்வபௌமன். இவனிடத்திற்றான் மனித சுகத்திற்கு முடிவுண்டாகின்றது.

(2) இக்கற்பத்திலே மனிதனுயிருந்து புண்ணிய விசேஷத்தால் கந்தர்வ பதவியை யடைந்தவன் மனுட கந்தர்வன். இவன் சார்வபௌமனிலும் நூறுபங் கதிக சுகமுடையவன்.

(3) முற்கற்பத்திற் செய்தபுண்ணிய விசேஷத்தால் இக்கற்பத்தின் ஆதியிலேயே கந்தர்வத்தன்மையை யடைந்தவன் தேவகந்தருவன். இவன் மநுடகந்தருவனிலும் நூறுபங்கதிக சுகமுடையவன்.

(4) தங்களது லோகங்களில் வெகுகாலம் வரையில் வசிக்கும் அக்கினிஷ்வாத்தர் முதலியோர் பிதிரர்கள். இவர்கள் தேவ கந்தர்வனிலும் நூறுபங் கதிக சுகமுடையவர்கள்.

(5) கற்பத்தின் ஆதியிலேயே தேவத்தன்மையை யடைந்தவர்கள் ஆஜான தேவர்கள். இவர்கள் பிதிரர்களிலும் நூறுபங் கதிக சுகமுடையவர்கள்.

(6) இந்தக்கற்பத்தில் அசுவமேதாதி கருமங்களைச் செய்து மகத்பதத்தை யடைந்து ஆஜான தேவர்களால் சேவிக்கப்பட்டிருப்பவர்கள் கரும தேவர்கள். இவர்கள் ஆஜான தேவர்களிலும் நூறுபங் கதிக சுகமுடையவர்கள்.

(7) அஷ்டவசுக்கள், துவாதசாதித்தியர், ஏகாதசருத்திரர் இம்முப்பத்தொருவரும் முக்கிய தேவர்கள். இவர்கள் கருமதேவர்களிலும் நூறுபங் கதிக சுகமுடையவர்கள்.

(8) இவர்களிலும் இந்திரன் நூறுபங் கதிக சுகமுடையவன்.

(9) சகல தேவர்களுக்கும் குருவான பிருகஸ்பதி இந்திரனிலும் நூறுபங் கதிக சுகமுடையவர்.

(10) பிரஜாபதி பிருகஸ்பதியிலும் நூறுபங் கதிக சுகமுடையவர்.

(11) பிரம்மா பிரஜாபதியினும் நூறுபங் கதிக சுகமுடைய வர்.

ஒன்றற்கொன்று நூறுமடங் கதிகமாகவுடைய விப்பதினொருவ ராநந்தமும் தடையின்றிய வாநந்தமன்றெண்க.

(3) கிருதகிருத்தியத்துவம்.

சி: கிருதகிருத்தியத்துவம் எங்ஙனம் ?

கு: தத்துவஞான முண்டாகுவதற்குமுன் (அவித்தியா காலத்தில்) இஷ்டப்பிராப்தி அநிஷ்ட நிவிர்த்திக்காகச் செய்யத்தக்கவை உழவாதி, யக்ஞாதி, சிரவணாதி யென்பனவாம். இம்மையைக் குறித்து உழவாதியும், மறுமையைக் குறித்து யக்ஞாதியும், மோக்ஷத்தைக் குறித்துச் சிரவணாதியும் தத்துவஞானமுண்டாய பிறகு ஞானி செய்தலின்றாம்.

விபரம் வருமாறு:—

(1) குடும்ப புத்தியும் போகவிச்சையு மின்மையின் உழவாதிகள் செய்தலின்றாம்.

(2) சாளரத்தின்வழியுட் புகுந்த சூரிய கிரணத்திற்றோற்றும் பரமாணுக்கள் வெளியிலுள்ள பிரகாசத்திற் றோன்றுவாறு போன்று அஞ்ஞானிக்கு விஷயமாங்கர்மாதிகள் தன்னிடத்து விஷயமாகையால் யக்ஞாதிகள் செய்தலின்றாம்.

(3) கண்ட பூஷணநியாயம் போன்று ஆத்மா சுபாவ சித்தமாயடையப்பட்டிருத்தலின் சிரவணாதிகள் செய்யப்பட்டனவேயாம். இம்மூவகைத் தொழிலும் ஞானி செய்யத்தக்க தன்றாயிருத்தலின் இதுவே தத்துவஞானத்தின் மூன்றாவது பயனான கிருதகிருத்தியத்துவமாம். கிருதகிருத்தியத்துவம் - செய்யவேண்டியயாவும் செய்து முடித்தமை. "ஆடவர் செய்தொழில் மூவகையாகு மவித்தை வசத்துறுநாள், ஏடணை மமதை யகந்தையு ளார்க்கே யிகபர விவகாரம், வீடணு குவமெனு மிச்சையு ளார்க்கே வித்தை படிப்பதெலாம், பாடன் மிகுந்தொழி லாற்பய னுண்டோ பரிபூரணமானால்".

என்று கைவல்லியநவநீதங் கூறுவதறிக.

(4) பிராப்தப்பிராப்பியத்துவம்.

சி: பிராப்தப் பிராப்பியத்துவம் எங்ஙனம் ?

கு: தான் குறித்ததோர் ஊரையடைய விருப்புள்ளவனுக்கு அவ்வூரை யடைந்த பின்னர் மீண்டும் அதனை யடையவேண்டுமெ ன்பது எங்ஙனமின்றோ அங்ஙனமே ஐகிய (இகலோகத்தைய) சுகம், பாரலௌகிக (பரலோகத்தைய) சுகம், சித்தசுத்தி, ஏகாக் கிர சித்தம், முமுட்சுத்துவம், குருபாதசேவை, சாஸ்திர சிரவ ணம், ஆத்மானாத்மா விவேகம், அஞ்ஞான நிவிர்த்தி, ஆத்மசாக்ஷா த்காரம், சம்சாரதுக்க நிவிர்த்தி, பரமாநந்தப் பிராப்தியாவும் தத் துவஞானோதயத்தின் பிறகு ஞானிக்கு அடையத்தக்கனவாகாது அடையப்பட்டனவாயே யிருத்தலின் தத்துவஞானத்தின் நான் காவது பயன் பிராப்தப் பிராப்தியத்துவமாமென்க. பிராப்தப் பிராப்தியும்-அடையவேண்டியயாவு மடைதல்.

சி: சுவாமி மேற்கூறிய துக்காபாவ முதலியவற்றிற்குரிய பிரமாணங்களையு மறிய விரும்புகின்றேன்.

கு: கீழ்வருவனவே.

அந்நபூர்ணோபநிஷத்.

அமமோऽஹம் ஜரோ நிராஶோ நிர்வாஸந: |
நிரம்ஶோऽஸ்மி சிதாகாஶ இதி ஜ்ஞாத்வா ந ஶோசதி ॥
அஹங்க்ருதி விரஹித: ஶுத்தோ புத்தோऽஜரோऽமர: |
ஶாந்தஸ்ஸம ஸமாபாஸ இதி ஜ்ஞாத்வா ந ஶோசதி ॥
த்ருணாக்ரேஷ்வம்பரே பாநௌ நரநாகாமரேஷு ச |
யத்திஷ்டதி ததேவாஹமிதி ஜ்ஞாத்வா ந ஶோசதி ॥

(இ-ள்.) நான்பற்றற்றவன், ஜரையற்றவன், ஆசையற்றவன், வாசனையற்றவன், அம்சமற்றவன், சிதாகாசமானவ னென்றறி ந்து துக்கப்படுகிறதில்லை. அகங்காரமில்லாதவன், சுத்தன், ஞானி, பிறப்பற்றவன், இறப்பற்றவன், சாந்தன், சமமுடையவன், எங் கும் ஒன்றாய் விளங்குகிறவனென்றறிந்து துக்கப்படுகிறதில்லை. திருணங்களின் நுனிகளிலேயும் ஆகாசத்திலேயும் சூரியனிலே யும் மனிதர்களிலேயும் நாகங்களிலேயும் தேவதைகளிலேயும் எவனிருக்கிறானோ அவனே நான் என்று அறிந்து துக்கப்படுகிற தில்லை.

ருத்ரஹ்ருதயோபநிஷத்.

சிதேகத்வ பரிஜ்ஞாநே ந ஶோசதி ந முஹ்யதி |
அத்வைதம் பரமாநந்தம் ஶிவம் யாதி து கேவலம் |
அதிஷ்டாநம் ஸமஸ்தஸ்ய ஜகத: ஸத்யசித்கநம் |
அஹமஸ்மீதி நிஶ்சித்ய வீதஶோகோ பவேந்முநி: ॥

(இ-ள்.) சித்தோன்றே யென்னும் ஞானத்தினாலே (ஞானி) சோகத்தையாவது மோகத்தையாவது அடைகிறதில்லை; அத்துவைத பரமானந்த சிவனை மாத்திரமே யடைகிறான். சகல ஜகத்திற்காதாரமாயும் சத்தியமாயு மிருக்கிற சித்கனம் நானாயிருக்கிறேனென்று நிச்சயித்து முனியானவன் சோகமற்றவனாகிறான்.

நாரதபரிவிராஜகோபநிஷத்.

[illegible]

(இ-ள்.) ஆத்மநிஷ்டையை யுடையவனாய்ச் சுபாசுப கருமங்களை வேருடனறுத்தவனாய் யாவற்றையும்விட்டுப் பூர்ணானந்தமாகிய ஒரே ஞானமுடையவனாய் அந்தப் பிரஹ்மம் நானே என்று பிரஹ்மப் பிரணவத்தை ஸ்மரித்துக்கொண்டு பிரமரகீட ஞாயமாக மூன்றுசரீரங்களையும்விட்டுச் சந்நியாசத்தோடு எவன்தேகத்தை விடுகிறானோ அவன் செய்யவேண்டிய யாவுஞ் செய்தவனாகிறான்.

மண்டலப்பிராமணோபநிஷத்.

[illegible]

(இ-ள்.) பிரபஞ்சவாசனையற்றவனாய்ச் சர்வத்தையும் ஆத்மாவாகப் பார்க்கிறவனாய் அகங்காரத்தைத் தள்ளினவனாய் நானே பிரஹ்மமென்று சிந்தித்துக்கொண்டு இந்தப் பிரபஞ்சமெல்லாம் ஆத்மாவென்று பாவிக்கிறவன் கிருதகிருத்தியமடைகிறான்.

ரிபுகீதை.

பேதமுறும் பிராரத்தந் தொலைந்த பின்னர்ப் பிரிவற்ற பரப்பிரம மாத்ர மாகி, யேதுமொரு விகற்பமுமே யின்றியென்று மேகபரி பூரணமா யிருப்போனாவேன், சீதளமாஞ் சற்குருவே நானிப்போது செய்வதெலாஞ் செய்துமுடித் தவனே யானே, னேதெனினின் கருணையினா லெளிதே யாக வேகபர ஞானத்தை யிசைந்தே னன்றே.

பிரமகீதை.

மத்தமு றும்பிற விப்பகை மாறு
முத்தியு முன்னிலை யாமுடி வில்லா
வெத்துய ருங்கெடு மின்பம தாகு
மத்துவி தத்தை யறிந்தவ ருக்கே.

சச்சிதா நந்த மாகியெபான் றும்பரப் பிரமம்
புச்ச மென்றுரைத் திடப்படு மிரகமப் பொருளே
இச்சதா நந்த மெய்திய யாவ னெவ்விடத்துந்
துச்ச வாக்கையின் றுயரறுத் தவன்சுகம் பெறுமால்.

வேதிய ரரசர் விண்ணவர் மிகவும் விரும்பிய வுலகுகள் சகல, பூதமும் போக போக்கிய மாகும் பொருள்களும் பொருள்களின் பெர்ருட்டுக், காதல்செய் கின்றா னல்லனெப் படியுங் காதல்செய் வதுதனைக் காமித், தாதலால் விருப்பந் தன்னொடா தலிற்று னிர திச யானந்த மாகும்.



## ருஉ - வது சம்வாதம்.

விதேகமுத்தியை விளங்கக் கூறல்.

சி: நிர்விகற்பசமாதி பூரணமாகச் சித்தித்தலாலுண்டாகிய சீவன்முக்தி யுடையவனுக்குச் சீவன்முத்தியின்பின்ன ரடைய தக்கது யாது?

கு: விதேகமுத்தியாம்.

சி: விதேகமுத்தியென்பது யாது?

கு: தேகாதிப் பிரபஞ்சம் பொய்யாகவேனுந் தோற்றுதலி ன்றி (முற்றுமின்றி)ப் பிரஹ்மசொரூபமாக நிலைத்தலாம். அஃதா வது ஸ்தூல சூக்கும காரண மென்னும் மூன்று தேகமும் நீங்கிப் போதலாம்.

சி: சீவப்பிரஹ்மவைக்கிய திட ஞானத்தாலே அவித்தையும் அதன் காரியமான தேகாதிப்பிரபஞ்சமும் நீங்கிப் போவதாயிரு க்க இடையில் சீவன்முத்தியென்பதொன் றுண்டெனக் கூறுவ தெங்ஙனம்பொருந்தும்?

கு: இரச்சுசர்ப்பப்பிராந்தி நீங்கியதன்பின்னர்ச் சிறிது நேரம் அப்பிராந்தியின் காரியமான பய கம்பனாதிகளிருத்தல்

போன்று தத்துவ ஞானத்தால் அஞ்ஞானங் கெட்டதன் பின்னரும் அதன் காரியமான தேகாதிப் பிரபஞ்சம் பிராரத்தமுள்ளவரை தோற்றிக்கொண் டிருக்கின்றது. அங்ஙனம் தோற்றிக்கொண்டிருக்கும் நிலைதான் சீவன்முத்தியெனப்படுகின்றது. அங்ஙன மின்றித் தத்துவ ஞானோற்பத்தி காலத்திலேயே அஞ்ஞானமேயன்றி யதன் காரியமுங் கெடுமாயின் பிரவித்தியா சம்பிரதாயமின்றிப்போம். அங்ஙனம் போமாயின் "பரமேசுவரனால் பிரமனும், பிரமனால் பிரஜாபதியும், பிரஜாபதியால் மனுவும், மனுவால் சகலரும் (தத்துவஞானத்தை) அறிந்தார்க"ளென்று பிரமவித்தியாசம்பிரதாயத்தைக் கூறும் சாந்தோக்கிய சுருதிக்கு விரோதமாம். அஞ்ஞானத்தின் ஆவரணாம்சம் தத்துவஞானத்தினாலும், விட்சேபாம்சம பிராரத்தம் ஒழிவதாலும் நிவிர்த்தியாவனவாயிருத்தலின், சீவன்முத்தியும் விதேகமுத்தியும் கிரமமாக உண்டென வறிதற்பாற்றாம். உபாதியென்பது சிறிதுமின்றிப் பிரஹ்மவடிவமாகவே நிலைத்தல் விதேகமுத்தியாயிருத்தலின், விதேகமுத்தியின்பின்ன ரடையத்தக்க தொன்றுமின்றாம். தெளிந்த நீருள்ள குளத்தின் கரையிலிருப்பவன் தான் அக்குளஜலத்தில் அதோமுகமாகித் தோன்றுவது மித்தையென் றுணர்ந்தகாலத்தும் அவனுக்கு அவ்வதோமுகம் தோன்றுவதுபோன்று, தத்துவஞானத்தினால் அவித்யா சம்பந்தமான சீவத்துவ முதலியபாவும் மித்தை; தான் பிரத்தியகபின்ன பிரஹ்மமென்று விவேகியறிந்தகாலத்தும் அவனுக்கு அவை (கானனீர்போலத்) தோற்றிக்கொண்டிருக்கின்றன. அதனால் அவனுக்கொரு கெடுதியுமின்று. இங்ஙனம் தோற்றிக்கொண்டிருக்கும் நிலையே சீவன்முத்தியாம்; நீர் வற்றியகாலத்து அவ்வதோமுகம் தோற்றாமை போன்று விட்சேபம் நீங்கிய காலத்துத் தேகாதிப் பிரபஞ்சம் தோற்றாதொழிவது விதேகமுத்தியாம். இதனால் யாதோருபாதித்தோற்றமுமின்றித் தான்மாத்திரமிருத்தல் விதேகமுத்தி யென்பது பெறப்பட்டது. "ஞானியின் சரீரத் தியாகத்தில் காலதேச ஆசனாதி விசேஷங்களின் அபேட்சையில்லை; அவன் தேகம் உத்தராயணத்தில் விழுமாயினும் வீழ்க; அல்லது தட்சிணாயனத்தில் விழுமாயினும் வீழ்க; காசிமுதலிய புனித தேசத்தில் விழுமாயினும் வீழ்க; அத்தியந்த மலினதேசத்தில் விழுமாயினும் வீழ்க; சவாசனத்தினின்று விழுமாயினும் வீழ்க; சித்தாசனத்தினின்று விழுமாயினும் வீழ்க; சாவதானமாகப் பிரஹ்ம சிந்தனை செய்துகொண்டு வீழினும்

வீழ்க; ரோகவியாகூலத்தால் ஆ! ஆ!! என்று புலம்பிக்கொண்டு வீழினும் வீழ்க; சர்வதா அவன் முத்தனும்; ஏனெனின், எக்காலத்தில் தத்துவஞானத்தினல் அஞ்ஞானம் நிவிர்த்தியாயிற்ரோ அக்காலத்திலேயே ஞானி முத்தனும்; அதனுல் ஞானிக்குத் தேகவியோகத்தில் தேசகாலாதிகளின் அபேட்சையில்லை. எங்ஙனம், ஞானிக்குத் தேகவியோகத்தில் தேசகாலாதிகளின் அபேட்சையில்லையோ அங்ஙனமே ஞானநிமித்தமான சிரவணத்திலும் தேசகாலாதிகளின் அபேட்சையில்லை. உபாசகர்களுக்குத் தேசகாலாதிகளின் அபேட்சையுண்டு. பீஷ்மாசாரி முதலியோர் ஞானிகளாகச் சொல்லப்படுகின்றனர். பீஷ்மாசாரி உத்தராயணமன்றிப் பிராணத்தியாகஞ் செய்யவில்லை. அங்ஙனமாயினும் பீஷ்மாதியர் அதிகாரிபுருஷர்களாதலின், உபாசகர்களின் உபதேசநிமித்தம் அவர்கள் காலவிசேஷத்தை யபேட்சித்தனர்" என்பதிங்கவசிய மறியத்தக்கதாம்.

---

## ருஅ - வது சம்வாதம்.

சரீரம் பிணவியலாகாமையே சாயுச்சியமன்றெனல்.

சி: சிலர் ஞானியரது சரீரம் பிணமாய் விழாதென்று கூறுவதென்னை?

கு: எத்தகைய சரீரமும் பிணமாய் விழுமென்பது நியமமாயிருத்தலின் ஞானியரது சரீரம் பிணமாய் விழாதென்பது பொருந்துமாறுடையதன்றாம். "அனித்த மான குடும்பத் தபத்தமுணர்கின் றிலையென்,சனித்த பொழுதே மரித்தல் சற்றுந் தப்பாகண்டாய்" என்று வாசிட்டமும், "அரியமெய்ஞ் ஞானத் தியாலவித்தையா முடனீ றுகும், பெரியதூ லுங்கா லத்தாற் பிணமாகி விழும்" என்று கைவல்லிய நவநீதமும் கூறுவதாலும் இது நன்கு விளங்கும்.

இதயபந்த முறுமையே (வேறுரூப மாவதற்கு இச்சியாமையே) ஞானியின் இலக்கணமா யிருத்தலின் தூலதேகம் விழாமற்போவதே ஞானியின் இலக்கணமாகாது. தூலதேகம் விழாமற்போவதேஞானியின் இலக்கணமாயின், விதேகமுத்தியென்பதொன்றில்லாமற் போதல்வேண்டும்; ஜனகர்,ஜடபரதர்,யாஞ்ஞவல்கியராதியோர் விதேகமுத்திபெற்றனரென (உலகவழக்கு, நூல்வழக்கு என்னும்) இருவகை வழக்கில் நிகழ்தலுங் கூடாது.

சி: அங்ஙனமாயின், குமாரதேவர் சுத்தசாதகத்தில் "மேலொரு வடிவை யெடுத்ததே யாகின் மேவுமிவ் வுடலிங்கே வீழும், மேலொரு வடிவை யெடுத்ததின் றாகின் மேவுமிவ் வுடலிங்கே வீழா, மேலொரு சிவத்தைச் சீவன்சென் றடையு மேவுமிவ் வுடலிங்குத் தானே, மேலொரு சிவத்தின் வடிவதா மருளாய் வெளியதா யுலகுகண் டிடவே" என்றும், "சூக்கும மதனி னின்று முன் வினையிற் றூலமே கமுமுள தாகுஞ், சூக்குமந் தனது காரண மடையத் தூலமுஞ் சூக்குமத் தடையும், சூக்குமந் தனது காரண மடையத் தூலமிங் ககன்றதே யென்றாற், சூக்குமந் தனது காரணம் விடுத்துத் தூலமொன் றெடுத்ததென் றுணர்வாய்" என்றும் கூறியிருத்தற்குத் தாற்பரிய மென்னை?

கு: குமாரதேவர் "உவக்கும் வீடே யெவ்வளவிற் றூலக நடையே யுயர்ந்தது" என்று கருதியிருக்குந் தேகாத்மப் பிராந்தி யுள்ளவர்கள் உய்யுநெறிகண் டுய்வதற்காகத் தேகம் பிணமாக விழாதிருத்தலே முத்தியென்று கூறி யருளினர்! தேகம் பிணமாக விழாதிருத்தலே முத்தி யென்பது அவரது சித்தாந்தமன்று. அப்பெரியார்:

"உண்டாய்த் தோன்றி ரமித்திடுத லொருநம் வடிவே யுருநாமம்
கண்டே யிடன்மாத் திரமல்லாற் கருதிப் பார்க்கின் வேறில்லை
பண்டே முதலித் தகவாகும் பலவாய்க் காணன் மைத்திரிபால்
விண்டாற் றிரிவை யேகமாய் விளங்கு நமது வடிவமே."

"முத்தி யாதோ வெனவெண்ணி முயங்க வேண்டா மிஃதறுதி
முத்தி யுளதேற் பந்தமுண்டா முத்தி யொருகா லையுமில்லை
முத்தி தானுஞ் சகம்வேறின் மோக மதிற்காண் பதைப்போக்கின்
முத்தி யாகு மிங்கிலையை முயன்று வருந்தி நிலைகொள்வாய்."

"தன்னை மறைத்த பந்தமதைத் தள்ளி நீக்கிற் றன்விளங்குந்
தன்னை மறந்ததே பந்தந் தன்னை யறிந்ததே முத்தி."

"தன்னை மறைத்த பந்தமதைத் தள்ளி நீக்கித் தனையறியின்
தன்னை விடவோர் பொருளு மின்றித் தானே தானாய் விளங்கியிடும்
தன்னை யறியு மவ்வளமுந் தன்னை விடவே றிலையென்றே
தன்னை நோக்கி யொருநினைவாய்ச் சாதித்திடவே மிகவேண்டும்."

என்று அத்துவித வுண்மையிற் கூறுதலால் அது செவ்வனே விளங்கும்.

### நைஷ்கர்மியசித்தி.

𑌯𑌯𑌾𑌯𑌯𑌾 𑌭𑌵𑍇𑌤𑍍𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌵𑍍𑌯𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌨𑌿|
𑌸𑌾𑌸𑍈𑌵𑌪𑍍𑌰𑌕𑍍𑌰𑌿𑌯𑍇𑌹𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌾𑌧𑍍𑌵𑍀𑌸𑌾𑌚𑌾𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ||

(இ-ள்.) புருஷர்களுக்குள் எந்தெந்தப் பிரக்கிரியைகளால் பிரத்தியகாதமவிஷயத்தில் ஒருவனுக்குப் போதமுண்டாமோ அந்தந்தப் பிரக்கிரியைகளே இங்கு (வேதாந்தசித்தாந்தத்தில்) சிரேஷ்டமாம்; அதுவே வியவஸ்தையாம்.

என்றற் றொடக்கத்துப் பிரமாணங்களை மேற்கொண்டு குமாரதேவர் தேகாத்மப் பிராந்தியுள்ளவர்க்குத் தேகத்திலுவர்ப்புத் தோன்றுமைப்பற்றி அவர்களுக் கதுவாயிலாகவே போதமுண்டாமாறு 'சூக்குமந் தனது காரண மடையத் தூலமிங் ககன்றதே யென்றால், சூக்குமந் தனது காரணம் விடுத்துத் தூலமொன் றெடுத்தென் றுணர்வாய்'' என்று கூறியதந்திரத்தை யறியாது சிலர் தேகம் பிணமாக விழாதிருந்தலே முத்தியென்று மயங்கிக் கெடுகின்றனர். குமாரதேவர் தேகாத்மப்பிராந்தியுள்ளவர்களுக்கு இலகுவாய் ஜீவப்பிரஹ்ம வைக்கியஞான முதயமாம்படி தேகம் பிணமாய்விழாதிருந்தலே முத்தியென்று ஸ்துதியர்த்தவாதமாய்க் கூறினாராகலின், அவர்க்கது தாற்பரிய மன்றாம். அவர்க்கதுவே தாற்பரியமாயின் அது சுருதி விரோதமாம். சுருதி விரோதமாகக் கூறுதல் வைதிகரியாவர்க்கு முடன்பாடன்றென்பது மிகு பிரசித்தம்.

### தேஜோபிந்தூபநிஷத்.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌹𑌂 𑌚𑌿𑌦𑍇𑌵𑌾𑌹 𑌮𑍇𑌵𑌂𑌵𑌾𑌪𑌿 𑌨𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯
𑌤𑍇| 𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑍈𑌵 𑌯𑌸𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑍇𑌦𑍍𑌵𑌿𑌦𑍇𑌹𑌮𑍁𑌕𑍍𑌤 𑌏𑌵𑌸𑌃|.
𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌞𑍍𑌚 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌂| 𑌆𑌨𑌨𑍍𑌦
𑌭𑌰𑌿𑌤𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑍋 𑌵𑌿𑌦𑍇𑌹𑌮𑍁𑌕𑍍𑌤 𑌏𑌵𑌸𑌃||

(இ - ள்.) 'பிரஹ்மமே நான்' 'சித்தேநான்' என்னும் சிந்தனையும்விட்டு எவன் சித்தாகவேயிருக்கிறானோ அவன் விதேகமுக்தனே. (பிரமமே நான என்னும) நிச்சயத்தையும் நான் பிரஹ்மமாக விருக்கிறேனென்னும் நிச்சயத்தையும்விட்டுப் பூர்ணானந்தமா யிருக்கிறவனெவனோ அவன் விதேகமுக்தனே.

### பைங்களோபநிஷத்.

𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧 [illegible] 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌤𑌿|
[illegible] 𑌨𑌿𑌕𑍇𑌤𑌨𑌃| [illegible]

[illegible]

(இ-ள்.) பிராரப்தகருமம் முடிகிறவரை பாம்பானது கழற்றி விட்ட தன்சட்டையில் அபிமானமற்றிருக்கிறதுபோலத் தேகத்தில் அபிமானமற்று வியவகரிக்கிறான். இப்படிப்பட்ட தேகத்தை யுடைய முக்தனானவன் இருப்பிட மில்லாதவனாய்ச் சந்திரனைப் போலச் (சந்திரன் தன் சஞ்சாரத்தினால் ஒருவருக்குந் துன்பமின்றிச் சந்தோஷத்தை யுண்டாக்கிக்கொண்டிருக்கிறதுபோலச்) சஞ்சரிக்கிறான். தீர்த்தங் (புண்ணியநதிகள் அல்லது புண்ணிய க்ஷேத்திரங்) களிலாவது சண்டாளன் வீட்டிலாவது (இன்ன விடத்துத் தேகத்தைவிட வேண்டுமென்னும் நியமமற்றவனாய்) சரீரத்தைவிட்டுக் கைவல்லியத்தை (மோட்சத்தை) யடைகிறான். அந்த (ஜீவன்முக்தன் விட்டுவிட்ட) சரீரத்தை (பார்த்தவர்கள்) திக்பலி கொடுக்கவேண்டும்; அல்லது புதைக்கவேண்டும். புருஷனுக்கு (ஞானிக்கு)த்தான் சந்நியாசஞ் சொல்லப்பட்டிருக்கிறது; மற்றவர்களுக்கன்று. பிரஹ்மசொரூபமாயிருக்கிற சந்நியாசிநிமித்தம் ஆசௌசமும் (அந்தச் சந்நியாசி யிறந்ததினால் சாத்தீட்டு) இல்லை; அக்கினி காரியமுமில்லை (அவன் தேகத்தை அக்கினியா லெரிக்க வேண்டியதில்லை; அல்லது அந்தப் பிரேத விஷயமாய் அக்கினியில்ஹோமமுதலியனவுமில்லை); பிண்டமுமில்லை; உதகக்கிரியையு(ஜலத்தினாற் செய்யவேண்டிய தர்ப்பணம் முதலியன)மில்லை; பார்வணாதிகளு (மாசிகம் சிராத்தம் முதலியன) மில்லை. வெந்தனதை யெங்ஙனம் மீண்டும் வேகவைக்கிறதில்லையோ அங்ஙனமே யெரிந்துபோனதை மீண்டும் எரிக்கிறதென்பதில்லை. (அந்த முக்தனது தேகமானது ஞானாக்கினியாலே எரிக்கப்பட்டதாகையால் அதனை மறுபடியும் எரிக்க வேண்டிய தில்லையென்பது கருத்து.) ஞானாக்கினியினா லெரிக்கப்பட்டுப்போன தேகத்தை யுடையவனுக்குச் சிராத்தமு மில்லை; (அபரக்) கிரியையுமில்லை.

[illegible]

(இ - ள்.) ஜீவன் முக்த தசையை விட்டுக் காற்று அசைவற்ற தன்மையை யடைவது போன்று அதேக (விதேக அல்லது இனித் தேகமடையாததாகிய) முத்தியை யடைகிறான்.

𑌯𑌤𑍍𑌰 𑌯𑌤𑍍𑌰 𑌮𑍃𑌤𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌕𑍇𑌨 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌨𑌾 ।
𑌯𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌲𑌯𑌂 𑌗𑌤𑌃 ।
𑌘𑌟𑌾𑌕𑌾𑌶 𑌇𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌵𑌿𑌲𑌯𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 ॥

(இ-ள்.) ஞானியானவன் எங்கெந்த விடங்களில் எவ்வெவ் விதமாய் மரணமடைந்தாலும் எங்கும் பரவிய ஆகாயம்போல் அந்தந்த விடங்களிலேயே லயமடைகிறான். வாஸ்தவமாய்க் கடாகாசம்போல் ஆன்மாவானது லயமடைகிறதாக வறியத்தக்கது.

மஹோபநிஷத்.

𑌜𑍀𑌵𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤 𑌪𑌦𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌦𑍇𑌹𑍇 𑌕𑌾𑌲𑌸𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑍇 ।
𑌵𑌿𑌶𑌤𑍍𑌯𑌦𑍇𑌹 𑌮𑍁𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑌂 𑌪𑌵𑌨𑍋𑌽𑌸𑍍𑌪𑌨𑍍𑌦𑌤𑌾𑌮𑌿𑌵 ।
𑌵𑌿𑌦𑍇𑌹 𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌨𑍋𑌦𑍇𑌤𑌿 𑌨𑌾𑌸𑍍𑌤𑌮𑍇𑌤𑌿 𑌨𑌶𑌾𑌮𑍍𑌯𑌤𑌿 ॥

(இ - ள்.) ஜீவன்முக்த பதத்தி லிருக்கிறவன் தன்தேகமானது காலத்திற்குச் சுவாதீனமாகும்போது ஜீவன்முக்த பதத்தை விட்டு வாயுவானது அசைவற்றிருந்த தெப்படியோ அப்படியே தேகமில்லாத முக்தியை யடைகிறான். இங்ஙனம் விதேக முக்தியை யடைந்தவன் பிறக்கிறது மில்லை; இறக்கிறதுமில்லை; சுவரூபத்திற் குறைவடைகிறது மில்லை.

என்று சுருதி கூறுவதால் வைதிக சிரோமணியாய் விளங்கிய குமாரதேவர் சுருதியோடு முரண்பட்டு விதேக முத்தியை யங்கீகரிக்க வில்லையென்று கூறுதல் ஒப்பத்தக்க தன்றாம். ஞானி வார்த்தை சுருதி விரோதமா யிராதென்பது சிதையாத சித்தாந்தமா யிருத்தலின், தேகம் பிணமாக வீழாதிருத்தலே முத்தியெனத் தீர்மானமாகக் கூறினாரென்று அவர் கருத்தறியாது கூறுதல் அபசித்தாந்தமாம். தேகம் பிணமாக வீழாதிருத்தலே முத்தியென்று கூறுந் தேகாத்மப் பிராந்தியாளர் கீழ்வரும் பிரமாணங்களையுங் கவனித்துய்க.

ஞானவாசிட்டம்.

பற்று முனிவு பயஞ்சுகங்கள் பயிலா னெனினும் பயின்றிடினுஞ்
சொற்ற வெவர்க்கும் பிரமேயந் தொடரா னெனினு நன்பாலர்
பெற்ற பிரமே யத்துறினும் பெரிய மனத்தோன் காசியிற்சா
வுற்றபொழுது நாய்க்கெரிப்போருழைச்சா வுறினுமுறும்பதங்கேள்.

ஞான மடைந்த பொழுதிலிவ னல்வீ டுற்றான் மனமிறந்தோ
னீன மான தேகபாவப் பிராந்தி யன்றோ விடர்பந்த
மான வீடா வதுமடமை யந்த காரங் கெடலன்றோ
மான மிகுந்த விவனெய்தின் மனிதர் பூசை செயவேண்டும்.

சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரு
மந்தமி லின்ப வருள்பெறு வாரே.

பிரபுலிங்கலீலை.

அழிவி லானை யழிந்தன னென்றுநீ
விழியி னுன்மிக வெள்ளம் பெருக்கினை
கழிவி லாதவா காயங் கழிந்ததென்
றொழிவி லாம லுளமெலி வார்கள்போல்.

சச்சிதா நந்த சங்கர னாகவே
யச்ச நீங்குபு தன்னை யறிந்தவன்
அச்ச மாந்துயர்த் தோன்மலி யாக்கையை
யிச்சி யானதை யானென வெண்ணியே.

ஒண்ட ரைக்கண் ணொருவி லருளுருக்
கொண்ட டுத்த குருவரு ளாற்றனைக்
கண்ட மெய்த்தவன் காயந் தனைபன
முண்ட நெட்டிலை பொய்ப்ப விடுப்பனால்.

திருக்குறள்.

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

நீதிநெறிவிளக்கம்.

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும் - விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
களியார் சுமைபோடு தற்கு.

சி: அங்ஙனமாயின், முத்தியிலேயுந் தேகம்பெறும் மூவகைச் சித்திகளுள. அவை உருவச் சித்தி, அருவச் சித்தி, உருவருவச் சித்தி யென்பனவாம் என்று கூறுவதற்கு விடையாது?

கு: தேகமுள்ள விடத்துத் துக்கநிகழ்ச்சி யுளதென்பது ஒருதலையா யிருத்தலின், தேகமுள்ளமுத்தி பதவிமுத்தியாமே யன்றிப் பரமுத்தி யாகாது. தருவானையும் பெறுவானையு முள்ள முத்தி பதவிமுத்தியாம். தருவானும் பெறுவானு மின்றித் தானே தானாய் விளங்குமநிலை பரமுத்தியாம். தருவானும் பெறுவானுமா யுள்ள பதவிமுத்தி துவிதநிலையா யிருத்தலின், அஃதுண்மையில் துக்க வடிவமேயாம்.

சிவபுராணம் ஞானசங்கிதையில்.

ஜ்ஞாநம் ச தேஹநாஶோ நாஸ்த்யந்யஸ்ய ஸம்பவோ ந: ।
தஸ்மாந்நைவ ஸதேஹஸ்ய முக்திஶப்த: ப்ரயுஜ்யதே ॥

(இ - ள்.) துவித விஷயமான புத்திபேதம் அஞ்ஞானமாம் (அவித்தையினாலாகியதாம்). அன்னியத்திற்கு(ஜகத்விலட்சணமாய பிரஹ்மத்திற்கு) இரண்டாவதில்லை. தரிசனங்க (வைசேஷிகாதி சாஸ்திரங்க) ளெல்லாவற்றிலும் காணப்படுகிற துவிதமதபுத்தி பேதம் அவித்தையினாலாகியதாம்.

என்றும்,

சூதசங்கிதை வேதவிரோதமுரைத்த அத்தியாயத்தில்

"துவிதப் பிரபஞ்சங் காணப்பட லானுங், குறையாய்ப் பரத்தா ரோபிதமாய்க் குலவலானுங் கற்பிதமே"

என்றும் கூறுதலால் பதவிமுத்தி கற்பிதநிலையாமெனப் பொருந்தலையாம். தாயுமானவர் "முத்தியிலுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றே, ரெத்தனையே ரென்றுரைப்ப தெந்தாய் பராபரமே" என்று கூறிய மூவித சித்தியாகியமுத்தி பதவிமுத்தியேயன்றிப் பரமுத்தியன்று. "போத மென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய் யிருளாந், தீதி லாவிளக் கெடுத்திரு ளேடவுஞ் சிக்கா, தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை, பேத மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்" என்னுஞ் செய்யுளில் திரிபுடியற்றுத் தானே தானாய் விளங்கும் நிலையே பரமுத்திநிலையென்று சுருதி விளம்புமென்று அப்பெரியார் கூறுதலறிக. சுருதி விரோதமாகக் கூறல் வைதிகர்க்குடன்பாடன்மையின் உருவச் சித்தி முதலியவற்றைப் பரமுத்தியெனக் கூறுவது அவைதிகக் கூற்றாம். உலகத்தாருய்யும்பொருட்டு அவ்வக்காலதேச நிமித்தங்களுக்கேற்பக் காமியத்தவமுமுடைய பெரியார்காட்டிய வொவ்வோ ரற்புதங்களையே பரமுத்தி நிலையெனப் பிறழ்ந்தறிந்து சுந்தரமூர்த்திசுவாமிகள் உடலோடு கைலைக்கெழுந்தருளியதையுருவச்சித்தியென்றும், மாணிக்கவாசகசுவாமிகள் சிற்சபையிற் சோதிவடிவாய் மறைந்ததை அருவச்சித்தியென்றும், அப்பர்சுவாமிகள் சிவலிங்கத்துட் கலந்ததையும் பட்டினத்தடிகள் சிவலிங்கமாயதையும் உருவருவச் சித்தியென்றும் கூறுவர். இவையாவும் அற்புதமேயாதலின் அவை யாவும் பரமுத்தியாகா. மேலும், அது பரமுத்தி நிரதிசய வடிவமென்று கூறுதற்கும் விரோதமாம். (நிர்—இன்மை, அதிசயம்—விசேஷம்.) விசேஷமின்றிய பரமுத்தி நிலையில் உருவச் சித்தி முதலிய விசேஷங்களைக் கற்பித்துக் கூறுதல் எவ்வாற்றானும் பொருந்தாது. உருவச்சித்தி முதலியன சவிசேஷ முத்தியெனின் ஒவ்வும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலியோர் "ஏட்டினறி வின்றியிறை தன்னிலறி வின்றியிவ் வுடம்பினுடனே யீட்டி" னுறைந்தாராகலின் அவர்கள் பெற்றமுத்தி பரமுத்தியே யாமன்றிப் பதவிமுத்தியன்றாம். ஞானி யாண்டிருப்பினும் துவந்துவமற் றிருப்பனென்பதீண்டறியத்தக்கதாம். சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தா

றிய பரமுத்தியின்கண் பேதசம்ஸ்காரத்தின் மிகுதிப் பாட்டால் பேதங்கற்பித்து உருவச்சித்தி முதலியன வுண்டெனக் கூறுவோர் விதேகமுத்தி யெய்தினவரை யெல்லா மிகழ்வா ராயினர் பாவம்!!! சர்வதுக்கநிவிர்த்தியும் பரமாநந்தப்பிராப்தியுமான பரமுத்தியின் சொரூபத்தை நல்லாசிரியர்மாட்டுக் கேட்டேனு மறியாதவரே பரமுத்தியின்கண் உருவச்சித்தி முதலியபேதங் கூறுவரென்க.

மேலும், தேகம் பிணவியலாக விழாமையே பரமுத்தியென்பார் ஜீவனோடு கூடிய ஒவ்வொரு சரீரத்திற்கும் நரை, திரை, மூப்பு முதலியவை யுண்டாக வேண்டுங்காலத்து அத்தியாவசியமாயுண்டாதலைச் சிறிதேனுங் கூர்ந்தறி கின்றிலர்போலும்!!!

யாது உற்பத்தியுடையது அது நாசமுடையது என்பது நியமமாதலின் தோன்றிய சரீரம் அத்தியாவசிய மழியுமென்பது ஒருதலையாம்.

மறைந்துள்ள நெருப்பைத் தெரிவிப்பதற்குப் புகை சிறந்த குறியா யிருத்தல் போன்று பின்வரும் மரணத்தைக் காண்பிப்பதற்கு நரை, திரை முதலியன சிறந்த குறியாயிருக்கின்றன. ஆகவே, எவ்வகைச் சரீரமும் காலத்தாற் பிணமாதல் சிதையாத சித்தாந்தமாம். சரீரம் பிணவியலாக விழாமையே முத்தியாயின் அச்சரீரத்திற்கு நரை, திரை, மூப்பாதி யுண்டாகா திருத்தல்வேண்டும்; உண்டாதலின், அது பொருந்தாது.

உருவச் சித்தியென்பது எடுத்ததேகம் பிணமாகாம லிருப்பதன்றோ ? அஃதெங்ஙனம் பிணமாகாமற்போம் ? கயிலைக்குச் சென்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளது உருவ (தேக)ம், சர்வ சம்மாரகாலத்திற் பிணமாகாமற் போமோ? அவசியம் பிணமாகுமன்றோ? அதனை எப்படி முத்தியென லொவ்வும்?

அருவச்சித்தி, உருவருவச்சித்தி என்பன உடலுக்கா? உயிருக்கா? உயிர் (சேதனம்) சட்பாவ விகாரமற்றதாகலின் அதற்கோர் திரிபு எக்காலத்துமின்றாம். உடலுக்கெனின் ஆரம்பமாகவா? பரிணமமாகவா? விவர்த்தமாகவா?

I பல்அவயவங்களோடுகூடிய பலபொருள்கள் பலஅவயவங்களோடு கூடிய ஒரு காரியத்திற்குக் காரணமாயிருப்பது ஆரம்ப உபாதான காரணமாம். சரீரம பல அவயங்களோடுகூடிய ஒரு பொருளாயிருத்தலின் அஃது அருவச்சித்தி, உருவருவச்சித்தியெனனுங் காரியத்திற்கு அக்காரணமாக மாட்டாது.

II எது தனது நிலையைவிட்டு வேறுநிலையை அடைவதற்குக் காரணமாயிருக்கிறதோ அது பரிணாம வுபாதான காரணமாம். அருவச்சித்தி, உருவருவச்சித்தி என்னும் காரியத்திற்குத் தேகம்

பரிணாமவுபாதான காரணமாயின் அப்போது தேகமேயில்லா தொழிதல்வேண்டும்.

III எது தனதுசொரூபத்தைவிடாது வேறுசொரூபத்தைக் காட்டுவதற்குக் காரணமாயிருக்கிறதோ அது விவர்த்த உபாதானகாரணமாம். தேகம் தனது சொரூபத்தை விடாது அருவச்சித்தி உருவருவச்சித்தி யென்னும் வேறு சொரூபத்தைக் காட்டுகின்றதெனின் அப்போது அவ்விரண்டும் (கயிற்றரவுபோன்று) மித்தையாம்.

மேலும், காரியமெல்லாம் அநித்தியமா யிருத்தலின் உருவச்சித்தி முதலிய காரியங்களும் அநித்தியமாம். மோக்ஷம் நித்தியமென்பது வேதசம்மத மாதலின் உருவச்சித்தி முதலியவற்றை மோட்சமென்பார் வேதமார்க்கத்தினின்றும் விலகியவரேயாவர். அவர்களடையும் மோக்ஷமும் அநித்தியமேயாம்; அஃதாவது துக்கமேயாம்; அநித்தியம் ஒருகாலத்தில் நாசமுடையதா யிருத்தலின்.

பட்டினத்தடிகள், "பிறந்தன இறக்கும்" என்று கூறுவதால் சரீரம் பிணமாகாமை ஒரு காலத்தும் அமையாது.

சரீரம் பிணவியலாகாமையே முத்தியாயின், ததீசிமுனிவர், திருவள்ளுவ நாயனர், திருமூலர், சிவப்பிரகாசர், சொரூபானந்தர், சுந்தரராயர், குமரதேவர், தாயுமானவர், சிதம்பரசுவாமிகள், வேமன்னர், சச்சிதாநந்தசுவாமிகள் முதலிய பரமஞானிகள் மோக்ஷமடையாதவர்க ளாதல்வேண்டும்; அவர்கள் சரீரம் பிணவியலாயினமையின்,

"சித்தர் பொன்றுவர் தருவனுஞ் சிதைகுவன் சிவனயன் திருமாற்பன, றத்துவந்தனி லொன்றுவர் காலமுந் தருமமு முடிவாகும்" என்றும்,

"எனது தாதை முதலசுர ரெனது குலத்தோ ரெண்ணிறந்தோர், கனகமேரு வனுவென்னக் காயநிலைமை பெரிதுடையோர், வனசயோனி யதிகார மாற்ற வல்லோர் காவல்லோர், புனைவண்டுளவோ னனுங்கனலிற் பூளைவிபோற் போயொழிந்தார்.

என்றும், வாசிட்டங் கூறுவதிங் கவசிய மறியத் தக்கதாம்.

## ருச - வது சம்வாதம்.



தத்துவ ஞானத்தின்பலவ் ராபானுக்கிரகமாகாதெனல்.

சி: சிலர் அற்புதஞ் செய்பவரே ஞானியராவர்; ஏனையோ ராகாரெனக் கூறுவது யாதுபற்றி?

கு: அவ்வாறு கூறுதல் ஞானசாஸ்திர வாராய்ச்சி யின்மையாலேயாம்.

சி: அற்புதமாவது யாது?

கு: அற்புதமாவது நிகழ்த்தற்கரிய காரியங்களை நிகழ்த்தலாம். அது யோகாப்பியாசத்தினு லுண்டாகும் அணிமா முதலிய செல்வங்களாம்.

ஹடயோகப்பிரதீபிகை.

𑌇𑌦𑌂 𑌹𑌿 𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌦𑌶𑌕𑌂 𑌜𑌰𑌾𑌮𑌰𑌣𑌨𑌾𑌶𑌨𑌮𑍍 । 𑌆𑌦𑌿𑌨𑌾𑌥𑍋𑌦𑌿𑌤𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌷𑍍𑌟𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌕𑌮𑍍 । 𑌵𑌲𑍍𑌲𑌭𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌂 𑌮𑌰𑍁𑌤𑌾𑌮𑌪𑌿 । 𑌗𑍋𑌪𑌨𑍀𑌯𑌂 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑌨 𑌯𑌥𑌾 𑌰𑌤𑍍𑌨𑌕𑌰𑌣𑍍𑌡𑌕𑌮𑍍 । 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌨𑍍𑌨𑍈𑌵 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌸𑍁𑌰𑌤𑌂 𑌯𑌥𑌾 ॥

(இ-ள்.) இப்பத்து முத்திரைகளும் ஜராமரணங்களைப் போக்குகின்றவைகளாயும், ஆதிநாதரால் சொல்லப்பட்டவைகளாயும் திவ்விய (உத்தம)மாயும், அணிமாதியஷ்ட ஐசுவரியங்களைத் தருகின்றவைகளாயும், கபிலாதிசகல சித்தர்களுக்கும் பிரியமுள்ளனவாயும், தேவர்களாலும் அடைதற்கரியனவாயு மிருக்கின்றன. இவை இரத்தினங்களின் சிமிழைப்போல மிகுந்த பிரயத்தினத்தால் மறைத்துவைக்கத்தக்கனவாம்; குலஸ்திரீ சங்கமத்தைப் போல ஒருவருக்குஞ் சொல்லத்தக்கனவன்று.

[அணிமாதி யஷ்ட ஐசுவரியங்களாவன:—

அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவம் என்பனவாம்.

அவற்றுள்,(1)சங்கற்பமாத்திரத்தால் பிரகிருதியை(சுபாவத்தை)க் கெடுத்தலால் பரமாணுவைப்போலத் தேகம் சூட்சுமமாதல் அணிமா;(2)பிரகிருதியைப்பூரித்தலால்ஆகாயாதிகளைப்போலத் தேகம்பெரிதாதல் மகிமா;(3)மிகவும் இலகுத்துவமு(எண்மையு)டையனவாயிருக்கும் பஞ்சுமுதலியவை மலை முதலியவற்றைப் போலித் குருத்துவமு(திண்மையு)டையனவாதல்கரிமா;(4)மிகக்குருத்துவமுடைய பர்வதமுதலியவை பஞ்சுமுதலியவற்றைப்போல இலகுத்துவமுடையனவாதல் இலகிமா; (5)சகலமும்முன்னிற்றல் பிராப்தி; அது பூமியிலிருந்துகொண்டேவிரல்நுனியால் சந்திரனைத் தொடுத்தல்போலவாம்.(6)இச்சித்தபடிமுடித்தல் பிராகாமியம்; அது ஜலத்திற்போலப் பூமியிலும் முழுகி யெழும்புதல்முதலியனவாம்.(7)பூதபௌதிகங்களைச்சிருஷ்டித்தல்திதித்தல்சங்கரித்தலாகிய விசேஷசாமர்த்தியம்ஈசித்துவம்;(8)பூதபௌதிகங்களைச் சுவா

தினஞ்(வசம்)செய்தல் வசித்துவம்]என்று கூறுவதால் அது நன்கு விளங்கும். ஞானோற்பத்திக் கேது வைராக்கிய உபாதிகளாயிருத்தலின் (காமிய) யோகத்தினாலேயே ஞானமுண்டாமென்பது நியமமன்று. ஆதலால் ஞானிகளியாவரும் அற்புதஞ் செய்ய வேண்டுமென்பது பொருந்தாது.

சி: இதனை நன்கு விளக்கிக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: "எல்லா நாமே யெனவறிந்தா லெல்லாவற்றையும் நினைவா னினைத்திடுதல், சொல்லா லெல்லாவற்றையு முரைத்திடுத றொழிலா லெல்லாவற்றையுஞ் செய்திடுதல், இல்லா வுலகை வேறெனவே நினைத, லுரைத்த றொழில்புரிதல், நல்லா ரினைத்து நாமெனவே நாடா ரவையி னொன்றையுமே"

என்று குமாரதேவர் கூறுதலால் சிவப்பிரஹ்ம வைக்கியஞானத்தினால் சொரூபசுபாவமாயிருப்பவரே ஞானியாவரென்பது இனிது விளங்கும். இங்ஙனமாக ஞானசாஸ்திரவாராய்ச்சியின்றி அற்புதஞ் செய்பவரே ஞானியராவரென் றுரைப்பாருரை யொருபொருளாக மதிக்கத்தக்கதன்றாம். ஜனகர், மாபலி, பகீரதன், ஜடபரதர் முதலியோர்ஞானியராயிருந்தும் யாதோரற்புதமும் நிகழ்த்தவில்லை; நிகழ்த்தாமைபற்றி அவர்களை ஞானியரல்லவென் றுரைக்கலாமா?

யோகியர் யுஞ்ஞான யோகியென்றும் யுக்தயோகியென்றும் இருவகையினராவர். சிந்தனை செய்வதால் பதார்த்தஞானமுண்டாகின்ற யோகிக்கு யுஞ்ஞானயோகியென்று பெயராம். எவனுக்கு எப்போதும் ஏகரசமாய் எல்லாப்பதார்த்தங்களும் பிரத்தியட்சமாய் விளங்குகின்றனவோ அவனுக்கு யுக்தயோகியென்று பெயராம். இத்தன்மையயோகி ஈசுவரனேயாம்.

ஞானியர் சிந்தனை விரிவே பந்தமென்றறிந்தவராதலின் அவரிடத்து யோகாப்பியாசமிருத்தற் கிடமேயின்று; ஆயினும், வியாசர்முதலியபரமஞானிகள் காமியத்தவம் நிஷ்காமியத்தவமென்னுமிரண்டையுமுடையவரா யிருந்தாராதலின், அவர்களிடத்துக் காமியத்தவத்தின் பயனான சபானுக்கிரக சாமர்த்தியமும் நிஷ்காமியதவத்தின் பயனான தத்துவஞானமு மிருந்தன. அவர்களுக்கு அச்சாபானுக்கிரக சாமர்த்தியம் பிராரத்த கருமப்பலனேயன்றித் தத்துவஞானத்தின் பலனன்றாம். கேவலம் நிஷ்காமியதவமியற்றியவரிடத்துத் தத்துவஞானமும், காமியத்தவம் நிஷ்காமியத்தவமென்னும் தவமிரண்டையு மியற்றியவரிடத்துச் சாபானுக்கிரகமாகிய அணிமாதி அஷ்ட ஐசுவரியமும், தத்துவஞானமு மிருக்கும். சமையலுக்குத் தீ சாட்சாத்சாதனமாயிருப்பதுபோல் மோக்ஷத்திற்குச் சாட்சாத் சாதனம் ஞானமாயிருத்தலின் கேவ

லம் யோகசித்தியுடையோர் ஞானியராகார். இங்ஙனமாகவே சைவர்களிலொருசாரார் திருஞானசம்பந்தராதியோர் இறந்தவரை யெழுப்பல் முதலிய அற்புதங்களைச் செய்காராதலின அவர்களே ஞானியராவர்; ஏனையோர் ஞானிகளாகாரெனக் கூறுவர். அற்புதஞ் செய்வதே ஞானத்திற் கிலக்கணமாயின் அப்போது யோகியரும் ஞானியராதல் வேண்டும்.

அங்ஙனமாகவே, இன்னார் யோகியர் இன்னார் ஞானியர் என்னும் வேறுபாடிலலா தொழியும்; சைவசாஸ்திரம் யோகபாதம், ஞானபாதமென வகுத்துக் கூறியதும் பழுதாம். மேலும், அல்லமாப்பிரபுதேவரை யடுப்பதற்கு முன்னரே யோகாப்பியாசபலத்தினாலே பல்வகைச்சித்திகளையும் சித்தராமர், கோரக்கர் முதலியோர் பெற்றிருந்தார்கள்; அங்ஙனம் பெற்றிருந்தும் அவர்கள் அந்நிலையில் ஞானியரென்று கூறப்படவில்லை. அற்புதஞ்செய்வதே ஞானத்திற் கிலக்கணமாயின் அல்லமாப்பிரபுதேவரை யடுப்பதற்கு முன்னமே அவர்கள் ஞானியராயிருத்தல்வேண்டும். அங்ஙனமின்றென்பது பிரசித்தமாயிருத்தலால் ஞானத்தின்பலன் யோகசித்தியன்றென்பது பசுமரத்தாணியாம்.

பிரபுலிங்கலீலை.

சரிதையோன் கிரியைகா றடுக்கும் யோகிவை
புரிபவர் தம்மையப் புரியுஞ் செய்கையாற
றெரிதர லாகுமோர் செபனு மின்றிவா
மரிபரன் ஞானியை யறிய லாகுமோ.

நலமுறு மோர்சிவ ஞானி யில்லில்வாழ்
நிலையற மாகினு நீத்து நிற்குமோர்
தலையற மாகினுந் தரித்து ஞாலமே
லிலைமறை காயென விருக்கு மென்பவே.

வல்லனென் றிருப்பினு மிருக்கும் வன்மையோன்
றில்லனென் றிருப்பினு மிருக்கு மெள்ளுறப்
புல்லனென் றிருப்பினு மிருக்கும் புண்ணிய
நல்லனென் றிருப்பினு மிருக்கு ஞானியே.

என்று கூறுவதும்,

கைவல்லிய நவநீதம்.

முனிவர் சித்திகள் விளைதமாத் திரந்தரு
முத்தியைத் தாராவே.

என்று கூறுவதும்,

தாயுமானவர்.

சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சன்மமற
முத்திநெறி கேட்டல் முறைகாண் பராபரமே.

*கற்றாலுங் கேட்டாலுங் காயமறி யாதசித்திப்*
*பெற்றாலு மின்பமுண்டோ பேசாய் பராபரமே.*

என்று கூறுவதும் இங்கறியத்தக்கனவாம்.

அற்புதஞ்செய்பவரே ஞானியாராவரென்று கூறும் சைவரிலொருசாரார் அற்புதஞ்செய்த மோசே, நோவா, ஏசு, மகம்மது முதலியோர்களை யெல்லாம் ஞானியரெனக் கூறுதொழிவதெற்றிற்கோ?

அற்புதமொன்றையே தத்துவஞானத்தின் பலனெனத் திரிபாய்க் கருதி அற்புத மியற்றாதுள்ள ஞானியரைப் பழிக்கும் அவர்கள் கேவலம் விஷயாசக்தியுள்ள பாமரர்கள் விபூதி உருத்திராட்சமாதி வேடம்பூண்டிருக்குந் தன்மை, "இவர் சைவப்பழ"மெனப் பலவாறு கூறிப் பழிப்பதை யறிந்திலாபோலும். விஷயாசக்தியுள்ள பாமரர்கள் பழிப்பதால் அவர்களுக்குப் பழிப்புண்டாகமாட்டாதெனின், அங்ஙனமே அவ(சைவா)கள் பழிப்பதாலும் ஞானிகளுக்கிழிவுண்டாகாதென்க.

இதனால் யோகத்தின் பலனான அணிமாதிசித்திகளை ஞானத்தின் பலனெனக் கூறுவது அமையாதென்பது பெறப்பட்டது.

வராகோபநிஷத்.

𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌜𑌾𑌲𑌾𑌨𑌿 𑌵𑌾𑌂𑌛𑌤𑌿 । 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌨𑍍𑌤𑍍𑌰 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌕𑌾𑌲 𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌮𑍁𑌨𑍀𑌶𑍍𑌵𑌰 । 𑌨𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌸𑍍𑌯𑍈𑌷 𑌵𑌿𑌷𑌯 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑍋 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌾𑌤𑍍𑌰𑌦𑍃𑌕𑍍 । 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑌂𑌤𑍃𑌪𑍍𑌤𑍋 𑌨𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌨𑍁𑌧𑌾𑌵𑌤𑌿 । 𑌯𑍇 𑌕𑍇𑌚𑌨 𑌜𑌗𑌦𑍍𑌭𑌾𑌵𑌾𑌸𑍍𑌤𑌾𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌦𑍁𑌃 । 𑌕𑌥𑌂 𑌤𑍇𑌷𑍁 𑌕𑌿𑌲𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑍋 𑌨𑌿𑌮𑌜𑍍𑌜𑌤𑌿 । 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑌨𑍍𑌤𑍍𑌰 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌕𑌾𑌲𑌯𑍁𑌕𑍍𑌤𑌯𑌃 𑌸𑌾𑌧𑍁𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌦𑌾𑌃 । 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌪𑌦𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌨𑍋𑌪𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌕𑌾𑌶𑍍𑌚𑌨 । 𑌸𑌰𑍍𑌵𑍇𑌚𑍍𑌛𑌾𑌕𑌲𑌨𑌾𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌵𑌾𑌤𑍍𑌮𑌲𑌾𑌭𑍋𑌦𑌯𑌾𑌭𑌿𑌧𑌃 । 𑌸 𑌪𑍁𑌨𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌵𑌾𑌂𑌛𑌾𑌯𑌾𑌂 𑌕𑌥𑌮𑌰𑍍𑌹𑌤𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌤𑌤 𑌇𑌤𑌿॥

(இ-ள்.) ஓ! முனீசுவரா! ஆத்மஞானமில்லாதவனும் முக்தனல்லாதவனும் (அணிமாதி) சித்திஜாலங்களை இச்சிக்கிறான். திரவியம், மந்திரம், கிரியை, காலம், யுக்தி இவைகளினாலே அந்தச்சித்தியை யடைகிறான். ஆத்மஞானமுள்ளவனுக்கு அவை (சித்திகள்) விஷயமல்ல. ஆத்மஞானியானவனும் ஆத்மாவிலேயே பார்வையை யுடையவனும் ஆத்மாவினால் (மனதினால்) ஆத்மாவிடத்திலே திருப்தியடைந்தவனும் அவித்தையை யனுசரித்துப் போகிறதில்லை. ஜகத்தில் எந்தெந்த வஸ்துக்களுண்டோ அவைகளை அவித்தியா

சொரூபங்களாக (ஆத்மஞானிகள்) அறிகிறார்கள். அவித்தையை விட்ட ஆத்மஞானி அவைகளில் எவ்விதமாய் முழுகுவான். திரவிய மந்திர கிரியா கால யுக்திகள் நல்ல சித்தியைக் கொடுப்பனவாயினும் அவைகளிலொன்றும் பரமாத்மபதத்தை அடைகிற விஷயத்தில் உபகாரஞ்செய்யமாட்டாது. சகல இச்சைகளின் வியாபாரமும் அடங்கியிருக்கும்போது ஆத்மஞானியென்கிற பேரையுடையவனும் மனமேதுமில்லாதவனுமிருக்கிற அவன் சித்தியை இச்சிக்கிறவிஷயத்தி லெங்ஙன மருகனாவான். என்று கூறுவதிங் கறியத்தக்கதாம்.

## ருரு - வது சம்வாதம்.



ஞானியை யறியும் நந்தறியுரைத்தல்.

சி: அங்ஙனமாயின், ஞானியென்றும் அஞ்ஞானியென்றும் அறிவதெப்படி?

கு: இதய பந்தமுறல் இதய பந்தமுறாமை யென்பனவே ஞானிக்கும் அஞ்ஞானிக்குஞ் சின்னமே யன்றிப் பிறிதொன்றுஞ் சின்னமாகாது; ஆகாராதி முதலியவற்றில் இருவரும் ஒருதன்மையராகவேயிருப்பர். இதயபந்தமுறாமையால் ஞானியென்றறிய வேண்டும்.

சி: இதய பந்த முறாதவரென் றறித லெங்ஙனம்?

கு: அக்குரோதம், வைராக்கியம், ஜிதேந்திரியத்துவம், தமை, க்ஷமை, சனப்பிரியத்துவம், அலோபம், தாத்ருத்துவம், அபயம், நிர்மதமென்பன வுடைமையால் இதயபந்த முறாதவரென் றறிய வேண்டும்.

சி: சிலர்: பேசாதிருத்தல், எழுதித்தெரிவித்தல், ஆடையின்றி யிருத்தல், கைக்குறிகாட்டல், கண்சிமிட்டாதிருத்தல், கணக்கின்றிப் புசித்தல், பிணிபல தீர்த்தல் முதலியவற்றுள் ஒன்றாயினும் பலவாயினு மிருப்பவரையே ஞானியரெனப் பேணுவதென்னை?

கு: பிராரத்தம் பலவகைத்தாயிருத்தலின் ஞானியரங்ஙன மிருப்பினு மிருப்பர். ஆனால் அவையே ஞானிக்குக் குறியெனலமையாது. அவையே ஞானத்திற்குக் குறியாயின், ஊமையரும், எழுதத்தெரிந்த ஊமையரும், ஆடையின்றி யிருக்கும் பைத்தியக்காரரும், அளவிற் சுருக்கமாகவும் பெருக்கமாகவு முண்ணும் வியாதியாளரும், மருத்துவரும், பிறரும் ஞானியராதல்வேண்டும். அங்ஙனமின்மையின், அவை ஞானக்குறியாகாவென்க.

சி: சுவாமி! மேற்சொல்லியவைகளுக் குரிய பிரமாணங்க ளையு மறிய விரும்புகிறேன்.

கு: கீழ் வருவனவே.

வேதாந்த சூளாமணி.

மண்ணுலகில் விராத்திரியர் சுரோத்திரியர் தமக்கு மறை யொழிதன் மொழிதலா லன்றியுணன் முதலா, யெண்ணவருஞ் செயலான்வே றிலாமையது போல விதயபந்த முறவொழிதலா லன்றிப் போக, முண்ணுநிலை யதனலஞ் ஞானமுடை யோர்க்கு முணர்வுமய மாய்நின்ற சீவன்முத்தர் தமக்கு, நண்ணிவரு வேறு பா டிலையெனவே நவில்வர் ஞானநூல் பலவுணர்ந்த நல்லுணர்வி னவரே.

குறிகளோர் பத்துளவா ஞானமயற் கவைதாங் குரோத மின்மை வயிராக மைம்பொறிக ளடக்க, மறமுதவு சமைதமை யே சனப்பிரியத் துவமே யலோபமொடு கொடையபய நிருமத மென் றறிக.

வேதாந்த விலக்கணம்.

இன்னொரு சாரா ரிசைக்கு ஞானந்
தன்னை விட்டுத் தனக்குட் பிரணவம்
அகார வுகார மகாரக் காட்சியும்
ஐந்தா றெட்டெழுத் தாதிக் காட்சியும்
உண்டெனக் கண்டிங் கோங்கிக் குதிதரும்
அதிசய நடிப்பு மநேக விதமாங்
கோலமுந் தப்பித் திருக்கும் வியப்புங்
காட்டியு மிருப்பர் காணு ரிதுவே.
இன்னொரு சாரா ரிசைக்கு ஞானம்
பேச்சுமுச் சடக்கிப் பிணம்போற் கிடக்கை.
மொட்டை தாடி காவி தண்டங்
கோவண மின்மை சாத்திரத் திறமை
யறியா மோன மென்பதோர் ஞானம்.
இக்குறி தம்மை ஞான மென்முற்
பரவுரு வாமோ பார்த்ததற் கியைய
வற்றன் மெய்ஞ்ஞான மென்பர்ஞா னிகளே

## ருசு - வது சம்வாதம்.



ஞானியின் குணங்க ளாங்கேன வுரைத்தல்.

சி: இதய பந்தமுறுமைமயே ஞானிகளின் தன்மையாயின் அவர் களிடத்து முக்கியமாய் விளங்கும் குணங்களெவை?

கு: அவை: மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை யென்பனவாம்.

சி: அவற்றை விளக்கமாகக் கூறல்வேண்டும்.

கு: (1) சத்துக்களிடத்து நட்புக்கொள்வதே மைத்திரி; (2) பிறவிக்கஞ்சிய துக்கிகளிடத்துண்டாகும் இரக்கமே கருணை; (3) புண்ணியாதி காரிகளிடத்துண்டாகுஞ்சந்தோஷமே முதிதை; (4) பாவிகளிடத்துவிருப்பு வெறுப்பின்றி யிருப்பதே உபேட்சையாம்.

ரிபுகீதை.

ஈனமிலாச் சமாதியினி லிருமையின்றி யேகபரி பூரணமா யிருப்போ னாகி, யூனமிலாச சமாதியிரிந் திருக்குங்காலை யுலகத்தி லுதாசின விருத்தி மேவி, மானமவ மானமுத லெவையுமின்றி மைத்திரியே முதலான குண நிறைந்து, தீனமுறுக் கெம்பீர சுபாவமாகித் திகழ்சீவன் முத்தனுகா னேனையா.

என்று கூறுவதறிக.

---

## ருஎ - வது சம்வாதம்.



ஞானிக ளெம்பல னண்ணிடுவாரெனல்.

சி: இங்ஙனமிருக்கும சீவன்முத்தர் யாதுபயனுடையராயிருப்பர்?

கு: பஞ்சப்பிரயோஜன முடையராயிருப்பர்.

சி: பஞ்சப்பிரயோஜன மென்னை?

கு: அவை: ஞானரட்சை, தவம், சர்வசம்வாதம, துக்கநாசம், சுகாவிற்பாவ மென்பனவாம்.

சி: அவற்றை விளக்கமாய்க் கூறலவேண்டும்.

கு: (1) வாசனக்ஷயமும் மனோவிர்த்தி நாசமும் இருத்தலால் புத்திகளங்கமின்றி யிருப்பதே ஞானரக்ஷை; (2) மனமும் இந்திரியமும் ஒரு முகப்பட்டிருத்தலே தவம்; (3) ஞானநிஷ்டையுடைத்தாயிருத்தலால் யாவரும் இவர் மகானென ஸ்துதி நமஸ்காராதிகளைச் செய்வதே சர்வசம்வாதம்; (4) * அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேச மென்னும் பஞ்சக்கிலேசமின்றி யிருப்பதே துக்கக்ஷயம். (5) இவை சித்தித்திருப்பதால் பிரதிபந்த மொன்றுமின்றி ஆநந்தக்கடலாய் விளங்குவதே சுகாவிற் பாவமாம்.

---

## ருஅ - வது சம்வாதம்.

### புகழிகழ்புரிபவர் பேறும்பயனுரைத்தல்.

சி: தாங்கள் மேலருளிய விஷயங்களால் ஞானியர் சிலரால் பூஜிக்கவும், சிலரால் தூஷிக்கவும் படுகின்றார்களென்பது பெறப்பட்டது. அங்ஙனம் பூஜிப்பவர்க்குந் தூஷிப்பவர்க்கும் உண்டாகும் பயன் யாது ?

கு: பூஜிப்பவர்க்குக் கடத்தற்கரிய புண்ணியமும், தூஷிப்பவர்க்குக் கடத்தற்கரிய பாவமும், உண்டாகும். இதுவே பயனும். மேலும், ஜீவன் முத்தரது சரித்திரத்தை யுதாசினஞ் செய்பவர்க்

---

* (க) உள்ளதென்றும் இல்லதென்று மறிதற்கரியதாய் விசாரணையில் தனக்கெனவோர்வடிவமின்றியதா யுலககாரணமாயிருக்கும்மாயையே அவித்தை. இஃது (1) அநான்மாவாகியதேகாதிகளில் ஆத்ம புத்தியையும் (2) அநித்தியமான ஆகாயாதிகளில் நித்திய புத்தியையும், (3) துக்கவடிவதனாதிகளில் சுகபுத்தியையும், (4) அசுசியான சரீரம் ஸ்திரி புத்திரர்களை முத்தமிடுதல் முதலியவற்றிற் பரிசுத்த புத்தியையும் உண்டாக்குமிடத்துக் காரியாவித்தை, அல்லது தூலாஞ்ஞானம், அல்லது அவஸ்தாஞ்ஞானமெனப்படுகின்றது.

(உ) புத்தியாத்மாக்களின் ஒருமையுணர்ச்சி அஸ்மிதை;

(ங) அநுகூல பதார்த்தங்களின் ஞானத்தாலுண்டாகும் புத்திவிருத்தி ராகம்.

(ச) பிரதிகூல பதார்த்தங்களின் ஞானத்தாலுண்டாகும் புத்திவிருத்தி துவேஷம்.

(ரு) மரணபயத்தால் சரீரத்தைக் காப்பாற்றுதலிலுண்டாகும் பிடிவாதம் அபினிவேசமாம்.

குப் புண்ணிய க்ஷயமும், அவரது தரிசன பரிசனங்களால் பாபி களுக்குப் பாபக்ஷயமும், அவரை நம்புஞ் சீடனுக்கு மோக்ஷமு முண்டாகு மென்றுமறிக.

சி: ஞானிகள் செய்யும் பாவகருமத்தைத் தூஷிப்பவரும், புண்ணிய கருமத்தைப் பூஜிப்பவரும் அடைகிறார்களென்பதெப் படி?

கு: ஆத்மாவின்கண் ஞானிக்குக் கர்த்திருத்துவப் பிராந்தி யின்மையின், அவன் கர்மகர்த்துருவன்றாம்; கர்மகர்த்துருவாகா மையின் கர்மமே செய்வதின்றாம். ஞானியினிடத்து வினையே நிக ழாமையின் அதனைப்பாகிப்பதெங்ஙனம்? ஞானி அந்தக்கரணமுத லியவற்றால் நிகழும் கர்மங்களுக்கும் அவற்றிற்குஞ் சாக்ஷிமாத்திர மாய் விளங்குகின்றான். அங்ஙன மிருத்தலின் அவன் கருமஞ் செய்தாலும் செய்தவனல்லன். ஞானியினது புண்ணிய பாவ கர் மங்களைப் பூஜிப்பவரும் தூஷிப்பவரும் பங்கிட்டுக் கொள்ளுகின் றார்களென்பது அர்த்தவாத மென்றறியவேண்டும.

அஞ்ஞானியினது திருஷ்டிக்கு ஞானி கர்மகர்த்தாபோலத் தோன்றுதலின், அது பற்றி ஞானம் வந்த பின்னர் ஞானி செய் யும் கருமம் அகர்த்தாவாகிய அவனையடுத்தற் கிடம்பெறாமையின் அதற்கொரு வழிவிடவேண்டி ஞானியின் புண்ணிய கருமத்தைப் பூஜிப்பவனும், பாவகருமத்தைத் தூஷிப்பவனும் அடைகிறார்க ளென்று கூறப்படுகின்றது.

சி: அங்ஙனமாயின், அகர்த்தாவாய் விளங்கும் சீவன்முத் தன் வேதாந்த வாக்கிய சத்திய தாற்பரியானுகூல தர்க்க திருஷ் டாந்தாதிகளால் முயற்சியோடுகூடிய பிரமோப தேசாதிகள் செய் தல் எங்ஙனங் கூடும்?

கு: இராகத்துவேஷாதிகளின்றிய ஈசனுக்கு ஜீவர்களின் புண்ணியபாவ வசத்தினால் அநுக்கிரக முதலியவை யுண்டாதல் போன்று ஞானிக்கும் சாதகரின் புண்ணிய பரிபாகத்தினால் பிர மோப தேசாதிகள் பொருந்தும்.

சி: பூசித்தோர் புண்ணியத்தையும், தூஷித்தோர் பாவத்தையு மடைவார்களென்பதற் குரிய பிரமாணங்களையுமறிய விரும்பு கின்றனன்.

கு: கீழ்வருவனவே.

தேவிகாலோத்தரம்.

இவ்வகைய ஞானிதனக் கிருநிலத்தோர் கந்தபுட்பம்
மெய்வகைய பலதூபம் புனலாடை விளக்கமுது
செய்வகைய மனவாக்குக் காயத்தாற் பூசைசெய்தால்
அவ்வகைய வுடம்புடனே வேண்டுமுத்தி யடைவரால்.

சொன்ன ஞானி தனைத்துதி செய்தவர்
முன்னஞ் செய்யற முற்று மடைகுவர்
இன்னல் சொன்னவ ரெய்துவர் வன்பவம்
அன்ன மீபவ ரைசின்ஞா னஞ்சேர்வார்.

திருமந்திரம்.

பத்தினி பத்தர்க டத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமு மாவியு மாண்டொன் றின் மாய்ந்திடும்
சத்திய மீது சதாநந்தி தானே.

நிட்டாநுபூதி.

ஒப்பி லாதுய ருண்மைநிட் டாள்தமக்
கப்போ டன்னமு மர்ச்சித் துதவியே
தப்பி லேவலுந் தான்செயும் புண்ணியற்
கெய்ப்பின் முத்தி யெடுக்கும் பவத்திலே.

ரிபுகீதை.

புகல்சீவன் முத்தர்க்கும் பிராரத் தத்தாற் பூடணமுந் தூடணமு மெங்குமுண்டே,யகமேவு மகம்பிரம நிச்சயத்தா லவர்சீவன் முத்த ரலான் மற்றோர் செய்யும், வெகுவான பூடணதூ டணங்களாலே விமலமதா நிலைபெற்ற வன்னோர்க் கென்று, மிகழ்வான தெவையுமிலை யெனுமு ரத்தோ டென்னிடைநா னின்பமுற விசைந்து நிற்பேன்.

---

## ருகூ—வது சம்வாதம்.

ஞானியின் பெருமைபோ றனிலந் தீலயெனல்.

சி: தேவரீர் இங்ஙனங் கூறிய ஞானியின் பெருமை யெத்தன்மையதோ?

கு: ஞானி ஒப்புயர்வற்ற பிரஹ்ம சொரூபமாயிருத்தலின் அவனது பெருமையை யெங்ஙனமளவிட் டுரைத்தல்கூடும்? இது பற்றியன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் "துறந்தார்

பெருமை துணைக்கூறின் வையத், திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று" என்றருளினர். திரிமூர்த்திகளும் ஞானியின் பணிவிடைக் கெதிர்பார்த்திருப்பாரென்று சாஸ்திரங் கூறுமாயின், நாமெங்ஙன மளவிட்டுரைத்தல் கூடும்?

ஞானியிருக்குமிடமே புண்ணிய க்ஷேத்திரமாம். அங்குள்ள நீரெல்லாம் புண்ணியதீர்த்தமேயாம். அவன் பேசுவதெல்லாம் வேதமேயாம். அவனைச்சேவித்தோர்க்கு வரும்பலன் திரிமூர்த்திகளைப் பிரத்தியட்சமாய்ச் சேவித்தவர்களுக்கு முண்டாகாது. விடாது துன்பத்தையுண்டுபண்ணும் அவித்தையை யத்தியந்தம் அதமாக்குஞ் சாமர்த்தியம் ஞானியிடத்தன்றிப் பிறிதொருவரிடத்திராமையின், ஞானியின் பெருமைபோல் நானிலத்து வேறு பெருமையின்றென்பது தெள்ளிதின் விளங்கும்.

சி: இதுபற்றிக் கூறும் பிரமாணங்களையு மெடுத்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு: கீழ்வருவனவே.

பிரமகீதை.

ஈசனு ஞானி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திதா னந்தத் தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்னி மாசிலாப் பரம ஞானியா முனிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கி லாசிலா வரியு மொப்பல னுனு மொப்பல னெவரொப் பாரே.

தொல்லைநல் வினையாற் சுருதிநன் மிருதி சொன்னவா றணிந்தவத் தாயோ, ரொல்லையிற் பரமாத் துவிதமே தனத்தை யுள்ளவா றுணரவே யுணர்வர், நல்லவிப் பரமாத் துவிதஞா னியைநா ராயண னுருத் திரனு, மெல்லையி லெல்லாத் தேவரும் பூசித் தேத்தவும் படுமிவ னென்றும்.

ஞாநாமிர்தம்:

ஞால முண்டவன் றலைமிசை சுமப்பன்மெய்ஞ் ஞானிவேண்டுவதெல்லா, மால முண்டவ னவன்பின்னே திரிகுவ னவனடித் துகட்கன்றே,சில மன்னரு மற்றுள தேவருந் திசைதிசைப் பணிந்தேத்தக், காலி ரண்டையுந் தலைமிசை வையெனக் கழறுவன் கமலத்தோன்.

மோகவதைப் பரணி.

அல்ல தங்கவர் பெருமையை யருமறை மொழிய
வல்ல தன்றரன் முகுந்தனும் பிரமனு மாட்டார்.

சூதசங்கிதை.

பாமவத் துவித சைவமெய்ஞ் ஞானி பாரளந் தவன்முத லோரால், வரமுறப் பூசை புரிந்திடத் தக்கோன் மற்றவ னுறை தரு மிடத்தே, பரவுறு முத்தி காத்துக்கொண் டிருக்கும் பணிந் தவன் பணிவிடை புரிவோன், சரண மெப்போதுந் தலைமிசைத் தரிப்பேன் சமானமற் றவற்கெவ ருலகில்.

பரம ஞானி பணிவிடை செய்துநல்
வரம னுஞ்சசி வன்ன னுயர்கதி
விரவ லாலவற் பெற்றமெய் யன்னையு
முரவு முத்தி யுலகம் புகுந்தனள்.

கைவல்லிய நவநீதம்.

சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவனய னெடுமா லான
மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து சன்ம
பாவன மானு ரென்று பழமறை முழங்கு மிப்பால்
மேவருஞ் சீவன் முத்தர் விதேகமுத் தியுங் கேளாய்.

ரிபுகீதை.

திடஞானி தெரிசனமே தீர்த்த மாடற் றிடஞானி தெரிச னமே தேவ பூசை, திடஞானி தெரிசனமே செபத பங்கள் திட ஞானி தெரிசனமே செயும றங்கள், திடஞானி தெரிசனமே சிவத்தைக் காணல் திடஞானி தெரிசனமே சிவத்தின் சேவை, திடஞானி தெரிசனமே மேவு தற்குத் திரிவிதமா முலகத்து மரி தா மியார்க்கும்.

வரமான ஞானிக்கு மகிழ்வி னோடே வளமான போசனமே யளிப்ப தாலுந், திரமான ஞானிக்குத் தேவை யான திரவியமே சிரத்தையொடு கொடுப்ப தாலும், பரமான ஞானிக்குப் பத்தி யோடே பலவிதமாம் பணிவிடையே செய்வ தாலு,மரிதான மோ ட்சசுக மெளிதே யாக வடைந்திடலா மனுவுமிதி லைய மில்லை.

அரனுத லரியாத லயனே யாத லன்றியுள வநேகவித வமர ராதல், பரஞானி மகிமைதனைக் கிஞ்சி லேனும் பழுதறவே பாங் காகப் பகர்வ தற்கிங், கொருபோதும் வல்லரலர் மனவாக் குக்க னொன்றுத மகிமைசொல வார்தான் வல்லோ, ரிருண்மேவா விவ்விதமா ஞானஞ் சார லெவ்வுலகந் தனிலுமிக வரிதே யாமால்.

திருவருட்பா.

வண்டணிபூங் குழலம்மை யெங்கள் சிவகாம வல்லியொடு மணிமன்றில், வயங்கியநின் வடிவங், கண்டவரைக் கண்டவர்தங்

கான்மலர்முத் தேவர் கனமுடிக்கே முடிக்கின்ற கடிமலரா மென்ருல், பண்டகுகின் றிருத்தொண்ட ரடிப்பெருமை யவரே பகர்ந்திடுவர் மறைகளெலாம் பகர்ந்திடுவான் புகுந்தே, விண்டலர்ந்து வெளுத்ததலை வெளுத்த மட்டோ வவற்றை வியந்தோது மந்தணரும் வெளுத்தனருள் ளுடம்பே.

## கூ0 - வது சம்வாதம்.

### ஞானிக்குப் பிறவி நண்ணுதேன்பது.

சி: விதேகமுத்தனுக்குப் புனர் ஜன்ம மின்றென்பதை விளக்கல் வேண்டும்.

கு: ஜனன வேதுவான அவித்தை காம கர்மங்களைச் சற்குருவின் அனுக்கிரகத்தினுலொழித்து விஷயானுபவ விருத்தியின்றியிருக்கும் ஜீவன்முத்தன் பிராரத்தவினை நிவிர்த்தியானபோது எக்காலத்திலாவது எத்தேசத்திலாவது யாதொரு சரீரத்தையும் பெருது சச்சிதாநந்த வடிவமாதலே விதேகமுத்தியாம். ஜீவன் முத்தன் சரீரம் காலத்தினுல் விழுகின்றபோது அவனது லிங்கசரீரம் வெளியிற் செல்லாது காய்ச்சிய இரும்புண்ட நீர்போல் சொரூபத்தில் நாசமாய் விடுதலின், அவனுக்குப் புனர்ஜன்மமின்று. எவனது லிங்கசரீரம் மரணகாலத்தில் வெளியிற் போகின்றதோ அவனுக்கே புனர்ஜன்மமுண்டு. ஜீவன் முத்தனிடத்துக் கர்த்தவ்விய புத்தி சிறிது மின்மையின் அவனுக்கு மரணகாலத்தில் யாதொரு இச்சையுமில்லை; இல்லாமையின் அதன் பயனுகிய சரீரப் பிராப்தி வருதற்கே யிடனின்று.

சி: ஜீவன்முத்தனிடத்துக் கர்த்தவ்விய புத்தியின்ருயின் பிராரத்தபோகம் புசித்துத் தொலைப்ப தெங்ஙனம்?

கு: ஜீவன் முத்தனிடத்து உருவ மனம் நாசமாய் விட்டமையின், அவனுக்குக் கர்த்தவ்வியமே யின்று. இரஜோகுண தமோகுண சகித மனமே உருவமனமாம். பிரபஞ்சம் அத்தியந்தம் தனக்கென வடிவமொன்றில்லாத தென்று சொரூப ஞானத்தாலறிந்த மாத்திரத்தில் சலன வேதுவான இரஜோகுணமும் விஷய பரிணும வேதுவான தமோகுணமும் நாசமாயினவாதலின், ஜீவன் முத்தனுக்கு உருவ மனமில்லையென்பது சித்தமாம். சத்துவகுண

சகிதமனம் அருவமனமாம். அது சீவன் முத்தனது லிங்கதேகம் சொரூபத்தில் விலயமாம்போது தானும்லயமாய்ப்போகும். அந்நிலையே விதேகமுத்தியாம். ஜீவன்முத்தனது அருவமனம் எஞ்ஞான்றும் சொரூபத்திலேயே நிலைத்திருத்தலின், அவன் யாவற்றிற்குஞ் சாட்சியா விளங்குகின்றான்; விளங்குகின்றமையின், அவனிடத்துக் கர்த்தவ்விய மின்றென்பதற்குச் சிறிதுஞ் சந்தேகமின்று. இந்திரஜாலத்திற் கந்தர்வ நகரத்தைப் பார்ப்பவனுக்கு அதில் ஓர் போகத்திலும் விருப்ப முண்டாகாததுபோன்று திருஷ்ட நஷ்ட சுபாவமுள்ளதென்று மித்தியாப் பிரபஞ்சத்தைப் பார்க்கும் ஞானிக்கும் அதில் ஓர்போகத்திலும் விருப்பமுண்டாவ தின்மையின், அவனுக்கெங்ஙனம் உண்மையில் கர்த்தவ்விய முண்டாகும்? உண்டாகாமையின், விதேகமுத்தியின் பிறகு யாதொரு சரீரமும் உண்டாகாதென்க.

## சுக - வது சம்வாதம்.

### சாதன வடைவைச் சங்கிரகமா யுரைத்தல்.

சி: சுவாமி! தாங்களருளியவாற்றால் விதேகமுத்தி ஜீவன்முத்தனுக் கன்றிப் பிறிதொருவர்க் குண்டாகாதென்ப தறிந்தனன்; சீவன்முத்தி தத்துவஞானத்தினா லுண்டாகுமென்று மறிந்தனன்; அங்ஙனமே பிற சாதனங்களையும் தாங்களருளியதினா லறிந்தனன். ஆயினும், விதேகமுத்தி யடைதற்குரிய சாதன பரம்பரைகளைச் சங்கிரமா யறிய விரும்புகின்றேனாதலின், தேவரீர் தயவு செய்து சாற்றியருளல் வேண்டும்.

கு: அங்ஙனமே யுரைக்கின்றேன். காமியகருமம் போகத்திற் கேதுவாவதன்றிச் சித்தசுத்திக் கேதுவாகா தென்றறிந்து ஒருவன் நிஷ்காம கர்மம் புரிவானாயின், அதனாலவனுக்குத் தர்மோற்பத்தியும், அதனால் பாவநாசமும், அதனால் சித்தசுத்தியும், அதனால் குடும்பக் குற்றங் காண்டலும், அதனால் விஷய விரக்தியு (துறவு)ம், அதனால் மோக்ஷ விருப்பும், அதனால் பாகிய கர்ம பரித்தியாகமும், அதனால் யோகாப்பியாசமும், அதனால் பிரத்தியகாத்மப்பிரீதியும், அதனால் சற்குருசேவையும், அதனால் மகாவாக்கியோபதேசமும், அதனால் அத்துவிதஞானமும். அதனால் அவித்தியாநாசமும், அதனால் துவிதப்பிராந்தி நிவிர்த்தியும், அதனால் சுக

துக்க வழிவும், அதனால் விருப்பு வெறுப்பொழிதலும், அதனால் விதிநிஷேத நீக்கமும், அதனால் புண்ணியபாவ க்ஷயமும், அதனால் தேகாத்ம புத்தியின் அபாவமும், அதனால் சர்வபாசமு மொழிதலும், அதனால் விதேகமுத்தியும் வரும். இதுவே சாதனங்களின் அடைவென்க.

## ௬௨ - வது சம்வாதம்.

### பாவனை புரியும் பான்மை யுரைத்தல்.

சி: சுவாமி! இதுகாறும் தாங்கள் கூறியவாற்றால் சோதனை யெல்லாங் கேட்டேன்; விகங்கமார்க்கம் சாத்தியரான ஜீவன்முத்தர்களுக்குரிய தென்றும், வாமதேவ மார்க்கம் சாதகரான நிஷ்காம கர்மிகளாதியோர்க் குரியதென்றும் நன்றாக வறிந்தனன். இனிக் கேட்கவேண்டியதொன்றுளது. அதனைத் தயவுசெய் தருள் புரியவேண்டும். ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானமே சர்வதுக்க நிவிர்த்திக்கும் பரமாநந்தப் பிராப்திக்கும் நேர்சாதனமென் றறிந்தும் என் மனம் விஷயாகாரப்படுவதினின்றும் நிவிர்த்தியான தின்று; ஆதலின், அது விஷயாகாரமாகாது சொரூபத்தில் பிறழாது நிற்கும் வழியை யுபதேசித்தருளல் வேண்டும்.

கு: இதுபற்றி விஸ்தாரமா யுரைத்திருக்கின்றனன். அஃது உனதுள்ளத்தில் திடமாய் நிற்கவில்லைபோலும். அசுத்தத்திரிபுடி யுனக்கின்னுமிருக்கின்றது. அசுத்தத்திரிபுடியை யொழித்தற்குரியது சுத்தத்திரிபுடியாம். அதனை யப்பியசித்தல்வேண்டும்.

சி: அப்பியசிக்கும் வகையினை யுரைத்தருளல் வேண்டும்,

### உபதேசம்.

கு: "தேகமே நான்" என்னுந்திடபாவனையொழிந்து "பிரஹ்மமே நான்" என்னுந் திடபாவனை யுண்டாகும்வரை 'சிவோகம்' என்றிருப்பாயாக.

விஷயாகார விர்த்தியைத் தடுத்துச் சிவோகம்(சிவம் நான்) அல்லது பிரஹ்மைவாகம் (பிரஹ்மமே நான்), அல்லது அகம் பிரஹ்மம் (நான் பிரஹ்மம்)என்றிருத்தலே அகண்டாகாரவிருத்தி அல்லது பிரஹ்மாகார விருத்தியெனப்படும். பஞ்சகோச விலட்சணமாய் அவஸ்தாத்திரய சாட்சியாயுள்ள சேதனமேநான் என்றி

ருத்தல் சாட்சிவிருத்தியெனப்படும். கேவலஞ்சாட்சியைத் தானெனல் பந்தமன்றாயினும் அதனால் சிவப்பிரஹ்ம ஐக்கிய ஞானமுண்டாகாமையின், அது புருஷார்த்த சாதன மன்றாம். சிலர் சாட்சி விருத்தியே அகண்டாகார விருத்தியெனப் பிறழ்ந்துணர்ந்துரைக்கின்றனர். தேகேந்திரியாதிகளுள் ஒன்றை நானெனல் துவித விருத்தி யெனப்படும். துவிதவிருத்தியையும், சாட்சிவிருத்தியையும் விட்டு அகண்டாகார விருத்தியையே ஆதரவோடப்பியசித்து வரின், சித்தமானது முற்றும் விஷயாகாரமாத லொழியும்; ஒழிந்தால் நடுநிலை பெற்றுச் சிதாநந்தவடிவாகவே விளங்குவாய்.

ரிபுகீதை.

தேகமுத லுனென்ன றுவிதவிருத்தி திகழ்சாட்சி நானென்னல் சாட்சி விருத்தி, யேகபர நானென்ன லகண்ட விர்த்தி யிம்மூன்று விருத்திகளி லிரண்டைத் தள்ளி,யாகுமகண் டாகார விருத்தி தன்னை யநவரத மாதரவா யப்பியா சித்துச்,சோகமுறுஞ் சித்தவிகற் பங்கடர்த்துச் சொன்னவகண் டேகரச சொரூப மாவாய்.

என்று கூறுவதறிக.

இங்ஙனம் அப்பியசித்துவரின், அந்தக்கரண விர்த்தி சொரூபத்தில் பையப்பைய லயமாகும்; லயமானால் சொரூபாநந்தம் ஊற்றுக்குழி தோண்டத் தோண்ட நீர் சுரப்பதுபோலப் பையப்பைய வெளியாகும்; வெளியாக வெளியாக விஷயாநந்தமியாவும் பலாப்பழந்தின்பவனுக்குக் களாப்பழம் வெறுப்பாய்த் தோன்றுவதுபோன்று வெறுப்பாய்த் தோன்றும்; வெறுப்பாய்த் தோன்றுமிடத்து அவாவின்மையுண்டாகும்; அவாவின்மையுண்டாயின், மனம் விஷயாகாரமாகாது சொரூபத்திலேயே நிற்கும். இதுதான் மனம் விஷயாகாரமாகாது சொரூபத்தில் நிற்றற்கு வழி.

இச்சாதனஞ்செய்பவன் திடஞானமுள்ளவனா யிருத்தல் வேண்டுமாதலின் நீயு முறுதியுடன் அப்பியசிப்பாயாக. மெய்வருந்தாநெறியென்பது மிதுவே.

உயிர் உடம்பினின்று நீங்குங்காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது, அஃது அதுவாய்த்தோன்றுமென்பது நியமமாயிருத்தலின், நீ 'சிவோகம்' என்றிடைவிடாது பாவித்துவந்தால் சிவமேயாவாய். நீ 'நான் உண்மையில் சிவமாயிருக்கிறேன்' என்றறியாதிருத்தல்பற்றித்தான் ஜனனமரணத்தை யடைந்து வருந்துகின்றாய்; இங்ஙனம் பாவித்து வந்தால் 'நான் சிவமே' யென்று

சந்தேக விபரீதமின்றி யறிந்துகொள்வாய்; இப்பாவனை முதிர முதிர் உலகாசாரங்க ளியாவுந்தூங்கினவன் கைப்பொருள்போல் நழுவிப்போம். சிவமாகிய நானேயுளன் பிறிதொன்றென்பது சிறிதுமில்லை யென்பதும் நன்கு விளங்கும். 'சிவோகம்' பாவனை முதிர்ந்தவனுக்கு லோகவாசனை தேகவாசனை சாஸ்திரவாசனை யென்பனவும் பிறவு மின்மையின், அவன் உடம்பினின்று நீங்குங் காலத்துச் சிவோகம் பாவனையின்றி வேறுபாவனையோடிரான்; இராமையின் சிவமேயாய் விளங்குவன்; ஆதலின், நீயும் மறவாது 'சிவோகம்'என்று பாவித்திருக்கக்கடவாய். நீ விழிக்கின்றபோது 'சிவோகம்' என்னும் பாவனையுடன் விழிப்பாயாகின் உறங்கப் போயபோது 'சிவோகம்' என்னும் பாவனையுடனே யுறங்கப்போனவனாவாய். மரணம் உறக்கத்திற்குச் சமானமாயிருத்தலின் உறங்கப்போகும்போது 'சிவோகம்' என்னும் பாவனையுடன் இருப்பாயாக. இடைவிடாது 'சிவோக' மென்னும் பாவனை புரிந்தாற் றான் உறக்கத்திற்குப் போகும்போதுபிரயத்தினமின்றியே அஃது அமையும். இதற்குக் காலதேச ஆசௌச நியமமின்று. எச்சமயத்தும் புரியலாம். மரணம் வருஞ்சமயம் தெரியாதாகலின் பிறவிக்கு மருந்தாகிய இதனைக் கணமேனுந் தாமதியாது அனுஷ்டித்தல் வேண்டும்,

முக்திகோபநிஷத்.

𑌦𑍃𑌢𑌭𑌾𑌵 𑌨𑌯𑌾 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌪𑌰 𑌵𑌿𑌚𑌾𑌰𑌣𑌂 ।
𑌯𑌦𑌾𑌦𑌾𑌨𑌂 𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌵𑌾𑌸𑌨𑌾 𑌸𑌾 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾 ।
𑌭𑌾𑌵𑌿𑌤𑌂 𑌤𑍀𑌵𑍍𑌰𑌸𑌂𑌵𑍇𑌗𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌯𑌤𑍍𑌤𑌦𑍇𑌵 𑌸𑌃 ॥

(இ-ள்.) உறுதியான பாவனையினாலே முன்பின் விசாரணையின்றி வஸ்துக்கிரகணமெதுவோ அதுதான் வாசனையென்று சொல்லப்படுகின்றது. வேறு வாசனையற்று மிகு தீவிரமாய்த் தன்னால் யாது பாவிக்கப்பட்டதோ விரைவில் அஃதாகவே யாகின்றான்.

தாயுமானவர்.

யாதொன்று பாவிக்க நான் அதுவாதலா லுன்னை நானென்று பாவிக்கினத்துவித மார்க்கமுறலாம்.

என்று வருவனவு மிங்கறியத்தக்கனவாம்.

சி: பாவனை நீங்கும் பான்மையை யருளிய தேவரீர் இங்குப் பாவனைபுரியும் பான்மையை யுரைப்பதெற்றிற்கு?

கு: ஞானம்: மந்தமென்றும் திடமென்றும் இருவகைத்தாம். சம்சயாதி சகிதஞானம் மந்தமெனவும் சம்சயாதிரகித ஞானம் திடமெனவுஞ் சொல்லப்படும்.

'பிரஹ்மமே நான்' என்னுந் திடஞானமுள்ளவர்க்கு யாதொரு பாவனையுமின்று. அதிடஞானமுள்ளவர்க்கே பாவனை விதிக்கப்பட்டது. தேகாதிகளும் சத்தியம்,ஜீவப்பிரஹ்மபேதமும் சத்தியமென்னும் விபரீதஞானத்தினை நீக்குதல் வாயிலாகச் சம்பிரஞ்ஞாத சமாதியென்னும் சிவோகம் பாவனை திடஞானத்திற்கேதுவாயிருத்தலின், அதுபற்றி அப்பாவனையை யுனக்குபதேசித்தனன், இது குறுக்குவழியாக மோக்ஷசாதனமா யிருப்பதென்றறியக்கடவாய்.

பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவரென்று
னரசரீரமாங் குரவனே விசாரமேன் ஞானமே னென்ணுதே
பரம பாவனை பரோட்சமாம் பின்பந்தப் பரோக்ஷமேயபரோட்சந்
திரவி சாரமா ஞானமே முத்தியாந் தீர்வையீ தறிவாயே.

என்று கைவல்லிய நவநீதங் கூறுவதறிக.

இடைவிடாதுபுரியும். 'சிவோகம்' பாவனையால் அந்தக்கரண விருத்தியோய்ந்து விடும்போது நடுநிலைகிட்டும். நடுநிலையிலிருப்பதே சீவன்முத்திநிலையாம். நடுநிலை கிட்டியபோதுதான் பிரஹ்மவடிவநான் கர்த்தவ்விய மற்றவனென்பது விளங்கும்.

வேதாந்த சிரவணத்திற்குப் பின்னர்க் கர்த்தவ்வியம் எவனுக்குத் தோற்றுகின்றதோ அவன் தத்துவமறிந்தவனுகான்; தத்துவ மறியாதவனுக்கே பாவனை வேண்டும். பிரஹ்மவடிவ ஆன்மாவை நன்றாக வறிந்தவனுக்கு யாதொரு செயலுமின்றென் றறியக்கடவாய்.

## நடுநிலை.

சி: நடுநிலையினை யுபதேசித்தருளல் வேண்டும்.

கு: சகல கேவலமற்றநிலை நடுநிலை யெனப்படும்.

சகலமென்பது நினைப்பு, கேவலமென்பது மறப்பு.

இதுவே இராப்பகலற்றவிட மென்றும் ஞாருஞானரகிதநிலையென்றும், பாவாபாவரகிதஸ்தான மென்றும், நினைவிறந்து நின்றவிட மென்றும், நனவிற்சுழுப்தி யென்றும் சொல்லப்படும்.

நினைப்பும் மறப்புமற்றநிலை நடுநிலையாயிருத்தலின் அதிற்றான் தனது நிஜவடிவம் விளங்கும்.

"சொரூபம் விட்டகலின் மோகமாம் வேறு சொல்லிட முன்புபின் பில்லை,

யொருபொரு ணினைவை யொழித்துமே லப்பா லொருபொருணினைவுறி னந்த,

விருபொரு ணடுவு ணினைவற விருக்கு மிதுசொரூ பத்தியல் பிதுதான்,

இதந்தரு வினையா ரடிகள்
முற்முறு யாறு முன்னுவ மியாமே.

இணைக்குறளாசிரியப்பா.

கொண்டலி னிருண்ட கண்டனி னருளின்
பெறுவது பெற்ற வுறுதியிற் சிறந்த
அருட்பிர காசன டித்தா மரையே
அகத்தா மரையி லமைத்துப் போற்றி
யுன்னி யுன்னி
ஊன மொழியா வூன்மயங் கரைத்து
ஞானம் பெருகி ஞாலந் தனிலே
சச்சிதா நந்தத் தன்வடி
வாகி யாக மகம்பிறர்க் கொழித்திங்
கிறைஞ்சலு மேத்தலு மில்லா வெனக்கருள்
குரவன பரமன்
அருணு சலனடி யமைப்பா முளமே.

நிலைமண்டில வாசிரியப்பா.

இன்றென வுளவென வன்றென வாமெனக்
கரைதரு மக்கள் கலக்கந் தீர்ந்து
நில்லா வுலகம் புல்லிய தெனவுணர்ந்
திம்மையிற் றானே செம்பொருள் கண்டு
பவபந்த மாறிப் பரம்பொரு ளாகி
யிருக்கு நிலையெமக் கெளிதினிற் றோன்றத்
தந்தரு ளொருநூல் சற்குரு வென்று
சாதன மோடு தாள்பணிந் தன்பர்
உரைக்க வவர்பொருட் டுரைத்தன மிதுவே.

அடிமறி மண்டில வாசிரியப்பா.

இந்நூற் குணமெதென் குருவின் பாலதே
இந்நூற குற்றமதென்றன பாலதே
அநந்திய மாவோர்க் காகுமிந் நூலே.

மோக்ஷசாதனவிளக்கம்

முற்றிற்று.

---

திருவருட்பிரகாசவள்ளலார்
திருவடிவாழ்க.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 13 | கிராரகார | கிராகார |
| 8 | 12 | மார்கத்தி | மீர்க்சத்தி |
| 10 | 8 | அவிதத்தை | அவித்தை |
| 11 | 13 | விதே | விதேக |
| ,, | 32 | அபரோசட்ச | அபரோட்ச |
| 13 | 9 | மண்னை | மண்ணை |
| ,, | 25 | ப்ரும்ஹித | ப்ருஹ்மித |
| 14 | 5 | ஸாக்ஷாத்ஸவிஸாவா | ஸாக்ஷாத்கஸாக்ஷாத் |
| 15 | 21 | வாதம் | வாகம் |
| 18 | 23 | மாயமாய்ப் | மாயமாய்ச் |
| 19 | 20 | போன்று | பொன்று |
| 24 | 11 | வேறுமெ | வேறுமே |
| ,, | 18 | யாதி | மாதி |
| 26 | 20 | கிய | கிய: |
| 29 | 12 | ஞேடு | ஞெடு |
| ,, | 17 | ளிந்தா | ளிந்த்ர |
| ,, | 26 | னதி | ணிதி |
| 31 | 12 | ஆசிரி | ஆசிர |
| 33 | 19 | ருபு | ரிபு |
| 34 | 11 | கர்த்த்ரு | கர்த்ரு |
| 35 | 30 | மெண்ணி | மென்னி |
| 37 | 22 | கயிற்றிகண் | கயிற்றின்கண் |
| 39 | 16 | சீவகர்க | சீவர்க |
| 42 | 25 | ஸுஷ்டி | ஸ்ருஷ்டி |
| 45 | 4 | சேனத்தை | சேதனத்தை |
| 46 | 18 | சரசம் | ரசம் |
| 47 | 4 | க்ருஷ்ண | க்ருத்வா |
| 52 | 24 | மாத்துமான | மாத்துமாவான |
| 54 | 32 | போருந்த | பொருந்த |
| ,, | 35 | மூடரா | மூடரா |
| 55 | 7 | கனின்று | கணின்று |
| 56 | 28 | வினை | விணை |
| 61 | 24 | யடைந்தி | யறைந்தி |
| 62 | 33 | பிசாசு | பிசாசி |
| 63 | 20 | யொரு | பொரு |
| ,, | 21 | பக்தி | பத்தி |
| 69 | 18 | ராகதி | ராகாதி |
| 80 | 24 | மண்டபமும் | மண்டமும் |
| 83 | 8 | ஜுஜேஷ்ட | ஜேஜேஷ்ட |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ,, | 33 | அவளிர்கடத்தி | அவர்களிடத்தி |
| 85 | 16 | சுனாமி | சுவாமி |
| ,, | 32 | சிறது | சிறிது |
| 87 | 5 | வநாச | நாச |
| 88 | 30 | யஞ்ரு | வஞ்ரு |
| 90 | 16 | கிடகா | கிடா |
| 92 | 7 | ஒஜஸ்ரும் | ஒஜய்ரும் |
| ,, | 12 | ஜாத்ரு | ஜாத்ரா |
| 93 | 7 | ஸம்ஹதெ | ஸம்ஹதெ |
| 94 | 15 | கமுகொ | கமூகொ |
| 97 | 30 | கருததறி | கருத்ததறி |
| ,, | 36 | வேணு | வேனு |
| 100 | 2 | வதினியல்பா | வதியல்பா |
| 111 | 29 | சசு | ச |
| ,, | 30 | ஜெந | விநா |
| ,, | 31 | ஶளக | ஶாக |
| ,, | 32 | வாஜம் | வாஜ |
| 112 | 6 | யஜஸ்ராஸந | யஜஷ்ராஸந |
| 125 | 14 | நான்மலர் | நாண்மலர் |
| ,, | 16 | லேழு | லெழு |
| 130 | 29 | வஹாநாஶாரு | வஹாஶாருகெ |
| 135 | 7 | தேகேந்ரி | தேகேந்திரி |
| 143 | 10 | ஸஷாநெந | நஷாநெந |
| ,, | 11 | யயா | யஜா |
| 144 | 15 | மோரார் | மோர் |
| 145 | 3 | கற்குடமப் | கற்சவிடர்ப் |
| ,, | 23 | முணர் | முணர்ந் |
| 152 | 6 | ஷருஶ்ரநெ | ஷருஶ்ரகெ |
| 163 | 5 | வனது | வெனது |
| 172 | 11 | சிவோக | சிவோகம் |
| ,, | 13 | ஹாவொ | ஹாவெ |
| 181 | 29 | வஸிவக்ஷய | வஸிவக்ஷம்ய |
| 189 | 3 | வாஶாஷம் | வாஶஷம் |
| 190 | 2 | பரசிவ | பரமசிவ |
| ,, | 11 | அஷ்டாஷ்ர | அஷ்டாக்ஷரப் |
| 191 | 18 | அகர | ஆகார |
| 196 | 34 | முழற் | முதற் |
| 198 | 18 | கண்ணுடைய | சிவஞான |
| 209 | 15 | ஒகார | ஓங்கார |

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 212 | 32 | நிர்க்குண | நிர்க்குணப் |
| 217 | 6 | தரங்கரத்தி | தரங்கத்தி |
| 224 | 9 | தனு | தனு |
| 225 | 8 | ருஷபத் | ரிஷபத் |
| 227 | 31 | ரணைத்தும் | ரனைத்தும் |
| 228 | 16 | [illegible] | [illegible] |
| 229 | 25 | வஶேஷிக | வைஶேஷிக |
| 230 | 21 | மூன்றை | மூன்றை |
| 239 | 28 | னன்கவரை | னன்னவரை |
| ,, | 7 | யுறை | யுரை |
| 243 | 12 | [illegible] | [illegible] |
| ,, | 22 | [illegible] | [illegible] |
| 247 | 26 | [illegible] | [illegible] |
| 248 | 8 | [illegible] | [illegible] |
| 256 | 26 | [illegible] | [illegible] |
| 258 | 24 | திருமந்திரம் | சிவஞானவள்ளலார் [ண்டும் |
| ,, | 28 | வரியின் கீழ் | திருமந்திரமென்று படிக்கவே |
| 260 | 5 | [illegible] | [illegible] |
| 261 | 23 | [illegible] | [illegible] |
| 279 | 15 | நச்சயத்தால் | நிச்சயித்தல்] |
| ,, | 17 | லென்க.] | லென்க. |
| 280 | 7 | விகாரிக்வ | விகாரித்வம் |
| ,, | 12 | ஸம்மீதி | ஸம்மதி |
| ,, | 14 | [illegible] | [illegible] |
| 288 | 31 | பாவிய | பரவிய |
| 297 | 33 | மதுமான | மதுபான |
| 300 | 3 | தொஷம் | தோஷம் |
| 307 | 2 | முண்டா | உண்டா |
| ,, | 7 | சாமாதி | சமாதி |
| 309 | 17 | போக்திய | போக்கிய |
| 312 | 28 | வத்ததன்மை | வத்தன்மை |
| 314 | 23 | னன்பு | லன்பு |
| 318 | 15 | கன்ணுடி | கண்ணுடி |
| 319 | 23 | [illegible] | [illegible] |
| 320 | 15 | ஸக்ஷா | ஸாக்ஷா |
| ,, | 29 | அந்த | அந்தக் |
| ,, | 30 | யென்றும் | யெனவும். |
| 322 | 31 | ஆண்ரோர் | ஆன்றோர் |
| 324 | 5 | ஏகா | ஏகாக்கி |

